

உ

சிவமயம்.

உலகரகசியமென்னும்

# பிரபஞ்ச உற்பத்தி.




சிறுமணவூர்,

முனிசாமிமுதலியாரவர்களால்

இயற்றியது.


த. பூ. முருகேச நாயகரால் பார்வையிட்டு


சென்னை: ஜூலை,

சிறுமணவூர் முனிசாமி முதலியார் ஸன்ஸ்

அவர்களாற்றமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிக்கப்பெற்றது.





எட்டாம்பதிப்பு) (1000-காப்பி.

1918.

விலை ரூபா-2.




உ

கடவுள் துணை.

புரசை அஷ்டாவதானம்
சபாபதி முதலியாரவர்கள் மாணாக்கரும்
இயற்றமிழாசிரியரு மாகிய
ஸ்ரீமத். தி. சண்முகம்பிள்ளையவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

மதிவளர் புரிசை மாடக்காவும்
நதிவளர் பாலி நான்மறை வேள்வியுந்
தண்டமி ழார்ப்புஞ் சண்பைக் கௌணியர்
விண்ட வேழிசை வேத மணமும்
வெண்ணி ரெரிக்கும் வேணிய ரன்றோர்
பெண்ணில லேவப் பெற்ற பேறும்
மூர்த்தி தீர்த்த முறை முறை யோங்குஞ்
சீர்த்தியு மாதவர் செறுக்குந் தொண்டை
தாரணி செம்பியர் தனிக்கோ னலமும்
ஆறணி சடையா ரடிகள் வாழ்வுங்
கண்ணுதற் கைலை கடுப்ப வானவ
ரெண்ணில ரேத்து மியலு மாக்கச்
செல்வியுங் கல்வித் திருவு மேய
தொல்லிரும் புகழிற் றொண்டை நாட்டு
மறைமகத் துழனி மாண்பு மாதவர்க்
கிறையன கிடந்த திருவருண் மொய்ப்பும்
பன்னலங் கொழிக்கும் பான்மையு மான்றோர்
தன்னலங் குலவுந் தருமச் சீர்த்தியு
மூவாநெறியி னோவாப் புகழிற்
றேவாய்ச் செறிந்த தெண்ணீர்ப் பழன்
மணவீர் கோட்டத் தளவில் சீர்த்தி
திணைமயக் கொழியா பணையூற் றேடி
மேலுறு கமுக மேய்ந்திரு ணூறி
சேலின முழக்கிச் செய்கா லாற்றி
கடறலை படுக்குங் காட்சியி னலகி
னிடறலை மிதிக்கு மெய்ம்மையி னகலாச்
செழுமண வைப்பதிச் செய்தவ மெனையோ
தொழுதகு சைவத் துறையறங் கொழிக்கு
முத்தம சோழப் பல்லவ ரென்னப்
பெற்ற வேளாண் பெருங்குடி தன்னில்
மெய்த்தவங் கிடந்த வுத்தமர் சூழ
செய்த்தவ மாற்றுந் திறலி னீங்கா
மேலை வணங்கீ சப்பே ரண்ணல்
காலை வளர்க்குங் கருண[illegible] பின்னோர்
கோலக் கொள்ளுங் கோ[illegible]றயாளர்
நூலைப் புரக்கும் நுண்ணறி வாளன்
ஓதா துணர்ந்த வுத்தம னற்றவர்
பாதாம் புயத்தைப் பணியக் கற்றோன்

கலையெலாம் பார்க்குங் கருத்தன் விடயத்
தலையெலாங் காணச் சமர்த்த னுபுள்
வேத சாத்திரமு மிக்கோர் வழக்கும்
பேத சாத்திரமும் புரையறக் கற்றோன்
கூரயிற் கொடுவெஞ் சூர்தடிந் தோனற்
பேரடி முடிக்கும் பெரிய னுக்கச்
செல்வி நோக்குஞ் சீரின னுப்பிற்
கல்விக் கரையான் கற்றவற் கன்ப
னெல்லிலத் துள்ளூர் தன்னலம் விளங்கப்
பன்னூ லிசைத்தோன் பகர் சிவ காமி
அச்சுக்கூடத் ததிப னறிவோர்
மெச்சுநூ லனைத்து மினிதி னுற்றும்
முனிசா மிப்பேர் முதலி யிங்கா
டனிநீர் மையினோர் சாத்திர மஃதிங்
கவநெறி யொழுகு மவனி மாக்கள்
தவநெறி பெறநற் றலையி னின்று
வேத மாகம மிருதி புராண
நீதிசோதிட நீர்மையிற் சித்தர்
பன்னூற் கடலு முன்னிப் பருவரை
முன்னோ ராதி மொழியு மாரியத்
துரிய சாரத் துள்ளுறப் படிந்து
பேரியற் றிறத்தப் பெருக்கா றன்ன
அண்டப் பகுதியு மண்டரு வைப்பும்
பண்டை வேந்தர் பான்மையு முலகின்
றண்டவியல்புந் தொன்னூ னெறியுங்
கொண்ட னீர்மையுங் குலப்பே ரறமும்
மூர்த்தி தீர்த்த முடிபு மறியார்
போர்த்த மாயைப் பொழிப்புஞ் சனனு
வைப்புங் கால வழக்கு மணத்தி
னுப்புங் கலியி னொழுக்கு மாணிகத்
திறமுஞ் சயனச் செறிவுங் கருணை
யறமுஞ் சரமு மாயுள் வேதமுங்
தெய்வப் பிறப்புஞ் சிரார்த்த விதியுஞ்
செய்யு நித்திய செய்கை யியல்பு
மின்னன புரிய வெண்ணணில் முடிபும்
பன்மத வழக்கும் பாரோர்க் கென்றும்
வேண்டும் பகுப்பு மிக்குறத் தெரித்து
யாண்டும் பெறுமா றையமி லறநூ
லஞ்சுறப் பலர்பா லரிதி னேற்று
அஞ்சொற் றமிழி லான்ற வறிவின்
வித்துவ ரவைக்கண் மெய்த்துறை படுத்தி
எத்திறத் தவர்க்கு மினிதி னெளிதி
னுய்த்துணர்க் தொழுக மெய்த்திறந் தொளச்சீர்
வைத்த தண்டமிழ் வாணர் ம[illegible]
றுய்ப்பப் பிரபஞ் சோற்பத் தி[illegible]
செய்தா னஃதா திறமி தம்மா.

# சாத்து கவிகள்.

உரையாசிரியர் மகாவித்துவான்

காஞ்சீபுரம், சபாபதிமுதலியாரவர்கள் குமாரர்

## ஸ்ரீ கா. பாலசுப்பிரமணிய முதலியார[illegible]லியற்றிய

பின்முடுக்குச் சந்த வெண்பா.

நந்து பிரபஞ்சோற் பத்தியா நன்னூலைக்
கத்திய மாகக் கழறினான்—எத்திசையும்
உன்னுமுரு கேசனது வொண்கழல்ப ராவுமித
மன்னுமுனி சாமியெனு மால்.

---

காவேரிபுரம்,

## ஸ்ரீலஸ்ரீ சபாபதியோகீஸ்வரரவர்களியற்றிய

நேரிசைவெண்பா.

வையத் துயர்மணவூர் வாழ்முனிசா மிப்புலவன்
செய்யும்பிர பஞ்சோற்பத் திப்பெருநூ—லையமிலா
தெம்மதத்தோ ருஞ்சூழ்ந் திங் கெந்நலமுங் கைக்கொள்ள
அம்மா வரிதரிதந் தா.

---

சேலம் - தர்மபுரி,

## பிரஹ்மஸ்ரீ, நடராஜ ஐயங்காரவர்கள், பி· ஏ,

இ ய ற் றி ய

எண்சீராசிரிய விருத்தம்.

பாலாற்றி னணிகிளருந் தொண்டை நாட்டோர்
  பாற்குலவு மணவூர்வே ளாளர் கீர்த்தி
காலாற்றுந் தமிழ்க்குரிசில் முனிசா மிக்கோன்
  கரைசெய்தான் பன்னூலுந் துறையா யாய்ந்து
வேலாற்று முருகனடி முடித்துக் கற்றோர்
  வித்தகத்தா னெத்திசைக்கு மினிதா யாதி
நூலாற்றும் புலவரதி ச[illegible]செய்தா
  னுண்மையினோர் பிரப[illegible]ற்பத்தி நூலே.

---

சென்னை தத்துவவிசாரணி பத்திராதிபர்,

## ஸ்ரீமத். பு. முனிசாமி நாயகரவர்களாலியற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

சிறுமணவூர் வணங்கிச் செம்மறவ னனிசிறந்து சிறப்பு மேயச்
சிறுமணவூர் வணங்கீச ரருளாலச் செய்தவமே செறிந்த தென்னச்
சிறுமணவூர் முனிசாமிச் சேயாகிக் கலைக்கடலைச் செவ்வி னோர்ந்தே
சிறுமணிநேரனைவரில வூன்வடிவாம் பிரபஞ்ச வெழிற்செய் தானே.

சித்தாந்தசரபம் அஷ்டாவதானம்,

## ஸ்ரீமத் பூவை. கலியாணசுந்தர முதலியாராலியற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

அற்புதநற் சைவவழி யவசமய நூல்களினுண் ணருமை யாவுங்
கற்பவர்க ளெளிதுணர்வான் கத்தியரு பத்திலகக் கனிவிற்சொற்றுன்
பொற்பமரும் பிரபஞ்ச வுற்பத்தி யெனவொருநூல் புவிவி யக்கப்
பற்பலபூர் தடைவைசெறி சிறுமணவூர் முனிசாமிப் பாவ லோனே

பிரசங்கரத்நாகரம்,

## ஸ்ரீமத். சிதம்பரம் வடிவேல்பிள்ளை யவர்கள்

இயற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

சிறுமணவூர் முனிசாமி முதலியா ரென்பாரிச் செகத்து ளாருக்
கறுமுகவ ரடிபரவும் பெற்றியின லனந்தகலைக் கடலை யாய்ந்து
அருமறையா றங்கநெறி தன்னைவகுத் தானரியவெல்லாஞ் சேர்த்துத்
தருமநெறித் தாய்ப்பிரபஞ் சோற்பத்தி யெனவறிஞர் வியப்ப மாதோ

மேற்படியார் மைத்துனரும்,

சமரச சன்மார்க்க சங்க வித்வான்களி லொருவரும்
புராணிகர். பொன்னேரி, சுந்தரம்பிள்ளை அவர்கள்குமாரருமாகிய
புராணிகர்,

## ஸ்ரீமத். பொ. பரமசிவம்பிள்ளையவர்களியற்றிய

கட்டளைக் கலித்துறை.

காரரர் சிறுமண வூர்முனி சாமிநங் காரனனங்
கீரார் பலகலை யாய்ந்தல கோர்க்கோர் நெறியிதெனப்
பாரா ரியற்றமிழ் வாண ருந்திண பற்றியிதான்
சேரார் பிரபஞ்ச வுற்பத்தி யாமிநூல் செய்தனனே.

சென்னை முனிசிபாலிடி
எல்த் டிபார்ட்மெண்ட் மானேஜரும் தமிழ்ப்பண்டிதருமாகிய
பெரியமெட்டு
ஸ்ரீமத். நா. மு. தம்புசாமிநாயகரவாகள் இயற்றிய
நேரிசைவெண்பா.

சீரார் செழுமணவைத் தேடுமுனி சாமிசெய்ப்
பாரார் முருகேசன் பார்த்தனனால்—ஆராய்ந்த
ஞானிலவுற் பத்தியெனு நல்லாவ நூலரிய
தேனி னினிதாய்த் தெரிந்து.

---

சென்னை ஸ்டார் ஆப் இந்தியா அச்சுக்கூடத்தலைவரும்
பிரபஞ்சமித்திரன் பத்திராதிபரு மாகிய
ஸ்ரீ. த. குப்புசாமி நாயகரவர்கள் இயற்றிய
நேரிசை வெண்பா.

பன்னூலும் பார்த்துப் பலர்க்குமுப காரமாய்ச்
சொன்னான்கா ணற்பிரபஞ் சோற்பத்தி—பன்னும்
மணவூர் முனிசாமி வள்ளல்காண் கற்ற
குணவாளர் காண்பார் குணம்.

---

காஞ்சீபுரம் மஹா வித்வான்
சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கரும்
தண்டுசீயபுரம் பிரைமெரி ஸ்கூல் எட்மாஸ்டரும்,
இயற்றமிழாசிரியருமாகிய
ஸ்ரீமத். அருச்சுனநாயகரவர்களியற்றிய
பதினாறுசீராசிரிய விருத்தம்.

பன்னுமறை யாகமங்கள் பரவுந் தெய்வப்
பாலிநதி சூழ்ந்திலகுந் தொண்டை நாட்டோர்
பாற்குலவு செழுமணவைப் பதியிற் சைவப்
பத்திநெறி வழாஅ துவாக் கீசர் மேவு
மன்னுவே ளாண்மரபிற் குலக்குன் றன்ன
வணங்கீச முதலியருந் தவத்தாற்பெற்ற
வள்ளளருந் தமிழ்மாது மகிழப் பன்னூல்
வைத்தவனம் முனிசாமியென்பா னன்பால்
முன்னமுனி வோர்சித்தர் முனிவரானோர்
மொழிந்தகலை யாகமபு ராணமின்ன
முற்றாநனி யாய்ந்துலகோர்க் கறமாமாறு
முறையாகப் பன்னலமும் திரட்டிவல்லார்
தன்னரங்கிற் றிருத்தியொரு புராணமென்னத்
தமதச்சுக் கூடத்திற் பதிப்பித்தானோர்
சாத்திரமிப் பிரபஞ்சோற் பத்திப்பேராற்
ஞாலத்தி லெவர்க்குமிதோர் தருமத்தன்றே.

சென்னைநகர் பண்டிதை

ஸ்ரீமதி. ம. மன்னக்கணியம்மாளவர்களியற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

பன்னரிய பிரபஞ்ச வுற்பத்தி யெனவொருநூல் பரவச் செய்தான்
தன்னிகரி லுயர்சைவ முடன்பாஞ்ச ராத்திரத்துச் சரித முற்றும்
இந்நிலமே லாமுணர வுபகரித்தான் சிறுமணவூ ரெழினல் வேளான்
கன்னல்சருக் கரையெனவே தினம்பாடு முனிசாமிக் கவிஞன் றானே

வித்துவான்

திருமயிலை சண்முகம் பிள்ளையவர்கள் மாணாக்கர்

ம-ா-ா-ஸ்ரீ திருமயிலை

இராமலிங்க முதலியாரவர்களியற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

பன்னூலும் வாகடமும் பயிலாமற் பயின்றவனிப் பார்மீ திந்நாள்
என்னூலு மிணையிலையென் றிடம்பிரபஞ் சோற்பத்தி யேதி னூலை
நன்றாவ லவர்புகழச் சிறுமணவூர் முனிசாமி நவின்றான் றூய
பொன்னுட ரகந்துளும்ப மாதவரு மிகமகிழ்ந்து புகழு மாதோ.

சென்னை, தண்டையார்பேட்டை

க. வ. திருவேங்கட நாயுடவர்கள் மாணவரும்

தமிழ்ப்பண்டிதருமாகிய

ஸ்ரீமத். கொ. இராமலிங்க தம்பிரானவர்களியற்றிய

நேரிசை வெண்பா

பன்னும் பிரபஞ்சோற் பத்தியெனு மிந்நூல்
பன்னூற் கடல்கடைந்த பாவென்கோ—சொன்ன
சிறுமணவூர் முனிசாமிச் செவ்வாயி னூற்று
நறவென்கோ யாதென்போ நாம்.

திருவொற்றியூர் U. K. S. M. S. ஸ்கூல் ஹெட்மாஸ்டர்

ஸ்ரீமத். க. கந்தசாமி நாயகராலியற்றிய

எண்சீராசிரிய விருத்தம்.

காராரும் பொழிலுடுத்த மகத நாட்டுக்
  கரையிருந்த செழுமணவைக் கோட்ட மேவுங்
காராளன் கலையனைத்துஞ் செவ்வி தாய்ந்த
  கருத்தனுரைத் தணிகைவரை முருகற் கன்பன்
சீராரு முனிசாமிப் புலவ னிந்நாள்
  நிலவுல கரியவெலாந் திரட்டி யீந்தான்
பேராக வெம்மதமும் சிறந்து வாழ்த்தப்
  பிரபஞ்சோற் பத்தியெனும் பெருநூலம்மா.

ஞான வித்வாநந்தப்ரசங்க கவிராய சிங்கமென்னும்
கூடலூர் தண்டிகைப் புலவர் அஷ்டாவதானம்
சதகு. அப்துல்காதிறு புலவரவர்களியற்றிய

எண்சீராசிரிய விருத்தம்.

சென்னை புரிச் சூளையினிற் கனங்கு லாவுஞ்
சிவகாமி விலாசவச்சுக் கூட முள்ளா
னெந்நலமுந் திகழ்மணவை வணங்கீ சன்றன்
றவத்துதித்த முனிசாமி முதலி யார்முன்
பன்னூலு மாய்ந்துலகோர்க் கறநூ லென்னப்
பகர்ந்தானோர் பிரபஞ்சோற் பத்தி நன்னா
லிந்நிலத்தி லிதின்பெருமை புகல்வா ரார்கா
ணெக்கலைக்கு மிக்கதென விளம்ப லாமே.

---

கள்ளக்குறிச்சி வித்வான்
ஸ்ரீமத். வே. நாராயணசாமி நாயகரவர்களால் இயற்றிய

கட்டளைக்கலித்துறை.

மன்னும் புகழ்மண வூர்வரு கங்கை மரபினிற்சீர்
முன்னும் வணங்கி முதலிக்கு மைந்தன் முனிசாமிவேள்
பன்னும் பலகலை யாய்ந்துப்ர பஞ்சவுற் பத்தியென்றோர்
நன்னூ லளித்தா னதின்புக ழார்சொல்வார் நானிலத்தே.

---

சென்னை பழயவண்ணாரப்பேட்டை
ஸ்ரீமத் தக்ஷணாமூர்த்திசந்நிதான சபாப்ரசங்கியாகிய
ம-ா-ா-ஸ்ரீ. உமா வரதப்ப நாயுகரவர்களாலியற்றிய

நேரிசை வெண்பா.

சொன்னானன் றாய்ப்பிரபஞ் சோற்பத்திப் பன்னூலும்
வென்றாய்ந்த மாமணவை வேளாளன் —வென்றிவே
லாறுமுகற் கன்ப னருமுனிசா மிக்கவிஞன்
தேறுரு ரிப்புவியிற் சீர்.

---

கந்தாடு வித்வான்
ஸ்ரீமத். வீரராகவ நாயுடவர்களியற்றிய

சந்தஆசிரிய விருத்தம்.

அருநெறி கலைபல தொகுமறை யெனவுல கோருள மகிழ்கூரக்
கருநெறி யறப்புற மதவெறி யிதுவென காணுறச் சிறுமணவூர்
வருநெறி சைவ சிகாமணி வேளாண் மரபுறு முனிசாமிக்
குருநெறி யார்பிர பஞ்சோற் பத்தி யிசைத்தன னினிதன்றே.

---

ம-ள-ள-ஸ்ரீ, த. பூ. முருகேசநாயகரவர்கள்
மாணாக்கரிலொருவராகிய
ஸ்ரீ. சோ. மு. இலக்குமணப் பிள்ளையவர்களால்
இயற்றிய
சந்தவாசிரிய விருத்தம்.

பரம னன்று பணித்த முனிவரர்
  பாற்ப யின்ற பலகலை யாய்ந்துசி
ரறத்தி னீர்மை யகிலம் பெறச்சிறி
  தாற்றி னன்பிர பஞ்சவுற் பத்தியென்
றிரவி யென்பதி தன்புகழ் கூறவோ
  யேற்றுச் சைவன்சி றுமண வூர்வருங்
கருணன் கங்கைக் குலத்துவ ணங்கியார்
  கான்மு ளைமுனி சாமி முதலியே.

---

செஞ்சி உபாத்தியார்
கரிகிருஷ்ணமுதலியாரவர்கள் பௌத்திரர்
ஸ்ரீ. செ. நா. ஏகாம்பர முதலியாரவர்கள் இயற்றிய
எண்சீராசிரிய விருத்தம்.

சிறுபிழைக்கு மூவுயிருங் கொடுக்குஞ் சோழர்
  செங்கோற்கொண் டாளுமுயர் தொண்டை நாட்டுச்
சிறுமணவை முனிசாமி யன்ப ரான்றோர்
  செய்தபல நூலனைத்து மாய்ந்து வையத்
தறமுகவ னடிபரவி புலகோர்க் கென்று
  மரும்பொருளாய்ப் பிரபஞ்சோற் பத்தி யென்னச்
சிறுவர்களுந் தெள்ளிதுணர்ந் தின்ப மெய்தச்
  செய்தனனு லதின்பெருமை யென்னென் பேனே.

இராயபுரம் இண்டியன் பிரஸ் அதிபரும்
வேதாந்த நிர்ணயப் பத்திராதிபரு மாகிய
ஸ்ரீமத் அப்பாதுரை பிள்ளையவர்கள் இயற்றிய
நேரிசை வெண்பா.

வித்துவற்கு நற்றவற்கு மிக்கோற்கும் ப்ரபுஞ்சோற்
பத்திப் பெருநூற் பகிர்ந்தனனு—லெத்திக்கு
மேவுஞ் சிறுமணவூர் வேளாளன் முனிசாமி
நாவிற் றிறத்தானன் பால்.

சாத்துகவிகள்.
முற்றிற்று.

---

# விஷய அட்டவணை.

## முதலாவது—உலகோற்பத்தி காண்டம்.


| விஷயம். | பக்கம். |
|---|---|
| சிறப்புப்பாயிரம் | 1 |
| சாத்துகவிகள் | 3 |
| நூன்முகம் | 15 |
| பிரபஞ்ச உற்பத்தி | 1 |
| ஜம்புத் தீவு | 7 |
| பிலட்சத்தீவு | ,, |
| சான்மலித்தீவு | 8 |
| குசத்தீவு | ,, |
| கிரௌஞ்சத்தீவு | ,, |
| சாகத்தீவு | 9 |
| புட்கரத்தீவு | ,, |
| பிரமாண்டக்குறிப்பு | 10 |
| ஆதிசேடன்சிறப்பு | ,, |
| நரகலோகம் | 12 |
| எமதண்டனை | 15 |
| எமலோகம் | 16 |
| எமலோகமார்க்கம் | 17 |
| அண்டகோச அடுக்கு | 19 |
| மண்டல அடுக்கு | 29 |
| பிரமசந்ததி | 31 |
| சூரியரதமும் மண்டலமும் | 34 |
| தானகாலம் | 39 |
| யாதகாலம் | 40 |
| பரமபதம் | 42 |
| கங்கைபிறப்பு | 43 |
| ஆதித்தர் பன்னிருவரும் அவர்க்குசகாயபுருடரும் | 44 |
| கிரியாவிசேடம் | 47 |
| சந்திரமண்டலச் சிறப்பு | 49 |
| புதன்முதலிய கிரகரதம் | 50 |
| அண்ட அளவின் சுருக்கம் | 53 |
| மானிடஜென்ம உற்பத்தி | 56 |
| ஐவகை நிலங்கள் | 65 |
| காலப்பிரமாணம் | 67 |
| கால அளவு | ,, |
| காலப்பிரிவு | 69 |
| வாரங்களின் பிரிவு | 71 |
| கல்பாந்தபிரளயம் | ,, |
| நைமித்திகபிரளயம் | 74 |
| பிராகிருதபிரளயம் | 75 |
| ஆத்தியந்திகபிரளயம் | 78 |
| மனிதர்களின் பிராணநிலை | 82 |
| சூரியகலையில்செய்தற்குரியகாரியங்கள் | 83 |
| சந்திரகலையில்செய்யுங்காரியங்க | 83 |
| சரசாத்திரசமாதானம் | ,, |
| சரசாதன இயல்பு | ,, |
| சரசாதனத்திற்கு ஆசனம்பலன் | 84 |
| சரத்தைகொண்டுகுறிசொல்லல் | 85 |
| சூரியக்குறி | ,, |
| சந்திரக்குறி | 86 |
| சுழிமுனைக்குறி | ,, |
| பிரதானக்குறி | ,, |
| சரத்தின்பரிபாடை | 87 |
| சரசாதனர் சாப்பாடு | ,, |
| சாயாதரிசனக்குறிப்பு | 88 |
| சூரியதரிசனம் | 89 |
| நெய்யில்தோற்றும்சூரியனுருவமும்பலனும் | ,, |
| சந்திரதரிசனம் | 91 |
| கருடதரிசனம் | 92 |
| சயன லட்சனம் | 93 |
| படுக்குந்திசை | ,, |
| படுக்கையின் தானம் | ,, |
| ,, இலட்சனம் | ,, |
| நித்திரையின் இரகசியம் | 94 |
| சுகநித்திரைசெய்வோர் | ,, |
| நித்திரைக்கு ஆகாத இடம் | ,, |
| நித்திரைக்குரியகாலம் | ,, |
| நித்திரையின் பொதுலட்சணம் | 95 |
| நித்திரைக்காகாத பராயங்கள் | ,, |
| படுக்கை யினம் | ,, |
| மேலோர்படுக்கை | ,, |
| விழிப்புதெரிசனம் | 96 |
| நித்திரைவிட்டெழுந்தால் விழிக்கும் பொருள்கள் | 97 |
| பார்க்கத்தகாத பொருள்கள் | ,, |
| மலசலக்கழிவு | ,, |
| மலம் கழிக்குந்திசை | 98 |
| ,, இடம் | ,, |
| மல சலங்களை அடக்கலாகா | ,, |
| தந்த சுத்தி இலக்கணம் | 99 |
| பற்கோலுக்குரிய மரங்கள் | ,, |
| பற்கோலெடுப்பதற்கு மந்திரம் | ,, |
| பல்விளக்கும் திசை | ,, |
| பற்கோல் அளவு | 100 |
| பல்துலக்கும் காலம் | ,, |
| பல்துலக்க ஆகாதவை | ,, |


*

| விஷயம். | பக்கம். |
|---|---|
| பல்துலக்க ஆகாததினங்கள் | 101 |
| பல்துலக்கவிலக்கிய நாட்களுக்குச்சாந்தி | ,, |
| ஸ்நான விதி | ,, |
| ஸ்நான காரணம் | 102 |
| நீராடுவோன் | ,, |
| நீரின் இரகசியம் | 103 |
| வைணவர் நித்திய கன்மம் | ,, |
| சந்திக்கிரியை | 04 |
| பூசுத்தம் | ,, |
| புராணசமனம் | ,, |
| மந்திரம் | 105 |
| சங்கற்பம் | ,, |
| மார்ச்சனம் | 106 |
| ஜலபானம் | ,, |
| ஸ்மிருதியாசமனம் | 107 |
| பிராணாயாமம் | 108 |
| சந்தியாங்கதர்ப்பணம் | 109 |
| காயத்திரீ இலட்சணம் | ,, |
| காயத்திரீமந்திரம் | 110 |
| காயத்திரீஜெபம் | 111 |
| சந்திக்கடனுக்குரியமார்ச்சனம் | 113 |
| புருடசூத்தநியாசம் | 115 |
| சூதகமுதலிய காலவிதி | 117 |
| காயத்திரீ செபத்தின் சிறப்பு | ,, |
| சந்திசெய்யாவிடிற்பாவமென்ப | 118 |
| போசனவிதி | ,, |
| சைவர் அநுட்டானவிதி | 121 |
| வருணாச்சிரமங்களுக்குரிய விபூதிகள் | 122 |
| விபூதியின் ஸ்நானவிதிகள் | ,, |
| திரிபுண்டர ஸ்தானவிவரம் | 123 |
| சைவர்கள் திரிபுண்டரம் தரிக்கும் வகை | 124 |
| ஆச்சிரமிக ளணியவேண்டியவிதி | ,, |
| சைவகிரியானுஷ்டானவிதி | ,, |
| விபூதிதாரண அநுட்டானம் | 125 |
| அங்கமந்திர விதிகள் | ,, |
| மந்திரம் | 127 |
| திரிபுண்டர மகத்துவம் | 129 |
| மானதபூசைக்குரியபற்பதியான | ,, |
| உருத்திராக்க தாரணவிதி | 132 |
| உருத்திராக்கோற்பத்தி | ,, |
| உருத்திராக்கம்அணியும்அங்கம் | 133 |
| அதன்தேவதைகளும்பயனும் | 134 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| அங்கசுத்தி | 134 |
| முத்திபஞ்சாட்சரம், காயத்திரீ பிராதகாலதியானமந்திரம் | 135 |
| சூரியத்தியானம் | 136 |
| காலைசந்தியாவந்தனம் | ,, |
| மத்தியானகாயத்திரீ | 137 |
| மாலைசந்தியாவந்தனம் | ,, |
| விவாகவிதி | 141 |
| கலியாணஞ்செய்யுங்காலம் | 142 |
| விவாகபேதம் | 145 |
| பெண்களின் அசுபலட்சணம் | 147 |
| பெண்களின் சுபலட்சணம் | 148 |
| சகுணம், பொருத்தம், பரியம் | ,, |
| உருதிப்பத்திரம், சாட்சி | 149 |
| பந்தக்கால, பந்தல் | 150 |
| திட்டாணிமேடை, சிகைகழித் | 151 |
| பிதிர்தேவபூசை | ,, |
| மணவறை, தத்துவச துக்ஷம் | 152 |
| திக்குப்பாலகர் | ,, |
| கிளைவிளக்கு, குடவிளக்கு | 153 |
| புரோகிதர் | ,, |
| மாணிக்கத்தாள், கும்பகலசம் | ,, |
| தோழிப்பிள்ளை | ,, |
| பாக்கியவான்அம்மிக்குழவி முளைகட்டல் சத்தகலசம் | 154 |
| சத்ததீர்த்தங்கள்அரசாணிக்கா | 155 |
| மாப்பிள்ளை வரவேண்டியவிதி | 157 |
| பரதேசம்போவது | ,, |
| பரதேசியை அழைத்தல் | 158 |
| கால்மெட்டு, பாதபூசை, காப்பு | 159 |
| சங்கற்பம், கூறையணிதல் | 160 |
| மாங்கலிய தாரணவிதி | 161 |
| தாரைவார்த்தல் | ,, |
| மாங்கலியம் அணியும்விதி | 162 |
| உபதேசமந்திரம், பட்டங்கட்ட | 1o3 |
| சேலை, பொன் மோதிரம், மாலைமாற்றுதல், அட்ட மங்கலம் | 164 |
| அம்மிமிதித்தல் | 165 |
| அம்மிமதித்தல், அருந்ததி காட்டல், தேவாசீர்வாதம் | 166 |
| கங்கண விசர்ச்சனம் | 167 |
| பந்தல் பிரித்தல், பாலிகை விடுதல், ஓமாக்கினி விடுதல், கர்ப்பாதானம் | 1168 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| தகாத இருதுசாந்தி, வேசிகள் இருதுசாந்தி | 169 |
| புணர்ச்சிவிதி | 170 |
| விளையாடல் | 174 |
| சங்கு குறித்தல், இருமண் மேடை, செங்கோலம், மாக்கோலம், தோழிப் பிள்ளை | 175 |
| தாலியினுருவம், குலாலமரியாதை, நாத்தினார் விளையாட்டு, பரிய விடயம் | 176 |
| சீதனவிடயம் | 177 |
| இரண்டாவது விவாகம் | ,, |
| குலதருமம் | 179 |
| ஜாதககன்மம், நாமகரணம், அன்னப் பிராசனம் | ,, |
| உபநயனம், சௌள கன்மம் | 180 |
| நல்லொழுக்கம் | 181 |
| வியாதி அணுகாவிதி | 185 |
| வியாதி அணுகாவகை | 186 |
| பிரேத ஜன்மமடைவோர் | 189 |
| தேக நிலையும், புண்ணியச் செய்கையும் | 191 |
| ஆன்னிகம் | 192 |
| பிதுர் தர்ப்பணம் | 193 |
| சூரியார்க்கம் | 194 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| அதிதிகளை உபசரிக்கும்வகை | 195 |
| சிராத்தவிதி | 196 |
| சிராத்தகாலம் | 199 |
| மாளயவைபவம் | 202 |
| தீட்டுகளின் விவரம் | 203 |
| பிறப்பு இறப்பு திரட்டு | 204 |
| தேசாந்திரதீட்டு | 205 |
| அடக்கவிதி | 206 |
| சவங்கொண்டுபோகுந்திசை | ,, |
| சிராத்ததானம் | 207 |
| சிராத்தஞ்செய்யும்விதி | 209 |
| ஏகோதிஷ்டபலன் | 210 |
| நித்தியசிராத்தம் | 212 |
| விருடோற்சகம் | 213 |
| மாசியம், காலம் | 214 |
| சாஸ்திர பேதம் | 216 |
| சதுர்வேதம் | ,, |
| வேதாங்கம் | 217 |
| வேதோபாங்கம், உபவேதம், உபநிடத்து, மிருதி | 218 |
| இதிகாசங்கள், புராணங்கள் ஆகமங்கள் உபஆகமங்கள் | 219 |
| சாஸ்திரங்கள், கலைஞானங்கள், பாஷியங்கள் | 220 |
| சாஸ்திரங்கள் | 221 |
| கலிதருமம் | 222 |


## இரண்டாவது—தேவோற்பத்தி காண்டம்.


| விஷயம். | பக்கம். |
|---|---|
| கணேசர் உற்பவம் | 226 |
| ஷை விவாகம் | 232 |
| ஷை பூஜாவிரதக்கிரமம் | 233 |
| ஷை பிரபாவம் | 234 |
| சுப்பிரமண்ணியர் உற்பவம் | 235 |
| வீரபத்திரர், காளி, பூதகணங்கள் உற்பவம் | 242 |
| பசுவின் அங்கலட்சணம் | 244 |
| விஷ்ணு உற்பவம் | 248 |
| மச்சாவதாரம் | 250 |
| கூர்மாவதாரம் | ,, |
| வராகவதாரம் | 253 |
| நரசிங்காவதாரம் | 273 |
| வாமனாவதாரம் | 274 |
| பரசுராமாவதாரம் | 279 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| இராமாவதாரம் | 286 |
| பலராமாவதாரம் | 308 |
| கிருட்டிணாவதாரம் | 317 |
| பூதகிவதை | 322 |
| சகடாசுரன்வதை | 324 |
| திருணாவர்த்தன்வதை | 326 |
| குக்குடாசுரன்வதை | 328 |
| வெண்ணெயுண்ணல் | 329 |
| ததிபாண்டவிகலனம் | 331 |
| மருதமரச்சாப நிவர்த்தி | 334 |
| பகாசுரன்வதை | 335 |
| அகாசுரன்வதை | 336 |
| காளியநிர்த்தனம் | 337 |
| கலிக்காவதாரம் | 341 |
| கருடன் உற்பவம் | ,, |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| ஆஞ்சனேயர் உற்பவம் | 342 |
| அநுமான் வரம்பெற்றது | 345 |
| அநுமான்சாபமேற்றது | 346 |
| சிவமகாவைபவம் | 348 |
| சிவத்தின் இலீலா பேதங்கள் | 353 |
| கங்கைதரித்த காரணம் | 354 |
| பூலோக கங்கை | 355 |
| சந்திரனை முடித்தகாரணம் | ,, |
| பிட்சாடனகாரணம் | 356 |
| புலியாடை தரித்தகாரணம் | 357 |
| மழுவேந்திய காரணம் | ,, |
| மானேந்திய காரணம் | ,, |
| அரவணிந்த காரணம் | 358 |
| ஆபரணமணிந்தகாரணம் | ,, |
| பூதகணங்கள் | 359 |
| வெண்டலை யேந்தியகாரணம் | ,, |
| உடுக்கைபிடித்தகாரணம் | ,, |
| அக்கினி யேந்தியகாரணம் | ,, |
| யானைத்தோல்போர்த்தகாரண | 360 |
| சூலமேந்திய காரணம் | ,, |
| சுடலையாடிய காரணம் | ,, |
| தருமவிடை | ,, |
| மால்விடை, குதிரைவாகனம் | 351 |
| பாற்கடல் கடைதல் | 362 |
| விடமுண்டகாரணம் | 363 |
| பாற்கடலில்தோன்றியவைகள் | ,, |
| இரணகாரணம் | 364 |
| மீன்கண்ணணிந்த காரணம் | 365 |
| வராகக்கோடணிந்த காரணம் | 366 |
| பிரமகபால மேந்தியகாரணம் | ,, |
| வீணைபிடித்த காரணம் | 367 |
| புத்தகமேந்திய காரணம் | ,, |
| மன்மத தகனம் | 368 |
| கலசமேந்திய காரணம் | ,, |
| தண்டாயுதமுற்ற காரணம் | ,, |
| சிரமாலையணிந்த காரணம் | ,, |
| திருநீறணிந்த காரணம் | 369 |
| உருத்திராக்கம் | ,, |
| உமையோடு தரித்தகாரணம் | 370 |
| சிவ சொரூபம் | 372 |
| இலிங்க உருவம் | ,, |
| அக்கினி சொரூபம் | 374 |
| சரபரூபம் | 375 |
| பரமசிவவிநாயகர் உற்பத்தி | ,, |
| பஞ்சமுகமூர்த்தி | 376 |
| எமனைபுதைத்த காரணம் | 377 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| அர்த்தநாரீசுரகாரணம் | 379 |
| சங்கரநாராயணர் | 380 |
| திரிபுரதகனஞ் | 381 |
| விஷ்ணுக்கு சக்கர மளித்தது | 384 |
| சாமுண்டி உற்பவம் | 385 |
| சண்டி அல்லது காளி உற்பவம் | 386 |
| காளியோடு நடனமாடியது | 387 |
| சிதம்பர இரகசியம் | 388 |
| வியாக்ரபாதமுனியுற்பத்தி | 390 |
| உபமன்னியமுனியுற்பத்தி | 391 |
| பதஞ்சலிமகாமுனியுற்பத்தி | ,, |
| ஆனந்தத் தாண்டவதரிசனம் | 400 |
| ஏகாதசி விரதகாரணம் | 407 |
| பிரதோட விரதகாரணம் | ,, |
| ஸ்ரீநந்திதேவர் உற்பவம் | 409 |
| சத்திகள் உற்பவம் | 412 |
| சத்திபீடம் ௬௪ | 415 |
| தாட்சாயணி யுற்பத்தி | 417 |
| பார்வதி யுற்பத்தி | 418 |
| தடாதகை பிராட்டி யுற்பத்தி | 419 |
| உருத்திரர் உற்பத்தி | 421 |
| தெய்வயானை யுற்பத்தி | 422 |
| வள்ளியம்மை யுற்பத்தி | 424 |
| பாலாரிட்டதேவதைகள் உற்ப | 426 |
| தருமதேவதைகளும் நவபிரம்மாக்களும் | 427 |
| மசான உருத்திரர் உற்பத்தி | 428 |
| அச்சரர் உற்பத்தி | ,, |
| சத்தகன்னியர் உற்பத்தி | ,, |
| முப்பத்துமுக்கோடி தேவர்கள் உற்பத்தி | 429 |
| அக்கினிதேவர் உற்பத்தி | ,, |
| பிதிர்தேவதைகள் உற்பத்தி | 430 |
| சேடன்முதலிய நாகர் உற்பத்தி | ,, |
| அருணன் உற்பத்தி | 431 |
| நட்சத்திரங்க ளுற்பத்தி | ,, |
| நட்சத்திரங்களை காணும்வகை | 432 |
| நவக்கிரக உற்பத்தி | 433 |
| திக்குப்பாலகர் உற்பத்தி | ,, |
| இந்திரன் | ,, |
| இயமன்-நிருதி - வருணன் - அக்கினி | 434 |
| வாயு-குபேரன்-ஈசானன் | 435 |
| மன்மதன் உற்பத்தி | 436 |
| இரதி உற்பத்தி | 438 |
| குபேரன் உற்பத்தி | 441 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| கின்னரர் கிம்புருடருற்பத்தி | 441 |
| அஷ்டவசுக்கள் உற்பத்தி | ,, |
| கந்தருவ ருற்பத்தி | ,, |
| முனிகாட்டேரிகள் உற்பத்தி | ,, |
| சத்தமுனிவர் உற்பத்தி | 442 |
| சிவமுனிவர் உற்பத்தி | ,, |
| வயிரவன் உற்பத்தி | ,, |
| ஐயினாரப்பன் உற்பத்தி | 444 |
| காத்தவராயன் உற்பத்தி | 446 |
| சாளக்கிராம உற்பத்தி | 450 |
| மதுரைவீரன் உற்பத்தி | ,, |
| மாரியம்மன் உற்பத்தி | 452 |
| எல்லம்மன் உற்பத்தி | 453 |
| பூவாடைக்காரி உற்பத்தி | 454 |
| கன்னியம்மன் உற்பத்தி | ,, |
| குலமாரி உற்பத்தி | 455 |
| சஞ்சலதேவதைகள் உற்பத்தி | ,, |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| பெரியாண்டவன் அங்காளம்ம | 455 |
| தருமராஜா | 456 |
| தீப்பாஞ்சைஅல்லது துரோபதை | ,, |
| குளுமாயி அல்லது ஒலேப்பிடாரி | ,, |
| காத்தாயி-முற்காயி உற்பத்தி | 457 |
| கூத்தாண்டவர் உற்பத்தி | ,, |
| கங்கையம்மன் | 458 |
| வட்டப்பாச்சியார் உற்பத்தி | ,, |
| பச்சையம்மன் உற்பத்தி | 459 |
| பொம்மியம்மை உற்பத்தி | 460 |
| பஞ்சகன்னிகைகள் | ,, |
| சிரஞ்சீவிகள் | ,, |
| உபேந்திரருற்பவம் | ,, |
| மாப்பிள்ளைவீரன் உற்பவம் | ,, |
| பத்தினியம்மன் உற்பத்தி | 461 |
| ஆண்டாள் உற்பத்தி | ,, |
| மகாலட்சுமி உற்பத்தி | 465 |


## மூன்றாவது—மதபேத காண்டம்.


| விஷயம். | பக்கம். |
|---|---|
| மதபேதவிளக்கம் | 467 |
| மதங்கள் | 468 |
| இந்துசமயம் | 470 |
| சைவசமயம் | 472 |
| சித்தாந்தவிதிமதம்-சம்மேளித | 474 |
| பாசுபதி மதம் மகாவிரதிமதம் களாமுதன்மதம் | 475 |
| வாமமதம் வைரவமதம் சிவசமவாதி மதம் | 476 |
| ஐக்கவாதிமதம் சங்கிராந்திவாதி பிரவாகேசுர வாதிமதம் காபாலிமதம் அவிகாரமதம் | 477 |
| சைவபேதா பேதவாதிமதம் அனேகசுரவாதிமதம்சோடசைவபேதம் அனுசைவ | 478 |
| ஆதிசைவம் மகாசைவம்பேதசைவம் அபேதசைவம் | 479 |
| அந்தரசைவம்-குணசைவம்-நிற்குணசைவம்-அத்துவாசைவம் யோகசைவம்-ஞானசைவம்அனுச்சைவ | 480 |
| கிரியாசைவம் நாலுபாதசைவம், சுத்தசைவம் வீரசைவம்-சுவுளையாமளை மதம் | 481 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| லோகாயதன்மதம் யோகசாரன்மதம்-மாயத்தகன் மதம் | 483 |
| வைபாடிகன்மதம்- நிகண்டவாதிமதம் ஆசீர்வகன்மதம்-பஞ்சபூதவாதி மதம் | 484 |
| பஞ்சகோசவாதிமதம் சங்கிரகவாதிமதம் சூரியவாதிமதம் சந்திரவாதிமதம் ஊழ்வாதிமதம் காலவாதிமதம் மந்திரவாதி மதம் எந்திரவாதி மதம் அவிழ்தவாதிமதம் | 485 |
| சாத்தேய மதம்-கணுபத்யம் சைனமதம்சார்வாகமதம் | 486 |
| இந்திரியாத்துமவாதி மதம் அந்தக்கரணாத்தும வாதிமதம் பிராணாத்துமவாதிமதம் சூனியவாதி மதம் கௌமார மதம் பிரமசமாஜம் ஆரியசமாஜம் | 487 |
| தியாசபிமதம் | 488, |
| விஷ்ணுமதம் | , |
| பௌத்தமதம் | 489 |
| சீனதேசத்துமதம் | 490 |

| விஷயம். | பக்கம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|---|
| சௌராட்டிரமதம் | 491 | பூமியினளவு | 514 |
| துருக்கர்மதம் | ,, | மேருவின் சொரூபம் சமுத்திரத்திலே சம்புத்தீபத்திலே நவவருடம்வருடமலைகள் | 515 |
| கிறிஸ்துமதம் | 499 | வருடங்களினளவு | 516 |
| உரோமர்மதம் | 501 | யவகோடிமுதலாகிய பட்டணத்திலே | ,, |
| உரோமமதத்தின்தெய்வங்கள் | 502 | பிலக்ஷாதித்தீபங்களும் இக்ஷு முதலாகிய சமுத்திரங்களும் | ,, |
| கிரேக்கர்மதம் | ,, | பூமியின்விபாகங்கள் | 517 |
| கிரேக்கர் தெய்வங்கள் | 503 | பசக்கிரபடலம் | 519 |
| எகிப்துதேசமதம் | 504 | கிரகநக்ஷத்திரத்திலேகிரகபூமியந்தரம் | ,, |
| கார்திகேவியர்மதம் | ,, | கிரகாதிகக்ஷிகள், கக்ஷியளவு | 520 |
| மெச்சிகோதேசத்தார்மதம் | 506 | கக்ஷியின் விபாகமும் கலையும் | 521 |
| கினியாதேசத்துமதம் | ,, | கிராந்திமார்க்கம் பசக்கிரத்திலே | ,, |
| பெனின் அட்ராதேசமதம் | 507 | துருவத்திலே | 522 |
| கான்கோமதம் | ,, | பசக்கிர சுழற்சிக்கு காரணம் | ,, |
| அங்கோலியர் மதம் | ,, | பசக்கிரத்தின் சுற்றுதல் | ,, |
| அரக்கான்தேச மதம் | ,, | கிரகங்களின் கிழக்கு நடை | ,, |
| காபிரிகள் மதம் | 508 | பகணபூரணம் | 523 |
| தார்த்தாரி மதம் | ,, | ஆகாசகக்ஷி அண்டப்பரப்பு | ,, |
| ஜப்பான் மதம் | 509 | விவகாரபடலம் | 524 |
| சியமதம் | ,, | சூரியகதி விசுவன் மண்டலத்திலே | ,, |
| பெருவியன்மதம் | ,, | விசுவச்சாயை | 525 |
| கிபுசவுத்துலாக்துகனடாமதம் | 510 | உத்தரதக்ஷணகிராந்திகள் | 526 |
| பைகேர்மதம் | ,, | உதயாதிதோற்றம் | 527 |
| பிலப்பியன்மதம் | ,, | திசைகளின்தோற்றம் | 528 |
| மலாக்காமதம் | ,, | பகலிரவுகளின் தோற்றம் | 529 |
| போர்னியோ சுமித்திரா தீவுகள் மதம் | 511 | பகலிரவுகளின்வேறுபாடு | 530 |
| ஜாவாதேசமதம் | ,, | சூரியகிரகணம் | 531 |
| இலங்கைத்தீவார்மதம் | ,, | சந்திரகிரகணம் | ,, |
| மாலாத்தீவார்மதம் | ,, | முடிவுரை | 532 |
| லாப்லாந்தியர்மதம் | ,, | வைத்திய கைம்முறைகள் | 533 |
| மிஸிசிபிதேசமதம் | ,, | தலைநோய்க்கு கலிக்கம் | 534 |
| பிலோரிடியன்மதம் | 512 | யோகபூரணதிலேகியம் | 535 |
| காரபிதீவார்மதம் | ,, | நாரதர் கலகம் என்னும் புத்தக விளம்பரம். | 536 |
| ஓர் விண்ணப்பம் | ,, | | |
| பிரபஞ்ச அளவைப்பற்றி ஸ்ரீசரவணப்பெருமாளையரவர்கள் கருத்து | 513 | | |


பிரபஞ்ச உற்பத்தி

## விஷய அட்டவணை

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# நூன் முகம்.

காப்பு.

அஞ்ச லென்று மவர்க்கரு ளோங்கரக்
குஞ்ச ரத்தின் குரைகழல் ராப்பகல்
நெஞ்ச கத்தி னிருத்திப் பெரும்பிர
பஞ்ச வுற்பத்தி நூற்பகர் வாமரோ.

ஆனனுங் கணபதியி னிருதாள் போற்றி
அம்மையொடு மும்மூர்த்தி யடிகள் போற்றி
வானாட்டைக் குடியேற்றி வைத்த வள்ள
லறுமுகனார் பூங்கமல வடிகள் போற்றி
தேனாடும் மதுரமொழி வாணி போற்றி
திருமகளை யிந்நூலின் முன்னே போற்றி
சேனாட ராஞ்சர்வ தேவர் சேதிச்
செந்தமிழி லோர்நூலாச் செய்த வாறே. (1)

செய்யமுகற் கணபதியும் சித்தி முத்தி
சிவசுப்ர மணியரொடு தேவி மார்கள்
அய்யனார் வீரபத் திரனோ டொக்க
அருணந்தி யாதிநவ வீர ரானோர்
துய்யமறைப் பிரமன்மா லிளையாள் வருணி
துற்கையொடு சத்திசிவந் துறவோர் தாமுங்
கைதவஞ்சே ரிராக்கதரே கருணை வானோர்
காரணத்தை யிங்கெடுத்துக் கழறு வேனே. (2)

காரணமா முப்பத்து மூன்று கோடி
கருதரிய தேவகணம் வந்த வாறும்
தாரணியின் திக்குடைய தேவர் தேவி
தலைநாளாய் விளங்குமிந்து பானு சேதி
பூரணமாந் திதிராசி நாள்கோள் யோகம்
பூமியொடு ஆகாய வாணி சேதி
ஆரணமாம் வேதமொடு புராண மற்றை
யருமறையும் வந்தவழி யறைகு வேனே. (3)

வழியான மதனோடு ரதியாந் தேவி
வைரவருங் கெருடனொடு வாயு மைந்தன்
அழியாத தவமியற்றும் ரிஷிக ளாறும்
அண்டகோளக் கணக்கும் அடுக்கினாறும்
தொழிலாக பலதேவர் ஜெனித்த வாறும்
தொடுவெற்றிக் கொடிவிருது வந்த வாறும்

அழியாத புகம்வுனர்ந்து வருகு மாறும்
  ஆதியந்த மாபெடுத்திங் கறைகு வேனே. (4)

ஆதிமுதல் வாரமே மான வாறும்
  ஆறிரண்டு திங்களென வடைந்த வாறும்
சோதியாம் வருடமிறு பத்தென் றும்
  சொல்லடங்கா புகவருடம் பிரிந்த வாறும்
நீதியொடு விரதநாள் குறித்த வாறும்
  நீணிலத்திற் றேவரவ தார வாறும்
ஆதியாம் பலநூலும் பிரித்தே யாய்ந்து
  அற்புதமா யிங்கெடுத்து அறைகு வேனே. (5)

அருளென்ற பொருளெழுதி வைத்த பின்னர்
  அசட்டையாய்ப் புலம்புவா ரனேக மாண்பர்
தெருளாக ஒருவழியிற் கிடைத்த தல்ல
  தெளிவாளி யேயறிவன் றிரட்டுங் கஷ்டம்
மருளாக வாங்காங்கு பலநா ளானில்
  மடங்கியவை யாவுமொரு கோர்வை யாக்கிப்
பொருளாக வெளிவிடுத்த வின்னூல் முற்றும்
  புன்மொழியே னும்பொறுப்பீர் புலவர் தாமே. (6)

புலவோர்தம் அடிப்பொடிக்கும் பொறுப்போ வில்லேன்
  புத்தியிலேன் சித்தியிலேன் பொறுமை யில்லேன்
கலகலெனத் தமிழறையுங் கணக்கோ வில்லேன்
  கற்றவர்க்குத் தொண்டுசெயுங் கருத்து மில்லேன்
பலபலநூல் கற்கவென்றால் பருவ மில்லேன்
  பாவாண ரனுக்கிரகப் பற்று மில்லேன்
குலமதனின் மானிடமென் றுதித்தே னன்றிக்
  குருவுபதே சங்களிலோர் குணமி லேனே. (7)

குணமென்னுங் குன்றேறி நின்றார் காயிற்
  குவலயத்துப் பல்லுயிரும் குன்ற மெட்டும்
கணமேனு மாற்றலரி தென்பர் மேலோர்
  கணக்கறியாக் காளையென்றன் கருத்தை யேற்றுத்
துணையிருக்க வேணுமென்று துதித்துப் போற்றித்
  தோற்றியவிவ் வுலகவளந் திரட்டி வைத்த
மணமருவும் சிறுமணவூர் முனிசா மிச்சொல்
  மண்டலத்துப் புலவோர்கள் மன்னிப்பீரே. (8)

---

உ

சிவமயம்.

பூலோக இரகசியமென்னும்

# பிரபஞ்ச உற்பத்தி.

முதலாவது

## உலகோற்பத்தி காண்டம்.

### கடவுள் வணக்கம்.

விருத்தம்.

உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

நாரண னென்னுந் தேவு நான்முகத் தவனு முக்கட்
பூரணன் மூனு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
ஆரண முடிவுந் தேறு வனுதியாம் உயிர்கட் கெல்லாங்
காரண னுய மேலோன் கழலிணைக் கருத்துள் வைப்பாம்.

கண்ணனைக் கமலத்தோனைக் கண்கள்மூன் றுடையகோனை
விண்ணவர் பதியைத் தொந்தி விளங்குமைங் கரனைப் போற்றி
மண்டல மிரண்டே ழுண்ட மகிமையுற் பத்தி சொல்லத்
தண்டமிழ் வாணி திவ்ய தமிழ்ப்பதங் காப்புத் தானே.

### நூல்.

அம்மை வேண்ட அரனரு ளியபடி
இம்மை ரகசிய மினிது புகல்வாம்.

ஸ்ரீ கைலயங்கிரியில் நந்திதேவர், வியாக்கிர பாதர், பிருங்கி யக்ஷ, கின்னர, கிம்புருட, கெருட, கந்திருவர் முதலாகிய முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத் தெண்ணாயிரம் ரிஷிகளும், பூதகணங்களும், தொண்டர் கூட்டங்களும் தன்னைச் சூழ்ந்து சிரங்களின்மேல் கரங்களைக்குவித்துப் பற்பல விதமாகத் துதித்து வணங்க, மின்னலைப்பழிக்கும் பொன்னொளி விளங்கு

இடப்பாகத்தி லமர்ந்த உமைபவள், சிவபெருமானை நோக்கி "ஓசுவாமி! அடியாள் இப்பிரபஞ்ச உற்பத்தியையும் இதில் அடங்கியவைகளையும், பூமண்டலத்தின் அளவு உட்பிரிவு சீவர்கள் முதலியவற்றின் இயற்கையையும் அறிய விருப்பங்கொண்டேன் தேவரீர் அறிவிக்கத் திருவுளங் கனிந்தருள வேண்டும் என்றிறைஞ்சி நிற்க, சிவபெருமான் புன்னகையுடன் பார்வதியை நோக்கிச் சொல்லத்தொடங்கினர்:—

கேளாய், பார்வதி! இப்பிரபஞ்ச உற்பத்தியையும், சிருஷ்டிக்கிரமத்தையும், இதில் அடங்கிய வைகளையும் பூரணமாய்ச் சொல்லப்புகின் நீண்டுவிரிவாகும்; அன்றியில், அதைச் சீவர்கள் அறிந்துய்யும் பொருட்டே சொல்லுவதாகும். நாம் சமஷ்டியிலிருந்து செய்யும் விளையாட்டை வியஷ்டியாகிய சீவர்கள் பாசவசத்தினராதலின் அனுபவமாக உணரக்கூடாதவர்களாக இருக்கிறார்கள். ஆகையால், அதிக விரிவும் சுருக்கமுமின்றி அதை ஒருவாறாகச் சொல்கின்றேன் கேட்பாயாக.

எண்ணிறந்த அண்டங்களிலும் காணப்படாததாகியும், சர்வலோகங்களிலும் பரிபூரணமாய் நிறைந்துள்ளதாயும், உருவாகியும் அருவாகியும், அருவுருவாகியும், தேவராகியும், மனிதராகியும், நடப்பன, பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன முதலிய விலங்காகியும் தாவரமுமாகியும், ஆணாகியும், பெண்ணாகியும், அலியாகியும், இவையனைத்தும் அல்லனவாகியும் சகலவிடத்தும் சாட்சிமாத்திரமாய் நித்தியனாய், சர்வப்பிரகாசனாய், ஆனந்தமயமாய், மனோவாக்குக் ககோசரனாய், ஏகமாய் விளங்கியிருப்பவன் யானே. இவையன்றி, மூலப்பிரகிருதியும், அதினின்று உதித்த சத்துவ ரஜோ தமோ குணங்களும், வித்தையும் இவ்வித்தையாகிய சுத்தமாயையின் கண்தோன்றிய பிரம்ம விஷ்ணுவாதி திரிமூர்த்திகளும், அவித்தையும், இவ் அவித்தையாகிய அசுத்தமாயையினின்று உதித்த கிஞ்சிக்ஞராகிய சீவர்களும், விக்ஷேபம் ஆவரணமுமாகிய சத்திகளும், ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவியாகிய தன் மாத்திரை பூதங்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரமாகிய அந்தக்கரணங்களும், சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்ராணமாகிய ஞானேந்திரியங்களும், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தமாகிய கன்மேந்திரியங்களும், இவ்விந்திரியங்களின் தொழில்களும், பிராணன் அபானனாதி பஞ்சவாயுக்களும், தூல பஞ்ச பூதங்களினின்று உண்டான சத்த தாதுக்களாலான தூல தேகங்களும், இதில் அடங்கிய மற்ற தத்துவங்களும், இவையா

வும் யானே. என் சந்நிதானத்தினின்றே இவை உதித்தன. முடிவில் இவையாவும் என்னிலேயே ஒடுங்குகின்றன. இவையனைத்திற்கும் உள்ளும் புறம்புமாய், எள்ளில் எண்ணெய்போலும் உடலில் உயிர்போலும் நிறைந்துள்ள நித்தியன் நான் ஒருவனே.

இன்னுங் கேளாய், ஒ பார்வதி! இப்பூமண்டலம் பத்தொன்பது கோடியே எழுபது லட்சம் சதுரமயில் விஸ்தீரணமுள்ளதாயும், ஜம்புத்தீவு, பிலட்சத்தீவு, சான்மலத்தீவு, குசைத்தீவு, புட்கரத்தீவு, சாகத்தீவு, கிரௌஞ்சத்தீவு, என்னும் ஏழு தீவுகளாகப் பிரிக்கப்பட்ட உட்பிரிவுகளை யுடையதாயும்; உவர் நீர்க்கடல், கருப்பஞ் சாற்றுக்கடல், தேன்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், சுத்தநீர்க்கடலென்னும் ஏழுசமுத்திரங்களாற் சூழப்பட்டு மிருக்கிறது. ஜம்புத்தீவு எல்லாத்தீவுகளுக்கும் நடுவிலுள்ளது; அதன் நடுவிற் பொன்மயமான மேருபர்வதமானது பூமியில் பதினாயிரம் யோசனை வேரூன்றியும், எண்பத்துநான்காயிரம் யோசனை உயர்ந்தும் உள்ளது; அதன் சிகரம் முப்பத்திரண்டாயிரம் யோசனை அகலம் உடையது. மேருமலையானது பூமியாகிய தாமரை மலருக்கு ஒரு மொட்டுப்போல் விளங்கும். ஹிமாசலம் ஏமகூடம் நிஷதமென்னும் மூன்றுபர்வதங்களும் மேருவின் தென்திசையிலும்; நீலம், சுவேதம், சிருங்கியென்னும் மூன்று பர்வதங்களும் மேருவின் வடதிசையிலும்; நவரத்தின மயமான சாரலும் பதுமராக மணிப்போன்ற செந்நிறமும் அக்கினிசுவாலைபோன்ற பிரகாசமும் பெற்று விளங்குகின்றன. மேருவின் தென்பக்கலில் பாரதம் கிம்புருடம் அரிவருடமென மூன்று வர்ஷம் உள்ளன. இவ்வர்ஷங்கள் ஒவ்வொன்றும் ஒன்பதினாயிரம் யோசனை விஸ்தீரணம் உடையன; நடுவிலுள்ள இளாவிரதகண்டத்தின் மத்தியில் மேருமலை மிகவும் நன்றாயிருக்கும்; மேருவின் கிழக்கில் மந்தரமும்; தெற்கில் கந்தமாதனமும்; மேற்கில் விபுலமும்; வடக்கில் சுபார்ஸ்வமும் என நான்கு பர்வதங்கள் நாற்புறத்திலும் நின்று பதினாயிரம் யோசனை அகலமும் ஒன்பதினாயிரம் யோசனை உயரமுங் கொண்டு அம்மேருவுக்கு உறுதியாக விட்கம்ப சைலங்களாய் நிற்கும்; இப்பர்வதங்களில் மந்தரகிரியில் கடப்பமரமும், கந்தமாதனகிரியில் நாவன்மரமும், விபுலகிரியில் அரசமரமும், சுபார்சுவகிரியில் ஆலமரமும் விளங்கும்; இம்மரங்கள் ஆயிரம்யோசனை விஸ்தீரணமுடையன.

மேற்கூறிய மகாமேருவுக்குத் தென்பாரிசத்தில் விளங்குங் கந்தமாதன கிரியிலிருக்கும் ஜம்புவிருக்ஷமென்னும் நாவல்மரமா

னது இரண்டாயிரம்யோசனை உயரமுள்ளது. நீண்ட அளவுபெற்ற நாவல்மரம் நிற்குந் தன்மையினுல் பரதகண்டத்தை நாவலந்தீவு எனப் பண்டிதர்களால் சொல்லப்படும். அன்றியும், நான்முகனெ ன்னும் பிரமனது வலது புயத்தில் உதித்த சாம்புவென்னும் அரச னது முதற்குமாரனுகிய அங்கதீரனுல் அரசாளப்பட்ட இந்நாவ லந்தீவை மேற்படி அங்கதீரனுடைய ஒன்பது புத்திரரில் முதற் புத்திரனுகிய பரதன் என்பவன் அரசாட்சி செய்துவந்த படியால் பரதகண்டமென்றும் வழங்கப்படுகிறது. இதன் விவரத்தை மேல் வரும் விசேடங்களுடன் விளக்குவோமாக. இந்தத் தீவுக்கு நாவ லந்தீவு என்றுபெயர். அம்மரத்தின் பழங்கள் ஒவ்வொன்றும் யானையைப்போல உருவமுடையனவாய்ப் பழுத்து நிலமிசைவிழு ந்து அப்பழச்சாற்றி னின்றுபெருகும் ஆறுனது ஐம்புநதி ஆகி றது. அதன் சாரத்தைப் புசிப்போர் துக்கம், நோய், விருத்த தசை, இந்திரியநாச முதலியன அடையாமல் எப்பொழுதும் இன் பத்துடன் வாழ்ந்திருப்பார்கள். அந்நதிக்கரையிலுள்ள மண், பொன்மயமாயுள்ளது. மேருவுக்கு கிழக்கே பத்ராசுவமும் மேற் கே கேதுமாலமும் என இரண்டு மரங்கள் உள்ளது. அவற்றிற்கு இடையிலேதான் இளாவிரத கண்டமுள்ளது; கிழக்கில் மந்தர மலையடியில் அருணமும், தெற்கில் கந்தமாதனத்தடியில் மானத சரசும், மேற்கில் விபுலகிரியடியில் சிதோதகமும், வடக்கில் சுபார் சுவகிரியடியில் மகா மடுவும் என நான்கு மடுக்கள் உண்டு. இம் மடுக்களில், முறையே சயித்திரக்காவி, சித்திரை, வைப்பிரசை, திருதாக்கியம் என்னும் நான்கு நந்தவனங்கள் உண்டு. இந்நந்த வனங்களின் நடுவில், முறையே தாமரைமலருடன் கூடிய தடாக மும், குமுதங்களோடுகூடிய மானதசரசும், செந்தாமரையுடன் கூடிய விமலோதகமும், நீலோற்பலத்துடன் கூடிய மனோரதமு மென நான்கு ஓடைகள் உண்டு. சிதரஞ்சனம், குமுதம், குராஹா, மால்யவான் என்னும் பர்வதங்கள் பூர்வபாகத்திலும்; கேசரபர்வ தம் தட்சணபாகத்திலும்; திரிகூடம், சிசிரம், பதகம், ரஜதம், நிஷதம் இவைகள் தட்சணபாகத்திலுமுள்ளன. மேற்புறத்தில், சிசிவாசஸை, வைதூரியம், கபிலம், கந்தமாதனம், ஜாருதி என் னும் பர்வதங்களும், வடபாகத்தில், சங்கசூடமென்றும் ரிஷப மென்றும் கம்சமென்றும் காலஞ்சரமென்றும் பர்வதகேசரங்க ளும் உள்ளன. இந்த மேருமலையின் உச்சியில் பதினுலாயிரம் யோசனை விஸ்தாரத்தோடு கூடியதாயுள்ளது பிரமலோகம். இதைச் சுற்றிலும் அட்டதிக்குப் பாலர்களின் உலகங்கள் உண்டு. அந்த பிரமலோகத்தின் எட்டுத்திக்கிலும் சந்திரமண்டலம் பிரகா

சிக்கிறது. விஷ்ணுபாதத்திலுண்டாகிய கங்கையானது அவ்விடத்தில் சீதை யென்றும், அலகநந்தாவென்றும், சுசக்ஷுசுவென்றும், பத்ராவென்றும் நான்குதிக்குகளிலும் பிரவாகிக்கின்றன. சீதையென்னும் நதி கிழக்கிலும், அலகநந்தா தெற்கிலும், சுசக்ஷுசு மேற்கிலும், பத்ராவடக்கிலும், பிரவாகித்துப்பர்வதங்களை அதிக்கிரமித்து, சமுத்திரத்தை அடைகின்றன. சுநீலம், நிஷதம், மாலியவான், கந்தமாதனமென்று சொல்லப்பட்ட நான்கு பர்வதங்கள் தாமரைமொட்டுப் போன்ற மேருமலையின் நாற்புறத்திலுமுள்ளன. பரத, கேதுமால, பத்ராசுவ, குருவென்னும் நான்கு வர்ஷங்கள் மேருவாகிய தாமரைக்கு இதழ்கள்போல் இருக்கின்றன. அதன் மத்தியில், தேவகூடமும்; தென்னண்டை கந்தமாதனமும்; வடவண்டை கைலாசமும்; முறையே கீழ்மேல் பாகங்களில், நிஷதநீல பர்வதங்களும்; மேருவின் நான்குபுறத்தின் சிகரங்களில் ஒவ்வொரு பாதத்திலும் இரண்டு கேசர பர்வதங்களும் உள்ளன. அதில் சைலேத்துரோணியென்னும் ஓர் ஓடை உண்டு. அதைச் சுற்றிலும் மனத்திற்குறிய புட்பங்கள் பூத்த நந்தவனங்களும் காடுகளும் மற்றவையும் உள்ளன. அந்தக்காடுகளில், எப்பொழுதும் யக்ஷர்களும் கின்னரர்களும் கந்தருவர்களும் விளையாடிக்கொண்டிருப்பார்கள். இதற்குப் பூலோக சுவர்க்க மென்னும் பெயர் உண்டு. தருமஞ் செய்தவர்கள் இந்த உலோகத்திலே சுகத்தை அனுபவிப்பார்கள். இதனைப் பாவிகள் பார்க்கவும் அடையவும் கூடாது. கிம்புருஷாதி எட்டு வர்ஷங்களில் வசிப்போர்களுக்கு கோபம், துக்கம், ஆயாசம், துவேஷம், பசி, நரகம், பயம், சோம்பல் முதலியனகிடையா. அவர்கள் எப்போதும் நோயற்ற தேகமும் துக்கமில்லாமனமும், இருபத்திரண்டாயிரவருஷம் ஆயுளுமடைவார்கள்; கிருதமென்றும் திரேதாவென்றும் சொல்லப்பட்ட நதிகள் அப்பூமியில் எங்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றமையால் மழை கிடையாது. அப்பூமியின் போகம் அளவிடப்பட்டுள்ளது. அதிகமாக அனுபவிக்க முயன்றாலும் பிரயோசனப்படாது. அப்பூமியின் நதிதீரத்திலுள்ள மணற்பாகங்கள் பொன்னிறமாகவும், புட்பங்கள் சுவர்ணமயமாகவும், கரைப்புறம் இரத்தினமயமாகவும் பசும்புல்லுள்ள திட்டுகள் வைடூரியமாகவும் விளங்குவதால், அங்குள்ளவர்கள் விளையாட்டிலே பொழுது போக்குவார்கள்.

கேளாய். பார்வதி! இனி இமயபர்வதத்தின் தட்சணபாகத்துள்ள பாரதவர்ஷத்தின் விஸ்தீரணத்தைச்சொல்லுகிறேன். அது

ஒன்பதினுயிரம் யோசனை விஸ்தீரணத்தோடு கூடியது; இதற்கு கர்ம பூமியென ஓர் பெயருண்டு. இப்பூமியில் இருந்து புண்ணியஞ் செய்தோர் புண்ணியபூமியாகிய தேவலோகத்தையும், பாவம் பண்ணினோர் நரகத்தையும் ஞானிகள் மோட்சத்தையு மடைவார்கள். அன்றியும், இப்பாரதவர்ஷம் நவகண்டங்களாகப் பிரிக்கப்பட்டு, இந்திரத்தினம், கசேரு தாம்ரபர்ணம், கபஸ்திமான், நாகதீபம், சௌமியத்தீபம், கந்தர்வம், வாருணம், பரதமென்னும் பெயர்களோடு வழங்கும்; இவற்றில் ஒன்பதாவதாகியபரதகண்டமானது அனேகமாய்ச் சமுத்திரங்களாற் சூழப்பட்டதும், வடக்குத் தெற்கில் ஆயிரம் யோசனை விஸ்தீரணத்தோடு கூடியதுமாக இருக்கும்.

இக்கண்டத்தின் கிழ்ப்புறத்தில் கிராதகர்களும், மேற்புறத்தில் யவனர்களும், தட்சணபாகத்தில் ஆந்திரரும், வடக்கில் கிறித்தவர்களும் வசிக்கிறார்கள். இக்கண்டத்தின் மத்தியில் முப்பது கோடி தொகையுள்ள பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய,சூத்திரராகிய நான்கு வருணத்தோரும் வசிக்கிறார்கள். இவர்கள் அசுவமேதாதி யாகங்களாலும், புண்ணிய தீர்த்த ஸ்நானங்களாலும், தேவதாப் பிரதிட்டைகளாலும், கோதானமுதலிய தானங்களாலும் நற்கதி அடைகிறார்கள். இப்பூமியில் மகேந்திரமென்றும், மலயமென்றும், சகியமென்றும், சுத்திமானென்றும், ரிட்சணமென்றும், விந்தியமென்றும், பாரியாத்திரமென்றும், ஏழுகுல பர்வதங்கள் இருக்கின்றன. வேதஸ்மிருதியென்றும், நர்மதாவென்றும், சுரஸாவென்றும் பேர் பெற்ற நதிகள் பாரியாத்திரமென்னும் பர்வதத்தில் உற்பத்தியாகி, நான்கு புறத்திலும் பரவி, இப்பூமியைப் பரிசுத்தஞ் செய்கின்றன.

விந்திய பர்வதத்தினின்று கோதாவரி, பீமா, தாபி முதலிய மகாநதிகள்தோன்றி, தங்களிடம் ஸ்நானபானஞ் செய்வாரது பாவங்களைப் போக்கி, பரிசுத்தஞ்செய்கின்றன. கிருஷ்ணவேணி காவேரி முதலிய மகாநதிகள் சகியபர்வதத்தில் தோன்றி, தட்சணதேசத்தைப் பரிசுத்தஞ் செய்கின்றன. கிருதமாலா, தாம்பிரபரணி முதலிய நதிகள் மலயபர்வதத்தில் உற்பத்தியாகி அவ்விடங்களைச் சுத்திசெய்கின்றன.

மகேந்திர பர்வதத்தினின்று திரியாமா, ரிஷகுல்யா என்னும் நதிகள் உற்பத்தியாகி, அப்புரங்களைப் பரிசுத்தம்செய்கின்றன. குமரியென்னும் நதி, சுத்திமானென்னும் பர்வதத்திலுண்டா

கிப் பரவுகின்றது. இப்பூமியில் நான்குவருணத்தாரும் ஸ்நானயா னங்களைச்செய்து இந்நதிகளால் சுகத்தையும் பரிசுத்தத்தையும் அடைகிறார்கள். இக்கண்டத்தில் நான்கு யுகம் உண்டு. மற்றத் தீபங்களில் இவ்வித யுகங்கள் இல்லை.

## சம்புத்தீவு

இப்பரத கண்டத்திலுள்ள சம்புத்தீவானது கர்மபூமியான தால், அதிலுள்ள ஜனங்கள் கோதானமுதலிய தானங்களையும், அக்கினிகோத்திரமுதலிய சற்கருமங்களையும், தவமுதலிய யோக கங்களையுஞ் செய்து நற்கதி அடைகிறார்கள். ஆகையால், ஒன்பது வகையாகிய வர்ஷங்களுள் பாரதவர்ஷமே சிறந்தது. மற்றவை யெல்லாம் போகபூமிகளேயன்றிப் புண்ணியஞ் செய்து நற்கதி அடையத்தக்கவை அல்ல.

ஆதலின், ஆன்மா ஜனனமநேகம் எடுத்தாலும் இப்பரத கண்டத்தில் அது ஒர் ஜனன மெடுப்பது அருமையிலும் அருமை. ஏனெனில், சுவர்க்க மோட்சங்கள் அடைய காரணமாயிருப்பது இப்பரதகண்ட மாகையால்; தன்னியர்களாயிருக்கும் தேவர்க ளும் இப்புண்ணிய பூமியில் தோன்றினால் மறுபடியும் தேவாமிசம் அடையலா மென்று விரும்புகிறார்கள். இவர்கள் இப்பூமியில் தோன்றி என்னைத் தியானித்து உயர்ந்த பதவியை அடைகிறார் கள். ஆகையால், மோட்சலோகத்திற்கு வழிகாட்டும் முதற்கரு வியானது இப்பரதகண்டமென்றே அறிவாய். ஒபார்வதி! இப்பரத கண்டத்தின் அளவு முப்பத்து நாலாயிரம் யோசனை விஸ்தீரண மாம், உவர் நீர்க்கடல் இலட்சம் யோசனை விஸ்தீரணமுடைய தாய் சம்புத்தீவைச் சூழ்ந்திருக்கும்.

## பிலட்சத்தீவு.

கேளாய். பார்வதி! பிலட்சத்தீவானது மேற்கூறிய ஜம்புத் தீவுக்கு இரண்டு கொண்டதாம். அதில் கோமேதகம்-சந்திரம்-நா ரதம்-துந்துபி, சோமகம், சுமனசு, விப்பிரராசம், எனவர்ஷாசலங் களுண்டு. அப்பர்வதங்களில் எப்போதும் தேவர் கந்தருவர் முத லாயினோர் சந்தோடத்துடன் வசிப்பார்கள். அதில் அநுதப்தா, சிகா, பாபக்னி, த்ருதிவா, கிருபா, அமிருதா, சுகிர்தா என்னும் ஏழுநதிகள் பிரவகிக்கும். அநேக சிறுநதிகளும் உண்டு. அங்குள் ளோருக்கு மனோவியாதி தேகபீடை முதலியவை கிடையா. அந் நதிகளில் ஸ்நானம் செய்து நீர்பருகினோர் பதினாயிரவருஷகாலம் சீவித்திருப்பார்கள். அவ்விடத்தில் சம்புத்தீவைப்போல யுகா



னன்மைதுஇல்லை, காலம் முழுவதும் திரேதா யுகத்திற்குச் சமான மாகவே இருக்கும். பிராமணாதி நான்குவருணத்தார்களும் இருக் கின்றனர். அவ்விடத்தில் என்னையும் திருமாலையும் பிரமனையும் வேத மந்திரங்களாற் பூசிக்கிறார்கள். அது கருப்பஞ் சாற்றுக்கட லாற் சூழப்பட்டிருக்கும்.

## சான்மலித்தீவு.

அதன் பின்னர், சான்மலித்தீவில் ஸ்வேதம், ஹரிதம் ஜீமூதம் ரோஹிதம், வைத்யுதம், மானவம், சுப்பிரபம் என ஏழுவர்ஷ பர் வதங்கள் உண்டு. அதற்கு சான்மலி என்னும்பெயர் அங்குள்ள விருக்ஷத்தாலேயே உண்டாயிற்று. அதற்கிரட்டிப்பாகச் சுராக் கடல் சூழ்ந்திருக்கும். சுக்லா, ரக்தா, ஹிரண்யா, சந்த்ரா, சக்ரா, விமோசனு, நிவிர்த்தியென்னும் ஏழுநதிகள் அவ்வர்ஷங்களினின் றுபெருகும். அப்பூமியில் நான்கு வருணத்தாரும் உண்டு. அவர் எக்கிய முதலியவற்றால் விஷ்ணுவை வணங்குவர். அவ்விடத்தில் தேவர்கள் உல்லாசமாக வசிப்பார்கள்.

## குசைத்தீவு.

இந்தத் தீவானது அச்சான்மலித்தீவுக்கு இரண்டு மடங்கு உடையது. இதில் அசுரரும், தேவரும், கந்தர்வர், கிம்புருஷாதி களும், மானிடருள் நான்கு வருணத்தவர்களும் வாழ்வார்கள். ஆசார அநுஷ்டானங்கள் தவறமாட்டார்கள். இங்குள்ளவர்கள் என்னையும் திருமாலையும் பூஜிப்பார்கள். குசேசயம், அரி, ஜ்யோதி மான், புஷ்பவான், மணிதருமம், மகாகைலம், மந்தராசலம் என்னும் ஏழுபர்வதங்களும், தூதபாவை, சிவை, பவித்திரை, சம் மதி, வித்யை, தம்பை,மஹீ என்னும் ஏழுநதிகளும் இன்னும் பல நதிகளும உண்டு. இது இங்குள்ள குசையினாலே இப்பெயருற் றது. இதனை நெய்க்கடல் சூழ்ந்திருக்கும். (குசை-தருப்பை.)

## கிரௌஞ்சத்தீவு.

கேளாய் பார்வதி! முன்சொன்ன தீவுக்கு மேலானது, தயிர்க் கடலாற் சூழப்பட்ட கிரௌஞ்சத்தீபம். இதில், கிரௌஞ்சம்-வாம னம்-அந்தகாரம் - திவாவிருத்யம் - புண்டரீகம் - துந்துபி-சுமனசு என்னும் ஏழுபர்வதங்களும், பலவிதமான விருட்சங்களும், புட்ப வனங்களும், தேவர் காந்தருவர்களும், நான்குவருணத்தார்களும், நோயில்லாதவாழ்வை யுடையவராய் இருப்பார்கள். இதில்கௌரீ குமுக்வதி-சந்தியா-ராத்திரீ - மனோஜவா-கியாதி-புண்டரீகா என்

னும் ஏழுநதிகள் உண்டு. இங்குள்ளவர்கள் யோகமார்க்கத்தால் என்னை தியானிக்கிறார்கள்.

## சாகத்தீவு.

பாற் சமுத்திரத்தாற் சூழப்பட்டும், கிரௌஞ்சத்தீவுக்கு இரு மடங்குமுள்ள சாகத்தீவானது, உதயகிரி - ஜலதாரம் - பரோதா-சாமம்-அஸ்தகிரி-அம்பிகாகிரி-கேசரி என்னும் ஏழுவர்ஷபர்வதங்களை உடையது. நான்கு வருணத்தாரும் அங்கே உண்டு.

அதில், சுகுமாரி-குமாரி-நலினி-வேணுமா - இட்சு-ரேணுகா-கபஸ்தி என ஏழுநதிகள் உண்டு. அன்றி, அநேகமலைகளும் நதிகளும் உண்டு. அங்குள்ளவர்கள் தருமவான்களாகஇருப்பார்கள். அவர்கள் யாகாதி கருமங்களாற் சூரியனையே எப்பொழுதும் பூசிப்பார்கள்.

## புட்கரத்தீவு.

அதற் கிரட்டிப்பாகிய புட்கரத்தீவானது, மானதசரசு என்னும் ஆயிரம் யோசனை விஸ்தீரணமான தடாகமும், அதில் தாமரைமலர்கள் ஐந்துயோசனை உயர்ந்துவிளங்கும். அவ்விடத்துள்ளவர்கள் இராகத்துவேஷாதிகளும், உத்தமோத்தம பேதமும் இன்றிச் சத்தியவான்களாய், சுவர்ணமய அலங்காரத்துடன் சமானஸ்தர்களாய், ஜ்வராதி ரோகங்களின்றி, அறுசுவையோடுகூடிய அன்னபானாதிகளைப் புசிப்பவர்களாகியும் சுகசீவிகளாகவும் பதினாயிரவருஷம் வாழ்பவர்களாயும் இருப்பார்கள். அது சுகமான இடம்.

புஷ்கரம்-தாதகி-கண்டம் - மகாவீதம்-நியக்ரோதம் என்னும் இடங்களில் தேவாசுரர்களால் பூசிக்கப்பட்டவராய் பிரம்மதேவர் எழுந்தருளியிருப்பார். அது சுத்த நீர்க்கடலாற் சூழப்பட்டிருக்கும். இவ்வாறு, சப்தசமுத்திரங்களாற் சூழப்பட்டிருப்பன சப்த தீவுக்களாம். சமுத்திரசலம், சந்திரன் விருத்தியாம்போது விருத்தியாகி அவன் குறையும்போது குறைந்துவிடும். சமுத்திரத்திலுள்ள வடவாமுகாக்கினி அந்த ஜலப்பெருக்கைப் பருகிவிடும். சுத்த நீர்க்கடலுக்குப் புறம்பே, உலகங்கள் இல்லை, பிராணிகளும் இல்லை. ஆயினும், பொன்னிறமான பூமி, அதற் கிரட்டிப்பு விரிவாக ஆயிரயோசனை உயரமாக இருக்கும். அவ்விடத்திற்கு அப்புறம் அண்டச்சுவர் உள்ளது. அதுவரையிலும்தான் பூமி. இந்தத் தீவுகளும் ஐம்பதுகோடி யோசனை விஸ்தீரணமாம். இதுவே எல்லாப் பிராணிகளுக்கும் ஆதார காரணமாக விளங்கும்.

2

மேலும் சாம்புளன்னும் அரசனுடையபுத்திரர்களாகிய அங்கநீரன் மேதாதி-வபுட்டு-யாதி-புரதிட்டு- துதிமன்-அவ்வியன் என்னும்எழுவரும் ஏழுதீவையும் ஆண்டார்கள். அவர்களுள் சம்புத்தீவையாண்ட அங்கீரதன், தன் புதல்வர்களாகிய பாரதன்-கிம்புருடன்-கேதுமாலோன்-பத்திலை-சுத்தினி-பரா விரதன்-இரவி-அனலன்-இரணியன்-குரு என்று சொல்லப்பட்ட ஒன்பதுபேருக்கும் இந்தசம்புத்தீவை ஒன்பதுகண்டமாக்கிப் பகுந்துக்கொடுத்தான். முன்சொன்ன மகாமேருவின் சாரலின் தென்புறத்திலே, நாவல் மரம் இருக்குந் தன்மையினாலே, இந்தத்தீவு முற்றும் நாவலந்தீவென்னும் ஆஸ்பதமான பெயரைப்பெற்றது. அன்றியும், முன்சொன்ன அங்கதீரன் பிள்ளைகளில் மூத்தவனாகிய பரதன் என்னும் அரசன், இக்கண்டத்தை ஆண்டிருந்தமையால், ஆதியிலிருந்தே இது, பரதகண்டமென்று வழங்கப்பட்டுவருகின்றது.

## பிரமாண்டக் குறிப்பு.

இவ்வாறு சொல்லக்கேட்ட சர்வலோக மாதாவாகிய உமாபிராட்டியார், மிகுந்த சந்தோஷமடைந்து சிவபெருமானைநோக்கி "ஓசுவாமி! பிரமாண்டம் எப்படி உண்டாயிற்று? அஃது எவ்வளவு விஸ்தீரணமுடையது? அதற்கு ஆதாரம்யாது? இவற்றை எனக்கு விளக்கச் சொல்லவேண்டும்" என்று கேட்க, சிவபெருமான்பார்வதியைநோக்கிச் சொல்லுகிறார்:—"ஏ பார்வதி! இந்தப்பிரமாண்டத்தின் விஸ்தீரணத்தையும் உயரத்தையுஞ் சுருக்கமாகச்சொல்லுகின்றேன். இந்தப் பிரமாண்டத்திற்குக் காரணமாகியும், அவ்வியத்தமாயும், அநாமயமாயும், எல்லாவற்றிற்கும் பிறப்பிடமாயும், எல்லாவற்றிற்கும் லயத்தானமாகியும் விளங்கும் என்னிடத்தினின்றும் ஆகாயம் உண்டாயிற்று; ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று அக்கினியும், அக்கினியினின்று சலமும், சலத்தினின்று பிருதிவும் தோன்றின; பஞ்ச பூதாத்து மகமான பிரமதேவர் உண்டாகிப் பிரமாண்டத்தைச் சிருட்டிசெய்தனர்.

## ஆதிசேடன் சிறப்பு.

அவற்றுள் அதல, விதல, சுதல, தராதல, மகாதல, ரசாதல, பாதலம் என்று சொல்லப்பட்ட கீழுலகங்கள் ஏழும், பூலோகம், புவர்லோகம், மஹாலோகம், ஜனோலோகம், தபோலோகம், பிதுர்லோகம், சத்தியலோகம் என விளங்கும் மேலுலகங்கள் ஏழும் உள்ளன. ஆகிய இந்த ஈரேழு பதினான்கு உலகங்களுக்கும்

ஆதாரமாக இருப்பவன் ஆதிசேடன். அவன் வெண்ணிறமாக விளங்குவான். அவனே விஷ்ணுவென்றுஞ்சொல்லப்படும். பிரமன் வாக்கின்படி அவ்ஆதிசேடன்சகலஉலகங்களையுந்தாங்கிநிற்பான். அந்தச் சேடனுடைய குணானுபவங்களைத் தேவர் முனிவர் முதலானவர்களாலும் சொல்லிமுடியாது. ஆயிரஞ்சிரங்களும், தேவர் முனிவர்களாற் செய்யப்படும் பூசையும், சித்தர்களாற் சொல்லப்படும் அனந்தனென்னும் பெயரும், எல்லாத்திக்குகளையும் பிரகாசித்தச்செய்யும் சுவத்திகா பூடனம்போன்ற ஆயிரம் பணாமுடிகளும், நெருப்போடுபிரகாசிக்கும் வெண்மலைபோல சுவாலையோடு சுழன்றுக்கொண்டிருக்கும் இரண்டாயிரம் விழிகளும், நவமணிகளிழைத்த கிரீட குண்டலங்களும், திவ்வியமணம்பொருந்திய மலர்மாலைகளும், வெண்ணிறத்தாகாரமும், நீலநிறவத்திரமும், கைலாயகிரியைப்போன்ற உயர்வும்,கலப்பை இருப்புலக்கைகளாகிய ஆயுதங்களும், வருணன் கன்னிகையாகிய வாருணி அருகிருந்துசெப்பும் உபாசனையும், பிரகாசித்துக் கொண்டிருக்கும் விடச்சுவாலையும், சங்கர்ஷணாத்மகமும், உருத்திரரூபமும், பிரளய காலாந்தத்திற் சர்வலோகங்களையும் தன்னிடத்தேஒடுக்கும் வல்லபமும்,சர்வாண்டங்களையும் ஓர் கடுகுபோலச் சுமக்கும் ஆற்றலும், உடையவனாக விளங்கும் ஆதிசேடனுடைய உருவத்தை ஒருவராலும்வர்ணிக்கச் சாத்தியப்பட மாட்டாது. அவனுடைய சிரோ ரத்தினங்களின் மேல் படிந்திருக்கும் பூமியானது, அம்மணிகளின் பிரதிபிம்பத்தினால் குசும மாலைபோல விளங்கா நிற்கும். அந்தச்சேடன் சோர்வுற்றகாலையில் சமஸ்த பர்வதங்களோடு கூடிய உலக முழுவதும் அசையும்; அதுவே பூகம்பம் எனப்படும். அவனுடைய குணவிசேஷங்களை சித்தர்-முனிவர் - கந்தருவர்-உரகர் - கின்னரர்-யட்சர் - தைத்தியர்-தானவர் முதலானவர்களும் அறியாதவர்களாகி அனந்தனென்று சொல்லுவார்கள். அழிவில்லாதவனாகவிளங்கும் அந்தச் சேடன், தன் மார்பில் அணிந்திருக்கும் செஞ்சந்தனத்தைத் தன் பெருமூச்சாற் பறக்கச்செய்து, திக்குகளாகிய மாதர்களை அடையச்செய்ய வல்லவன். அவனிடத்தில் இருந்து நிமித்த சாத்திரத்தையும், சகலமான ஜோதிட சாஸ்திரத்தையும் கர்க்க முனிவர் அநேககாலம் தவம்செய்து அடைந்தனர். பாதலலோகங்கள் ஏழும் தனித்தனி பதினாயிரயோசனை விஸ்தீரணமும், இருபதினாயிரயோசனை உயரமும் உடையன; பாதாலலோகங்களில் இரத்தினமயமான பூமியும் இரத்தினங்களிழைத்த உப்பரிகைகளும் மதில்களும் தங்கம் விளையும் உமியும் உண்டு; அவ்விடத்தில் திதி

புத்திரர்களான தைத்தியர்களும் நாகராசர்களும், இராக்கதர்களும் வசிக்கிறார்கள். ஒளிவுள்ள இரத்தினங்களையுடைய பாதலலோகமானது, சந்தோஷத்தை அளவின்றி யுண்டாக்கும். அதற்குச் சமானமான உலகம் இல்லவே இல்லை. தேவதானவ கன்னிகைகளா லுண்டாகும் போகத்தை விடுத்தவனுக்கும் பாதலலோகத்தில் விருப்பமுண்டாகத் தடையிராது. அவ்விடத்திலே பகலில் சூரியவொளியும் இரவில் சந்திரகாந்தியும் இல்லை, குளிர்ச்சி வெப்பங்களும் இல்லை. யாவும் இரத்தின ஒளியேயாக விளங்கும் அங்கே தேவாமிர்தத்திற்குச் சமானமான பட்சண போசனங்களும், திருத்தியை உண்டாக்கத்தக்க அன்னபானாதிகளும், இருது ஆறினும் புட்பிக்கும் புட்பசாதிகளும், அம்மலர்களிலுள்ள தேனைப் பருகி ரீங்காரஞ்செய்யும் பொன்மயமான வண்டுகளின் கூட்டங்களும், வைடூரியமான விருக்ஷத்தளிர்களை உண்டுகளித்த கோகிலங்களின் குரலோசையும், படிகத்தினால்செய்தபடிகளையுடைய தடாகங்களிற் புட்பித்த சுவர்ணமயமான தாமரைமலர்களும், அமிர்தமயமான ஜலம்பெருகும் நதிகளும், இரத்தினமயமான நீலாம்பரபீதாம்பரங்களைத் தரும் விருக்ஷங்களும், வைர கோமேதங்களாலாகிய பூஷணங்களைக் கொடுக்கத்தக்க பர்வதங்களும், வாடாமல் மணம் வீசும் மலர்களையும் சந்தனத்தையுங் கொடுக்கும் மரங்களும், வீணை வேணி மிருதங்கமுதலிய வாத்தியங்களைச் சதா வாசித்துக்கொண்டும் கானம்செய்திருக்கும் நாககன்னிகைகளும் நிரம்பப்பெற்றுள்ள அந்தப் பாதலலோகத்தில் எவ்வளவுகாலம் ஒருவன் வாழ்ந்திருக்கினுங் காலங் கழிந்ததாகவே தோன்றாது.

## நரக லோகம்.

கேளாய் ஓ பார்வதி! பூமியின் கீழே இருளும், பள்ளமும் தண்ணீரும் உண்டு; அதற்கடியில் பாவிகளை வதைக்கிற நரகதானங்கள் உண்டு, அவற்றைச் சொல்லுகிறேன் கேள்.

அவை இரௌரவம்-சூகரம்-ரோதம்-தாலம்-விசஸனம்-மகாசுவாலம் தப்தகும்பம்-லவணம்-விலோகிதம்-ருதிராம்பம்-வைதரணி-கிருமிசம்-கிருமிபோசனம்-அசிபத்திரம்-கிருஷ்ணம்-லாலாபட்சம்-பூயவகம்-அக்கினி ஜ்வாலம்-அதச்சிரம்-சந்தமிசம் - கிருஷ்ணசூத்திரம்-தமசு-அவீசு-சுவபோஜனம்-அப்பிரதிஷ்டம் - எனப்பல ஆகும். இவைகளின்பொருள்; இரவுரவமென்பது-ருருவென்னும் மிருகத்தினால் துன்பப்படுத்துமிடம், சூகரம்என்பது-பன்றிகளால் பிடிக்கப்பட்டும் அசையவொட்டாமல் நிறுத்தப்படுமிடம், உரோ

தம்என்பது பனைமரத்தினின்றும் விழுதல், அதின் மட்டைகளினாலே அறுத்தல், தாலம் கைவாளாலே அறுத்தல், விசஸனம் பெரிய நெருப்பு, மகாஜ்வாலம் காய்ச்சின எண்ணெய்க்குடம், தப்தகும்பம் அறுத்தறுத்துக் காச்சின உப்பிடுவது; இல்வணம் உதிரத்தை உரியும்படி செய்வது, விலோகிதம் காய்ச்சின இரத்தத்திற் போடுமிடம், உருதிராம்பம் கடப்பதற்கு வருத்தமான உதிர ஆறு, வைதரணி புழுக்கள் துளைக்குமிடம், கிருமிசம் புழுக்களைத் தின்னுமிடம் கிருமிபோசனம் நெருங்கின இருப்பு முட்களின்மேல் நடக்கச்செய்வது, கிருஷ்ணம் இது கார்ஷ்ணயசம் என்னும் சொல்லப்படும் சகிக்கக்கூடாத குளிராயிருப்பது, தாருணம் சந்தமிசினியென்னும் ஆயுதத்தினால் நாக்கைப் பிடுங்குவது, சந்தமிசம் நாற்புறத்திலும் கொடிய கத்திகளைக் கட்டி நடப்பிப்பது, அசிபத்திரவனம்- அதிக துர்க்கந்தமாய்க் கணநேரமும் பொறுக்கக்கூடாத இடம், பூயவஹம் கிருஷ்ணசூத்திரமாவது சக்கரத்தில் ஏற்றிக் கால்விரலில் ஒரு கயிறுமாட்டி உடலெல்லாம் ஒன்றாகும்படி இறுக்கிக்கட்டி அறுக்கப் படும்படியான இடம். இப்படியே மற்றவைகளையும் அறிந்து கொள்க.

மேற்சொன்ன இரௌரவமுதலான அநேககோடி நரகங்களும் இயமனுடைய அதிகாரத்திற்கு உட்பட்டு இருக்கின்றன. அவற்றினிடத்தே ஆயுதபயம்-அக்கினிபயம்-ஜெந்து பயம் முதலான சகலபயங்களும் பாவிகளுக்கு உண்டு. அவைகளில் விழுகின்ற பாவிகள் யாவர் என்னில், பொய்சாட்சி சொல்லுவோன் பட்சபாதத்தினாலே அநியாயம் பேசுவோன் பொய் சொல்லுவோன் ஆகிய இவர்கள் இரௌரவத்தில் விழுவார்கள். சிசுவைக்கொல்லுவோன், பட்டணத்தை அழிப்போன், மூர்ச்சைத் திணறச்செய்வோன் இவர்கள் உரோதத்தை அடைவார்கள். மத்தியபானம் [illegible]வான், பிரமகத்தி செய்வோன், பொன்னைத் திருடுவோன், இவர்களோடு சேர்வோன் ஆகிய இவர்கள் சூகரத்திற் சேர்வார்கள். இராசனைக் கொல்லுவோனும், வைசியனைக் கொல்லுவோனும், குருவின் மனையாளோடு புணருவோனும், உடன்ட றந்தாளைச் சேருவோனும், இராஜன் ஊழியர்களைக் கொல்லுவோனும் தப்தகும்பத்தில் விழுவார்கள். மனைவியை விற்போனும், சற்புருடரைக் காவல் படுத்துவோனும்-வைதிக யோக்கியமான குதிரைகளை விற்போனும், தன்னிடத்தில் அன்போடு காத்திருப்பவனைக் கைவிடுவோனும், அடைக்கலம் புகுந்தோர்களை அடித்துத் துரத்துவோனும், தப்த கும்பத்திற்கு ஆளாவார்கள். மருமகள் மகள் முதலானோருடன் புணர்கிறவன் குருவை அவமதிப்போன், கோபித்து

வைபவன் ஆகியஇவர்கள்மகாஜ்வாலத்தைசேர்வார்கள். வேததூஷணை செய்வோனுக்கும், வேதவிக்கிரயம் செய்வோனுக்கும், சேரக்கூடாத பெண்களுடன் சேர்வோனுக்கும் இலவணமென்பதுகிடைக்கும். திருடனுக்கும், உலக -ஒப்புரவை அழிப்பவனுக்கும், விலோகிதம் நேரிடும். தேவதூடணை, பிராமணதூடணை-பிதிர்தூடணைகளைச் செய்வோனும் உத்தமப்பொருளைப் பழிப்போனும், பிறருக்குத் தீங்குசெய்வோனும், சூனியம் வைப்போனும் கிரிமிசம் கிரிமிபக்ஷண மென்பவற்றில் விழுவார்கள். பிதிர்க்களும், அதிதிகளும் உண்ணும் முன்னமே உண்ணுவோனும், வேடன் முதலானோருக்கு அம்புமுதலிய ஆயுதங்களைச்செய்து கொடுப்போனும் லாலாபட்சத்தில் வதைவார்கள். கர்ணியென்கிற கொடிய அம்புகத்திமுதலான ஆயுதங்களை அயோக்கியருக்குச் செய்து கொடுப்பவனும் விசஸனத்தைச் சேருவான்.

அயோக்கியரிடத்தில் தானமேற்பவன், வைதிககருமங்களுக்குத் தகாதவருக்கு அவைகளைச் செய்துவிப்பவன், சோதிடநூலை நன்றாய் உணராமல் பலன்சொல்லுபவன், இப்படிப்பட்டவர்கள் அதோமுகத்தில் வாதைபடுவார்கள். சாகசஞ் செய்பவனுக்கும், பிறருக்குக்கொடாமல் தானொருவனே நல்லவஸ்துவைப்புசிப்பவனுக்கும், பூயவகவேதனை உண்டாகும். பூனை-கோழி - ஆடு-நாய்-பன்றி பறவை இவற்றை எப்போதும் வாதனைசெய்பவனும், அந்தரகத்தையே அடைவான். கூத்தாடிபிழைக்கும் பிராமணன், அல்லது மல்லயுத்தம் செய்து பிழைப்பவன், தூண்டில் முதலானவை கொண்டு மீன் பிடிப்பவன், குண்டகர் கோளகர் முதலானோருடைய அன்னத்தை உண்பவன், விடமிடுபவன், கோட் சொல்லுபவன், மனைவி செய்கையால் பிழைப்பவன், பருவமில்லாதகாலங்களிலே பொருளாசையினாலே பருவச்சடங்கு செய்விப்பவன், வீட்டைத் தீ இடுபவன், சினேகிதனைக் கெடுப்பவன், பறவைகளைக் கொலைக்குவிற்றுப் பிழைப்பவன், ஊருக்காக யாகஞ்செய்பவன் யாகத்திற்குச் சோமம் என்ற ஆட்டாங்கொடி விற்பவன், இப்படிப்பட்டவரெல்லாரும் உதிராம்பத்திலே போய்விழுவார்கள். யாகத்தை அழிப்பவன், ஊரை அழிப்பவன் முதலானவர் வைதரணியைப் பொருந்துவார்கள். பணத்தினாலும் வயது முதலானவைகளினாலும் செருக்கடைந்து கிராமத்து எல்லைகளை மாற்றுபவர்களும், சுத்தியில்லாதவர்களும், மோசஞ்செய்து பிழைப்பவர்களும் கிருஷ்ணத்தை அடைவார்கள். வைதிக உபயோகமில்லாமல் வீணாய்ப் பலாமுதலிய மரங்களைச் சேதிப்பவனும், ஆடு

விற்பவன் மிருகங்களைக்கொன்று தின்பவன் முதலானோரும் அக்கினிச் சுவாலத்திற்பிரவேசிப்பார்கள். தீ இடத்தகாதபாண்டமுதலானவற்றில் தீயிடுபவனும் அதிலேயேசேருவான். விருதலோபஞ்செய்பவன், தனக்குரிய ஆச்சிரம தருமத்தை விடுபவன், சந்திசத்தில் வீழ்ந்து வாதனைபடுவான்.

பிரமசாரிகளாய்ப் பகலிலும் கனவிலும் சுக்கிலத்தை விடுபவரும், புத்திரராலே ஓதுவிக்கப்படுபவரும், சுவபோஜனத்திற் படுவார்சள். தங்கள் தங்கள் வர்ணாச்சிரமவிரோதமானகாரியங்களைச் செய்தல்,மனோவாக்குக்காயங்களினாலேபாதகஞ்செய்தல் முதலான துட்டகர்மமுடையவரெல்லாம் இந்தப்படியே அந்தந்தநரகங்களிற்சேர்வார்கள். இப்படி அநேகவிதமானபாவத்தொழிலைச்செய்பவர்களுக்கு வாதனை படும்படியான நரகங்கள் அநேகமாயிரம் இருக்கின்றன. நரகலோகத்தில் இருக்கிறபிராணிகள் தலைகீழாய் இருந்துக்கொண்டு சொர்க்கத்திலிருக்கிற தேவர்களைப்பார்த்துத் துன்பப்பட்டுக்கொண் டிருப்பார்கள். தேவர்களும் தலைகீழாய் அவத்தைப்படுகிறநரகத்தாரைப்பார்த்து மிகவும்பயந்துக்கொண்டிருப்பார்கள். பாவிகள் நரகத்தை அனுபவித்தபிறகு தாவரங்களாயும், புழுக்களாயும்,ஜலசரங்களாயும், பக்ஷிகளாயும்,மிருகங்களாயும், மனிதராயும், மனிதரில் தருமசீலராயும், தேவராயும், மோட்சமடையத்தக்கவராயும் முறையே சனிப்பார்கள்.

## எமதண்டனை.

அவர் அவர் பாவங்களுக்கீடாக பாவிகளை எமதூதர்கள் தண்டிக்கிறார்கள். எவ்வாறெனில்; சிலரை உலக்கையினால்புடைக்கின்றனர், சிலரைப் பலவித ஆயுதங்களினால் சிதைக்கின்றனர், சிலரைச் சூரிகளினால் சீவுகின்றனர், சிலரைச் செக்கிலிட்டு அறைகின்றனர், சிலரை இரும்புச்சலாகையிற்கோத்தும் பெருந்தழலில் வாட்டுகின்றனர், சிலரைக்கண்ட கோடாலியினால் வெட்டுகின்றனர், சிலரைக் கரும்பாலையில் கொடுத்து எலும்புகள் நொருங்க சாரம் பிழிகின்றனர், சிலரை நன்றாய்க்காய்ந்த எண்ணெய்க்கொப்பரையிற்போட்டு வற்றலைப்போல வறுக்கின்றனர், சிலரைத் தணலில் போட்டுக் கொளுத்துகின்றனர். மேலும், அங்கே ஆண் பாவையொன்றும் பெண்பாவையொன்றும் செம்பினாற் செய்யப்பட்டு அக்கினியால் எப்போதும் தபதமாயிருக்கின்றன; தூதர்கள், பரஸ்திரீ கமனம்செய்த ஆடவர்களைநோக்கி "ஓ பாவிகாள்! தருமமும் மானமும் சிறிதும் எண்ணாமல் பிறர்மனைவியரைப் புண

ர்ந்ததற்குவந்தபயன் இஃது" என்று அதட்டி உதட்டிச்சொல்லி அப்பெண்பாவையைப் புணரச்செய்வர். இதுபோலவே பரபுருடர்களைச்சேர்ந்த பெண்களையும் அவ்வாண்பாவையோடு சேர்ப்பர். புருஷன் தனது மனைவியையன்றிப், பரமாதரைப்புணர்ந்ததற்கும் பெண் தன் புருடனையன்றிப் பரபுருடனைக் கூடியதற்கும் எமலோகத்தில் உள்ள தண்டனை மிகவும்கொடியதாயிருந்தும், நல்லொழுக்கத்திலிருக்கும் மாந்தர்களைக் காண்பதரிதாக இருக்கின்றது. உணவாதிகளைத் திருடித்தின்றவர்களில் சிலரை அக்கினியினால்வெதுப்பப்பட்ட இரும்பு எழுகு குண்டுகளை விழுங்கச்செய்கின்றனர். சிலரை நரகங்களில்தள்ளிபாதலம்வரையும்அழுத்துகின்றனர். கடன்வாங்கி மீண்டுங் கொடாதவரைநோக்கிக் கடன்கொடுத்தவனுக்கு கடனைக் கொடாமல் வன்கண்மை பேசியபாவி என்று எமதூதர் முனிந்து சிறிச் சம்மட்டியினால் மண்டையின்மேல் அடிக்கின்றனர். இத்தன்மையாகப் பாவிகள் படுந்துயரத்தை விரித்துச்சொல்லுவதால் பிரயோசனம் யாது இன்னவன் தருமி இன்னவன் அதருமி இன்னவன் சுவர்க்கம்புகுவன்,இன்னவன் நிரையம் புகுவன், என்று அவரவர்கள் செய்யும் நன்மை தீமைகளினாலே உணரலாகும். தருமம்செய்தவனே சுவர்க்கம் புகுவானென்பது திண்ணமாதலால், யாவரும் தருமஞ் செய்யவேண்டும்.

## எமலோகம்.

ஓ இமவான் செல்வியே! பாவிகள் வசிக்கும் நரகலோக நிலைமையை நன்குணர்ந்தாயன்றோ? அவ்வித நரக லோகத்திற்கு இறைவனாகிய எமனது நகரச்சிறப்பைச் சொல்லுவோம்; கேட்பாயாக. குஞ்சரனையீன்ற வஞ்சியே! மக்கள் வசிக்கும் பூலோகத்திற்கும், எமலோகத்திற்கும் இடையே எண்பத்தாறாயிரம்காதம் உள்ளது. ஆயினும், இந்த எண்பத்தாறாயிரம் காதமும் இமைப்போதில் சென்று வரும்படியான வல்லமையை எமதூதுவர்களுக்கு இயமன் கொடுத்திருக்கின்றனன். ஆனால், பாவிகளுக்கு இது நெடுந்தூரமாகவே இருக்கும். இது நிற்க; எமபட்டணமானது தென்றிசைக்கும் நிருதிதிசைக்கும் நடுவில் வச்சிரமயமாகவும், தேவர், அசுரர் முதலியோரால் அழிக்கப்படாததாகவும் நடுச்சதுரம் நூறுயோசனை பரப்புள்ளதாகவும், இருபத்தைந்து யோசனை உயரமுள்ளதாகவும் இருக்கும். அச்சதுரத்தினுள் அநேக சாளரங்களுள்ளதாயும், துயிற்கொடிகளாலும், முத்துக்கோவைகளாலும், மற்றும் அநேகவித தோரணங்களாலும், அலங்கரிக்கப்

பட்டதாயும், சொன்ன மயமாயும் இருக்கும். இவற்றின் நடுவே, எமதருமனுடைய அரண்மனை இருக்கின்றது. அந்த அரண்மனையானது பத்துயோசனை அகலநீளமுள்ளதாயும், அநேகமாயிரம் வயிரத்தூண்கள் அமைந்ததாயும், சயித்திய சவுரம்மியமுள்ள காற்று வீசுவதாயும் இருக்கும். அவ்விடத்தே எப்போதும் நடன பாடலினால் கீர்த்தி விளங்கத்தக்க திவ்யமான ஒருமண்டபம் இருக்கின்றது. அம்மண்டபத்தில், தூதர்கள் கரங்குவித்து ஒருபுறம் நிற்கவும், நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகள் ஒவ்வொன்றும் தனித்தனி விகாரரூபத்தோடு ஒவ்வோர் புறத்திலும் புடைசூழ்ந்திருக்கவும், இக்கூட்டங்களின்நடுவே விசாலம்பொருந்திய மிகப்பெரிதான சிம்மாசனத்தின் மீதில், கண்டவர் அஞ்சக் படி பார்த்து விழித்த கண்களோடும், உயிர்கள் நடுங்கும் கோரபு தத்தோடும் எமதருமன் வீற்றிருப்பான். அம்மண்டபத்தின் பக்கத்தில் இருபத்தைந்து யோசனை அகல நீளமும், பத்துயோசனை உயரமும், பலவித அலங்காரத்தோடு கூடிய சித்திரகுத்திரன் அரண்மனை இருக்கின்றது. அந்த அரண்மனையின் நடுவில் வயிரங்களால் பிரகாசிக்கப்பெற்றிருக்கும் சிம்மாசனத்தின்பேரில் சித்திரகுத்திரன் வீற்றிருந்து சகல உயிரும் செய்யும் பாவபுண்ணியங்களைச் சிறிதும் விடாமல் கணக்கெழுதுகின்றான். அவன் எழுதுவதில் சிறிதும் பிழைநேரிடாது. அந்த சித்திரகுத்திரனுடைய அரண்மனைக்குக் கிழக்குப்புரத்தில் ஜுரமும், தென்பக்கத்தில் சூலையுடன் வைசூரியும், மேற்பக்கத்தில் காலபாசத்தோடு அஜீரணமும், வடபக்கத்தில் வயற்றுவலியும், வடகிழக்கில் தலைவலியும், தென்கிழக்கில் மயக்கமும், தென்மேற்கில் அதிசாரமும், வடமேற்கில் ஜன்னியும் கிரகரூபமாக வியாபித்துக்கொண்டு எமதருமன் உத்தரவை எதிர்பார்த்துக் காத்திருக்கின்றன.

## எமலோக மார்க்கம்.

ஓ மயிலனைப்பெற்ற மயிலே! மேற்கூறிய சிறப்புவாய்ந்த எமலோகத்திற்கும், பூலோகத்திற்கும் இடையுள்ளதூரம் எண்பத்தாறாயிரம் காதம் என்று முன்னமே தெரிவித்தோம். அப்பட்டணத்தில் வாழும் கூற்றுவன், ஆயுள்காலம் முடிந்த உயிர்களைப் பிடித்து வருமாறு உத்தரவு செய்தவுடன், யாவரும் அஞ்சத்தக்க விகாரரூபமுடையவரும், நெருப்புக்கு நிகரான கண்களையுடையவரும், கனலைக்காயும் சினமுடையவரும், பாசம்-முசலம்-தண்டம் முதலிய கொடியபடைகளையுடையவரும், காரிருள்கருத்த ஆண்

...த்திரவருமான மூன்று தூதுவர்கள்சென்று ஆயுள் முடிந்த உயிரைப் பிடித்து, காற்றுருவமாகிய தேகத்தில் அடைத்துக்கொண்டு போவார்கள். இவர்கள் கொண்டுபோகும் வழியானது எப்பொழுதும் அக்கினிக்கு மேலானதும் அயத்தை யுருகச்செய்வதுமான வெப்பலையும் இரவில் சரீரத்திலுள்ள உயிரைக் கூற்றுவனுக்கு இதோ கொண்டுவந்தேன் கொண்டுவந்தேனென சிதைக்கத் தக்கநடுக்கலும் ஒடுக்கலும்செய்யும் பனிக்காற்றையும் உடையது. ஓ பார்வதா! இத்துன்பங்கள் எல்லாம் அம்மார்க்கத்தில் பாபிகளுக்கென்றே அமைக்கப்பட்டிருக்கும் அசிபத்திர வனமொன்றிருக்கிறது. அசிபத்திரவனமென்பது, உலோகங்களை அறுக்குங் கூர்மைபொருந்திய வாளைப்போன்ற இலைகள் தழைத்த மரங்களால் இடைவெளியில்லாமல் நெருங்கிய காடாம். தூதுவர்கள் அவர்கள் பற்றிச் செல்லுஞ் சிவர்களைக் கடிந்துத் துரத்த அச்சீவர்கள் பயந்து அவ்வனத்திற்புகுந்து ஓடுகிறபோது இலைகள் பட்டுத் தேகமெல்லாம் பிறண்டு அறுபட்டு இரத்தம் பெருகியோடத் தூதர்களைத் திரும்பித் திரும்பிப் பார்த்துப் பசிதாகத்தால் வருந்தி தான் முன்னமிருந்த சுகத்தை நினைந்து நினைந்து அழுகிறபோது தூதர்கள் அவர்களைப்பார்த்து "அடாபாவி! தாகமென்றுவந்த ஏழைகளுக்குத் தண்ணீர் கொடாமல், மோரும், பாலும், தயிரும் நெய்யும் அருந்தி தேகத்தை வளர்த்த லோபி! இதோ இந்தக் குளத்திலுள்ள உதிரத்தைக் குடியடா" என்றுகடுகடுத்துப் பற்களைக் கடித்துப் பலவிதங்களாக அடிக்கிறபோது, அவர்கள் அவ்வடிகளால் துடிதுடித்துப் பதைபதைத்து நடுநடுங்கிக் கடகடவென்று புரண்டு அழுது அடிகளைத் தாளமாட்டாமல், ஓவென்று கதறிக்கொண்டோடியோடி, அவ்விரத்தத்தைப் பருகுவார்கள். அதைக்கண்டதூதர்கள்சீவர்களைநோக்கி, "முன்னம்நீர் அநுபவித்த சுகத்துக்கு இந்தச்சுகம் எப்படியிருக்கிறதுஎன்பதை உணர்ந்தாயா? துரோகி!" என வைது அங்கிருந்தும் வெருட்டித் துரத்த சீவர்கள் ஓடுகிற பரிதாபத்தைச்சொல்லவல்லவர் யாவர்! ஓடிஓடி கால்சோர்ந்து, அவர்கள் கைசோர்ந்து, மெய்சோர்ந்து, நாவுலர்ந்து, பசியினால் களைமேலிட்டு, 'ஆவா!' என்று கதறுகிறபோது; தூதர்கள், எஃகினாற்செய்து அக்கினியினால் காய்ச்சப்பட்டிருக்கும் சிறுமுள் குண்டுகளைக் காட்டி, "பசியினால் வருந்திவேண்டினவர்களுக்கிடாமல் உண்டு களித்த கர்மி! அக்குண்டுகளைத் தின்று பசியாறி, முன்னம் நீ அடைந்த இன்பத்திற்கு இவ்வின்பம் எப்படி யிருக்கிறது? சொல்லடா" என்று புடைக்கிறபோது;

சீவர்கள், அந்த அடியைப் பொறுக்கமுடியாமல் சத்தமிட்டழுது இந்தத் தூதர்களிடத்தில் அகப்பட்டுச் சங்கடம் அடையச்செய்தது நாம் தர்மகாரியங்களைச் செய்யாத குற்றமல்லவோ என்று எண்ணமிட்டுக்கொண்டே அந்த முட்களுங்களைப் புதிந்து, அதனால் வெகு வேதனை அடைந்திருக்க, பின்னும் தூதர்கள், பாசத்தால் குரங்கைக் கட்டியிழுத்துச்செல்வதுபோல அவர்களை கட்டி இழுத்துக்கொண்டு செல்லுகிறகாலத்தில் அவர்கள் தங்கள் புத்திரர்களை நினைந்து, "அந்தோ! அருமைத் திருமகனே! நான் என்னசெய்வேன், என்னசெய்வேன்; மிகவுங் கஷ்டத்தை அனுபவிக்கிறேன்; ஜெகதீசன் ஒருவனுண்டு, அவனைத் துதித்துத் தீவினைகளைந்து நல்வினைப்பயனை அடையுங்கள்" என்று முறையிடுவதுடன் "பெரியோர்களை அற்பமாகப் பேசியேசிப் பரிகாசம் புரிந்ததனாலன்றோ அவற்றின் பலனை அநுபவிக்கிறோம்" என்று பரிதவிப்பார்கள்.

அன்றியும், "உலகத்தில் யோசனையில்லாத மூடனாக இருந்து நன் மார்க்கமின்றி வீண்காலம்போக்கி சடத்தைவிட்டுத் தூதர் கையிலகப்பட்டுப் பஞ்சும்படாத பாடுபடுகின்றோமே" என்றுகருதிக்கொண்டே செல்வர். தூதர்கள் இவர்களைக் குரங்கையாட்டுவதைப்போல ஆட்டிக்கொண்டே போவார்கள். அப்போது பசி தாகத்தால் வருந்தி மெலிந்துவாடிக் கதறுகிற சீவனை தூதர்கள் கண்டு, "அடா பாவிகளில் முதன்மையாகிய கொடும்பாவி! சீபட்டகடனுக்காக உத்தம புருடனை முதன்மையாக்கிக் கையொப்பமிடச்செய்து நீயும் கையொப்பமிட்டுக் கடன் கொடுத்தவனிடத்தில் உத்தமப் புருடனைக் காட்டிக்கொடுத்து அவன் திரவியத்தை இழக்கும்படி படுமோசம் செய்த குடிகேடா! அந்த சுகத்துக்கு இந்த சுகம் எப்படியிருக்கிறது! தெரிந்து கொண்டாயா!" என்று கன்னத்தில் புடைத்து கதையினால்மோதி இழுத்துக்கொண்டே வந்து, அக்கினியாற்றின்மேல் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் எம தருமன் முன்னம் விட்டுப்பணிவார்கள் என்று இவ்வாறு அருளிச் செய்த திரிபுராரியை நோக்கி பின்னும் பார்வதி வினவுகின்றனள்.

## அண்டகோச அடுக்கு.

"விதிமுதலோரைப் படைத்த அதிபதியே! மண்ணுலகத்தில் அடங்கியது சத்ததீவுகளென்றும், அவ்வுலகத்திற்கு மகம்மேரு கிரியே அஞ்சுராணி (அகம்செருகு அணி) யாக இருக்கின்றதென்றும், ஓர் பிரிவினை மாத்திரம் அருள் புரிந்தீரேயன்றி, அண்டங்க

[illegible]ள மண்டல அடுக்குகளை விண்டிலீரே'' என்று அண்டையின் நின்று வேண்டிய பார்வதாதேவியை ஸ்ரீகைலாசபதியானவர் திருக்கண்ணோக்கமுற்றுச் சொல்லுகின்றார். சிலையை நிகர்த்த நுதலினையுடைய மலைமகளே! கேளாய். நமது மைத்துனனுக்கு நிகராக ஸ்ரீவைகுண்டத்தில் வாழும் காப்புக்கடவுளாகிய அனந்தகலியாணகுணமுடைய திருநாபிக் கமலத்திலிருந்துவந்த பிரமாவானவர் ஆதியிற் படைத்த ஆயிரத்தெட்டு அண்டங்களில் இந்த ஒரு பிரமாண்டத்திற்கு உட்பட்ட யாவையும் கருணையுடன் சொல்லுகின்றேன் பத்தியோடு கேட்பாயாக. அண்டமென்பது முட்டையைப்போல் விளங்கி சுவர்க்க மத்திய பாதலமென்று மூன்று பிரிவாகி இருக்கும். இந்த மூன்று பிரிவில் அளவிடப்படாத ஏழுலகம் ஒருகூறாய் நிற்கும். அவ்வுலகங்கள் யாவையெனில், பூலோகம்-புவலோகம்-சுவலோகம்-சனலோகம் மகாலோகம் - சத்தியலோகமென இவையாம். இவைகளில் இப்போது நாமிருக்கும் இந்த அண்டத்தின் மதிற்சுவர்வரைக்கும் இப்பூலோகத்தின் விருத்தி அளவு; இதற்குள் இந்திரன் வசிக்கும் கீழ்த்திசையிலிருந்து சூரியபகவானுதயமாகும் உதயகிரியும் சமுத்திரங்களும் சக்கிரவாளகிரியும் பொருந்தியிருக்கின்றன. அப்பால், நிறைந்த பெரும்புறக் கடலளவும் இருட்பூமியென்று அறிந்துகொள். இப்போது சொல்லிவந்த சக்கிரவாள கிரிக்கு உட்பட்ட இந்தப் பூமியைத் தேவபூமியென்றும், சுவர்னபூமியென்றும் சொல்லுவார்கள். இந்தப் பூமியைச் சத்ததீபமென்று பிரித்திருக்கின்ற தன்மையின்படி புட்கரத்தீவத்தைச் சொல்லுகிறேன். புட்கரத்தீவமென்னும் அந்தப்பூமி, பத்துகோடி யோசனை விஸ்தீரணமாயிருக்கின்றது. அந்தத்தீவில், தாமரைப் புஷ்பங்களே சிறந்து வளர்ந்து மிகுந்து மலர்ந்து இருக்கின்றன. பலம்பொருந்திய குமுதவரையென்னும ஒருமலை சூழ்ந்திருக்கின்றது. அந்த மலைக்கு உட்புறத்தில் அறுபத்துநான்கு லக்ஷயோசனை அகலமும் ஆழமுமுள்ள நன்னீர்க்கடல் வளைந்திருக்கின்றது. சர்வதோபத்திர மிகுந்திருப்பதால் அதுவே புஷ்கரத்தீவென்றுஞ் சொல்லப்படுகிறது. அதற்கப்பால் அறுபத்துநான்கு லக்ஷயோசனை அகலநிகளமுள்ள சாகத்தீவென்பது ஒன்றுண்டு. அந்தத்தீவை மந்தரகிரியென்னும் ஒருமலை சூழ்ந்துக்கொண்டிருக்கின்றது. அந்த மலைக்கு உட்புறத்தில் முப்பத்திரண்டு இலக்ஷயோசனை அகளநிகளமும் ஆழமுமுடைய பாற்சமுத்திரம் வளைந்துகொண்டிருக்கின்றது. கீரைத்தண்டுகள் மிகுந்து வளர்ந்திருப்பதினால் அதற்கு சாகதீவென்று பேர் இட்டிருக்

கின்றது. அதற்கப்பால், முப்பத்திரண்டு லக்ஷயோசனை விசாலம் பொருந்திய கிரவுஞ்சத்தீவமென்பது ஒன்றுண்டு. அந்தத் தீவைக் கிரௌஞ்சகிரியென்னும் ஒருமலை சூழ்ந்துகொண்டிருக்கின்றது. அந்த மலைக்கு உட்புறத்தில் பதினறு இலக்ஷயோசனை அகலமும் ஆழமுமுடைய தயிர்க்கடல் வளைந்துகொண்டிருக்கின்றது. அவ்விடத்தில் அன்றில் முதலிய பக்ஷிகள் மிகுந்திருப்பதினல், அது கிரௌஞ்சத்தீவென்று சொல்லப்பட்டது. அதற்கப்பால், பதினறு லக்ஷயோசனை அகலமும் நிகளமுமுடைய கோமேதகத்தீவென்பது ஒன்றுண்டு. அந்தத் தீவத்தை நீணகமென்னும் ஒரு மலை சூழ்ந்திருக்கின்றது. அந்த மலைக்கு உட்புறத்தில் எட்டிலக்ஷயோசனை அகலமும் ஆழமுமுடைய நெய்க்கடல் வளைந்துகொண்டிருக்கின்றது. அவ்விடத்தில், கோமேதக மலைகளே மிகுந்திருப்பதினல், கோமேதகத்தீவென்று கூறப்பட்டது. அதற்கப்பால், எட்டிலக்ஷயோசனை அகலமும நிகளமுமுடைய சான்மலித் தீவென்பது ஒன்றுண்டு. அந்தத்தீவை மேருமந்தரை யென்னும் ஓர் மலை சூழ்ந்திருக்கின்றது. அந்த மலைக்கு உட்புறத்தில், நாலுலக்ஷயோசனை அகலமும் ஆழமுமுடைய மதுக்கடல் வளைந்திருக்கின்றது. அவ்விடத்தில் இலவமரம் மிகுந்திருப்பதினல், அது சான்மலித்தீவென்று கூறப்பட்டது. அதற்கப்பால், இரண்டுலக்ஷயோசனை விசாலமுடைய குசைத்தீவு ஒன்றுண்டு. அந்தத் தீவைப்பாரிசகிரியென்னும் ஓர் மலை வளைந்துகொண்டிருக்கின்றது. அந்த மலைக்கு உட்புறத்தில், இரண்டு லக்ஷயோசனை விசாலமும் ஆழமுமுடைய கருப்பஞ்சாற்றுக்கடல் சூழ்ந்திருக்கின்றது. அவ்விடத்தில் தருப்பைப் புல் மிகுந்திருப்பதால், அது குசைத்தீவென்று கூறப்பட்டது. இப்பால் ஒரு லக்ஷயோசனை விஸ்தீரணமாய் அப்வரையென்னும் ஒருமலை சூழ்ந்திருக்கின்றது. அந்த மலைக்கு உட்புறத்தில் லக்ஷம்யோசனை அகலமும் ஆழமுமுடைய உவர்க்கடல் வளைந்துகொண்டிருக்கின்றது; அங்கே ஜம்புவிருக்ஷமென்னும் நாவல் மரம் ஒன்று இருப்பதினல், இந்தத்தீவிற்கு ஜம்புத்தீவென்றும், நாலந்தீவென்றும் பெயர். தேங்கும் கமுகும்நிறைந்த இந்த நாவலந்தீவினுடைய மத்தியில் மகமேரு வென்னும் பொன்மலை இருக்கின்றது. தேனை ஒத்த இன் மொழி மாதே! கேளாய்! இந்த சம்புத்தீவத்திற்கு மத்தியில் மாமேருவாகிய பிரமபீடம் இருப்பதினல், அந்த மாமேருவினுடைய நான்கு திசையிலும் இப்போது நான் சொல்லிவந்த எழுதீவமும், எழுமலையும், எழுபொருளும், எழுகடலும், எழுவனகமரமும், எழுபொழிலும், எழு

பதுமைகளும், பலவித அதிசயங்களும் பொருந்தியிருக்கும். இது வுமன்றி, சம்புநாவற்கனியின் சாற்றினால் அப்பொடிகள் பொற்சுன்னங்களாய் நதியின் கரைதோறும் வரம்பாக நிரம்பியிருக்கும் வளத்தினால் மற்றத்தீவுகளைப் பார்க்கினும். இந்த தீவே மிக சிறப்புடைத்தென்று நூல்கள் யாவற்றிலும் கூறப்பட்டிருக்கிறது. மேலும், மாமேருவுக்கும் கவிந்திருக்கும் அண்டச்சுற்றிற்கும் மத்தியிலிராநின்ற பூமியின் விசாலமானது, கிழக்கே ஐம்பதுகோடி யோசனையும், மேற்கே ஐம்பது கோடியோசனையும், வடக்கே ஐம்பதுகோடி யோசனையும், தெற்கே ஐம்பதுகோடி யோசனையுமாகப் பரந்தும், பூமியின் கீழாக நாற்பதுகோடி யோசனை தூரம் ஊடுருவியும், ஆகாயத்தின் மீதாக ஐம்பதுகோடியோசனை தூரம் உயர்ந்தும் இருப்பதாக உன் உணர்வில் அறிந்துக்கொள்ளக் கடவாய் பெண்ணே! என்றார் பரமசிவமானவர்.

பின்னும் சொல்லுகின்றார்:—இதன்றியும், மேற்சொல்லிய மாமேருவுக்கு வடமேற்கு வடக்கு வடகிழக்கில், நீலகிரி சுவேதகிரி சிருங்க கிரியென்று மூன்றுமலைகள் முறையேஉள்ளன. கீழ்த்திசையில்,மாலியவான்கிரி என்றொரு மலைநிற்கின்றது. மேற்றிசையில் கந்தமாதனமென்று ஒருமலை இருக்கின்றது. தெற்கு தென்மேற்கு தென்கிழக்கில், முறையே நிடதகிரி ஏமகூடம் இமயவரை என்னும் மூன்றுமலை உள்ளன. இந்தஎட்டுமலைகளைத்தான் அட்டகுலகிரியென்று யாவரும் உணரும்படி சாத்திரங்கள் முறையிடுவது. இதுவுமல்லாமல், முன் சொல்லிய பொன்மலையாகிய மாமேருவுக்குக் கீழ்த்திசையில் நிலைபெற்ற மந்தரகிரியும், பருத்துத் தழைத்தக் கிளைகளையுடைய மாமரங்கள் நிறைந்த ஆம்பிரவனமும், நெருங்கிய நந்தவனமும், பாற்சுனையும், தேவரும் முனிவரும் களிக்கப் பொருந்தி இருக்கின்றன. மேருவுக்குத் தென்றிசையில் மேருமந்தரமென்னும் மலையும், ஜம்புத்தீவமென்னும் பெயரைத்தந்த சம்புவிருட்சமும், சயித்திரதவனமும் பெருமைதங்கிய மதுச்சுனையும், அழகுபெற விளங்கிக்கொண்டிருக்கின்றன. மாமேருவுக்கு மேற்றிசையில் பாரிசகிரியென்னும் மலையும், மலர்ந்து சிறந்த கடம்பவிருக்ஷமும், தலத்திற் கலங்காரமாகிய பிரசப்பெயர் வனமும், சுத்தமும் சுவையும்பொருந்திய கருப்பஞ் சாற்றுச்சுனையும், இருக்கின்றன. மேருவுக்கு வடதிசையில் குமுதகிரியென்னும் மலையும், வானமளவும் உயர்ந்த வடவிருட்சமென்ற ஆலமரமும், சர்வதோபத்திரமென்ற பூந்தோட்டமும், நன்னீர்ச்

சுனையும்; எல்லாத்திசைகளிலும் மேம்பாடாய் விளங்கிக்கொண்டிருக்கின்றன. மேலும், அந்த மாமேருவானது பதினாறாயிரயோசனைதூரம் நடுவே ஓங்கி, முப்பத்திரண்டு யோசனைதூரம் வானத்தில் உயர்ந்து, எண்பதினாயிரம் யோசனை விசாலம் சுற்றும் பருத்து, சந்திரசூரியர்முதலிய நவக்கிரகங்களுக்கு நடுநிலையாய் இவ்வுலகுக்கு அஞ்சூராணிபோற் பிரகாசித்துக்கொண்டு, அநேகங்கோடி சிகரங்கள் பொருந்தி மூன்று குவடாகப்பிரிந்து, அவை அயன்பீடம் அரிபீடம், சிவன் பீடமுமாக அமைந்திருக்கும். மேலும், அந்த மகம்மேருவின் எட்டுத்திக்கிலும் இந்திரன், அக்கினி-இயமன்-நிருதி-வருணன்-வாயு-குபேரன்-ஈசானன் முதலியோ அமரர்-சித்தர்-அசுரர்-தயித்தியர்-கருடர்-கின்னரர்-கிருதர்-கிம்புருடர்-காந்திருவர் முதலியோரும் தங்களுக்கு ஏமகூடம்போல் நிவாசதலமாய் வீற்றிருப்பார்கள். மேலும், முன்சொல்லிய மகம்மேருவுக்குக் கீழ்த்திசையில் நிலைபெற்றிருக்கும் மந்தரகிரியென்னும் மலையின்மீது பனைத்துத் தழைத்து தளிர்த்து விளங்கிய மாமரமானது ஆயிரம் யோசனை பரப்பும் உயரமுமுடையதாய் இருக்கின்றது. அந்த மாம்பழத்தினின்றும் இழிந்துவரும் இரசத்தைப் புசித்தவர்களுக்கு இடகலை-பின்கலையென்னும் சுவாசமானது பத்து யோசனைதூரம் பரிமளித்துக்கொண்டிருக்கும். மேற்சொல்லிய மாம்பழச்சாரானது வழிந்துபோய்ச் சேர்ந்து நிறைந்து நின்றதையே சோதகநதியென்றுசொல்லுவர். இதல்லாமலும், இடகலை பின்கலை யென்னும் சுவாசம் பரிமளித்திருப்பதில் என்னபிரயோசனமென்றால், சுவாசம் வீணாகிப்போகாமல் நீடித்துப்பாய்வதினால் அவர்களுக்கு தீர்க்காயுளென்றும் அவர்களே நித்திய தத்துவம் பெற்றவர்களென்றும் சொல்லப்படும். இதன்றியும், கிழக்கு சமுத்திரத்திற்கும் மேற்கு சமுத்திரத்திற்கும் மத்தியிலிருக்கும் பூமியானது, குருகண்டம் என்பது. குற்றமற்ற இந்த சிருங்கமலைக்குத்தெற்கு சுவேதமலைக்கு வடக்கு கீழ்க்கடல் மேற்கடலுக்கு நடுவிலிராநின்ற பூமி இரண்யவருடம் என்பது. இந்தச் சுவேதகிரிக்கும் நீலகிரிக்கும் கீழ்க்கடலுக்கும் மேற்கடலுக்கும் இடையிலிருக்கும் பூமி நிரமியவருடம் என்பது. இந்த நீலகிரிக்குத்தெற்கு மேருவரைக்கு, வடக்கு மேற்கடல் கீழ்கடலுக்கு மத்தியிலிருக்கும் பூமி இளாவிரதவருடம் என்பது. மேருவரைக்குத் தெற்கு மாலியவான் பர்வதத்திற்கு மேற்கு கீழ்க்கடல் வரைக்கும் உள்ளது பத்திராசுவருடம். கந்தமாதனத்திற்குமேற்கும் மேற்சமுத்திரத்திற்கு கிழக்கும் இருப்பது கேதுமாலவருடம். நிடதகிரிக்குத்தெற்கு ஏமமலைக்கு வட

[illegible] மேற்கடல் முதல் கீழ்கடல் வரைக்கு மிருக்கும் பூமி அரிவருடம். ஏமமலைக்குத்தெற்கு இமயமலைக்கு வடக்கு கீழ்கடல்முதல் மேற்கடலளவும் தேவபூமியாகிய கிம்புருடவருடம் உள்ளது இமயமலைக்குத் தெற்கு தென்கடலுக்கு வடக்கு மேற்கடல் முதல் கீழ்கடலுக்கு நடுவிலிருக்கும் பூமி பாரதவருடமாம். மேலும், நெருப்புப் பொறிகள் பறக்கும் வேலாயுதத்தைத் தாங்கிய தீரனாகிய அங்கதீரன்பெற்ற ஒன்பது பிள்ளைகளும் தமதுபேரால் அரசு செலுத்திவந்த இந்த ஒன்பதுவருடத்தையும் நவகண்டமென்றும் சொல்லுவார்கள். இந்த நவகண்டத்தின் அகல நீள அளவையும் சொல்லுகின்றேன், கேளாய் மங்கையர்க்கு அரசியாகிய பார்வதியே! நெருங்கி யிராநின்ற மாலியவான் மலைக்கும் கந்தமாதான கிரிக்கும் மத்தியிலும், தனுகோடிமுதல் வடகோடி வரையிலும்மூன்றுவருடம்சேர்ந்த இந்தப்பாரதவருடம் முப்பத்து நாலாயிரம் யோசனைதூரம் அகல நீளமுடைத்தா யிருக்கின்றது. அப்பால் நிடதகிரிக்கு வடக்குமுதல் நீலகிரிவரையிலும் மூன்று வருடமிருக்கின்றன. ஒவ்வொருவருடமும் ஒன்பதினாயிரம்யோசனை பகல நீளமுடையது. அதல்லாமலும் இந்தப் பாரத வருடத்திற்குச் சிறப்பாகிய ஆறுகுலகிரிகள் இருக்கின்றன. ஒவ்வொருமலையின் அகலம் இரண்டாயிரம் யோசனைதூரம்; அடிமுதற் சிகரம் வரைக்கும் பதினாயிரம்யோசனைதூரம் உயர்ந்திருக்கின்றது. ஓ மாதே! இப்போது நான் சொல்லிவந்த ஒன்பதுவருடங்களில் எட்டுவருடத்தில் சாரணர்-சித்தர்- கந்திருவர்-வித்தியாதரர்-கிம்புருடர் - விஞ்சையர் முதலானோர் ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொருகுலத்தார் வாசஞ்செய்வார்கள். அப்படி யிருந்தபோதிலும் அவர்கள் இந்தபாரதவருடத்தில் வந்திருந்து தருமம், அர்ச்சனை, பூசை, தவம் இவைமுதலியவைகளையும் செய்து நிறைவேற்றிக்கொண்டு, தங்கள் தங்கள் பதி சென்று அனுபவித்துக்கொள்ளுவார்கள். அந்த எட்டு வருடத்திலும் வாசம் செய்துக்கொண் டிருப்போர்களுக்கு ஆயுள் எவ்வளவென்றால், ஒன்றேகால் ஆயுதம். என்னப்படும். ஒன்றேகால் ஆயுதமாவது பன்னீராயிரத் தைந்நூறு வயதென்று தெரிந்துக் கொள்வாய் பெண்ணே! அப்படியிருக்க, இப்பாரதவருடத்தில் இருப்பவர்களுக்குக் குறைந்த ஆயுசு ஏற்படுத்தியிருப்பது ஏனென்றால், மகா வருத்தத்துடன் வாயுவைக் கும்பித்து வாணாளை வளர்த்திக் கொள்ளுவதைப் பார்க்கிலும் இந்த மாம்பழரசத்தைப் புசித்து வாழ்நாளை நீடிக்கச்செய்வதே மேன்மையாதலால் அவ்விடத்திலிருப்பவர்களுக்கு ஆயுளை விசேஷமாகச் சொல்லியது; அப்பால்

மேற்கூறிய மகாமேருவுக்குத் தென்றிசையில் மேருமந்தரமென்னும் மலையினிடத்துப் பொருந்திய இரண்டாயிரம் யோசனையுயரமுமுடைய நாவல்மரத்தின் கனியானது ஐராவதத்தின் தலையத்தனை பெரியதாயிருக்கும்; அப்பழம் நைந்துவிழுந்து அதின் தேன்கள்போய் நிறைந்துநின்ற நதியே சம்புநதியென்று சொல்லப்படும். அந்தச் சம்புநதியானது மேற்சொல்லிய மாமேருவின் மேற்புறமாகச் சுற்றிகொண்டு கீழ்த்திசையிற் புகுந்து சமுத்திரத்தின் நடுவேபோய்ச் சாரும்படியாய்ப் பேராசைகொண் டோடிவரும். அந்தச்சம்புநதி தோய்ந்த இடங்கள்தோறும் யாவராலும் எடுக்கப்படாத பொற்பாறைகள் நிறைந்திருக்கும். அந்தப்பாறையாகிய பொன்களினால் ஆபரணங்கள்செய்து தரித்துக்கொண்டாலும் அல்லது அந்த தீர்த்தத்தைச் சாப்பிட்டாலும் அவர்களுக்கு நரை திரை மூப்பு வியாதிமுதலியநாசங்களில்லை. மேலும், மாமேருவுக்கு மேற்றிசையில் இருக்கும் கந்தமாதனச்சாரலிற் பொருந்திய கடம்பமரமானது ஆயிரம்யோசனை அகலந்தழைத்துச் செழித்தது, அதன் மலர்களில் நிறைந்துசொரியும் தேனானது யாவர்களும் வணங்கும்படிக்குக் கடம்பநதியென்னும் பேர்கொண்டிருக்கின்றது. அப்படிப்பட்ட நதியில் ஸ்நானஞ்செய்தாலும் தாகமருந்தினாலும் நூறு யோசனைதூரம் சுவாசமணமும் தேகமணமும் சூழ்ந்துக்கொண்டிருக்கும். இதன்றியும் மாமேருவுக்கு வடதிசையிலிருக்கும் சுவேதகிரிச்சாரலில் நூற்றுப்பத்து யோசனை உயரமும் பெருமையும் பரப்புமுடைய ஆலமரமொன்று இருக்கின்றது. அதினுடைய கிளைகள்தோறும் நெருங்கியுள்ள கனியைப் புசித்தால் பால்-தயிர்-தேன்-நெய் இவைகளைக் கொடுப்பதல்லாமலும் அழகிய பொன்னுடை இரத்தினாபரணங்கள் முதலிய யாவுங் கொடுத்து ஆற்றைப்போலும் சுரப்பும் ஊற்றைப்போலும் பெருக்கும் எடுத்தோடிக்கொண்டிருக்கும் இதல்லாமல், இன்னமுஞ் சொல்லுகிறேன் கேளாய் பெண்ணே பார்வதி! சிருட்டி கருத்தாவாகிய பிரமாவானவன் பூர்வத்திற்பெற்ற சுயம்புமனுவென்பவன் மேற்சொல்லியபுட்கரத்தீவம் சாகத்தீவம்-சான்மலித்தீவம்-கிரௌஞ்சத்தீவம்-கோமேதகத்தீவம்-குசைத்தீவம்-சம்புத்தீவமென்னும் சத்ததீவத்தையும் தனது புயபல பராக்கிரமத்தினாலும், மிகுந்த தவத்தினாலும் ஆண்டுவந்தான். அப்படி அரசுபுரிந்துவருங்காலையில் அந்தச் சுயம்பு மனுவுக்கு நந்தன்-சயித்திரதன்-பிரசன்-சர்வதோபத்திரன்-சுரதீரன்-மனுதாரசா-அங்கதீரனென்று எழுபிள்ளைகள் பிறந்து கல்வியிற் சிறந்துவளர்ந்து, கருதலரைக்காய்ந்து கடைக்

கண்ணியர்து செய்கையிற் சிறந்தவரானார்கள். அக்காலையில் அச்சம்புவே ஏழுபிள்ளைகளின் திறத்தைக்கண்டு ஏழு தீவத்தையும் ஒவ்வொரு பிள்ளைக்கு ஒன்றொன்று பகுந்து கொடுத்து பட்டங்கட்டிவைத்தான். அந்தத் தீவத்தை அந்தப்பிள்ளைகள் அரசாட்சி செய்துவந்தார்கள். அந்த ஏழுபிள்ளைகளில் அங்கதீரனென்பவன் இந்தச் சம்புத்தீவை செங்கோல்முறை குன்றாமல் தருமங் குறையாமல் மலைகளைப்பிளக்கும் வச்சிராயுதமுதலிய ஆயுதங்களைப் பெற்று இராச்சிய பரிபாலனஞ்செய்து வருநாளையில், குரு-இரணியன்-ரமியன்-இளாவிரதன்-பத்திரன்-கேது மாலன்-அரி-கிம்புருடன்-பாரதனென்ற ஒன்பது பிள்ளைகளைப் பெற்று வளர்த்து இந்தச் சம்புத்தீவத்தை ஒன்பது பங்காக்கி ஒவ்வொரு பிள்ளைகளுக்கும் ஒவ்வொரு பங்கைக்கொடுத்துப் பட்டங்கட்டி அந்தப் பிள்ளைகள்பேரால் நவகண்டத்திற்குப் பேரும் ஏற்படுத்திவைத்து பத்தினி புத்திரர்கள் முதலிய பூடணத் திரவியங்களையும் வெறுத்து ஆன்மார்த்தத்திற்காகக் கனங்குலவிய வனம்புகுந்து தவமிருந்து மனங்குவிந்து மோட்சவீடடைந்தான்.

அங்கதீரனென்னும் அரசனும், அவனுக்குப் பின்பு அவன் ஒன்பது பிள்ளைகளும் ஆண்டுவந்த அந்த ஒன்பது கண்டத்தின் அளவையும் சொல்லுகிறேன். கேளாய் பெண்ணே பார்வதி! என்று பரமசிவனானவர் சொல்லத்தொடங்கினார். "மலைகள்போலும் அலைகள்வீசும் வடக்குச் சமுத்திரத்திற்குத் தெற்காகவும், அணியணியாய் மணிகள்கொழிக்கும் சுனைபெருக்குடைய சிருங்கமலைக்கு வடக்காகவும் இருக்கும் இரணியவருடமுதலிய பாரத வருடத்தில் இருப்பவர்களெல்லோரும் சீக்கிரத்தில் மோட்சம் அடையும்படி ஆயுள் நீடித்திருக்கவிடாமல் நூற்றிருபதென்றே விதித்திருக்கின்றது பெண்ணே" என்று சிவபெருமான் சொல்ல; உமையவள்கேட்டு சிந்தைகளித்துப் பரமசிவத்தை நோக்கி ஓ சுவாமி! மற்ற எட்டுவருடத்திலும் இருப்பவர்கள் இவ்விடத்தில் வந்து தவஞ்செய்து மேன்மைபெறவும் இவ்விடத்திலிருப்பவர்கள் சீக்கிரத்திற் கதிசேருவதற்காக ஆயுட்குறுக்கமும் என்றுஞ் சொன்னீர்; அப்படிப்பட்ட விசேட நலத்தைக்கொடுக்கும் மகத்துவங்கள் இந்தப் பாரதவருடத்தில் என்னென்ன இருக்கின்றன? அவற்றையும் தெரிவிக்கவேண்டும் என்று பார்வதாதேவிகேட்க!, பரமசிவம் சொல்லுகின்றார், கேளாய். அழகிய திருமேனியையுடைய பெண்ணே! இரமணீயமாகிய பொற்றாமரை மலர்களுடனே ஆகாசபத்தினின் றிழிந்து மாமேருவின் சிகரத்திற்பாய்ந்து

மூன்று பிரிவாகி, அந்த மாமேருவுக்குச் சமீபமாயிருக்கின்ற[illegible]
பகிரியில் ஒரு பிரிவுவிழுந்து அதன் சிகரத்தைப் பிளந்துவரும் நதி
யானது நான்கு பிரிவாய்ச் சமுத்திரத்திற்போய்க் கலக்கும். இப்
பால் மாமேருவுக்குத் தென்புறத்திலிருக்கும் குலகிரியினுடைய
சிகரத்தில் வீழ்ந்த மற்றொரு பிரிவானது அம்மலையின் நடுவாகிய
வயிற்றைக்கிழித்துப் பெருமைதங்கிய நிலத்தைப்பிளந்து தென்
முகமாகத் திரும்பிவராநின்ற கங்கையாற்றால், இந்தப் பாரதகண்
டஞ் சிறந்ததென்று சொல்லுவதற்குச் சாட்சியாயிருக்கின்றது.
இதன்றியும், சரஸ்வதி-யமுனை-கோதாவரி-நர்மதை - கௌசிகை-
துங்கபத்திரை-சரயுநதி-பாலி-பெண்ணை-காவிரி-கிருஷ்ணை - தாம்
பிரபரணி முதலிய பலதீர்த்தங்களும் பொருந்திய இப்பரதக்கண்
டத்திற்கு ஒப்பாகிய கண்டமும் உண்டோ? உத்தமியே! இன்னும்
திருக்கோயில்-திருவேங்கடம்-திருநெல்வாயில் - திருக்கழிபாலை-
திருப்பெருமணம்- திருமயேந்திரபள்ளி - திருமுல்லைவாயில் - வட
மதுரை-தென்மதுரை-காசி-காஞ்சி-மாயாபுரி- துவாரகை-அவந்தி
அயோத்தி-திருக்கலிங்காமூர்-திருச்சாய்க்காடு-திருப்பல்லவனீச்
சுரம்-திரு வெண்காடு-கோகரணம்-இராமேச்சுரம் - தென்கயிலை-
வடவேங்கடம்-திருக்காட்டுபள்ளி-திருக்கருகாவூர் - திருக்காறு-
திருக்கோலக்கா-திருவாரூர்-புள்ளிருக்கும் வேளூர்-திருவாவிநன்
குடி-திருக்கேதாரம்-ஸ்ரீரங்கம்-திருவானைகாவல் - திருக்கண்ணார்
கோயில்-திருஞாயிறு-திருநின்றியூர்-திருப்புன்கூர்-அன்னியூர்-திரு
வேள்விக்கூர்-சீகாழி-சிதம்பரம்-சிற்சபை-திருக்குடந்தை - சகர
தம்-திரிசிரபுரம்-தலைசயனம்-குருக்ஷேத்திரம் இவைகள்முதலாகிய
திவ்விய தலங்களும் இக்கண்டத்தில் இருக்கின்றன. இந்தப் பதி
க்கு ஒப்பாகிய திருப்பதிகள் எப்பாரினுமில்லை. அறிவுடைய
மாதே கேளாய்! இப்போது சொல்லி வந்த தலவிசேடங்களினா
லும், நதிவிசேடத்தினாலும், காட்சிச் சிறப்பினாலும், தவத்தினா
லும், சோடசதானங்களினாலும், சிவார்ச்சனை விஷ்ணுவார்ச்சனை
ப்பூசைகளினாலும், சுசித்தங்களினாலும், சகலவித வளங்கள் முத
லிய நலங்களினாலும் இந்தப்பாதகண்டம் புனிதமாகிய விசேடம்
பெற்றது; இந்தப் புனிதவிசேடம்பெற்ற பரதகண்டத்தில் குரு
க்ஷேத்திரம் மேலாகிய பவித்திரமுடையது. அநேகங்கோடி நற்
குலத்தவர் நற்குணத்தவரெல்லாரும் நன்மைபெறச்செய்த யாக
சாலைகள் கோடாகோடிகளிருக்கின்றன- இதல்லாமலும், உத்தம
க்ஷத்திரியகுல போஜராகிய ராஜாக்களெல்லோரும் பகைமேற்
கொண்டு வெற்றிபெறக்கருதி யுத்தஞ்செய்த மேலாகிய தலம்

குருபூமியே ஆகும். இதன்றியும், பரசுராமனானவன் இராசவமிசத்தைக் அறுவறுத்து அவர்கள் தேகத்தினின்று பெருகிய இரத்தத்தினால் சிவந்த பஞ்சகமென்னும் தீர்த்தமகத்துவம் உண்டாக்கி, அந்த உதிர தீர்த்தத்தில் தன்தந்தைக்குத் திலதருப்பணக் கடனைகழித்தார். இன்னமும், அநேக தகுதியையுடைய பெரியோர்களெல்லோரும் தங்களுக்குரிய காரியங்களை இவ்விடத்திலேயே நிறைவேற்றிக்கொண்டார்கள். அப்படிப்பட்ட மகத்துவமுடைய அந்தக் குருபூமி எவ்விடத்தி லிருப்பதென்றால், கல்விவளமுஞ் செல்வவளமும் தருகின்ற சரஸ்வதிநதிக்குத் தெற்கில் இருக்கிறது.

இவ்வாறு சொல்லியதை உமையவள் மிகுந்த சந்தோடத்துடன் கேட்டுச் சிவபெருமானைநோக்கி "ஓ சுவாமி! நவகண்டமென்று பிரித்துச்சொல்லி அதினுடைய விசேடங்களையும், இந்தப் பரதகண்டத்தினுடைய மகத்துவங்களையும் விசாலமுதலிய தன்மைகளையும் எனக்குச் சொல்லிவந்தீர்; நானும் அதை நன்றாகத் தெரிந்துகொண்டேன். மேற்சொல்லிய ஏழுதீவுகளிலே இந்தநாவலந்தீவை நீக்கி மற்ற ஆறுதீவுகளின் விபரங்களையும் சொல்லவேண்டும் என்று வினயத்துடன் வேண்டிக்கொண்டாள். இவ்வாறு நயந்து வேண்டிக்கொள்ளும் உமையவளை நோக்கிச் சிவபெருமான் புன்சிரிப்புடன் சொல்லத்தொடங்கினார்:—

கேளாய். பெண்ணே! முன்சொல்லிவந்த சத்ததீவுகளில் இந்தச் சம்புத்தீவுநீங்க மற்ற ஆறுதீவுகளையும் சுயம்பு மனுவினது ஆறுபிள்ளைகள் அரசுசெலுத்தி வந்தார்கள். இந்தத்தீவுகளில் புட்கரமென்னுந்தீவை சர்வதோபத்திரன் என்னும் அரசன் ஆண்டுவந்தான்; அவனுக்குப் பிராசீனன்-சுவேதன்-பிரத்தியக்கு - உத்தரனென்று நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். அப்போது, தான் ஆண்டுவந்த புட்கரத்தீவைக் கீழ்விதேகம் - மேல்விதேகம் - வடவிதேசம்-தென்விதேகம்யென்று நாலுகண்டமாக்கி, அதனை பிள்ளைகள் நால்வருக்கும் கொடுத்தான்; அந்த நான்கு பிள்ளைகளும் துரைத்தனம் பண்ணிக்கொண்டு வந்தார்கள். ஓ பெண்ணே! பிள்ளைகளின் குணமறிந்துப் பூமியைப்பங்கிட்டுக் கொடுத்துவிடுகின்ற தந்தையானவன் எல்லாத்தேவரினும் முதற்றேவன்; அப்படிச் செய்யாமல் இறந்துபோகும் தகப்பன், புத்திரமித்திரர் முதலிய யாவருக்கும் பகையென்றும் கொடும்பாவியென்றும் இராசநீதியினும் நீதிசாரத்திலுஞ் சொல்லியிருக்கின்றபடியால் அந்தந்த அர

சர்களும் பாவத்திற்குப்பயந்து உடனேபகுத்து கொடுத்துவிட்டார்கள். அந்தநீதிமுதலிய தருமங்கள் அப்படியிருக்க; மேற்சொல்லிய ஆறுதீவுகளிலும் வாழ்கின்ற மனிதர்களுக்கு ஆயிரம் வருஷம் ஆயுளென்றும் புட்கரத்தீவோர் பிரமாவைப் பூசிப்பார்களென்றும், கிரௌஞ்சத்தீவார் வருணனைத்தொழுவாரென்றும், பிலட்சத்தீவோர் சூரியனை வணங்குவார்களென்றும், சாகத்தீவத்தார் வாயுவை ஆராதிருப்பார்களென்றும், சான்மலித்தீவத்தினர் சந்திரனைப் போற்றுவாரென்றும், குசைத்தீவினர் அக்கினியைக் கொண்டாடுவார்களென்றும், நீர்வளம் நெல்வளம் பொருந்திய இந்தச் சம்புத்தீவத்தார் மேலாகிய விதிமுறைகளுடன் கடவுளைத் தொழுதல், பூசை, சத்தியம்-சௌசம்-ஆசாரம்-விவகாரம்-ஞானம்-இரக்கம்-யாகம்-ஓமம்-ஔபாசனம் முதலிய வண்ணம் வளங்களுடையவர்களென்றும், இவ்வுலகத்தையே தேவபூமியாகச் சொல்லப்படுமென்றும், பரமசிவன்சொல்ல; இதினுடைய தன்மைகளைக்கேட்டுச் சந்தோடமடைந்து பின்னும் உமையவள் "ஓ சுவாமி! கீழுலகம் ஏழு என்றருளியிருக்கின்றீராதலின் அவ்விவரங்களை நன்கு விளக்கவேண்டும்" என்ன, சத்தியைநோக்கிசங்கரன்சொல்லத்தொடங்கினர்.

## மண்டல அடுக்கு.

கேளாய். பெண்ணே கௌரீ! மனுக்கள்வசிக்கும் பூலோகத்தை ஊடுருவ அதோமுகமாகத்தாழ்ந்துசென்றாலோ அங்கு ஆயிரம் பணாமுடியையுடைய ஆதிசேடனும் அஷ்டகசங்களும் சூழ்ந்திருக்கும். அப்புவனத்தைநீக்கி அப்பாற்சென்றால் ஒப்பில்லாத பிலங்களாகிய அதலம்-விதலம்-சுதலம் - தராதலம் - இரசாதலம்-மகாதலம்-பாதலமென்று ஏழுலகங்கள் உண்டு. ஒவ்வொன்றும் ஒன்பதுலக்ஷ யோசனை விசாலமுடையது. இந்த ஏழுலகத்தின் கடைசியாகிய பாதலத்தில் விவேகத்தில் மிகுந்த காண்டவரென்னும் மகாநுபாவர் பொருந்தியிருப்பார். அவ்விடம் நீங்கிச்சென்றால், அள்ளல்-ரௌரம்-கும்பிபாகம்-கூடசாலம் - செந்துகானம்-பூதி-மாபூதி என்னும் பலநிறமாகிய ஏழு நரகபூமி உள்ளது. அந்தப் பூமியை நீங்கினால் தேவர்கள் தொழுமிடமும், நமது கணக்கூட்டமும், ஆதாரமாகிய ஆமையும் அங்கிருக்கின்றன. அந்நிலம் விட்டு நீங்கினால் இந்த அண்டத்தின்கீழ்ச் சுவர்தோன்றும். பெண்ணே! பூலோகமுதல் அண்டச்சுவர்வரைக்கும் ஐம்பதுகோடி யோசனை தூரமாகும்; இனி, பூலோகமுதல் மேலாகிய ஏழுலகத்தின்

றும் சொல்லுகிறேன்; கேளாய். பார்வதி! மண்ணுலகத்தில் அனேகவித யோனிபேதமாக ஆன்மாக்கள் வாழுமென்று உணர்ந்திருக்கின்றாயல்லவா? பெண்ணே! இவ்வுலகின்மேற் பத்துயோசனைதூரம் வாயுமண்டலம்; பதினாயிரம் யோசனைதூரம் மேகமண்டலம்; இதுவரையிலும் பூலோகம்; அதற்குமேலாகிய புவலோகத்தில் உமையே! நலமுடைய கிம்புருடர், பலமுடைய கருடர், விஞ்சையர், இயக்கர், சித்தர் முதலியோர்கள் பொருந்தி வாழும் உலகமும் உண்டு; அதன்மேல் ஆகாயகங்கை செல்லுகின்றது; அப்பால் லக்ஷயோசனைதூரம் சூரியமண்டலம்; அதுவே முப்பத்துமுக்கோடி தேவர்கள்கூடி வழிநடக்க மண்டலவீதியாயிருக்கும்; அதற்குமேல் லக்ஷயோசனைதூரம் சந்திரமண்டலம்; அப்பால் லக்ஷயோசனைதூரம் நக்ஷத்திரமண்டலம்; அதன்மேல் இரண்டு லக்ஷயோசனைதூரம் புதனுடைய மண்டலம்; அப்பால் இரண்டு லக்ஷயோசனைதூரம் சுக்கிரமண்டலம்; அதன்மேல் இரண்டு லக்ஷயோசனைதூரம் அங்காரனாகிய செவ்வாய் மண்டலம்; அப்பால் இரண்டுலக்ஷயோசனைதூரம் குருமண்டலம்; அப்பால் இரண்டு லக்ஷயோசனைதூரம் சனிமண்டலம்; அதன்மேல் லக்ஷயோசனைதூரம் தவத்தையுடைய சத்தரிஷிகள் மண்டலம்; அப்பால் லக்ஷயோசனைதூரம் துருவமண்டலம்; இதுவரையிலும் பதினைந்துலக்ஷயோசனையுடையது புவலோகம். இதன்மேலாகிய சுவலோகமென்பது எண்பத்தைந்து லக்ஷயோசனைதூரமுடையது. அதற்கப்பால் மகாலோகம் இருநூறு லக்ஷயோசனைதூரமுடையது. அதுதான் தேவேந்திரன்வாழும் தேவலோகமென்று சொல்லப்படும். அவ்விடத்தில் மார்க்கண்டேயர் முதலாகிய மகாமுனிவர்களெல்லாரும் வீற்றிருப்பார்கள். அதற்குமேல் எட்டுக்கோடியோசனை தூரமுடையது சனலோகம். அவ்விடத்தில் பிதிர்தேவதைமுதலிய புண்ணியர் பொருந்திவாழ்வார். அந்தச் சனலோகத்தின்மீது பன்னிரண்டுகோடி யோசனைதூரமுடையது தவலோகம். அவ்வுலகத்தில் சனக சனந்த சனற்குமாரசனாதனர் முதலியோரும்வாழ்வார்கள்; இந்தத்தவலோகத்தின்மேல் சிருட்டிகருத்தாவாகிய பிரமதேவன் வாழும் சத்தியலோகம் உளது. அது பதினான்குகோடி யோசனைதூரமுடையது, இந்தச் சத்தியலோகம்வரைக்கும் ஏழுலகமென்றுணரக்கடவை. இந்த சத்தியலோகத்தின்மேல் பரமபதமென்பது மூன்றுயோசனைதூரமுடையது, பரிமளங்கொண்டத் துளவணிமாயன் பொருந்தியபதம்; அதற்குமேல் மூன்றுகோடியோசனைதூரமுடையது நாம்பொருந்தியிருக்கும் சாயுச்சிய லோகம்;

இதற்குமேல் ஒருகோடி யோசனைதூரத்தில் சுற்றமற்ற பொன்னேர் சுவர் வட்டம் கவிழ்ந்திருக்கிறதென் றுணரக்கடவை. இதல்லாமல் நூற்றெட்டு உருத்திரர்கள்வாழும் புவனங்களும், சமுத்திரமத்தியிலிராநின்ற இலங்கைமுதலிய தீவங்களும், பற்பலவாக இம்மேதினியில் இருக்கின்றன. மேலும் இந்த அண்டத்தை வளைந்துக் கொண்டிருக்கும் சக்கரவாளகிரியின் எட்டுத்திக்கிலும் இந்திரன்-அக்கினி-இயமன்-நிருதி-வருணன்-வாயு-குபேரன்-ஈசானனென்று சொல்லப்பட்ட திக்குப்பாலகர்களும், இவர்கள் பொருந்தியிருக்கும் பட்டணங்களுமுண்டு; ஆகையால், நான் சொல்லிக்கொண்டு வந்த பூலோகமுதற்கொண்டு அண்டகோளகை வரைக்கும் பஞ்சத்க்கோடி அளவென்றும் அறியக்கடவை" யென்று உமையவளுக்குச் சிவபெருமான் சொல்லியருளினர்.

## பிரமசந்ததி.

கேளாய், பெண்ணே பார்வதி! சிருட்டித்தலைவனாகிய பிரமனிடத்தில் அத்திரி-அரீசி-புலத்தியன்-கிரன்-கிருத்து-புலகன் என்னும் ஆறுபுத்திரரும், அப்பிரமன் வலதுபாதத்தின் பெருவிரலில் தக்கனும், இடதுபாதத்தின் பெருவிரலில் தரணியென்னும் ஒரு பெண்ணும் உதித்தனர். அந்தப்பிரமன் உடலினுதித்த ஆறுபுத்திரர்கள் அரீசியின்புத்திரர் காசிபர். அக்காசிபரால் இவ்வுலகம் விருத்தியாயிற்று. அது எவ்வகையெனில்.—

பிரமன் வலதுபாதத்துப் பெருவிரலிலே பிறந்ததக்கன், பிரமன் இடதுகாற் பெருவிரலிலேபிறந்த தரணியென்பவளைக் கூடி ஆயிரம் புத்திரர்களைப்பெற்றான். அப்புத்திரர்கள் பிரமசாரியத்தை மேற்கொண்டு தவஞ்செய்து ஞானபத மடைந்தார்கள். அதைத் தக்கன்கேட்டு மறுபடியும் தரணியென்பவளைக்கூடி ஐம்பது பெண்களைப்பெற்றான். அந்த ஐம்பதுபெண்களில் சிரத்தை-அலட்சுமி-திருதிதுட்டி-புஷ்டி-மேதை-கிரியை - புத்தி - இலச்சை-வபு-சுசாந்தி-சித்தி-கீர்த்தி என்னும் பதின்மூவரைத் தருமமென்னும் மனுவுக்கும்; அசுவனி-பரணி-கிருத்திகை-உரோகணி-மிருகசீரிடம்-திருவாதிரை-புனர்பூசம்-பூசம்-ஆயிலியம்-மகம்-பூரம்-உத்திரம்-அஸ்தம்-சித்திரை-சுவாதி-விசாகம்-அனுஷம்-கேட்டை-மூலம்-பூராடம்-உத்திராடம்-திருவோணம்-அவிட்டம். சதயம்-பூரட்டாதி-உத்திரட்டாதி-ரேவதி என்னும் இருபத்தேழு பெண்களைச் சந்திரனுக்கும்; அதிதி-திதி-தனு-சத்துரு-அரிட்டை-சுரசை-சுரபி வினதை-தாம்பிரை-குரோதவசை-முனி-இனை - கிரீடை - என்னும்

பதின்மூன்று பெண்களைக் காசிபருக்கும் விவாகஞ்செய்துக்கொ டுத்தான். இவர்களில் அதிதியென்னும் பெண்ணிடத்தே,

| | |
|---|---|
| அங்கிசன் | அரியமான் |
| தாதா | விவச்சுவான் |
| பகன் | சவிதா |
| துவட்டா | புடா |
| மித்திரன் | இந்திரன் |
| வருணனு | விஷ்ணு |

என்னும் பன்னிரண்டு புத்திரர்பிறந்தார்கள். திதிக்கு இர ணியன் பிறந்தான்; அந்த இரணியனுக்குப் பிரகலாதனன் பிறந் தான்; பிரகலாதனனுக்குக் கும்பன்-நிருபன்-விரோசனன் என்னு மூவர் பிறந்தார்கள். இவர்களில் விரோசனனுக்குப் பலிச்சக்கிர வர்த்தி பிறந்தான். பலிக்கு பாணாசுரன்பிறந்தான். தனுவென்பவ னுக்கு விப்பிரசித்தி-நமுகாசு-சங்கவருணன்-பலோமன் - விலோ மன் முதலாகிய நாற்பது குமாரர்கள் பிறந்தார்கள். அந்தநாற் பது பேருக்கும் சந்ததிவிர்த்தியாகி அளவற்ற அரசர்கள் உதித் தார்கள்.

காலை யென்பவளுக்கு விரோசன், குரோதன்முதலாகிய ஐம் பதுபுத்திரர்கள் பிறந்து அபிவிருத்தியானார்கள். ஆயுவுக்கு விச யன்-விசரன் - வீரன் - விருத்திரன் என்னும் நான்கு புத்திரர்கள் பிறந்து விருத்தியானார்கள். சிங்கியை யென்பவளுக்கு இராகு பிறந்தான். மனுவென்பவனுக்கு வீமசேனன், உக்கிரசேனன் முத லாகிய பதினாறு கந்திருவர் பிறந்தார்கள். சுரபி யென்பவளுக்கு மேனகை முதலாகிய ரம்பைப்பெண்களும் தேவசுரபிகளும் பிறந் தார்கள். முனி என்பவளுக்கு கன்னன் பிறந்தான். குரோதை வசைக்கு மகாகணன் பிறந்தான். அனுகை யென்பவளுக்கு சித்த கணங்கள் பிறந்தார்கள்.

வினதைக்கு அருணனும்-கருடனும் பிறந்தார்கள். அருண னுக்கும் அவன்மனைவி சேதிக்கும் சம்பாதி சடாயு பிறந்தார்கள். கத்துருவைக்கு ஆதிசேடன் வாசுகிமுதலாகிய நூற்றுநான்கு உர கபதிகளும் சலர்க்கரையென்கிற ஒருபுத்திரியும் பிறந்தாள்; இது காசிபர் சந்ததி. இனி அங்கீசன் சந்ததிகூறுவாம். அங்கீசனுக்குப் பிரகற்பதி தேவகுருவானான். அத்திரிக்கு வேத வேதியர்களும் பிரமரிஷிகளும் பிறந்தார்கள். புலத்தியனுக்கு, விச்சிரவாகு முத லாகிய அரக்கர்கள் பிறந்தார்கள். அதில் விச்சிரவாகுவென்பவனு

க்குப் பேரன்பிறந்தான். புலத்தியனுக்கு கின்னரர், கிம்புருடர் பிறந்தார்கள். கிருதுவுக்கு அழிவில்லாத நிலைமையை யுடைய நாலுமுனிவர்கள் பிறந்தார்கள். பிரமபுத்திரனாகிய தேவலனென்கிற முனிக்குப் பிரசாபதிபிறந்தான். அந்தப் பிரசாபதிக்கு தூமிரை-புத்தி-மனசுவனி-இரதை-சுசனை - சாண்டிலி - பிரபாசலை என்னும் ஏழுமனைவிகளுண்டு. அவர்களில் தூமிரைக்கு - வருணனும், புத்திக்குத் துருவனும், மனசுவனிக்குச்-சோமனும், இரதைக்கு-நகுலனும், சுசனைக்கு-அனிலனும், சாண்டிலிக்கு-அக்கினியும், பிரசபாலைக்குப் பிரபாசன் பிரதியூசன்முதலாகிய வசுக்கள் பிறந்தார்கள். வருணனுக்குத் திரணவனும், துருவனுக்கு காலனும், சோமனுக்கும் மனோகரமென்னும் பெண்ணுக்கும் புரோசனன்-வருச்சிகன்-சிசிரன்-பிராணன்-வருணன்-புரதைஎன்கிற பெண்ணும் பிறந்தனர். புரதையென்பவளுக்குப் பதினொரு கந்திருவர் பிறந்தார்கள். நகுடனென்னும் வசுவுக்குச் சோதி பிறந்தான் அனிலனென்னும் வசுவுக்கும் சிவையென்பவளுக்கும் புரோசனனும் அவிக்கியாக மதியும் பிறந்தார்கள். அக்கினி என்னும் வசுவுக்குக் குமரன் பிறந்தான்: தரத்தியூடனென்னும் வசுவுக்கு முனிவனாகிய தேவலன் பிறந்தான். பிரபாசனென்கிற வசுவுக்கும் பிரகஸ்பதி சகோதரியாகிய யோகசித்திக்கும் விசுவகன்மன் பிறந்தான். தரனென்னும் வசுவுக்கு மானச புத்திரர்களாகிய மகாதேவன்-அரன் உருத்திரன்-சங்கரன்-நீலலோகிதன் - ஈசானன் - விசயன்-விமதேவன்-பவோற்பவன்-கரபாலசவுமியன் என்னும் ஏகாதச ருத்திரர்கள் பிறந்தார்கள். பிரமன் வலதுகையில் தருமனென்னும் மனுப் பிறந்தான். அந்தத் தருமனுக்கு சமன்-இராமன்-அருடன்-என்புவர் பிறந்தார்கள். அந்த மூவர்களும் முறையே அப்பிராபதி, நிருதி, நந்தி என்னும் மூன்று மனைவியரோடு வாழ்ந்திருந்தார்கள். சவித்துருக்கும் வடவாக்கினி உருவமாகிய. துவட்டரைக்கும் அசுவனிதேவதைகள் பிறந்தார்கள். பிரமன் மார்பிலே பிருகுமுனிவர் பிறந்தார். அந்த பிருகு முனிவருக்குச் சுக்கிரன் பிறந்தான். அந்தச் சுக்கிரன் அசுரகுரு ஆனான். சுக்கிரனுக்குத் துவட்டரன், தாத்திரி-பத்திரி- பத்திரன்-கன்னன் என்னும் நான்கு புத்திரர்கள் பிறந்து அசுரருக்குப் புரோகிதர் ஆனார்கள். பிருகு முனிக்குச் சவுனகன் பிறந்தான். அந்தச் சவுனகனுக்கும் மனுவாகிய பயாதிபுத்திரி சுகன்னிக்கும்-சநகன்- உருசிகன் முதலாகிய நூறு புத்திரர் பிறந்தார்கள். உருசிகனுக்கு சமதக்கினி பிறந்தான். சமதக்கினிக்கும் இரேணுகைக்கும் புத்திரரும் புத்திரிகளுமாக நால்வர் பிறந்

ஓ! பருவதராசகுமாரியே! இன்னமுங்கேள், அந்தச் சூரியன் நமக்கெப்படி பகலிலே அதிக உஷ்ணமாயும் பிரகாசமாயும் காணப்படுகிறானே, அப்படியே இரவிலே மற்றெல்லாத் தீவுகளிலும் இருக்கிறானே அல்லது உஷ்ணப் பிரகாசங்கள் குறைந்து எப்போதும் இருப்பதில்லை ஆகையால், உதயாத்தமன பேதங்களில்லை. ஆனால், உதயாத்தமனங்களின் விதமென்னவெனில், திக்கு விதிக்குகள் எதிலும் எவர்களுக்கு எங்கே காணப்படுகிறானோ அவர்களுக்கு அங்கே உதயமென்றும்; அதற்குநேர்க்கோணத்தில் காணப்படாமற் போவதினாலே அத்தமனமென்றும் உலக விவகாரம் உண்டாயிருக்கின்றது. இப்படியாகையால், சூரியனுக்கு எப்போதும் உதயாத்த மனங்கள்உண்டாயிருக்கின்றன. இவ்வளவேயல்லாமல், சூரியனுக்குச் சுபாவத்தில் உதயமும் அத்தமனமும் இல்லவேயில்லை. இச்சூரியன் இந்திரன் முதலானோருடைய பட்டணங்களில் எதிலிருந்தாலும் அதனையும், பக்கத்துக் கோணங்களிரண்டையும், பரங்களிரண்டையும் பரிசிக்கிறான்.

இவ் ஆதித்தனானவன் உதயமானது முதல் கிரணங்கள் வளரப்பெற்றிருந்து மத்தியானத்தின்மேல் கிரணங்கள்சுருங்கப்பெற்றவனாய் அத்தமனமாகிறான். இந்த உதையாத்த மனங்களைக்கொண்டு தான் கிழக்கென்றும்-மேற்கென்றும் திக்குகளின் ஏற்பாடு உண்டாக்கப் பட்டிருக்கின்றது. இதைக்கொண்டே வலப்புறம் தென்திசையெனவும், இடப்புறம் வடதிசையெனவும் குறிக்கப்படும். சூரியன், எதிரில் எவ்வளவு காய்கிறானோ அவ்வளவு பின்புறத்திலும் பக்கங்களிலும் காய்கிறான். ஆனால், மாமேருபருவதத்தின் மேலிருக்கிற பிரமாவின் சபையைக் காய்வதில்லை. ஏனெனில் சூரியகிரணங்கள் அச்சபையிற் செல்லுமளவில் இதின் கிரணங்களாலே திரஸ்காரப்பட்டுத் திரும்புகின்றமையால் என்றறிவாய். இப்படி உதயாத்தமனங்களினாலேயே கிழக்குமுதலிய திக்குகள் ஏற்பட்டிருப்பதனாலே, மேருகிரியானது சகல வருடங்களுக்கும் வடக்காகவே இருக்கிறது. ஆனதுபற்றி மேருவின்மேல் எப்போதும் பிரம சபையின் காந்தியினால் பகலும், சூரிய சஞ்சாரமில்லாமையால் இரவுமாயிருக்கும். அஸ்தமயமாகிற சூரியனுடைய கிரணங்கள் அக்கினியில் பிரவேசிப்பதால், அவ்வக்கினியானது இரவில் அதிகமாய்ப் பிரகாசிக்கின்றது. அக்கினி கிரணங்கள் பகலில் சூரியனிடத்திலே பிரகாசிப்பதனாலே, சூரியன் அதிகமாய்ப் பிரகாசிக்கிறான்; இப்படியாக உட்டினப்பிரகாசமுள்ள ஒளியிரண்டும் மாறி மாறி ஒன்றிலொன்று கலந்து விளங்குகின்றன. மேருவின்

புறத்திலும் வடபுறத்திலும் பூமியின் பாதியில் சூரியன் உதயமாகும்போது, இருளான இராத்திரியும் வெளிச்சமானபகலும்முறையே தண்ணீரில் பிரவேசிப்பதினாலே, அந்தத்தண்ணீரானது சிறிது சிவப்பாகவும் வெளுப்பாகவும் ஆகின்றது இவ்வண்ணம் புட்கரத்தீவின் நடுவினால் பூமியில் முப்பதிலொரு பங்கைச் சூரியன் கடப்பதனால் நாளில் முப்பதிலொருபங்காகிய முகூர்த்தகாலம் உண்டாகின்றது.

குயவனுடைய சக்கரத்திலே திரிகின்ற பூச்சியைப்போலே சோதி சக்கரத்திலே திரிகின்ற சூரியன் தென்றிசையை நீங்கி உத்தராயணத்தின் மகரத்திலே வரும்போது, முற்பட்ட பகலிரவுகளைக்காட்டிலும் வித்தியாசமான பகலிரவுகளைச் செய்துவருவன்; பின்பு, அப்படியே முறையாய்க் கும்பமீனம் என்னும் இராசிகளிரண்டையும் கடந்து மேஷராசியிற் பிரவேசிக்கும்போது, பூமத்தியாகிய விஷுவத்தின் கதியைச் சேர்ந்தும் பகலிரவுகளைச் சரியாகச்செய்வன்; அங்கிருந்து சஞ்சரிக்கும்போது நாடோறும் பகல் வளர்ந்துக்கொண்டேவர, இரவு குறைந்துக் கொண்டேவரும். இப்படி மிதுனம் வரையிற் சென்று கர்க்கடகராசிக்குத் திரும்ப தட்சணாயனம் உண்டாகும். குயவன்சக்கரத்தின் நுனியிலிருக்கும் பூச்சிபோலே தட்சணாயனத்திலே சூரியன் சீக்கிரமாகச் சஞ்சரித்துக்கொண்டு பன்னிரண்டு முகூர்த்தகாலமான பகலினாலே பதின்மூன்றரை நட்சத்திரங்களையும் பதினெட்டு முகூர்த்தகாலமான இரவினாலே மற்ற பதின்மூன்றரை நட்சத்திரங்களையும் கடக்கின்றனன். மறுபடியும் உத்தராயணத்திற்கு வரும்போது குலாலன் சக்கரத்தின் நடுவிற் கிடக்கும் பூச்சிபோல மந்தமாகச் சஞ்சரித்துக்கொண்டு முந்திய இராப்பகலுக்கு மாறான இராப்பகல்களைச் செய்கிறான். ஆகவே, உத்தராயணத்தின் பகல்வளர்ச்சிபதினெட்டு முகூர்த்த அளவாயும், இரவின் குறைவு பன்னிரண்டு முகூர்த்த அளவாயும் இருக்கும் சக்கரத்தின் நாபியானது தான்நின்ற நிலைகுலையாதுஇராவைக்குபிரம்மத்தைப்போல்காட்டி எவ்வளவுவேகமாகச் சுழல்கிறதோ அவ்வாறே, சோதிச் சக்கரமத்தியத்திலே துருவன் எக்காலும் சுழன்றுக்கொண்டிருக்கின்றான். இப்படி தட்சணாயன உத்தராயணங்களிலே அந்தந்த இராசி மண்டலங்களைச் சூரியன் கடக்குந் திறத்தினாலே பகல் வளர இரவு குறைதலும், இரவு வளரப் பகல் குறைதலுமாக இருக்கும். சூரியனோ பகலிலும் இரவிலும் அவ்வாறு இராசிகளையே சமமாகக் கடக்கின்றானேயல்லதுவேறில்லை; ஆனாலும், இராசிகளின்வித்தியாசத்தினால் இரவு

இருக்கின்றன. தென்புறச் சிருங்கத்திற் சூரியன் சஞ்சரிப்பதனால் தட்சணாயனமும், வடபுறச் சிருங்கத்திற் சஞ்சரிப்பதனால் உத்தராயணமும் நடுச்சிருங்கத்தில் வருவதினால் விசுவமும் உண்டாகின்றன. கிருத்திகையின் முதற்பாதத்திலே சூரியனிருக்கையில், சந்திரன் விசாக நட்சத்திரத்தின் நாலாம் பாதத்திலிருப்பவன் சூரியன் விசாக நட்சத்திரன் மூன்றும் பாதத்தில் சஞ்சரிக்கும்போது கிருத்திகையின் முதல் பாதத்தில் சந்திரனிருப்பானென்று நிச்சயித்துக் கொள்வாய். இப்படிப்பட்ட காலந்தான் மகாவிசுவமென்கிற புண்ணியகாலமாம். அப்போது சிரத்தையுள்ள புருடர்,தேவதை-பிதுர் இவர்களை நினைத்துப் பிராமணர்களுக்குத் தானங்கொடுக்கவேண்டும். இதுதான் தானத்திற்குரிய காலமென்றறிவாய். இக்காலமறிந்து தானங் கொடுப்பவன் மகா புண்ணியஞ் செய்தவனாகிறான்.

யாககாலம்.

யாககால அளவை அறியும்படிச் சொல்லுகிறேன் கேளாய். பகல் இரவு அர்த்தமாசமென்னும் பக்ஷம்-கலை - காட்டை-கணம்-பவுர்ணமாசை-அமாவாசை சந்திரன் காணப்படும்படியான சினிவாலியென்பதும் சந்திரன் காணப்படாத குருவென்பதுமான அமாவாசையின் பிரிவுகள் பூரணச்சந்திரனுள்ள இராசை என்பதுமான பவுர்ணமாசையின் பிரிவுகள் தபம்-தபசி-யம்மது-மாதவம்-சுக்கிரம்-சுசியென்னும் மாசிமுதலானமாதங்களாலாகிய உத்தராயணம் இருதுக்கள் மூன்று; நபம்,நபசியம், இஷமஊர்ச்சகம்,சகசியம் என்னும் ஆவணிமுதலான மாதங்களாகிய தட்சணாயன இருதுக்கள் மூன்று இக்காலங்களெல்லாம் முக்கியமாக அறியவேண்டிய யாககாலங்களாம்.

கேளாய். பார்வதி! முன்பு லோகாலோகமென்னும் ஒருபருவதம் உண்டென்று உனக்குச் சொன்னேனே அதின் நாற்புறங்களிலும் கர்த்தமப் பிரசாபதியின் குமாரரான சுதன்வா, சங்கபா, என்பவர்களும்; இரண்ணியரோமா-கேதுமான் என்னும் வேறிருவருமான லோகபாலகர் நால்வரிருக்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் சுகதுக்கங்களும் ராசதுவேஷாதிகளுமான துன்பங்களொன்றுமில்லை; இன்னும் கேளாய். பெண்ணே பார்வதி! அகத்திய வீதிக்கு வடக்காயும், அசவீதிக்குத் தெற்காயும் வைசுவானர மார்க்கத்திற்கு வெளியிலிருக்கிற மார்க்கம் பிதுர்யானம். பிதுர்யானமென்பது தட்சணமார்க்கம் தூமாதிமார்க்கம். அதாவது முதலில்

தூமம்பிற்பாடு கிரமமாய் இராத்திரி அமரபட்சம் தட்சணாயன மாதங்கள் பிதுர்லோகம் ஆகாசம் இவை சந்திரன் எல்லைகளாம்; இவ்வழியிற்போனவர் கன்மலோகானுபவம் முடிந்தவுடனே திரும்பிச் சந்திரனைவிட்டு ஆகாசம்-காற்று-புகை-மேகம் - மழைத்தண்ணீர்-விதைகள் இவற்றின் வழியாக ஸ்திரீ புருடர்களை அடைந்து கன்மங்களுக்கேற்ற தேகத்தோடு பிறப்பார்கள் - இதுவே பிதுர் லோக மார்க்கமாம். அங்கே அக்கினி கோத்திர முடையவர்களாய் மகானுபாவர்களான சிலரிஷிகள் வாசஞ்செய்துக்கொண்டு வேதத்தின் கர்ம்மகாண்டங்களை நித்துக்கொண்டு பாகமுயற்சியைச் செய்வித்துக் கொண்டிருக்கிறார்கள். அவ் வுலகத்தை அடைய விரும்புவோர்களுக்குத்தான் பிதுர்யானமென்று முன் சொல்லப்பட்ட தூமாதிமார்க்க முண்டு. அவ்வுலகத்திலிருக்கிற பிதுர்க்கள் கன்மகாண்டம் அழிந்து போகாமலிருக்கும்படி சந்ததிகளினாலும், ஏற்பாடுகளினாலும், தவசுகளினாலும், வேதாத்தியயனங்களினாலும், யுகந்தோறும் தாபித்து வருவதல்லாமல் முந்தினவர் பிந்தினவர்களுடைய வமிசத்திலேயும், பிந்தினவர் முந்தினவர்களுடைய வமிசத்திலேயும் சனித்துகொண்டே இம்மூன்றுலகமும் அழியுங்காலமாகிய பிரமன் தினம்வரைக்கும் இருப்பார்கள். மேலும், நாகவீதிக்கு வடக்காயும் சத்தரிஷிகள் வீதிக்குத் தெற்காயு முள்ளமார்க்கம் தேவயானமென்று சொல்லப்படும். அவ்விடத்திலே இந்திரியசய,முள்ளவர்களாய், சித்திபெற்றவர்களாய் நிர்மலராய், பிரம்மசாரிகளான சில மகான்மாக்களிருக்கின்றார்கள். அவர்கள் சந்ததியை வெறுத்திருப்பதினாலே மிருத்துயுவை வென்று நித்தியர்களானார்கள். அந்த எண்பதினாயிரம் இருடிகளும் சூரியனுடைய வடவண்டைவழியை ஆசிரயித்துப் பிரமாவின் ஆயுள்பரியந்தம் யாதொரு துன்பமும் அழிவுமில்லாதவர்களாயிருப்பார்கள். இந்த இருப்பு அமுதத்துவமென்று மோட்சம் போலே உபசாரமாகச் சொல்லப்படும். ஏனெனில், உலோபமும் அதனடியான குரோதாதிகளும் ஸ்திரீ சம்போகமும் விருப்பமும் வெறுப்புகளு மில்லாமையாலும் கரும சம்பந்தத்தை விட்டிருக்கிறதினாலும் யோகத்தினின்றும் நழுவாமையினாலும் சத்தாதி விஷயங்களிற் குற்றத்தைக் காண்கையினாலும் அவ்விடத்திருப்பவர் பிரமன் ஆயுள் முடியுமளவும் நிலைநிற்பரென்றறியவும். இந்தப் பிரமாந்த காலமே பிரமகத்திசெய்த பாவத்தின் பயனை நரகமனுபவிப்பதற்கு ஏற்படுத்தியகாலம் ஆகும். அந்தக் காலத்தில் பூமி முதல் துருவனிருக்கும் தானமளவும் அழிந்துபோய்விடும்.

## பரமபதம்.

சத்தரிஷிகளுக்குமேலே வடபுறத்தில் துருவனிருக்கும் இடமே, திவ்வியமாயும் மகாபிரகாசமாயுமிருக்கிற மூன்றாவது ஆகாயத்தானம். அது விராட் புருடனுக்கு இருதய நாடித்தானமான துபற்றி அங்கே விஷ்ணு எழுந்தருளியிருக்கிறாராகையால், அதற்கு விஷ்ணுபதமென்று பேருண்டாயிருக்கிறது. அது கன்மாதி தோடங்களைக்களித்துப்பரமான்மாவினிடத்தே மனத்தைத்திடப்படுத்தின யோகிகளுக்குப் புண்ணிய பாவ கருமங்களெல்லாம் அவிந்தபோது அடையத்தக்கத் தானமாயிருக்கின்றது. யோகிகள் பாபபுண்ணியங்கள் ஒழிந்ததனாலே, சுகதுக்கானுபவ ரூப சமுசாரவேது இல்லாதவர்களாய் எந்த உத்தமமான விடத்திலே சென்று ஆனந்தத்தோடிருப்பார்களோ அதுதான் ஸ்ரீவிஷ்ணுவினுடைய பரமபதம். உலக சாட்சிகளான தருமன் துருவன் முதலிய மகான்மாக்கள் எங்கே இருந்துக்கொண்டு அந்த ஸ்ரீவிஷ்ணுவினுடைய ஐசுவரியத்துக்குச் சமானமான இந்திரிய சயத்தினாலே சேர்பட்டிருக்கிற யோக பிரபாவமுள்ளவர்களாய் விளங்குகிறார்களோ, அதுதான் ஸ்ரீவிஷ்ணுவினுடைய பரமபதமாம். சராசரங்களெல்லாம் எங்கே நெடுக்காகவுங் குறுக்காகவுங் கோக்கப்பட்டவையாய், எங்கே இருப்பனவாய், எங்கே இனி உண்டாவனவாயிருக்குமோ, அதுதான் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய பரமபதமாம். எது ஆகாசத்திலே பரவிநிற்கிற சூரியனைப்போல மகான்மாக்களுக்குச் சத்த விவேக ஞானத்தினாலே பிரத்தியட்சமாய் விளங்குமோ அதுதான் ஸ்ரீவிஷ்ணுவினுடைய பரமபதமாம். அங்கே சென்றவர்கள் மறுபடியும் சமுசார சம்மந்தமடையாமல் பிரமனோடுகூட மோட்சம் அடைவார்களாகையால், அது கிரமமூர்த்தி தானமானதுபற்றி மோட்சத்தானமான பரமபதமென்று சொல்லப்பட்டது. அது உலகாதாரமான விதம் சொல்லுகிறேன், கேளாய் மாதே!. மகாதேஜசுகள் துருவனென்பவன் அங்கே நடுக்கூச்சம்போலே தாபிக்கப்பட்டிருக்கிறானன்றோ அந்தத் துருவனிடத்திலே சகல கிரக நட்சத்திரங்களும் தாபிக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் கிரக நட்சத்திரங்களில் மேகங்கள் நாட்டப்பட்டிருக்கின்றன. மேகங்களிலே மழை ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது. மழையானது சகல ஒடதிகளின் மூலமாய்ச் சிருட்டிக்குக் காரணமாயும் தேவதைகள் முதலானோருக்குப் போடணமாயுமிருக்கின்றது. அதனாலே நெய்முதலிய அவிசொரிகிற ஆதிமூலமாகத் தேவர்கள் திருத்தியடைந்தவர்களாய், உலக சிருட்டிக்கும் திதிக்கும்

காரணமாகின்றார்கள். இந்தப்படி இந்த விஷ்ணுபத மென்னும்பரி சுத்தமான மூன்றாம் தானமானது மூன்றுலகங்களுக்கும் ஆதார மாயும் விருத்திக்கு ஏதுவாயுமிருக்கின்றது.

கங்கையின் பிறப்பு.

கேளாய், பார்வதி! மகாபிரபுவான ஸ்ரீ அரிபகவானுடைய சிம்சுமார மென்னும் செந்துபோலே தோன்றுகிற நட்சத்திரகூட்டமாகிய உருவம் யாதொன்றுண்டோ அதின் வாலில் துருவனிருக்கிறான். அந்தத் துருவன் அங்கிருந்து சுற்றிக்கொண்டு சந்திர சூரியாதி கிரகங்களையெல்லாம் சுற்றித்திருப்ப, அவைகளும் சக்கரம்போல அவனைச் சுற்றித் திரும்புகின்றன. சந்திரசூரியர்களும் மற்றுமுள்ள கிரகங்களும் நட்சத்திரங்களும் காற்றின் வடிவான கயிறுகளினாலே கட்டப்பட்டுத் துருவனிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆகாயத்திலிருக்கும் நட்சத்திரக் கூட்டமெல்லாம் சிம்சுமாரமென்னும் செந்துவைப்போல காணப்படுகிற தென்றேனே, அதன் இருதயத்தில் சகல தேசோலோகங்களும் ஆதார பூதனான ஸ்ரீமந்நாராயணன் எழுந்தருளி யிருக்கின்றான். உத்தான பாதனுடைய புத்திரனான துருவன் அந்த உலகநாதனை ஆராதித்து நட்சத்திரமயமான அந்தச் சிம்சுமாரத்தின் வாலினிடத்திலேஇருக்கப்பெற்றான். அந்தச் சிம்சுமாரத்திற்கு ஆதாரம் ஸ்ரீயப்பதி; அந்தச் சிம்சுமாரமோ துருவனுக்காதாரம், அந்தத்துருவன் சூரியனுக்காதாரம்; அந்தச் சூரியனோ தேவர் அசுரர் மனிதர் முதலிய சகலத்துக்கும் ஆதாரமாம் சூரியன் சகலலோகத்திற்கும் ஆதாரமான காரணஞ் சொல்லுகிறேன், பார்வதி! நீ கேட்பாயாக. சூரியன் இரசவத்தான சலத்தை எட்டுமாதங்களினாலே இழுத்து திரும்பவும் பொழிய, அம்மழையினால் சகல செந்துக்களுக்கும் உபயோகமான உணவுகள் உண்டாகின்றன. அம்மழையினாலே தான் சகல சகத்து முண்டாகி வளர்கின்றன. இன்னமும் அதின்விவரஞ் சொல்லுகிறேன், சூரியன் உக்கிரமான தன் கிரணங்களினால் உலகத்திலிருந்து தண்ணீரை இழுத்துச் சந்திரனிடத்திலே பெய்ய, அந்தச் சந்திரனும் வாயு நாடி மயங்களான வழிகளினாலே புகையும் நெருப்பும் காற்றுமான வடிவுள்ள மேகங்களிலே விட, அந்த மேகங்களி னின்றும் சலமானது உலகத்தில் விழுகின்றது. இந்த மேகங்களினின்றும் தண்ணீர் நழுவி விழாமையினாலே அம்மேகங்களுக்கு அப்பிரபங்களென்று பெயர்வந்தது; ஆனாலும், காற்றினால் அம்மேகங்கள் அலைக்கப்பட்ட காலத்தில் உண்டான பரிபாகத்தினால் அந்தத் தண்ணீர் நின்மலமாகி விழுகின்றது. ஆறு

களில் இருப்பதும் சமுத்திரங்களில் உள்ளதும் பூமியில் ஊறுவதும் உயிர்களால் உண்டாவதுமாகிய நால்வகை நீரையும் கவர்ந்துதான், சூரியன் மழையாகப் பொழிகிறான். அன்றியும், ஆகாச கத்மையின் சலத்தைத் தன் கிரணங்களாலே கொண்டு மேகங்களிற் சேர்க்காமலே பொழிவதுமுண்டு. அந்தப் பரிசுத்த தீர்த்தம் படுவதினாலே மனிதன் பாவந்தீர்ந்து நரகமடைவதில்லை; அந்த ஸ்நானம் திவ்வியஸ்நானமென்று சொல்லப்படும். ஓ பார்வதி! சூரியன் காணப்பட்டுக்கொண்டே யிருக்கையில், எந்த நீர் மேகமின்றி ஆகாசத்தினின்று விழுகின்றதோ அதுதான் ஆகாச கங்காசலமென்று அறிவாய். அன்றியும், கார்த்திகை முதலான ஒற்றைப்பட்ட நட்சத்திரங்களாலே சூரியன் விளங்கிக் கொண்டேயிருக்க ஆகாசத்தினின்றும் விழுகின்ற தீர்த்தமானது திக்குக்கசங்களினாலே வருஷிக்கப் படுகிற ஆகாச கங்காசலமென்று அறியவும், உரோகணி முதலான இரட்டைப்பட்ட நட்சத்திரங்களாலே சூரியன் பிரகாசிக்கையில் மேகமில்லாமல் வானத்தினின்றும் விழுகின்ற தண்ணீரை சூரியன் பெய்யும் ஆகாச கங்காசலமென்று அறியவும். எந்தத் தண்ணீரானது மேகங்களினாலே பெய்யப்படுகின்றதோ அது பிராணிகளின் பிழைப்புக்காக தாவரங்களைவளர்க்கும் அமுதமென்றும் சொல்லப்படும். இவ்விதமாக மழையினாலே ஔஷதிகள் பயன் கொடுக்கும்படி வளர்க்கப்பட்டனவாகி நிற்க; அவைகளைக் கொண்டு சாத்திரக் கண்ணையுடைய மனிதர் வேத விதிப்படி பலவகைப்பட்ட எக்கியங்களைச்செய்து தேவதைகளைத் திருத்தி பண்ணுகிறார்கள்; இவ்விதமாய் யாகங்களும் வேதங்களும் பிராமணாதி வருணங்களும் தேவதைகளும் பசுபட்சி முதலாகிய இந்த உலகமெல்லாம் மழையினாலே விளக்கப்பட்டு வருகின்றன; அன்னபானாதிகட்கு மழையே ஆதாரம். மழை பெய்வதற்குச் சூரியனே ஆதாரம்; அச்சூரியனுக்கு ஆதாரமானவன் துருவன், அந்தத் துருவனுக்கு ஆதாரம் சிம்சுமார சக்கரம்; அச்சக்கரத்திற்கு ஆதாரம் ஸ்ரீமந்நாராயணன்; இப்படி ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே அந்தச் சிம்சுமாரச் சக்கரத்தின் இருதயத்திலிருந்துகொண்டு சகலப் பிராணிகளும் உய்யும்படி தாங்கிக் கொண்டிருக்கிறார்.

### ஆதித்தர் பன்னிருவரும் அவர்களுக்குச் சகாய புருடரும்.

கேளாய், பார்வதி! சூரியன் சஞ்சரிக்கிற தட்சணாயன உத்தராயண எல்லைகளின் நடுவாகிய கிராந்தி விருத்தங்கள், நூற்றெண்பத்து மூன்று உள்ளன. அந்த மண்டலங்களிலே தான், சூரியன்

உத்தராயணத்தில் ஏறுவதும், தட்சணாயனத்தில் இறங்குவது மான முந்நூற்றறுபத்தாறு கதிகளினாலே ஒருவருடத்தைக் கழிக்கிறான். அந்தச் சூரியரதமானது சூரியராலும், இருடிகளாலும், கந்திருவராலும், அச்சரசுக்களாலும், இயக்கராலும், சர்ப்பங்களினாலும், இராக்கதராலும், ஏற்பட்டிருக்கும். இப்படி இவ்வேழு கணங்களும் ஒவ்வொரு மாதமும் வரும் விதஞ்சொல்லுகிறேன்.

சித்திரை மாதப் பிரவேசரதத்தில் தாதா என்னும் சூரியனும், கிருதத்தலையென்னும் அச்சரசும், புலத்தியர் யென்னும்இருடியும், வாசுகியென்னும் சர்ப்பமும், இரதமிருத்து வென்னும் இயக்கனும், ஏதியென்னும் இராக்கதனும், தும்புருவென்னும் கந்திருவனும். வசித்து நடத்துவார்கள்.

வைகாசி மாதத்தில் அயர்மாவென்னும் சூரியனும், புலகன் என்னும் இருடியும், தஞ்சிதத்தலையென்னும் அச்சரசும், மாஜேன சா என்னும் இயக்கனும் - கச்சவீரனென்னும் சர்ப்பமும் - நாரதனென்னுங் கந்திருவனும்-பிரகேதி என்னும் இராக்கதனும் வசிப்பார்கள்.

ஆனி மாதத்தில் மித்திரனென்னும் சூரியனும்,அத்திரி இருடி தக்க சர்ப்பம்,எவுருகேய ராக்கதன், மேனகாச்சரதி-ஹாஹாகந்திருவன்-இரதசுவயன இயக்கன் இவ் ஏழுபேரும் இருந்து நடத்துவார்கள்.

ஆடிமாதத்தில் வருணனென்னும் சூரியனும்,வசிட்ட இருடி சகஜனியை அச்சரசு-ஹூஹூ கந்திருவன்-நாகமென்னும் சர்ப்பம் இரதராக்கதன்-சித்திரஇயக்கன் இவ் எழுவரும் வசிக்கிறார்கள்.

ஆவணிமாதத்தில் இந்திரனென்னும் சூரியனும் - விசுவாவசு கந்திருவனும் - சுரோதாவென்னும் இயக்கனும்-ஏலா புத்திரனென்னும் சர்ப்பமும் - அங்கிரசு என்னும் இருடியும் பிரமலோசையென்னும் அச்சரசும்-சர்ப்பியென்னும்-இராக்கதனும்-இருந்து நடத்துவார்கள்.

புரட்டாசி மாதத்தில் விவசுவான் என்னும் சூரியனும்-பிருகு இருடி-அனுமிலோசா அச்சரசு-சங்கபால சர்ப்பம்-வியரக்கிரஇராக்கதன்-உக்கிரசேன கந்திருவன்-ஆபூரண இயக்கன் இவர்கள் இருந்து நடத்துவார்கள்.

ஐப்பிசி மாதத்தில் பூஷா என்னும் சூரியனும்-சுருசு என்னும் கந்திருவன்-வாதராக்கதன் - தனஞ்சய சர்ப்பம் - கவுதம இருடி-

திருதாசி என்னும் அச்சரசு - சுவேணயக்கன் இவர்கள் வாசமாயிருப்பார்கள்.

கார்த்திகை மாதத்தில் பர்ச்சனியென்னும் சூரியனும்-வசுவாவசுவென்னும் கந்திருவன்-பரத்துவாச இருடி - ஐராவதசர்ப்பம்-விசுவாசி அச்சரசு-சேனசித்து இயக்கன் -ஆபரராக்கதன் - ஆகிய இவர்கள் வாசஞ்செய்வார்கள்.

மார்கழிமாதத்தில் அச்சுனென்னும் சூரியனும்-காசிப இருடி தார்க்க இயக்கன்-மகாபத்தும் சர்ப்பம்-விர்த்தியுத்து இராக்கதன் சித்திரசேன கந்திருவன்-ஊர்வசியென்னும் அச்சரசு-ஆகிய இவர்கள் இருப்பார்கள்.

தைமாதத்தில் புகன் என்னும் சூரியன்-கிரதுஎன்னும் இருடி ஊர்ணுபுவென்னும் கந்திருவன் - சுபூர்சராக்கதன்-கார்க்கோடக சர்ப்பம்-அரிட்டநேமியென்னும்-இயக்கன் பூர்வசித்தியென்னும் அச்சரசு-இவர்கள் இருப்பார்கள்.

மாசிமாதத்தில் துவஷ்டா என்னும் சூரியனும்-ஜமதக்கினி இருடி-திலோர்த்தமையென்னும் அச்சரசு-கம்பளசர்ப்பம் - பிரமாபேதராக்கதன் இருதசித்து இயக்கன்-திருதராஷ்டிர கந்திருவன்-இவ் எழுவரும் வசிக்கிறார்கள்.

பங்குனிமாதத்தில் விஷ்ணு என்னும் சூரியனும் - விசுவாமித்திர இருடி ரம்பையென்னும் அச்சரசு-சூரியவாச்சசு என்னும் கந்திருவன்-சத்தியசித்து என்னும் இயக்கன் - அசுவதாரனென்னும் சர்ப்பம் எக்கியாபேத இராக்கதன் இவ் எழுவரும் வாசஞ்செய்வார்கள்.

கேட்டாயோ கௌரியே! இப்படி ஒவ்வொரு மாதத்திற்கு எவ்வெழுவராக இவர்களெல்லாம் ஸ்ரீவிஷ்ணு சக்தியினாலே வியாபிக்கப்பட்டு உலோகப் பிரகாச நிமித்தியமாகச் சூரியரதத்தில் இருக்கின்றார்கள். இவர்களுடைய செய்கைகளைச்சொல்லுகிறேன். அந்த மண்டலத்தில் பிரகாசிக்கிற சூரியனுக்கு ஒளிபெருகும்படி இருடிகள் துதிக்கிறார்கள்; கந்திருவர் கானஞ் செய்கிறார்கள்; அச்சரப்பெண்கள் ஆடுகிறார்கள்; இராக்கதர் சூரியன் பின்னே செல்லுகின்றார்கள்; சர்ப்பங்கள் சுமக்கின்றன; இயக்கர் கடிவாள முதலானவற்றைத் தாங்கிப் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள்; இவர்களல்லாமல் வாலகில்லியர் என்னும் மகாரிஷிகள் எப்போதும் சூரியனைச் சூழ்ந்து உபாசித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படி சூரிய

மண்டலத்திலே வாசஞ்செய்கிற ஏழுகணங்களும் அந்தந்தச் சமயங்களிலே பனி-வெப்பம்-தண்ணீர் இவைகளைப் பெய்வதற்குக் காரணமாக இருக்கின்றனர்களென்று அறியக்கடவை.

## கிரியா விசேடம்.

இப்படி சிவபெருமான் அருளிச்செய்ததைக்கேட்டு எமது அன்னையாகிய பார்வதியம்மை வினவுகின்றாள்: "ஓ சுவாமி! சூரிய மண்டலத்தில் பனி-வெப்பம்-மழை இவற்றிற்குக் காரணமாக ஏழு கணங்களிருக்கின்றனவென்றும் அந்தக் கந்திருவர்-இயக்கர்-இராக்கதர்-முனிவர்-வாலகில்லியர்-அச்சரசுகள்-நாகர்- இவர்களுடைய தொழில் இன்னின்ன என்றும் தேவரீர் அருளிச் செய்ததைக் கேட்டறிந்தேன். ஆனால், சூரியனுடைய தொழில் யாதென்பதை அருளிச்செய்யவில்லையே. அந்தக் கணங்களாலே பனி-வெப்பம்-தண்ணீர் இவைகள் பொழியுமானால் சூரியனுக்கு காரியமென்ன? சூரியனாலே மழை உண்டாகிறதென்று முன்னம் அருளிச்செய்தீரே! அன்றியும், சனங்கள் சூரியன் உதயமாகி உச்சியில்வந்து அத்தமிக்கிறானென்று சொல்லுகிறார்களே! இப்படிப்பட்ட செய்கைகள் இந்த ஏழுகணங்களுக்கும் பொதுவாகவே இருக்குமானால் சூரியனைச் சிறப்பாய்ச் சொல்லுவது என்ன? இந்த விவரம் அருளிச் செய்யவேண்டும் என்றுகேட்கச் சிவபெருமான் அருளிச்செய்கின்றார். "ஓ பார்வதி! நீகேட்ட விடயங்களுக்குச் சமாதானம் சொல்லுகின்றேன் கேளாய்." அந்த மண்டலத்தில் வாசஞ்செய்கிற ஆதித்தன் முதலான கணங்களேழிலும் நடுமையமாய் நின்ற ஆதித்தனே மூலபுருடனாகும். ஏனெனில், இருக்கு-எசுர்-சாமமென்னும் மூன்றுவேத வடிவாகி விசேடமாகிய ஸ்ரீவிஷ்ணு சத்தியே சூரிய உருவமாகிப் பிரகாசித்துக்கொண்டு காய்வதுமல்லாமல், உலகத்தின் பாவச் செய்கைகளைப் போக்கிக்கொண்டிருக்கின்றன என்றறிவாய். சகல உலகத்தையும் காப்பவனும் திதியை நடத்துகிற ஸ்ரீவிஷ்ணு மூர்த்தியின் சத்தியே இருக்கு - எசுர் - சாமமென்னும் மூன்று வேத உருவமாகிய சூரியனுடைய உள்ளே இருக்கின்றது. அந்தந்த மாதத்தில் வருகிற சூரியனிடத்திலே திரிவேதமயமான ஸ்ரீவிஷ்ணு சத்தியானது பிரவேசித்து விளங்குகிறது; விடியற்காலத்திலே இருக்குகளும் மத்தியானகாலத்திலே எசுர்க்களும் சாயங்காலத்திலே சாமங்களும் சூரியசரீரகனாய்ச் சூரியனுக்குள்ளே விளங்குகிற ஸ்ரீவிஷ்ணுவை மூன்று வேதங்களும் துதிக்கின்றன. இந்த இருக்கு முதலிய மூன்று வேதங்களும் ஸ்ரீவிஷ்ணுவுக்குச் சரீரமாயிருக்கின்றமையால் விஷ்ணு சத்தியானது சூரி

பரூக்குள்ளே மாத்திரமன்று, பிரமாதிகளுக்குள்ளும் பிரவேசித்து அந்தக் காரியங்களை நடத்துகின்றது. கேளாய். பார்வதி! சிருட்டியாதியில் இருக்கு வேதமயமானது பிரமனுகவும் திதியிலே எசர்வேத மயமான சிவமாகவும் ஸ்ரீமந்நாராயணனுடைய சத்தியானது பிரகாசிக்கின்றது ஆதலால், என் சம்பந்தமான சாமத் தொனியானது மற்ற வேதங்கள் ஓதும்போது, ஓதக்கூடாமையாலே அது அசுத்தமான தேசகாலாதிகளில் சம்பந்தப்பட்டதை பரிசுத்த வஸ்துகளைப்போல் மிகவும் சுத்தமென்றெண்ணப்படுகிறது. இவ்வாறு மூன்றுவேத உருவமான ஸ்ரீவிஷ்ணுவினுடைய சுத்தசாத்விக சத்தியானது தன் சரீரமாயிருக்கிற ஏழு கணங்களுக்குள்ளே சூரியனிடத்திலே விசேஷித்துப் பிரவேசித்திருக்கிறதினாலே சூரியன் விசேஷமாய்ப் பிரகாசித்துக்கொண்டு உலகத்திலுண்டான அந்தகாரங்களையெல்லாம் நாசஞ்செய்கிறான்.

இப்படிக்கு வேதமயமான ஸ்ரீவிஷ்ணுசத்தியின் அனுப்பிரவேசாதிசயத்தினாலே சூரியன் பிரதானமானதைப்பற்றியே அச்சூரியனை இருடிகள் துதித்துக்கொண்டும் கந்திருவர் பாடிக்கொண்டும் அரம்பையர் ஆட்டத்தினால் களிப்பித்துக்கொண்டும் இராக்கதர் பின்தொடர்ந்து கொண்டும், நாகர் சுமந்து கொண்டும் இயக்கர் கயிற்றைப்பிடிப்பதினால் சேவித்துக்கொண்டும் வாலகில்லியர் உபாசித்துக்கொண்டும் வருகிறார்கள். அந்த மண்டலத்திலே சத்தி சொரூபத்தைத் தரித்திருக்கிற ஸ்ரீ விஷ்ணுவானவர் சத்தகணங்களைப்போல தோன்றுவதுமில்லை; அழிவதுமில்லை; அந்த சத்த கணமும் ஸ்ரீமகா விஷ்ணுவின் மாயாசத்திபெற்ற அனுப்பிரவேச விதம் எப்படியென்றால், ஒரு கம்பத்திலிருக்கிற கண்ணாடிக்குச் சமீபத்தில் எவனெவன் வருகின்றானே அவனவனெல்லாம் தன்னுடைய நிழலை அக்கண்ணாடியிற் காணும்படி அதன் காந்தியை அடைவதுபோலே, அம்மண்டலத்திலே திரமாயிருக்கிற விஷ்ணு சத்தியை அங்கே மாதந்தோறும் வருகிற சூரியர் அடைகின்றார். அப்படிப்பட்ட சூரியன், பிதிர் - தேவதைகள் - மனிதர் முதலானோரைத் திருத்தி செய்துக்கொண்டு இராப்பகலுக்குக் காரணமாய்ச் சுற்றிக்கொண்டிருக்கிறான். பிதிரர் முதலானோருக்குத் திருத்திசெய்யும் விதம் எப்படியென்றால், சூரியகிரணப் பிரபாவத்தினாலே நிறைக்கப்பட்டு அமிர்தமயமாயும் இருக்கிற சந்திரனைக் கிருஷ்ண பக்ஷத்திலே அக்கினிமுதலான தேவதைகள் ஒவ்வொரு கலையாகப் பானஞ் செய்கிறார்கள். இப்படி சதுர்த்தசி வரையில் தேவதைகள் பானஞ்செய்து மிகுந்திருக்கிற இரண்டு கலைகளுள்

ஒன்றை அமாவாசையில் பிதிர் பானஞ்செய்கிறார்கள். இதுதான் அவர்கள் திருத்தியடையும் விதமென்று அறிவாய். பூமியிலிருந்து தன் கிரணங்களினாலே இழுக்கப்படும் இரசத்தை மறுபடியும் மழையாகப் பொழிந்து பயிர்களை விருத்திசெய்து மனிதர் முதலானவரை திருத்திசெய்கிறது சூரியனென்று முன்னமேதெரிவித்திருக்கின்றேனல்லவா? கேளாய் பார்வதி! இவ்விதமாய்ச் சூரிய பகவான தேவர்களுக்குப் பக்கத்திருத்தியும் பிதிர்களுக்கு மாசதிருத்தியும் மனிதர் முதலானவருக்கு தினதிருத்தியும் செய்துக்கொண்டு விளங்குகின்றான்.

## சந்திரமண்டலச் சிறப்பு.

சிவபெருமான் அருளிச்செய்கிறார், கேளாய் பெண்ணே பார்வதி! சந்திரனுடைய இரதமானது மூன்று சக்கரங்களை யுடையதாய் முல்லைப்பூவன்னமான பத்துக்குதிரைகள் இடப்பக்கம் வலப்பக்கங்களில் கட்டப்பெற்றதா யிருக்கின்றது. துருவனை ஆதாரமாகக்கொண்டு வேகமுள்ளதாயு மிருக்கின்றது. அத்தேரினாலே சந்திரன் நாகவீதி முதலான வீதிகளில் அடைந்திருக்கும் நட்சத்திரங்களிலே சஞ்சரித்துவருகிறான். சூரியக்கிரணங்களுக்கு எப்படியோ அப்படியே அந்தச் சந்திரனுக்கும் உதயாதி காலங்களிலே குறைவுவளர்ச்சியாகிய முறை உண்டு. சூரியரதத்தின் அசுவங்களைப்போலே சலத்திற் பிறந்த அந்தச் சந்திரரதத்தின் அசுவங்களும் கற்பத்தின் ஆதியிலே ஒரேதரம் இரதத்தில் கட்டப்பட்டு அந்தக் கற்பத்தின் முடிவுவரைக்கும் வசித்துக்கொண்டிருக்கின்றன. தேவதைகளாலே பானஞ்செய்யப் படுவதால்தினத்திற்கு ஒரு கலையாகக் குறைபட்டு முடிவில் ஒரேகலையோடு நிற்கின்றனன் சந்திரன். அதனை குறைமதியமென்றும் தேய்பிறையென்றும் உலகத்தார் சொல்லுவார்கள். ஒளிமழுங்கி ஒரே கலையோடு நிற்கின்ற சந்திரனைச் சூரியனானவன் தனது கிரணங்கள் ஒவ்வொன்றினாலும் ஒவ்வொருகலையாக முன்புதேவர்கள்பானம் பண்ணிய முறைப்படியே வளரச் செய்கின்றமையால் ஒரு பட்சமென்னும் பதினைந்தாவது தினத்தில் பழையபடியே சோடசகலைகளையும் அடைகின்றான். அன்றையதினத்தில் பூரணசந்திரனென்றும் பௌர்ணமியென்றும் உலகத்தார் சொல்லுவார்கள். உணர்ந்தனையோ உமையவளே!

இப்படி அமரமாதத்திலே சந்திரனிடத்தில் நிறைக்கப்படுகிற அமுர்தத்தைத் தேவதைகள் பானஞ் செய்கிறார்கள். எனெ

னில் அவர்கள் அமுர்தத்தையே உண்பவர்களாகையால் என்றறியவும்; அந்தச் சந்திரனைப் பானம்பண்ணுகிற தேவர்கள் முப்பத்துமூன்றாயிரத்து முந்நூற்று முப்பத்து மூவரென்று அறியக்கடவாய். இவ்வாறு தேவர்களாலே பானஞ்செய்யப்பட்டு இரண்டேகலைகள் மிகுந்தவனாய்ச் சந்திரன் சூரியகிரணங்களில் மறைவதினாலே சூரியமண்டலத்தில் பிரவேசித்தவன்போலாகி அரைகிரகணத்தில் வாசஞ்செய்கிறான்; அதனாலே அந்தநாளை அமாவாசை யென்னப்படும். அந்தநாளில் இராப்பகல்களில் சந்திரன்முங்கித் தண்ணீரிலும், பிந்திக்கொடி முதலானவைகளிலிருந்து பின்புமுறையே சூரியனை அடைகிறான்; ஆனதினாலே, அந்தநாளில் எவனாகிலும் கொடி முதலியவைகளைச்சேதித்தாலும் இலையை உதிர்த்தாலும் பிரமஹத்திசெய்த பாவத்தை அடைவான். காலரூபமான பதினைந்தாம் பங்கினாலே சிறிது மிகுந்திருக்கிற அமாவாசையின் அபரான்னத்திலே குறைந்தவனான அந்தச் சந்திரனைப் பிதுரர் அமுர்தபானத்திற்காக உபாசித்து அமுர்தமயமான அந்தப்பதினைந்தாம் கலையைப் பானஞ் செய்கிறார்கள். சவுமிய ரென்றும், பர்ஹிதரென்றும், அக்கினிஷ் வாத்தரென்றும்-மூன்று பிரிவாயிருக்கும் பிதுரர் அமாவாசையிலே சந்திர கிரணத்தினின்றும் ஒழுகுகின்ற அமுர்தத்தை உண்டு மேண்மையான மாசத்திருத்தியை அடைகிறார்கள். இவ்விதமாகச் சந்திரன் அமுத மயங்களாயும் குளிர்ச்சி புள்ளவைகளாயுமிருக்கிற ஜலபரமாணுக்களாலே சுக்கில பக்கத்தில் பிதுர்களையும் புல்-பூண்டு-கொடி - செடி முதலானவைகளையும் உண்டாக்குவதினாலேயும், தனது கலைகளாகிய ஒளியினால் உலகமுழுதும் பிரகாசிக்கச் செய்வதினாலேயும், மனிதர் மிருகம் பட்சி முதலானவைகளையும் திருத்தி செய்துக்கொண்டு வருகின்றான்.

## புதன் முதலிய கிரக ரதம்.

இந்தச் சந்திரன் புத்திரனாண புதனுடைய இரதமான துவாயு அக்கினி இவைகளினாலே பூமியிற் பிறந்ததாய், பொன்னிறமான எட்டுக் குதிரைகளோடுகூடிவரும். என்னும் முன் தாங்கும்அவயவமும் அனுகர்ஷமென்னும் அடித்தாங்கும் அவயவமும், உபாசங்கமென்னும் உட்காரு மிடமும், பாதாகை முதலான மற்றை அவயவமுமுடைத்தாகி விளங்குகின்றது. சுக்கிரனுடையஇரதமும்இப்படியே அவய வாலங்காரங்களைப் பெற்றதாய் எட்டுக்குதிரைகள் கட்டினதாய் மிகப் பெரிதாய்ப் பொன்மயமாய் விளங்கும். அங்காரகனுடைய இரதமும் பெரிதாய் அக்கினியிற்பிறந்தவர்களாய்ப்

பதுமராகம்போல் சிவந்திருக்கிற எட்டுக் குதிரைகள் கட்டப்பெற்றதாய் பொன்மயமாகி விளங்குகிற பெரிய இரதத்திலேயிருந்துக்கொண்டு பிரகற்பதியானவர் ஒவ்வொருராசியில் ஒவ்வொரு வருஷ மிருக்கிறர். ஆகாசத்திற் பிறந்த சித்திரவன்னமான இரதத்திலேறிக்கொண்டு சனிபானவன் மெல்ல மெல்ல சஞ்சரிக்கிறன். இராகுவின் தேரானது சிறிது வெண்ணிற முடையதாய் வண்டின் நிறமுள்ள எட்டுக் குதிரைகள் கட்டப்பெற்றதா யிருக்கின்றது; இந்த இராகுவானவன் இப்படிப்பட்ட இரதத்தோடு சூரியனுக்குமேலே அந்தகாரமான மூன்றும் தானத்திற் சஞ்சரித்துக்கொண்டு பருவகாலங்களிலே அங்கிருந்து திரும்பிப் பூமி முதலான வைகளின் சாயையிலே பிரவேசித்துச் சூரிய சந்திரர்களை மறைக்கிறதினுல் அந்தத் தினத்தை முறைப்படி சூரியக் கிரகணமென்றும், சந்திர கிரகணமென்றும் உலகத்தார்சொல்லுவார்கள். அன்றியும், இராப்பகல் விளங்கும் கடவுளரென்ற காட்சிப் பிரமணத்தாலும், உலகினர் யாவரும் அன்றையதினம் கிரகணம் பிடித்ததுமுதல் சர்ப்பங்கள் விடுகிறவரையில் அன்னபானுதிகளை நீக்கினவர்களாய் அதர்வண வேதவாக்கியங்களை யூதியிருந்து முடிவில் ஆழியில் மூழ்கிச் சிரவணஞ்செய்து மீண்டிரோ கடவுளரேயென்று வேண்டுதலுடையவராய் விவகாரத்தை யடைவார். அப்படியே கேது இரதத்திற் கட்டியிருக்கிற குதிரைகள் எட்டு; அவை செத்தை கொளுத்தினபுகை வன்னமாயும் அரக்கு இரசத்தின் வன்ன முடையவைகளாயு மிருக்கும்; இக்கேதுவும் இராகுவைப் போலவே மேற்படி கிரகண காரணமாம்.

இவ்விதமாய்ச் சூரியன் முதலான நவக்கிரகங்களுடைய இரதங்களிருக்கும் விதத்தை உனக்குத் தெரியச்சொன்னேன். இந்தக் கிரக நட்சத்திரங்களுடைய மண்டலங்களெல்லாம் வாயுரூபமான கயிற்றினுலே துருவனிடத்திலே கட்டப்பட்டுத் தங்கள்தங்களுக்கு ஏற்பட்டிருக்கிற சாரத்தின்படி சுற்றிக்கொண்டிருக்கின்றன. ஆகாசத்திலுண்டான மண்டலங்க ளத்தனையும் காற்றுக்கயிறுகளினுலே கட்டப்பட்டுக் கிழக்கு மேற்காகத் தாங்களும் சுற்றிக்கொண்டே அச்செகத்தையும் சுற்றுவிப்பதுபோல் தாங்களும் சுற்றிக்கொண்டு தங்களுக்கு ஆதாரமான துருவனையும் சுற்றுவிக்கின்றன. அன்றியும் இந்தக் கிரகமுதலானவை யெல்லாம் காற்றின் வடிவான சக்கிரத்தினுலே தினந்தோறும் ஏவப்பட்டுக் கொள்ளிக்கட்டையானது சக்கரம்போலக் காணப்பட்டுச் சுழல்வதுபோலே சுழன்றுகொண்டிருக்கின்றன. ஆதலால், அந்தக் காற்றுக்குப் பிரவாமமென்

திருப்பேர் உண்டாயிருக்கின்றது. இவை நிற்க, முன்பு நான் சிம்சுமாரச் சிருதியான துருவாதாரரூபமொன்று சொன்னேனே அதிலிருக்கும் விதத்தை நன்றாய்க்கேள். அந்த சொரூபத்தைக் காண்கிறவன்; அன்று பகல்செய்த பாவத்தினின்றும் விடுபடுவதுமன்றி அந்தச் சிம்சுமாரசக்கரத்தில் எத்தனை நட்சத்திரங்கள் சேர்ந்திருக்கின்றனவோ அத்தனை வருடங்களினளவும் சுகமாகச் சீவித்திருப்பான். நட்சத்திரரூபிகளான சில தேவதைகள் அதன் அவயவமாக விருப்பார்கள். அந்த விவரஞ் சொல்லுகிறேன்; அந்த சிம்சுமாரத்திற்கு உத்தபாதன் மேல்வாயிலிலும், எக்கியன் கீழ்வாயிலிலும், தருமன் சிரத்திலும், நாராயணன் இருதயத்திலும், அசுவினிதேவதைகள் கால்களிலும், வருணனும் அயர்மாவும்பின்தொடைகளிலும், சம்வச்சரம் குறியிலும், மித்திரன் அபானத்திலும், அக்கினியும் மகேந்திரனும் காசிபனும் துருவனும் வாலிலும் இருக்கின்றார்கள். இந்த அக்கினிமுதலான நான்கு நட்சத்திரங்களும் மற்ற அவயவங்களிலுள்ள நட்சத்திரங்களைப்போலே அத்தமிக்காமல் எப்போதும் காணப்பட்டுக்கொண்டே யிருப்பன.

ஓ பார்வதி! நீ கேட்டபடி பூமியின் இருப்பும் அதில் உள்ள பர்வதம்-சமுத்திரம் - தீவு-வருடம் முதலானவைகளின் சிறப்பும் ஆகாசத்திலிருக்கும் கிரகநட்சத்திராதிகளின் பொருப்பும் சொன்னேன், இன்னும் அதின் சுருக்கம் சொல்லுகிறேன் கேளாய். விஷ்ணுவே யானுகியும் யானே விஷ்ணுவாகியு மிருக்கிற எமது சரீரமானது சலத்தினின்றும் தாமரைப்பூப்போலே பூமியானது பருவத சமுத்திராதிகளோடுகூட உண்டாயிற்று; ஆனதால், இந்தப்பூமியும் எம்முடைய சரீரமேயாம். இதுமாத்திரமேயன்று; சூரியாதிசோதிகளும் பூமிமுதலான உலோகங்களும், வனங்களும், மலைகளும்-திசைகளும்-நதிகளும்-சமுத்திரங்களும் என்றும் உள்ளனவாகச் சொல்லத்தக்க அசித்து யாவும் எம்மிருவர் மயமான சரீரங்களாயிருக்கின்றன; ஞானமே வடிவான சகலசீவன்களையும் சரீரமாகக்கொண்டிருக்கிற யான் சுத்தசொரூபமல்லது தேவமனுஷ்யாதிசொரூபமன்று. ஆகையால், பருவத சமுத்திரபூமியாதிரூபபேதங்களெல்லாம் சீவன்களுடைய கருமவசத்தினுலுண்டான ஞானபேதத்தைப் பற்றியவையே என்றுணரவர்வாய். எப்போது இப்படிப்பட்ட அஞ்ஞான ஹேதுவான கருமம் குறைபடுமோ அப்போது ஞானமயமான தன் சொரூபம் சுத்தமான தாகத்தோன்றச் சகலமும் கருமமூலமான நினைப்பின் பேதத்தாலே வெவ்வேறு வண்ணமாகத் தோன்றியதே யல்லாமல் சுபாவமாய் அவ்

வத்துக்களில் அந்தப் பேதங்களே இருக்கமாட்டா. ஞானமயமான வத்துவே திரமாகையாலே (ஆஸ்தி) 'இருக்கிறது - என்று உள்ளபொருளாய்ச் சொல்லப்படும். ஞானமில்லாத சடமெல்லாம் மாறிப்போம் ஆகையால், (நாஸ்தி)' இல்லை-என்ற பொருளாகச் சொல்லப்படும். ஏனெனில், ஆதியும் மத்தியமும் அந்தமு மில்லாதது எப்போதும் மாறாமல் ஒரே உருவத்தை யுடையதுமான வஸ்துஆத்தும சொரூபத்தைவிடவேறொன்றும் இல்லை. நாமரூபங்களால் வேறுபாட்டையும் மாறுபாட்டையும் அடைவதுபோலத் தோன்றினாலும் வத்து ஒன்றே நித்தியமென்பதை விளக்கிக்காட்டுகிறேன். கேளாய் பெண்ணே! பிருதிவியானது முதலில் மண்ணுருண்டையாயிருந்து, பின்பு குடமாகி, அதன் பின்பு அது உடைந்து ஓடாகி அவ் ஓடு, சிறுதுண்டாகிப் பொடியாகி, அப்புறம் தூளாகி, அதன்பின் அணுவாக மாறுகின்றது.

இவையெல்லாம் ஆத்தும சொரூப எதார்த்தந் தெரியாமல் தேவர் மனிதர் முதலிய உருவமாக நிச்சயித்துக்கொண்டவர்களுக்குத் தங்களால் அநுபவிக்கப்படுகிற வெவ்வேறு பொருளாகத் தோன்றுகின்றனவன்றோ? இதையோசித்துப்பார்த்து அவற்றுள் எதை வஸ்துவென்று சொல்லலாமென நிச்சயிக்கு மிடத்து ஞானகாரணமான ஆன்மவத்து தவிர வேறேயாதும் இருக்கிறதென்று சொல்லத்தக்க பொருள் இல்லை. பார்த்தாயா? அந்த ஞானகாரணமோ அவரவருடைய கரும பேதத்தினாலே மாறுபட்ட சித்தமுடைய சனங்களுக்குத் தேவாதி சரீரப் பிரவேசத்தினாலே அந்தந்த உருவமாகத் தோன்றுகின்றது. ஆத்துமசொரூபமானது சுபாவத்தில் கரும மில்லாதது அதனால்வரும் பிரகிருதி சம்பந்தமான மனமில்லையாகையால் அதைஅநுசரித்துண்டாகத் தக்க சோகமோக லோபாதிதோஷ, சம்பந்தமில்லாததும், தேய்தல்-வளர்தல் முதலியவை இல்லாமல் ஒரே உருவமானதுமாக இருக்கின்றது. இப்படிப்பட்ட ஞானரூபமான ஆத்துமசொரூபம் ஸ்ரீவாசுதேவனுடைய சரீரமாகையாலே தன்மயமாயிருக்கின்றது. ஆதலால் அந்த ஸ்ரீவாசுதேவனும் யானு மல்லாதவத்து ஒன்று மில்லையன்றோ? ஓ பார்வதி! இவ்விதமாய் ஞானசொரூபமொன்றே நித்தியமாயிருக்கையாலே சத்திய பதார்த்தமென்றும் மற்றது மாறி மாறி அழிகையாலே அசத்தியமென்றும் எதார்த்தத்தை யுனக்கு நான் நன்றாய்த் தெரிவித்தேன்.

### அண்ட அளவின் சுருக்கம்.

ஓ பெண்ணே! இவ்வாறு பூகோளமும் ககோளமும் சொன்னேன். ஆனால் சோதிடசாத்திரங்களிற் சொல்லப்பட்ட விதமோ

வேறு என்னவெனில், பூமியானது விளாங்கனியைப்போல முற்றும் உருண்டை வடிவுடையதாய், இரண்டுபங்கு சமுத்திரஞ் சூழ்ந்ததாய் இடையில் தெற்கிலிருந்து வடக்குவரையிலும் ஒருகாராசமுருவம்போ லிருப்பதுபோலே மேருபர்வதம் நிற்கப்பெற்றதாய், ஒரு ஆதாரமுமில்லாமல் அந்தரத்திலிருக்கிறது. இதன் சுற்றளவு நாலாயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்தேழு காதமாகும். முற்றளவு ஏழுலட்சத்து எண்பத்தையாயிரத்து முந்நூற்று ஐம்பத்து நான்கு யோசனையா யிருக்கிறது. பூமியின் மத்திபம் இலங்கை அது முதல் தொண்ணூறு பாகங்களில் ஒவ்வொருபட்டணமாக மூன்று பட்டணங்கள் சூரிய உதய அத்தமனமத்தியான அர்த்தராத்திரங்களைக் குறிக்கு மிடங்களா யிருக்கின்றன ஆகப்பூமி முற்நூற்றறுபது பாகமாகப்பிரிக்கப்படும். எங்கிருந்து கணக்கிட்டாலும் இப்படிச் சமானமான முற்நூற்றறுபது பாகங்களேயா இருக்கும். இப்பூமியில் வடமுனைக்குச் சுமேருவென்றும் தென்முனைக்கு மேருவென்றும் பெயர் சொல்லப்படும். இப்பூமியின் மத்திபதானமாகிய இலங்கைக்கு 24-பாகங்களுள்ள இடத்தில் உத்தராயணரேகை உண்டு. அப்படியேதெற்கில் 24-பாகங்களுள்ள இடத்தில் தட்சணாயண ரேகை உண்டு. இச்சமுத்திரத்திலேதானே பிரிவுகள் இந்தப் பூமிக்குமேல் சந்திரமண்டலம், அதன்மேல் புதமண்டலம், அதன்மேல் சுக்கிரமண்டலம், அதன்மேல் சூரியமண்டலம், அதன்மேல் அங்காரகமண்டலம், அதன்மேல் பிரகற்பதி மண்டலம், அதன்மேல் சனிமண்டலம், இவையெல்லாவற்றிற்கும்மேல் நட்சத்திரமண்டல மிருக்கின்றது;இவையெல்லாம் பூமியைச்சுற்றித் திரிந்துகொண்டிருக்கும். ஒவ்வொரு கிரகமும் தன் தன் மார்க்கத்தில் நாள் ஒன்றுக்கு ஒருலட்சத்துப் பதினெண்ணாயிரத்து ஐந்நூற் றெண்பத்தெட்டு யோசனை தூரமே ஒடும். ஆனால், அந்தந்த மார்க்கவட்டங்களின் அளவினாலே கிரகங்களுடைய சிறு சக்கரம் யோககாலம் சிறிதும் பெரிதுமாய் வித்தியாசப்பட்டிருக்கும். ஆகாசமண்டலமெல்லாம் பன்னிரண்டு இராசிகளாகவும், ஒவ்வொரு ராசியும் முப்பது பாகங்களாகவும், ஒவ்வொரு பாகம் அறுபது கலைகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கும்; ஆகையால் ஒவ்வொருகிரகமார்க்க சக்கரமும் ஏற்றபடி சிறியவையும் பெரியவையுமான இராசியாகக் கலைகளென்னும் பிரிவுகளையுடையனவாயிருக்கும். இனிச் சந்திரசாயை, நேராய்ச் சூரியனை மறைக்கும்போது சூரிய கிரகணமும், பூசாயை சந்திரனை மறைக்கும்போது சந்திர கிரகணமும் உண்டாகின்றன. சந்திரன் முத

லான சகல கிரக நட்சத்திரங்களுக்கும் சூரியகிரகண சம்பந்தத்தி னாலேயே பிரகாச முண்டாகின்றபடியால் சந்திரன் சூரியனை விட்டுத் திரும்பத் திரும்பச் சந்திரகாந்தி பூமியிலிருக்கிறவர்களுக்குப் படிப்படியாய் விளங்குகிறதினாலே அந்தக் காலம் வளர்பிறை யென்றும்-சுக்கில பக்ஷமென்றும் சொல்லப்படும். மறுபடியும் சூரியனைநோக்கிச் சந்திரன் செல்லச் செல்ல சனங்களுக்குச் சந்திரகாந்தி படிப்படியாய்க் குறைந்து வருவதனாலே, அக்காலம் தேய்பிறையென்றும்-கிருஷ்ண பக்ஷமென்றும் சொல்லப்படும்; சோதிடநூலும் வேதாங்கமாயிருப்பதனாலே புராணத்தைப்போல வைதிக சாத்திரமா யிருக்கின்றது. இப்படி சாத்திரத்திற்கும் அநுபவத்திற்கும் விரோதமாய்ப் பூகோள கிரகங்களைப் புராணத்திற் சொல்லியிருப்பது எனெனில்; கேளாய் ஓ பார்வதி! இவ்விஷயத்தைப்பற்றிச் சிலர் விசாரித்து எழுதி யிருப்பவர்களைச் சொல்லுகிறேன். சோதிடத்தில் பூகோள கோளங்களை விவரிப்பது வருஷ மாசபட்ச திதி நக்ஷத்திராதி சகல பேதங்களைக்கணித்து ஏற்படுத்துதற்காக புராணத்திலேயே எமது விசவரூபத்தையறிந்து அட்ட வித யோகங்களால் ஆன்மஞானிகள் யாவரும் உபாசனை செய்வதற்காக எமது விராட் அளவினாலே பூகோள அளவுகள் விசிதமாகும். பல புராண வியாக்கியாதரர்களும் புராணக்காரருக்கு வைராக்கியத்தையும் தத்துவ ஞானத்தையும் உண்டாக்குவதே உத்தேசியமான அபிப்பிராயமன்றிக் கணிதாதிகளில் அப்படிப்பட்ட அபிப்பிராயம் இல்லையென்று தாபிக்கப்பட்டிருக்கு மாதலின்புராணங்களின் காலாந்தரத்திலிருந்த பூகோளாதிகளைக் கொண்டு உபாசனார்த்தமாக உத்தேசித்து சொன்னார்களென் றறியவேண்டும். சூரியாதி சிம்சுமார சக்கிரமுதலான வன்னங்களை உபாசனைக்காகவே புராணங்களில் சொன்னதாக நேரே வியாக்யாதரர்களும் எழுதிக்கொண்டார்கள். கிருட்டிகள் கல்பந்தோறும்பேதப் பட்டிருக்கின்றன வென்றும் சாஸ்திரங்களா லறியப்படுகின்றன. இப்படிப்பட்ட ஏதுக்களால் விராட் புருடனுடைய மகிமையை விசேடமாய் விளக்கத்தக்க ஆச்சரியகரமான கோள் விசேடங்களை தூலோபாசனைக்காகவும் ஐசுவரியச் செருக்குடையார்க்குக் கிரியா வைராக்கியங்க ளுண்டாவதற்காகவும் நாம் அருளிச்செய்தேம். சோதிடநூல் கிரகசாரங்களைக் கொண்டு காலங்களைச் சரியாய் அறிவிக்க வேண்டியதற்காக பூகோள ககோள திதிகளை உள்ளபடி அறிவித்திருக்கிறேமென்று தெரிந்துக்கொள்ளவேண்டும், அன்றியும், இந்த அண்டம் அல்லது உலகினளவை அறியவேண்

டியவிதி இருபத்து நான்கு கதிரெழுத்து கொண்டது ஒரு மயிர் நுனி; மயிர்நுனி எட்டுக்கொண்டது ஒரு ஈர்; ஈர் நாலுக்கொண்டது ஒரு பேன்; பேன் எட்டுகொண்டது ஒரு நெல்லு; நெல்லு மூன்றுகொண்டது ஒரு தேவாங்குலம்; தேவாங்குலம் இருபத்து நாலுக்கொண்டது ஒரு மகாகரம்; மகாகரம் நான்குகொண்டது ஒரு தனு; தனு இரண்டுகொண்டது ஒரு தண்டம்; தண்டம் இரண்டாயிரம் கொண்டது ஒரு குரோசம் நான்குகொண்டது ஒரு யோசனை என்று இவ்வாறு அறிந்துக்கொள்ளவும், என்று அருளிச்செய்த சிவபெருமானைநோக்கி ஓ சுவாமி ! தாங்கள் விவரித்த அண்டபிண்ட பிரமாண்டங்களின் அளவையும் அவைகளுக் குட்பட்ட சூரியசந்திர கிரகங்களின் தொழிலையும் முதலான சகலமும் அறிந்தேன். இவ்வுலகத்தில் மனிதப்பிறப்பு உண்டான விதத்தையும் அதின்காரணத்தையும் கிருபைகூர்ந்து திருவாய்மலர்ந்தருள வேண்டும் என்று துதித்த பார்வதியை நோக்கிச் சிவபெருமான் சொல்லத் தொடங்கினர்.

## மானிட ஜென்ம உற்பத்தி.



விருத்தம்.

பங்கய முகத்தி னெந்தாய் பார்ப்பதி சிவத்லை நோக்கி
மங்கள வடுக்காமண்ட விண்டலத் தொடர்பை யெல்லாம்
இங்கெனக் குறைத்தீ ரையா இனிமனுப் பிறப்பே தென்னத்
திங்களை முடித்த வேணித் திகழ்பர முரைக்க லானர்.



கேளாய் பெண்ணே. பார்வதி! உலகமென்னும் அசைதலை உடைய சிறுவீட்டைக் கணிக்கு நிமித்தம் திருமால்மகனுகிய நான்முகனுக்கு தலைநாளிற்றானே கிட்டாக் கருவியாகிய தண்டமும், பாசமும் கொடுத்திருக்கின்றனம். அந்தத் தண்டத்தை நினைத்த மட்டிலே தோற்றமாகும். அந்த தண்டத்தை நோக்காமலாவது காத்திற்றாங்காமல் தாலது தானே நினைப்பானுகில், யதொரு பொருளும் சிருட்டியாகாது. ஆகையால் தண்டமென்னுங் கருவிற்கு நினைக்கும் சத்தியும் பிரமனுக்கு உண்டுபண்ணும் சத்தியும் தனித்தனியே கிடையாது. தண்டமும் பிரமனும் ஒன்றுபட ஏந்தி நோக்கும் நிமிடமே, பிரமன் நினைவில் நினைத்தபடி யெல்லாம் இமைப்போதில் தோன்றி எதிரில் நிற்கும். இஃது யெப்படியென்

ருல், இந்திரனுக்கு கற்பகத்தருவை ஈந்திருப்பதுபோல் உத்திவர்தோனுக்குத் தண்டமென்னுங் கருவியை உண்டுபண்ணும் சித்தம் கொடுத்திருக்கின்றேமென்றறிவாய். ஓ பார்வதி! இவ்வரத்திரீகமானது, நீலம் பிறந்த மேனியனுகிய திருமாலுக்கும் ஆலங்கரந்த கண்டனுகிய எனக்கும் தெரியுமேயன்றி, உனக்கும் இதுவரையும் உரைத்தேனில்லை ; மற்ற தேவர்களும் மனுக்களாகிய பாமரரும் இதை அறியமாட்டார்கள். ஆகையால், தொன்றுதொட்டு இன்றளவும் உலகிற் பலரும் தேவரிற் சிலரும் அவரவர் வினைக்கீடாக வினைவந்து உறுத்துமிடத்து அடாபாவி! பிரமதேவா! யான் யாருக்கென்செய்தேன்? எனக்கேன் இந்த விதிவிதித்தாய்? என்வதை உனக்கிடிக்காதா? உன்கோயிலிடிந்து குட்டிச்சுவராய்ப் போகாயோ? புட்பமற்று பூசையற்றுப் போகாயோ? என்று பலவாறும் வீணே பிரமனை நிந்தித்தும் புலம்புவார்கள். ஐயோ! பாவம்! ஓர் ஆன்மாவைச் சிறப்பிக்கவும் குறைப்பிக்கவும் பிரமனுல் ஆனகாரியமேயன்று. கேளாய். கௌரீ! பிரமனுக்குத் தண்டங்கொடுத்த தலை நாளிற்றனே ஓர் உத்தரவுண்டு, அஃது என்னெனில், 'ஏ பிரமா! வருவிக்கும்பொருளை விரிவிக்கக் கடவாயே யன்றி, கெருவிக்குமளவில், அன்றே உன் ஆலயமும் பூசைமுதலியதும் தகரக்கடவை' என்று யாமே பிரதிவரம் கொடுத்திருக்கின்றனம். அவ்வாறு இசைந்து தன்தொழில் நடத்த முயன்றனன்.

அண்டமும் பிண்டமும் கூடிய சர்வ உலகங்களும் ஒன்றின்மீதொன்ருய் முறையே அடுக்காகச் சிருட்டிக்கப்பட்டு மோட்சலோகத்தைக்கடந்த புறச்சுவரை பாதாளமட்டில் ஊடுருவப்பொருத்தி, மற்றவையுந் திருத்தி, ஒன்று மழியாதென்று மனமலைவு கொண்டனன். ஆனல் அடுக்கடுக்காக எத்தனையோ அண்டங்களும் மண்டலங்களும் அமைக்கப்பட்டு பின்னெங்கணும் இடமின்றி புறச்சுவரும் பொறுத்தினனே அப்போது நீர் எங்குற்றீரெனச் சந்தேகங் கொண்டாயோ? சத்தியே! அந்தச் சந்தேகத்தில் மனதைவிடாமல் ஊக்கமாய்க் கேட்பாயாக. பாதலமாகிய பூமியின் அடிப்பரப்புமுதல் மீதலமாகிய மோட்சலோகத்தின் மேற்கவிழ்ந்த புறச்சுவர்மட்டும் விரிந்த அண்டங்கள் யாவினும் பறந்து நீண்டவன் யானே; எல்லா உலகங்களும் எனது தேகத்திற்றனே இடங்கொண்டிருக்கிறது. எனது தேகமன்றி உலகமில்லை. இந்த இரகசியத்தை மாலும் மாலின்மகனும் அறியமாட்





டார்கள். இவை நிற்க; மண்-விண் இரண்டு; அண்டம் - பிண்டம் இரண்டு; அக்கினி-சலம் இரண்டு; நல்வினை-தீவினை இரண்டு; நரகம் மோட்சம் இரண்டு; விஷம் - அமுர்தம் இரண்டு; இருள் - வெளி இரண்டு; சூரியன்-சந்திரன் இரண்டு; தோற்றம்-ஒடுக்கம் இரண்டு; ஆண்-பெண் இரண்டு; சத்தி-சிவம் இரண்டு; ஆகிய இவையெல்லாம் எனது சொரூபத்தினிடமே, அரூபமாயிருந்து பெருவெளியிலூற்றும் பரவி நிற்கின்றது. இவ்வாதாரத்தைக் கொண்டே பிரமனானவன் சகல சீவராசிகளையும் சிருட்டிக்கும்போது நால்வகை யோனி எழுவகைத்தோற்றம் எண்பத்துநான்கு நூறாயிரம் பேதமான எல்லாப் பிறவிகளிலும் ஆண்-ஒன்றும், பெண்-ஒன்றுமாகச் சிருட்டிக்கப் படுகையில் ஊர்வன, நடப்பன, பறப்பன வாகிய பறவை-விலங்கு முதலிய மிருகசாதிகளுடனே-மனிதரூபத்திலும், ஆண்-ஒன்றும், பெண்-ஒன்றும் சிருட்டித்தான். அப்படி சிருட்டிக்கப்பட்ட பெண்-ஆண் இரண்டும் விலங்கினமாகிய மிருகங்களுடன் தானும் ஓர் மிருகம்போலக் காய் - கனி-கிழங்கு முதலியவற்றை ஆகாரமாகப்புசித்து மரத்தின் மீதும் கிளைகளின் மீதும் உறங்கிக் காலம் போக்கிக்கொண்டிருந்தன. ஆனால், பெண்உருவமிருந்த இடம் ஆணுக்கும் ஆண் உருவ மிருந்தயிடம் பெண்ணுக்கும் தெரியாமல் தனித்தனியே நிர்வாணிகளாக மிருகங்களோடு கூடவே சில நூற்றாண்டு கழித்தார்கள். ஓ பார்வதி! சில நூற்றாண்டு என்றால் நீண்ட வருடங்கள் ஆகிறதே! அவ்வளவு ஆயுள் மனிதருக்கு ஏதென்னும் சந்தேகமுளதோ? அந்தச் சந்தேகத்திற்கிடங்கொடாதே. பிரதான பிதாமகன் நாட்களில் மனிதர்தேவாங்குலத்தால் எழுநூறடி உயரமும், முந்நூறடி பெருமனு முள்ளவர்கள், அத்துடன் பாவமிசைத் தோருமல்லர். பெண்ணெனும் பேய்பிடித்தோரு மல்லர். விந்து பொழிந்து நெஞ்சழிந்தோரு மல்லர். உயிர்மாற்றி உண்டோருமல்லர். ஆகையால், அவர்களுக்கு ஆயுள் ஆயிரத் திருநூறாகும். இவை நிற்க; மேற்கூறியபடி சில நூற்றாண்டு வரையில் கானகத்தின் மிருகங்களோடு திரிந்திருக்கையில் ஓர் நாள் பெண்ணும்-ஆணும் சந்தித்தன. அப்படி சந்தித்த இருவரும் ஒருவரையொருவர் உற்றுநோக்கி மிகுந்தஆச்சரியமும் களிப்பும் கருணையும் உண்டாகி தன்னினம் தன்னைக்காக்கும் வேலி பயிரைக்காக்கும் என்பதுபோல அன்றுமுதல் மிருகத்தொடர்ச்சியைவிட்டு இவ்விருவரும் ஒன்றுசேர்ந்து எங்குந்திரிந்து உணவு உண்டு ஒன்றையொன்று ஆதரித்து வாழ்நாட் கழிக்கின்றபோது பெண்ணென்ற மாதை சம்பந்தப் பட்டவுடன்

கலவிக்கிடமுண்டாகி மருவி வாழ்ந்தன. இவ்வாறு இடை இடை புணரப்பெற்றமையால் ஆண்-பெண் என்னும் அருவருப்புண்டாகி ஆண் குறியென்றும் பெண் குறியென்றும் மானமேற்பட்டு நிருவாண யோக்கியதையற்று, இலை முதலிய சருகுகளை ஆடைபோன்று அரையில் உடுத்தி நாம் மனிதரென்ற தடிப்புத் தனக்குத்தானே உண்டாயிற்று. வேறு இடத்தில் உதிக்காமல் வேதாவி நோக்கத்தால் தலைப்பிறப்பாக உதித்தமையால் அந்த புருடனுக்கு சுவாயம்பு என்னும் நாமதேயமுண்டாயிற்று. அல்லது சுவாயம்பு மனுவென்று பின்வரும்மனுக்களால் வழங்கப்படுகிறது. அந்தச் சுவாயம்பு மனுவுக்கு மனைவியாகக் கிடைத்தமடந்தைக்கு சதரூபமென்னும் காரணப்பெயர் நிருமித்துக்கொண்டிருந்தார்கள்.

மேலும், இந்தச் சுவாயம்பு மனுவும் சதரூபியும் சதிபுருடகோலமாய்ச் சுகங்களை அனுபவித்து வாழுங்காலத்தில், அந்தக் கானகத்தினிடமாகத் தம்மைச் சூழ்ந்திருக்கிற ஒவ்வொரு வத்துவும் தன் கண்களுக்கு நூதனமும் ஆச்சரியமுமாய்த் தோற்றுகிற ஓடதிகளைப்பார்த்துத் தம்மனதில் தினம் தினம் இச்சையுண்டாகி எல்லாப் புல் பூண்டுகளின் புட்பங்களுடைய மணத்தினால் இன்பமேலிட்டு அவைகளினுடைய இளங்காய் செங்காய் கனிகளினுடைய ஆச்சரிய உருவம் நன்று தீங்குகளறிந்து அதிற் சிலகனிகளையுண்டு தம்முடைய பசியைத் தீர்த்துக்கொண்டு அதினால் நாவுக்குண்டாகிய உருசியைப் பருகித் தம் பிராணனைப் போஷிக்கவேண்டிய முயற்சியில் திடத்தைக் கற்பித்துக்கொண்டு மேலுந் தம்மைச் சூழ்ந்துக்கொண்டிருக்கிற ஒவ்வொரு பதார்த்தங்களினும் பல சீவர்களிட மிருந்து உண்டாகிற ஒலியையும் ஓசைகளையும் காதிற்கேட்டு மதிப்புக் கிடமாகிய சீவகாருணிய நற்குணமேலிட்டு, தினந்தோறும் தம் பசிக்கு உணவுகளைச் சேகரிப்பதில் முயன்று ஆரணியத்தில் திரிந்துகொண்டிருக்கிறபோது சிலகாலம் சென்று இவ்விருவருக்கும் மகப்பேறுண்டாகிப் பிரியவிரதனென்றும் உத்தான பாதனென்றும் சொல்லப்பட்ட இரண்டு புதல்வர்களும் ஆகுதி-தேவஹூதி-பிரசூதி-என்ற மூன்று புதல்விகளும் உதித்து நாளுக்கு நாள் செல்வமாகத் தழைத்துச் செழித்திருந்தார்கள். இக்குடும்பம் யாவரும் புசிப்புக்குவேண்டிய விலங்கு-புள்ளினம்-காய் - கனி-கிழங்கு முதலானவைகளையும் பலவிதங்களாகிய தானியங்களையும் சமைத்து உண்டுப் பசியைத் தணித்

துக்கொண்டிருந்தார்கள். இந்தப்படி காட்டிலிருக்குங் காலத்தில் யாவருக்கும் நாளோட்டத்தில் தமக்குத் தாமே தயை-சாந்தம்-பொறுமை-அறிவு-சொற்றிறமும்-கல்வித்திறமும் உண்டாகினன முதித்து, தங்களுடைய நிலைமைபைத்தாங்களே ஆராச்சிசெய்து, பிருதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாச மென்கிற பஞ்சபூதங்கள் செய்யும்படியான நன்று தீதுகளையறிந்து, மகிழ்ந்து புகழ்ந்து அனைவரும் துக்கமின்றிச் சுகமாய் வாழ்ந்துவருகிறபோது இவர்கள் ஒருவரோடொருவர் யோசித்து நாளுக்குநாள் பசிக்குதேடி உண்பதைப்பார்க்கிலும் ஆரணியத்தில் தங்கிடையாய் மேய்ந்து ஆகாரம்-நித்திரை-பயம் மைதுனம் ஆகிய நான்கு அறிவும் வகித்த செம்மறியாடு-வெள்ளாடு-ஒட்டகம்-பசு-குதிரை - கோழி-பட்சி முதலான சகல சீவன்களையும் பிடித்துக் கூண்டிற்சேர்த்து அவற்றிற்கு வேண்டிய ஆகாராதிகளைப் போட்டுக் காப்பாற்றி அவற்றுலுண்டாகும் பலனை அனுபவித்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

இப்படி யிருக்கிறபோது விண்ணிலும்-மண்ணிலும் - உண்டாயிருக்கிற சகலவிதப் பொருள்களினுடைய நிலையையும் தங்களுடைய நிலைமையும் பிரித்து உணரும்படியான கால வேற்றுமைகளையும் பஞ்ச பூதங்களுடைய நன்மை தீமைகளையும் புல்-பூண்டு காய்-கனிகள் முதலான சகல வத்துக்களினுடைய சுவகுணங்களை அறியத்தக்கக் கூர்மையுள்ள தங்கள் புத்தியை விசாலமாகப் பெருக்கி மண்ணிற் சுயமாய்ப் பலனைத் தருகிற சுவையும் பலமுந் தரத்தக்க பலவித தானியங்களைப்பார்த்து அவற்றில் இவர்கள் தங்கள் சீவனத்திற்குரிய அரிசி-கேழ்வரகு-சோளம்- கோதுமை முதலான தானியங்களைச் சேகரிக்க யோசித்துப் பயிர்செய்யத் தொடங்கித் தங்களுடைய கருத்தையும் ஜாக்கிரதையையும் ஒருவருக்கொருவர் தங்களுக்கு தாங்களே மெச்சிப் புகழ்ந்து அடங்கா மகிழ்ச்சி யடைந்திருந்தார்கள். அப்போது அவர்களுக்குச் சகல ஆகமசாத்திரகலைஞானங்களும் தனக்குத்தானே உதித்தது. பின்பு சுயம்புமனு தன் மனைவியுடன் புதல்வர்கள் இரண்டுகுடும்பமாகப் பிரிந்தார்கள். மூத்தோனாகிய பிரிய விரதன் குடும்பம் பயிர்மூல ஜீவனஞ் செய்பவர்களானார்கள்; இவர்களுக்குச் சூரிய வம்சமென்று மறை பன்னுகின்றது. இளையவனாகிய உத்தானபாதன் குடும்பம் ஆடுமாடு மந்தைகளை மேய்க்கிற இடையர்களானார்கள்; இவர்க்குச் சந்திரவம்சமென்று வேதங்கூறுகின்றது.

கேளாய் பார்வதி! இவ்விரண்டு குடும்பத்தார்களுக் குள்ளே பயிரிடுகிறவர்களுக்கு மற்றவர்கள் வேண்டிய பால் - தயிர்-நெய்-முதலியன கொடுத்துப் பதிலுக்குப் பலவித தானியங்களைப்பெற்றுக்கொள்ளுவது. இந்தப்படியாக ஒருவருடைய வத்துவை மற்றொருவருக்குக் கொடுத்து மாற்றிக்கொள்ளுகிற படியினலே வாணிக முண்டாகியது. அதினல் பயிரிடுகிறவர்களுக்குப் பூவைசியரென்றும் ஆடுமாடு மந்தைகளை மேய்க்கிறவர்களுக்குக் கோவைசியரென்றும் பெயருண்டாயிற்று, மந்தை மேய்க்கிறவர்கள் தங்களுக்குக் கிடைத்த பாலைச் சாப்பிட்டு மிகுதியைத் தயிர்தோய்த்துக் கடைந்து வெண்ணெயை நெய் காய்ச்சுவதையும்-பயிரிடுகிறவர்கள் வெல்லம் சருக்கரை இவைகளைக் கரும்பு ரசத்திலும்-பரிசத்தியிற் பஞ்சும் எள்ளிலும் முத்துக் கொட்டையிலும் எண்ணெய் உண்டாக்க இவ்வண்ணமாக ஒவ்வொரு வத்துக்களையும் பதப்படுத்துகிற குணம் இவர்களுக்குள்ளே சிலருக் குண்டாகி இதுவே தொழிலில் முயன்றிருந்தபடியால், அவர்களுக்குச் சூத்திரரென்று பெயருண்டாயிற்று.

அப்போது இருதிறத்தாராகிய பயிரிடுகிறவர்களும் மந்தை காக்கிறவர்களும் பயிரிலுண்டாகிய விளைச்சல்களுக்கும் வளர்க்கிற மிருகங்களுக்கும் துட்ட மிருகங்களாலேயும் விட செந்துக்களாலேயும்-ஆபத்து நேரிடாமலிருக்கும்பொருட்டு வாளாயுதங்களை இடையிற் றரித்துக்கொண்டு வெகுசாக்கிரதையாய்ப் பாதுகாத்துக்கொண் டிருந்தமையால் இவர்களுக்கு க்ஷத்திரியரென்று பெயருண்டாயிற்று

இதில் உத்தானபாதன் வமிசத்தோர்களில் சிலர் தங்கள்மந்தைகளை மேய்த்துக்கொண் டிருக்கிறபோது கோடைகாலமானதால் காடுபற்றிக்கொண்டு தீயெரிகிறதைப் பார்த்து ஆச்சரியப்பட்டுத் தீயடங்கித் தணிந்தபிறகுநெருங்கிப் பார்க்கிறபோது ஒவ்வொரு இடங்களில் பலவிதமான நிறமும் பசுமையும் ஒளியுள்ளதாயும் சிலவிடங்களில் மண்ணனது உருகிக் கறட்டுச்சிட்டமாகவும் மிகவும் வுறுதியும் பலமும்துவரும் கருக்குக்கூர்மையும்துருவுமுள்ளக்கருவிஉருக்குக்கட்டிகளுண்டாயிருந்தன.இவற்றைப்பார்த்து அவர்கள் 'இதுவென்னப் புதுமையாக இருக்கிறது? இவை எவ்விதமாயிப்படியாயிற்று? இதனை யோசிக்குமிடத்தில் நினைப்பதற்கரிய ஆச்சரியத்தையும் பிரமிப்பையும்உண்டாக்கச்செய்கிறது. இது மண்ணினுடைய சுபாவகுணமென்று தோன்றுகிறது தீப்பற்றி

எரிந்ததினால் இந்த மண்ணானது இப்படி பேதப்பட்டதல்லவா' என்று இதனாலென்றுபகுதிலோமென்று அவற்றைப் பரிசோதித்து பார்க்கையில் இது இரும்பென்று கருதிய மாத்திரத்திற்றானே அன்றுமுதல் இன்றளவும் அதற்கு இரும்பென்றே உலகத்தில் பேர் வழங்கிவருகிறது. மேலும் பலவித சாத்திரங்களையும் கடன் கொடுப்பதையும் கடன் வாங்குவதையும் எழுதிவைக்க எழுத்தாணியாகவும் எதிரிகளை செயிக்கவல்ல சகல ஆயுதங்களும் நன்மைக்கும் தீமைக்கும் உறவினர்க்கும் பகைவர்க்கும் காரணமாக யாவருக்கும் அகத்தியம் தேவையுள்ளதென்று அவற்றைக்கொண்டு சகல ஆயுதங்களையும் உண்டுபண்ணிப் பின்னும் பஞ்சலோகக் கருவிகளையும் பாகப் படுத்தினார்கள். இதினாலே இவர்களுக்குக் கருமாரென்று பெயருண்டாயிற்று.

மேலும் இவ்விருதிறத்தாருக்குஞ் செய்யும்படியானதொழில்களினால் கிடைக்கும் பலனாகிய பால் தயிர் நெய் எண்ணெய்தானியங்கள் முதலானவத்துக்களைவைத்துக் காப்பாற்றிவைக்கப்பாத்திரங்களும் கதம்பக்கூடு முதலாகிய பாத்திரங்கள் கிடையாதபடியால் மூங்கிற் குழாய்களிலும் சுரைக் குடுக்கைகளிலும் கொப்பரைகளிலும் சங்குமுதலான பாத்திரங்களிலும் வைத்துக் காப்பாற்றிக்கொண்டு வருகிறதேதவிர வேறு பெருத்த பாத்திரங்கள் கிடையாது. மிருகங்களுடைய தோல்களையும் மரங்களுடையஇலை சருகுகளையும் ஆசனமாகவும் உடையாகவும் கையாண்டுகொண்டு வந்தார்கள்.

அப்போது பிரியவிரதன் வமிசத்தாரில் சிலர் மண்ணினாலே பாத்திரங்களைச்செய்து வெய்யலிற் காயவைத்து அவற்றை உபயோகித்து வரும்போது வேக்காடு செய்யாமையினாலே, அவை உடைந்துபோகப்பின்னும் பாத்திரங்களைச்செய்து வைக்கோலும் விரட்டிக் கட்டைகளையுங் கூடச்சேர்த்து அடுக்கி தீயிட்டு எரித்துத் தணிந்தபிறகு பார்க்குமிடத்தில் ஒவ்வொரு பாண்டமும் வெந்து உறுதியாயிருந்தது. இவ்வாறு சூளைபோட்டுப் பாண்டஞ் செய்தவர்களுக்குக் குயவரென்று பெயருண்டாயிற்று.

இன்னும் பிரியவிரதன் வம்சத்தாரில் சிலர் சிலந்தி பூச்சியானது கூடுகட்டிக்கொண்டு நூல் இழைகளினாலே பின்னி அதின் னடுவே கோடைக்கும் வாடைக்கும் தங்கியிருப்பதற்கு அமைத்திருக்கும் சிலந்திப் பூச்சியினுடைய நுண்ணறிவைப்பார்த்து இவர்

களும் அந்தப்படியே பஞ்சிநூல் நூற்கவும் வத்திரங்களை நெய்யவும் கற்றுக்கொண்டார்கள் இத் தொழிலினால் இவர்களுக்குச் சேணியரென்றும் கைக்கோளரென்றும் இரண்டு பெயருண்டாயிற்று.

கேளாய் பார்வதி! இன்னுஞ்சிலர் களிமண்ணிற்கு மனிதனுடைய சரீரத்தின் அழுக்கைப் போக்குகிற குணமுண்டாயிருப்பதை யுணர்ந்து அந்த மண்ணிற் கூடியிருப்பது என்னவென்று பகுத்தறியுமிடத்தில் உவர்மண்-எண்ணெய் - சுண்ணாம்புங்கூடின சவுக்காரமென்று தெரிந்துக் கொண்டதினாலே வத்திரங்களை வெளுக்கவும் சலவை செய்யவும் ஏற்பட்டார்கள். இவர்களுக்கு வண்ணாரென்று பெயருண்டாயிற்று.

அப்போது குயவர்கள் பலவிதமாகிய சிலைகளையும் விக்கிரகங்களையும் வாகனங்களையும் செய்து அவற்றிற்குப் பூசைநைவேத்திய ஊர் புறப்பாடு முதலான ஆடம்பரங்களைச் செய்வித்து வந்தார்கள். இந்தச் சிலைகளையும் விக்கிரகங்களையும் வாகனங்களையும் மற்றவர்கள் வாங்கவும் பூசிக்கவும் ஏற்பட்டபடியால் இவர்களுக்குக் குசப் பூசாரிகளென்று பெயருண்டாயிற்று.

மேலும் கற்குளைகள்போட்டு அந்தக் கற்களினாலே வீடுகள் கட்டவும் கால்கையொடிந்து மூட்டு நழுகிப்போனாலும் அவற்றைக்கூட்டிச் சேர்த்துக்கட்டிக் குணப்படுத்துவது முதலாகிய அனேக சாமார்த்தியங்களில் பழகித் தேர்ந்தபடியினாலே அவர்களுக்குக் குசப் பூசாரிகள் யென்று பெயருண்டாயிற்று.

இதுகளை யெல்லாம் பார்த்த உத்தானபாதன் சந்ததியோரிற் சிலர் மரங்களினாலே பலவித பதுமைகளையும் வாகனங்களையும் இரதங்களையுஞ் சூத்திரங்களையும் செய்து விற்பனைசெய்ய ஆரம்பித்தார்கள். அதினால்இவர்களுக்குத்தச்சர்களென்றும்பெயருண்டாயிற்று.

இன்னுஞ் சிலர் கருங்கல்லினால் பலவுருவங்களையுங் கட்டடங்களையுஞ் செய்ய ஏற்பட்டார்கள். இத்தொழில்களினாலேஇவர்களுக்குச் சிற்பிகளென்றும் கல் தச்சர்களென்றும் பெயருண்டாயிற்று.

அப்பொழுது, பிரியவிரதன் வம்சத்திற் சிலர் சூரியன் சந்திராதி கிரகநட்சத்திரங்கள் முதலான சகல கிரகசாரங்களும் தங்

கிடையேயிருக்க அதினால் ஒவ்வொருவருக்கும் உண்டாகும் நன்மை-தீமை-செல்வம்-வறுமை-அதிர்ட்டம்-ஆயுள்-நிரியாணம் முதலான செயலும் கிரக இராசியோக காரணங்களில் பிறப்பும். அவற்றின் பலன்களும் அறிந்து ஜாதகங்கணிக்கவும் சகுனம்-பொருத்தம்-நிமித்த முதலான சகல பலன்களையுஞ் சொல்லவும் வானமண்டலத்தில் ஒவ்வொரு நட்சத்திரமும் உதயமாகிறதும் அது திரும்பவும் அத்தமிக்கிறதும் கருத்தோடுகணிதம்பண்ணி இன்ன காலத்தில் இன்னவெள்ளி உதயமாகுமென்றும் - இன்னகாலத்திலே இன்ன நட்சத்திரம் அத்தமிக்குமென்றும் - வசந்தகாலம்-கோடைகாலம்-மாரிகாலம் முதலான காலவேற்றுமைகளுடைய பலன்களையும் சொல்ல வல்லவராகியும் வியாதியாளருக்கு அவிழ்தம் பத்தியம் நன்மை தீமைகளுக்கு ஓம எக்கிய சடங்குகளை விதிப்படி தங்கள் சகோதரர்-சகோதரி முதலான பந்துக்களுக்கு உபதேசஞ்செய்கிறவர்களானபடியால் இவர்களுக்குச் சோதிடர்-பண்டிதர்-கருமத்தலைவர் என்னும் பெயருண்டாயிற்று.

பின்பு உத்தானபாதன் குடும்பத்தாரில் சிலர் ஆடுமாடு முதலான மிருகங்கள் இறந்துபோனபோதிலும் அல்லது கொன்று தின்னப்பட்டபோதிலும் அவற்றினுடைய தோல்-மயிர்-கொம்பு-முதலியவற்றைப் பழுதுபோக வொட்டாமல் பதனப்படுத்தி அவைகளினால் அங்கி-பாய்-கச்சை-வடக்கயிறு-சால்-வீணை-நரம்பு-கம்பளம்-துருத்தி-செருப்பு முதலான அநேக சாமான்களை உண்டுபண்ணினபடியால் இவர்களுக்குச் சக்கிலிகளென்று பெயருண்டாயிற்று.

அப்போது பிரியவிரதன் வமிசத்திலுதித்த வள்ளுவர்கள் பயிரிட்டுத் தங்கள் கொல்லைகளில் ஆடுமாடுகள் மேயாதபடிக்கு காய்கனி பலதானிய வகைகளை இராத்திரிகாலத்தில் கள்ளர் கவர்ந்துகொண்டு போகாவண்ணம் தங்களுக்குள்ளே பலசாலிகளும் தைரியர்களுமாகிய சிலரைக் கொல்லைகளைக் காவல் செய்யவும் பறையடித்து மிருகம் பறவைமுதலானவைகளை ஓட்டவும் நியமித்து இவர்களைக் காவற்காரர் தலையாரிகளென்று ஏற்படுத்தினார்கள். ஆதியிலே இவர்கள் பறையை உண்டுபண்ணி உலகமுழுதும்பறைசாற்றினபடியால் இவர்களுக்கு வள்ளுவர்களென்று பெயருண்டாயிற்று.

இவ்வாறாக மனிதர்கள், சந்ததி மேலு மேலும் விர்த்தியானபடியால் அந்தந்தநிலத்திற்குடியேறியிருந்தார்கள். அந்நிலங்களின்

வளப்பத்தையும் அங்கங்கே கிடைக்கிற பதார்த்தங்களையும் புசி த்து இந்தப் பூவுலகத்தை ஐந்துவித நிலமாகப் பகுத்து அந்நிலத்தில் வாசஞ் செய்யப்பட்டவர்களுக்குரிய பெயரும் பெருமையுங் கூறப்படுகிறது.

## ஐவகை நிலங்கள்.

குறிஞ்சி நிலம்:—மலைகளைச்சார்ந்த நிலங்களுக்குக் குறிஞ்சி யென்று பெயர். அதில் வாசஞ் செய்யப்பட்டவர்கள் குறவர் கானவர்-குன்றவர்-புனவர்-இறவுனர். இவர்கள் காடை-கவுதாரி-காட்டுக்கோழி முதலியவைகளைப்பிடித்துவிற்பனைசெய்துசிலர் வளைகளிலிருக்கிற எலி-உடும்பு-முயல்-நரி முதலியவைகளைப்பிடித்துச் சுட்டுப் புசித்து வழிப்போக்கர்களை அடித்துப் பறித்து மலைகளிலும் - குகைகளிலும் காடுகளிலும் சஞ்சரித்து நாய் கழுதை இவைகளுடன் வாழ்பவர்களேயாம்.

இவர்களில் குறவர்கள் உப்பு-புளி-வற்றல்-மயில் எண்ணெய் முதலியவைகளைக் கழுதையின்மேல் பொதி யேற்றிக்கொண்டு ஊரூராய்த் திரிந்து விற்பனை செய்யப்பட்டவர்கள். இவர்கள் இருப்பிடத்திற்குக் குறிச்சி-சிற்றூர்-சீறூர் என்று பெயர்.

பாலை நிலம்:-புல்-பூண்டுகள் விளையாத கல்லுங்கரடும் நிறைந்த வெப்பமான கானல் வீசப்பட்ட நிலம். இதில் வாசஞ்செய்யப் பட்ட வேடர்கள் - எயினர்-புள்ளுவர் - மறவர்களாகிய இவர்கள் தெளியும் வழியறியாக் கோபத்தையும் கானலையும் சலத்தையும் பகுத்தறியமாட்டாத குன்றவரானவர்கள். இவர்கள் வீடானது நாய் குரைக்கும் ஓசையுடன்விளாமரத்தில்கொம்பில் வலையானது தொங்கப் பன்றி கரடி கலைமான் இவை பார்க்கப்பெறுகிறது அல்லாமலும் கற்பாறையாகிய முற்றத்தில் மலைநெல்லானது உலரும். வழிப்போக்கர்களை யடித்துப் பறித்து போசனஞ்செய்யும் வேடருடைய தினைப்புனங்களைக் கவர்ந்துகொண்ட பல உருவமான மான் கூட்டங்களும், இடிபோல கர்ச்சிக்கும் ஆனைக் கூட்டங்களும் நிறைந்திருக்கும், இவைகளைக்கண்ட கறுத்தமேனியையும் வலிய தொழிலையுமுடைய மறவராகிய வேடர்கள் அவற்றினிடத்தில் பயமும் கிருபையு மில்லாதவர்களாய் அவைகளின்மேல் சரங்களைத் தொடுத்துக் கொல்லுவார்கள். என்றும் ஜீவகாருண்ணிய மில்லாதவரும் கள்ளையும் மாமிசத்தையும் உணவாகக்கொள்பவரும் விடமூட்டிய அம்பையுடையவருமாகியவேடர்களுக்குவாசஞ் செய்யுமிடம் வேடச்சேரி யென்று பெயர்.

முல்லை நிலம்:—வனங்களைச் சார்ந்த நிலம். இக்காட்டில் வாழும் இடையர்கள் படல்களால் மூடப்பட்ட சிறிய குடிசைகளில் வாசஞ்செய்வர். காலில் செருப்பும் கையில் தடியும் புள்ளாங்குழலும் விளங்க ஆடுமாடுகளை மேய்த்துக் காப்பாற்றும்படியான இப்புருடர்களுக்கு முல்லையர்-பொதுவர்-அண்டர்-கோவிந்தர்-அனவல்லர் - குடவர்-பாலர்-கோவலர் - கோபாலர்-அமுதர் - ஆயர்-தொறுவர்-இடையர் என்றும் பெயர் பெண்களுக்கு தொறுவி-பொதுவி-ஆய்ச்சி-இடைச்சி யென்றும் பெயர்.

நெய்தல் நிலம்:-கடலுங் கழியுஞ்சேர்ந்த நிலம். இதில்வசிப்பவர்கள் மீன் பிடிக்கும் பரதவர், நுளையர்-கரையார் - பட்டினர்-கடலர்-கழியர் திமிலரெனு மவர்களாம். இவர்கள் அலைபொருந்திய கடலோரத்தில் நிலைபெற்றுவாழும் பழமையாகிய வலைவளங்களையுடைய உணவினால் நிறைந்த தன்மையாகவாழுங் குடிகள் நெருங்கிய நுளையர்கள். வலைகளை யிழுப்பவருடைய சத்தமும்மீன் குப்பலைக் குவித்துச் சேர்த்துக் கூடிட்டு விற்கப்பட்ட நுளைச்சியருடைய சத்தமும் ஒரு தன்மையான வெள்ளைச் சங்குகளைப் பிடித்துக் குவிக்கும் சத்தமும் இச் சத்தங்களெல்லாம் கடலொலிக் கெதிரொலிபோன்ற தென்னலாம். இவர்கள் வாசஞ் செய்யப்பட்ட இடத்திற்குகுப்பம்-கரையாங்குப்பம்-பட்டினம்-கடலோரம் எனப் பெயர்.

மருதநிலம்:-ஊரைச்சார்ந்தது நஞ்சை-புஞ்சை-தெங்கு-பலா வாழை கரும்பு விளையா நின்ற நிலத்தைச் சேர்ந்தது ராஜதானியில் சகல ஜாதிகளின் வாசமும் சர்வவியாபாரமும் அபிவிர்த்தியாகி மெத்தை மேடைகளாகிய வீடுகளும் அதில்சுபாசுபங்களும் நடப்பதே மருதநில மெனப்படும்.



# காலப் பிரமாணம்.

சிருட்டி கருத்தாவென்று சொல்லப்பட்ட பிரமதேவனுக்கு ஏழுகோடி இருபது லக்ஷம் சதுர்யுகங்களும்,தேவமானத்தினன் பத்தாறுபிரத்து நானூறுகோடி வருஷங்களும், மநுஷ்ய மானத்தில் முன்னூற்றுப் பதினறுலக்ஷத்து நாலாயிரங்கோடி வருடங்களுங்கொண்ட சகாத்தம் ஆகிய முடிவுகாலத்திற்கு நடந்திருக்கிற பிரமகல்பத்திலும் நடந்துகொண்டிருக்கிற சுவேத கல்பத்திலும் இதுவரையில் சென்றிருக்கின்ற சதுர்யுகங்களும் தேவமான வருடங்களும் மனுஷ்யமான வருடங்களும் மநுவந்திரங்களும் தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட் பிரமாணங்களும் நைமித்கப் பிரளயங்களும் திரிலோகசிருட்டிகளும் இந்தச் சுவேத வராக கல்பத்திற்கு இனிச் சொல்லவேண்டியிருக்கின்றது. சதுர்யுகங்களும் தேவமானவருடங்களும் மனுஷ்யமானவருடங்களும் மநுவந்தரங்களும் தேவராஜாக்களுடைய அதிகாரங்களும்நைமித்திகப் பிரளயங்களும் திரிலோக சிருட்டிகளும் எளிதில் தெரிந்துகொள்ளும்படி விரித்துரைப்போம்.

## கால அளவு.

நிமிடம் பதினைந்துகொண்டது ஒரு காட்டை, காட்டை முப்பதுகொண்ட ஒரு கலை, அக்கலை முப்பதுகொண்டது ஒரு முகூர்த்தம், முகூர்த்தம் முப்பதுகொண்டது ஒரு இராப்பகல், இரண்டுங்கூடியது ஒருநாள், நாள் பதினைந்து கொண்டது ஒரு பட்சம், சுக்கிலபட்சம்-கிருட்டினபட்சம் இரண்டுங்கொண்டது ஒருமாதம், மாதமிரண்டு கொண்டது ஒரு இருது, இருது மூன்றுகொண்டது ஒரு அயனம்; தேவர்களுக்குப் பகற்காலமாகிய உத்தராயணம் இரவாகிய தட்சணாயனம் இரண்டுகொண்டது ஒரு மனுஷ்யமான வருஷம்; ஷை வருடம் ஒன்றுக்குத் தேவநாள் ஒன்று, தேவநாள் முப்பதுக்கு தேவமாதம் ஒன்று, தேவமாதம் பன்னிரண்டிற்குத் தேவமான வருடம் ஒன்று; இந்தப்படி தேவமானத்தில் நாலாயிரத் தெண்ணூறு வருடங்களும் மனுஷ்யமானத்தில் பதினேழு லட்சத் திருபத்தெண்ணாயிரம் வருடங்களுங் கொண்டது கிருதயுகம்; தேவமானத்தில் மூவாயிரத்தறுநூறு வருடங்களும் மனுஷ்யமானத்தில் பன்னிரண்டு லட்சத்துத் தொண்ணூற் றாறுயிரம் வருடங்களுங் கொண்டது திரேதாயுகம்; தேவமானத்தில் இரண்டாயிரத்து நானூறு வருடங்களும் மனுஷ்ய மானத்தில் எட்டுலட்சத்து அறுபத்து நாலாயிரம் வருடங்களுங் கொண்டது

துவாபரயுகம்; தேவமானத்தில் ஆயிரத்திருநூறு வருடங்களும் மனுஷியமானத்தில் நாலுலக்ஷத்து முப்பத்தீராயிர வருடங்களுங் கொண்டது கலியுகம், தேவமானத்தில் பன்னீராயிரம் வருடங்களும் மனுஷ்யமானத்தில் நாற்பத்து மூன்று லட்சத்து இருபதினாயிரம் வருடங்களுங் கொண்டது தேவர்களுக்கு ஒரு யுகமென்று சொல்லப்பட்ட சதுர்யுகம் ஒன்று.

இப்படி ஆயிரம் சதுர்யுகங்களும் தேவமானத்தில் ஒருகோடி இருபது லட்சம் வருடங்களும் மனுஷிய மானத்தில் நானூற்று முப்பத்திரண்டுகோடி வருடங்களுங்கொண்டது பிரமனுக்கு ஒரு பகற் காலமென்றும் இந்தப்பகற்காலத்துக்குள் பதினாலுமனுக்களுடைய அந்தரங்களும் பதினாலு தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட் பிரமாணங்களும் சம்பூரணமென்றும் அவர்களில் ஒவ்வொருவருக்கும் அதிகாரங்களும் ஆயுட் பிரமாணங்களும் எழுபத்தொரு சதுர்யுகங்களும் தேவமானத்தில் எட்டு லட்சத்து ஐம்பத்தீராயிரம் வருடங்களும் மனுஷிய மானத்தில் முப்பதுகோடியே அறுபத்தேழு லட்சத்து இருபதினாயிரம் வருடங்களுங்கொண்ட காலங்களென்றும் இரண்டாயிரம் சதுர்யுகங்களும் தேவமானத்தில் இரண்டுகோடியே நாற்பதுலட்சம் வருடங்களும் மனுஷியமானத்தில் எண்பத்தாறு லட்சத்து நாற்பதினாயிரம் வருடங்கள் கொண்டது பிரமதேவனுக்கு ஒருநாள் இது மகா விஷ்ணுவினுடைய யோகநித்திரைக்குக் காரணமாகிய இந்த நாளிரவில் நைமித்திகப் பிரளயம் உண்டாகுமென்றும்; அந்தப் பிரளயாக்கினி சுவாலையினால் திரிலோகங்களும் தகிக்கப்பட்டு மறுதினம் பகலில் முன்போலச் சிருட்டிக்கப் படுமென்றும் உணர்ந்து கொள்ளவும்.

மேற்கண்ட பிரமதினம் முப்பதும் அறுபதினாயிரஞ் சதுர்யுகங்களும் தேவமானத்தில் எழுபத்திரண்டுகோடி வருடங்களும் மனுஷ்யமானத்தில் இருபத்தையாயிரத்தித் தொளாயிரத்து இருபதுகோடி வருடங்களும் கொண்டது பிரமனுக்கு ஒருமாதமென்றும், இந்த ஒருமாத காலங்களுக்குள் நானூற்றிருபது மனுவந்தரங்களும் நானூற்றிருபத்தைந்து தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட் பிரமாணங்களும் சம்பூரணமென்றும்; இதில் முப்பதுதரம் நைமித்திக பிரளயத்தால் திரிலோகங்களும் தகிக்கப்பட்டு மறுபடியும் சிருட்டிக்கப் படுமென்றும்; மேற்கண்ட மாதம் பன்னிரண்டும் ஏழுலட்சத் திருபதினாயிரம் சதுர் யுகங்

களும் தேவமானத்தில் எண்ணூற் றிருபத்துநான்கு கோடி வருடங்களும் மனுஷியமானத்தில் மூன்றுலட்சத்துப் பதினொராயிரத்து நாற்பதுகோடி வருடங்களுங் கொண்டது பிரமனுக்கு ஒரு வருடமென்றும், இந்த ஒருவருட காலத்துக்குள் ஐயாயிரத்துநாற்பது மனுவந்தரங்களும் ஐயாயிரத்து நாற்பது தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட்பிரமாணங்களும் சம்பூரணமென்றும், இதில் மூந்நூற்றிருபதுதரம் நைமித்திக பிரளயத்தால் திரிலோகங்களுந் தகிக்கப்பட்டு மறுபடியும் சிருட்டிக்கப் படுமென்றும் மேற்கண்ட வருடம் நூறும் ஏழுகோடியே யிருபதுலட்சம் சதுர்யுகங்களும் தேவமானத்தில் எண்பத்தாறுயிரத்து நானூறு கோடி வருடங்களும் மனுஷியமானத்தில் மூந்நூற்றுப் பதினொரு லட்சத்து நாலாயிரங்கோடி வருடங்களுங் கொண்டது பிரமனுக்குச் சகாத்தமாகிய முடிவுகாலமென்றும்; இந்தநூறுவருடகாலங்களுக்குள் ஐந்துலட்சத்து நாலாயிரம் மனுவந்தரங்களும் ஐந்து லட்சத்து நாலாயிரம் தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட் பிரமாணங்களும் சம்பூரணமென்றும், இதில் முப்பத்தாறுயிரந்தரம் நைமித்திய பிரளயத்தால் திரிலோகங்களும் தகிக்கப்பட்டு முப்பத்தையாயிரத்து தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதுதரம் சிருட்டிக்கப் படுமென்றும் அறியக்கடவாய். அந்த அளவை உலகோர் அறியும்பொருட்டு மகாரிஷிகளால் அநேக சுருதிகளிற் புகட்டி யிருக்கின்றது.

## காலப் பிரிவு.

கேளாய் பார்வதி! காலமென்பது ஆகாயத்தைப்போல் அகண்டமான தோர் பொருள். அளவின்றிப் பொங்கிவருகின்ற ஒரு பேராற்றிற்குத் துறைகளில்லாவிடின் அஃது உபயோகப் படாததுபோல இக்காலமும் பிரிவுகளில்லையாயின் எதற்கும் பயன் படாது. ஆனதால், வரைவு உண்டாக்கப்பட்டது.

சூரியன் முதற் சனிவரையிலுமுள்ள ஏழு கிரகங்களும்படைப்புக் காலம்போல மறுபடியும் மேடவிராசியிற் சரியாய்ச் சேருங் காலத்தை யுகமென்று கற்பித்தனர். அதின் தொகை நாற்பத்து மூன்றுலட்சத் திருபதினாயிரம். அதனைப் பத்துப்பங்காக்கி முதல் யுகமாகிய கிருதயுகத்திற்கு நான்குபங்கும், இரண்டாவதாகிய திரேதாயுகத்திற்கு மூன்றுபங்கும், மூன்றாவதாகிய துவாபரயுகத்திற்கு இரண்டுபங்கும், கடைப்பட்டதாகிய கலியுகத்திற்கு ஒரு பங்குமாகப் பிரித்துவைத்தார்கள். ஏன் அப்படிப் பிரித்தன

ரெனில், தருமமானது அந்தந்தக் காலத்தில் நான்குபங்கும் மூன்றுபங்கும் இரண்டுபங்கும் ஒருபங்குமாக நடப்பதனுலெனவறிக.

ககோள மண்டலத்தை ஒருதரஞ் சுற்றிவர சனிக்கு ஏறக்குறைய முப்பதுவருடஞ் செல்லுகின்றமையாலும், குருவுக்குப் பன்னிரண்டுவருடஞ் செல்லுகின்றமையாலும், அங்காரகனுக்குப் பதினெட்டுமாதஞ் செல்லுகின்றமையாலும், சூரியனுக்கு ஒரு வருஷமும், சுக்கிரன்-புதன் இவர்களுக்கு நாலுமூன்றுமாதமும், சந்திரனுக்கு இருபத்தேழுநாளும் செல்கின்றமையாலும், இக்கிரகங்களுடைய மத்திமகதியின் சிறுகுணனம் அறுபது வருடமாவதுபற்றி அறுபதுவருடம் ஒரு சக்கரமென்னும் ஏற்பாடுண்டாக்கப்பட்டது. அவ்வருடங்களுக்குப் பிரபவாதி முதலான பெயர்களோ நாரதருடைய மக்கள் பெயராலிடப்பட்டன.

வருடஞ் சூரியனது இயக்கத்தினுல் ஏற்படுத்தப் பட்டது; சூரியனியக்கத்தினுலானது சௌரமானவருடம் என்னப்படும். அமாவாசைக் கமாவாசை ஒருமாதமெனக்கொண்டு சந்திரனியக்கத்தால் ஏற்படுத்திய வருடம் சாந்திரமானவருடம் என்னப்படும் முந்நூற்றறுபதுநாட்கணக்கிட்டு ஏற்படுத்தியவருடம் சாவனவருடம் என்னப்படும். முந்நூற் றறுபத்தைந்துநாட் கணக்கிட்டேற்படுத்திய சௌரமான வருடந்தான் உலகத்திற் பெரும்பாலும் உபயோகமானது.

சூரியன் ஒரு இராசியிலிருந்து மற்றோ ரிராசிக்குப் போகுங் காலத்தை மாதமெனக்கொண்டு வழங்குகின்றூர்கள். அது சௌரமானமாதம். இவைகளுக்கு மேஷமாதம் - ரிஷபமாதம்-மிதுனமாதம் என இராசிப்பெயர் வழங்குவது உண்டு. சித்திரை முதலான பெயர்களோ வடமொழியிற் சாந்திரமானப் பெயர்களின் திரிபு. ஆனுலும் சௌரமான மாதங்களுக்கே வழங்குகின்றன. எப்படியெனில், சித்திரை நட்சத்திரத்தோடுகூடிய பௌர்ணமை எந்தமாதத்தில் வருகின்றதோ அது சைத்திரம்; அது சித்திரையென்றுயிற்று. விசாகத்தோடுகூடிய பௌர்ணமையுடைய மாதம் வைகாசம்; அது வைகாசியெனத் திரிந்தது. ஆனியென்பது மூலநக்ஷத்திரம்; அதனேடுகூடிய பௌர்ணமையை யுடையது ஆனி மாதம். தேவதைகளின் பகலுக்குக் கடைசி யாதலால் ஆஹறமென்றுகித் தமிழில் ஆனியெனத் திரிந்த தென்பாரும் உளர். ஆஷாட நட்சத்திரத்தோடு கூடிய பௌர்ணமையுடைய மாதம் ஆஷாடமென்றுகித் தமிழில் ஆடியென்று இடைக்குறையும் இகர

விருமாக வழங்குகின்றது, இப்படிப் பன்னிரண்டு மாதமும் பன்னிரண்டு நட்சத்திரங்களின் பெயரினாலே வழங்குகின்றன.

## வாரங்களின் பிரிவு.

வாரங்களுண்டான விதம் எவ்வாறெனில், ஒரு தினத்திற்கு இருபத்துநான்கு ஓரைகளுண்டு, ஒரு ஓரை இரண்டரை நாழிகை. அது சோதிட பலனுக்காக ஏற்படுத்தப்பட்டது; அஃது ஒரிலக்கினத்தின் முற்பாதியும் பிற்பாதியு மாகின்றது. முற்பாதியைப் பகலென்றும், பிற்பாதியை இரவென்றுஞ் சொல்வார்கள். எந்தத் தினத்திற்கு எந்தக் கிரகத்தின் ஓரை முதலில் வருகின்றதோ அந்தக் கிரகத்தின் பெயரால் அந்தத்தினம் வழங்கப்படும்; சனி-குரு-அங்காரகன்-சூரியன் - சுக்கிரன்-புதன்-சந்திரன் என்பது கிரகங்கள் நிற்கும் வரிசையாம். இவ்வரிசைப்படியே ஞாயிற்றுக்கிழமைக்குச் சூரியன் முதல் இருபத்து நான்கு ஓரை எண்ணிக்கழிக்க, மறுநாட்காலமே சந்திர ஓரைவரும் அதனால், அது திங்கட்கிழமையாயிற்று. இப்படி முறையே இருபத்துநான்கு இருபத்துநான்காகக் கழித்துப்போக ஏழுவாரங்களும் ஏற்படுகின்றன.

திதிகள் சந்திரன் சூரியனைச் சேர்ந்தும் பிரிந்தும் செல்வதனால் உண்டாயின. மற்றவைகளும் இப்படியே காரணம் பற்றினவைகளேயன்றிக் காரணம் இல்லாதவையல்ல. கௌரியே! நீவிரும்பியபடி கால ஏற்பாட்டைச் சொன்னேன். இனிக் கல்பாந்தப் பிரளயமென்னும் கதையை முடிக்கின்றேன்;கேள் என்று இயம்பலாயினர்.

## கல்பாந்தப் பிரளயம்.

கேளாய் பார்வதி! உனக்குப் போதனசத்தி யுண்டாகும்படி கால அளவை விரித்துச்சொன்னேன். இனி கற்பத்தின் முடிவையுஞ் சொல்லுகிறேன் கவனித்துக் கேட்கக்கடவாய். உலகத்தில் மூன்றுவிதப் பிரளயங்களுண்டு அது யாதெனில், நைமித்தகமென்றும் பிராகிருதமென்றும் ஆத்தியந்தகம் என்றும் மூன்று வகைப்படும். கல்பத்தின் அந்தியத்தில் நான்முகனு லுண்டாவது நைமித்திக பிரளயமென்றும், இரண்டாவது பரார்த்த அளவாயுள்ள பிரமதேவனது ஆயுளின் அந்தியத்தில் நேரிடுவது பிராகிருத பிரளயமென்றும், சாமானிய மனிதருக்குக் கிட்டாத மேலாகிய மோட்சப்பிராப்தியே ஆத்தியந்தகபிரளயமென்று உரைத்த சிவத்தைப் பார்வதி நோக்கி ஓ சுவாமி! பிராகிருத பிரளயத்தின் அளவையறிந்து தெளிவடையும்படி பரார்த்தத்தின் கணக்

கை அடியாளுக்கு விரித்துரைக்க வேண்டுமென்று வேண்ட, பரம சிவன் அருளிச்செய்கிறார்:—

கேளாய் பார்வதி! ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் இலட்சம் பத்திலட்சம் கோடி பத்துகோடி நூறுகோடி என்று வரிசைக்கிரமமாய்ச் சொல்லப்பட்ட கணக்கின்படியே பதினெட்டாவது தானத்தை பரார்த்தமென்று சொல்லப்பட்டது. இந்தப் பரார்த்தகாலம் இரண்டு கடந்தால் பிராகிருதப் பிரளய முண்டாகும், அத்ததியில் வியத்தமானது தனக்கிடையில் விளங்கும் அவ்வியத்தத்தில் இலயித்துவிடும் மனிதருடைய கண் இமைநேரமே நிமிடமென்று சொல்லப்பட்ட ஒருமாத்திரை; இம்மாத்திரைகள் பதினைந்து கூடியது ஒரு காட்டை; இப்படி முப்பதுகாட்டைகள் கூடியது ஒருகலை; இக்கலைகள் பதினைந்து கூடியது ஒரு நாழிகை; இந்த நாழிகை பன்னிரண்டரைப்பலம் நிறையுள்ள சலத்தினால் நாழிகையென்று கனக்கிடப்படும். அது, மகததேசத்தின் ஒரு படி நீரளவாகும்; அதையும் விரிவாகச் சொல்லுகிறேன்; கேளாய் மின்னொளியைப் பழிக்கும் மேனியுடைய பெண்ணே! இருபது குன்றியின் இடையுள்ள பொன்னினால் நான்கு அங்குலநீளமாகச் செய்த ஊசியைக்கொண்டு மகதேசத்துப் படியைத் தொளை செய்து அதைத் தண்ணீரில் மூழ்குவிக்க எவ்வளவுநேரத்தில் அப்படி நிறையுமோ அவ்வளவு காலம் ஒருநாழிகையென்று கருதப்படும். அல்லது அப்பாத்திரத்தில் தண்ணீர்விட்டு நிரப்பித் துவாரத்தின்வழியாகத் தண்ணீர் முழுமையும் ஒழுகிவிடும் காலம் ஒரு நாழிகை. இந்த நாழிகை யிரட்டித்தது ஒரு முகூர்த்தம். இந்த முகூர்த்தங்கள் முப்பது கூடியது பகலிரவும் சேர்ந்த ஒருநாள்; இந்நாள் முப்பது சேர்ந்தது ஒருமாதம்; பன்னிரண்டு மாதங் கூடியது ஒருவருடம்; இந்த வருடம் தேவர்களுக்கு ஒரு இராப்பகல்; அப்படிப்பட்ட இராப்பகல் முந்நூற்றறுபது ஆகில் தேவ வருடம் ஒன்று; அப்படி பன்னீராயிரம் வருடம்சேர்ந்தால் சதுர்யுகம் ஒன்று. அந்தச் சதுர்யுகம் ஆயிரமானால் பிரமனுக்கு ஒரு நாள் .அதற்குத்தான் கல்பமென்று பெயர். அதின் அந்தியத்தில் நேரிடுவதுதான் சதுர்முக சம்பந்தமான நைமித்திகப் பிரளயம். இனி அதிக உக்கிரமான கல்பப் பிரளயத்தினது பிரபாவத்தைச் சொல்லுகிறேன்.

கேளாய் கலைமகளுங் கொண்டாடும் மலைமகளே! ஆயிரம் சதுர்யுகங்களின் அந்தியத்தில் பஞ்சம் - பசி-தாபம்-கோப முத

ஷியவைகளாலே மண்ணுலகமானது பெரும்பாலும் நசித்து மிகு கடுமையாய் நூறுவருடங்கள் வரையில் மழையில்லாமல் புல் பூண்டு முதலியனவெல்லாம் தீய்ந்து கட்டாந்தரையாயிருக்கும்; அந்தக் கொடிய திட்சண்ணியத்தினாலே செந்து சாலங்களெல்லாம் மடிந்துபோகும். பின்பு ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் சங்காரத் தொழிலைப்பூண்டு இரௌத்திராகரமானஉருத்திரவடிவங்கொண்டு அகில பிராணிகோடிகளையும் தமதுவயற்றிலிருக்கும்படி வகித்துச் சூரியனிடஞ் சென்று அவனது கிரணங்களைக்கொண்டு கிணறு-ஓடை-மடு-கடல்-அருவிமுதலானவைகளிலும் பிராணிகளிலும் பூமிகளிலும் உள்ள நீரையெல்லாம் கிரகித்துத் துளித்தண்ணீரேனும் எங்குமில்லாமல் உண்டுவிட்டபடியினாலே அந்த ஆதித்த கிரணங்களேழும் மிகப் பெருத்து விளங்கிபது அதனைக்கண்ட புருடோத்தமன் ஏழுகிரணங்களையும், ஏழுசூரியர்களாகச் சிருட்டித்துக் கீழு மேலுமாகச் சென்று மூன்று லோகங்களையும் எரித்துச் சாம்பலாகும்படி கட்டளையிட அவ்வாறே ஏழு சூரியர்களுஞ்சென்று வாட்டுகிறபோது புல்பூண்டுமுதலான ஓடதிகள் யாவும் எரிந்துபொரிந்து காய்ந்துச் சாம்பலாகி எங்கும் பசையென்பது இல்லாமல் ஆமையோடுபோல் கடுமையாக விளங்கும். அதன்பின்பு ஆதிமத்தியாந்தாதிகள் பாதல லோகத்திற்குச் சென்று ஆதிசேடனது சுவாசவாயுவினாலுண்டாகிய காற்றினால். காலாக்கினி உருத்திர வடிவங்கொண்டு அப்பாதல லோகங்களையெல்லாம் சுட்டுக் கருக்கிவிட்டுப் பூமிக்குவந்து பூமியையுங்கொளுத்தி, அங்கே நின்றும் அந்தப் பிரளய காலாக்கினி சுவாலைமிகுந்த ஆக்கிரகத்துடன் மேலுலகங்களிற் சென்று புவலோக சுவலோகங்களையுஞ் சுட்டுக் கொளுத்திக்கொண்டு அங்குதானே உலாவிக் கொண்டிருக்கும். இந்தப்படியாக பிரளய காலாக்கினி சுவாலைகளாலே கவியப்பட்டு மூவுலகங்களிலுமுள்ள சராசரவத்துக்கள் யாவும் நசித்து மூன்றுலகங்களும் பொரிவறுக்கப்பட்ட கறுகறுத்த சட்டியைப்போல விருக்கும்.

மேலும், கேளாய். பார்வதி! புவலோக சுவலோகங்களில் வசிக்கிற மனுவாதி அதிகாரிகள் அந்தப் பிரளய காலாக்கினி சுவாலைகளினாலே அதிக தாபமடைந்தவர்களாகிச் சகிக்கமுடியாமல் மகாலோகஞ்சேருவார்கள். அங்கும் பிரளய காலாக்கினி சுவாலைகளுக்குத்தாளாமல் பெருந்தாபமுற்றவர்களாகி அதற்கு மேன்மையான ஜனலோகத்தை அடைவார்கள். அவர்களுக்குள் யாவர் பரப்பிரமத்தை அடையவேண்டி பக்திசெய்தார்களோ அப்படிப்பட்ட உத்தமபுருடர்கள் மேலுங் கீழுமாய்ப் பத்துத்தரம் உலாவி உலாவி

தபோலோக சத்தியலோகங்களை அடைந்து முடிவில் பரப்பிரமத்தை அடைந்து நிரதிசயானந்த சுகத்தை அநுபவித்துக் கொண்டிருப்பார்கள். ஆதிமத்தியம் அந்தியமென்று சொல்லப்பட்ட மூன்று உலகங்களிலுமிருக்கப்பட்ட மற்றபிராணிகள் யாவரும் பிரகிருதியில் இலயப்பட்டிருப்பார்கள்.

## நைமித்திக பிரளயம்.

இந்தப்படியாக உருத்திர உருவம்பெற்ற ஸ்ரீவிஷ்ணுபகவான் சகல சராசரங்களையும் சாம்பலாக்கித் தன் சுவாசத்தினிடமாய் அநேக மேகங்களை உண்டாக்குவார். அதனாலே அந்த மேகக் கூட்டங்கள் யானைக்கூட்டங்களைப்போல அதிகபயங்கரமான மின்னல் இடிகளுடன் கூடிப் பிரளயகால மேகங்களாகத் தோன்றி ஆகாயவீதியிற் சென்று விளங்குகின்றன. அவைகளின் வன்னபேதங்கள் பலவுண்டு. அது யாதெனில், கருநெய்தல் மலருக்கு நிகராகிய சில மேகங்களும் ஆம்பலைப்போல சிலமேகங்களும் கருஞ்சிவப்பு கலந்த சிலமேகங்களும் பொன்னிறமாகிய சில மேகங்களும் கருமைநிறமாகிய சிலமேகங்களும், வைடூரியத்திற் கிணையாகிய சிலமேகங்களும், இந்திர நீலத்தின் நிறமாகிய சிலமேகங்களும், சங்குமுல்லைகளுக்கு இணையாகிய சிலமேகங்களும், மைவண்ணமாகிய சிலமேகங்களும், தாம்பூலப் பூச்சிகளைப்போல் சிலமேகங்களும், கூந்தற்பனையையொத்த சிலமேகங்களும், பறவையின் சிறகை நிகர்த்த சிலமேகங்களும் தோன்றும், இந்தப்படியாகப் பற்பல நிறங்களுடன் கூடிய அந்தப் பெரிய மேகங்களின் பெருமை எவ்வளவெனில், சில நீண்டு விசாலம் பொருந்திய பெருத்த நகரங்களை நிகர்த்தும்,சில பர்வதங்களைப்போலவும் கரியைப்போலவும் பரியைப்போலவும் உள்ளன. சிறிய பெரிய உருவங்களைப் பெற்ற மேககூட்டங்களானது மகமேருவும் அதிரும்படிக் கர்ச்சித்துக்கொண்டு விண்முழுதும் மறைத்து நின்று பெருந்தாரைகளைப் பொழிந்து முன்னம் நவின்றதுபோல மூன்று உலகங்களையும் பற்றி யெரிக்கின்ற அந்தப் பிரளய காலாக்கினியென்னும் பெருந்தீயைத் தணிக்கின்றன. அந்தத்தீ தணிந்த பின்னும் இராப்பகல் ஓயாமல் மலைகளைக்கொண்டு கொட்டுவதைப் போலப் பொழிந்து அப்பெருந் தாரைகளினாலே பூமிமுழுதையும் சலமயமாக்கிப் பின்பு முறையே புவலோகத்தையும் அதற்குமேலுலகங்களையும் அந்தப்படியே சலமயமாகச்செய்யும். இந்தப்படியாக அந்தக் காளமேகங்கள் சராசரங்கள் அனைத்தும் இருள்மூடிய மூன்றுலகத்திலும் இடைவிடாது நூறு வருஷத்துக்குமேலும் மழை பொழிந்து கொண்டிருக்கு மென்றறிவாய். பார்வதி! நித்தியனும்

யும் உத்தமனுகியும் எத்திசையிலும் வியாபித்து பரமான்மாவாகியும் விளங்குகின்ற பரப்பிரமத்தினுடைய மகிமையினுலே கல்பகாலாந்தியத்தில் இந்தப்படியெல்லாம் ஆகின்றது.

## பிராகிருத பிரளயம்.

கேளாய், பார்வதி! இந்த நைமித்திக பிரளய சலமானது சத்த இருடிகள் வசிக்கும் உன்னத தானத்தை அளாவி நிற்கின்றதனால் மூன்றுலகங்களும் ஏகார்ணவமாய் நிறைந்து சூழ்ந்திருக்கும். அதுகால் பரப்பிரம சொரூப லளாடத்தினின்றும் ஒரு காற்றண்டுபி விடாத மழையைப் பெய்கின்ற அந்தப் பிரளய காலமேகங்களை யெல்லாம் பஞ்சுபோலப் பரக்கடித்து நாசஞ்செய்துகொண்டு நூறுவருஷம் வரையில் செஞ்சமாருதமென்னும் காற்று வீசிக்கொண்டிருக்கும். பின்பு சர்வசெகத்தையும் தன் குட்சிக்குள் வைத்து இரட்சிப்பவனுகியும் யோகீசுவரர்க்கும் வேதங்களுக்கும் நினைக்க அரிதாகியும் அநாதி புருடனுகியும் இவ்வுலகத்திற்கு ஆதி அந்த மகதாவரவாகியும் விளங்கும் விராட் புருடனானவன் அந்த செஞ்சமாருதக் காற்றை புசித்துப் பரப்பிரம சொரூபத்துடன் அந்த ஏகார்ணவ சலப்பிரளயத்திலே ஆதிசேடன்மீது சயனித்து யோக நித்திரையிலிருப்பான். அப்போது சனலோகத்தில் வசிக்கும் சனகாதியோகீசுவரர்களும் பிரமலோகத்தில் வசிக்கும் முக்திக்குரிய முமுட்சுக்களும் வாசுதேவனென்னும் திருநாமத்தைத் துதித்துக்கொண்டாடத் திருக்கண் வளர்ந்தருளுவான். இதற்குத் தான் நைமித்திக பிரளயமென்னும் திருநாமம். ஏனெனில், ஸ்ரீவிஷ்ணுவானவன் பரப்பிரமசொரூபந் தரித்து அந்தக்காலத்தில் சேடன்மீது சயனிப்பது காரணமாக இருப்பதனுல் என்றறியும். சர்வான்மகனை அந்தச் சகதீசன் எப்போது துயிலொழிந்து எழுந்திருப்பானே அப்போது உலகங்களெல்லாம் அசையும் அந்தப் பகவான் யோக நித்திரையிலிருப்பானுயின் உலகங்கள் யாவும் அந்தகாரஞ்சூழ்ந்து கண்மூடிப்போம். ஆயிரம் சதுர்யுகம் அளவான பிரமதினம் யாதுளதோ அவ்வளவுகாலமே இரவாகும். இவ்விரவின் அந்தியத்தில் ஸ்ரீஅச்சுதன் திருக்கண் விழித்துக்கொண்டு பிரமரூபத்துடன் மறுபடியும் உலகத்தைச் சிருட்டித் தருளுகிறனென்று முன்னமே உனக்குச் சொல்லியிருக்கிறேனன்றே? இந்தக் கல்பத்தின் அந்தியத்தில் செய்யும் சங்காரந்தான் அவாந்தர பிரளயம். இஃது நைமித்திக பிரளயத்தின் உட்பிரிவாகும். இனிப் பிராகிருத பிரளயத்தின் விவரத்தைச் சொல்லுகிறேன் கவனித்து கேட்பாயாக. பார்வதி! முன்னம் யான் சொல்லியபடி

மழை பெய்யாமல் பஞ்சம் நேரிட்டுச் சிரகமாகி நோய்முதலான வைகளினாலே சகல உலகங்களும் பாதலங்களும் நசித்து மெலியும் படியாக செகதீசனது நினைப்பினாலே பிரளயம்நேரிட பிரதமத்தில் சலம்பூமி இவைகளின் சாரமாகிய சத்தைக் கிரகிக்கிறது. சத்தைக் கிரகித்தவுடனே பூமியானது இலயப்பட்டதாகி நசித்து சலமாய்விடு கிறது. அந்தச் சலம்பெருகி அதிகவேகமும் அதிக ஓசையுமுள்ள தாகி யாவற்றிலும் பூரணமாய் நிறைந்துகொண்டு அலைகளுள்ள பிர வாகத்துடன் உலகங்களின் அந்தியமளவும் ஓடியுலாவி நிறைந்திருக் கும். அந்தச் சலத்தின் குணமான சாரத்தைப் பிரகாசம் கிரகிக்க, அந்தச்சலம் இரசதன் மாத்திரையற்றுப் பிரகாசமாகின்றது. இவ் வண்ணம் சலம் அக்கினியாகி மிகுந்த பிரகாசம் பொருந்தினதாய் யாவற்றிலும் நிறைந்து இருக்கிறது. இந்தப்படி நாற்புறமும் சுவாலை மயமாய் நிறைந்திருக்கிற அவ்வக்கினியின் குணமாகிய ரூபத்தைக் காற்று கிரகித்துக்கொள்ளுகிறது. ரூபசாரம் நசித்ததனாலே அக்கி னியற்று காற்றுமிகவும் வீசுகின்றது. இதனாலே எங்கும்ஒளியற்றுக் காற்றே பேரிரைச்சலுடன் ஆகாயத்தைப் பற்றி வீசிக்கொண்டிரு க்க ஆதன் குணமாகிய சாரத்தை வானம் கிரகித்துக் கொள்ளுகின் றது. பிறகு வாயு நசித்து வானமொன்றே ஆவரணமின்றி நிற்கும். ரூபரச கந்த சத்தமே இலக்கமுடையனவாய் அவயவமில்லாததாய் மிகவும்பெருத்திருக்கிற அந்த வானமானது யாவற்றையும் சூழ்ந் துகொண்டு விளங்கும். இவ்வண்ணம் எட்டுத்திக்கும் சுற்றும் வட்ட மாய் அனைத்தையுங் கொள்ளுமிடமாய் யாவற்றையுஞ் சூழ்ந்து கொண்டு நின்ற அந்த ஆகாயத்தின் குணமாகிய சாரத்தை பூதாதிகி ரகிக்கின்றது. அந்தப் பூதங்களும் இந்திரியங்களுங்கூடி பூதாதியில் இலயப்படும். அபிமான ரூபமாகிய இந்தப் பூதாதியானது தமஸ்சை பிரதானமாகக் கொண்டதனாலே தாம்சமென்று சொல்லப்படும். இந்தப் பூதாதியென்று சொல்லப்பட்ட அகங்காரத்தைப் புத்தியே ட்சணமாகக் கொண்ட மகத்துக் கிரகின்றது. இந்த அண்டத்துக் குள்ளாக பூமியும் மகத்தும் முதலெல்லையும் கடையெல்லையுமாய் இருக்கின்றன.

ஓ மதியில் மிகுந்த பார்வதியே! இந்தப்படியே இவ்வண்டத் திற்குப் புறத்திலுள்ள பிரகிருதிமுதல் மகத்தீறாக நின்ற ஏழுபிரகிரு திகளும் சங்கார காலத்தில் முன்னுரைத்தபடி தத்தமக்குள்ள வத் துக்களிலே தாம்தாம் இலயப்படுகின்றன. அதெப்படியெனில், இவ் வுலகத்தை மூடிக்கொண் டிருக்கின்ற அந்த அண்டரூபமான பிருதி வியானது, அதைச் சூழ்ந்திருக்கும் அப்புவிலும், அவ்வப்பு அக்கி

காரத்திலும், அகங்காரம் தேசசிலும், தேசசுவாயுவிலும், அவ்வாயு, ஆகாயத்திலும், அவ்வாகாயம் பிரகிருதியிலும் கிரகிக்கப்படும். அதி கப்படாமலும் குறைபடாமலும் மூக்குணங்கள் சமமாகவிருப்பது தான் பிரகிருதியென்று சொல்லப்படும். அது மூன்றுலகங்களுக்கும் காரணமாக இருப்பதால் பிரதானமும் ஏதுவுமாகி இருக்கின்றது. இந்தப்படி பிரகிருதி வியத்தசொரூபமாகியும் அவியத்த சொரூப மாகியு மிருக்கின்றது. ஆகையால் வியத்தம் இலயப்படுகின்றது. எப்போதும் சாந்தகுணத்தையே பொருந்தினவனுகியும் சீலமாகிய சுபாவனுகியும் மரணமில்லாதவனுகியும் சேதனுசேதனங்களின் உள் ளும் புறம்புமாய் வசிப்பவனுகியும் விளங்கும் பதுமநாபன் பரமா னு ரூபியாகையினுலே பிரகிருதியிலும் சம்பந்தபடத் தக்கவனுகியு மிருக்கிற புருடனும்-பிரகிருதிபோல பரமான்மாவினுடைய அமிச மாக விளங்குகின்றுன். பரமான்மா எப்படிப்பட்டவரென்றுல் நாமம் ரூபம் பேதம் முதலாகிய குரோதங்களற்று சுபேதனுகி என்றும் அழிவில்லாமலிருப்பதே இயற்கையாக உடையவனுகி எவர்களும் தன்னைப் பத்திபண்ணி யடையவேண்டிய உன்னத பதவிக்குக்கார ண கருத்தாவாகியும் பரமாநந்த சொரூபனுகியும் செகதீசனுகி சர்வ சீவான்மாவுக்கும் மேற்பட்டவனுகி விளங்கும் மகாவிஷ்ணு. அந்த விஷ்ணுவே பரபிரமம். யோகியானவன் அந்த விஷ்ணுவை யடைந்து மறுபடி திரும்பாமல் கலந்திருப்பான். வியத்தாவியத்த சொரூபமா ன பிரகிருதியும் புருடனென்று சொல்லப்பட்ட சீவனும் இவ்விரண் டும் அந்தப் பரமான்மாவிலே தான் கலந்துவிடும். அந்தப் பரமான் மாவே யாவற்றிற்கும் காரணுகாரியமான சர்வேசுவரன். அவன் கன் மகாண்டமான வேதத்திலும் பிரமகாண்டமான வேதாந்தத்திலும் விஷ்ணுமுதலிய ஆயிர நாமங்களிலே தோத்திரம் பண்ணப்பட்டவ னுகியிருக்கின்றுன். பிரவிர்த்தி மார்க்கமென்றும் நிவர்த்திமார்க்க மென்றும் இருவகையான வைதிககருமங்களினுலே சகலதேவதை கள்சொரூபியான அந்தவிஷ்ணுவே சகலராலும் ஆராதிக்கப்படுகின் றுன் அது எப்படி என்றுல், இருக்கு எசுர்-சாமம் என்கிற வேதங்க ளாகிய பிரவிர்த்தி மார்க்கங்களினுலே எக்கியேசுரனுகியும் அந்த ஸ்ரீவாசுதேவன் பஜிக்கப்படுகிறுன்.

நிவர்த்தி மார்க்கத்திலே ஞானசொரூபியாகியும் ஞானுநந்தமய னுகியும் விளங்கும் அந்த விஷ்ணுவே மோட்சங்கொடுக்கவல்லவனுக ஞான எக்கியத்தைக்கொண்டு யோகிகளால் பஜிக்கப்படுகின்றுன். மேலும், குறுகலென்றும் நீட்சியென்றும் சொல்லப்பட்ட அசித்தும் வாக்குக்கும் மனதுக்கு மெட்டாத சித்தும், அந்த விராட்சொரூபம்

யாங்களேயாம். வியத்தமும் புருடனும் மூத்தனும் சகலமும் எம்முடைய சொரூபங்களே. அதெப்படியெனில் ஸ்ரீமந்நாராயணனே ரூபமாகி அவ்வுலோகங்களையும் எனது சரீரமாகக்கொண்டு விளங்குவதாகுமென்றறிவாய். வியத்தஅவியத்தசொரூபமான பிரதானமும் புருடனும்ஒடுங்குகிறார்கள். ஆதலால் அவ்வண்ணம்ஒடுங்குவதற்கிடமான எம்மிசுவரூபத்திற்குஇரண்டுபதார்த்தகாலமென்றுசொல்லியது ஒருபகலும், வியர்த்தமெல்லாம் பிரகிருதியிலும் அப்பிரகிருதி புருடனிடத்திலும், அந்தப் புருடன் பரமான்மாவிலும் கலந்திருக்கும் காலம் எவ்வளவோ அது இரவாகும். ஓ பார்வதி! அழிவில்லாத நித்தியனான அந்தப் பரமான்மாவுக்குப் பகலென்பதும் இரவென்பதுமில்லையாயினும் சிருட்டி திதி-சங்காரமென்னும் இக்காரணங்களைக்கொண்டு உபசார வழக்காக இராப்பகல் உண்டென்று சொல்லப்படுகின்றது. இந்தப்படியாக நடக்கும் பிராகிருத பிரளயத்தின் பிரபாவத்தைச்சொன்னேன். ஆழியில் துயிலும் மாயன் சகோதரியே, கேள்! ரூபம்-அரூபம் என்றபதம் உனக்குத் தெரியுமாதலால், சிருட்டி திதி சங்காரமென்றதுக்கல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலின் காரணத்தைபற்றியே வெவ்வேறு ரூபநாமங்கள் பெற்றேமன்றி, முடிவில், விராட்டென்பதும்-பிரமமென்பதும்-பரப்பிரமமென்பதும் யாமே யென்று அறியக்கடவாய். ஓர் காரணத்தைப் பற்றி உனக்குத் தெரிவிப்பதால், பேதமற்றுஅளவற்று நீண்ட எமது விராட்டுக் கல்வியில் ஒன்றாகிய காத்தலுடையோனைகாட்டி போதிப்போமாகையால் வேறுவழியில் மனதைநாட்டி வாட்டங்கொள்ளாது நாட்டமாகக் கேட்பாயாக; இனி ஆத்தியந்திக பிரளயத்தின் கிரமத்தைச் சொல்லுகிறேன்.

## ஆத்தியந்திக பிரளயம்.

கேளாய். பார்வதி! எத்திசைகளிலுமுள்ள பக்தர்களும் முத்தர்களும் நித்த நித்தம் துதித்தேத்தும் ஞானசத்தியே நுண்ணறிவுடைய புருடனானவன் ஆத்தியான்மீக மென்னும் தாபங்களில் நிவிர்மதியுடையவனாயிருந்து மேலாகிய பதவியை அடைவான். ஆத்தியான்மீகமென்பது யாதெனில் முதலில் ஞானம் இரண்டாவது வைராக்கியம், இவ்விரண்டும் நாளுக்குநாள் விசேடித்து மோட்சமென்னும் ஆத்தியந்திகத்திற்குள்ளாகி இலயத்தையடைகிறான். ஆத்யான்மீகதாபமானது தன்ஆன்மாவையும் தேகத்தையும் பற்றி உண்டாகும் துக்கம். அந்தத் துக்கம் சரீரத்தைப் பற்றியதும் மனத்தைப் பற்றியதுமென இரண்டுவகைப்படும்; அதில் சரீரத்தைப்பற்றிய

துக்கம் பலவகைப்படும். அவையாதெனில், தலைவலி-பீனிசம்-சூர
குலை-சோகை-இரத்தபேதி-மகோதரம்-சுவாசம்-குன்மம்-அதிசாரம்-
வாந்தி-குட்டம்-கண்வலி-பேதி முதலாகிய அநேகரோகங்களேயாம்.
மனதைப்பற்றிய துக்கத்தைச் சொல்லுகிறேன், கேளாய், பார்வதி!
காமம்-குரோதம்-உலோபம்-மோகம்-மதம்-மாச்சரியம்-பயம்-சோக
ம்-அவமானம் முதலாகிய பலவகை ரோகங்களோடும் உள்ளது.
அது ஆதிபௌதிகமாவது ஐந்துக்களைப்பற்றி உண்டாவது, அதுயா
தெனில், மிருகம் பட்சி பிரகாசம் சர்ப்பம் மனிதர் முதலியவற்றால்
உண்டாவதினாலே அதுவும் அநேகவிதமுள்ளது. ஆதிதெய்வீகமென்
பது யாதெனில், அது தெய்வத்தாலுண்டாவதேயாம்; அதெவ்வண்
ணமெனில், குளிர்காற்று-வெப்பம்-மழை- இடிகளென்னும் பலவித
மாகும். இந்தத்தாபங்கள் மூன்றும், கருவினாலும், பிறப்பினாலும்,இ
றப்பினாலும், மூப்பினாலும், நரகத்தினாலும் பிறந்து அநேகமாயிரம்
வகைகளாகின்றன அவைகளை விபரமாகச் சொல்லுகிறேன்.

கேளாய். பார்வதி! ஒரு சந்துவைப்பற்றி யோசித்துப் பார்க்கு
மிடத்தில் அந்த சந்துவின் தேகம் வெளிப்பார்வைக்கு மட்டும் அழ
காகவும்,மெல்லியதாகவும், ஒருவகை தோலால் மூடப்பட்டு விளங்
கும் அதைப் பார்க்கப்பார்க்க மிகவும் மென்மையாகக் காணப்படு
கின்றது. அந்தத் தேகத்தினுள்ளே இருக்கின்ற தார்க்கர்மமோவெ
னில், எலும்பு-தசை-நரம்பு-சீழ்-இரத்தம்-புழுக்கள்-நிறைந்த மலமூத்
திரங்களால் நிறைந்து வளர்ந்த முதுகு கழுத்துகளில் எலும்புடைய
தாக விளங்கும். தாயின் கருப்பையிலிருந்து கொண்டு சிசுவானது
அன்னை உண்ணுகிற புளிப்பு கசப்பு-துவர்ப்பு-இனிப்பென்னும் அறு
சுவை யுணவுகள் தன்மேல்பட அச்சிசு அளவில்லாத வேதனையை
அடைவதுந் தவிர தன் தேகத்தை நீட்டவும் மடக்கவுங்கூடாமல்
மலமூத்திரங்களாகிய சேற்றிலே கிடந்து சடாக்கினியினாலே தகிக்
கப்பட்டு இப்படியும் அப்படியும் அசைவதற்கு இடமில்லாமல் துன்
பமேலிட்டு, மூச்சுவிடமாட்டாமல் அறிவுமேலிட்டுக்கடந்த அநேக
ஜென்மங்களை நினைத்து நினைத்து மகா விசனமுற்றுக் கருமத்தினாற்
கட்டுண்டிருக்கும். அச்சிசுவைப் பிறப்பிக்கும் நிமித்தம் பிரமதேவ
ன் ஒருகாற்றை ஏவுகின்றான். அக்காற்றினால் அச்சிசுவின் எலும்பு
கள் யாவும் நொறுங்கிப்போகும்படி பீடிக்கப்பட்டு, பின்பு மிகுந்த
பலமான பிரசவவாயுவினால் தலைகீழாகத் திருப்பப்பட்டு, வலிவருத்
தத்தினால் மெலிவுண்டு தாயின் உதிரத்தைவிட்டு வெளிப்படுகின்ற
து. அச்சிசு பூமியில் விழுந்தவுடனே வெளிக்காற்றுப்பட்டு, பெருமூ
ச்சுண்டாகி முன்னிருந்த ஞானத்தை மறந்து, தான் வெளிப்படும்

போது முட்களாலே தைக்கப்பட்டதைப்போலும் துர்க்கந்தமான இரணத்திற் கொப்பாகிய யோனித்துவாரத்தினின்றும் விழுவதா லும் அச்சிசுவுக்கு உண்டாகும் சிரமத்தைச் சொல்லிமுடியாது.இவ் வண்ணமாகப் பெருத்த கஷ்டத்துடன் பிறந்த அச்சிசுவு சொரிந்து கொள்ளவும் புரளவும் சத்தியில்லாததாய் ஸ்நானபான ஆகாராதிக ளைப் பிறருடைய இச்சையின்படி பெறுகின்றது. மேலும், மூத்திரா திகளினாலே அசுத்தமாகிய படுக்கையிற் கிடந்து எறும்பு கொசுகு முதலியவைகள் கடிக்கினும் அவற்றைத் தடுக்கமாட்டாமலிருக்கின் றது. இப்படியாக அநேக பிறப்பின் துன்பங்களையும் பிறந்தபின் உண்டாகுந் துன்பங்களையும், மற்றுங் கணக்குமிதமில்லாத துன்பங் களையும் அடைகின்றது; பிறகு நாளுக்குநாள் வளர்ந்து யௌவன பருமடைந்து, அஞ்ஞானமாகிய அந்தகாரத்தால் மூடுண்டு மூடனாகி, நான் எங்கிருந்து வந்தேன்? இந்த சென்மமெடுத்து எனக்கென்ன பயன்? பிறவித்துன்பத்திற்குக் காரணம் யாது? காரணம் அல்லாத தெது? எது சொல்லத்தக்கது? எதுசொல்லத்தகாதது? எது தரு மம்? எது அதருமம்? என்னும் பகுத்தறிவு இல்லாதவனாகி விடுகிறா ன். மனிதன் இப்படி மிருகங்களைப்போல முழுமூடனாகி உண்பதும், உடுப்பதும்,உறங்குவதுமே முக்கியமான தென்றெண்ணி அஞ்ஞா னத்தினாலுண்டாகிய அநேக துக்கங்களை அனுபவிக்கின்றான். அஞ் ஞானமென்பது யாதெனில், தாமசகுணத்தின் இயற்கையாதலால், அதுவே மனிதர்களைக் கெட்டகாரியங்களிற் பிரவேசிக்கச்செய்து வைதீககருமங்களை மாற்றுகின்றது; சற்கரும வாசனை யின்மையினா லேயே நரகமுண்டாகின்றது; ஆகையால், அஞ்ஞானிகளுக்கு இகத்தி லும் பரத்திலும் துக்கமுண்டாகின்றது. இவ்வண்ணம் எவ்வனங்க டந்து முதுமைநேரிடும்போது தேகமெலிந்து கட்டுத்தளர்ந்து பற் களாடி யுதிர்ந்து திரைகள் நேர்ந்து நரம்புகள் வெளியாகத்தோற்றி அருகிலிருக்கும் வத்துக்களும் காணப்படாமல் கருவிழி ஆழ்ந்து உள்ளேபோய் மூக்கின் துவாரத்திலிருந்து ரோமங்களுதிர சரீரம் நடுங்கி எலும்புகள் யாவும் வெளியேதோன்றி முதுகெலும்புவளைந்து போக, சிரணமாகாததாலே உணவு செவ்வனே செல்லாமல் நனை யிருமல் மேலிட்டு நாளுக்குநாள் செய்கைகள் குறைந்து படுக்க வும் எழுந்திருக்கவும் பெருவருத்தமாகி காதும் கேளாமலும் கண் ணும் தெரியாமலும் வாயினின்றும் நீரொழுகத் தவித்துக்கொண் டிருக்கின்றான். இவ்வாறு சகல இந்திரியங்களும் சுவாதீனமற்று மரணகாலம் சமீபித்திருக்கையில் முன்னம் தான் அனுபவித்த சுக ங்களை நினைத்து உருகிக்கொண்டு ஒருவார்த்தையுஞ் சொல்ல சத்

தியற்றுச் சுவாசகாசமுண்டாவதனாலே தூக்கமின்றி, மிகுந்த ஆயாசமும் வருத்தமும் துக்கமுமுடையவனாகி, எழுந்திருக்கவும்உட்கார்ந்திருக்கவும் அயலார் உதவி வேண்டியதால் வேலைக்காரர் மக்கள் மனைவி முதலாக யாவராலும் நிந்திக்கப்பட்டவனாகி, அசுத்தனாகி, உண்ணவும் உலாவவும் மிகுந்த ஆவல்கொண்டவனாகி, வாலிபர் பரிகாசஞ் செய்யவும் பந்துக்கள் வெறுப்படையவும் தன்னுடைய யௌவனானுபவத்தைப் பூர்வசென்மத்தில் அனுபவித்ததைப்போல நினைத்து நினைத்து மனத்தாபத்துடன் பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறான்.

இந்தப்படியாக மூப்புத்தசையில் பலதுன்பங்களை அனுபவித்து மரணமடைகிறான்; அந்த மரணத்தில் நேரிடும் துன்பங்களை கேளாய். பார்வதி! கால்-கை-கழுத்துகள் கட்டுவிடப்பட்டுப்பெரு நடுக்கமுள்ளவனாகி, சித்தசுவாதீனமற்றுச் சற்றுநேரம் அறிவும் சற்றுநேரம் அறிவழிவு முள்ளவனாகி, அசையும் பொருள் அசையாப்பொருள் முதலானவைகளிற் சித்தப்பிரமைகொண்டு இவையெல்லாம் நமக்குப் பின் எப்படியோவென்று துக்கித்து வீடுமாடு ஆடு மக்கள் பெண்டீர் தனம் தானியம் முதலானவற்றிலே பெருமமதையடைந்து, ஏங்கிக் கலங்கினவனாகி இருக்கையில் திடீரென்று எமனுடைய மிகக்கொடிய வாள்களையொத்த சரங்களாகிய பாசம் தோன்றிட அதைக்கண்ட மாத்திரத்தில் கண்கள் சுழலக் கைகால்களை யுதறிக்கொண்டு நாக்கும் உதடும் உலர்ந்து உதான வாயு எழும்பித் துன்பப்படுத்தக் கண்டமடைத்து கண்கள் பஞ்சடைந்து குருகுருவென சத்தமுண்டாகி அதிக தாபமும் பசியும் தாகமும் நேரிட்டு எமதூதர்களாலே பிடிக்கப்பட்டு வெகுபிரயாசத்துடன் தேகத்தைவிட்டு பிராணவாயு வெளிப்பட உடனே எமதூதர்கள் யாதனா சரீரத்தில் பொருந்தச்செய்து பாவத்துக்குத் தக்கபடி தண்டிக்கப்படுகிறான். இதுநரகத்தில் அனுபவிக்கும் துக்கம் இந்தப்படி நரகத்தில் தான் துக்கமடைகின்றான் என்றுயோசிக்கில், சொர்க்கத்திலும் துக்கமுண்டு; அதெப்படியெனில், இவன்செய்த புண்ணியபலனை அனுபவித்துக்கொண்டு நாளுக்குநாள் புண்ணியம் நசித்து இனிநாம் சொர்க்கானுபவத்தை விட்டு தள்ளப்படப்போகிறோமேயென்ற நினைப்பினாலே பெருந்துக்கத்தை அடைகின்றானாதலால் மனிதருக்கு மோட்சமென்கிற தருவின்நிழலல்லாமல் மற்றெதினாலும் சுகமுண்டாவதில்லை; ஆகையால், கருப்பம் செனனம்பாலிய முதலானவைகளிலே உண்டாகும் தாபம் மூன்றுக்கும், அவிழ்தம் யாதென்றால், மற்றெந்தச் சுகத்திலும்

இன்பமுண்டாகா திருக்கும்படி ஞானநேத்திரமும் சேவிக்க ஆனந்தத்தை தருவதாகியும், துக்க ஏது வொன்றுமில்லாதாகியும், என்றும் செனனமரணமில்லாத நித்தியபிராப்தியை அளிப்பதாகி யுமுள்ள எமது பதவியேயாம்; ஆகையால், தெளிவுடைய மனிதர் கள் துற்குணங்களொன்றுமில்லாமல் சகல நற்குணங்களும் பொ ருந்திய எமது பதவியை அடையும்பொருட்டாகிய தியானத்தி லேயே சதாகாலங் கழிக்கவேண்டும். தியானமென்பது, சருகாதி களைப் புசித்தும் மலைவனங்களிலிருந்தும் அட்டாங்கயோகமென் றும்-யோகாதி கருமமென்றும்-யாகாதிக்கிரமமென்றும் உலகம் பிரமிக்கும் கலகமல்ல. மனமென்னும் ஆலயத்தில் சிவமென்னும் சிலாசாதனம்செய்து இல்லறத்திலிருந்து எல்லாம் அனுபவிப்பதே உயர்ந்த தவமாகும்; பாவமென்பதற்குப் பயந்து சிவமென்பதை நினைக்கவேண்டும். இதுதான் ஆத்தியந்திக பிரளயம்.

# இல்லறதருமம்

## மனிதர்களின் பிராண நிலை.

| இந்திய அளவு. | | பிராண நிதானம். | இங்கிலீஷ் அளவு. | |
|---|---|---|---|---|
| நாழிகை முதல் | நாழிகை வரையில் | காலையில். | மணி முதல் | மணி வரையில் |
| ௫ | ௰ | சூரியகலை | 6 | 8 |
| ௰ | ௰௫ | சந்திரகலை | 8 | 10 |
| ௰௫ | ௨௰ | சூரியகலை | 10 | 12 |
| ௨௰ | ௨௫ | சந்திரகலை | 12 | 2 |
| ௨௫ | ௩௰ | சூரியகலை | 2 | 4 |
| ௩௰ | ௩௫ | சந்திரகலை | 4 | 6 |
| | | மாலையில். | | |
| ௩௫ | ௪௰ | சூரியகலை | 6 | 8 |
| ௪௰ | ௪௫ | சந்திரகலை | 8 | 10 |
| ௪௫ | ௫௰ | சூரியகலை | 10 | 12 |
| ௫௰ | ௫௫ | சந்திரகலை | 12 | 2 |
| ௫௫ | ௬௰ | சூரியகலை | 2 | 4 |
| ௬௰ | ௬௫ | சந்திரகலை | 4 | 6 |

அறிவையே ஆதாரமாயுன்னி ஆரியராகும் சீரியருக்குக் கரு மான் உலைக்குக் காற்றுவீசும் துருத்திக்கிணங்க நாசியென்றுசொ ல்லும் நமது மூக்கின் வழியாகப் பழகிவரும் காற்றுக்குக் காற்று

ஜீவன்-சுவாசம்-மூச்சு-பிராணன்-ஆவி-உயிர்-உயிர்ப்பு-மனம்-சரம் இவை முதலாகச் சொல்லப்பட்ட பெயர்கள் பலவுளவாம். அன்றியும், ஆன்றோர்களால் இன்னும் பலபெயர்களும் விளக்கப்படுமென்று எண்ணலாம்.

பலவித இயற்பெயர் பூண்டுள்ள நமது ஆன்மாவாகிய பிராணனானது எருதுக்கு மூக்காங்கயிறிருந்து ஆட்டுவதுபோலக்காலை ஆறுமணி தொடங்கி எட்டுமணிவரையிலும் சூரியகலை என்னும் வலது மூக்கின் துவாரத்திலும்-எட்டுமணி தொடங்கி பத்து மணிவரையில் சந்திரகலையென்னும் இடது மூக்கின் துவாரத்திலும் ஆக இரண்டுமணி நேரத்திற்கு ஒருகலையாக அல்லும்பகலும் கூடிய அறுபது நாழிகையிலும் ஐந்து நாழிகைக் கொருமுறையாக மாறிமாறி ஓடிக்கொண்டேயிருக்கும்.

### சூரியகலையில் செய்தற்குரிய காரியங்களாவன.

பிங்கலையென்றும் சூரியகலை யென்றுஞ் சொல்லப்படுகிற வலது நாசியில் சரம் ஓடும்போது, சம்போகம் - வித்தியாப்பியாசம்-சாத்திரஅப்பியாசம்-மந்திராப்பியாசம்-வாகனம் ஏறல்-யந்திர நிர்மிதம்-சித்திரமெழுதல்-விவகாரம்-ஸ்நானம்-போசனம்-பிரசங்காரம்பம்-தானம்-தருமம்-வேட்டை-கால்நடைகளின் விக்கிரயம்-தம்பனம்-மோகனம்-உச்சாடனம்-மாரணம்-புதுவத்திரமணிதல்-வடக்கு - கிழக்கு - பிரயாண முதலானகாரியங்கள்செய்வது மிகவும் உத்தமம்.

### சந்திரகலையில் செய்தற்குரிய காரியங்களாவன.

இடகலையென்றும் சந்திரகலையென்றும் சொல்லப்படும் இடது நாசியின்வழியாக சரம் ஓடும்போது தெற்கு மேற்குப் பிரயாணம்-யுத்தம்-உபநயனம்-சாந்திகழித்தல்-கிரகப்பிரவேசம்-இராசதரிசனம் விதை விதைத்தல் ஒளடதபிரயோகம்-சற்புருடகோட்டி-யோகாப்பியாசம்-விவாகம்-தேவபிரதிட்டை-தூரதேசப் பிரயாணம்-அலங்காரம்-சுரதோட சிகிச்சைமுதலிய காரியங்களைசெய்ய மிகவும் உத்தமமென்று ஆன்றோர்களால் கூறப்பட்டிருக்கிறது.

### சரசாத்திர சமாதானம்.

இந்தச் சரசாத்திர லட்சணம் தெரியாதவர்களுக்கு விளங்குமாறு சுருக்கமாக எழுதலாயிற்றேயன்றி மற்றவர்களுக்கு போதிக்க யாம்பெரியோமல்ல. ஏனெனில் சரம்பார்ப்பான் பரம்பார்ப்

பான் என்பதற்கிணங்க சரயோக அப்பியாசிகளான மகான்கள் சர்வசீவான்ம கோடிகளுக்கும் அன்றன்றும் நடந்தேற முன்னிற்கும் திரிகால நன்மை தீமைகளையும் தாங்களே தெரிந்துகொண்டு பரத்தின் திருவிளையாடலைப் பகுத்தறிவார்கள். ஆயினும், பெருமையை விரும்பி தம்மகிமையை அகத்தைக்கடந்து இகத்தியல்பில் செல்லவிடார்கள். அவ்வாறு செல்லவிடாத வல்லோராகிய நல்லோரின் குறியாதெனில், "பாலரோடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே சிலமிகுஞானியர்தம் செய்கைப்பராபரமே" (தாயுமானவர்) என்பதாம். இங்ஙனம் ஞானிகளுடைய தன்மைகளும் சரசாஸ்திரப் பெருமையும் யோகாப்பியாச விவரமும் விவரித்தெழுத அருளில்லாத அபாத்திரனுகையால் இல்லறவாழ்க்கைக்குஇயன்ற தொழில் முகாந்திரசரத்தின் குறிமாத்திரம்வரும் நூலைக்கொண்டெழுதப் பட்டிருக்கிறது.

## சரசாதனத்திற்கு ஆசனமும் பலனும்.

| | |
|---|---|
| மான்றோல் | ஞானம் |
| தருப்பை | மோட்சம் |
| புலித்தோல் | செல்வம் |
| வெள்ளைவஸ்திரம்-இரத்தினக்கம்பளம், சித்திராசனம் | சர்வமங்களம் |

மற்றெல்லாவித ஆசனமும் தரித்திரத்தை உண்டாக்கும்.

## சரசாதன இயல்பு.

மேற்கூறிய ஆசனங்களில் தத்தமக்கு எப்பொருள் விருப்பமோ அவ்வாசனத்திலிருந்து சூரியகலையென்னும் வலது நாசியின் வழியாகச் சுவாசத்தை நடக்கச்செய்து இராப்பகல்கூடிய தினமொன்றுக்கு ஒருமுகூர்த்தகாலமாவது தமது இட்ட தேவதாத்தியானம் செய்வோர்கள் பிறர் விரும்பிக் கேட்கும் பிரசனையும் ஆருடமும் மனக்குறையாகிய எல்லாவிதக் கேள்விகளுக்கும் குறிசொல்வதுபோல அவரவர் நன்மை தீமைகளை எளிதில் சொல்லலாம், அப்படி சொல்வதற்கு வலது நாசியிலிருக்கும் சுவாசத்தை இடது நாசியில் ஒட்டவும் இடதுநாசியிலிருக்கும் சுவாசத்தை வலது நாசியில் ஒட்டவும், இரேசிக்கவும், பூரிக்கவும், தம்பிக்கவும் சரயோக அப்பியாசிகள் தெரிந்துக்கொள்ள வேண்டும். அப்பியாசிகள் கிடைப்பதும் சொல்வதும் சாத்தியமல்லவென்றும் சொல்லுவாருமுளர்; ஆகையால் மேலோட்டை ஆதாரமாகக்கொண்டு உற்பத்தியாகி புளியம்பிஞ்சாவது சுவைக்கு சம்பந்தப்படும் பரு



வம் ஏறஏற மேலோட்டின் பற்றுதல் சிறிதேனுமில்லாமல் தனித்துநிற்பது போலவும், மண்ணிலும் புழுதியிலும், சேற்றிலும், பூமியிலும், வியாபித்திருக்கும் பிள்ளைப்பூச்சியானது எவ்வாறு பற்றற்றிருக்கிறதோ அவ்வாறுபோலவும் மானிடமென்னும் சட்டைபூண்டு சமுசாரமென்னும் சேற்றிலே கால் நுழைந்திருந்தாலும் ஆன்மசன்னியாசிகள் அடக்கமாகத் தானிருப்பார்கள்; தேகசன்னியாசிகள் தெரு எங்கும் திரிவார்கள். ஆகையால், கடவுளினது கருணைக்குப் பாத்திரராகிய சாதுக்கள் காட்டிலும் உண்டு; வீட்டிலுமுண்டென்பதேயாம். இதற்கு சாட்சி.

மனத்தகத் தழுக்கறுத மௌனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறுர்
மனத்தகத் தழுக்கறுத்த மௌனஞான யோகிகள்
மூலத்தடத் திருக்கினும் பிறப்பறுத் திருப்பரே.

சரத்தைக் கொண்டு அறத்தைப் புரிதல்

அதாவது, குறிசொல்லுதல்.

பிராணன் காற்று ஆவி ஆன்மா உயிர் உயிர்ப்பு ஜீவன் சுவாசம் சரம் மனம் மூச்சி என்று சொல்லப்பட்ட சரசாதகத்தைச்சிறிதேனும் அனுட்டித்துவரும் புண்ணியர்களை யாராவது ஒருவன் அடுத்துதான் நினைத்தகாரியம் நடக்குமோ நடவாதோ அல்லது ஆகுமோ ஆகாதோ வென்று எந்நேரத்தில் கேட்டபோதிலும் அந்நேரத்தில் சந்திரகலை சூரியகலையென்னும் இருநாசியும் நோக்கி எந்தநாசியில் பூரணமாக சரம் ஓடுகின்றதோ அதை நிதானித்துக் கொள்ளவேண்டுவது முதற்காரணம்; பிரசினைகேட்க வந்தவன் பூரணமாக சரம் ஓடுகிற பக்கத்தில் நின்றானாகில், அவன் கேட்ட ஆரூடமெல்லாம் தடையின்றி நடக்குமென்றும், சரம்பார்க்கிறவர் கட்டிலின்மேலாவது மச்சுவீட்டின் மேலாவது மரத்தின் மேலாவது மற்றெந்த உயர்ந்த ஆசனத்தின் மேலாவது இருக்கும்போது, கேட்கவந்தவன் பள்ளம் அல்லது பூமியிலிருந்து கேட்பானாகில் அவன் நினைத்துவந்த காரியமெல்லாம் சித்தியாகுமென்றும் சொல்லப்படும். அப்படிச் சொல்லுவதிலும் கலையறிந்து சொல்லவேண்டியது அவசியம். அதென்னவெனில்.

சூரியக்குறி.

சூரியகலை பூரணமாய் நடக்கும்போது அதேபக்கத்தில் வந்து நின்று, குருவிடத்தில் உபதேசம் செய்துகொள்ளலாமா, நான்

ஒருவருக்கு உபதேசஞ் செய்யலாமா, வித்தை ஆரம்பஞ்செய்யலாமா, எதிரியை வெல்லலாமா, வியாபாரம் செய்யத்தொடங்கலாமா, திருடப்போகலாமா, சூதாடத்துவக்கலாமா, இத்தனை நாளாய்த் தீராத வழக்கு வெல்லுமா, யானை-குதிரை-ஒட்டை-வண்டி இவைகளில் ஏறலாமா, பத்திரம் சாதனம் முதலிய எழுதலாமா, சங்கீதம் கற்கத்துவக்கலாமா, பிரசங்கஞ் செய்தால் செயிக்கலாமா, மந்திரங்கற்றால் சித்தியாகுமா, மருந்து சாப்பிட்டால் பிணி தீருமா, விருந்துபோஜனஞ் செய்யலாமா, பகையாளியை செயிக்கலாமா, இந்த வியாதி நீங்குமா, என்னும் இவ்வித கேள்விகளில் எதுகேட்டபோதிலும் அது தடையின்றி நடக்கும்; அல்லது செயமாகுமென்று சொல்லப்படும்.

## சந்திரக்குறி.

சந்திரகலை பூரணமாய் நடக்கும்போது அதே பக்கத்தில்வந்து நின்றவன்; மனைவாங்கலாமா, வீடுவாங்கலாமா, குளங்கிணறு வெட்டலாமா, யான் எண்ணிய விஷயத்தைப்பற்றி தூதனுப்பலாமா, நான்போய் பேசலாமா, புதுவஸ்திரந் தரிக்கலாமா, ஆபரணம் பூணலாமா, விவாகஎத்தனம் செய்யலாமா, குடிபோகலாமா, அரசரைக்காணலாமா, இட்டதெய்வம் பிரதிட்டைசெய்யலாமா, சுரத்திற்கு மருந்தருந்தலாமா, சமாதானஞ்செய்யலாமா, கல்வி கேட்டுக்கொள்ளலாமா, என்னும் இவ்வித கேள்விகளைக் கேட்கில் 'அது தடையின்றி நிறைவேறும்' அல்லது 'செயமுண்டாகும்' என்று சொல்லக்கூடும்.

## சுழிமுனைக்குறி.

சூரியகலை சந்திரகலை ஆகிய இரண்டு கலைகளிலும் சரமானது சமரசமாய் ஒத்துவருமாகில் அதற்குச் சுழிமுனையென்று பெயர் அப்படிச் சுழிமுனை நடக்தம்போது ஒருவன் வந்து யாதாமொரு காரியத்தை உத்தேசித்து கேட்பானாகில் அவனை சும்மா இருக்கச் சொல்வதே மிகவும் நன்று, அவன் நினைத்தகாரியம் ஒன்றேனும் ஆகாது. இந்தப்பொருள் அகப்படுமா என்றாலும் அகப்படாது. இந்தச் சுழிமுனை நடக்கும்போது நன்மையே கிடையாது; கெட்டகாரியமெல்லாம் சம்பவிக்கும்.

## பிரதானக்குறி.

சரம் ஓடுகிற பக்கம் பூரணபக்கமென்றும், சரம் ஓடாதபக்கம் சூன்னியபக்கம் என்றுபெயர்; ஆகையால், வழக்குபேசுதல்-

தர்க்கம்பண்ணுதல்- பெண்கேட்டல்-அடிமைகொள்ளல் அரசரைத்தரிசித்தல், தனக்கு மேலானவரிடத்தில் வார்த்தையாடல்ஆகிய இத்தொழிற் கெல்லாம் தனக்கு சரம் ஓடாத சூனியபக்கத்தில் எதிரி நிற்கும்படியாய்த் தான் நின்றுகொண்டு பேசினல் அந்தக் காலங்களில் எதுவேனுந் தடையின்றி நிறைவேறும்.

## சரத்தின் பரிபாடை.

| | |
|---|---|
| சந்திரகலை, | இடது நாசிக்குப் பெயர் இடகலையென்றுஞ் சொல்லப்படும். |
| சூரியகலை | வலது நாசிக்குப் பெயர் பிங்கலையென்றுஞ் சொல்லப்படும். |
| சுழிமுனை, | சுவாசமானது இரண்டுகலையிலும் பரவியோடுதலுக்குப்பெயர். |
| சூனியம், | சரம் ஓடாத பக்கத்திற்குப் பெயர். |
| இரேசகம், | சரத்தைவெளியே நடத்தலுக்குப்பெயர். |
| பூரகம். | சரத்தை உள்ளே இழுத்தலுக்குப் பெயர். |
| கும்பம். | சரத்தைத் தம்பிக்குதற்குப் பெயர். |

## சரசாதனர் சாப்பாடு.

இந்தச் சரசாத்திரத்தை விரும்பித் தானே அனுட்டிக்குமுயல்வதிலும் குருமூலமாய்த் தெரிந்து கொள்வது, சிலைமேலெழுத்தாகும். அன்றியும் சரசாதனத்திற்குத் தொடங்குபவர்கள் சந்திரகலைநடக்கும் போது போசனஞ் செய்யக்கூடாது. சாப்பிடவேண்டுமானல், உட்டிணமான பண்டங்களும் உப்புகசப்பு காரமாகிய பண்டங்களும் வைத்துக்கொண்டு தாகபானத்தை மட்டும் நிறுத்திச் சாப்பிடவேண்டியது. இவ்வாறு சாப்பிடுவதிலும் அரைவயிறு உணவே கொள்ளவேண்டியது. அதிக உணவு கொள்வார்களாகில் சிதளத்தைச் சார்ந்த தேகஙலிவையும், மந்தபுத்தியையும், அது கொடுக்கும் எத்தொழிலும்நடவாதசோம்பல்மேலிடும்.

சரசாதனத்தை அனுட்டிக்க விருப்பமுள்ளவர்களும் அனுட்டித்து வருபவர்களும், நீராடல் முதலிய நித்திய கருமத்திலே தவறுமல் நடந்து சுத்த போசனத்தையே உண்டு அவ்வாறுஉண்ணும் போதும் அன்னம் அரைவயிறும் சலம் கால்வயிறுமாகக்குறைந்த அளவையே கொள்ளவேண்டும். அன்றியும், தமக்காகவேண்டிய விடயங்களைப் பற்றிப் பிறரிடத்தில் பேசுதல் முதலிய காரியமெல்லாம் சூரியகலை நடக்கும்போதே அவர் செய்யவேண்டும்.

## சாயாதரிசனக் குறிப்பு.

ஆகாயத்தில் மேக மறைவுகளில்லாமல் பரிசுத்தமாய் வெய்யில் காயும்போது, மேடு பள்ள மில்லாதவிடத்தில் நின்றுகொண்டு தன்னிழல் ஐந்தடி நிகளம் முதல் பத்தடிநிகளத்திற்கு வளருதற்கு உள்ளாகிய சமயத்திலே தனதுநிழலின் முகமாகப் பார்த்தபடி நின்று, அந்த நிழலின் தலை-கழுத்து-கைகள்-கால்கள் இவ்வுறுப்புகளில் ஒன்றை கண்சிமிட்டாமல் கால்-அரை நாழிகைமட்டும் பார்த்து, அப்படியே ஆகாயத்தைநோக்கிப் பார்த்தால், அங்கே தன்னுருவம் தோற்றும். அவ்வுருவமானது பொன்னிறமாயிருந்தால், செல்வம்வரும்; வெண்மையா யிருந்தால் பிராணபய மில்லை; ஆயுள் வளரும்; செம்மை நிறமாகில் மனக்குறை-சஞ்சலம் - அபாண்டம் முதலியவை சம்பவிக்கும்; கருமையாகில், தேகநலி உண்டாகும். அன்றியும், அந்த உருவில் கையாவது காலாவது தோன்றுமலிருந்தால், ஆறுமாதத்தில் மரணமுண்டாம். இதுவுமன்றி, தலையே காணுமல் கவந்தமாய்த்தோன்றினுல்,மூன்றுமாதத்தில் மரணம்.இப்படியே சந்திரனிலும் பார்ப்பதுண்டு. இதற்குச் சாயாபுருட தரிசனமென்று சொல்லுவார்கள். இச்சாயா தரிசனத்தை இடைவிடாமல் பன்னிரண்டு வருஷம் பார்த்துக்கொண்டுவந்தால் தன் முன்னிருக்கும் நிழல் தன்னுடன்பேசும் அப்படி பேசும் பருவம் நேருங்கால், அதின் முகாந்தரமாய் அட்டமாசித்தியும் பெறலாகும். பெறுவதன்றி, பின்னுஞ் சிலநாட்களில், தன்னிழல் உருவமாகித் தன்னுடனே திரியும். படுத்தால், தானும் படுக்கும்; எழுந்தால், தானும் எழும்பும். அன்றியம், இவனுக்கு நேரிடும் நன்மை தீமைகளை முன்னதாகத் தெரிவிக்கும் இன்னமும் அநேக அற்புதங்களை விளைவிக்குமென்று பெரியோர் சொல்லுகிறுர்கள்.



# தரிசன இலக்கணம்.

## சூரிய தரிசனம்.

வலருதித் தவன்பால் தெரிசனை விநோதம்
வகுத்திடக்கே ளமாசிமத் யானத்தினில்
இலகியதா மிரவட்டத்தி னறுநெய் பெய்து
இப்புவியின் மேன்வைத் திவனுருவம் பாற்கி
நிலவசைதல் நிற்றல்கருத்திடல் சிவத்தலிவைநேர்
நிதிபதிவிட்டோட விறப்பிருப்பின் னேர்குணபாற்
குலமனைந்தனர்தாதை துணியவன்வங்கிசந்தாய்
குடும்பமிவைக் கவ்வாண்டா குலங்குரை வுற்றிடலே.

## நெய்யில் தோற்றும் சூரிய னுருவமும்பலாபலனும்.

ஆதித்தவாரமும் அமாவாசையும் கூடியதினத்தில் காலையி லெழுந்து, குளித்துமுழுகி விரதமிருந்து, சூரியபகவான் உச்சியில் பிரகாசிக்கும் மத்தியான காலத்தில் சமமான நிலத்தை மெழு கிக் கோலமிட்டு, ஒரு தாம்பாலத்தில் நிறையப் பசுவின் நெய் விட்டு அவ்விடத்தில்வைத்து, அதற்கடுத்த மேற்றிசையில் மஞ் சளினல் பிள்ளையார் பிடித்துவைத்து அறுகுசூட்டித் தாம்பூலம் வெல்லம் படைத்து, தேங்காயுடைத்துக் கற்பூர ஆராதனைசெய்து கணேசரையும் கதிரோனையும் தரிசித்து அசைவற்றிருக்கும் தாம் பாலத்திலுள்ள நெய்யினிடமாகத் தோற்றுகிற சூரியபகவானை, உனது இட்ட தேவதா சிந்தனையுடன் தியானித்துச் சுத்தியாகப் பார்க்கக்கடவாய். அப்படி பார்க்கும்போது கீழ்க்கூறியபடி எட் டுத் திசைக்கும் பலனறிக.

| | |
|---|---|
| சூரியன் ஒளியற்று பரிசுத்த வட்டமாய்த் தோற்றினல், | ஐசுவரியம் உண்டாம். |
| அசைந்தசைந்து காணப்பட்டால், | இடம் பெயர்வரும். |
| அசைவற்று நின்றல், | வாழ்ந்தவீட்டிலேவாழலாம். |
| கருமையாகக் கண்டால், | மரணம் வரும். |
| சிவந்துதோன்றினல், | மனம் துயரடையும். |
| கீழ்த்திசையில் குறைந்தால், | தன்குலத்திற்கு ஆகாது. |
| அக்கினி மூலையில் குறைந்தால், | தன் மனைவிக்கு ஆகாது. |
| தென்றிசையில் குறைந்தால், | தன் புத்திரருக்காகாது. |
| நிருதிதிசையில் குறைந்தால், | தன் பிதாவுக்காகாது. |
| மேற்றிசையில் குறைந்தால், | தன் சகோதரருக்காகாது. |

வடமேற்கு குறைந்தால், தனக்காகாது.
வடதிசையிற் குறைந்தால், தன் சுற்றத்தாருக்குமாகாது
ஈசானியதிசை குறைந்தால், தன்தாய்குடும்பத்திற்காகாது

மேலும், சூரியமண்டலத்தை நோக்கி, வெண்கமல மலரின் மீது செஞ்சோதியமைந்த விருத்தமண்டலத்தின் மத்தியிலிருப்பவராய், மாதுளம்பூவன்ன முடையவராய், திருவதனமொன்றும், திருவிழிகளிரண்டும், திருத்தோள்களிரண்டினுமுள்ள விகசித்த வெண்கமல மலர்களின் நாளம் இரண்டையுந் தாங்கும் இரண்டு திருக்கரங்கள் பெற்றவராய், செவ்வாடை யணிந்தவராயிருக்கும் ஆதித்த மூர்த்தியைத் தியானித்து,

"ஓம், சிவசூரியாயநம:" என்று செங்கமல மலராகிய செம்மலர்களால் அருச்சித்து,

பேசிடுவெண் டாமரையா சனனாகிச் சிவந்த
பேரொளிசேர் தருவிருத்த மண்டலமத் தியனு
யாசறுமா துளங்கமலம் போலுநிறத் தினனு
யலர்ந்தனவா யிருபுயங்க ளடைந்தவெண்டா மரையின்
காசறுநா ளம்பிடித்த கையிரண்டி னேடு
கருதுமொரு நகமிரண்டு கண்களுடை யவனைத்
தேசுமலி செய்யவுடை தனையுடுத்தோ னாகித்
திகழ்சிவசூ ரியனினிதஞ் சிந்தனை செய் திடுவாம்.
விளங்குதண்டி முதலோராற் சேவிக்கப் படுவோன்
விமலன்முத னற்சிங்க பதாசத்தின் மேலோன்
களங்கமிலாத் தீத்தைமுதற் சத்திகண சகிதன்
கருதருண மணியொளியன் கடோற்கான்ம மூர்த்தி
துளங்கலிறன் னங்கந்தன் னங்கமெனுங் கிரகந்
தொகுமுடுவா தியசூழச் சுவேதகஞ்சத் திவர்ந்தோன்
வளங்கொள்சுவே தாம்பரத்தோட் கரனிருகல் விழியோன்
வருசிவசூ ரியகாக்க மகிழ்ந்தடியேங் களையே.

என்று துதிசெய்து இருமுறை ஆன்மவலம் வந்து,

ஓம்வைகர்த்தநயநமஃ
ஓம்விவஸ்வதேநமஃ
ஓம்மார்த்தாண்டாயநமஃ
ஓம்பாஸ்கராயநமஃ
ஓம்ரவயேநமஃ
ஓம்லோகப்பிரகாசகாயநமஃ

ஓம்லோகசாக்ஷிணேநம:
ஓம்திரிவிக்கிரமாயநம:
ஓம்ஆதித்தியாயநம:
ஓம்மகாசூரியாயநம:
ஓம்அம்சுமாலினேநம:
ஓம்திவாகராயநம:

என்னும் துவாதச திருநாமங்களைக்கூறித் துவாதச நமஸ்காரம் புரிந்து நின்று தொழுது இச்சித்த வரங்களைப் பிராத்தித்துக் கொள்ளவேண்டும்.

## சந்திர தரிசனம்.

குறைவறுசோ மனைப்பூர்ணை நிசியிவணு ணடுமீக்
கொண்டமுக முத்தரமாய்ச் சுசிகொடுநோக் குதனு
நரைமலரா திபனிற்போ னண்ணிடிலப் பலமாம்
நடுவையிரு கரமடித்து நாட்டிதியுங் கலப்பாய்
நிறையவிராப் பகற்பொழுதுற் றிடுங்காலம் வடக்காய்
நின்மலவான் பார்க்கநிலா நிறைவிலுறும் நிறைதன்
மறைதல்வியா குலநிதிய மரணமிதன் பலமாம்
மலையமுனி யேகாதற் கிதன்சொல்லு மதுவே.
கடலுலகு முழுமையுமே விளக்கிக் காட்டும்
கதிர்மதியு மிருவர்களே கடவுளாகும்
உடலுக்குள் இருகலையாய் பிரிந்தே நாளும்
உயிரானோர் இரவிமதி யவரே யென்றும்
இடைவிடா திருநேரம் தெரிசித் தோர்கள்
ஏருலகப் பெருந்தகையை யெழுதப் போமோ
கடலுவகை உடலுலகிற் கருவ மைத்துக்
கதிர்மதியைக் கண்டவரே கடவுளாமே.

சோமவாரமும் பௌர்ணமியும் கூடியதினத்தின் இரவில்,பதினைந்து நாழிகையில், பூரணசந்திரன் ஆகாயத்தின் நடுமத்தியில் வரும்போது வடக்குமுகமாக நின்று அண்ணாந்த பார்வையாய்ப் பார்க்க; முன்பு சூரிய தரிசனத்திற் சொன்ன பலன்போல் அவ்வவ் வடையாளங்களுக்குள்ள பலாபலனைத் தெரிந்துகொள்க. அன்றியும் சித்திரை அற்பிசி-மாதங்களில் ஆதிவாரமும்பௌர்ணமியும் கூடியதினத்தின் இரவிலாவது, சோமவாரமும் அமாவாசி

யும் கூடியதினத்தின் நடு நிசியிலாவது ஆகாசம் நின்மலமாயிருக்கும்போது இடையை இரண்டுகரத்தாலும் பிடித்துக்கொண்டு வடக்கு நின்று தெற்கு முகமாகப்பார்க்க மேற்கண்ட உருவம் அளவுகுறைந்து தோற்றுமாகில், மனைவியாகூலம் உண்டாம். குறையாமல் நிறையாமல் நிறையளவாகத் தோற்றுமாகில், ஐசுவரியம் வளரும் யாதோ ருருவமும் தோற்றுமல் மறைந்து காணுமாகில், மரணம்வரும். இவை வருங்கால தரிசன மெனப்படும். இனி, நிகழ்கால தரிசனம் சொல்வோமாக.

## கருட தரிசனம்.

அருக்கனிலறியா தியற்றிடுந்திங்குக
 ளனைத்துமேவிலகு மரும்பிறைதன்னில்
திருக்குராபுந்தியும் குருவுமேவெற்றி
 பிரபலமாம் வெள்ளியுமுடவன்
தரித்திடுமாயுள் பூரணமென்னத்
 தவத்தவராலுரைத்த தரிசனமாகுங்
கருடனைநிதமும் கண்டாரடையுங்
 காட்சியின்மிக்கக் காட்சியில்லையால்.

| நாள். | தரிசனம். | பலாபலன். |
|---|---|---|
| ஞாயிறு | ,, | தான் அறிந்தும் அறியாமலும்செய்தபாவத்தினுல் அணுகியபிணி முதலிய நீங்கும். |
| திங்களும்-செவ்வாயும் | ,, | மனவியாகூலம் நீங்கிநன்மை உண்டு. |
| புதனும்-வியாழனும் | ,, | தன்மீதுற்ற பகைவரின் வல்லமை செல்லாது; தனக்கே வெற்றியுண்டாகும். |
| வெள்ளியும்-சனியும் | ,, | ஆயுள் வளரும் குடும்ப சந்தானம் உண்டாம். |

இவ்வாறு தரிசித்தல் ஒருநாளைக்கேயின்றி, பன்னாளும் செய்து வருவோருக்குச் சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்னும் நான்கு பதவிகளிலும் தத்தம்மாலிழைத்த பலனுக் கிசையப் பெறுதலுமன்றி இகத்திலுள்ளளவும் நோயற்றவாழ்வும், குறைவற்ற செல்வமுமுள்ள சம்பன்னராய் நீடித்த ஆயுளுடையராய் நாடியோருக்குக் கூடிய பரோபகாரி யாவரென முன்னோர்களால் பிரசித்தமாகக் கூறப்பட்டிருக்கின்றது.



# சயன லட்சணம்.

## படுக்குந் திசை.

கிழக்கே தலைவைத்துப் படுத்தால், தனசம்பத்துபெருகும்; தெற்கே தலைவைத்துப்படுத்தால், ஆயுள்விருத்தியாகும்; மேற்கே தலைவைத்துப் படுத்தால், கீர்த்திவளரும்; வடக்கே தலைவைத்தால், பிணியும் மனச்சஞ்சலமும் தரித்திரமும் அணுகும் என்று கார்க்கேயர் கூறுகின்றார்.

## படுக்கையின் தானம்.

தன்மனையில் கிழக்கே தலைவைத்தும், பந்துக்கள் மனையில் தெற்கே தலைவைத்தும், வழிநடை அல்லது தேசாந்திரம் செல்லுகையில், மேற்கே தலைவைத்தும் படுத்தல் வேண்டும். எப்பொழுதும் வடக்கே தலைவைத்துப் படுப்பது ஆகாதென்று விஷ்ணுபுராணம் விளம்புகின்றது.

## படுக்கை இலட்சணம்.

ஆவிக்கிசைந்த அறுசுவையுண்டியை அருந்திய பின்னர், தனதுகாலடியால் பூமியிற்பொருந்த நூறடி நடந்து பரவிய பின், படுக்கையிடத்திற்சென்று தனக்கு இன்பமாகும். மங்களதிரவியமுமணிந்து தாம்பூலமருந்தி, பலசிந்தனையும் நீத்துத் தனது அறிவை இருவிழிக்கும், நாசிக்கும் மத்தியமாகிய சுழிமுனையில் இமைப்போதேனும் நிறுத்தி நிருமல நினைவுடையவனாய் அகண்டபரிபூரண சச்சிதானந்த வத்துவே என்று மனத்தால் கடவுளைத் தியானித்து தனது இட்டதேவதையுந்தியானித்து, ‘பிரமன்-விஷ்ணு-உருத்திரன்-தீக்கடவுள்-சூரியன்-சந்திரன்-செவ்வாய்-புதன்-வியாழன்-வெள்ளி-சனி யாவரும் முன்னிருந்து யான் இன்றிழைத்த இருகருமமும் கைக்கொண்டு, இந்த பாவ இரவைத் தேவ இரவாக்கி, சுகநித்திரை யளித்து, யான் விழிக்குமளவில் நல்லதெரிசனங்கொடுப்பிராக’ என்று சிந்தனைசெய்து, ஆசாரியர் மூலமாக தீட்சை பெற்றோனாக இருந்தால் அவராலளிக்கப்பட்ட இராத்திரி சூக்தங்களையோதி, சாவித்திரி மந்திரங்களையுஞ் செபித்து, தலைமுதல் பாதாதிகேசமட்டும் அழுக்கில்லா ஆடையால் முக்காடிட்டுப் போர்வைபோர்த்து இடதுகையைத்தலைகீழாகவைத்துக்கொண்டு படுத்துக்கொள்ளக்கடவது.

## நித்திரையின் இரகசியம்.

மேற்கூறியவேதவாக்கிய இலட்சணப்பிரகாரம் நித்திரைசெய்யும் போக்கியமதையுடைய நரனானவன், சுகநித்திரைசெய்யும் புண்ணியர்களைத் தியானித்து, நாசமற்ற வியாபகப் பொருளுக்குவணக்கஞ்செய்து மனத்தை உள்ளத்தின்கண்ணே அசைவற நிறுத்தி இரவில் நித்திரை செய்யவேண்டும்.

## சுகநித்திரை செய்வோர்.

அகத்தியர்-திருவாமல்-கமலமுனி-ஆத்திகமுனி-இராஜவிருடி-இவ்வைவர்களும் சுகநித்திரை செய்வோராகும் பின்னும் அநேகருளரென வழிநூல்களில் கூறப்பட்டுளது.

## நித்திரைக்கு ஆகாத இடம்.

சத்தி கோட்டத்திலும், ஈசுவரகோட்டத்திலும், குமாரகோட்டத்திலும், முறிந்தகட்டில் மீதும், ஐவகை மரத்தாற்செய்த கட்டிலின்மீதும், முச்சந்தி-நாற்சந்தி கூடுமிடத்திலும், இடியால் வெந்த மரத்தடியிலும், முனி கன்னிமுதலிய இருக்கும் மரத்தடியிலும், எரிபருகிலும், மணலின் மீதும், புழுதியிலும், செங்கல் கிடக்கு மிடங்களிலும், சிறுவர்கள் நடுவேயும், நடப்பவர் நடுவேயும், வேள்வித்தீயின் மீதும், சாதாரணத் தீயின்மீதும், புற்றடியிலும், வெட்டவெளியிலும், நிர்வாணியாகவும், ஈரவுடையோடும், அழுக்காடையோடும், ஒத்த நிலமில்லாதமேடுபள்ளமான யிடத்திலும், பரப்பிய பச்சிலைமீதும், எண்ணெய் தலையோடும், எச்சிலோடும், கீழ்மக்கள் வாயிலிலும், சூரியன்மேலும், பகலிலும் படுத்துறங்கலாகாது என்று காண்க. இந்தச் சயனசாத்திர இலட்சணமானது, உசன முனிவராலும் மார்க்கண்டேயராலும்விஷ்ணு புராணத்தில் விசிதமாகக் கூறப்பட்டுள்ளது.

## நித்திரைக் குரிய காலம்.

அத்தமானம் தொடங்கிய பிரதோட காலத்தையும் வீண்போக்காது தத்தமது மதங்க ளனுசரித்த அரி அரக் கோட்டங்களிற் சென்று தரிசனம் செய்து ஒருசாமங் கடந்தபின்பு அறுசுவை உடைய அன்னம்புசித்து, பிறகு இரண்டுயாமம்வரையிலும் இருக்குவேதாதிக் கிரமங்களையாவது அரி அர கதாப் பிரசங்கமாவது செவியமுதாக ஊண்டிருந்து கடைசியில் ஒன்றரையாம

மட்டில் அரு நித்திரைகொண்டிருந்து விடிய அரையாம மிருக்கை யில் விழித்துக் காலைக்கடன் கழிக்கக் கடவது.

## நித்திரையின் பொது லட்சணம்.

தாழைவிழுதின் கீற்றுகளாற் பின்னியபாயிலும், கோரைக் கீற்றுகளாற் பின்னியபாயிலும் படுத்து நித்திரை செய்பவர்களுக்கு எவ்வித வியாதிகளும் அணுகாது, தேகத்தினிடத்தே வாதபித்த சிலேத்துமங்களை ஒன்றைவிட்டொன்று அளவு கடக்காவண்ணம் அது தடுத்துவிடும். அன்றியும், தலைசுழற்றல் - பாண்டுரோகம்-பித்தரோகம்-சீராமைக்கட்டி-அதி மூத்திரம்-அக்கினிமந்தம்-சுரதோடம் முதலிய நோயாளிகளுக்கு அவ்வியாதியை அதிகரிக்க வொட்டாமல் குறைமதியம்போல நாளுக்குநாள் குறைத்துவிடும்.

## நித்திரைக்காகாத பாயல்கள்.

சாதிப்பாயென்னும் பிரம்பினால் செய்யப்பட்டதும், பேரீச்சன் சிற்றீச்சன் பனை இவற்றின் ஓலையினால் பின்னியபாயும், மூங்கில்தடுக்கும் ஆகிய இவைகள் வனசஞ்சாரியாயிருக்கும் வேடர் வில்லியர் குறவர் மறவர் வலைஞர்முதலிய கானவர் தேகத்திற்கு ஒத்ததேயன்றி இல்லறத்தானுக்கு எவ்வளவும் இசைந்ததன்று. வறுமைக்கும் பற்பலவாகிய பிணிகளுக்கும் இவ்வகைப் பாயில்கள் வித்தாக முன்னிற்குமென்று அறியக்கடவது.

## படுக்கை யினம்.

மகப்பேறுடைய இல்லறத்தான் தனது மக்களை வேறு ஒற்றுமையாகத் திருத்திய அணையிற் கிடத்தி அதற்கடுத்த இடத்தில் தானும் தன்மனைவியும் படுப்பதே விதியாம். அப்படி யில்லையாயின், தன் மக்களை நடுவேயும் தானும் தன்மனைவியும் இருகடையிலும் சயனிக்கவேண்டும் அன்றியும், குழந்தைகள் தாய்ப்பால் மறந்து அன்ன முண்ண பழகுமளவும் புணர்ச்சியிற்றோய்ந்ததாய் தந்தையர் குளித்தாலொழிய அக்குழந்தையைத் தீண்டப்படாது.

## மேலோர் படுக்கை.

ஞானத்தை விரும்பிய மேலோன் மான்றோலின் மீதும், மோட்சத்தை விரும்பிய மேலோன் தருப்பாசனத்தின் மீதும், செல்வத்தையும் வீரத்தையும் விரும்பிய மேலோன் புலித்தோலின் மீதும், படுத்து உறங்கவேண்டும். தான் கோரிய விருப்பமே கடைப்பிடியாய்ப்பற்றி மனத்தை இரும்புத் தூணுக்கு நிகரத்திரு

த்திய வைராகிகளே மாத்திரமே இங்கு மேலோரென்று அறைய லாயிற்று. சாதாரண மனிதர்களுக்குக் கோரைப்பாயும் வெள்ளை வத்திரமுமேயன்றி மற்றவை தரித்திரமாம்.

☛ இவற்றுள் இன்னும் சில சந்தேகம் ஒழித்துக்கொள்ள விருப்பமுடையவர்கள் இந் நூலாசிரியனால் எழுதி அச்சிடுவித்திருக்கும் நோயில்லாவாழ்வு என்னும் புத்தகத்திற் காண்க.

---

## விழிப்பு தரிசனம்.

சூரியன் உதயமாவதற்கு அரையாமம் முன்னிட்டு மூன்றே முக்கால் நாழிகைக்குள்ளாக இரண்டு முகூர்த்தங்களிருக்கின்றன அவற்றுள், முதலாவது பிராமமுகூர்த்தம் இரண்டாவது இரௌத்திர முகூர்த்தமாம்.

முந்திய முகூர்த்தமாகிய பிராம முகூர்த்தத்தில் நாடோறும் விழித்துக்கொண்டு மனத்தையுங் கண்களையுந் தன் விசாரணையை நோக்கச்செய்து தானாகிய கருவிகளிடத்தும் தன்விழிகள் நோக்கும் எல்லாப் பொருள்களினிடத்தும் பூரணமாய்நிறைந்திருக்கும் நாசமற்ற வியாபகப் பொருளையும் நன்கு சிந்தித்து ஓம் சர்வ சம்மதவஸ்துவே சென்ற பொழுதில் யான் என்ன புண்ணியங்களைச் செய்தேன்? என்ன மெய்வார்த்தைகளைப் புகன்றேன்? என்ன வேள்வி செய்தேன்? யார் யாரைத் தரிசனஞ்செய்தேன்? என்று தன்னைத்தான் விசாரித்து தானிழைத்த கருமங்களைக் கடவுளுக்கு ஒப்படைத்தவாறு பூரணசம்மதமாய்த் தோத்தரித்து, என் கை கால் முதலிய கருவிகளிடத்திலும், நாட்டமாகிய விழியிடத்தும், ஓட்டமாகிய மனத்தினிடத்தும்,விருப்பாகிய ஆசையிலும்,வெறுப்பாகிய கோபத்திலும், என்னுயிரிலும் மன்னுயிரிலும், எங்கும் நிறைந்த நீக்கமற்ற வத்துவே! இன்றளவில் எனக்கு நல்ல தரிசனங்கொடுத்து, நல்லோர் வரவுதந்து, நல்லோர் உறவுதந்து, நல்லநினைவுகொடுத்து, நற்கருமங்களிழைக்கச்செய்து, இந்நாளெனக்கு நல்லநாளாக்கக் கடவாய், மரணமோ துன்பமோ நோயோ யாது வருமோ அறியேன்! அறியேன்! என்று அஞ்சிப் பயந்து கடவுளுக்கு நமஸ்காரஞ்செய்து நல்ல மனத்துடன் விழித்து மங்களவத்துக்களைத் தரிசனஞ் செய்யவேண்டும்.

---

## நித்திரைவிட்டெழுங்கால் விழிக்கும் பொருள்கள்.

முன்கூறியபடி முதலாவதாகிய பிராமமுகூர்த்தத்தில் தன் சாரணைகளை ஊக்கமாகச் சிந்தித்துக் கடவுளைத் தியானித்து, இரண்டாவதாகிய இரளெத்திர முகூர்த்தத்தில் விழிக்கக் கடவதென்றுகாண்க; அவ்வாறு விழிக்குங்கால், செல்வம் பெருமை வீரியமுயற்சி புகழ்பலிக்கும் வண்ணம் அவ் அறுகுணச்செல்வனை (அருவதுகடவுளை) பசுவை, வேள்வித்தீயை, காலைக்கடன் முடித்து வேதமோதி ஆசாரத்துட னுள்ளவர்களைப் பார்க்கின்றவன் சகல பிடைகளினின்று விலக்கப்படுவான்.

தன்னால் பூசிக்கப்பட்ட தாய் தந்தையர், ஆசாரியன், தெய்வவடிவம், அரசன், அருணவிபிம்பம், தன்னைக்காக்குந் தலைவன், தீபம், ஆழிமலை இவைகளைத் தரிசித்தவன், தான் நினைத்தகாரியம் தடைபடாது வெற்றிபெறுமென்பர். அல்லது, சென்றவிடம் சிறப்பெய்துமென்றுசொல்லுவர். மஞ்சள்-குங்குமம்-பூமாலை-பழவகை மங்களஸ்திரீ-கண்ணாடி-புகையொழிந்தநெருப்பு-வெள்ளி-பொன் வலக்கை-தாம்பூலம்-ஆபரணம்-நாற்று குழந்தைகள் - பூரணக்கும்பம்-வயல் - வேசி இவைகளைத் தரிசித்தவன் சர்வமங்களகரமும் மனச்சந்தோடமும் பெறுவான் என்று காண்க.

### பார்க்கத்தகாத பொருள்கள்.

வேதத்தால் விலக்கப்பட்ட தொழிலிபற்றுவோன்- அங்கவீனன்-ஆசாரமில்லாதவன்- நாத்திகன்-தரித்திரன் - மூக்கறுப் புண்டோன்-மொட்டை-பேடி-கூன்-குருடு-செவிடு - சடைசன்னியாசி கொலைத்தொழிலோன்-குட்டன்-வணிகன் - இருப்பாயுதம்-எண்ணெய் வலைசாணுன்-ஆகுசம்-விதவை-பாம்பு-பூனை-சாம்பல்-எருமை-வராகம் இவைகளை அதிகாலையில் விழித்து நோக்கக்கூடாதென சயனசாத்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

---

## மலசலக் கழிவு.

மேற்கூறியபடி இரவின் முடிவில் சுபலட்சணம்போல் விழித்தெழுந்து சலக்கரைசென்று மூன்று குடிநீர் வாயிற்பெய்து கொப்பளித்து உமிழ்ந்துவிட்டு மலசலங்களைப் பிரவிர்த்திக்கச் செல்லவும்;புல்லுகளாலாவது உலர்ந்த சருகு இலைகளாலாவது பூமியைமறைத்து ஆடையால் தலையையும் உடம்பையும் மூடிக்கொண்டு

வாய்பேசாது மலமூத்திரங்களை விடவேண்டும். விடுங்கால், சுவாசத்தை உள்ளே இழுக்கலாகாது.

### மலம் கழிக்கும் திசை.

பகற்போதில் வடக்கு முகமாயும், இராப்போதில் தெற்கு முகமாயும், உட்கார்ந்து மலமூத்திரங்களை யொழித்தல் வேண்டும். அக்காலத்தில், பூணூல் உள்ளவனும், தருப்பையால் அமைத்த பௌவித்திர முள்ளவனும், அவைகளை வலக்காதில் அணிந்திருக்கவேண்டியது, இல்லறத்தானாயின் பூணூலைக் கழுத்துடன் சுற்றி முதுகின் புறமாகத் தொங்கவிட்டு மலமூத்திரங்களை யொழித்தல் வேண்டும்; அல்லது செவிக்காயினும் சுற்றிவிடலாம்.

### மலம் கழிக்கும் இடம்.

சூரியனுக்கு எதிரிலும், அக்கினிக்கெதிரிலும், பசுக்களுக்கெதிரிலும், வெட்டவெளியிலும், ஆலயத்திற் கெதிரிலும், வேதியர் நிலத்திற் கெதிரிலும், மலர்பறிக்கும் சோலையிலும், அருந்துதற்குரிய வாவியருகிலும், நடக்கும் வழிகளிலும், கிழக்குமுகமாயும், மேற்குமுகமாயும், எப்போதும் மலம் கழிக்கலாகாது. இந்த விதியைக் கடந்து அங்ஙனமே பிரவிர்த்திக்க முயலுவோர்கள் ஆக்கினையென்னும் சாபத்திற்குப் பாத்திரமாவதன்றிச் செல்வமும் ஆயுளும்குறைந்து நரகலோகத்திற்கு முன்னிற்பார்கள் என்றுகாண்க.

### மலசலங்களை அடக்கலாகா.

மலசலங்களை அன்றாடம் கழிப்பது காலைக்கடனென்பதற்கு காரணம். இக்கடனை மாலைக்காலத்தில் கழிக்கலாகாது. காலையில் கழிக்க இடமில்லையாயின் மாலையில் கழிப்பதில் தோடமில்லை. அப்படி இருவேளையும் மலசலாதிகளை அடக்குவதால், பிராணனுக்குத் துன்பத்தை உண்டுபண்ணத்தக்க பயத்தை விளைவிக்கும். அதாவது, மலம் இறுகுமாயின், வாதம் அதிகப்பட்டு உடன்தையாக உஷ்ணம் சம்பந்தப்பட்டும், சீரணசக்தியைக் குறைவுபடுத்திப் பலபிணிகளுக்கும் வழியாகி விடும்.

திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமல்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காமல்-உண்ணுங்கால்
நீர்சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி.

என்று ஆயுள்வேதப் பேராசிரியராகிய தேரையரும் கூறியுள்ளார். இதன்பொருள்:—அன்றாடம் மலசலங்களை அடக்காமலும்,

மாதரின்பால் நாதத்தை விசேடித்து விடுக்காமலும், போசனம் செய்யுங்கால் நீரைக்காய்ச்சியும், மோரைவிளாவியும், நெய்யை உருக்கியும் உண்பவர்களின் பேரை உரைத்தாலே பிணிகள் அகன்று ஒழிந்துவிடும் என்பதாம்.

---

## தந்தசுத்தி இலக்கணம்.

### பற்கோலுக்குரிய மரங்கள்.

மா-புன்னை-வில்வம்-அத்தி-வேங்கை-கருவேல் - சாதிக்காய் மரம்-கருக்குங்கிலியமரம்-அலரி-நாயுருவி-இவைகளாலமைந்த பற்குச்சுகளால் பல்துலக்கவேண்மென சாத்திரம் கூறுகின்றது; இதுவுமன்றி, மணமுள்ள மரங்களும், முள்ளுள்ள மரங்களும், பாலுள்ளமரங்களும், பல்துலக்கப் பயன்படு மென்று இருடிகளால் சொல்லப்படுகிறது.

### பற்கோல் எடுப்பதற்கு மந்திரம்.

வேண்பா.

ஆலாயும் புன்னையுமா யத்தியுமா யுட்புறமும்
பாலாய் நிறைந்த பராபரமே-மேலாகும்
தாபரஞ்சேர் கானின் றருவரசே மோட்ச
ஞாபகமே நல்கென் றுரைத்து.

'காட்டின் தலைவனாகிய ஒ தருவரசே! நீர்எமக்கு ஆயுளையும்-ஆற்றலையும்-புகழையும்-ஒளியையும் - மக்களையும் - பசுக்களையும்-பாக்கியத்தையும் - பிரமஞானத்தையும் - சூட்சும குணத்தையும் கொடுத்துக் காப்பாயாக, என்னும் வாக்கியத்தைச் சிந்தித்தவர்களாய் வியர்த்தமாய் அழியும் பலகிளைகளையும் ஒடித்தெறியாமல் தனக்கு வேண்டியதை மாத்திரம் மந்திரப்பிரயோகத்துடன் தீண்டியொடித்துக் கொள்ளக் கடவர்கள்.

### பல்விளக்கும் திசை.

'பற்கோலைத் தானே சென்றெடுப்பவர்களும், அல்லது மேற்கூறிய விருட்சத்தினின்றும் ஏவலாளிகள் மூலமாய் கொண்டுவரப்பட்டு உபயோகிப்பவர்களும், அப்படிக் கொணரப்பட்ட பற்கோலைத் தீண்டும்போது மேற்கூறிய மந்திரச் சொற்களை ஒருமுறை உச்சரித்து அதன்பிறகு அந்தப் பற்கோலைத்தீண்டி எடுத்துச் சுத்த :சலத்தினால் மூன்றுவிசை அலம்பிய பிறகு, வலதுகை

யால் வாயில்வைத்து வாய்பேசாமல் கிழக்கு மேற்கு வடக்குஇந்த மூன்று திசைகளில் எந்தத்திசையேனும் நோக்கி இருந்து பற்றுலக்கவேண்டும். தெற்கு முகம் நோக்கி ஒரு பொழுதும் பற்றுலக்கக்கூடாது. நடந்து கொண்டும் பற்றுலக்கக் கூடாதென்றறிக.

## பற்கோல் அளவு.

வேதியர்க்குப் பன்னிரண்டங்குலமும், அரசனுக்கு ஒன்பதங்குலமும், வைசியனுக்கு ஆறு அங்குலமும், சூத்திரருக்கு நான்கு அங்குலமும், ஆக பற்கோலுக்கு அளவு அமைத்திருப்பதுமன்றி பாலுற்ற மரங்களில் தோன்றியதாகவும், சற்றேறக்குறையகடைவிரற் பருமனுடையதாகவும், தலையைவிட கடை சிறுத்துள்ளதாகவும், இருக்கவேண்டியது என்று பெரியோர் கூறுகின்றனர். இதுவுமன்றி, சிறுபற்களை உடையவர்களுக்குச் சிறுகனமுடையதும், நடுத்தரப் பற்களை உடையவர்களுக்கு நடுத்தரப்பற்கோலும், பருத்தபற்களை உடையவர்களுக்கும் கோணப்பற்களை உடையவர்களுக்கும் பருத்த பற்கோலும் ஆக பற்கோலானது மூவகைப்படுமென்று முதியோர் கூறுவர்.

## பல் துலக்கும் காலம்.

நோயின்றிச் சுகசரீரம்பெற்ற ஆடவர் வனிதைமார் யாவரேனும் சூரியவுதயத்திற்கு ஒரு முகூர்த்தப்பொழுது முந்தி, பிராதகாலத்திலெழுந்து பல்துலக்கவேண்டியது. அப்படி துலக்குவோர் புரோட்சித்துக் கொள்ள வெடுத்த சுத்த சலத்தை அவன் பிதுரர்களும் முனிவர்களும் தாங்களும் கவனித்து அந்தப் புண்ணிய புருடனை ஆசீர்வதித்து இந்நாளைப்போலவே தினதினமும் நல்லநாளாக நோயின்றி வாழக்கடவாயென வாழ்த்திச்செல்வார். இம்முறைதவறிக் கதிரோனுக்கெதிராக உதகம் உமிழும் பாமரனை நரனை அவன் பிதுர்களும் முனிவர்களும் முகம் காட்டாது பின் திரும்பி, 'பாவம் நிறைந்த பாத்திரமே! பரலோகமிழந்து நரலோகமடையக் கடவா, யெனக் கோபமுடன் சாபமிட்டேகுவாரென ஆன்றோர் அருளிச்செய் திருக்கின்றனர்.

## பல் துலக்க ஆகாதவை.

கமுகு தென்னை நொச்சி கடம்பு ஈந்து கரும்பிசினியுள்ள முருக்கு, செங்குருஞ்சி தேவதாரம் செம்பருத்தி வாழை இலவு புல்லு வைக்கோல் கரி மணல் சாம்பல் தழைகள் சிறுமுட்கள் கணுவுகள் அகத்தியொத்த சிறுநார் முதலிய உடையனவாய்ப்

பல்சந்திற் கொள்வன, திக்குணமுடைய மூங்கில், சித்திரமூலம், எருக்கு கள்ளி சோரங்கொட்டைமரம், கூந்தற்பனை வன்னி, தரும்பை, பனை, கருகாளம், தாழை, இந்த வத்துக்களால் ஒருபோதும் பற்றுலக்கலாகாது. பொன்மகள் தலைவனாகிய மகாவிஷ்ணு துலக்கினபோதிலும் ஐசுவரியமெல்லாம் அழிந்துபோகுமென்று சிரேட்டராகிய தவமுனிகள் கூறியிருக்கின்றனர்.

## பல் துலக்க ஆகாத தினங்கள்.

அமாவாசை பூரணை சூரியகிரணம் மாசப்பிறப்பு ஆகிய இந்நான்கு காலங்களிலும், பெண்புணர்ச்சி செய்யுந்தினம், சிரார்த்தம் செய்யுந்தினம், தான்பிறந்தநாள், மனைவி பிறந்தநாள், விரதநாள் உபவாசமிருக்கும் நாள், இக்காலங்களிலும், பிரதமை சஷ்டி, அஷ்டமி, நவமி, சதுர்தசி இத்தினங்களிலும், பிதுர்கடன்கழிக்குந் தினத்திலும் பற்றுலக்கக்கூடாது. இதுவுமன்றி, மண்கட்டி, கற்றாள் ஓடு இவைகளாலும் பெருவிரல் பவுத்திரவிரல் இவ்விரண்டுவிரலொழிய மற்ற மூன்று விரல்களாலும், பற்றுலக்கக்கூடாது. பெண்களுக்கென்றாலோ புருடன் ஊரிலில்லாத காலங்களில் பற்றுலக்கக்கூடாது.

## பல்துலக்கவிலக்கிய நாட்களுக்குச் சாந்தி.

மேற்கூறியபடி பல்துலக்கக்கூடாத நாள்களிலும் பழமையில்லாத கேணியிலெடுத்த புதிய சலத்தை வாயிற்பெய்து கொப்பளித்துமிழ்ந்து பவுத்திரவிரலினால் பற்களைத் துலக்கிப் பன்னிரண்டுவிசை ஷெசுத்த சலத்தால் வாய்கொப்பளிக்கவேண்டியது. இவ்விதிகள் யாவும் சாமான்னிய மனிதரால் சொல்லப்பட்டதன்று, கார்த்தியாயனர் உசனர் எமன் வியாசர் யாஞ்சவல்கியர் முதலிய திரிகாலமுணர்ந்த மகானுக்களால் கூறப்பட்டன.

---

# ஸ்நானவிதி.

முன்கூறிய விதிப்படிப் பற்கோலால் பல்விளக்கிக்கொண்டு சுத்தாசமனஞ்செய்து, முயற்சியோடும் வாய்பேசாது நாடோறும் உதயகாலத்தில் நன்றாக நீராடவேண்டும். உட்டினகாலம் வந்த அளவிலே, உணர்ந்தவன் செய்யத்தக்க ஒருதலையான தொழிற்கடனைமுடித்து விதிப்படிச் சுத்தஞ்செய்து பரிசுத்தமாகிய ஆற்றுநீரிலே நீராடவேண்டியது. நீராடாமலே செபம் ஹோமம்முதலிய கருமங்களைச் செய்யலாகாது; வாயினின்றும் வடிநீர் உமிழ்நீர்

வியர்வை இவைகளாற் பூசப்பட்ட வுடம்பையுடையவன் படுக்கையைவிட்டெழுந்து, உடம்பு மிக அழுக்கோடுங்கூடி யொளியற்று ஒன்பது தொளைகளையுடையதாய் மலங்களை அவற்றின்வழியே இரவும்பகலு மொழுகவிட்டுக் கொண்டிருக்கின்றது. ஆதலின், வைகறையில் நீராடுதல் அவ்வுடம்பினைச் சுத்தஞ் செய்வதாக விருக்கின்றது. அந்த முழுக்கு, கண் காணத்தக்க பயனையும் கண்ணுற்காணக்கூடாத புண்ணியப் பயனையும் தருதலுடையதென்று பெரியோர் புகழ்ந்து கூறுகின்றனர். காலையில்நீராடுவோன் சுத்தமான உள்ளமுடையவனாதலின் செபமுதலிய எல்லாக் கருமங்களையுஞ் செய்தற் குரியவனாகின்றான்.

## ஸ்நான காரணம்.

அறியாமையாலாயினும், ஆசையாலாயினும், இராக்காலத்தில் செய்யப்பட்ட தீயசெய்கையால் விளைந்த குற்றங்களை இருபிறப்பாளர் காலை முழுக்கினால் கழுவிச் சுத்தஞ்செய்து கொள்கின்றனர். இவ்வாறே,எப்பொழுதும் உஷத் காலையிலெழுந்து பல்விளக்கி, நீரின்மூழ்கி; தேவதருப்பணமும் இருடிதருப்பணமுஞ் செய்யவேண்டுவது கடமையாம். உஷத் காலங்களிலும் சந்திகாலங்களிலும், சூரியவுதய காலத்திலும், நீராடுதல் பிராஜாபத்தியமென்னும் விரதத்தோ டொப்பானது. எல்லாப் பாவங்களையும் நன்கு ஒழிக்கத்தக்கதாம். அப்படி நீராடி முடிந்தவுடன் இரண்டு கைகளையும் ஒருங்குசேர்த்து நிரம்ப நீரைப்பூரித்துக்கொண்டு பசுவின் கொம்பினுயரமளவாகக் கைமேலெடுத்து, நீர்நிலைநடுவே யந்நீரை யிறைத்தல் வேண்டும். உந்திவரையில் நீரிலிருந்துகொண்டு மேல் நோக்கிய உள்ளத்தால் சிந்தித்துத் தருப்பணம் செய்தல் வேண்டும் பிரரையும் இருடிகணங்களையும், தேவகணங்களையும், களிப்பிக்கும்படி நீரினால் தருப்பணஞ் செய்யவேண்டும். தேவதைகளையும்-தேவகணங்களையும்-முனிவரையும் - முனிகணங்களையும் நீரினால் தருப்பிக்கவேண்டும். நீராடியபின் அந்த நீர் நிலையிற்றானே பிதர்தேவர்களைத் திருத்திசெய்யவேண்டும். மேலேறி உடுத்தவாடையைப்பிழிந்து அதன்பின் சந்தியாவந்தனஞ் செய்யவேண்டும்.

## நீராடுவோன்.

நீராடும்போது ஆடையாலாயினும் கைகளாலாயினும் உடம்பைத் துடைக்கலாகாது; நீராடுகையில், உடுத்திருந்தவுடையை பிழியவுங் காது தலைமயிரை உதறலுமாகாது



## நீரின் இரகசியம்.

வேதகிரமமும் சுசிகரமுமுடைய மேலோன் நீராடும்போது தலையினின்றும் வடிகிறநீரைத் தேவர்கள் பானஞ்செய்கின்றனர். முகத்தினின்றும் வடிகிறநீரை பிதுரர் பானம் செய்கின்றனர். இடைக்கண் ஒழுகின்ற நீரையெல்லாங் கந்திருவரும் பானஞ்செய்கின்றனர். மூன்றுகோடியே ஐம்பது நூறுயிர உரோமங்களினின்றும் ஒழுகுகின்ற நீரானது எல்லாத் தீர்த்த பாவனையாகின்றது. முடிவில் தேகத்தினின்று பூமியிற்படிந்த நீரானது சகல சீவராசிகட்கும் ஆதாரமாகின்றது. ஆகையால், நீராடினவன் நீராடிய உடையாலாவது கையாலாவது துடைக்கலாகாது.

நீராடிய ஈரவுடையையுடையவனாய் மலமூத்திரங்களை விடுவானாகில் மூன்றுமாதம் பிராணாயாமஞ்செய்து மறுபடியும் நீராடினாலொழியச் சுத்தனாகமாட்டான்.

பிரமசாரியனுக்குக் காலை ஒரே தடவையும், கிரகத்தனுக்கும் வானப்பிரத்தனுக்கும் காலை உச்சி ஆகிய இரண்டு தடவையும், சந்நியாசிக்கு முக்காலையும் நீராடல் விதிக்கப்பட்டிருக்கிறது.

---

## வைணவ நித்திய கன்மம்.

உபநயனமானபின் மாலைச்சந்தி முதற்செய்து கிரமமாக மற்றைச் சந்திகள் செய்யவேண்டும்.

சூரியோதயத்திற்கு மூன்றுநாழிகை யிருக்கும்போது நட்சத்திரந்தோன்றுகிறது முதல், சூரியவிம்பம் காணப்படுகிறவரையில், காலைசந்தி அல்லது பிராதஸ் சந்தியா காலம்.

சூரியவிம்பம் அமர்வதுமுதல் நட்சத்திரம் தோன்றுகிறவரையில் மாலைச்சந்தியாகாலமாகும்.

மாலைச்சந்தி சூரியனோடு கூடியது உத்தமம். காலைச்சந்தி நட்சத்திரத்தோடு கூடியது உத்தமம்; மத்தியான சந்தி சூரியன் உச்சியிலிருக்கும்போது உத்தமம்; "காணாமல் கோணாமல் கண்டு கொள்க" என்பதும் இது,

உத்தம காலத்தில் சந்திசெய்கிறவர்கள் விசேடபலனையும் மோட்சத்தையும் பெறுவார்கள் என்றார் கவுதமர்.

பிறந்ததுமுதலிய சூதகங்கள்-சித்தப்பிரமை-அவசரம்-பயம் இவைகளொழிய மற்றெல்லாக் காலத்திலும் இரண்டு சந்தியாலு

ட்டானங்களும் செய்யத்தக்கதென்று விஷ்ணுபுராணங் கூறுகின்றது. நோய்த்துன்பமில்லாதவனும் சுகமாக இருப்பவனுமாகிய இருபிறப்பாளன் சந்தியாவந்தனத்தை விட்டுவிட்டால் பிராயச்சித்தஞ் செய்துகொள்ள வேண்டியுவனாகிறானென்று யோகயஞ்ஞுவற்கியர் கூறினர்.

சூதகத்தில் பிராணாயாம முதலிய ஏனையமந்திரங்களை மனதினாற் செய்து சந்திக்கடனை முடிக்கவேண்டுமென்று மரீசி கூறுகின்றனர்.

விடியற்காலமும் பிரதோடசமயமும் சந்திக்கடனுக்குச் சிறந்த காலங்களாகும்; அது கடத்தலால் கருமத்திற்குரிய பொழுது தவறிப்போதலில்லை என்று விருத்தமநு கூறினர்.

## சந்திக்கிரியை.

பூசுத்தம்-புராணசமனம்-சங்கற்பம்-மார்ச்சனம் - சலபானம் மிருதியாசமனம்-பிராணாயாமம்-அருக்கியதானம்-சந்தியாங்கதருப்பணம்-காயத்ரிமுக-சுருதியாசமனம்-காயத்ரிசெபம் - சூரியோபதானம்-காயத்ரீப்ரதாபனம்-புராணசமனம் ஆகிய இக்கிரியைகளை முறையாகச் செய்தல்வேண்டும்.

இவற்றுள், அர்க்கியப் பிரக்கோபனம்-காயத்திரீ செபம்-சூரியோபத்தானம் என்னும் மூன்றும் முக்கியமானவைகள்.

## பூசுத்தம்.

'உத்திஷ்டந்துபூத பிசாச்சா ஏதேபூமி பாரகா ஏதேஷாமவிரோதே நப்ரம்மகம் மசர்மாரபே' என்று சலத்தையள்ளி நிலத்தில் புரோட்டித்துப் பூசுத்தம் செய்யவேண்டும்.

## புராணசமனம்.

நியமம் வடக்கு முகம் அல்லது கிழக்குமுகமாக உட்கார்ந்து முழங்கால் நடுவில் கைகளை வைத்துக்கொண்டு மௌனமாய்ப் பிரமதீர்த்தத்தினால் ஆசமனம் செய்யவேண்டும்; முழங்காலுக்கு மேலனவான சலத்தில் நின்றுகொண்டு ஆசமித்தல் வேண்டும்; பீடத்தின்மேல் காலை வைத்துக்கொண்டாவது காலை நீட்டிக்கொண்டாவது ஆசமித்தல் கூடாது.

ஆசமிக்கும்போது புல் தருப்பை அல்லது பொன்னினாற்செய்த பவித்திரத்தையுடையவனாய் நதிசலத்தினால் ஆசமனம் செய்யவேண்டும்; நதி இல்லாத போது பொன் - வெள்ளி - மண் - அத்தித்

கட்டை இவற்றால் செய்த பாண்டத்தில் நிறப்பிய ஜலத்தால் ஆசமனஞ் செய்யவேண்டும்.

| மந்திரம். | கிரியை. |
|---|---|
| ஓம் கேசவாய ஸ்வாஹா<br>ஓம் நாராயணாயஸ்வாஹா<br>ஓம் மாதவாய ஸ்வாஹா | இம்மூன்றால் சலபானம் செய்கிறது. |
| ஓம் கோவிந்தாய நம<br>ஓம் விஷ்ணுவே நம | இவ்விரண்டால் கரசுத்தி செய்கிறது. |
| ஓம் மதுசூதனாய நம<br>ஓம் திரிவிக்ரமாய நம | இவ்விரண்டால் உதட்டைத் துடைக்கிறது. |

சுண்டுவிரல் அடியால் வருகிற தீர்த்தம் பிரசாபதீர்த்தம், சுட்டுவிரல் அடியால் வருவது பிதிர் தீர்த்தம், பெருவிரல் அடியால் வருவது பிரமதீர்த்தம், கைநுனியால் வருவது தெய்வ தீர்த்தம் என்றார் யாஞ்ஞவற்கியர்.

| | |
|---|---|
| ஓம் வாமனாய நம<br>ஓம் ஸ்ரீதராய நம | இவ்விரண்டால் கைகளை அலம்பிக்கொள்கிறது. |
| ஓம் இருடிகேசாய நம<br>ஓம் பத்மநாபாய நம | இவ்விரண்டால் கால்களை அலம்பிக்கொள்ளுகிறது. |
| ஓம் ப்ரத்தியும்நாய நம | சிரசைத்துடைத்துக்கொள்ளுகிறது. |
| ஓம் சங்கர்ஷணாய நம | விரல்நுனியால் மோவாய்க்கட்டை. |
| ஓம் வாசுதேவாய நம<br>ஓம் ப்ரத்தியும்நாய நம | கடைவிரல் சுட்டுவிரல்களால் நாசியிருபுறங்கள். |
| ஓம் அநிருத்தாய நம<br>ஓம் புருடோத்தமாய நம | பெருவிரல் மோதிர விரல்களால் இரண்டுகண்களை தொடுகிறது. |
| ஓம் அதோக்ஷஜாய நம<br>ஓம் நரசிம்மாய நம | கட்டைவிரல் சுண்டு விரல்களால் நாபி உள்ளங்கையால் மார்பு தொ-து. |
| ஓம் அச்சுதாய நம | கையைத் தலைமீதுவைத்து |
| ஓம் ஜநார்த்தனாய நம<br>ஓம் உபேந்திராய நம | கைகூப்பிக்கொண்டு |
| ஓம் அரியே நம<br>ஓம் கிருஷ்ணாய நம | இருபுயத்தின்மேல் தொடுகிறது. |

சங்கர்ப்பம்.

ஸ்ரீகோவிந்த கோவிந்த மகா விஷ்ணோராக்ஞயபா-ப்ரவர்த்தமானஸ்யாதய ப்ராஹமணோத்விதிய-ப்ரஹராத்த-ஸ்வேதவராஹகல்பே-வைவஸ்த மந்வந்தரே-கலியுகே-பிரதமபாதே-ஜம்புத்தீபே-பார

தவருஷே-பாதகண்டே-மேரோர்வதக்ஷிணே திக்பாஹே புஷ்கர தேவ த்திர ஸமஸ்தேவதா-பிராம்ணஸ் ஸந்நிதௌ - அஸ்மின்வர்த்த மான-விவகாரிக-சாந்திரமானேந - ஸம்வத்ஸரே-அயநே - ருதௌ-மாஸே-பக்ஷேதிதெ - வாஸரே-ஸ்ரீவிஷ்ணு நக்ஷத்ரே-ஸ்ரீவிஷ்ணுயோ கே-ஸ்ரீவிஷ்ணு கரணே-ஏவங்குண விசேஷண-விசிஷ்டாயாம்-சுபதி தௌ-ஸ்ரீபரமேச்வர-முத்திசயம்-மோபாத்த-துரிதக்ஷயத்வாரா - ஸ்ரீ பரமேஸ்வரப் பிரிதியர்த்தம் ஸந்தியா முபாஸிஷ்யே.

### மார்ச்சனம்.

சரீரத்தின் புறச்சுத்தி சாதனமாயுள்ளது.

நியமம் - வலதுகையினால் தருப்பையைக்கொண்டு சலத்தைக் கிரகித்து ஒரே தாரையாய் மார்ச்சனம் செய்தல் வேண்டும்.

| மந்திரம். | கிரியை |
|---|---|
| ஓம் ஆபோஹிஷ்டாம யோயுவஹ | சிரசின்மீதில், |
| ஓம் தானவூர் ஜேததாதன | பாதத்தின்மீதில், |
| ஓம் மஹோணபசக்ஷசே | கீழ்த்தேகத்தில், |
| ஓம் யோவஸ்ய சிவத்மோரச | கீழ்த்தேகத்தில், |
| ஓம் தஸ்யபாஜயதேஹன | பாதத்தின்மீதில், |
| ஓம் உசதீரிவபதா | சிரசின்மீதில், |
| ஓம் தஸ்மா அரங்கமாமவ | சிரசின்மீதில், |
| ஓம் யஸ்யக்ஷயாயஜின்வத | கீழ்த்தேகத்தில், |
| ஓம் ஆமோஜனயதாச்சன | பாதத்தின்மீதில், |

புல்லோடு சலத்தைக் கீழேவிடவேண்டியது.

---

### சலபானம்.

சரீரத்தின் அகச்சுத்தி சாதனமாயுள்ளது.

அக்கினிஸ்ச-மாமன்யுஸ்ச-மன்யுபதஸ்ச - மன்யுருக்தேப்ய பாபேப்யோ ரக்ஷந்தாம்-யத்ராத்ரிய பாபமகார்ஷம்-மனசா வாக்ஹ ஹஸ்தாப்யாம்-பத்ப்யா முதரேண சிஷ்நா-அஹஸ்தவலும்பது-எத் கிஞ்ச துரிதம்மயி-இதமஹம் மாமிருதயோ னௌசந்தியே ஜோதிஷி ஜுஹோமி-ஸ்வாஹா என்னும் மந்திரத்தை சாயங்காலையில் உச் சரித்துச் சலபானம் செய்வது.

சூர்யஸ்ச மாமன்யுச்ச-மன்யுபதச்ச-மன்யுருக்தேப்ய - பா பேப்யோ ரக்ஷந்தாம் யத்ராத்ரிய பாபமகார்ஷம் மனசா - வாக்ஹ

ஹஸ்தாப்யாம்-பத்ப்யாமுதரேண சிஸ்நா-ராத்ரிஸ்தத்வலும்பது யத்கிஞ்ச் துரிதம்மயி இதமஹம் மாமம்ருதயோனௌ-ஸூர்யே ஜோதிஷி ஜுஹோமி-ஸ்வாஹா என்று காலைச்சந்தியில் சலபானம் செய்வது.

ஆப் புனந்துப்ருதிவீம்-ப்ருதிவீபூதா புனாதுமாம் - எதுச்சிஷ்டம் போச்சியம் யத்வா துர்ச்சரிதம்மம-சர்வம்புனந்துமா- மாபோஸ்தாம்ச்ச பிரதிக்ரஹக ஸ்வாஹா என்று மத்தியானத்தில் சலபானம் செய்வது.

---

## மிருத்தியாசமனம்.

### ஸ்ரௌதம்.

காயத்திரீ ஜெபத்தினாலும் அமாவாசை பருவந்தனிலும் செய்வது.

### மந்திரம்.

ஓம் தத்ட்து விதுர்வரேண்யம் - பர்கோ - தேவஸ்யதீமஹி தீயோயோ நப்ரசோதயாத்.

### கிரியை.

உட்கார்ந்து மூன்றுதரம் சலபானம் செய்வது; இச்சலம் பிராமணர்-சத்திரியர்-வைசியர்களுக்கு முறையே நாபி-கழுத்து- தாடைகளைச் சேரவேண்டும்.

### மந்திரம்.

ஒன்பது மார்ச்சனம்,ஏழு வியாகிருதிகள், மூன்று காயத்ரீ பாதம், இரண்டு காயத்ரீ சிரசு.

### கிரியை.

உதட்டை அடிவிரலால் இரண்டு தரம் துடைத்தல், நீரை வலது கையில் இடது கையினால் விட்டு, அந்தநீரினால் பாதத்தையும் சிரசையும் ஸ்பரிசித்துக் கட்டைவிரல் மோதிரவிரலால் கண்களை ஒத்திக்கொள்ளல், கட்டைவிரல் அடுத்த விரல்களால் நாசியிருபுறங்களைத் தொடுதல், கட்டைவிரலால் காதுகளைத் தொடுதல்செய்து கைகளைக் கழுவிக்கொள்ளல்.

### சுமார்த்தம்.

மூன்றுதரம் சலபானஞ்செய்து வலதுகையினால் இடதுகையில் சலத்தை நிறுத்திக் கைகளைக் கழுவிக்கொண்டு முகத்தை இரண்டு தரந் துடைத்துக் கால்களை அலம்பிக்கொண்டு நான்குவிரல்களினால்

உதட்டைத் துடைத்து-அங்குஷ்ட தாஜனி (பெருவிரல் - சுட்டு விரல்) களால் நாசியினிருபுறங்களையும், கட்டைவிரல் நடுவிரல்களினுல் கண்களையும், கட்டைவிரல் மோதிர விரல்களினுல் காதுகளையும், கட்டைவிரல் சுண்டுவிரல்களினுல் நாபியையும், கரதலத்தினுலிருதயத்தையும், எல்லா விரல்களினுலும் சிரசையும், பாகுமூலத்தையும் தொடவேண்டும்.

---

## பிராணுயாமம்.

அகச்சுத்தி சாதனமாயுள்ளது.

நியமம்—கண்களை மூடிக்கொண்டு வாய்பேசாமல் பிராணுயாமம் அப்பியாசிக்கவேண்டும். மூக்குநுனியைக் கிரகத்வானப்பிரஸ்தன் ஐந்து விரல்களினுலும்-எதி பிரமச்சாரிகள் சுட்டுவிரல் மோதிரவிரல் பெருவிரல்களினுலும் பிடித்துக்கொள்ளல் வேண்டும். இதற்கு ஓங்கார முத்திரை யென்று பெயர்.

### மந்திரம்.

ஓம்பூர்-ஓம்புவ-ஓம்ஸ்வா-ஓம்மக்ஷ ஓம்ஜன- ஓம்தபஸ் - ஓம்சத்யம்-ஓம்தத்சதவிதுர் வரேண்யம் - யர்கோதேவஸ்யத்தீமஹீத்யோ யோன ப்ராசோதயாது-ஓமா போஜ்யோதி-ரசோம்ருதம்-ஓம் பிரம் பூர் புவஸ்வரோம்.

### கிரியை.

பிரணவ அபிதேயமான கிரம்பத்தை இருதயத்தில் தியானஞ்செய்துகொண்டு மூன்றுதரம் இம்மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூக்கினிடத்துச் சுவாசத்தினுல் வாயுவைப்பூரித்து இருதயத்தில் அதைச் சலியாமலிருத்தி வலது துவாரத்தினுல் வெளிப் படச் செய்வது.

### அருக்கியதானம்.

சூரியனைப் பாதிக்கின்ற இராக்கதர்களுடைய நாசத்தின் பொருட்டுச் செய்வதாகும்.

நியமம்—சூரியனைநோக்கிக் காலையில் குனிந்தும், மத்தியானத்தில் சாந்தமாய் நின்றும், மாலையில் உட்கார்ந்தும், அர்க்கியதானஞ் செய்தல்வேண்டும். காலை மத்தியானத்தில் தானமாகவிடும் நீரைச் சலத்தில் அல்லது சலத்தால் புரோக்ஷிக்கப்பட்ட நிலத்தில் விடவேண்டியது. மாலை அருக்கியம் சலத்தில் விடுதல் கூடாது.

### மந்திரம்.

ஓம் தத்ஸத் விதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்யத் தீமஹீதி யோயோனப்ராசோதயாது.

### கிரியை.

கைகளாலெடுத்து மந்திரித்து மோந்து தரையில்விட்டு வேறு சலத்தில் காயத்திரியைச் செபித்து சூரியனுக்கெதிராக நின்று ஒரு தரம் அருக்கியதானம் மூக்கின் நுனியுயரம் தூக்கிவிடல்வேண்டும்.

---

## சந்தியாங்க தருப்பணம்.

நியமம்—மிருத்தியாசமனம் இருமுறைசெய்து, பிராணயாம பூர்வோக்த விஷ்ணு (சிவ) ப்ரீதியர்த்தம் பிராதஸ் ஸந்தியாங்க தருப்பணம் கர்ஷீயே என சங்கற்பித்து.

மந்திரம்:—ஸந்தியாம் தர்ப்பயாமி
காயத்ரீம் தர்ப்பயாமி
ப்ராஹ்மீம் தர்ப்பயாமி
நிமிருஜீம் தர்ப்பயாமி
விரத்தியாநிக சந்தியாங்க தருப்பணங் கர்ஷியே
மந்திரம்:—சந்தியாம் தர்ப்பயாமி
சாவித்ரீம் தர்ப்பயாமி
ரௌத்ரீம் தர்ப்பயாமி
நிம்ருஜீம் தர்ப்பயாமி
சாயம் சந்தியாங்க தருப்பணங் கர்ஷியே
மந்திரம்:—சந்தியாம் தர்ப்பயாமி
சரஸ்வதீம் தர்ப்பயாமி
வைஷ்ணவீம் தர்ப்பயாமி
நிம்ருஜீம் தர்ப்பயாமி
என்று ஜலத்தை அள்ளிவிடல் வேண்டும்.

---

### காயத்திரி இலட்சணம்.

காயத்திரி மந்திரத்தினுடைய சந்தசு காயத்திரி, ரிஷி விசுவாமித்திரன், தேவதை சூரியன், முகம் அக்கினி, தலை பிரம்மா, இருதயம் விஷ்ணு, சிகை உருத்திரன், யோனி பூமி, தேவதத்தன் கூர்மன், தனஞ்சயன் நாகன், சிறுதறன் என்று மைவகையுடப்பிராண

க்களையுடைய பிராணன், அபானன், வியானன், உதானன், சமா [illegible] தேவதாதிர்வாகிய காயத்திரிபானது விசுவாமித்திர இருடிகளவரால் இருக்கு வேத சங்கிதை மூன்றும் மண்டலக் கடைசி சூக்தத்தில் தோத்தரிக்கப்பட்டுள்ளது.

காயத்திரி முகம்.

ஓம்தபோக்ஷாம் பிரம்ஹ அக்கினிதேவதா பிரம்ஹரிஷியார்ஷம்-காயத்ரம் சந்தம்- காம்ஜம் சுருபம் - சயுஜ்யம் விநியோகம் என்பதாம்.

காயத்திரி ஆவாஹனம்.

க. ஆபர் துவாதர்தேவி அக்ஷரம்-பிரம்ம சம்மிதம் காயத்ரீம் ச்சந்த ஸாமாதேதம் ப்ரம்ஹஜுஷஸ்வமே.

உ. எதஹ்னாத் குருதேபாபம், ததஹ்னாத் ப்ரதி முச்யதேய்த் ராத்ரிசாத் குருதேபாபம் தத்ராமரியாத்ப்ரதி முச்யதே சர்வனே மகா தேவி ஸந்தியாவித்யே சரஸ்வதி.

ங. ஓஜோஸி ஸஹோஸி பலமஸிப்ராஜோஸி தேவானும் தாமகாமாஸி விஸ்வமஸி விஸ்வாயு, ஸாவமஸி ஸர்வாயு ரபிபூர் வோம் காயத்ரீ மாவாஹயாமி.

ச. *சாவித்திரீ மாவாஹயாமி. ○ ஸ்ரவஸ்வதிமாவாஹயாமி ச்சந்தருஷி நாவாஹயாமி, ஸரியமாவாஹயாமி, சாவித்திரியாரிஷி விஸ்வாமித்திர தேவி =காயத்ரீ சகந்த பரமாத்மா வேதவா.

---

காயத்திரி மந்திரம்.

| | |
|---|---|
| ஓம்பூர்வஸ்வமஹாஜனதம ஷத்தியம். | வியாகருதி, |
| ஓம் தத்ஸவிதுர்வ ரேணியம் பர்கோ தேவஸ்யதிமஹி, தியோயோந ப்ரசேதயாத் | பாதம். |
| ஓமாபோஜ்யோதீ ரசோம்ருதம் பரஹ்மபூர்ப்புவஸ்ஸுவரோம, | சிரசு. |

---

* ஸவித்ரு மண்டலத்தில் வசிப்பவராதலால் ஸாவித்ரீ.

○ பிரபஞ்சத்துக்கு தாயானதால் ஸரஸ்வதி.

= பரிசுத்தமான அந்தக் கரணத்தோடு தியானிக்கிறவனைக் காப்பாற்றுகிறது காயத்ரீ.

பரோரஜ ஸேஸாவதோ.

இது காயத்திரியின் நான்காவது பாதம், அதர்வண வேதத்தில் உள்ளடங்கியது. உபநீதனுக்கு மூன்று பாதங்களுடைய காயத்திரி மாத்திரம் உபதேசிக்கவேண்டியது விதியாதலால், இதை உபநீதன் செபிக்கவேண்டியதில்லை.

காயத்திரி தியானம்.

முக்தாவித்ரு மஹேமநீல தவளச்சாயைர்முகை ஸ்திரீக்ஷணை,
ருயுக்தாமிந்து நிபந்தரத்நமகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம்
காயத்ரீம் வரதாபயாங்கு சகசாஸ்ஸூப்ரம்கபாலம்கதா
சங்கம் சக்ரமதார விந்தயுகளம் ஹஸ்தைர்வ ஹந்திம்புஜே.

காயத்திரி செபம்.

வாசிகம், உபாம்சு, மானசிகம்எனச் செபம் மூவகைப்படும்; அவை யொன்றுக்கொன்று முறையேசிறந்தது. வாசிகம் - வாக்கினாலே நன்றாக உச்சரிப்பது; உபாம்சு- அன்னியரால் சிறிதும் கேட்கப்படாதது; மானசிகம்- சொல்லின் பொருளைச் சிந்தித்து வாக்கியார்த்தங்களை அனுசந்தானம் செய்வது.

கிரியை—சுருதி யாசமனம்.

சங்கற்பம்:—பிராணாயாம பூர்வோக்த (விஷ்ணு சிவ) ப்ரீத்யர்த்தம் (காலை உச்சி மாலை) சந்தியா சந்தியாங்கம் யதாசக்தி காயத்ரீ ஜெபங் கர்ஷ்யே.

மந்திரம்:—ஓம் தத் ஸவிதுர்வரேணியம் பர்கோ தேவஸ்ய தீமஹி தீயோயோந ப்ரசோதயாத்.

தருப்பாசனத்திலிருந்துகொண்டு தருப்பை பவித்திரத்தைக் கையில் தரித்துச் சூரியமுகமாயாவது அல்லது வடக்குமுகமாயாவது பிராதக்காலத்தில் உந்திக்கு நேராகவும், மத்தியானகாலத்தில் மார்புக்கு நேராகவும், சாயங்காலத்தில் மூக்கு நுனியிலும், செபமாலையைவைத்து உத்தமபட்சம் ஆயிரமுறை மத்திமபட்சம் நூறுமுறை அதமபட்சம் பத்து முறையாக பிரணவ மந்திரத்தோடும் வியாகிருதி மந்திரத்தோடும் கூடிய காயத்திரி மந்திரத்தைச் செபம் செய்யவேண்டும்.

கரன்யாசம்.

தத்சது:—அங்குஷ்டாப்யாம் நம
வரேண்யம்:—தர்ஜநீப்யாம் நம

பர்கோ தேவஸ்ய:—வ்த்யமாப்யாம் நம
தீமஹீ:—அநுமிகாப்யாம் நம
ப்ரசோதய த்:—காதலகரப்ருஷ்டாப்யாம் நம

ஹ்ருதயாங்கியாசம்.

தத்ஸவிதுர்-ப்ரம்ஹாத்மனே ஹ்ருதயாய நம
வரேண்யம்-விஷ்ணுவாத்மனே சிரசே சுவாஹா
பர்கோ தேவஸ்ய-உருத்ராத்மனே சிகாயை வஷட்
தீமஹீ-சத்தியாத்மனே சுரோத்ராய கவசாயகும்
தியோயோந-க்ஞாத்மனே நேத்ராப்யாம் வஷட்
ப்ரசோதயாத்-சர்வாத்மனே ஸ்த்ராயபட்
ரிர்புவஸ்வரோம்-இதிதிக் பந்தஹ

சூரியோபஸ்தானம்.

ஸ்மிருத்தியாசமனஞ்செய்து, சந்தியாங்க சூரியோபஸ்தானம் கர்ஷியே என்று சங்கற்பித்து,

க இமம்மேவருணச்ருதீக வமத்யாச்சம்ருடயத்வாம வஸ்ஸி புராச்சமேதத்தாமிம்ரம்ஹணவந்த மாஸத்தானசாந்தே யஜமனே ஹவிர்ப்பிகி அஹேடமானே வருணே ஹதோத்யுரு ஸக்சமாஆயு ப்ரமோக்ஷ எக்சித்தி தேவிசோய தாப்ரதேவவருணவ்ரதம் மினீம சித்தவித்ய.

உ. தயத் கிஞ்சேதம் வருண தைவ்யேஜனே பிதுரோஹம்ம ஜுஷ்யாச்சராமசி, அச்சித்தியத்தவ தர்மாயு யோபிமமானஸ்தஸ்மா தேன் சோதவரிஷ கிதவாசோபத்ரி ரிபுர்னதிவியத்வாகாசதய முபன்னவித்ம ஸர்வாத்மா விஷய வஸிதிரேவதேவதா தேஸ்யாம வருணப்ரியாஸ்

ங. இது சாயம் சந்திய சூர்யோபஸ்தான மந்திரம்.

மித்ரஸ்யச்_சர்ஷணீ த்ருதஸ்ரவோ தேவஸ்ய சானஸிம் தத் யம் சித்ரஸ்ரஸ்தமம் மித்ரோஜனனியாய திப்ரஜானன்மித்ரோதாதர் ரப்ருதிவீ முதத்யாம் மித்ரஹக்ருஷ டீரநிமிஷா பிச்சஷ்டேஸத்யாய ஹவ்யம்க்ருதவத்விதேம்ப்ர மித்ரமர்தோ ரகஸ்து ப்ரயஸ்வான்யஸ்த ஆதித்ய சிக்ஷதிவ்ரதே னஹன்யதே நஜீய தேத்வோனைநமக்கோ அஸ்கோத் யந்திதோ நதூராத்.

ச. இதுவே கால சூரியோபஸ்தான மந்திரம்.

## காயத்திரி வந்தனம்.

"யாச்சதா சர்வபூதா சிசராணிஸ் தாவராணிச்
சாயம் ப்ராதர் நமஸ்யந்தி சாமாசந்தியா பிரகூது"

## காயத்திரி ப்ரஸ்தாபனம்.

க. உத்தம தேசிகரேஜாதே பூம்யாம் பர்வத மூர்த்த, ப்ரா ஹமணேப் யோப்பனுக்ஞாதா கச்சமேவி யதாசுகம்,

உ. ஸ்துதோமயா வரதாவேதமாதா ப்ரதசோதயந்தியவு னே த்விஜாதாஆயு, ப்ருதிவ்யாம் த்ரவிணம் ப்ரஹமவர்ஜசம் மஹ யம் த்வாப்ரயாதும் ப்ரம்ஹலோகம்.

## சுலோகம்.

சிவாய விஷ்ணுரூபாய சிவரூபாய விஷ்ணுவே, சிவஸ்யக்ரு தயம் விஷ்ணூர் விஷ்ணோய்ச் சஹருதயஞ் சிவ, யதாசிவமயோ விஷ்ணுரேவம் விஷ்ணுமயஸ்ஸிவ யதாந்தரம் நபஸ்யாமி ததாமே ஸ்வஸ்திராயுஷி, நமோப்ரஹமண்ய தேவாயகோப்பிராம்ஹணஹி தாயச்ச, ஜகத்திதாய க்ருஷ்ணய கோவிந்தாயநமோக, ஆகாசாத் பதிதம் தோயம், யதாகச்சதிசாகரம், சர்வதேற நமஸ்காரகேச வம் ப்ரதிகச்சதி, கேசவம் ப்ரதிகச்சத்யோந் நமயிதி.

## அபிவாதனம்.

ச்சதுஸ்ஸா காபர்யந்தம் கோப்ராம்ஹணே ப்யஸ்சுபம் பவ துப்ரவான்வித கோத்ரஹ காகாத்யாயி சூத்ரஹ அஹம்பேஹ அபிவாதயே.

## பிராணயாமபேதம்.

இஃது பூரகமென்றும், கும்பகமென்றும், இரேசகமென்றும் மூன்றுவகையினையுடையது. இவைகளில் மூக்கினுலிழுக்கப்பட்ட மூச்சு பூரகமென்றும், மூச்சடங்குங்காலத்து கும்பகமென்றும், பின்னர் அந்த மூச்சை மெல்லமெல்லக் கீழ்விடுங்காலத்தில் இரே சகமென்றும் யோகயாஞ்ஞவற்கியர் கூறினர்.

## சந்திக்கடனுக்குரிய மார்ச்சனம்.

ஆபோஹிஹடா என்ற இருக்குவினல் தருப்பை நீராய்பிர ணவத்தைச் சேர்த்து அம்மரத்தின் எட்டு வாக்கியங்களாலும் எட்டு விசை தேகத்தின் மீது இறைத்துக்கொள்ள வேண்டுவது என்றார் வியாசர்.

15



புரோடித்துக்கொள்ளுகை, அருச்சித்தல், பலியேற்பித்தல், உண்டல் ஆகிய இந்த நான்கு கருமங்களையும் தெய்வதீர்த்த முத்திரையால் செய்யவேண்டும் என்றார் ஹாரீதர்.

அந்த மார்ச்சனத்தைத் தாரையாக விழுந்துகொண்டிருக்கும் நீரிற் செய்யலாகாது. தாரையாக விழுகின்ற நீரினால் சந்தியாவந்தனஞ் செய்வது நிந்திக்கப்பட்டது. அங்ஙனம் செய்வதைப் பிதிரரும் தேவரும் சிறப்பிப்பதில்லை; ஆதலின், மார்ச்சனத்தைச் செய்யும் வகையாவது:-

சந்தியாவந்தனத்திற்கு நின்ற தீர்த்தத்தின் கரையிலாயினும், பொன், வெள்ளி, மண் ஆகிய பாத்திரங்களிலாயினும், அத்திமர முதலிய தகுதியுள்ள மரங்களாற் சமைத்த பாத்திரங்களிலாயினும், இடது கரத்திலாயினும் நீரைப்பெற்றுக் கொண்டு அதினால் சந்தியா வந்தனஞ் செய்யவேண்டும். அங்ஙனமே மார்ச்சனமுஞ் செய்யவேண்டும்.

மண்பாத்திரமுதலியன எடுக்கையில், இடது கை விலக்கினதாம். பாவனொருவன் இடதுகையில் நீர்கொண்டு சந்தியாவந்தனஞ் செய்கின்றானோ அவன்செய்த சந்தியை விருஷலியென்று உணரத்தக்கது; அதனால் அசுரர் திருத்தியடைவார்.

மண்பாத்திரமுதலியன கிடையாவழி, இடதுகையிலாவதுநீர் வைத்துக்கொண்டு சந்தியாவந்தனஞ் செய்யவேண்டுமென மிருதி வசன மிருப்பதால், அங்ஙனக் கூறிய விதிப்படி மார்ச்சனத்தைச் செய்துகொண்ட பின்பு, மந்திரங்களால் மந்திரிக்கப்பட்ட நீரைப் பருகவேண்டும்.

சந்திதேவதையை உபாசிக்க வேண்டிய விதி:—தீர்த்தத்தின் அருகிற்சென்று அபிஷேக ஸ்நானஞ் செய்துகொண்டு, கை கால் சுத்திசெய்து விதிப்படி ஆசமனித்து மாலையில் அக்கினியஸ்ச்ச என்ற மந்திரத்தோடும், காலையில் சூரியஸ்ச்ச என்ற மந்திரத்தோடும் மந்திரித்த சலத்தைப் பருகிப் பின்பு சூரியமந்திரங்கள், கோமந்திரங்கள், அப்லிங்க மந்திரங்கள், வருணமந்திரங்கள், வாயு மந்திரங்கள், ஹிரண்யவர்ணமென்னும் அக்கினிமந்திரங்கள், இந்திரமந்திரங்கள், வியாஹிருதி மந்திரங்கள் முதலிய சுத்தமாயுள்ள புண்ணிய மந்திரங்களால் மந்திரித்த நீரைத் தேகத்தின்மேல் தெளித்துக்கொண்டு பரிசுத்தனாகின்றான் என்றார் போதாயனர்.

மந்திரோதக பானம்.

ஸாயமக்கினிபஸ்ச்ச மேதுக்த்வா பிராதஸ் சூரியேத்யப்பிர் பெத்து,ஆபப்புனந்து மத்தியாந்தே ததஸ்ச்யாசமனஞ்சரேத் என

மாலைப்போதில் அக்கினியஸ்ச்ச காலையில் சூரியஸ்ச்ச மத்தியில் ஆபப்புனந்து என்ற மந்திரங்களால் மந்திரிக்கப்பட்ட ஜலத்தைப் பானஞ்செய்தபின்பு ஆசமனஞ் செய்யவேண்டும்.

உபத்தபானம்.

பிரார்த்தனை.

சூரியோபத்தானத்தைத் தன்னுடைய சாகைக்குள்ள மந்திரங்களாலே செய்யவேண்டும்

உபஸ்தாசம் ஸ்வகைர்மந்த்ரைராதித்ய ஸ்யசகார்யேத்தின சூரியனைப் பிரார்த்தனை செய்யவேண்டும்.

## புருடசூத்த நியாசம்.

புருடசூத்தமென்பது பெரியோரால் பூசிக்கப்பட்டதும், சிறந்ததுமாயுள்ள இரகசியம்; பிராணயாமஞ் செய்து சங்கற்பித்துப் புருடசூத்தத்திற்கு இருடியையும, சந்தசுவையும், தேவதையையும் உச்சரித்து, அந்தச் சூத்தத்தில் பதினறு மந்திரங்களிருத்தலினல், அவற்றைப் பூசிக்குங் கருத்தா தன்னுடம்பிலும் தேவதாமூர்த்தியினிடத்திலும் அங்கநியாசம் செய்கின்றேனென்று சங்கற்பித்து, விதிப்படி ஒவ்வொரு மந்திரத்தால் ஒவ்வொரு அங்கத்தையும் அபிமந்திரித்து, முறையே நியாசஞ்செய்தல் வேண்டும். புருடசூத்தத்திற்கு நாராயணரே இருடி; உலககாரணமான விராட்டுப் புருடனே தேவதை; சூத்தம் முதலில் அனுட்டிப்பு என்னுஞ் சந்தசுவையுடையது, முடிவில் திருட்டிப்புஎன்னுஞ்சந்தசுவையுடையது. நியாசத்துள் இடதுகை முதல் மந்திரம்; வலதுகை இரண்டாவது, இடக்கால் மூன்றுவது, வலக்கால் நான்காவது, இடதுமுழங்கால் ஐந்தாவது, வலதுமுழங்கால் ஆறுவது, இடப்புறத்து இடைஏழாவது, வலபுறத்துஇடை எட்டாவது நாபி ஒன்பதாவது, உள்ளம் பத்தாவது, கழுத்து பதினோராவது, இடதுதோள் பன்னிரண்டாவது, வலதுதோள் பதின்மூன்றுவது, வாய் பதினன்காவது, கண் பதினைந்தாவது, தலை பதினறுவது. இங்ஙனம் அந்தந்த உறுப்புகளில் அந்தந்த எண்களுடைய இருக்கு மந்திரங்களைத் தன்னிடத்திலும் விஷ்ணுமூர்த்தியினிடத்திலும் நியாசம் செய்பவன் தானே விஷ்ணுவாகின்றுன்.

புருட சூத்தத்திலுள்ள பதினறு இருக்கினல் விஷ்ணுமூர்த்தத்துக்குப் பதினறு உபசாரத்தோடும் பூசிக்கவேண்டும்.

முதலாவது இருக்கிலுல் அத்தேவரை ஆவாகனம் செய்யவே ண்டுவது, (ஆவாகனம்-அழைத்தல்) 2-வது ஆசமனம்-பீடம்கொ டுத்தல், 3-வது பாத்தியம்-திருவடிக்கு நீருதவுதல், 4-வது அருக் கியம்-கைக்கு நீருதவுதல், 5-வது ஆசமனம்-குடிநீருதவுதல் (முக சுத்தியின்பொருட்டு) 6-வது ஸ்நானம்-அபிஷேகம், 7-வது பரிவ ட்டம்-அணிவதற்கு ஆடை, 8-வது பூணூல், 9-வது சந்தனம், 10-வது புட்பம், 11-வது தூபம், 12-வது தீபம், 13-வது நைவேத்தி யம், 14 வது நமஸ்காரம், 15-வது வலம்வருதல், 16-வது சயனம். இக்கணக்கினையுடைய இருக்கு மந்திரத்தால் இந்த உபசாரங்க ளைச் செய்யவேண்டும்.

மகுடம், காதுக்கு மகரக்குழை, தோளுக்கு வாகுவலயமென் னும் ஆபரணங்களுடையவராய்க் கையில் சங்குஞ் சக்கரமும் பிடி த்துப்பொன்போலும் ஒளிவிடும் திருக்கோல முடையவராய்க் கமல பீடத்தின்மேல் வீற்றிருக்கும் நாராயணன் எப்பொழுதும் சூரியமண்டலத்தின் நடுவே யிருப்பதாகப் பாவித்துத் தினந்தோ றும் விஷ்ணுவை நன்றாகப்பூசிக்கவேண்டும். இவ்வாறு செய்தால் ஒருவன் ஆறுதினங்களிற் சித்தியடைவன்.

விஷ்ணேபபரமம் என்னுமந்திரத்தால் பூக்களையும், இராவதி என்னு மந்திரத்தால் அக்ஷதையும், சாவித்திரியர் என்னு மந்திரத் தால் தூபத்தையும், உத்தீப்பியஸ்வ என்னு மந்திரத்தால் தீபத் தையும், தேவஸியத்துவா என்னுமந்திரத்தால் நைவேத்தியத்தை யும் அற்பிக்கவேண்டும்.

அன்றியும் கேசவாய என்றதுமுதல் தாமோதராய என்றவ ரையிலுமுள்ள மந்திரத்தால் பன்னிருமூர்த்தி தெய்வங்களுக்கும். சங்காராய என்பதுமுதல் துஷ்டியை என்றவரையிலுமுள்ள தனுல் பத்து அங்கதேவதைகளுக்கும் 'நம்'-என்னுமந்திர பல்லவத்தோடு நாம மந்திரங்களைத் தனித்தனி பூக்களால் பூசிக்கவேண்டும்.

விஷ்ணுவை ஆராதிப்பதினும் சிறந்த புண்ணியமுடைய வை திக கருமம்யாதொன்றுமில்லை; ஆதலின், நாடோறும் இருபிறப் பாளன் காலையேயாயினும் உச்சிக்கண்ணேயாயினும் அவ்விஷ்ணு வை "தத்விஷ்ணு" என்றமந்திரத்தினுலும் புருடசூத்தத்தினுலும் ஆராதிக்கக்கடவன்.

———

## சூதகமுதலிய காலவிதி.

சூதகமுதலிய உபாதியுண்டாகிய காலத்தில் சந்தி முதலிய கருமங்களை விடவேண்டுமென மரீசிமுனிவர் கூறியுள்ளார்.

## வேறுவிதி.

சந்தியாவந்தனத்தையும், வேள்விக்கருமத்தையும், சற்கருமத்தையும், ஹோமகருமத்தையும் உயிருடம்போடுகூடி யுள்ளவரையில் செய்யவேண்டுமெனவும்; சூதககாலத்திலும் விடலாகா தெனவும்; விட்டவன் கீழ்ப்போகின்றானெனவும் புலத்தியர் கூறியுள்ளார். ஆகவே, சூதகமுதலிய உபாதிகள் சேர்ந்தபோது சந்தி முதலிய நித்திய கருமங்களை மனத்தினுள்ளே செய்யவேண்டுமென்பது புலப்படுகின்றது.

பிறந்த சூதகமும் இறந்த சூதகமுமாகிய இரண்டினுள்ளும் சந்திக்கருமத்தை விடலாகாது. இருபிறப்பாளன் அப்பொழுது பிராணாயாமமொழிய ஏனைய மந்திரங்களையெல்லாம் மனத்திற்சிந்திக்கவேண்டுவது. இதனை உணர்ந்து விரத நியம முடையவனாய்ச் சந்தியை உபாசிக்கின்றவன் தீர்க்காயுளைப் பெறுகின்றான்; எல்லாப் பாவங்களினின்றும் விடப்படுகின்றான். என மரீசிமுனிவர் கூறுகின்றனர்.

## காயத்திரி செபத்தின் சிறப்பு.

காயத்திரி மந்திரம் பத்துவிசை செபிக்கப்பட்டால், மூன்று தினத்திற்செய்த சிறுபாவங்களெல்லாம் ஒழியும், இக்கருத்தை வேறு சிந்திக்கவேண்டுவதில்லை. நூறுதரம் செபிக்கப்பட்டால் பாவராசிகளைச் சாந்திசெய்யும். ஆயிரமுறை நியமமாக செபிக்கப்பட்டால், உபபாதங்களையெல்லாம் நாசஞ்செய்யும். நூறாயிரமுறைசெபித்தால், மகாபாவங்களையெல்லாம் ஒழிக்கும். கோடிதரஞ்செய்த செபத்தால், இச்சித்த பலனெல்லாம் அடையக்கூடும். என வியாசபகவான் கூறுகின்றனர்.

இயமன்:—செபஞ்செய்ய காயத்திரியினும், மேற்பட்டுள்ள மந்திரமொன்றுமில்லை. காயத்திரியினுஞ் சிறந்தபொருளுமில்லை; சிறந்த தானமில்லை; சிறந்த வேள்வியுமில்லை.

மனு:—நாடோறும் தவறாது சோம்பலும் உறக்கமுமின்றி இந்தக்காயத்திரி மந்திரத்தை அத்தியயனஞ் செய்பவன் வாயுரூபத்தால் தேகத்தை அடைந்தவனாய்ப் பரமனை அடைகின்றான்.

கௌதமர்:—இக்காயத்திரியை முயற்சியோடும் அமைந்த சித்தமுடையவனாய் நாடோறும் செபிப்பவன் இம்மையில் மிக்க

போகங்களையும் உண்டிமுதலிய சுகத்தையும், மறுமையில் முத்தியையும் பெறுகிறான்.

## சந்திசெய்யாவிடின் பாவமென்பது.

சந்திபாவந்தனமில்லாதவன் அசுசியுடையவனாய் நித்தமும் எல்லாக் கருமங்களுக்கும் தகாதவனே ஆகிறான். அன்றியும், வேறு எக்கருமஞ் செய்யினும் அதன்பயனை அவன் அடையமாட்டான் என்றார் தக்ஷர். சந்திக்கருமத்தை உணராதிருப்பினும், முறையே உபாசிக்காதிருப்பினும் தான் தழைத்திருக்குங் காலத்திற்றானே சூத்திரனாகின்றான்; இறந்த பின்னர் நாயாகப் பிறப்பான் என்றார் கோபிலர்.

பாவனொருவன் மாலைச்சந்திக்கடனை அனுட்டிப்பதில்லையோ அப்படிப்பட்ட துரான்மா இருணரகத்திற்குப் போவான் என்கின்றது விஷ்ணுபுராணம். சந்தியாவந்தனத்தை விடுத்து வேறுதருமகாரியங்களில் முயற்சிசெய்பவன் உத்தமனான இருபிறப்பாளனேயாயினும் பதினாயிரம் நரகத்தினுக்குஞ் செல்கின்றான் என்று கூர்மபுராணம் கூறுகின்றது. எந்த இருபிறப்பாளன் சுகமாகவிருக்குங் காலத்தும் சந்திபாவந்தனஞ் செய்வதில்லையோ, அவன் இம்சை செய்தலனேயாகின்றான் என்றார் அத்திரி.

---

# போசனவிதி.

தலைமேலாடையோடாயினும், இடதுகாலின்மீது கைவைத்தாயினும் புசிப்பவனது அன்னத்தை அரக்கர் புசிக்கின்றனர்.

மெழுகப்பட்டுச் சுத்தமாயுள்ள ஒத்தநிலத்தில் உண்டியின் பொருட்டு வேதியனுக்குச் சதுரமாயும், அரசனுக்கு முக்கோணமாயும், வைசியனுக்கு வட்டமாயும், சூத்திரனுக்குப் பிறைவடிவாயும் மண்டலம் விதித்துள்ளது.

இருபுறப்பாளன் கோவமின்றிக் கைகால் வாய் இம்மூன்று உறுப்புகளையும் நனைத்து ஆசமனஞ்செய்து வாய்பேசாது கிழக்கு முகமாக விருந்துகொண்டு சுத்த மான பாத்திரத்தில் புசிக்கவேண்டும்.

சாதத்தைநோக்கி முன்னர் வணங்கி அஞ்சலியத்தனாய் "இஃதெமக்கு நித்தியமாகுக" என்று கூறிப் பத்தியோடுந் தொழவேண்டும் என்று பிரமாண்ட புராணம் பேசுகின்றது.

வியாகிருதி - காயத்திரியாகிய இம்மந்திரங்களை மந்திரித்து அன்னத்தின்மீது நீரைத்தெளித்து, இரவில் 'ருதந்துவா' என்னும் மந்திரத்தையும், காலையில் 'சத்தியந்துவா' என்னும் மந்திரத்தையும் கூறி, உண்கலத்தை வலமாக நீர்வளையக்கட்டி எல்லா உயிர்களினுடைய இதயத்திலும் பிராணவடிவனாய் உலவுகின்றாய் என்பது முதலிய கடவுள் துதியே பொருளாகவுடைய அந்தச்சரதி என்றது முதல் வியாகிருதிப் பிரணவம் வரையிலுமுள்ள மந்திரத்தை த்தியானித்து 'அமிர்தோபஸ்தரணமசி' என்னும் மந்திரத்தைச் சொல்லி நீர்குடித்து 'தசஹோதாரு' மந்திரங்களைக்கூறி அவ்வன்னத்திலிருந்து சிறிதெடுத்து பிராணன்முதலிய ஐந்துவாயுக்களுக்கும் சுவாஹாரத்தோடு உள்ளமாகிய வேள்விக்குண்டத்தில் பிராணனாகிய தீயில் அன்னமாகிய அந்த அவிசுவினை ஓமஞ்செய்து தியானிப்பதே பிராணாக்கினி ஹோத்திர கருமமாகும்.

இங்ஙனம் பரிடேசனம் செய்தபின்பு கலத்தில் படைத்திருக்கும் அன்னத்திலிருந்து எடுத்துத் தருமனுக்கும் சித்திரகுத்தனுக்கும் பலிகொடுத்து 'எவ்விடத்தாயினும் பசிதாகத்தோடும் வருந்தியிருக்கும் பிரேதங்கட்குத் திருத்தியுண்டாகுமாறு இந்த நீர்கெடாமல் வளர்க' என்றுநீர்விட்டுப்,பின்பு ஆபோசனங்கொள்ளவேண்டும்என்று பௌடியபுராணமும்; வியாகிருதியால்நீரைஅன்னத்தின்மேல்தெளித்து 'அமிர்தோபஸ்தரணமஸீ' என்று ஆபோசனம் கொள்ள வேண்டும் என்று கூர்மபுராணமும் கூறுகின்றன.

அன்னத்தைப் பழுதுகூறாமலும்; புறத்தெறியாமலும்; வாயிலிடும்போது சிந்தாமலும் அதனிடத்து மனம் வைத்துப்புசிக்க வேண்டுமென்பர் பெரியோர்.

ஆசாந்த புனராசமே தாயங்கௌரிதி மந்திரதகத்ருபதாம், வாத்திரி ராவத்திய சர்வபாபபிராணுசினீசம், பிராணனுக்ரம் திரவீக்யா லபேத்ருத யந்ததஹ ஆசமியங்குஷ்ட மானீய பதாங்குஷ்டேது தக்ஷினே; நிஸ்ரா வையேத்தஸ்ததிலா மூர்த்தவ ஹஸ்ததஹி சமாஹீதஉதானுமந்த்ர ணம்குரியா ஸ்ச்ரத்தாயாமிதமந்திரதஹ அட்டாக்ஷரே ஹ்யாத்மானம் போஜக்ஷேத் ப்ரம்மணி திசஹசர்வேஷா மேவயானானு மாத்மயாக பரஸ்ருதஹயோனௌவிதி காருயாஸ்தியாதப் பிரம்மணஹ்பதம்.

என ஆசமனம் செய்தவன் 'ஆயங்கௌ' என்ற மந்திரத்தை உச்சரித்து மறுபடியும் ஆசமனஞ்செய்யவேண்டும்.

எல்லாப் பாவங்களையும் போக்கவல்ல 'த்ருபதா' எனவே 'ஹிவோம' என்று மந்திரத்தை மூன்றுதரம் செபித்து 'பிராணானாம் க்ரந்திரஸிருத்ரஹ' என்று மந்திரத்தால் இதயத்தைத் தொட்டு அபிமந்திரித்துப் பின்னரும் ஆசமனஞ் செய்யவேண்டும். அந்தச் சேடமாகிய நீரை மேல்பக்கமிருக்கும் தன் கைப்பெருவிரல் மூலையால் வலக்கால் பெருவிரன்மேற் படும்படி விடல்வேண்டும். 'ஹிதாணுமந்தரணம்' என்பது ஓமஞ்செய்ததை அபிமந்திரித்தல்; எனவே உண்ட உணவைத் தேவதைப் பிரீதிசெய்யும்படி மந்திரங்களோடு பிரார்த்திப்பது. இந்தக்கருமத்தை 'சிரத்தாயாம்' என்றமுதலிய மந்திரங்களாற் செய்தபின்னும் அட்டாக்க மந்திரங்களால் தன் ஆன்மாவைப் பிரமத்தில் கலப்பிக்கவேண்டும். இந்த ஆன்மயாகம் எல்லாயாகங்களினும் சிறந்தது. இந்தவிதியால் பிராணாக்கினிஹோத்திரத்தைச் செய்பவன் பிரமலோகத்தை அடைகின்றான்.



# சைவர் அநுட்டான விதி.

## எல்லாச் சைவ மரபினரும் அநுட்டிக்கத்தக்க பொது நியமங்கள்.

---

இப்பொழுது விபூதி சேகரிக்கும் விதியை விரிக்கின்றேன். அபரிசுத்தமாயும், நோயுள்ளதாயும், பித்துக்கொண்டதாயும், அங்கக் குறைவும் அளவுக்கு மீறிய அங்கத்தையுடைய தாயும் மலடாயும், அதிக அன்புடையதாயும் அசுத்தமான வஸ்துக்களை யுண்ணுவதாயுமுள்ளபசுவை நீக்கி, நல்ல அழகையுடைய கோவின் சாணத்தை எடுத்து உருட்டி உலர்த்தி வெண்மையாக்குந்தன்மை யுடைய உமி முதலியவற்றால் நன்கு மூடி வைதிகாக்கினியினாலாவது, யாகாக்கினியினாலாவது, சமயல்செய்யு மக்கினியிலாவது, சுடுத்து வில்வக்கனியளவுள்ள மண்பாத்திரத்தில் வைத்துக்கொண்டு ஈசாநாதி பஞ்சபிரம்ம, மந்திரத்தைச் செபித்து மாநஸ்தோகே என்னும் மந்திரத்தை உச்சரித்து நடுவிரல் ஆள்காட்டிவிரல் பெருவிரல் இந்த மூன்று விரல்களால் பற்பத்தையெடுத்து மௌனமாகத்தானே சலஞ்சேர்த்துக் குழைத்து லலாடத்திலும், மார்பிலும் இரண்டு புயத்திலும், கழுத்திலும், வயிற்றிலும், சிரசிலும், அந்தணர்முதலினோர் தினந்தோறும் திரிபுண்டரம் அணியவேண்டும்.

அக்கினியில் சமஸ்காரஞ்செய்யப்பட்டபற்பத்தை 'ஸத்யோஜாதாதி' ஐந்து பிரமமந்திரத்தினால் செபித்தெடுத்து இடதுகையில் வைத்துக்கொண்டு வலதுகையினால்மூடி பன்னிரண்டுதடவை பிரணவத்தைச் செபித்துச் சலத்தால் நனைத்துச் சிரசிலும் நெற்றியிலும், மார்பிலும், தோளிலும், குறுக்காக மூன்று ரேகைகளாக அணிந்துக்கொள்ளவேண்டும். இந்தச் சாம்பவ விரதமானதுஎல்லா வேதங்களிலும் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால், மறுபிறப்பில்லாம லிருப்பதற்காக இந்தப் பற்பதாரணத்தைமூன்றுரேகைகளாகக் கொள்ளவேண்டும்; நெற்றியில் இரண்டு கண்களின் புருவத்தின் முனைவரையில் தரிப்பதுதான் திரிபுண்டரமென்றுசொல்லப்படுவது; எவ்வகைப்பட்ட வித்துவானும் பிரமசாரியும் விரத்தனும், சந்நியாசியும் திரிபுண்டரதாரணஞ் செய்து கொண்டிருந்தானே அவன் சமத்த பாதகத்தினின்றும் புனிதனாகிறான். தன்னிட்டதேவதையைத் தியானித்தவனாகிறான். சகல சம்பத்துகளிலும் நிறைந்தவனாகிறான். சமத்த சாம்பவமந்திரத்தை எப்பொழுதும்

செபித்தவனுமிருவீர். இல்லறத்தில் எல்லாப்போகங்களையும் அநுப வித்து, தேகத்தைவிட்டுச் சிவசாயுச்சியம் அடைகிறானென்றும் பழையபடி இக்கன்மபூமியில் பிறப்பதில்லை, பிறப்பதில்லையென் றும், தேவாதிதேவனை பரமசிவனருளினர்.

## வருணாச்சிரமங்களுக்குரிய விபூதிகள்.

பிரம, க்ஷத்திரிய, வைசியர்களுக்கு அக்கினிஹோத்திர விபூ தியோக்கியமாம், கிரகஸ்தாச்சிரர்களுக்கு விரசாநலாக்கினிஹோ பாசநாக்கினிகளின் விபூதியோக்கியமாம். பிரமசாரிகளுக்குச் சமி தாக்கினியின் பற்பம் யோக்கியமாம், சூத்திரர்களுக்குச் சுரோத் திரியாகார பசநாக்கினியின் பஜிதம் யோக்கியமாம். மற்றையோ ருக்குத்தாவாக்கினியில் உதித்தபற்பம் யோக்கியமாம். யதீச்சுரர் களுக்கு எல்லா விபூதியும் யோக்கியமாம் அதிதாச்சிரமிகளுக்கு மசானபற்பம் யோக்கியமாம் சமத்தருக்கும் தேவாலய ஸதிதபஜி தம் யோக்கியமாம்.

## விபூதியின் ஸ்நாநாதி விதிகள்.

அந்தவிபூதி ஸ்நாநம், உத்தூளனம், தாரணம் என மூன்றும். ஸ்நாநமாவது—அதை ஆசரிக்கிறவன், முதல் அத்தபாதஞ்சுத்தி செய்து,பின் பஸ்மஸ்நாநஞ்செய்கிறேனென்று சங்கற்பித்துக்கொ ண்டு திடமான, சூத, வில்வ, அசோக, சிலா, வஸ்திராதி ஆதனங் களிலிருந்து, இரசிதமான ஆதாரத்தில் சுவத்திதமாக இருக்கின்ற ஸ்ரீமத் விபூதியைக் குரங்க முத்திரையினால் சத்தியாதி பஞ்சபிரம மந்திர பூருவமாக எடுத்து வாம அத்தத்தில் வைத்துக்கொண்டு, நமஸ்கார மந்திரத்தை உச்சரித்து, தட்சண அத்தத்தினாலேமூடி வலதுதொடையின் மேல்வைத்து மூலமந்திரத்தினால் அல்லதுஅக் கினி நிருதிமுதலான மந்திரங்களினாலாவது எழுதா மந்திரித்து மாகஸ்தோகதேயென்னும் மந்திரத்தினாலெடுத்துச் சிரசு, முகம், இருதயம், குஹ்யம், பாதம் சர்வாங்கமென்னும் ஆறுஸ்தானங் களில் அந்தந்த மந்திரோச்சாரணத்தால் கிரமத்தில் நசாகாதி பஞ் சப்பிரம பிரணவ மந்திரங்களினால் சிருட்டி, திதிசங்காரக் கிரகங் களை அறிந்து சம்புரோட்சணங்கள் செய்வதே ஸ்நாநமாம்.

உத்தூளனமாவது-மற்றும் அந்தச் சிரமுதலிய ஆறுதானங் களில் அந்தந்த மந்திரோச்சாரணக் கிரமத்தினால், நான்கு, அல்

லது ஐந்து, எட்டு, பதின்மூன்றுதரம் ஒரேவேளையில் இலேபனஞ் செய்வதே உத்தூளனமாம்.

தாரணமாவது-சீதளமான மந்திரோதகமிசிரமானவிபூதியை மூலமந்திரம், திரியாயுஷ்மந்திரம் திரியம்பகமந்திரங்களை உச்சரித்துச் சிவமூர்த்தியானயுத்தனுகித் திரிபுண்டரதாரண ஸ்தானங்களில் தரித்தலாம்.

## திரிபுண்டர ஸ்தான விபரம்.

திரிபுண்டர ஸ்தானங்களெவையெனின்; மூர்த்தினி, லலாடம் கன்னத்துவயம், நேத்திரத்துவயம், கிராணம்முகம், வாகுத்துவயம், புஜத்துவயம், மணிபந்தத்துவயம், ஸதநத்துவயம், வக்ஷம் உத்ரம், பாரிசத்துவயம், நாபி, கண்டம், பாயு, புருஷ்டம், ஊருத்துவயம், சாநுத்துவயம், சங்கத்துவயம், பாதத்துவயம் என்னும் முப்பத்திரண்டு தானங்கள் ஆகும்.

அல்லது, மத்தகம் அளிகம் கிரிவம் வாகுத்துவயம் இதயம் கன்னத்துவயம் மணிபந்தத்துவம் புஜத்துவயம், அபரம் நாபி என்னும் பதினாறு தானங்களும் ஆம்.

அல்லது சிரசு, பாலம், கண்டம், வாகுத்துவயம், இதயம், நாபி, புருஷ்டம் என்னும் எட்டுத் தானங்களும் ஆம்.

மேலும், சிரசு, லலாடம், சோத்திரத்துவயம், கண்டம், புஜத்துவயம், வக்ஷம், புருஷ்டம், நாபி, கிராணம் என்னும் பதினொரு தானங்களுமாம்.

இவற்றுள் பதினொரு ஸ்தானங்களே முக்கியமாகும் ஸ்திதபத்மாசந சீநரான, சுத்தபடிக சங்கிபரான, கபர்த்த; சந்திரகலாபிரசந்நயுதந, நீலக்கிரீவ, க்ஷௌமாம்பர சர்ப்பா பரணங்களுள்ள, மிருகிடங்க, வரதாபய பாணியான சர்வபக்ஷண சம்பந்நரான, பரமாத்ம, சிவ, மஹேச்வர, ருத்திர, ஸ்ரீகண்ட, சம்பு, ஈச்சுவர, மஹாதேவ, பசுபதி, சங்கர, விரஷபத்துவஜரென்னும் ருத்திரர்களைச்சிரசு முதலான எகாதசதானங்களிலும் இருத்தி, ஸ்மரித்துத் திரிபுண்டரந் தரிப்பதே தாரணமாம். பிராமணரான சாதுராச்சிரமிகளுக்குச் சருவாங்க உத்தூளனமும், க்ஷத்திரியருக்கு முகந்தவிர சருவாங்க உத்தூளனமும், வைசியருக்கு லலாடமாத்திரம் உத்தூளனமும் ஊரித்தாம் சூத்திரருக்குத் தாரணமுரித்தாம்.

## சைவர்கள் திரிபுண்டரம் தரிக்கும்வகை.

திரிபுண்டர தாரணம் செய்யும்வகை தட்சணகரத்தின் தர்ச்சனி மத்திமை அநாமிகை யென்னும் அங்குலித்திரயங்களால் அலோம - விலோமமாக அகாரமே அநாமிகை, உகாரமே மத்திமை, மகாரமே தற்சநி என்னும் பாவனையின் திரியங்குலிகளால் அக்கத்திரயம்-அக்ஷரத்திரயம்-குணத்திரயம்-லோகத்திரயம்-ஆத்தமத்திரயம்-வேதத்திரயம்-காலத்திரயம் ருத்திரத்திரயம் - என்னும் தேவதாத்திரயாத்தமகனை அநுசந்தான பூர்வமாகத் திரிரேகையும் ஷடாங்குலப் பிரமாணமாக நேத்திரயுக்மப்பிரமாணமாக லலாட கந்தம்-கடினமலின்-வக்ர - சிந்ந-தூர-கூடினதாகிய ஆறு தோட ரகிதங்களாய்-நய-சுப்பிர-நிரல-சாந்திர-சமீப பிந்நமென்னும் ஆறுலட்சணங்களை யுடையதாய்த் தரிப்பதாம்.

## நான்கு வர்ணத்தாரும் தரிக்கும்வகை.

பிராமணர் ஆறங்குலப் பிரமாணமும் க்ஷத்திரியர் நான்கங்குலப் பிரமாணமும், வைசியர் இரண்டங்குலப்பிரமாணமும், சூத்திரர் ஓரங்குலப் பிரமாணமும், திரிபுண்டரம் தரிப்பது தாரணையாகும்.

## ஆச்சிரமிகள் அணியவேண்டிய விதி.

மேலும் கிரகத்தரும் ஸ்திரீகளும் திரிசந்தியாகாலமும் சலமிசிரமாக விபூதி தரிக்கவேண்டும். எதிச்சுரர் எப்போதும் சலமிசரமில்லாமல் தரிக்கவேண்டும், வானப்பிரத்தரும், கன்னிகைகளும் தீட்சைபற்றவரும், மத்தியானம் வரையில்சலமிசிரமாகவும் அதன் மேல் கேவல விபூதியையும் தரிக்கவேண்டும்.

## விபூதி அணியுமுன்னம் சைவ கிரியாநுட்டான விதி.

விபூதியைத் தூளிதமாய் இடுமுன்னர் இடதுஉள்ளங்கையில் பரவவைத்து வலதுகைநான்காவதுபவித்திரவிரலால் 'நமச்சிவாய' என்னும் நகாரத்தையும் சிகாரத்தையும் எழுதி வலதுகையால் மூடிக்கொண்டு ஓம் நமச்சிவாய, தூலாய நமசிவயநம, சூட்சுமாய நம, சிவயகாரணாயநம, சிவமஹாகாரணாயநம, என்று அபிமந்திரித்து வலதுகரத்தின் பெருவிரல் நடுவிரல் ஆழிவிரல்இம்மூன்று விரல்களின்மேல் விபூதியைத் தடவிக்கொண்டு விரல்களைக் குவித்தும் விரித்தும் ஆணவம் கன்மம் மாயை முதலியதைநீக்கிப் பத்திசிரத்தையோடு அந்த விபூதியை ஆறங்குல நீளமாகப் பொருந்தத் தரிப்பதே சிவசொரூபமென்றும்;சிவப்ரசாதமென்றும்; அந்த

விபூதியை என்றும் அணிவதினல், கன்மம் அனுகூலமாக, முன்னிற்றலே திரோபவமயம் பென்றும் அந்த விபூதிசருவாங்கதூளிதமாய்த் தரித்து சுத்தப் பிரமபாவனேயோடு அணிந்திருத்தலேகன்மத்தையும் ஆணவகாமிய மாயாமலங்களேயும் இந்த ஜென்மத்தையும் போக்குவதாகிய ஈச்சுவர அருட்பிராகாச அனுக்கிரக மயமென்றும் உணர்க.



## விபூதிதாரண அனுட்டானம்.

### விபூதியைத் தூளிதமாய் அணியும்போது அனுட்டிக்கவேண்டிய மந்திரங்கள்.

சிரசில், ஓம்-சுஷுமுன சதுர்கலாகார சுத்தப் பிரமதத்துவமே சுவயப்பிரம்மாயநமா: என்றும்,

நெற்றியில், ஓம்-சுழுமுன சோடசகலாகார ஈஸ்வரத்துவமே வயப் பிரம்மாயநமா: என்றும்,

மார்பில், ஓம்-துவாதச சுழுமுன பிரணவநாத ஸக்தி மாயாகாரத்துவமே சுவயப்பிரம்மாயநமா: என்றும்,

வலது புஜத்தில், ஓம்-துவாதச பிங்கலா பிராணயாத்மாகாரத்துவமே சுவயப் பிரம்மாயநமா: என்றும்,

இடது புஜத்தில் ஓம்-துவாதச இடகலாவாசி சுவாஸ ஜீவா: காரத்துவமே சுவயப்பிரம்மாயநமா: என்றும், தியான இலட்சணம் மாருமல் அணியவேண்டும். இது பிரம நிட்டைக்குரியவிபூதி தூளித தாரண அனுட்டான விதியாம்.

விபூதியை சலத்தோடு கலவாமல் தனியாய்த் தூளிதமாகத் திரிபுண்டரமாய்ப் பிரம நிட்டாகாலத்தில் அணியவேண்டுமாயின்; அக்காலத்தில் அனுஷ்டிக்கவேண்டிய,

அங்கமந்திர விதிகள்.

உச்சியில்.—ஓம் சுழுமுன திரிகிரித்திய சாக்ஷிமாத்திர பிரம்மேஸ்வரா சுவயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

நெற்றியில்.—ஓம் சுழுமுன திரிகிருத்திய வியாபகமாத்திர ஆத்மோ சுயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

இருதயத்தில்.—ஓம் சுழுமுன திரிகிர்த்திய சூன்யமாத்திர ஜீவோஸ்வயம் பிரம்பாக்கியங்கரோ நம: என்றும்,

உச்சியில்.—ஓம் சுழுமுனை திரிகிர்த்தியவிர்த்தி விஷயமாத்திர மாயாசக்தி லயகரோஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

வலதுபுஜத்தில்.—ஓம் பிங்கலா திரிகிர்த்திய கர்ம விஷயமாத்திர ஆத்மஜீவகலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோநமா: என்றும்,

இடது புஜத்தில்.—ஓம் இடகலா திரிகிருத்திய கர்மவிஷயமாத்திர ஆத்ம சக்திகலாகரோஸ்வயம் பிரம்மாக்கியங்கரோநமா என்றும்,

வலது முழங்கையில்.—ஓம் பிங்கலா திரிகிர்த்திய கிரியாவிஷயமாத்திர ஜீவ சிவகலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

இடது முழங்கையில்.—ஓம் இடகலா திரிகிருத்திய விஷயமாத்திர மனோஜீவ கலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோநமா என்றும்,

வலது மணிக்கட்டில்.—ஓம் பிங்கல திரிகிருத்தியா கிர்த்தியவிஷயாமாத்திர மனோஜீவகலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

இடது மணிக்கட்டில்.-ஓம் இடகலா திரிகிருத்திய விஷயமாத்திர மனோசக்தி கலாகரோஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

முதுகின் வலது புஜத்தின் மேர்பாகத்தில்.—ஓம் கும்பகதிரிகிருத்திய ஊர்த்தமுக லய விர்த்திமாத்திர ஸர்வசிவகலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

முதுகின் இடதுபுய மேற்பாகத்தில்.—ஓம் கும்பக திரிகிருத்திய ஊர்த்த முகலய விர்த்திமாத்திர சர்வசக்திகலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

முதுகின் வலதுபுய கீழ்ப்பாகத்தில்.—ஓம் கும்பக திரிகிருத்திய அதோமுக சிருஷ்டி விர்த்திமாத்திர ஸர்வகலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்,

முதுகின் இடதுபுய கீழ்ப்பாகத்தில்.—ஓம் கும்பகதிரி கிர்த்திய அதோமுக சிருஷ்டி விர்த்திமாத்திர சர்வ சக்திகலாகரோ ஸ்வயம் பிரம்மாக்கியங்கரோ நமா: என்றும்

வலது முழங்காலில்.—ஓம் ரேசக திரிகிருத்திய அகோரமுக சிருஷ்டி விர்த்திமாத்திர சர்வசிவகலாகரோ ஸ்வயம் பிரம்மைக்கியங்கரோ நமா: என்றும்,

இடது முழங்காலில்.-ஓம் பூரக திரிகிர்த்திய அகோரமுக சிருஷ்டி விர்த்திமாத்திர சர்வசக்திகலா கரோஸ்வயம் பிரம்மயக்கியங்கரோ நமா: என்றும்,

வலதுகழுத்தில்.—ஓம் ரேசக திரிகிர்த்திய ஊர்த்தமுகலய, விர்த்திமாத்திர சர்வ சிவகலாகரோ ஸ்வயம்பிரம்மய்க்கியங்கரோ நமா: என்றும்,

இடதுகழுத்தில்.—ஓம் பூரக திரிகிர்த்திய ஊர்த்தமுகலயவிர்த்திமாத்திர சர்வசக்திகலாகரோ ஸ்வயம் பிரம்மய்க்கியங்கரோ நமா: என்றும்,

விபூதிமத்தியிற் பொட்டணிய வேண்டுவதானால்

ஓம் அகண்ட பிரம்மஞான திருஷ்டியேக நேத்திர பிரதிஷ்டாய நம: என்றும் நியமத்தோ டணியவேண்டும்.

இவ்விபூதியைக் குழைத்தணியவேண்டியசமயத்தில் மேற்படி மந்திரங்களின் முடிவில் கரோஸ்வயம் பிரம்மய்க்கியங்கரோநமா: என்னும் உச்சரிப்பைநீக்கி, முறையே சுத்தப்பிரகாசாய நமா: என்று சேர்த்து உச்சரிக்கவேண்டும்.



கணபதி, சுப்பிரமணியர், தேவி, விஷ்ணுவாதிய பூஜாகால அநுட்டானங்களில் விபூதியைக் குழைத்திடும்போது,

| | | | |
|---|---|---|---|
| ஓம் சுழுமுனை சாட்சிமாத்திர பிரம்மாய நமா என | | | சிரசிலும், |
| ,, | ஆத்மேஸ்வர | ,, | நெற்றியிலும், |
| ,, | மாயாசிவப் | ,, | இருதயத்திலும், |
| ,, | சூட்சுநாதப் | ,, | உந்தியிலும், |
| ஓம் பிங்கலா ஆத்மசிவகலா | | ,, | வலப்புயத்திலும், |
| ஓம் அடகலா ஆத்மசக்திகலா | | ,, | இடப்புயத்திலும், |

ஓம் பிங்கலா ஜீவசிவகலா பிரம்மாய நமா: என்று வலதுமுழங்கையிலும்,

ஓம் இடகலா ஜீவசக்திகலா பிரம்மாயநமா: என்று இடது முழங்கையிலும்,

ஓம் பிங்கலா சூட்சமசிவ கலாப்பிரம்மாயநமா: என்று வலது கை மணிக்கட்டிலும்,

ஓம் இடகலா சூட்சம சத்திகலா பிரம்மாயநமா: என்று இடதுகை மணிக்கட்டிலும்,

ஓம் கும்பக ஊர்த்தமுக சிவகலா பிரம்மாய நமா: என்று வலது முதுகிலும்,

ஓம் கும்பக ஊர்த்தமுக சக்திகலா பிரம்மாய நமா: என்று இடது முதுகிலும்,

ஓம் கும்பக அதோமுக சிவகலா பிரம்மாயநமா: என்று வலது இடுப்பிலும்,

ஓம் கும்பக அதோ முகசத்திகலா பிரம்மாயநமா என்று: இடது இடுப்பிலும்,

ஓம் இரேசக விர்த்தி சிவகலா பிரம்மாயநமா: என்று வலது முழங்காலிலும்,

ஓம் பூரகவிர்த்தி சத்திகலா பிரம்மாய நமா: என்று இடது முழங்காலிலும்.

ஓம் இரேசகலய சிவகலா பிரம்மாயநமா: என்று வலதுகழுத்திலும்,

ஓம் பூரக லயசத்தி கலாபிர்ம்மாய நமா: என்று இடது கழுத்திலும்,

விபூதி மத்தியில் பொட்டாக வேனும் அல்லது வேறுரேகை வடிவமாகவேனும் விபூதி சந்தனம் குங்குமம் இவற்றிலொன்றை அணிய நேருமாயின், அக்கால் ஒம் கும்பகலயப் பிரகாச பிரம்ம நேத்திராயநமா' என்றும் அணியவேண்டும். இவ்விதமாக கிரியா மந்திரவிமத்தோடு விபூதிதாரண அனுட்டான முடிந்தவுடனே பின்வரும் ஆசமனமும், ப்ரோட்ஷணையும் செய்யவும்.

## ஆசமனம்.

ஓம் கங்கை யமுனே ஸரஸ்வதி நருமதை காவேரி கிருஷ்ண கோதாவரி (சிந்து தாம்பிரபரணி துங்கபத்திரி கிட்டணி) ஸர்வ தீர்த்த ஆசமனத்துவாரா ஸர்வபாப விமோசனாயநமஃ என்று ஆசமனஞ் செய்யவும்,

## புரோட்சணை.

ஓம் கெங்கா யமுனா ஸரஸ்வதி நர்மதா காவேரி கோதாவரி கிருஷ்ணா ஸர்வதீர்த்த பிரோக்ஷணஸ்நானத்துவாரா ஸர்வஜென்ம ரஜித புண்ணியக்ஞான மோக்ஷப் பிராப்தியர்த்தம் என்று புரோட்சணை செய்துகொள்ளவும்.

## திரிபுண்டர மகத்துவம்.

திரிபுண்டரம் அணியாதவனுடைய ஆசாரமும் சத்தியமும் தவமும் ஓமமும் புண்ணியதீர்த்த ஸ்நானமும் சிவபூசையும் பலன் இன்றாகும். இராக்கதர் பைசாம் பிரேதகணங்கள் எமதூதர் டாகினி ஜாகினிமுதலான துர்க்கிரகங்கள் விபூதி அணிந்தவர்களை கண்ட மாத்திரத்தில் உடனே பீதியடைந்து நடுநடுங்கிசூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிப்போம்; அல்லது ஓடிப்போம். விபூதியணிந்து போசனஞ் செய்பவர்களுடைய வீட்டில் மகாதேவர் பார்வதிசமேத ரிஷபாரூடராய்ப் போசனஞ்செய்கிறார் என்று ஆகமங்கள் முறையிடுகின்றன. ஆகையால், புருடர்களுக்கு முத்தி என்னும் பொருளை வசியப்படுத்த விபூதி ஒன்றே பரமௌஷதம் பஞ்சாட்சர விபூதியைச் சருவாங்கமுந்தரித்து நடப்போன் எக்குலத்தனாயினும் ஈசனுள் ஐக்கியமாவான்.

முற்கூறிய ஸ்நான உத்தூளன தாரணங்களைக் கிரமத்தினால் விதியுத்தமாக ஸ்ரீமத்விபூதி தரிப்பதே சிரோவிரதமென்றும், பாசுபதவிரதமென்றும் பெயர்பெற்றுத் தோடரோகாதி பீதிகளை விடுவிக்கும் போகமோட்சப் பிரதாவென்று வேதாகம புராணங்களில் பிரசித்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இப்படியே சமத்த மநு முனீச்சுர தேவதைகளும் அரவிசிட்டமென்று விபூதிதரிப்பார்கள். அறஞ்ஞாகிருணார்த்தம் மங்களார்த்தம் பௌத்திரார்த்தம் சிவார்த்தமாகப் பிராமணாதி வருணத்தரும், பிரமசாரியாதி ஆச்சிரமிகளும், சாங்கியாதி மதாபிமானிகளும், சர்வதா ஸ்ரீமத் விபூதி தரிக்கத் தக்கதென்று விசுவாசிக்க வேண்டும்.

## மானதபூசைக்குரிய பற்பத்தியானம்.

மானச பூசாரம்பத்தில் ஏகாந்த தானத்தில் சுகாசனத்தில் இருந்துகொண்டு நிர்ச்சங்க நிர்ச்சலனமாய் மனதை லலாடத்தானபாவனையாய் மவுனமாய் நிலைநிறுத்தித் தேகபாவனியா பூசாது

ட்டானங்களைச் செய்யவேண்டும். அப்படிச்செய்யப்புகும்போது மனத்தை அங்கபாவனையால் நிறுத்தி கீழ்க்கண்ட அங்கமந்திரங்களைக் குறித்து விபூதியணிவதாகப் பாவிக்கவேண்டும்.

லலாட மத்தியதானத்தில், "ஓம் நம் சிம் வம் யம் ஈஸ்வரா ஆத்மமேல் ஆருதார சுத்தியாய நமா மெய்ஞ்ஞானப் பிராப்தியாயநமா" என்றும்.

நாசி மத்தியில், ஓம் யகாரப்பிரணவ சதாசிவாய ஆக்ஞாசர்வதிரிமலாத்மக ஜீவசுத்தியாய (வம்)நமா மெய்ஞ்ஞானப் பிராப்தியாயநமா: என்றும்,

நாவின் மத்தியில் "ஓம் வகாரப் பிரணவமகேஸ்வராய விசுத்திசர்வ திரிகுணத் ஜீவசுத்தியாய (வம்) நமா மெய்ஞ்ஞான ப்ராப்தியாய நமாஃ" என்றும்,

கண்டமத்தியில், "ஓம் சிகாரப் பிரணவ ருத்ராய அனுகதசர்வ அந்தக்கரணத்ம ஜீவசுத்தியாய (சிம்)நமா மெய்ஞ்ஞானப்பிராப்தியாய நமாஃ" என்றும்,

இருதய மத்தியில், "ஓம் மகாரப் பிரணவ விஷ்ணுவாயமணிபூரக சர்வ கோச அவஸ்த்ராக த்வேஷாத்மக ஜீவசுத்தியாய (மம்) நமா மெய்ஞ்ஞானப் ப்ராதியாய நமாஃ" என்றும்,

உந்தி மத்தியில் "ஓம் நகாரப் பிரணவ பிரம்மாய சுவாதிஷ்டான சர்வ இந்த்ரியாத்ம ஜீவசுத்தியாய (நம்) நமா மெய்ஞ்ஞானப்ப்ராப்தியாய நமாஃ" என்றும்,

குண்டலிநாபி மத்தியில்,"ஓம் ஓங்காரப்பிரணவ சிருஷ்டிகணபதியாய மூலாதார சர்வ பூதாத்ம ஜீவசுத்தியாய (ஓம்) நமா மெய்ஞ்ஞானப் பிராப்தியாயநமாஃ" என்றும்,

இடது நாசித்துவார மத்தியில், "ஓம் பிராணரேசக சந்திரகலாசர்வத த்வாம்ச சக்திஸ்வரூப சுத்தியா (சிவோ) நமாமெய்ஞ்ஞானப் பிராப்தியாய நமாஃ" என்றும்,

வலது நாசித்துவார மத்தியில், "ஓம் பிராணபூரக சூரியகலா சர்வதத்வாம்ச சிவஸ்வரூப சுத்தியாய (ஹம்) நமா மெய்ஞ்ஞானப் பிராப்தியாய நமாஃ" என்றும்,

இடதுகண் மத்தியில், "ஓம் கலாமய ஞானமயசூக்ஷமாயஅகண்ட ஞானவியாபகாறிவுபேதசலன் சர்வபகிர்பாவ தரிசன ஜீவதா

சபந்த திருஷ்டியாய் (உம்) பீஜப்பிரணவ ஜீவோசர்வசத்தியாய நமா பிரமஞானப் ப்ராப்தியாயநமாஃ" என்றும்,

வலதுகண் மத்தியில், "ஓம் கலாமயஞானமய காரணபக்ஷ மாமய அகண்ட ஞானவியா பகாறிவுபேத சங்கற்ப சர்வபகிர்முக அந்தர்முக பாவதரிசன ஆத்ம அஞ்ஞானாபிமான திருஷ்டியாய (இம்) பீஜப்பிரமாண ஆத்மசர்வ சுத்தியாய நமா பிரம்மஞானப் பிராப்தியாய நமாஃ" என்றும்,

புருவமத்திய கண் மத்தியஸ்தானத்தில், ஓம் கலாமயஞானம யமகா காரணமய அகண்டஞான சாக்ஷியறிவுபேததன்னறிவாகா ரபேத அபேத சாக்ஷாத்கார ஈஸ்வர ஞானாபிமான திருஷ்டியாய (அம்) பீஜப்பிரணவ ஈஸ்வரசர்வ சுத்தியாயநமா பிரமஞானப் ப்ராப்தியாய நமாஃ" என்றும்,

இடதுசெவி மத்தியில், "ஓம் நாதாமய ஞானகாயவாசிஸ்வ ரூபகண்டாகண்ட ஆக்ருஷ்ண சக்திகலை ரேசகஇடகலா காரணய (மம்) பீஜகாரண நாதாய சக்திசுத்தியாய நம பிரம்மஞானப் ப்ரா ப்தியாய நமாஃ" என்றும்,

வலது செவி மத்தியில், "ஓம் நாதாமய ஞானமய வாசிஸ்வ ரூபகண்டாகண்ட ஆக்ருஷ்ணசிவகலை பூரக பிங்கலாகாரணய(உம்) பீஜகாரண நாதாய சக்தி சுத்தியாய நம பிரம்மஞானப் ப்ராப்தி யாய நமாஃ" உன்றும்,

இடதுபுய மத்தியில், "ஓம் இடகலா ரேசகபிரணவகிரியாசக் திகலை சர்வ கர்மாதிகாரத்வ சுத்தியாய (சிங்)பீஜாயநமா பிரம்ம ஞானப் ப்ராப்தியாய நமாஃ" என்றும்,

வலதுபுய மத்தியில், "ஓம் பிங்கலா பூரக பிரணவகிரியா சிவ கலைசர்வ கர்மாதிகாரத்வ (வங்) பீஜாயநம பிரம்மஞானப் ப்ராப் தியாயநமாஃ" என்றும்,

இடது முழங்கால் மத்தியில், "ஓம் இடகலா ரேசகபிரணவ விஷயா சக்திகலை விருத்தியாதிகாரத்வ சுத்தியாய (இம்) பீஜாய நமா பிரம்மஞானப் ப்ராப்தியாயநமாஃ', என்றும்,

வலது முழங்கால் மத்தியில், "ஓம் பிங்கலாபூரக பிரணவவிஷ யா சிவகலை விர்த்தியாதிகாரத்வ சுத்தியாய (அம்) பீஜாயநமா பிர ம்மஞானப் ப்ராப்தியாயநமஃ" என்றும் வலதுகைபெருவிரல்,இர ண்டாம் விரல்கள் சின்முத்திரை விரலால் தொட்டு மனத்தினல் தியானிக்கவும்.

பிரமரந்திர மத்திய ஸ்தானத்தில் ஆகாயமென்னும் அண்டவெளியாகிய அறிவு விசுவசாட்சி திருட்டியாய்ப்பாவித்து மனோயவனத் தியான சொரூபமாய் "ஓம் அஹம் சுவயப்பிரம்மமே நமஹ:" என்று தியானிக்கவும்.

தியானமகாமந்திரம்.

ஓம்-ஸ்ரீம்-கிரீம்-நமசிவாய நம:

இவ்வாறு விபூதி தாரணம் முடிந்தபின்பு கீழே விதிஒதபடி உருத்திராக்க தாரணஞ் செய்துக்கொள்ளவேண்டும்.

---

## உருத்திராக்க தாரணவிதி.

விபூதியும் உருத்திராக்கமும் சிவச்சின்னமாகையால் அவ்விரண்டுமே தரிக்கவேண்டும்; இதுவுமன்றி, விபூதியானது சிலவேளை வியர்வை மழைமுதலிய வற்றால் குலைந்துபோனாலும் உருத்திராக்கமிருந்தால் தோடமில்லை; அதனால், இராக்கதரால் பிடிக்கப்படும் பாவம் அணுகாது.

பரமசிவன் திரிபுரசங்காரம் செய்யப்போனகாலத்தில் கோபாவேசத்தினால் அவருடைய நேத்திரங்களில் இருந்து நீர்த்துளி விழ அதனால் உண்டாகியது; இந்தக்காரணத்தினால், அதற்கு உருத்திராட்ச மென்னும் பேருண்டாகியது; (உருத்திரன்-சிவன்-அட்சம்-கண்) அதற்குக் கண்மணியென்று பொருள். சிவபூசை செய்கின்றவர்கள் கழுத்தில் உருத்திராக்கமில்லாமலே பூசித்தால், அந்தப்பூசையைப் பரமசிவன் அங்கிகரித்துக் கொள்ளமாட்டார், ஆதலால் சிவபூசை முதலிய சிவவிரதாதிகளைச் செய்கின்றவர்கள் அவசியம் உருத்திராக்க கண்டிகை தரித்துக்கொள்ளவேண்டும்.

உருத்திராக்கோற்பத்தி.

ஆதலால் உருத்திராக்கதாரணமே கருத்தவியமாகும். அந்த விதானமும் சுத்தசைவன் அறியவேண்டும்; அது திரிபுரதகனன் லீலாசமயத்தில் ஈச்சுரன் சந்திரசூரியாக்கினி ரூபலோசநத்திரயத்திலான சலபிந்துக்களி லிருந்து கிரமத்தில் சுப்பிரவர்ணத்தில் சோடசவிதமாயும், இரத்தவர்ணத்தில் தசபேதமாயுமிருக்கும்உருத்திராக்கங்களுடைய நாமோச்சாரண, தரிசந, பரிசன, தாரணத்

திஞல் உத்திரோத்தமமான அதிக புண்ணியங்களைக் கொடுக்க உலோகோபகாரமாகப்பிறந்த உருத்திராக்கங்களைக் கோவைசெய்யும்போது, மணிகளின் உந்நத தாநமே முகங்கள், நிமீலதானமே புருட்டங்களாம்; முககணிதமறிவதற்கு ரேகைகளேமுகங்களாம், மணிகளின் மூலமே பிரமன், நாளமேவிஷ்ணு, முகமே உருத்திரன், கேசரங்களே சகலதேவதைகளாம்; அதையறியும் இலட்சணங்களை உபதேசகிரமத்தால் அறிந்து பரீக்ஷித்துப் பிரக்ஷாளனுதிவிதிகளால் சரஞ்செய்வதாம்.

## உருத்திராக்கம் அணியும் அங்கங்கள்.

உருத்திராக்கம் அணிவோன் ஸ்நாநாதிகளால் சுசியாகவிருந்து சமஸ்த பாபக்ஷயார்த்தமாகச் சிவஞானசித்தியார்த்தமாகச் சித்தசுத்தியாவென்று சங்கற்பித்துக்கொண்டு சிகைக்கு ஏகமுகமணி யொன்றும், மூர்த்திக்கு இருமுகமணி பதின்மூன்றும், சிரோவர்த்துவத்துக்கு பதினொருமுகமணி முப்பத்தாறும், கர்ணங்களுக்கு ஐந்து ஏழு பத்து முகமணிகளில் ஏதாவது ஒவ்வொன்றும், கண்டத்திற்கு எட்டு முகமணி முப்பத்திரண்டும், உதரத்துக்கு நான்கு முகமணி ஐம்பதும், வாகுத்துவயங்களுக்கு பதின்மூன்று முகமணி பதினாறும், மணிபந்தத் துவயத்துக்கு ஒன்பது முகமணி நூற்றெட்டும், உரத்துக்கு எந்த முகமணியாயினும் ஐம்பத்துநான்கும், அந்தந்த மந்திர பூருவமாகத் தரிப்பதாம். முற்கூறிய கிரம முகமணிகள் கிட்டாதாயின், எந்த முகமணிகளாயினும் அந்தந்த ஆதானங்களுக்குச் சொன்ன கணக்கின்படி தப்பாது தரிக்கவேண்டும்.

உச்சியிலொருமணி, காதொன்றுக்கு ஆறுமணிவிழுக்காடு இரண்டுகாதுக்கும் பன்னிரண்டு, சிரசில் நாற்பது, கழுத்தில் முப்பத்திரண்டு, மார்பில் நூற்றெட்டு, புறத்தில் முப்பத்திரண்டு, கைகளில் இருபத்துநாலு இவ்வாறு தரித்தலுமுண்டு.

இடையிடை பவளம் படிகமணி பொன்மணி இவைகளைக் கோத்து அணியவேண்டும். இவையுமன்றி, வில்வப்பழவோட்டையும் கோக்கலாம். இவ்வாறு சேர்க்காமல், உருத்திராக்கங்களைமாத்திரம் கோத்துத் தரித்துக்கொண்டால், எத்தனைமணி சேர்த்தாலும் ஒருமணி யணிந்தாலுண்டாகும் பலனேகிடைக்கும். இந்த உருத்திராக்கங்களில் ஒருமுகம் பதினொருமுகம் பதினான்குமுகம் உள்ள மணிகளைவைத்துப் பூசித்தாலும் சிவார்ச்சனைசெய்வதால் உண்டாகும் பலன் கிடைக்கும்.

## அதன் தேவதைகளும் பயனும்.

ஏகமுகமணி பரமசிவன்; பிரமகத்தியாதி பாதகங்களைக் கெடுத்துச் சர்வசித்திகளைக் கொடுக்கும். துவிமுகமணி ஈச்சுவரன், ஈசாமியர்கள்; கோகத்தியைப்பரிகரிக்கும். திரிமுகமணி அக்கினி, ஸ்திரீகத்தியைக் கெடுக்கும், சதுர்முகமணி பிரமன்; புருஷாதிகத்தியைத்தொலைக்கும், பஞ்சமுகமணி சதாசிவன்; அபக்ஷியாபக்ஷணாதி தோஷங்களை நிவர்த்திக்கும், சண்முகமணி சண்முகன்; புருண கத்தியாதி பாதகங்களைக் கெடுக்கும். சத்தமுகமணி அநந்தன், கோகத்தி சுவர்ணஸ்தேயாதி சகல கன்மசங்களையும் கெடுக்கும். அட்ட முகமணி விக்கினேச்சுரன்; சமத்தபாதகங்களையும் சர்வ விக்கினங்களையும் நிவர்த்திசெய்து முத்திகொடுக்கும் நவமுகமணி வைரவன்; சகல கன்மசங்களையும் களைந்து புத்திமுத்திகளைக் கொடுக்கும். தசமுகமணி மாதவன்; பூதபேதாளமாரிகண பிரமராட்சச பங்காதி பீதிகளை விடுக்கும். ஏகாதசமுகமணி ஏகாதசருத்திரர்; அச்சுவமேதாதி புண்ணியங்களைக் கொடுக்கும். துவாதச முகமணி துவாதசாதித்தர்கள்; அக்கினிசோர வியாக்கியம் கட்காதிபாதைகளைக் கெடுக்கும். திரயோதசமுகமணிமகேச்சுவரன்; துற்கிருத்தியங்களை நீக்கி விவகாரசித்தி, சுவர்ணதானாதி பலன்கள், ரச ரசாயன வாதவசியாதிகளைக் கொடுக்கும். சதுர்த்தசமுகமணி மறுக்கன்; சகலதேவதா பூச்சியத்துவப் பிரதாயியென்று அறிவது.

உருத்திராக்க தாரணம் முடிந்தபின்பு கீழே குறித்தபடி நியமத்தோடு அந்தந்த இடத்தை தொட்டு தியானிக்கவும்.

## அங்க சுத்தி.

ஓம்-அம்-யம்-வம்-சிம்-மம்-நம்-ஓம் என்று உச்சியையும்,
ஓம் யம் என்று நாசி மத்தியையும்,
ஓம் வம் என்று வாயின்மேல் உதட்டையும்,
ஓம் சிம் என்று கண்டமத்தியையும்,
ஓம் மம் என்று இருதய மத்தியையும்,
ஓம் நம் என்று உந்தி மத்தியையும்,
ஓம் ஓம் என்று நாபி குண்டலி கமலத்தையும்,
ஓம் சிவோ என்று இடதுநாசித் துவாரத்தையும்,
ஓம் ஹம் எனறு வலதுநாசி துவாரத்தையும்,
ஓம் வோம் என்று நாசித்தண்டையும்,
ஓம் அமி என்று இடது கண்ணையும்,

ஓம் ஷங் என்று வலது கண்ணையும்,
ஓம் அம் என்று லலாட மத்திலையும்,
ஓம் உங் என்று இடது காதையும்
ஓம் உம் என்று வலது காதையும்
ஓம் சிங் என்று இடது புயத்தையும்
ஓம் வங் என்று வலது புயத்தையும்,
ஓம் இங் என்று இடது முழங்காலையும்,
ஓம் அங் என்று வலது முழங்காலை விரலால்தொட்டும்,

ஒப் இம் என்று சிரசு உச்சியில் மனத்தை நிறுத்திச் சொல்லப்பட்ட பாவனையின்பேரில் கீழ்வரும் முத்திபஞ்சாட்சரத்தைத் தியானிக்கவும்.

முத்தி பஞ்சாட்சரம்

ஆராதார தேவதாய நமாஓம் ஸ்ரீம் கிரீம் நமசிவாயமகாதேவதேவேஸ்வர நமஃ.

அங்கசுத்தி பிரயோசனம்.

இவ்விதமான அங்கசுத்தி யாதெனில், சிரசு-காது-கண்-மூக்கு-வாய்-கரங்கள்-கால்கள்-சரீரம்-மனம்-குய்யம்-உபத்தம் முதலிய அங்கங்களும் தனித்தனியாய்ப் பாவகிருத்திய விவகாரங்களில்பிரவேசிக்காது அதற்குப் புண்ணிய தபோகிருத்திய விவகாரங்களிலே இராநின்றதே அங்கசுத்தியாகும்.

காயுத்திரி.

பிரமரந்திரத்தில் பிரமஞான பாவனைபிருந்துகொண்டு (பின்வரும்)இந்தக்காயத்திரி மந்திரங்களைத் தியானிக்கவும்.

மஹாபிரம காயத்திரி.

பிராதகாலதியான மந்திரம்.

ஓம்பூஹ ஓம்பூவஹ ஓம்ஸுவஹ ஓம்ஜனஹ ஓம்மஹஹா ஓம்தபஹ ஓம்சத்தியம் ஓம்ததஸ் விதுர்வறேண்ணியம் பர்கோதேவஸ்லிய தீமஹிதியோ யோனஹ பிரசோதயாத் ஓமா, போஜோதிரஸோ-பமதம்-பிரமஹூ பூர்ஜுவல்ஸுவரோம்.

ஓஜோ ஸி-ஸஹோஸி-பலமஸிப்ரா ஜோஸிதேவானும் தாமனுமாஸி-விஸ்வமஸி-விஸ்வாயுஹு-ஸர்வமஸி ஸாவாயுஹு அபிபூரோகம் காயத்திரிமாவாஹயாமி ஸாவித்ரி மாவாஹயாமிசர





ஸ்வதிமாவாஹயாமி-சந்தருஷிமாவாஹயாமி-ஸ்ரீயமாவஹயாமி பல மாவாஹயாமி.

தத்ஸவிதுஹ அங்குட்டாப்பியாம் நம, வரேண்ணியம் தர் ஜனிப்பியாம்நம, பர்கோதேவஸ்ஸிய மத்தியமாப்பியாம்நம-தீம ஹி அனுமிகாப்பியாம்நம-தியோயோனஹ-கனிஷ்டிக்காப்பியாம் நம-பிரசோதையாத் கரதல கசப்புருஷ்ட்டாயாம் நமஃ

தத்ஸவிதுர் பிர்மாத்மனே ஹிருதயாயநம வரேண்ணியம்வி ஷ்ணுவாத்மனேசிரஸேஸ்வாஹா-பர்கோதேவஸ்ஸியருத்திரார்த் மனே ஸிகாயைவஷட்-தீமஹிசத்தியாத்மனேஸ ரோத்தியாகவ சாயஹம்-தியோயோனஹ விக்கினா நாத்மனே நேத்திராப்பியாம் வஸட்-பிரஜோதயாத்-ஸர்வாதமனே- அஸ்த்திராயபட்பூர்ப்புவஸ்வ ரோ-மிதி-திக்கசந்த்ஹா

சிவாய விஷ்ணுரூபாய விஷ்ணுவே சிவஸ்ஷியஹிருதயம்-வி ஷ்ணுதர்-விஷ்ண்ணுஞ்ச ஹிருதயக்ஸிவஹா-யாதாசிவ - மயோவி ஷ்ணு ரேவம்விஷ்ணு மயஸிவஹாஃ

## சூரியத்தியானம்.

மந்திரஸ்ஸிய சர்ஷஷணி திருத ஸ்ரவோ தேவஸ்ஸியஸான ஸிம் ஸத்தியம் ஸித்திரா ஸ்ரவஸ்தவம் மித்தோஜன்னியாகத்யதி விரஜானன் மித்திரோ தாதார பிரிதிவீ முதததியாம் மித்திர ஹா குருஷ்ட்டிர நிமிஷாபி சஷ்ட்டேஸத்தியா அவ்வியம் கிருதவ த்வி தேம பிரஸ மித்திரமர்த்தோ அஸ்த்து, அரயஸ்ஸ தாம்யஸ்த்த ஆதித்திய சிட்க்ஷதி விரஜேன நஹனந்தியே-நஜீயதே-துவதோனை நமக்-ஹோ அஸ்னியத்தியமதிந்து - தோக்துராத் என்று தியா னித்து,

## காலைச்சந்தியாவந்தனம்.

## விஷ்ணு துதி.

ஓம் கேசவாயஸ்வாஹா ஓம் நாராயணஸ்வாஹா-ஓம் மாதவா யஸ்வாஹா ஓம் கோவிந்தாயநமஹா ஓம் விஷ்ணுதேவன் நமஓம், மதுசூதாயனநம ஓம் திரிவிக்கிரமாயநா ஓம்வாமநாயநம ஓம் ஸ்ரீத ராயநம் ஓம் ரிஷிகேசாயநம ஓம்பத்மநாபாயநம ஓம்தாமோதரா யாம ஓம் ஸங்கர்ஷணயநம அதோக்ஷஜாயநம ஓம் நாரசிம்மாய ஓம் அச்சுதாயநம ஓம் ஜனர்த்தனயநம ஓம் உபேக்திராயேண நம ஓம் கிருஷ்ணாயேனநம ஓம் ஸ்ரீகிருஷ்ணாயேனநம.

மந்திரஸ்நான காயத்திரி.

ஆபஹஸா புனந்து புருஷிவீம் பிரிதிவீ பூதா புநாதுமாம் புனர்ப்ரமபிரதானம் ஹூக் சச்ச ஷுத்வஷைம் ததிஷ்டமெந்தேவும் தாவேதி ஷதிதிர்த்த ரேணசத் மிருஷத்வர மைருத்ரணிவேஷு, ஸதப்ஜர கே ஜாருத ஜாத்திரி ஜாருதம் புருஹத்.

ஓம் மித்திரே காட்க்ஷிரம் பிரம்மஹா அக்னிர்தேவதாசபீசம் மஹா, யத்தியா த்க்ஷர வாய்த்திரம், சந்தனம் பரமச்சாத்மகம் ஸ்வரூ பம் ஸாயுஜ்ஜியம் வினியோகம்.

ஆபாதுவர தாத்தேவியக்ஷரம் பிரம்மணம்பிதம் காயத்திரி சந்தசாமேதேதபிரம்ம சுஷஸ்வமே யதக்ஷேபிக்ருநுதே மஷயும் தத்க்ஷே பிரதி மூச்சதே யத்திராத் திரியாத் குருதேபாபும் தத் ராத்திரியா பிரதிமுச்சதே சர்வர்ணே மகாதேவி ஸந்தியவித் தியே ஸரஸ்வதி,

மாலைச்சந்தியாவந்தனம்.

ஓம் தஸ்-விதுர்வரேண்யம்-பர்கோ - தேவஸ்ஸியதீமஹித்யோ னப்ரஜோதயாத் ஓம் மாபோ ஜோதி ரசோ மிருதம்பிரம்ம-பூர் ப்பவஸ்சுவரோம்-பூர்யோக்தபிரீதியக்பிம் - சந்தியாக்கணிம் ஜபா சக்தி காயத்திரி மந்திரம் ஜபங்கரிஷியே.

நமஸ்காரம்.

ஓம் யோதேவோச்நௌமோபசு யோவிச்வம்புவனமாவிவேச யஔதீஷு-யோ வனஸ்பதீஷு-தஸ்மைதேவாயநமோநம:

ஆராதனை.

ஓம் சத்யம் ஞானமனந்தம் பிரம்ம ஆனந்தரூப் மமிர்தம்பத் விபாதி சாந்தஞ் சிவமத்வைதம்,

காயத்திரி தியானம்.

ஓம் பூர்புவ ஸுவதத்ஸவிதுர்வரேண்ணியம் பர்கோதேவஸ் யதீ மஹிதியோயோந ப்ரயசாஷயாத்.

அடைக்கலம்.

ஏஷாஸ்யபரமாகதி ரேஷாஸ்ய பரமாஸ்பதேஷாஸ்ய பரமோ லோக ஏஷோஸ்ய பாமாநந்த ஏதஸ்யை வாநந்தஸ்யாந்யாநிபூதா நிமாத்ரதமுப ஜீவந்தி.

### தோத்திரம்.

(1) ஓம் நமஸ்தே ஸ்தேதே ஜகத்காரணாய நமஸ்தேசிதே சர்வ லோகாச்ரயாய நமோத்வைததத்வாய முக்திப்ரதாய நமோப்ரஹ்மணே வ்யாபினேசாச்வதாய,

(2) த்வமேகம் சரண்யம் த்வமேகம்தரேண்யம் த்வமேகம் ஜகத்பாலகம் ஸ்வப்ரகாசம் த்வமேகம் ஜகத்தர்த்ரு பாத்ருப்ர ஹர்த்ரு த்வமேகம் பரம் நிச்சலம் நிர்விகல்பம்,

(3) பயாநாம்பயம்பீஷணம் பீஷணாநாம்கதிப்ராணி நாம்பவ நம்பாவநாநாம், மஹோச்சைப்பதாநாம் நியந்த்ருத்வமேகம்-பரே ஷாம்பரம்ரக்ஷணம் ரக்ஷணாநாம்,

(4) வயம்த்வாம்ஸமராமோவயம் த்வாம்பஜாமோ, வயம்த் வாம் த்ஸாக்ஷிருபம்நமாம ஸதேகம் நிதாநம் நிராலம்பமீசம் பவா ம்போதிபோதம் சுரண்யம் வரஜாம,

### பிரார்த்தனை.

அஸ்தோம ஸத்சமய தமஸோமா ஜயோதிர்கமயம் ருத்யோ ஜர்மா அம்ருதங்கமய ஆவிராவிர்மஎதி ருத்ர யத்தே தக்ஷணம் முகம் தேநமாம் பாஹிநித்யம்.

### ஆசீர்வசனம்.

ஓம்பரகோவர்ணேபஹ ¬ தாசக்தியோகாத்வர்ணாநநே காந்தி இதார்த்தேத்தாதி விசைதிசாந்தே விச்வமாதௌ ஸதேவ ஸநோ புத்யாஸ ¬ பயாஸம் யுநக்து.

### சாந்தி வசனம்.

ஸ்வருக்ஷகாலக்ருதிபி பரோநயோவஸ்மாத் ப்ரபஞ்ச பரிவர் த்ததேயம் தர்மமாஹம் யாபநுதம்மகேசம் ஞாத்வாத்மஸ்தமமர் தம் விச்வதாமவிச்வஸ்யைகம் பரிவேடிதாரம் ஞாத்வசிவம்; சாந் திமத்யந்தமேதி.

---

## சில பொது விதிகள்.

### விபூதி அணியலாகாத இடங்கள்.

கடவுள்-அக்கினி-ஆசாரியன்-பாவிகள் சிவநிந்தைசெய்வோர் பூப்புஸ்திரீகள் இவர்கள் முன்னம்விபூதி அணியப்படாது. அன்றி மேற்படியார் வசிக்குமிடம்-அசுத்தநிலம்-நடக்கும்போது இவ்விட ங்களில் விபூதியைத் தொடுவதும் மாபாதகமாம்.

### விபூதி அணியுங்காலம்.

விபூதி புண்ணிய சொரூபமாதலால் எப்போதும் நீட்டிடப்படு கிடையாது. அன்றி, மேற்சொன்ன இடமே தவறன்றி விபூதிக்குக் காலத்தவறு கிடைபவேகிடையாது.

### அணியத்தகா விபூதி.

கோமயத்தினுலே தீட்சாகிரமத்தோடேயே மகா வெவிதிகளாற் செய்யப்பட்டதாயினும், பால்வெண்மையில்லா விபூதி உதவாது. அதனைக்கட்டாயம் பெறவேண்டியதாயின் வாங்கிய விபூதியை நமஸ்காரத்தோடு பத்திர புட்பங்களால் அருச்சித்துப் பெறவேண்டும்.

### விபூதி அணியத் தகாதவர்கள்.

கௌபீன மற்றவர், கிருவாணமாயுள்ளவர், தேகமலினமாயுள்ளவர், அழுக்காடையுடையோர் முதலினர் விபூதியணியப்படலாகாது.

### விபூதியைக் குழைத்திட வேண்டியவர்கள்.

சமயி காலையினும், புத்திரன் காலைமாலைகளிலும், சாதகன் காலைமாலை மத்தியானங்களிலும், ஆசாரியன்காலைமாலைமத்தியான அர்த்தராத்திரிகளினுமே விபூதியை நீரிற்குழைத்துத் தரிக்கவேண்டும்.

### விபூதி குழைப்பதற்கேற்ற சலம்.

ஊற்றுநீர் அல்லது, ஆற்றுநீராய்க் குளிர்ந்த சலமாய் வடிகட்டியதா யிருத்தல்வேண்டும். அப்படியல்லாது, உவர்நீர் - வெந்நீர்-பழையநீர்-பாசி-குமிழி-நுரை - கலங்கல் - புழு முதலியவையுள்ள அசுத்தநீர் இவைகள் ஆகாது.

விபூதியணிவோர் சூரியோதயத்திற்குமுன் எழுந்து மலசலங்கழித்து, தந்தசுத்திசெய்தபின் சிவத்தியானத்தோடு விபூதியணிந்துக்கொள்ளவேண்டும்.

விபூதியைப் பெறுங்கால் வந்தனோபசாரத்துடன் இரண்டு கையாலும்பெற்று, திரிபுண்டரம் உத்தூளமாகத் தரிக்கவேண்டும். சதுரமாகவும் பொட்டாகவும் இரேகைப்பழுதாகவுந் தரிக்கப்படாது.

விபூதி யணியுங்கால் கிழக்குமுகமாய்நின்று மூன்று விரலால் நெற்றியில் நெருந்தும்படி தலைநிமிர்ந்து மனச் சந்தோடத்துடன் தரித்தல்வேண்டும்.

ஸ்திரீகள் பூப்புநாள்களில் ஒழிந்து சுத்தமாய் அனுட்டானஞ்செய்து சத்தியோசாதமந்திரத்தை நூறுருச்செபித்து அணிய வேண்டும்.

விபூதியாதி சிவானுட்டானங்களை ஏனைய சைவரும் அனுட்டிக்குமாறு ஒருவகையாகக் கூறப்பட்டது. மற்ற விடயங்களை விரிவாகக் காணவேண்டின், ஆசாரியாபிடேக தீட்சாதிகிரமமாகத் தெரிதலே உசிதம்; அன்றி, சைவநெறியினுங் காணலாம்.

குறிப்பு.

இவ்விதசிவவிரதாநுட்டனை சைவன் பஞ்சாட்சராதிமந்திர செபநியதிகளை அறியவேண்டின் அறுவிததாரணம்-பஞ்சசிவமந்திரம்-திரிவித சங்காரமந்திரம்-பஞ்ச பிரணவமந்திரம் - பஞ்ச பஞ்சாட்சர மந்திரம்-பஞ்சாஸ்திரமந்திரம்-பஞ்ச பிரம்மமந்திரம்-ஆதி மகாசத்தி மந்திரம்-சல்லிய தந்திராதி சித்தமந்திரம் முதலிய மந்திரங்களையும், காயத்திரி மிருத்தியஞ்சய மூர்த்தித்துவ நீலகண்ட சரப வீர விக்கினேசுவர விசாக வித்தியேசுர பிரம விஷ்ணுக்களுக்குரிய வைரவாதி மகாமந்திரங்களும், கர்மாதிகளுக்குரிய பல்லவாதி கிரியாபேத விதிகளும் மந்திர மந்திரோக்த பீஜ கணித சகஸ்ராதி விவித நியதிகளும் தெரியவேண்டியதவசியம்.

இவ்வாறு மந்திரங்களை அனுட்டிப்போர் செபிக்குமிடம் செபசங்கியாபலன், செபபேத தேசகால திதி நட்சத்திர கிரகவார யோக ஓராவிதிகளும், எக்கியாதி கிரியாபாவங்களும், திக்கு ஆசன சமூகவிஷயங்களும் செபமாலிகை செபமணி செபிப்போரது விதி செபவர்ணரூபம் கற்பத்திரயாதிகள் பிரயோசனாதிகள் சுத்திக்கிரியைகள் அத்திராதி முத்திரைபேதங்கள் பூஜா திரவியாதிகள் ஆவாகனாதி உபசாரங்கள் பத்தி சொரூபம் அந்தரங்கபூஜா விதி சுத்தசைவ லட்சணங்கள் சிவவிரத நெறிகள் தீட்சாவிதிகள் இலிங்கம் பிரமாண சூத்திரவிதிமுதலியவைகளைக் கிரமமாக மிக்க சுருக்கமாய் எழுதத்தொடங்கினும் பெரியகிரந்தமாக முடியும். இவை விளங்கக்கிடப்பது ஆகமங்களிலேயே; ஆனதால், சமயதீட்சைபேறும் பெற்று ஆசாரியரால் எல்லாந் தெரிந்துகொண்டால் அதிக எளிதாகவும் சம்பிரதாயமாகவு மிருக்குமாதலால், இவ்வளவிலேயே நிறுத்தி விவாகவிதியைக் கூறத் தொடங்குகின்றேன்.

நித்திய கர்மானுஷ்டானவிதி

முற்றிற்று.





# விவாக விதி.

குறிப்பு.—கீழ்வரும் பக்கங்களில் 'மணப்பிள்ளை' என்பதை 'மாப்பிள்ளை' என்றும், 'மாணிக்கு உற்றான்' என்பதை 'வாழ்விக்கத்தான்' என்றும், வேறு சில மொழிகளுக்கும் மறுமொழியாக உபயோகித்தது, படிப்போருக்கு எளிய நடையாக இருக்கும் பொருட்டென்க.

விவாகமென்பது இவ்வுலகத்துள்ள ஆடவர் மகளிர் இருவரும் ஒருவரோடொருவர் அன்னியோன்னியமாய் அளவளாவி இல்லறம் நடாத்தும்பொருட்டு ஏற்படுத்திக்கொள்ளும் ஓர் விதி உடன்படிக்கை. இது இகபரசாதனங்கட்குரிய எவ்வித சுகத்தையும் அடைவதற்கு முதற்காரணமாயிருக்கின்றது. ஆதலாலன்றோ, இதற்கு விவாகம் மணம் சுபம் மங்களம் மன்றல் என்னும் சிறந்த பெயர்கள் அமைந்திருக்கின்றன. கலியாணம் என்பது கடவுளாலேயே விதித்தவிதியன்றி விலக்கல்ல. அவருடைய விதியே என்பதை ஆண்பெண் என்னும் இருவகுப்பாய்ப் படைத்திருப்பதனாலே அறியலாம். எல்லாச் சீவராசிகளையும் இவ்வாறே படைத்திருக்கினும் மானிடர்களாகிய நமக்குமாத்திரமே பகுத்தறிவளித்திருக்கின்றனர். அஃதொன்றில்லாவிடின், மிருகாதிகளைப்போன்று நாமும் தாயென்றும் தமக்கையென்றும் தங்கையென்றும் தாரமென்றும் தாரதம்மியம்நோக்காது நடக்கமுயன்று அதனாற் பல கெடுதிகள் நேரவும் செய்துகொள்வோம். அப்பகுத்தறிவுடைமையினாலேயே மிருகாதிகளுக்கு நடக்கவியலாத அரிய விதிகளெல்லாம் நமக்கு விதித்திருக்கின்றார். அவ்விதிகளைக் கடைப்பிடித்தொழுகி இல்லறம் நடாத்திப் புத்திரப்பேறடைந்து குடும்ப விருத்திபுரிந்து சுகமாய் வாழும்பொருட்டுத் தான் விவாகவிதியைக் கடவுள் விதித்திருக்கின்றார். வீடுகட்டும் ஒருவன் அவ்வீடு நெடுநாள் அழியாதிருக்கும்படி உறுதியாய்க் கட்டுவதற்கான முயற்சிகள் பலவற்றையும் முன் சாக்கிரதையாய்ப் புரிவதுபோல, ஒரு விவாகம் நியமிக்கும்போது மணமகன் மணமகள் என்னும் இருவரும் இகலோகத்தில் ஒற்றுமையாய்ச் சுகசீவிகளாக வெகுகாலம் வாழும்பொருட்டும், இவ்வில்லறத்தால் பரலோகத்திலே சதானந்தம் அனுபவிக்கும்பொருட்டும் இன்றியமையாதனவாயுள்ள ஒழுங்குகளனைத்தையும் புரியவேண்டியது அத்தியாவசியகம். விவாகமானது சதிபுருடர் இருவரின் மன ஒற்றுமையால் பாக்கியத்திற்கும், மனவேற்றுமையால் தௌர்பாக்கியத்திற்கும்

அத்திவாரம்போலாகின்றது. குடும்பத்திற்கு அநுகூலம் பாக்கியமும் பிரதிகூலம் தெளர்ப்பாக்கியமுமாமென்பது சர்வசன சம்மதமாதலின், அவ்விரண்டும் முறையேமனவொற்றுமையாலும் மனம் வேற்றுமையினாலுமே விளையக்கூடுமென்பது ஆபாலவிருத்தர்களுமறிவாரன்றோ? அதுபற்றி விரித்துக்கூறவேண்டியது அநாவசியம். நூதன குடும்பிகளாகிய மணமகன் மணமகள் என்னும் இருவர்க்கும் விவாகம் ஆகிய நாள் முதற்கொண்டே பாக்கியமாயினும் தெளர்ப்பாக்கியமாயினும் தொடர்ந்துகொள்வது தேற்றமாகையால், அக்காலமுதல் அத்தகையபாக்கியம் விருத்தியாகவும் தெளர்பாக்கியம் நிவிர்த்தியாகவும் அவசியமான ஒழுங்குகள் எவைகளோ, அவைகளை அவ்விருவரைப் பெற்றோரேனும் சுற்றத்தினரேனும் செவ்வனேயூகித்து, ஒன்வொன்றையும் திருத்தமாய் நடத்திவைக்கவேண்டியது முக்கியகடமையாம்.

### கலியாணஞ் செய்யுங் காலம்.

சில சாத்திரிகள் ஆடவர்களுக்கு இருபத்தைந்து வயதிலும், மகளிர்களுக்கு இருபது வயதிலும் விவாகம் முடிப்பது தகுதியென்றும்; ஆடவர்களுக்கு இருபத்தைந்து வருடம் வரையில் தான் வளர்ச்சியென்றும், மகளிர்களுக்கு இருபது வயதுவரையில் அவயவங்கள் பூரணபக்குவ மடைகிறதென்றும், இவ்வயதிற்கு முந்தி விவாகம் முடித்தல் இருவருடைய சரீரசவுக்கியத்திற்கும் பிரதிகூலமென்றுங் கூறுகின்றார்கள். சிலதேசங்களில் சீதோட்டின வேறுபாட்டிற்கும் தேகசுவாபீகத்திற்குத் தக்கபடியும் ஆடவர்களுக்கு இருபத்திரண்டு வயதிலும், மகளிர்களுக்கு பதினெட்டுவயதிலும் விவாகம் முடிப்பதுக் தகுதியெனச் சிலசாத்திரிகள் கூறுகின்றார்கள். நமது முன்னோர்கள் காலத்திலே இருபத்தைந்து வயதுக்கு மேற்பட்டு முப்பது வயதிலேயே விவாகம்முடித்து வந்ததாகவும் அதுவரையில் அவர்கள் சிற்றின்பம் அறியாதவர்களாயிருந்ததாகவும், அதற்கேற்றபடி அவர்களனைவரும் நீடித்த ஆயுளுடையவர்களாயும் நோயற்ற திடகாத்திரமுடையவர்களாயும் இருந்ததாகவும் கேள்விப்படுகின்றோம்.

### புருடனுக்குப் பெண்கோடக்க நிச்சயித்தல்.

ஒருவனுக்கு ஒருபெண்ணை நிச்சயப்படுத்துவதானால், அப்பெண்ணின் தாய்தந்தையர் கவனிக்கவேண்டிய முக்கியாமிசங்களாவன:—

புருடன் பெண்ணின் பெருமைக்குத்தக்க நல்ல வமிசத்தி லுள்ளவனென்றும், அவன் அல்லது அவன்தந்தை மேகம் காசம் முதலிய வியாதிகளில்லாதிருக்கிறார்களாவென்றும், கல்வி யில் தேர்ந்து நன்னடக்கையிற்பயின்று விவேகம் புத்தி நுட்பம் அடக்கம் ஒழுக்கம் சாந்தம் வணக்கம் தயை தாட்சணியம் முத லிய சற்குணங்களமையப் பெற்றவனென்றும், பெண்ணுக்குத் தக்க வயதுள்ளவனென்றும், இலௌகீகவிஷயங்களில் தேர்ந்து தன் குடும்பத்தைக் காப்பதற்குத்தக்க பொருள்சம்பாதிக்கும் திறமையுள்ளவனென்றும் நன்றாய் விசாரித்துப் பலவழியிலும் ஆராய்ச்சிசெய்து பார்த்துப் பலநாள் ஆலோசித்துத் திருத்தி மான பின்னரே பெண்ணைக்கொடுக்கச் சம்மதிக்கவேண்டும். அப் புருடனுக்கு மேகம் முதலிய தொத்துவியாதிக ளிருந்தால், அவ் வியாதிநாளடைவில் அவன் மனைவிக்கேறி, "அரசமரத்தைப் பிடி த்த பிசாசு பிள்ளையாரையும்பிடித்தது" போல் யாதோர் அநுபவ மும் அறியாமல் அவர்களது வயிற்றிற்பிறந்த பிள்ளைக்கும் பிடித் துக்கொள்ளும். ஆதலால் அவ்விதரோகமுடையவனுக்குப் பெண் தரலாகாது. சயரோகமுடையவன், உன்மாதவமிசத்திற் சேர்ந்த வன், குடியன் என்னும் இவ்வகையினரைப் பெண்கள் மணம்புரி ந்துகொண்டால், அவர்கள் வாழ்நாளளவும் துக்கமும் துன்பமும் அநுபவித்துக்கொண்டே யிருக்கவேண்டும். சிலபுருடர்கள் தங்க ளுக்குள்ளே மேகம் முத ய வியாதிகளைக் கலியாணகாலம்வரை இரகசியமாய் ஒளித்து வைத்துக்கொண் டிருப்பார்களாதலால், அப்படிப்பட்ட விடயங்களை அவர்களுக்குரிய சிநேகிதர்களைக்கொ ண்டு இலகிதமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். திரவியவந்தனு யிருக்கின்றானென்று வியாதியுள்ளவனுக்கும் மூடசிகாமணிக்கும் கிழவர்களுக்கும் பெண்ணைக் கொடுக்கச் சம்மதிக்கலாகாது. மூடன்கையிற் சிக்கியபொருள் பைத்தியக்காரன் கையிலிருக்கும் கத்திக்குச்சமானம். பைத்தியக்காரன் எப்படி அக்கத்தியால் தன க்கும் பிறர்க்குங் கேடுவிளைப்பானோ அதுபோலவே மூடனும்தன் கையிற் சிக்கியபொருளால் பிறர்க்குக் கேட்டைத்தேடித் தானும் கெட்டுத் திண்டாட்டமுற்றுத் தெருவில்நிற்பான். ஆதலால், ஒரு பெண் அவ்வித அறிவில்லாப் பாக்கியவானுக்கு வாழ்க்கைப் படு வதைவிட அறிவுள்ளதௌர்பாக்கியனுக்கு வாழ்க்கைப்படுதலே அதிகநன்மை. திரவியவந்தனை தீராரோகஸ்தனுக்கு வாழ்க்கைப் பட்டுச் சிந்தைகலங்குவதைவிட அரோகதிட காத்திரமுள்ள ஏழை க்கு வாழ்க்கைப்படுவதே ஆனந்தம். ஐசுவரியமுள்ள கிழவனுக்

முறாழ்க்கைப்பட்டு, வாழ்நாளெல்லாம் சுகாநுபவமின்றி அல்லற்பட்டு அழுங்குவதைவிட வாலிபனை ஏழைக்கு வாழ்க்கைப்பட்டுச் சுகாநுபவத்திற் சோர்வின்றியிருத்தலே அதிகமேன்மை.

பேராசையுள்ள பெற்றோர்களே! நீங்கள் ஊட்டிவளர்த்த இளங்கிள்ளையைப் பூனைவாயிலொப்பித்தாற்போல, அருமையாகப் பெற்றெடுத்த அரிவைமார்களை முற்கூறிய தரத்தினருக்குப் பேராசையாலும் மௌடீகத்தாலும் கொடுத்துவிட்டுப் பரிதவிக்க விடாமற் செவ்வையாய் ஆராய்ச்சிசெய்து, ஏழையாயிருந்தாலும் அரோகதிடகாத்திரனாகவும், வாலிபனாகவும், சற்குண சம்பன்னனாகவும் கல்வியறிவுள்ளவனாகவும், இலௌகீகனாகவும், குடும்பத்தைக் காப்பதற்குப் போதுமான வருவாயுள்ளவனாகவும், அல்லது இனிமேல் சம்பாதிக்கத்தக்கவனாகவும் உள்ளவனையேதேடி உங்கள்பெண்ணைக்கொடுங்கள்; கண்மூடித்தனமாய்க் கொடுத்துவிடாதீர்கள்.

## புருடனுக்குப் பெண்பார்த்தல்.

முற்கூறியபடி இவ்விந்துதேசத்தில் தாய்தந்தையரே தங்கள் பிள்ளைகளுக்குப் பெண்பார்த்து விவாகம்முடிப்பது வழக்கத்தில் வந்திருப்பதால், அதற்குரிய இலட்சணங்களை அடியிற் கூறுவாம். "இனம் இனத்தைச்சேரும்" என்றபடி தாய் தந்தையர், தங்கள் இனத்திற்சேர்ந்து தங்கள் பெருமைக்குத் தக்கதாயுள்ள பெண்ணைக் குறிக்கவேண்டும். அதன்பிறகு "தாயைத் தண்ணீர்த்துறையிற் பார்த்தால் வீட்டிற்பெண்ணைப் பார்க்கவேண்டியதில்லை" என்ற பழமொழிப்படியே அப்பெண்ணின் தாய்தந்தையர் சகோதரர்கள் இவர்கள் கல்வி-அறிவு-ஒழுக்கம்-அடக்கம்-பொறுமை - சாந்தம் - உண்மை-அரோகதிடகாத்திரம் முதலிய சற்குணங்களமையப் பெற்றவர்களா என்று தெளிவாய்த் தெரிந்துகொள்ளவேண்டும் அதன்மேல் அப்பெண் கல்வி-அறிவு-புத்தி-நுட்பம்-சாந்தம்-அமைதி-அடக்கம்-ஒழுக்கம்-வணக்கம் முதலிய சற்குணங்க ளமையப்பெற்று, சௌந்தரியமுடையவளாய், வாய்ப்பட்டியாயிராமல் அமர்ந்தவார்த்தையும்-அன்பையும்-குளிர்ந்த பார்வையும்-சத்தியவாசகமும் - உள்ளும் புறம்பும் ஒத்தநடவடிக்கையும் பாவத்திற்கஞ்சுதலும், சரீரசுசியும் பரிசுத்த வஸ்திரமுடுத்தலும்-சதா கடவுள் தியானமும்-எவ்வுயிரும் தன்னுயிர்போலெண்ணும் எண்ணமும்-வேலையிற் சுறுசுறுப்பும்,வீட்டுச்செய்தியை வெளிவிடாமையும்-பிறர் நிந்தைகூறாமையும்- அதனைப் பிறர் கூறக்கேளாமையும் சமையற்பாகத்தேர்ச்சியும் ஆகிய இவ்வித குணங்களமையப்பெற்றவளா என்று, அவள் வீட்டுக்கு அண்டை

அயலிலுள்ளவரைச் செவ்வையாய் விசாரித்துத் திருத்தியானபிறகு தான் அப்பெண்ணை நிச்சயப்படுத்திக்கொள்ள வேண்டும்.

இவ்வித ஏற்பாடே முடிவான விதியென்று உணர்ந்தாலும், தேசத்திற்குத் தகுந்தபடி பலவிதமாகமுடிவு செய்துக்கொள்கின்றனர். ஆகிலும் நமது இந்து சமயாசாரப்படி சாத்திரங்களுள் விவாக முடிவை எட்டுவகையாக எடுத்துக்கூறப்பட்டுள்ளது.

ஆனால், உலகில் வழங்கும் நால்வகை சாதியாரல்லாத மற்ற இழிகுலத்தாருள் அவ்விவாகம் அனேக விதமாக நடந்தேறுகின்றன. அதினிலக்கணமும் அதைச்சொல்லவேண்டிய அவசரமும் அநாவசியமாதலின், அவற்றைநீக்கி மேற்சொன்ன அட்டவிதவிவாகமும் இவை என்றும், அவற்றுள், வைதிகசம்பந்தமாய் எல்லோரும் ஏகதேசமாய் அனுட்டித்து வருவது இஃதென்றுமே கூறத் தொடங்கினோம்.

---

### விவாகபேதம்.

| | |
|---|---|
| 1. பிரமம். | 5. காந்தருவம். |
| 2. பிரசாபத்தியம். | 6. அசுரம். |
| 3. ஆரிடம். | 7. இராக்கதம். |
| 4. தெய்வம். | 8. பைசாசம். |

என எட்டுவகைப்படும். அவற்றுள்,

1. பிரம மணமாவது, மங்கைக்குரிய தாய்தந்தையோர் மருகனின் தாய்தந்தையோர் அநுமதியில்லாமல் பிரமசாரியான மணாளனுக்கு ஓமாக்கினி முன்னிலையில் தத்தஞ்செய்து கொடுப்பதாம்.

2. பிரசாபத்தியமாவது, கன்னிகையைப் பெற்றோரும் பிள்ளையைப்பெற்றோரும் மனமொருமித்து, பந்துமித்திரரோடு மணம்முடிப்பதாம்.

3. ஆரிடமாவது, பெண்வீட்டில் இரண்டு எருதுகளைக் கொண்டுபோய் மாப்பிள்ளைவீட்டார் கட்டிவைத்து வந்தவுடன் அவர்கள் எருதை பெற்றுக்கொண்டால், பெண்கொடுக்கிறோமென்பதற்குச் சாட்சியாக எண்ணி முருகனினது தேவி வள்ளியென மங்கையை மனமாரக் கொடுக்கப்பெறுவது. அவ்வெருதை யேற்றுக்கொள்ளாராயின் பெண்கொடுப்பதில்லை யென்ற குறிப்பாம்; இது ஒருவகை தேசாசாரம்போலும்.

4. தெய்வமாவது, மணவாளனில்லாமல் மணாளன் காமேஷ்டி யாகம் நடத்தி பெண்ணை காருகபத்தியமென்னும் அக்கினிக்குமுன் பாக நிறுத்தி புத்திரவரத்திற்பிறந்த புதல்வனுக்குத் தத்தஞ்செய்வ தாம்.

5. காந்தருவமாவது, மைந்தனும் மடந்தையும், ஒருவர்கொடு ப்பதின்றியே ஒருதனி இடத்தே சந்தித்து இருவரும் ஏகபோக மாக மனமொத்து சித்தமுருகுவதாம்.

6. அசுரமாவது, கன்னிகைக்கு தங்கபூடணங்களும் ஆடைக ளும் அணிவித்து அன்னாதி பட்சணமும் அளித்து ஆசாபாசங்களை யுண்டாக்கி, பெண்ணின் தாய்க்குப் பொற்பணி பொற்றூசு பொற் காசு முதலியவைகளைக்கொடுத்து உபசரித்துப் பழக்கமாயபின் வேர் இருந்து வஞ்சத்தோடு மருவுவதாம்.

7. இராட்சசமாவது, ஒருவன் ஒரு பெண்ணின்மேலிச்சையுண் டாகி விசாரிக்கும்போது பெண்ணும் பெண்ணின் தாய்தந்தையரும் சம்மதியாராயின், அக்கால் அப்பெண்ணை தந்திர மந்திராதிகளால் வலிதிலெடுத்துச்சென்று மனரம்மியமாகும்படி இன்சொற் பேசி பண்டுபலாதிகளைக் கொடுத்து மாலையணிந்து மணப்பதாம்.

8. பைசாசமாவது, பெண்ணின் உற்றாரும் மற்றோருமறியாது பெண்மதி மயங்கியகாலத்தே மருவுவதாகும்;

அதாவது, மூத்தாளிடத்தும், துயில்வாளிடத்தும் களித்தாளி டத்தும் பெறுவதாம்.

இந்த எட்டுவகை விவாகபேதங்கள் மிருதியாகிய சாத்திரங்க ளில் சொல்லியிருத்தலினால் இவை பிரமாணமே என்று அங்கீகரிப் பன அல்ல; அப்படி அங்கீகரிப்பது யுக்தமுமல்ல; இவ்வாறு நடப் பதாக வேதாதிநூல்களில் கண்டபடி கூறியதேயல்லாமல் அவ்விதம் நடக்கவேண்டுமென்றல்ல. என்னையெனின், மேற்சொன்ன நாலுவித விவாகம் நீங்கியவை கரும்புலையரும் விரும்பத்தகாதது; அசுர பேய் மிருகமுதலிய அசம்பிரதாயிகளுக்கே சிறப்பாம். ஆதலின், வே தசம்மதமாக உயர்குலத்தாரால் வெகு சகல சனப்பிரியமாய் அங்கீ கரித்துவரும் பிரமம், பிரசாபத்தியம் என்னும் இரண்டுமே சிறந்த தாம்.

அவற்றுள் பிரமம் என்னும் விவாகம் தற்கால பிராமணருள் ளும் [illegible] நடந்தேறுகையாலும் ஆசிரமாதிகள் நிலைதவறி புள்ளதாலும், 'சமயம்வந்தபோது யோசிப்பாம்' என நிறுத்தி னும்

போது பாவராலும் தொண்டாடத்தக்க பிரசபத்திய மணத்தினது இயல்பைமாத்திரம் இங்கு கூறுகிறேம்.

## பெண்களின் அகபலட்சணம்.

அரிய பெரும் புகழை வாய்ந்த இல்லறத்திற்குக் காரணம் பெண்களே. இவ்வித ஸ்திரீகள் எத்தகைய குணவதிகளா யிருக்க வேண்டுமென்னின், ஸ்திரி புருஷ அவயவ லக்ஷணங்களைக்குறிக்கும் சாமுத்திரிகாலக்ஷணம் அங்கசாஸ்திரம் முதலிய நூற்கள் ஒருவாறே குறிக்கின்றவாயினும், அங்கவிலக்கணத்தையே கூறினவன்றி குணாதிசுபலட்சணங்களைக் கூறவில்லை. அன்றி, அங்க அளவினாலே யே குணலட்சணம் கூறுதல் அடாது. என்னையெனின், அங்கசுபாவமானது நோய் வைசூரி, தேமல், ஆசாரம், ஔடத முதலியவைகளால் மாறுபடுவதாகலின் அவ்வவ் அவசரங்களில் வேறுவே றிலக்கணங்கூறநேரிடும். குணமோ காலாதீதமாகக் கற்பிப்பதன்றி, அங்க அளவினாலென்பது அசம்பிரதாயமாகும். எனவே குணங்களும், தேசமும்,காலமும், இடமும், சார்பும் மாறுபடுவ தாகலான் ஆன்றோர் கூறிய வடிவிலக்கணம் ஏகதேசமன்றி முற்றும் திடமாகா, என்னை? அந்நூலாசிரியர்கள் அபிப்பிராயம் எம்மரபார்க்கும், எவ்வூரார்க்கும், பொதுவாகாது ஒருசார்பேயாம். இங்ஙனமாக ஸ்திரீகளை ஆளுவோர் நூலளவையைப் பிரமாணமாகக்கொண்டு அந்நூற்களில் விலக்கான அவயவத்தாரை வைதும், புறங்கூறியும், அவதிகளைக் கற்பித்துச் சிந்தித்தும், ஒற்றுமையைக் கெடுத்தல் அறிவின்மையென முக்காலுமறிவாராக. ஆயினும் இங்கு ஸ்திரிகளிலக்கணங்கூறவேண்டுவது அவசியமேயாதலானும் ஆன்றோரால் அத்தியாவசியமாகக் கொள்ளக்கிடக்கும் ஒருவகை இலக்கணம் கூறுவாம்.

மரம்-பட்சி-நதி-குப்பை-கிரிப்பெயருள்ளவளும் - பெருவயிறு-உயரம்-குள்ளம்-கூன்-சிவந்தமயிர்-பிரட்டைத்தலை-வங்குமுகம் - குழிகண்-செங்கண்-சப்பைமூக்கு-முறக்காது-தொங்குதடு-ஏறுபல் - சரிகழுத்து-ஏற்றத்தாழ்வான குசம்-வளைதடிபோன்ற கை-தோள்-சுபரேகையில்லாத உள்ளங்கை-புள்ளி தழுதணை - மயிருள்ள உடம்பு-பருத்த இடை-குந்துகால்-ஏற்றத்தாழ்வான கால்விரல் - விரலொழி விரல் முட்டாமை-கிலமதிரநடத்தல்-பிடிவாதம்-பேருண்டி - தேகந்குலுங்கநடத்தல்-வெடிகுரல்-ஈனசுரம்-விரைந்தநடை-சுசியில்லாமை தயையின்மை-சதாபெருங்கூச்சலிடல் இத்தகைய துர்க்குணமுடையவளை மணஞ்செய்யலாகாது.

## பெண்களின் சுலட்சணம்.

சமஉபரம்-மிருதுதேகம் - ஒழுங்காகிக் கறுத்தமயிர் - வட்ட முகம்-பெருத்தகண்-நேர்நாசி-சிறுத்தவாய்-சிவந்தஉதடு - நிலவுபோன்ற தந்தபந்தி-சங்கக்கழுத்து-நெடுந்தோள்-அங்குசம்-சங்கம்-துவசம்-பதுமாதி-சுகரேகையுள்ளகரம்-சிறுத்தவிரல் - ஒத்த பயோதரம்-சமவயிறு-சிறுத்த இடை விருத்தசகநம் - நுண்தொடை - அழகு கணைக்கால்-மிருதுவானபாதம்-உரோமரகிதமானதேகம்-அற்ப நித்திரை விரைந்தபணிவிடை-இனியகுரல்-கலகமறியாமை-கடுஞ்சொல்லில்லாமையுமாகிய குணங்களுடையவளை வருவிக்கலாம்.

## சகுனம்.

மாப்பிள்ளைக் குரியவர்கள் இட்டபந்துக்களுடன் வடக்குநோக்கி இவ்வளவுதூரம் போய்த்திரும்புவதென்று ஒரு எல்லை ஏற்படுத்திக்கொண்டு அந்த எல்லைக்குள் இன்னவிதசகுனம் ஆகவேண்டுமென்று உத்தேசம்பண்ணினவர்களாகப் போய் தாங்களெண்ணியவண்ணம் சகுனம் சரிப்பட்டால், திரும்புங்காலையில் கிராமதேவதைக்குப் பூசைசெய்து தேங்காய் வாழைப்பழம் தூபதீபவுபசாரம்பண்ணித் தொழுது தங்கள் வீட்டிற்குப் போகவேண்டியது. சகுனம் பார்க்க வேண்டிய வழக்கமில்லாதவர்கள் தெய்வசந்நிதானத்தில் பூவைத்துப் பார்ப்பதுமுண்டு.

## பொருத்தம்.

அந்தப் பழக்கமில்லாதவர்கள் பிள்ளைக்கும் பெண்ணிற்குமுள்ள சனனக்குறிப்பையாவது பெண்ணின் இருதுக்குறிப்பையாவது பார்த்துக்கொள்ளவேண்டும். அப்படி சனனக்குறிப்பும் இருதுக்குறிப்புமில்லாமற்போனால், சோதிடரால் முன்சொல்லிய தசவிதப்பொருத்தங்களில் கழுத்து வயறு குய்யம் இப்படிப்பட்ட முக்கியப்பொருத்தங்களைப் பிரதானமாகக்கொண்டு முகூர்த்தம் நடத்தும் முயற்சியைத் தேடவேண்டியது.

## பரியம்.

நட்சத்திரம்-திதியாதிகள் பொருந்தியசுபதினத்தை ஏற்படுத்திக்கொண்டு 'அத்தினத்தில் நாங்கள் பெண்பார்க்கவருகிறோம்' மென்று பெண்வீட்டாருக்கு முன்னதாகச் சொல்லியனுப்பி வைத்து, சிலமாங்கலியப் பெண்களுடன் போய்ப் பெண்ணைப்பார்த்து தாங்கள் கொண்டுவந்த மஞ்சள்-புட்பம்-தாம்பூலம்-வழைப்பழம்-தேங்காய்-குங்குமாதிகளைக்கலியாணப்பெண் மடியிற்கட்டிவாழ்த்திவிட்டு

பெண்வீட்டார் உபசரித்துக் கொடுக்கும் தாம்பூல புட்பங்களைப் பெற்றுத் தாங்கள் வீட்டிற்கு வரவேண்டியது. அப்பால் பெண்வீட்டுக் காரர்கள் தாங்கள் ஒரு நல்ல நாள்பார்த்துக்கொண்டு மாப்பிள்ளையைப் பார்க்கவருகின்றோமென்று பிள்ளை வீட்டாருக்கு முன்னமே சொல்லி யனுப்பிவைத்து தாங்கள் ஏற்படுத்திக்கொண்ட சுபநட்சத்திர சுபலக்கினத்தில் மாப்பிள்ளை வீட்டிற்குப்போய்க் கலியாணப்பிள்ளையைக்கண்டு கல்விப்பொருள் செல்வப்பொருள் முதலிய கடையுடை பாவனைகளையும் கருதி பிள்ளைவீட்டார் உபசரித்துக் கொடுக்கின்ற தாம்பூல சந்தனபுட்பங்களைப்பெற்று, தங்கள் வீட்டிற்கு வருவதுமுண்டு. பின்பு மாப்பிள்ளைக்குரியவர்கள் பெண்ணிற்குப் பரியம்போடுவதற்காக ஒரு நல்லநாள் ஏற்படுத்திக்கொண்டு பெண் வீட்டாருக்கு முன்னமே தெரியவைத்து நாட்டார்கள்முதலாக வீட்டாரும் பந்துமித்திரர்களும் சிலமங்கிலியப்பெண்களும் வரிசைகொண்டு வரும்படியாகப்போய் குலாச்சார முறைமைப்படி பரியச்சீலை ஆபரணம்-புட்பம்-மஞ்சள்-சந்தனம்-தேங்காய்த்தொகை - வாழைப்பழவகை இவைகளைப் பெண்வீட்டிற் கூடியிருக்கின்ற பெரியதனக்காரரின் சபையில்வைத்து, புரோகிதரால் விநாயகபூசைபுரிந்து மாப்பிள்ளைவீட்டார் கொண்டுவந்த வரிசையைப் பெண்வீட்டார் மதிக்க வேண்டியது.

### உறுதிப்பத்திரம்.

பெண்வீட்டிற்கூடிய சபையார் பெரிதனக்காரர் புரோகிதரால் பரியவோலையெழுதி, அதற்கு மஞ்சட்காப்பணிந்து, குங்குமார்ச்சனை புரிந்து விநாயகருக்கு முன்வைத்துத் தூபதீபங்கொடுத்து,வணங்கி வாழ்த்தியெடுத்து, 'இன்னகோத்திரம் இன்னார்பிள்ளைக்கு இன்ன கோத்திரம் இன்னார்பெண்ணைக் கலியாணம்பண்ணிக்கொடுக்கச் சம்மதித்தோ' மென்று பெண்வீட்டாராற் சொல்லிவைத்து பிள்ளைவீட்டாரும் அதேபிரகாரஞ்சொல்லி ஒப்புக்கொள்ளும்போது, பரியம் இவ்வளவென்று புரோகிதரால் சபையோர் அறியக்கூறி வைக்கவேண்டியது.

### சாட்சி.

அப்பால் மநுவில் புரோகிதன் முதற்சாட்சியானதால் அவர்களின் குலாசாரப்பிரகாரம் பரியத்தொகை வகை இவ்வளவென்று நாட்டார் முதலியோர்களும் கண்ணோட்டமிட்டதைப் புரோகிதரால் மூன்றுதரஞ் சொல்லவைத்து, அந்தப்படிக்கே பணிசெய்வோன் ஓச்சன் இவர்களுங் கூவிச்சொல்லி, சங்குகுறிக்கவேண்டியது. அன்றி மநுவிஞ்ஞான விதிப்படி கலியாணவிசேடத்தில் பஞ்சாங்கக் கார

னும் பணிசெய்வோனும் கோத்தனும் பூக்கனும் பெருஞ்சாட்டியிய மிருப்பதனால், இந்தப் பெண்ணிற்கு இட்டபரிய மிவ்வளவென்று முன்னிலும் இவர்கள் அறிவதுடன் கூடமுதலிய விடத்தி லிருப்பவர்களுக்கும் கேட்கும்படிக்கு தொழிலாளிகளினும் கூறச்செய்வதுமன்றி மும்முறை சங்குமுழக்கி வைக்கவேண்டுவது. அவ்வாறு சங்குமுழக்கிவைப்பதில் அந்தந்த இனத்தாருக்குத் தகுந்தபடி ஒற்றைச்சங்கு இரட்டைச்சங்கு மூன்றுசங்கு பணிசெய்வோன் கோத்தன் பூக்கன் இவர்களால் முழக்கப்பண்ணுவித்த பின்னர், பஞ்சாங்ககாரர் மங்களசனம்பண்ணிப் பாக்குவெற்றிலை மஞ்சள் புட்பங்களுடன் புடவையையும் பூஷணப்பொருள்களையும் பெண்ணினிடத்திற் கொடுப்பித்துடனே புனையச்செய்துச் சபை தாம்பூலம்நடத்தி, புரோகிதருக்குத் தட்சணைகொடுத் தனுப்பிவிட்டு, விருந்து போசனமருந்தி சந்தனபுட்பதாம்பூலம் பரிமாறவேண்டியது.

### பந்தக்கால்.

அப்பால் பரியத்தினன்று குறித்த முகூர்த்தநாளுக்கிணங்க நன்னாட்கொண்டு, பந்துமித்திரர்களுடன் பெண்வீட்டிலும் பிள்ளைவீட்டிலும் பந்தக்கால் நாட்டவேண்டியது. இரண்டுவீட்டிலும் பந்தக்கால் நாட்டினலும், மாப்பிள்ளைவீட்டில் மற்றவேடிக்கைகளெல்லாம் செய்தாலும் விவாகமாத்திரம் பெண்வீட்டிற்கு மாப்பிள்ளையை அம்மான் மணக்கோலத்துடன் கொண்டுபோய்த் திருமங்கிலியம் தரிப்பித்து வைப்பது பெருமையும் உரிமையும் சாம்பிரதாயமுமாம்.

### பந்தல்.

பிள்ளைவீட்டார் பெண்வீட்டார் ஊரார் நாட்டார்முதலிய உரிமையோர்களும் பெருமையாகவந்து பஞ்சாங்கக்காரர் நியமித்த நிநட்சத்திர சுபலக்கின சுபயோகத்தில் பந்தற்கால்நாட்டி பிள்ளைக்கும் பெண்ணிற்கும் நலங்காதி திருமஞ்சனமாட்டி, விருந்துமுதலிய அருந்தப்பண்ணி, உறவின்முறையோ ரியாவரும் விவாகவிழாக் கொண்டாடி அன்றுதொடங்கி ஊரார்முதலிய இஷ்டர்களுக்கும் சுற்றத்தார்களுக்கும் தாம்பூலம் வைப்பதும் பந்தற்போடுவதும் விந்தையான விநோதவேடிக்கை செய்வதும், கண்ணாடி பட்டங்கள் - கமலபட்டங்கள்-கவிதமொட்டின் திட்டங்கள்-இரசக்குண்டுவிட்டுங்கள்-ஊலர்கட்டுஞ் சட்டங்கள்-சரிகைவேலை சகலாத்து மேற்கட்டியின் பட்டங்கள்-வாழை கமுகுகிளைகள்-கரும்புத்தலைகள்-தேங்காய்க் குலைகள்-மாங்காய்க்குலைகள்-பலாக்காய்கள்-கூந்தற்பனைகள் இலைகளைக் கைக்கட்டி, தோரணம் கொடிமுதலிய சம்பிரமங்கள் ஏதேதுசெய்

தலைக்கவேண்டியதோ அத்துடன்கூட மணவறையில் மணப்பந்தலும் திட்டாணிமேடையுஞ் சிங்காரிக்கத்தக்கது. இதுவெல்லாம் மேல் விரிப்பெ ன்பதுபோலாம்.

## திட்டாணிமேடை.

திட்டாணிமேடை போடவேண்டியதெப்படியெனில், களிமண்ணும் இருமண்ணுங்கலந்து மூன்றங்குல உயரம் மேடையிட்டு, அதன் நான்குதிசையிலும் வழிவிட்டு மூன்றங்குலந்திண்ணைபோட்டு அம்மேடையின்புறத்தில் செங்காவிக்கோலந்தீட்டி, உட்புறத்தில் ஒன்பதுவீடாக மாக்கோலங் காட்டி, நடுவில் ஓமாக்கினிக் குண்டம் வைத்து அதன்மேற்புறத்தில் கலியாணப்பிள்ளையும் பெண்ணுமிருப்பதற்கு மணப்பீடமுதலிய ஆசனங்களும் இரத்தினக் கம்பளங்களும் விரிக்கவேண்டியது.

## சிகை கழித்தல்.

பின்னர் அம்பட்டனால் மாப்பிள்ளைக்குப் பிரமசரியவிரதங்களைந்து, சிகை கழித்து நலங்கிட்டு, ஸ்நானஞ்செய்வித்து திவ்விய அலங்காரத்துடன் யானை குதிரை அல்லது பல்லக்கு வாகனத்திலேற்றிப் பற்பல விருதுகளுடனும் சர்வவாத்தியங்களுடனும் ஆடல்பாடல்களுடனும் வேதியர்களுடனும் வெண்கவிகை அல்லது அவரவர்கட்குரிய தண் கவிகை கவிக்க, மணக்கோலமாகப் பலரும் கூடிப் புறப்பட்டு, சந்தனமாலை தாம்பூலத்துடன் சதிராகப் பெண்வீட்டார் எதிர்கொண்டு வந்தழைக்கப்போய் நல்லவேளையில் பெண்வீட்டில் புக வேண்டியது. அவ்வாறே பெண்வீட்டிலும் பரிகாரியினால் கலியாணக்கட்டிளமைக் கன்னிகைக்குக் கரசரணாதிகளிலுள்ள நகம் வாங்கி, சிகைச் சடங்காதி நலங்குகளிட்டு, ஸ்நானம்பண்ணுவித்துப் பட்டுப் பட்டாவளி புனைந்து பெண்ணை அலங்கரிக்கவேண்டியது.

## பிதிர்த் தேவதைப் பூசை.

அதன்பின் பெண்வீட்டில் சுத்தமுள்ள மங்கிலியப்பெண்களால் பொங்கலிட்டு வைத்திருப்பதைக் கிராமதேவதை பிதிர்த்தேவதை முதலியோர்களுக்குப் பிரீதியார்த்தமாகப் பாலுந்தயிரும் பழமும் வெல்லமும் வைத்துப் பள்ளம்போட்டு, கலியாணப் பிள்ளையினாலும் கல்யாணப்பெண்ணினாலும் படைப்பித்து, நீர்மாற்றிப் போற்றித் துதித்து வணங்கி வாழ்த்தி உடனே விடுதியில்வந்து வாசற்புறம் நீர்மோரருந்தி இளைப்பு களைப்புமுதலிய ஆயாசங்களை யகற்றிக்கொள்ளலாம்,

மாப்பிள்ளையும் பெண்ணும் களையாறுவதற்குள்ளாகவாவது பின்னை மணக்கோலம் வருவதற்கு முன்னாகவாவது, பிள்ளையின் தந்தையும் பெண்ணின் தந்தையும் ஸ்நானம்பண்ணி, மடிவஸ்திர முடுத்தி, வைதிகரைப்போலக் கல்யாணமண்டபத்தில் முப்பத்து முக்கோடி தேவர்கள் இருடிகள் முதலியவர்களை வேதவிதிப்படி மந்திர பூதியுடன் தாபித்துப் பின்னர்,

### விவாகம் நடத்தவேண்டியவர்.

தந்தை அல்லது அம்மான்-அண்ணன்-தம்பி - அக்காள் புருடன்-தங்கை புருடன்-சிற்றப்பன் முதலிய முக்கிய உறவினரைக் கருத்தாவாக ஏற்படுத்துக்கொண்டு விவாக மகோற்சவத்தை நடத்த வேண்டியது.

விவாக கருத்தர் பஞ்சாங்கக்காரரால் நவக்கிரகம் திக்குப்பாலகர் தேவர்கள் முதலியர்களை வேதமந்திர சகிதமாக தாபித்துப் பூசித்து சங்கற்பம் பண்ணிக்கொள்ளவேண்டும்.

### மணவறை.

அதாவது, கிழக்கு மேற்கு தெற்கு வடக்காகிய நாலுமூலையிலும் நாட்டிய பந்தற்காலுக்கு நடுவில் இருபத்துநான்கு சிற்பியங்குலம் மேடையிட்டு, நான்குபுறமுந் தொண்ணூற்றறங்குலம் சரிப்படுத்திச் சமைத்த மணவறைப் பந்தலுக்குக் கீழ்த்திசையில் தாபிக்க வேண்டியது.

### சத்துவ சதுக்கம்.

சிற்ப வலங்காரத்திலே ஒரு சிற்பி யங்குல் மாவது பெருவிரல் முனைக்கடுத்தவரையளவு என்க. இவ்வாறு இருபத்து நான்கங்குலம் ஒரு அங்கணத்திற்கு அமைப்பதால், நான்கு அங்கணத்திற்குந் தொண்ணூற்று றங்குலமாகும். இதுதான் தத்துவ சதுக்கம். இந்தத் தானத்தில் விவாகம் நடக்கவேண்டிய மூலத்தம்பம் விதிப்பதாகும்.

### திக்குப்பாலகர்.

அப்பால், கிழக்கில் தேவேந்திரனையும், தென்கிழக்கில் அக்கினி பகவானையும், தெற்கில் எமதருமனையும், தென்மேற்கில் கிருதிதேவனையும், மேற்கில் வருணனையும் வடமேற்கில் ஈசானமூர்த்தியையும், வேதமந்திரங்களால் ஆவாகனம்பண்ணிப் பூசைசெய்து பொருத்தவேண்டியது.

கிளை விளக்கு.

எப்படி யென்றால், கிழக்கில் தேவேந்திரனைச் சகல வாத்திய ங்களுடன் வேதமந்திரம் பண்ணி, ஆயிரங்கண்ணுடையானுக்குப் பிரதியார்த்தமும் அதிதேவதா ரூபமுமாக அநேகமுகமுள்ள கிளை விளக்கேற்றிவைத்து தூபதீப நைவேத்தியங் கொடுத்துப் பூசித் துத் தொழுது சங்கற்பம் பண்ணிக்கொள்ள வேண்டும்.

குடவிளக்கு.

பின்னர்த் தென்கீழ்த்திசையில் தீக்கடவுளை விதிப்படி அத் தேவனுக்குப் பிரதியார்த்தமாகவும் அதிதேவதையாகவும் குட விளக்கேற்றிவைத்து வந்தனோபசார தூபதீப நைவேத்தியங்க ளுடன் பூசித்துச் சங்கற்பம் செய்துக்கொள்ள வேண்டும்.

புரோகிதர்.

அதன்பின்தென்திசையில் மந்திரங்களால் எமதருமனை ஆவா கனம்பண்ணி அவருக்குப் பிரதியார்த்தமாகவும், அதிதேவதா ரூபமாகவும் தன்ம கன்ம பாவபுண்ணியங்களுக்குரிய புரோகித ரை அழைத்துப் பூசித்து வணங்கி, சங்கற்பம் பண்ணிக்கொள்ள வேண்டியது; இது வியாச புரோக்தம்.

மாணிக்கத்தாள்.

தென்மேற்குத் திசையில் நிருதிதேவனை வேதமந்திரங்களால் ஆவாகனம்பண்ணி தூபதீப நைவேத்தியஞ்செய்து சங்கற்பித்து வணங்கி, அத்தேவனுக்குப் பிரதியார்த்தமாகவும் அதிதேவதா சொரூபமாகவும் மாணிக்கத்தாளை நிறுத்தி, பெண்ணிற்கு உபசா ரத் தோழியாக்கிவைக்க வேண்டியது.

கும்ப கலசம்.

உலகவிருத்திக்குரிய வருணனை மேற்குத்திசையில் வேத மந் திரத்தால் நிலைபெறவைத்து தூபதீப நைவேத்தியத்துடன் பூசித் துத் தொழுது, அந்த வருணனுக்குப் பிரதியார்த்தமாகவும் அதி தேவதையாகவும் இல்லற தர்மத்திற் கிசைந்த கல்யாணப் பிள்ளை யைக் கொலுக்கொண்டிருக்கச் செய்யவேண்டியது.

தோழிப்பிள்ளை.

வடமேற்குத் திசையில் வாயுபகவானை மந்திரார்த்தங்களுட ன் தாபித்து, தூபதீப நைவேத்தியங்கொடுத்து, சங்கற்பஞ்சே

ல்லிவணங்கி, அந்த வாயுதேவனுக்குப் பிரதியார்த்தமாகவும் அதி தேவதா சொரூபமாகவும் மாப்பிள்ளைத் தோழனைவைத்து விசிறி கொண்டு கலியாணப்பிள்ளைக்கு வீசி சாற்றுமுதலிய உபசாரங் களைச் செய்யச்சொல்ல வேண்டியது.

## பாக்கியவான்.

வடதிசையில் குபேரனை மந்திரங்களுடன் மருவச்செய்து தூபதீப நைவேத்தியங் கொடுத்துத் தொழுது சங்கல்பம் பண் ணிக்கொண்டு ஆவாகனஞ்செய்த குபேரனுக்குப் பிரதியார்த்த மாகவும் அதிதேவதையாகவும் மணத்திற் குரித்தாகப் பணப்பை வைத்திருக்கின்ற பாக்கியவானைப் பதியப்பண்ணி, பொற்பூரிகொ டுக்கப் பொருத்தவேண்டியது.

## அம்மிக் குழவி.

வடகிழக்கு மூலையில் சாமவேத சடையுடன் ஈசான மூர்த்தி யை ஆவாகனஞ்செய்து, தூபதீபநைவேத்தியமேற்றித் தொழுது போற்றி, சங்கல்பம் பண்ணிக்கொண்டு அந்த ஈசானனுக்குப் பிர தியார்த்தமாகவும் அதிதேவதா சொரூபமாகவும் அம்மியையும் குழவியையும் அபிடேகமாட்டி, அரிச்சந்தனுட்சதை பூமாலைசூட்டி வடகிழ்த்திசையில் வைத்துப் பூசித்தேத்தவேண்டியது.

## முளை கட்டல்.

இப்போது செய்யத்தொடங்கிய கலியாணநாளுக்கு முன்னை நாள் நவதானியங்களை முளைகட்டி நவக்கிரகங்களுக்கு உரிய தானியங்களை அந்தந்தக் கிரகங்களுக்கு உவப்பாகக் கிரமங்களி னுல் மண்மடக்கில் வைத்து திக்குப்பாலகர் எண்மரில் ஈசானமூர் த்தியாக அமைத்திருக்கின்ற அம்மிக் குழவிக்குத் தென்பாரிசத் தில் பச்சையரிசிபரப்பி, ஒன்பது வீடாகக்கீறி நிரப்பி, சூரியகிரக முதல் கேதுக்கிரகம் வரையிலும் பொருத்தி,தருப்பையினுலாவது முப்புரி நூலினுலாவது பட்டுமுதலிய மஞ்சள் துணியினுலாவது பந்தித்து, தூபதீப நைவேத்தியம்வைத்துச் சிந்தித்து, சங்கல்பம் பண்ணி வந்தித்து, வாழ்த்திப் போற்றவேண்டியது.

## சத்த கலசம்.

மண்கரகம் ஏழுகொண்டுவந்து நூல்சுற்றி மாவிலை தருப்பை மாலை தேங்காய் வைத்து, சத்த இருடிகளையும் வேதமந்திரங்களி னுல், ஆவாகனம் பண்ணித் தாபித்து நவக்கிரக பாலிகைநாட்டிபு

தானத்திற்கும் அக்கினிபகவானை அமைத்ததானத்திற்கும் நமஸ்கரித்து வைத்து தூபதீப நைவேத்தியங் கொடுத்துச்செபித்து சங்கற்பம் பண்ணிக்கொள்ள வேண்டியது.

சாலமைக்க வேண்டிய விதி.

கட்டிளமையுள்ள கன்னியர்கள் தலைமுழுகி மஞ்சளணிந்து குங்குமந்தரித்து புட்பமுடித்து, சுத்தமாகச்சென்று கங்கை யமுனை சரசுவதி நருமதை காவிரி, கன்னியாகுமரி கோதாவிரி இவ் வேழு தீர்த்தங்களையுங் கொண்டுவந்து ஒருபெரிய சாலிற்கு விபூதி அணிந்து மஞ்சள் குங்குமஞ்சாற்றி, பூமாலைதரித்து, இறுக்கில் இந்திரனுக வமைத்த இளைவிளக்கு முன்னே மணலைப்பரப்பி அந்தச்சாலை வைத்து அந்தந்தத் தீர்த்தங்களுக்குள்ள மந்திரங்களைச் செப்பி அழகிய சாலில்விட்டு, தூபதீப நைவேத்தியங் கொடுத்துத் தொழுது, ஒருகரகத்திற்கு விபூதி குழைத்திட்டுசந்தனஞ்சலைத் குங்குமந்தரித்து அந்தக் கரகத்தை சத்ததீர்த்தங்களடங்கிய சாலிற்கு மேல்மூடியாக மூடிவைத்து, சங்கல்பம்பண்ணி வணங்கவேண்டியது. இதுதான் சாலுங் கரகமும் என்பது; பொருளமைத்துக் கொள்க.

சத்த தீர்த்தங்கள்.

ஏழு தீர்த்தங்கள் எட்டாதபோது தேவாலயம், பிரமாலயம், விஷ்ணுவாலயம், சிவாலயம் நந்தவனம், மேற்கு ஓடுகின்ற நதி கிழக்கு ஓடுகின்றநதி, இந்தத் தானங்களி லிருந்துகொண்டுவந்து பூசிக்கலாகும். மேலும், ஏழு கன்னிகைகள் போய்க்கொண்டு வருவதற் கில்லாவிடில், முதல் மூவரும் பின்பு நால்வரும் போய்க் கொண்டு வரலாம்.

அரசாணிக் கால்.

அரசாணிக்குக் காலென்னும் அரசின்செடி ஆலின் இலை கலியாண முருக்கின்கொம்பு இம்மூன்றையுந் தருவித்து, சுத்தோதகம் பால் தயிர் தேன், சந்தனுதிகளினுல் அபிடேகம்பண்ணி தருப்பைப்புல்லாற் பந்தித்து, திரிமூர்த்திகட்குள்ள மந்திரங்களைச் சொல்லி சிந்திக்கவேண்டியது.

அரசு பிரம்மா; ஆல் விஷ்ணு; கலியாணமுருக்கு உருத்திரன்; இவைகள் மூன்றும் குணத்தினுலும் தழைப்பினுலும் ஆதாரத்தினுலும் கடுமையினுலும் காந்தினுலும் மும்மூர்த்திகளென்று முனிவர்கள் மொழிந்திருக்கின்றனர். மேலும், வைவச்சுவத மநுவின்

மூன்றெத்திறும் மும்மூர்த்தி சொரூபமான அரசாணிக்கும் கால்நாட் டி மேன்மையெல்லாந் கலியாணவிதியில் முதலெடுத்துக் கொண்ட தாத் தவிர, சிருட்டி திதி சம்மாரமென்னும் முத்தொழிலையுடைய முத்தேவரும் பிரபஞ்ச வாழ்க்கைக்குச் சாட்சியாயிருந்து, தாட்சி யின்றி காட்சியாகி, அநுக்கிரகஞ்செய்து சர்வசாட்சியாகத் தக்க தென்று சர்ப்பமிஞ் மநுவிலும் சொல்லியிருக்கின்றது. ஆதலால் முத்தேவரின் காட்சி, கலியாணத்திற்குத் தகுந்தசாட்சி.

பிரம சொரூபம் அரசின் கன்றானதால், அதற்குப்பால் தேன் முதலியவற்றால் நீராட்டிவைத்து அரிசந்தனாதி யட்சதைதரித்து புட்பம்பொருத்தி வெண்பட்டு முதலிய வெண்படாமணிந்து தாம ரைமணிமாலை சாத்திச் சந்தனங்கோபியிட்டு வந்தனை புரியவேண் டும். விஷ்ணுரூபமான ஆலிற்குச் சுத்தோதகம் கஸ்தூரி பன்னீர் வெட்டிவேர் வாசங்களினால் திருமஞ்சனமாட்டி நாமமிட்டு நீல வத்திரம் மஞ்சள்வத்திரந்தரித்துத் துளசி துளசிமணிமாலை சாத் தித் தொழவேண்டும். உருத்திர ரூபமாகிய கலியாண முருக்குக்கு அரிசந்தனாதி அபிஷேகஞ் செய்துவைத்துத் திருநீறு சந்தனந் தரித்துச் சவப்புவத்திரம் காவிவத்திரம் புனைந்து உருத்திராக்க மணி வில்வம் புட்பமாலை மூடித்துத் தூபதீப நைவேத்தியமும் மூர்த்திக்குங்கொடுத்துவந்தனையுடன் எடுத்துநாட்டவேண்டியது.

தேவேந்திரனுக்குப் பிரதியார்த்தமாக வைத்த ஆயிரங்கிளை மூங்கிலுக்கும் சுத்த தீர்த்தங்கள் விட்டிருக்குஞ் சாலுக்குங்நடு வில் பன்னிரண்டங்குலம் பள்ளந்தோண்டி, நீர்பால் தேன்விட்டு நவரத்தினங்கள் அல்லது பொன் வெள்ளி தாமிரம் அல்லது நவ தானியங்கள் ஏதாகிலும் அந்தக் குழியில்போட்டு முதிர்ந்த மங் கிலிப் பெண்கள் மூவர்களை நிறுத்தி சரசுவதி இலட்சுமிபார்வதி இம்மூவராக அவர்களைப் பாவனைபண்ணிச் சந்தனாதி யட்சதை புட்பங்கொடுத்து அந்த மூவரானும் அரசாணிக்குக் காலை யெடுப் பித்துப் பன்னிரண்டங்குலப் பள்ளத்தில் விடுத்துப் பூவாரம் பொ ன்னாரம் முத்தாரம் பூட்டித் தீபங்காட்டி, அந்தக்குழியை நெல் லினால் மூடி நீர் பால் தேன் தெளித்துப் பணிந்து, சங்கற்பம் பண்ணிக்கொள்ள வேண்டியது.

மும்மூர்த்திகளாகத் தாபித்த அரசாணிக்குக் காலை மூன்று சுத்தியின் பாவனையாகக்கொண்டு ஊன்றிய அந்த மங்கிலியமாதர் களுக்குச் சந்தன தாம்பூலங் கொடுத்துப் பண்டு பலாதிகளுடன் தாச்சார்ந்தி செய்துவைத்து, அவர்களை மேளதாள முழக்கத்

துடன் அழைத்துப்போய், பிரமாலயம் தேவாலயம் [illegible] கடைந்தெடுக்கப்பட்டு மூட்டிவைத்திருக்கின்ற அக்கினியைப் பூசித்துப் புகையாமல் சிகையுடன் வாத்திய முழக்கத்தோடுகொண்டுவந்து ஓம குண்டத்திலிட்டு, அச்கினி பகவானுக்குட்பட்ட மந்திரங்களைச்சொல்லி, ஓமாக்கினியை விருத்திபண்ணினவுடனே, [illegible] உபசாரத்துடன் பூசித்து, அருக்கியங் கொடுத்துத் தொழுது [illegible] கல்பித்துக்கொண்டு, அத்தீயையும் அத்தீயை வலக்கரத்திற்குரிய வேதியர்களான சாதியார்களையும், சைபயினிறைந்த பெரியோர்களையும் பணியவேண்டியது.

## கவனிப்பு.

மாப்பிள்ளையின் தந்தையும் பெண்ணின் பிதாவும் அல்லது இக்கலியாணத்திற்குரிய பெரியவர்களும் ஊக்கத்தோடும் முயற்சியோடும் முகூர்த்த லக்கினத்திற்கு ஐந்து ஏழுநாழிகைக்கு முன்றொடங்கிப் பொறுமையாகக் குறைவில்லாமற் செய்யத்தக்க முக்கியவிதிகள் இவையாம். "செய்யுங் கரும மந்திரம் தப்பாதே" 'செய்வன திருந்தச்செய்' 'கையிற் பொருள்கள் கரந்தவராயினுஞ் செய்யுங் கருமந்திரியா தியற்றுக' என்னும் விதிகள் அவர்கள் கவனிக்க வேண்டியன.

## மாப்பிள்ளை வரவேண்டிய விதி.

விவாக முகூர்த்த லக்கினத்தை முன்னிட்டுக்கொண்டு மாப்பிள்ளைத் தோழன் மாய்பிள்ளைக்கு மாலையிட்டு, சுண்டுவிரற் கோத்துவந்து, மணப்பந்தலைப் பிரதட்சணம் பண்ணி, கலியாண வாசலில் ஆவாகனஞ் செய்திருக்கின்ற அதிதேவதைகளை யெல்லாம் காட்டி வணங்கினவுடன் மணவறை மனையில் பாம்பின்மண்டலம் போலச் சர்ப்பவணை போட்டிருக்கச் செய்யவேண்டியது. இதைத் தான் சப்பணம் போடுவ தென்பார்கள்.

புரோகிதர் கலியாணப் பிள்ளைகையால் விநாயகபூசை தேவதார்ச்சனை புரியவைத்து அட்சதை புட்பமாலையணிந்து உபநயனமான உபதேசமும் அனுட்டான விதியும் அங்கநியாச கரநியாசமுங்காட்டி ஓமத்தீ மூட்டி உபசரிக்கவேண்டியது.

## பரதேசம் போவது.

இவ்வாறெல்லாம் நடாத்துகின்ற கருமங்களைக்கண்ட கலியாணப்பிள்ளை பிரமச்சாரி விரதத்தை அனுட்டித்து வசித்துக்கொண்டிருந்தவனாகையால், அவனுக்கு இவை யாவும் விந்தையும்

விநோதமும் விபரீதமுமாகத் தோன்ற, தன் தோழனை நோக்கி 'இப்படியெல்லாஞ் செய்வது என்னத்திற்காக,' வென்று வினவி னன். அதற்கு அத்தோழன் 'ஓ எனது நேயனே! வாழ்க்கைத் துணை நலத்திற்குரிய நாயகியான கன்னியுடன் இல்லற விரதம் பெற்று வாழ்வதற்கு இதுதான் வழி' யென்றான். அச்சொல்லை கேட்டவன் விவேகத்திறனுன்னி 'ஆ இது பழியே கன்னிமேற் காதல் படரப்படாதென்றும், சமுசாரஞ் சள்ளை! யென்றும்,

வெண்பா.

"கன்னிக்கு மாலாக்கிக் காலிற் றளைபூட்டி
பின்ளைக் கடையாணி பின்னிறுத்தி—மெள்ளக்
கடுவுண்ட சோணேசன் கற்பித் துயிரைப்
படுகுழியில் வீழ்த்தினதைப் பார்."

என்றும் இருப்பதனால், இந்தச் சங்கடம் எனக்கு வேண்டா மென்று வெறுத்து வெளியே புறப்படுவதுதான் பரதேசம் போவ தென்பது.

சமுசாரம்.

தாய்தந்தை யெஞ்சாதி பிள்ளை அண்ணன் தம்பி அம்மான் மைத்துனன்மார் அக்காள் தங்கை பெரியப்பன் சிற்றப்பன் கொ ண்டான் கொடுத்தான் முதலிய யாவரும் வரப்போக வாழ்வதும் கூடிக் கலந்திருப்பதும் சமூக விசாரமாம். இதைத்தான் சமுசார மென்பது.

பரதேசியை அழைத்தல்.

சமுகவிசாரஞ் சாகரத்துக்கமென்று சலித்துச்சென்ற சற் குணப்பிள்ளையை அம்மான் முன்னும் அத்தையும் மைத்துனரும் பஞ்சாங்கக்காரரும் பின்தொடர்ந்துபோய் அடுத்து, தடுத்து, உலகப்பழக்கத்தைப் போதித்து, அநுபவத்தையுஞ் சுருதிப் பிர மாணத்தையுஞ் சொல்லி,

குறள்.

"உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப்படும்"
"உலகத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப்படும்."

"இல்லற மல்லது நல்லற மல்ல." ஔவையார்.

என்பன முதலிய இதோப தேசமேற்றித் தாய் தந்தைகளி னுற் பயமும் புகட்டி, சர்வவாத்தியங்களுடன் அழைத்துவந்து,



## கால் மெட்டு.

மகாசனங்கள் நிறைந்த சபையில் மணவறைப் பலகையில் இருத்தி, அம்மானும் அத்தையும் வியந்து தாங்கள் பண்ணிக்கொண்ட கலியாண வைபவத்தை நயந்துபேசி, தங்கள் குமாரத்தியைக் கொடுப்பதாகச்சொல்லி மகிழ்ந்து "அப்பா மருமகனே! இதோ வெள்ளிமோதிரம் இட்டுக்கொள்ளென்று புகழ்ந்து மருமகன் காலைப் பிடித்து, பெரியதாம்பாளத்தில்வைத்து, மஞ்சணீராட்டி வெள்ளி மெட்டைக்காட்டி கால்விரலிற் பூட்டிவிடவேண்டியது." இதுதான் கால்விலங்கு கால்கட்டென்பது.

## பாத பூசை.

வெள்ளிமெட்டாகிய விலங்கில் அகப்பட்ட மணவாளன் அம்மானும் அத்தையும் தனதுகாலைப் பிடித்துத் தளைமெட்டு இட்டார்களேயென்று தனது பாதத்தைப்பற்றிய பழியும் பாவமும் தீரும்படியாய் அம்மான் திருவடியையும், அத்தையம்மாள் பாதத் துணையையும் பெரிய தாம்பாளத்தில் வைத்து நீரோடு பால்தேன் அபிடேகஞ்செய்து வத்திரத்தினால் ஈரந்துவட்டி சந்தனட்சதைப் புட்பம்சாத்தி, தூபதீபத்துடன் வணங்க; அவர்கள் தங்கள் மருமகப்பிள்ளையை ஆதரித்தெடுத்து வாழ்த்தி, தங்கள் பாதங்களில் அருச்சித்த புட்பாட்சதைகளையெடுத்து மாப்பிள்ளையின் சிரத்தில் வைக்க அவன் முடிதாழ்த்திப்பெற்று ஆசிவசனமுற்று அம்மானுக்கும் அத்தைக்கும் சந்தனபுட்ப தாம்பூலங்கொடுத்துச்சரணம் புரியவேண்டியது.

## காப்பு.

உடனே பஞ்சாங்கக்கார துவிசன் கணுவில்லாத முளைமஞ்சள் இரண்டெடுத்து, கன்னிகை இழைத்தநூலில் ஒன்பதிழைக்கு மஞ்சட்பூசி, நவக்கிரகமந்திரஞ்சொல்லி ஒன்பதுமுடிபோட்டு, தூபதீபங்கொடுத்து, கலியாணப்பிள்ளையின் வலதுகைக் கணுவில் கட்டி, இப்போது நீர் தொடங்குங் காரியங்கள் நிறைவேறுகின்ற வரையிலும் விரதசீலபயபக்தியாக இருந்து நடத்துவதற்காகக் கங்கணங் கட்டிக் கொண்டபடியால், மிகச்சாக்கிரதையுடன் நிலைநின்று முடிவுபெறச் செய்யவேண்டுமென்று வற்புறுத்தி மகிமைகூறவேண்டியது.

அல்லது வேதியர்பன்னிய வேதமந்திரநூலால் காப்புகட்டவேண்டியது; அதுவும் அகப்படாதபோது கடைநூல் கொண்டு வந்து தண்ணீரிற்றோய்த்துக் கசக்கி கஞ்சிநீர்போக்கி, மஞ்சள் தடவி உபயோகிக்கலாம்.

- கலியாணப்பெண்ணைத் தோழிப்பெண் துணையாக மாலைதரித்து அரசாணிக்குக் கால்முதலிய தேவதைகளைப் பிரதட்சணம் பண்ணி வணங்கிக்கொண்டவுடன், கலியாணப்பிள்ளைக்கு வலப்புறத்திலிரு க்கச்செய்து, நூற்கட்டிய மற்றொருமஞ்சளை மாப்பிள்ளை கையினால் கலியாணப்பெண்ணின் இடதுகரத்திற் கட்டுவித்து விபூதி குங்குமம் வைத்து, காப்பு கட்டிக்கொண்ட இருவருக்கும் புரோகிதர் சங்கற் பம் பண்ணிவைக்கவேண்டியது.

## சங்கற்பம்.

பிள்ளையின் கையைக்கூட்டி வலபுறத்தொடையிலும் பெண் ணின் கையைச்சேர்த்து அவளது இடப்பக்கத்தொடையிலும் வைக் கப்பண்ணி "வைவச்சுதே மன்வந்தரே கலியுகே பிரதமபாதே புண் ணியருது" வென்று வருடம் மாதம் பட்சம் வாரம் திதிநட்சத்திரம் இவைகளெல்லாம் படித்துமுடித்து மாப்பிள்ளையைநோக்கி இதுகா லத்தில் உன் அம்மானுடன் அத்தைமுதலிய சுற்றத்தார் முன்னிற் செய்யத்தொடங்கிய கலியாணச்சடங்குகள்யாவும் தாட்சியில்லாமல் நடாத்துதற்காக விரதம்பூண்டு கங்கணங் கட்டிக்கொண்டபடியே ஒரேமனதாயிருந்து இந்தவைபவகாரியங்களை நிறைவேற்றிக்காண் பதற்குக் கடவுள் உதவியுங் கருணைக் கடாட்சமுஞ்செய்து காக்க வேண்டும் என்று புரோகிதர் புகல, இதைக்கேட்டு மற்ற கருமங் களையும் பூர்த்திபண்ணவேண்டியது. •

## கூறை யணிதல்.

மாப்பிள்ளையும் பெண்ணும் மணவறைச்சாலையை வலம்வந்து பணிந்து கலியாணப் பீடத்திலிருந்து ஓமாக்கினியைப் பூசித்த அப் பால், பஞ்சாங்கக்காரரெழுந்து பெரிய தாம்பாளத்தில் வேட்டி யும் புடைவையும் மணமாலையும் பாக்கு வெற்றிலையுடன் வைத்து தேவதா பூசைசெய்து வேதியர்முதலிய சாதியருங் கரங்களினாற் றொட்டு மங்களாசனஞ்சொல்லி வாழ்த்திக்கொண்டு வந்து புட்பா ட்சதையுடன் மாப்பிள்ளை கையிற்கொடுப்பது அந்தக்கூறையைப் பிள்ளையும் பெண்ணுந் தரித்துக்கொள்ளும் படிக்குச் செய்து வேண்டியது.

மாப்பிள்ளைக்குக் கலியாணவேட்டியுடுத்தி, கலியாணமாலைபு னைந்து, சிறுவிரற்பற்றிய மாப்பிள்ளைத்தோழனுடன் சகலவாத்தி யங்களுமுழங்கக்கலியாணமண்டபத்தை வலஞ்சூழ்ந்துவந்துமண வறை மன்மேலிருக்கச்செய்து; அப்பால், கூறைப்புடைவையுடுத் திக்கொண்ட கலியாணப்பெண்ணையும் மாணிக்கத்தாளரவது தோ

றிப்பெண்ணுவது மாலை யணிவித்து, மங்கள வாத்தியத்துடன் அழைத்துவந்து, சபையைப்பணிவித்து, கலியாணப்பிள்ளைக்கு வலது பக்கத்திற் கொலுவாக வைக்கவேண்டியது.

மங்கலிய தாரண விதி.

மணவறையிலிருந்த பிள்ளை ஆசிரியருக்குப்புதுவஸ்திரதானம் பண்ணிப் பூசிக்கவும், பந்து மித்திரர்கள் புகழவும், தாய் தந்தையர்கள் மகிழவும், மற்றுள்ளோர் கொண்டாடிப் பூரிக்கவும், கலியாணமுகூர்த்தத்திற் கேற்படுத்திய லக்கினம் சமீபித்த காலத்தில் புரோகிதர் பெரிய தாம்பாளத்தில் முத்து இரத்தினங்கள் பரப்பி அதன்மீது பாக்கு வெற்றிலை புட்பம் குங்குமம் அட்சதை மஞ்சள் வைத்து ஆன்மதத்துவம்போல இருபத்துநான்கு இழைசேர்த்து முறுக்கில்லாமல் தாலியிலேற்றி, அந்தத்தாலியை ஒருதேங்காய்க் குமஞ்சள் குங்குமம் அட்சதையணிந்து, அதன்மேற்சாத்திப் புட்பாட்சதைகளினாற் பூசித்தேற்றி, தூபதீபம்நைவேத்தியத்துடனீர் மாற்றி, தாம்பாளத்தில்வைத்து, பஞ்சாங்கக்காரரின் கரத்திலேற்றி ஸ்ரீவிஷ்ணுமந்திரஞ் செபித்துத் துதித்து, விப்பிரர்களும் பந்துமித்திரர்களும் இருகரங்களிற்றொட்டு இட்டதெய்வங்களைக் கும்பிட்டு வாழ்த்துதல் சொல்லவும் வேதியர்கள் மறைமொழி மந்திரங்கூறவும் வாத்தியமுழங்கவும் சங்கத்தொனி வழங்கவும் தாலியைப் புரோகிதர் கொண்டுவந்து மாப்பிள்ளைக்கும் பெண்ணிற்கும் நேராக முக்காலியின் மேல் வைத்துத் தாபன மந்திரஞ் சொல்லி அருச்சிக்கவேண்டியது.

தாரைவார்த்தல்.

கலியாணப்பெண்ணின் தாய்தந்தையும் மாப்பிள்ளையின் தாய் தந்தையும் கலியாண மண்டபத்திற்குமுன் வந்திருந்து சங்கமுழங்குவித்து, சங்கற்பம்பண்ணி விநாயகமூர்த்தியைப் பூசித்தேத்தி, பெண்ணின் தந்தை தமக்கியன்ற எதாசத்தி இரத்தினம் பொன் வெள்ளி நாணயப்பொருள் இவைகளுடன் தேங்காய் மஞ்சள் புட்பம் வாழைப்பழம் வைத்து, இன்னகோத்திர குத்திரமுள்ள என் குமாரத்தியை வாக்குத்தத்தம் பண்ணியிருந்த வசனப்பிரகாரமும் நிச்சயதாம்பூலமாற்றிக்கொண்ட நெறியின்படிக்கும் தாரைதத்தம் பண்ணிக்கொடுத்தேனென்று மும்முறை புகன்று மாப்பிள்ளைக்கு இட்டு நீர்வார்த்துக்கொடுத்து, சந்தன தாம்பூலம் பெற்றுக் கலியாணவர்களிற் கலந்திருக்கின்ற தேவதைகளையும் குருக்களையும் சபைத் தலைவர்களையும் விருப்பத்துடன் வந்தனைசெய்து மகிழ்ச்சி பெறவேண்டியது.

மாப்பிள்ளைக்குரியவர்கள் முன்னமே பெண்ணைப்பேசி நிச்சய தாம்பூலத்துடன் பரியம்போட்டு, பருப்புஞ்சாதமும் புசித்து ஒருவருக்கொருவர் மனங்கலந்திருக்க, பந்தற்சிங்காரித்துக் கலியாண வாசலில் வந்து விவாகவிதி நடந்தேறி வரும்போது, தாராதத்தம் பண்ணிக் கொடுக்கவேண்டிய தென்னவென்றால்,

குலகோத்திரக் குடிப்பிறப்புடையவர்கள் பெண்ணைக்கொள்ளவும் பெண்ணைக்கொடுக்கவும் பொருந்தியபோது பொருளினாலும் பரியமிகுதியினாலும் பந்து விரோதத்தினாலும் சொந்தமுள்ள பந்தத்தினாலும் மரியாதைவாஞ்சைகளினாலும் வார்த்தைப் பிசகினாலும் சாதி சமயம் பிறழ்ந்து நடந்த தன்மை விசாரணையினாலும் 'நான் பெண்ணைக்கொடுக்க மாட்டே' னென்று பூததேசப் புணர்ப்பினாலும், ஆணவ மலசூத்திரங்களினாலும், விரோதங்கள் நேரிடுமென்று அடிக்கடி பிரமாணங்களினால் திடப்படுத்தி வந்தும்,இப்போது கெட்டியாகச் சகலதேவதைகளும் சகல சாதியரும் பந்து மித்திர சபையாருஞ் சேர்ந்திருக்கிற தருணத்தில் தாராதத்தம் பண்ணிக்கொடுக்கவும் அந்தத் தாரையை 'நான் ஏற்றுக்கொண்டே' னென்று மாப்பிள்ளை சொல்லவும் அதை வற்புறுத்துவதற்காக பற்பலவிதத்தினும் பாராட்டுவதாம்.

"மூன்று முடியும் முடிந்து முப்பது இலையுங் குப்பையில்வீழ்ந்த போதைக்கல்லவோ கலியாணம்நிச்சய"மென்பதும்,"ஒருவன் பெண்சாதி மற்றொருவனுக்கு தாய் என்பதுவும்"

"நிதியுங் கணவனும் நேர்படினுந் தன்றன்
விதியின் பயனே பயன்,"

என்பதுவும், பழமொழிகளாகையின் எல்லாம் தெய்வ வசத்ததேயன்றி வேறில்லை யென்றறிந்து முயல்வது போலுமாம்.

மங்கலியம் அணியும்விதி.

இப்பால் தாராதத்தம் பெற்றுக்கொண்ட மாப்பிள்ளை யெழுந்து, கலியாணப்பெண்ணிற்கு நேரில் முக்கால் அறுகாலிட்டபீடத்தின்பேரிலிருந்து, பஞ்சாங்கஞ் சொல்லுகின்ற ஐயரால் தாலியைக் கரத்தில் வாங்கிக்கொண்டு, மாப்பிள்ளையின் தமக்கை தங்கை இவர்களிலொருவர் மகாலட்சுமிவைத்த விளக்கைப்பிடித்துக் கலியாணப்பெண்ணிற்குப் பின்புறத்தில்வந்து கலியாணக் கன்னிகையின் உட்கழுத்துக் கருமணிகளையவும், வேதியர்கள் வேத ஒலி பண்ணவும், சுசாதியர்கள் திருமால் திருநாம கோவிந்தம் போடவும், தாய் தந்தையர்கள் மனமும் வயிறுங் குளிர்ந்து மகிழ்ச்சியி

னூறவும், வந்திருக்கும் பந்து சனங்கள் கண்களிகூறவும், மித்திரர் முதலியோர்கள் பத்திராட்சதை யிறைக்கவும், இலாலி மங்கலவா ழ்த்தொலி வீறவும், தமரமுதலிய பேரிகைள் சங்கீதங்களை நிறுத்தி அந்தந்தக் குலத்தாருக்குரிய ஒற்றைச்சங்கு இரட்டைச்சங்கு மூன்று சங்கு இதுகளை ஓமென்னும் பிரணவநாத மொலிக்கும்படி யாக முழங்கவும், கலியாணப்பிள்ளை கலியாணப்பெண்ணின் செவி யில் தாறுமாறான வேறு நாதங் கேட்கும்படிக் கில்லாமற்செய்து மாப்பிள்ளை கரத்தில் தாங்கிய திருமங்கலியத்தைக் கலியாணப் பெண்ணின் களத்திற் சேர்க்கும்போது, நாத்தியார் மூத்தமாமி யார் அந்த மங்கிலியத்தைத் தாங்கித் தாங்கள் சாதியாசாரப்படிப் பெண்ணின் மார்பில் எவ்வளவு நிலைநிற்கவேண்டியதோ அவ்வளவு நிற்கவைத்துப்பிடிக்க, சகலவைபவ சம்பிரமங்களுடன் மணவா ளப்பிள்ளை மணக்கன்னிகை மகிழ்ந்து திருப்பூட்டிபெண்ணின்பிட ரியில் நூன்முடிபோடுகின்ற சுபலக்கினத்தில், புரோகிதர்பிரமமந் திரஞ்சொல்லி முடி யிரண்டும், உருத்திரமந்திரஞ் சொல்லி முடி மூன்றும் போட்டுவைக்கவேண்டியது.

மும்மூர்த்திகளின் மந்திரஞ்சொல்லி மூன்றுமுடியும் போட்ட கலியாணப்பிள்ளை அந்தத்தாலியின் நூல்முடியை இடதுகரத்திற் பிடித்துக்கொண்டு இறையவனைத்துதித்து வலக்கரத்தில் விபூதி வாங்கி அம்முடியின்பேரில் வைத்து துற்சோபம் - துற்பயங்கரம்- துற்மரணம்- துற்வியாதி நீங்கவும் - சகலபாவரோக நிவாரணமாக வும்-சம்பத்கர சாதுசங்கம்-சாத்திரலீலாமகத்துவ முண்டாக்கும் பஞ்சாட்சரத்தைச் செபம்பண்ணி, மாப்பிள்ளை தன் நெற்றியில் விபூதிதரித்துக்கொண்டு பெண்நெற்றியிலும் திருநீறுபூசிப் பெண் ணின் வலது செவியில் விப்பிரர் தனக்குச் சொல்லுகின்ற மந்திரஞ் சொல்லவேண்டியது.

உபதேசமந்திரம்.

புரோகிதர் புகலுகின்ற மந்திரமாவது "மங்கலியந்தந்தனே னேஞ-மமஜீவனவேதுஞ" என்பதாம். இந்தமந்திரத்தைப்பெண் செவியிலோதியபின்பு, பிள்ளையெழுந்து மணவறையிலிருக்கலாம். உடனே கலியாணப் பெண்ணை யெழுந்திருக்கச்செய்து தோழிப் பெண் சகிதமாகப் புருடனைவணங்கி மாப்பிள்ளைக்கு இடது பாக த்தி லிருக்கச் செய்யவேண்டியது.

பட்டங்கட்டல்.

மாப்பிள்ளைக்குரியவர்களும் பெண்ணிற்குரியவர்களும்முத்து இரத்தினங் களினாலாகிய பொற்பட்டங்கள்கட்டி பட்டு பட்டா

வளிதும்புலும் சரிகைவேட்டி சரிகைதோழன் புடவை ஆபரணங்கள் அன்றுமுதலிய அநேக வத்துக்களை வரிசைவண்மைகளாக வழங்கவேண்டியது.

சேடை.

நித்தியவிதி தப்பாதியற்றிக் காயத்திரிசெபித்துச் சத்தியவாக்கியம்பெற்ற உத்தமவேதியர்களால் நவக்கிரக வோமம் பண்ணுவித்து, சந்தன தாம்பூல தட்சணையுங் கொடுத்து, விசேடகேளையிட்டு மலர்களாலும் பிள்ளையும் பெண்ணும் வாழ்த்திப்போற்றச் செய்யவேண்டியது.

பொன்மோதிரமிடல்.

அக்கினிபூசையாற்றி, பிள்ளையும் பெண்ணுமெழுந்து தோழன்தோழியுடன் அரசாணிக்குக்கால பிரதட்சணம் பண்ணிவரும்போது, ஒவ்வொரு சுற்றிற்கும் மைத்துனன் பொரிவாரிக்கொடுக்க, கலியாணப்பெண் கரத்திலேற்றுப் புருடன் கரத்தில் விடுக்க, அந்த நாயகன் அந்தணர் சொல்லிய மந்திரத்தின்படி அக்கினியிற் சொரிய, இவ்வாறு மூன்றுதரம் வலஞ்சூழ்ந்துவந்து, ஓமாக்கினிக்குப் பூரணாகுதி கொடுத்துப் போற்றி வாழ்த்தி யேத்திறைஞ்சி, பொரிவாரியிட்ட மைத்துனன் கரத்திற்குப் பொன்மோதிரமிட்டு மணவறையிற் பொருந்தி யிருக்கவேண்டியது.

மாலைமாற்றுதல்.

பிள்ளையும் பெண்ணும் பூமாலைமாற்றிப் பூச்செண்டெறிந்து சந்தனமழ்பூசிச் சரசம்பேசிக் காயிலைலீந்து கடைக்கண்பாய்ந்துகருமேற்சாய்ந்து சற்றுநேரம் விளையாடிக் கொண்டிருந்து மாணிக்கத்தாளால் நீராஞ்சனமாகிய ஆலஞ்சுழற்றுவித்து இருவரும் விரல்கோத்தெழுந்து மாப்பிள்ளைத்தோழன் முன்னும் மணவாளன்பின்னும் பெண்ணுந்தோழியும் அட்டமங்கலத்துடன் அரசாணிக்குக் காலைப்பிரதட்சணம் புரியவேண்டியது.

அட்டமங்கலம்.

கைவிளக்கு- பூரணகும்பம்-கண்ணாடி - அங்குசம் - வெண்சாமரம்-இணைக்கயல்-அவரவர்கட்குரிய விருதுக்கொடி - முரசு இவ்வெட்டும் அட்டமங்கலமென்பதாம். இவை பெதும்பைப் பருவமுள்ள பெண்களெடுத்துக்கொண்டு பூமியதிராமல் நடந்துமூன்றுசுற்று வந்தபின், அப்பெண்களுக்குச் சந்தன தாம்பூல புட்பங்களுடன் பழங்களும் தனங்களுங் கொடுத்துவிட்டு, பிள்ளையும் பெண்ணும் வணங்கி, கிழக்குமுகமாகிய அறைவீட்டிற் புகவேண்டியது.

## அம்மி மிதித்தல்.

பிள்ளையும் பெண்ணும் அரசாணிக்குக் கால்வலஞ்சுற்றி வரும்போது அம்மிமிதி அருந்ததிதுதியென்று சொல்லுகின்றார்களே அதென்னவெனில்; அம்மியுங் குழவியும் அட்டதிக்குப் பாலகரில் ஈசானமூர்த்தியாக வேதமந்திரங்களினால் முன்னமே ஆவாகனம் பண்ணிப்பூசித்துச் சிவசத்திசொரூப மென்றேற்படுத்தி வைத்திருப்பதை மிதிக்கக்கூடுமா! மேலும், வீடுகட்டவும் பந்தக்கால் நாட்டவும் மற்ற எந்தவேலைசெய்யவும் ஈசானியமூர்த்தியைத் துதித்து அந்த மூலையை திரமானதென்று தொடங்குவது உலகமார்க்கம்; இதுவுந்தவிர, வடதேசத்தில் தாயை அம்மியென்பது பெருவழக்காம். இவ்வாறு தாயாகிய ஆதிமூலசிவசத்தியைக் கலியாணப்பெண்ணின் காலினால் மிதிக்கும்படிக்குப் புருடன் தூக்கிவைப்பது விதித்தவறு; இவ்வாறு செய்யும் பார்ப்பாருக்கும் இதைவேடிக்கை பார்ப்பாருக்கும் தந்தை தாயை நிந்தித்துதைத்த பாவமும் பழியுஞ் சம்பவிக்கும்.

## கவனிப்பு.

பெரியோர்கள் உலகோபகாரமாகச்செய்து வைத்திருக்கின்ற புராணங்களுஞ் சாத்திரங்களும் ஒன்று சொன்னபடியொன்று சொல்லாமலும், சமயபேதம் சாத்திரபேதம் தருமபேதம் முதலியவற்றால் அதுவோ இதுவோவென்று கவலைகொண்டலையும்படி உலகத்தை மாயைக்கட்டுப்பாட்டில் விடுத்து, தாங்கள் கொண்ட கருத்தை முடித்து, 'கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டில' ரென்னுங் கட்சியெடுத்து. தன்மதங் கோடலென்னுந் தன்மைபிடித்து, தாங்களெடுத்ததை முடித்து, தங்கள் காலத்தைப் போக்கிக்கொண்டார்களேயன்றி, வேண்டுமென்னும் விருப்பம் வைப்பார்களாகில் கைத்தலத்தில் வைத்த முத்துப்போற் காட்டுவார்கள்; ஆயினும், அவர்கள் கூறிய நுட்பங்களைச் சன்மார்க்கரவத்தை யுடைய அதிதீவிரபக்குவ முள்ளவர்கள் கற்பூரதீபம்போற் காண்பர். அப்படி சுருதியுத்தி சுபானுபவ முணர்ந்த தூயர்களுக்கு இவ்வுலகம் வேண்டத்தக்கதன்று. ஆதலால், 'உலகத்தோடொத்துவாழ்' மென்னும் நீதிக்கிணங்க நிகழ்த்தியவிதியேயல்லது வேறில்லை. புத்தி நுட்பத்தினாற் குறித்தவர்களென்று இப்போதிருக்கின்ற நுண்ணறிவாளர் மதித்து மதியைப்பதித்துப் பார்க்கும்போது அம்மிமிதி அருந்ததிதுதி, அநுபவவிதியென்பதை அறிந்துட்கொள்வார்கள். அவ்வளவு புத்திமான்கள் அதிகரித்திருக்கின்றார்கள். ஆதலால், உண்மையறிந்து கொள்ளக்கூடும்; அப்பால் விவாகாங்க,

மாப்பிள்ளையும் பெண்ணும் அட்டமங்கலங்களுடன் அரசாணிக்குக் காலவலஞ்செய்யும் பொழுது, முதற்சுற்றில் ஈசானமூர்த்தியாக மந்திரார்த்தங்களினால் ஏற்படுத்திய அம்மியினிடத்தில் பெண்ணும் பிள்ளையும் வந்துநின்று தேங்காயுடைத்து, நைவேத்தியம்வைத்து, தூபதீபங்கொடுத்து, புட்பாட்சதைகளால் அர்ச்சித்துப் பூசித்துப் போற்றிக் கலியாணப்பெண்ணிற்கு அந்தச்சரித்திரமகத்துவத்தை உரைக்கவேண்டியது.

## அம்மி மதித்தல்

அம்மியையுங் குழவியையுஞ் சுட்டிக்காட்டி "ஓ!.கலியாணப் பெண்ணே!! இந்த அம்மிக்குழவியினுருவமும் ஆதிசிவமும் ஆதி சத்தியும் அர்த்தநாரியாக வமைந்தவாறு; இதுபோல் நீயும்நானும் உடலும் உயிரும் ஒன்று பொருந்திபிரியாப் பிரியத்துடன் மருவிவாழ்க்கை பெறவேண்டியதென்று போதித்து, "இதோ நீஎனக் கிடப்பாக மாயினை" யென்று குறிக்கும் வண்ணம் கலியாணப்பெண்ணின் வலதுகாற் பெருவிரலை மாப்பிள்ளையின் இடதுகாற்பெருவிரலாலும் ஆள்காட்டி விரலினாலும் பற்றி, "இந்த ஈசானமூர்த்தியோடு இறைவிபொருந்தி அந்த இறைபோலிருக்க வேண்டு"மென்றியம்பிச் சேரவேண்டியது.

## அருந்ததிகாட்டல்.

ஒரு சுற்றினுரைத்துவிட்டு வணங்கி மறுசுற்று வரும்போது, வடதிசையைத் துதித்து, "இதோ அருந்ததி; துதி!"யென்று "வசிட்டரும் அருந்ததியுங்கூடி இல்லறதருமம் நடத்தியதுபோல் நீயும் நானும் இல்லறதருமத்திலிருந்து வாழவேண்டு" மென்று அவர்களின் சரிதையை யெடுத்து விரித்து, தூபதீபநைவேத்தியங்களுடன் தொழுது வணங்கவேண்டியது.

## தேவாசீர்வாதம்.

மூன்றாந்தரம் வலஞ் சூழ்ந்து வரும்போது, மணவறையில்வந்துநின்று தென்றிசையில் எமதருமனை ஆவாகனம்பண்ணிய தானத்திலிருக்கும் புரோகிதரைப்பூசித்து வணங்கியபோது, அவர் ஆசிகூறி உலகப் பழக்கத்தையும், பாவபுண்ணிய வகுப்பையும் பிதுர் தேவாதி பூசை தருமதானம் முதலியதையுஞ் சொல்லித்,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்
றைம்புலத்தா றோம்ப றலை."

என்பதுபோன்ற சாட்சி எடுத்துக்காட்டி இல்லற தருமங்களிலும் கிரகத்தா சிரமத்திலும் அன்புண்டாக்கி அறைவீட்டிற் போகச்செய்யவேண்டியது.

பின்னர்ப் பெண்ணின் சுண்டுவிரல்பற்றி, கிழக்குப் பார்த்த வீட்டில் வலதுகாலை முன்வைத்து நுழைந்து இருவரும் பாயின் மேல் அமர்ந்து மாலைமாற்றிப்பால்பழமுண்டு தாம்பூலங்கொண்டு மைத்துன மைத்துனிகளோடு விளையாடிச் சுபசம்பிரமத்தோடு சபையோரை உபசரித்துச் சாதமுண்ணுதல் முதலிய சவுக்கியாதிகளைக் கவனிக்கவேண்டியது.

## சபையோருக்கு உபசாரம்.

மேற்சொன்னபடி மணவாளர்கள் அந்தப்புறம் சென்றவுடன்மற்றோர் யாசகர் வேலைகாரர் பிராமணர் புரோகிதர் முதலியவர்களுக்குப் பூரிமுதலியவைகளைக்கொடுத்து, பின்னர் சபைதாம்பூலம், சம்பந்தி தாம்பூலம், கிராமத்தாலம்பூலம், புட்பம் சந்தனம் பன்னீர் முதலியவற்றால் வந்தவர்களை உபசரித்துப் பந்திபோசனம் நடத்திச் சந்தோடப்படவேண்டும்.

## கங்கண விசர்ச்சனம்.

அதன்பின் முகூர்த்தலக்கினந் தொடங்கி மூன்றுவேளை ஓமம் பண்ணி, ஔபாசனங்களைத் தேவதா பூசையோடு நடத்தி, மணவாளருக்குப் புரோகிதரால் காப்புக்களைதல் செய்வித்து முதிர்ந்த பெண்ணுகவிருந்தால் ஊஞ்சல் பந்தாடல், ஆடல்பாடல் கச்சேரி முதலிய சில விளையாடல் களையும் சத்தியானுசாரம் நடத்தி வைக்கலாம்.

ஆனால், சிலர் ஐந்துநாள் ஏழுநாள் ஓமம் முதல் பலவாறுக மனம்போனபடி ஆறுமாத கலியாணமும் நடத்துகிறார்கள். இது பார்ப்பாருக்கும் வேடிக்கைப் பார்ப்பார்க்கும் இலாபமாம்; அன்றியும், "ஐசுவரியம் உடையவன் ஈசுரன்" என்பது போல, அவர்கள் எப்படி செய்தாலும் செய்யலாம். அப்படிச் செய்யவிதி, தந்தம் காரியார்த்தமாகத் தேடிக்கொண்ட மறையோர் வாக்கியமே.

அன்றி, தாலிகட்டியதினமே காப்புக்களைவது என்னெனில், திரவியமில்லாதவர்கள் மற்ற கிரியாதிகளைச் சுருக்கி முருக்கியவிதியுத்தமாகச் செய்வதாம்; அதனால், யாதொரு கெடுதியுமில்லை புரோகிதருக்கு அவ்வளவாக மந்திரவேலை இராது.

## பந்தல் பிரித்தல்.

பந்தல் பிரித்தலாவது, மணவாளர்களின் தந்தைமுதலிய உரியவர்களும், பஞ்சாங்கக்காரரு மிருந்து முன் ஆவாகனஞ்செய்த ஆரோகண மந்திரம்போல, தூபதீப நைவேத்யாதிகளுடன் நமஸ்கரித்து அவரோகண மந்திரங்களினால் அந்தந்தத் தேவதைகளை ஸ்தானத்திற்கு எழுந்தருளச்செய்து சாந்தியோமமும் முடிந்து, அரசாணிக்கால் முதலியவற்றை அசைத்துவிடுதல்.

பின்னர், அவ்வரசாணிக்காலை நந்தவனம் கோயில் முதலிய விடங்களில் சுத்திசெய்து தனித்தனிநாட்டிச் சாலிலுள்ளசந்தகங் காசலத்தையும் வார்த்து, அவை தளிர் தழை மலர் முதலியவைகளோடு செழிக்கத் தினம்பாதுகாத்து மணவாளர்கள் பின் சிலாக்கிய முறுவலைக் கவனிப்பதாம்.

## பாலிகைவிடுதல்.

இதன்பின் பாலிகையிலுள்ள நவதானியமுளையை அரசாணிக்காலின் சமீபத்தில், புட்பமாலை மாவிலை தருப்பை முதலியவற்றை ஒரு கூடையில் வாத்தியங்களுடன் பந்துசனம் மணவாளர் முதலினோரோடு கொண்டுபோய் மஞ்சணீர், குங்குமம், கதம்பம் முதலியதோடு விளையாடி ஆறு ஏரி குளம் இவ்விடங்களில்விட்டுப் பூசித்து வரவேண்டியது.

## ஓமாக்கினி விடுதல்.

மங்கலியதாரணம் பண்ணும்போது வளர்த்திய அக்கினியை கன்னிகாவிர்ச்சனஞ் செய்தவுடனே தீபதூப பூசாதிகளோடு வாயகன்ற சட்டியி லெடுத்துப்போய்ப் பயிர்ப்புல மில்லாவிடத்தில் வைக்கவேண்டியது.

## கருப்பாதானம்.

பின்னர்ச் செயவேண்டியதாவது கருப்பாதானமாம்; அதாவது இட்ட சனக்கூட்டத்துடன் விருந்தருந்திவரிசைகள் நடத்தி, சாந்தியோமமுதலிய சடங்குகளை முடித்து மணவாளர்களை அலங்கரித்துச் சுபலக்கினத்தில் இரவில்மர்மமாக இலைமறைவோ காய்மறைவோ, வென்னும் பழமொழிக்கிணங்கப் புணர்த்தவேண்டியது.

இப்படியல்லாமல் இருது சாந்திகாலத்திலும் சோபனகாலத்திலும் விர்காடெல்லா மறியும் பத்திரங்களால் பிரசித்தஞ்செய்து மேளதாள முழக்கத்தோடு பொருளை விரயப்படுத்திக்கொண்

டாடுவது பிசகாம்; என்னென்றால், எறும்பு நடையான சகலஜீவ ராசிகளுக்குங் காமமுண்டாயினும், நெடுநாள்பழகிய நாயகனிடத்தில் அநுராகம் விளைக்கும்போதும் நாணமிருக்க வேண்டுவது ஸ்திரீகளுக்கு முழு ஆபரணமென்றிருப்பதனால், குடிப்பிறப்புடையவர்கள் உற்றார் பெற்றார் முதலினர் செய்யத்தக்க சடங்குகளைப் பகலில் செய்து முடித்து இரவில் பெண்கள் சாங்கியமாகச் செய்வது நியாயமும் சுபாவமுமாகும். அன்றி நமது தேசத்தில் வழங்கும் சாத்திரங்களுள்ளும் இதை அந்தரங்க காரியங்களென்றே சொல்லுகின்றது.

### தகாத இருதுசாந்தி.

மேற்சொன்னமுறையை தவறி பத்துநாள் ஒருமாதம்வரையில் பற்பல வேடம்போட்டு ஊரார்களை யழைத்துப் பெண்ணை திரே உட்காரவைத்தும் தாசிகள் அல்லது பாப்பாத்திகளைக் கொண்டு அகங்கையாகப் பாடவைத்தும் கொப்பிதட்டிக் கூத்தாடி நடிக்கச்செய்தும் சந்தோடப் படுகிறார்கள். இதென்ன விபரீதம்? ஐயோ! சனியனை விலைக்கு வாங்கிக்கொண்டதுபோல விவேகங் கெட்டு இவ்வாறுஞ் செய்யலாமா?

### ஓ ஓ ஓ, கனவான்களே!

தத்தம் அருந்தவத்தால் வருந்திப்பெற்ற பெண்களுக்கு நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் கற்பிலக்கணங்கள் பொருந்தி யிருக்கவேணுமென்று சாத்திரங்கள் சொல்லியிருக்கிறதே, அதுவல்லவோ நமது குடி குலங்களை விருத்திசெய்யும் பெரியநதி அதைக்கெடுத்துப் பெண்ணுக்கு வேடமிட்டு வாலிபர் முதலிய எல்லோர் எதிரிலும் சபாமத்தியி லுட்காரவைப்பது எதற்காகவோ பெண்ணை அல்லது பெண்ணினழகைப்பார்த்துச் சபையிலுள்ள பிரபுக்களும் வாலிபருங்கண்டு மனோற்சாகங் கொள்ளவோ? அல்லது பெண்ணுக்குச் சபையாரைக்காட்டி இச்சிக்கவோ பெண்ணுக்குள்ள நாணந்தீரவோ? அல்லது வேறு என்னலாபம் பெறவோ இவ்வழக்கம்?

### வேசிகள் இருதுசாந்தி.

தாசிகள் தங்கள் வீட்டில் நன்மையான பெண்ணை ஊராரறிந்தால் பிழைப்புண்டென்று, தரகாளிகள் முதலியோருக்கும் காமப்பேய்களுக்கும் தருமஞ்செய்யாத கரும நாய்களுக்கும் தெரிவித்து, இவர்களமர்ந்த பெரியசபையில் (இனிவரும் புதிய மாப்பிள்ளைக்கு வசதியான பந்தர், குலோப், சேட் முதலியவிசித்

திரமான வேலைகளைச்செய்த சபையில்) நயவஞ்சக் காமக் கிழத்தி கள் ஒன்று சேர்ந்து புட்பிணியை வருவாரிடமெல்லாம் புகழ்ந்து படாடோபப் பகல்வேட வெளிச்சங்காட்டி, பொன் காய்க்கவந்த செம்பொற்கொடி பூத்ததென்று மகிழ்ந்து கண்டோர்மோகிக்கத் தக்க பற்ல வேடமிட்டுப் பத்து இருபது முப்பது நாள் மட்டும் ஆடல்பாடல் கச்சேரிமுதலிய கோலங்களைக் காட்டி வந்தவர்களு க்குக் காமமயலைப் பூட்டி வாசனை தாம்பூல முதலிய அமுதூட்டி பாக்கியவான்களை ஒட்டாண்டி யாக்குவதற்குச் செய்வதாம் ஆன தினுல் அதைப்போன்ற சடங்குகளைக் குல ஸ்திரீகளுக்குச் செய் விப்பது தவறன்றோ? சற்றே கவனித்துப்பாருங்கள்.

## புணர்ச்சி விதி.

மாதர்களுக்கு இருதுகாலம் வழக்கமாய்ப் பதினறுநாளென் று சொல்லப்படுகின்றது. அதில் மாதவிடாயானது முதல் நான்கு நாள் பெரியோர்களால் நிந்திக்கப்பட்டிருக்கின்றது. மேற்சொன் ன நாலுநாளுடன் ஏகாதசி திரயோதசி இவ்விரண்டையும் நீக்கி மற்றைப் பத்துதினத்தில் சேர்வதே உயர்ந்ததாகச் சொல்லுகிறார் கள். மாதவிடாயானதுதொடங்கி ஆறு-எட்டு-பத்து-பன்னிரண்டு- பதினலு-பதினறுகிய இராத்திரிகளில் சேர்ந்தால் பிள்ளைகளும், ஐந்துமுதல் ஒற்றைப்பட்ட இராத்திரிகளில் சேர்ந்தால் பெண் களும் பிறக்கின்றது. ஆகையால், புத்திரவிருப்புள்ளவன் இரட் டைதினத்திற் சேரவேண்டியது. புருஷனுக்குச் சுக்கிலம் அதிக மாக வெளிப்படுமானல் புத்திரனுகவும், மாதர்க்குச் சுரோணித மதிகமாக விருந்தால் ஸ்திரியாகவும், இருவருக்கும் சரியாயிருந் தால் பேடியாகவும், இருவருக்கு மில்லாமலிருந்தால் அல்லது சொற்பமாயிருந்தால் கெற்போர்பத்தி யில்லாமையும் உண்டாகிற து. நீக்கவேண்டியதான நாலு நாளையும் ஏகாதசி திரயோதசி அமாவாசி பௌணர்மாவாசி இந்தநாளையும், நீக்கி எவன் மற்ற தினத்திரவினில் தன் மனைவியுடன் சேருகிருனே அவன் கிரகஸ்த னுக விருப்பினும் பிரமசாரியாகவே சொல்லப்படுகிறுன்.

பிள்ளைகள்மேல் வாஞ்சையுடைய ஆடவர், தாங்கள் உண்ட உணவுகள் சரியாய்ச் சீரணித்து தேகபலனடைவதற்குச் சராசரி நான்கு மணிநேரம் நித்திரைசெய்து பிறகு மாதர்களைப்புணர்வது மிகவும் நன்று; அன்றிரவில் சாப்பிட்டுப் படுத்தவுடனும் பருவ காலங்களிலும் நெடும்பிரயாணஞ்செய்தபிறகும், ஸ்நாநம் செய்த பிறகுஞ் சரியாய்ச் சீரணியாத சமயத்திலும் மாதர்களோடு சை யோகிப்பதினுல் பல வியாதிகள் சம்பவிக்கும்; பாக்கியங்களில்

முக்கியமான புத்திரபாக்கியத்தைப்பெற விரும்புவோர் வசந்த காலத்தில் புணர்ச்சிக்கவேண்டும்; ஏனெனில், அப்பருவத்தில் தருக்கள் தளிர்ந்து சுத்தமானவாயு வீசுகிறபடியால் சீக்கிரத்தில் கருப்பக் கருத்தரிக்குமென்று மனுகூறியபடியே சோதிடசாத்திர சகிதமாக புருடனுக்கும் பெண்ணுக்கும் தேக கால லட்சணங்களைத் தெரிந்து ஆயுள் வேதியரால் ஒப்பத்தக்க தினத்தை யறிந்து முதல் நிஷேக முகூர்த்தஞ் செய்வதே சிறந்தது.

உலகத்துள்ள ஆண்பாலர் பெண்பாலராகிய இருபாலருங்கலந்து மகிழ்ச்சியடைந்து நுகரும் ஓர் சிற்றின்பத்திற்கே சம்போகம் புணர்ச்சி எனப் பெயராம். இதைச்சில அறிவிலிகள் காமவிச்சையை ஒழிப்பதற்காகத்தான் பெண்களை உற்பத்தியாக்கப்பட்டிருக்கின்றதென்றும், அவர்களிடத்திற் சம்போகிப்பது தங்களிச்சையை நிறைவேற்றிக் கொள்வதற்குத்தானென்றும், தப்பபிப்பிராயப் படுகிறார்கள். "நெல்லுக்கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்குமாங்கே பொசியுமாம்" என்பதுபோல, சந்தானவிருத்திக்காக ஏற்படுத்தப்பட்ட சம்போகத்தில் ஒருவித இன்பத்தையும் கடவுளுண்டாக்கி யிருக்கின்றாரே தவிரக் காம விச்சையையொழித்துக் கொள்வதற்காகமட்டுமல்ல கடவுள் நமது நன்மைக்காகப் பூலோகத்தில் சிருட்டித் திருக்கும் சகல பொருள்களையும் அவரால் நிர்ணயித்திருக்கப்பட்ட பிரமாணத்தின்படி நாம் அநுபவிப்போமேயானல், அது நமக்கு நன்மையைச் செய்யுமே தவிரத் தீமையை ஒருபோதும் விளைக்காது; ஔடதத்திற்கு உபயோகிக்கும் பாஷாணத்தை அதற்குத்தக்க பிரமாணப்படி சேர்த்தால் நன்மையே செய்யும், பிரமாணத்திற் கதிகமாய்ச் சேர்த்தால் தீமை விளைவிக்குமென்பதற்குச் சந்தேகமென்ன? அதுபோலச் சந்தானவிருத்திக்காக ஏற்படுத்தப்பட்ட சம்போகத்தை பிரமாணத்துடன் நடத்திவந்தால் அநேகவித நன்மைகளை அது விளைக்கும்; அவ்வாறின்றிக் காமவிச்சாதிகத்தின் நிமித்தியம் அப்பிரமாணமாய்ச் சம்போகித்தால் பலவித தீமைகளை விளைவித்துவிடும் இன்னும் நம்முடைய சீவனைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கடவுள் நமக்குப் போசனத்திற்குரிய பதார்த்தங்களைச்சிருட்டித்திருக்கின்றார். அப்பதார்த்தங்களைப் புசித்தால் அவைகள் சீவதாரமா யிருப்பதுடன் அவைகளை உண்ணுகையில் ஒவ்வோர்உருசிதோன்றுகின்றது; அவ்வுருசியை நாமறிவதற்காகத்தான் இவை சிருட்டிக்கப்பட் டிருக்கின்றனவென்று அமிதமாய்ப் புசித்தால் அவைகள் கெடுதிவிளைக்குமென்பதிற் றடையாது? இதனல் அப்

பதார்த்தங்களின் உருசியை நாமறிவதற்கு மாத்திரமே பதார்த்தங்கள் சிருட்டிக்கப்பட்டன அல்லவென்று நமக்குப் புலப்படுகின்றதல்லவா? அதுபோலவே ஸ்திரிகளின் சம்போகமும் சந்தானவிருத்திக்காகவே உண்டாக்கப்பட்டிருக்கின்றதென்றுஉணர வேண்டும். இவ்வித நற்செய்கையை பிரமாணுதிக்கத்தால் துர்ச்செய்கை யாக்கிக்கொண்டு சிலர் அதனால் அநேகவித கெடுதியை அடைவதைக் காமம் என்னும் அதிகாரத்திற் கூறியிருக்கிறோம். ஆதலாற் சம்போகத்தைக் 'கிரமமாகவும் ஒழுங்காகவும் நடத்த வேண்டியது ஒவ்வொருவருக்கும் கடமையா யிருப்பதுகொண்டு அச்சம்போகத்திற்குறிய காலப்பிரமாணத்தை அடியிற்கூறுவாம்.

அதாவது ஸ்திரீகளின் பதினைந்தாம் வயதிற்குமேற்பட்டு இருபது இருபத்தொன்றும் வயதுவரையில் அவர்களின் சரீரத்திற்கேற்க எலும்புமுதலிய வளர்ந்து பூரணபக்குவம் அடைகின்ற படியால், முற்கூறிய இருபதாம் வயதிற்குமேலே சம்போகிக்கத்தொடங்கவேண்டும். அதற்குமுந்திச் சம்போகஞ்செய்யத் தொடங்கிவிட்டால், அவர்கள் உறுப்புகள் பூரண்வளர்ச்சியடையாமையால், அவர்களுக்குக் கருப்பந்தரித்து முற்றிப் பிரசவிக்குங்காலத்தில் சகல சங்கடங்களும் ஆபத்துகளும் நேரிடுவதன்றி அவர்களுக்கு பிறக்குங் குழந்தைகள் எலிக்குஞ்சுகளைப்போன்றும் பூனைக்குட்டிகளைப் போன்றும் அவ்வளவு பலவீனமாய்ப் பிறப்பதன்றி, அவர்களும் துர்ப்பலப்பட்டுப் பலவியாதிகட்கு ஆளாகிறார்கள். சம்போகம் மாதத்திற்கொருதரமென்றும் இரண்டுதரமென்றும் நான்குதரமென்றும் பிரமாணமிருப்பதால் தேகபலத்திற்கும் வயதிற்கும் தக்கபடி விரும்புவதே உசிதம். ஐம்பது வயதுக்கு மேற்பட்டு மாதத்திற்கொருதரமாகிலும் இரண்டுமாதத்திற் கொருதரமாயினும் நான்குமாதத்திற்கொருதரமாயினும் அவரவரின் தேகபலத்திற்குத்தக்கபடி புரிவது நலம். இருபதாம் வயதிற்குமேல் முப்பத்தைந்தாம் வயதுவரைக்கும் பிரசவிப்பதற்கு அவ்வளவு வருத்தம் இராது. ஆனால் முப்பத்தைந்தாம் வயதுவரையிற் சம்போகமே யில்லாமல் அதன்பின் சம்போகஞ்செய்து கருப்பந்தரித்தால், அந்த முதிர்ந்த ஸ்திரீகளின் சரீர உறுப்புக்களின் மிருதுவான பாகங்களெல்லாம் வேண்டியவரையில் வளையக்கூடாதபடி தடித்துப்போவதுடன் கருப்பாசயம் சுருசுருப்பின்றி மந்தப்படுதல், கருப்பைகிழிந்துபோதல், உதிரம்பெருகுதல், தளர்வடைதல், தாபமடைதல் முதலிய அளவில்லாத உபாதிகளால் பிரசவகாலத்தில் அந்த ஸ்திரிகள் துன்பப்படுவார்கள். இருபதாம்வயது

முதல் முப்பத்தைந்தாம் வயதுவரையில் தான் பிரசவத்திற்குத் தக்ககாலம்; அக்காலத்தில் சுகமாய்ப் பிரசவமாவதுடன் மரணம் நேர்வதும் அபூர்வம். இன்னும் பத்துப்பன்னிரண்டு வயதில் இருதுவாய்க் கருப்பந்தரித்துப் பிரசவகாலத்தில் அநேக ஸ்திரீகள் படும் துன்பத்தை அநேகர் பார்த்தும் கேட்டுமிருக்கலாம். அதனால் நேரும் மரணத்தின் அளவை யாவர்தான் அறியார்கள்? இவ்வித பிரசவத்தில் தப்பிப்பிழைத்த ஸ்திரீகள், தங்கள் சரீர உறுப் பின்வளர்ச்சி பூரணமா யமையப்பெறுமையால், அது முதலாகவே நோயாளிகளா யிருந்து இளம்வயதில் மரண மடைகின்றார்கள். இவ்விதகாரணங்களால் இருபது வயதிற்குமேற்பட்ட காலத்தையே சம்போககாலமாகக் கொள்வது உத்தமம்; நாம் சாப்பிடும் ஆகாரம் சீரணமாவதற்கு ஏறக்குறைய நான்குமணிநேரம் செல்லுமாகையால், ஆகாரஞ்செய்து நான்குமணிக்குப் பிறகே சம்போகம் செய்வது நன்று.

ஆகையால், நாயகனும் நாயகியும் தேகத்தைச் சுத்திசெய்துகொண்டு பரிசுத்த வத்திரந்தரித்து களபகஸ்தூரிகளைப் பூசி இதயசுத்தியடைந்து மனதைக் கவலை சஞ்சலம் முதலியவைகளில் அலையவிடாமல் அமரிக்கையாய் நிறுத்தி, ஏகாந்தமாய் அன்னத்விமஞ்சத்தில் சயனிக்கையில் தாம்பூலதாரணஞ்செய்துகொண்டு, பலவித மனக்களிப்பைத் தரத்தக்க வார்த்தைகளாடி இருவரும் ஒரேமனதுள்ளவர்களாய், சந்தோட சித்தத்துடன் சம்போகம் ஆரம்பிக்கவேண்டும். அப்படிச் செய்யுங்காலத்தில் வேறு யாதொரு எண்ணங்களும் மனதில் தோன்றாதவண்ணம் கடவுளிடமாக பத்திவைக்கவேண்டும். இவ்விதம்புரியின் கருப்பத்திற்கு யாதொரு விக்கினமின்றிச் சற்குணமுள்ள பாலரைப் பெறுவார்கள்; சிலமூடர்கள் தங்கள் நாயகிகளுடன் சம்போகிக்குங் காலத்தில் வேறு ஸ்திரீகளின்மேல் மனதைச்செலுத்துவார்கள். அப்படிச்செய்வதால், அவர்கள் விபசாரக்குற்றத்திற்குள்ளாவதுடன் கருப்பக்குறைவும் நேரிடுகின்றது. இதுபோலவே ஸ்திரீகளும் இதர விடயங்களில் மனதைச் செலுத்தாமலிருக்கவேண்டும். சம்போக காலத்தில் நாயகிக்கு ஆச்சரியம் சஞ்சலம் பயம் அதிருத்தி முதலியவைகளுண்டாயின், கருத்தரித்தலுக்கு விரோதமாகையால், கூடியவரையில் அவைகளைநீக்கி அவள் மனதிற்குச் சந்தோடத்தையும் உற்சாகத்தையும் விருப்பத்தையும் விளைவிக்கவேண்டும். தந்தைதாயின் மனோவியாபாரமே பிள்ளையுண்டாவதற்கு முக்கிய காரணமென்று விவேகிகள் கூறியிருக்கின்றார்கள். ஆகையால்,

அக்காலத்தில் அவர்களுடைய மனது எவ்வளவு தெளிவாயும் பவித்திரமாயுமிருக்கின்றதோ அவ்வளவு சௌந்தரியமுள்ள குழந்தைகளைப்பெறுவார்கள். இவ்வாறு சம்போகித்தபிறகு ஸ்திரீகள் ஸ்நானஞ்செய்து வேறு யாதொன்றையும் நோக்காது தன்நாயகன் முகத்தையாவது அல்லது கண்ணாடியில் தன்முகத்தையாவது அல்லது அழகுள்ள படங்களையாவது பார்க்கவேண்டும். இப்படிச்செய்வதால் தன்னுருவத்தைப் போன்றாவது தனாயகனுருவத்தைப் போன்றாவது சௌந்தரியமுள்ள பிள்ளைபிறக்கும். ஸ்திரீ ஸ்நானஞ்செய்தவுடன் குரூபியான ரூபங்களைப்பார்க்கநேரிட்டால் குழந்தையும் குரூபியாகவே பிறக்குமென்று சாத்திரங்கள் கூறுகின்றன. இதற்குச்சரியாய் அநேக திருட்டாந்தங்கள் உலகத்தில் நடந்துவருகின்றன. மாதர்கள் அணிந்திருக்கும் ஆபரணங்களுள் ஒன்றில் வசிக்காந்தத்தைப் பதித்துச் சதாபோட்டுக் கொண்டிருந்தால், கருப்பந்தரிக்குங் குணமுண்டாவதுடன் சதிபுருஷாளிருவரின் மனவொற்றுமை எக்காலத்தும் மாறாதிருக்குமென்றும் கல்விமான்கள் கூறுகின்றார்கள்; மிகப்புணர்ச்சிசெய்யும் விலைமாதருக்குப் பிள்ளையுண்டாவ தரிதாயிருப்பதும், நெடுநாட்பிரிந்த கணவன் வந்தவுடனே சம்போகித்த மாத்திரத்தில் கருப்பந்தரிப்பதும், அனுபவமாயிருத்தலின், அதிக சம்போகத்தினால் மாதர்களுக்குக் கருவைவளர்க்கும் சத்திகுறைந்து கருத்தரிப்பதற் கேதுவில்லாமற் போகுமென்பது திண்ணமாம்.

## விளையாடல்.

கலியாணவாசலில் வெகு சனங்களுக்குமுன் விளையாடச்செய்வது என்னவென்றால், விவாகமாகாததற்கு முன்னும் பின்னும் மணமகனும் மணமகளும் கூச்சப்படுவது வழக்கம். சிலர் கலியாணஞ்செய்து இரண்டு மூன்றுவருடமாகியும் நாணமாயிருப்பார்கள்; சின்னவீட்டுச் செய்தி சீமந்தத்தில் தெரியுமென்றபடி வயிறுபுடைத்துக் காட்டியபோது புருடனும் பெண்சாதியும் பேசுகிறார்களென்று தெரியலாம். அப்போதும் புருடனைக் கண்டால் வெட்கப்படுவார்கள் சிலர். ஆனதால் அந்தநாணமும் வெட்கமும் நீங்கும்படியாகச் சாலில் ஆழியிட்டு எடுக்கச்செய்தும், சாலுக்குள் ஒருவர் கையை ஒருவர்பற்றி முருக்கித் திருப்பி பொம்மையை எடுக்கச் செய்வதும், பிள்ளையைப் பெற்றேனென்றும், 'பிள்ளையைப் பிடியுங்கள் எனக்கு வேலையிருக்கிற' தென்றும், புருடன் பிள்ளையைப்பிடி' யென்றும் 'பால்கொடு' வென்றும், 'ஏணையிற்போட்டு தாலாட்டுங்க' ளென்றும், 'மூத்திரம்பேய்ந்த' தென்றும், 'தாம்பூலந்

தா' வென்றும், மாலைமாற்றென்றும், பூச்செண்டெறிதலென்றும், மஞ்சணீர் விளையாட்டென்றும், வெகுசனமத்தியில் விளையாடச் செய்து கூச்சத்தைத் தெளியச்செய்வதாம். இப்படி விளையாடியும் ஆறுமாதம் ஒருவருடம் வரையிலும் கூச்சத்தோடிருப்பவர்களும் சிலர் உண்டு. இவர்களை இட்டர்களாலும் தாசிகளாலும் போதித்து நாணத்தைநீக்குவதுமுண்டு. இதன்பொருட்டே உற்றார் உறவினர் புரோகிதர் முதலியவர்களால் பற்பல விளையாடல்களைச் செய்விப்பது பூர்வீகமாக இருக்கின்றது.

## சங்குதறித்தல்.

தம்புட்டம் முதலிய வாத்தியங்களை நிறுத்தி சங்குமுழக்கித் தாலிகட்டவேண்டுவது ஏனென்றால்,

வெண்பா.

" முதற்சங் கமுதளிக்கு மொய்குழலா ரசை
நடுச்சங்கு நல்விலங்கு பூட்டும்—கடைச்சங்கு
ஆம்போ தினவூது மம்மட்டோ யிம்மட்டோ
நாம்போது வாழ்ந்த நலம்''

என்று கூறியபடி சங்குமுழக்கியே தாலிகட்டவேண்டும்; அச்சங்கு வாழ்வுக்கு ஊதுகின்றபோது 'ஓம்' என்று பிரணவநாதமாயும் இழவுக்கு 'வாள்' என்றும் அமங்கலநாதமாகவும் ஒலிக்கும்.

## இருமண்மேடை.

இருமண்கூட்டி மேடைபோடுவ தேனென்றால், நவரத்தினுதிகளா லிழைக்கப்பட்டிருந்தாலும், பிருதிதேவி சம்பந்தமிருக்கவேண்டியதாலும், சனனமரண ரட்சிப்புக்காலங்களில் பிருதிவியினது பரிசமிருக்க வேண்டுமென்று பாவகரிஷியி னிச்சயமாதலாலும் என்பதாம்.

## செங்கோலம்.

செங்காவிக்கோலமாவது, பந்தற்போட்டிருப்பதால் சூரியகிரணத் துலக்கமென்பதாம்.

## மாக்கோலம்.

மாக்கோலமாவது, தானிய மகாலட்சுமியின் பான்மையாக அலங்கரிப்பதாம்.

## தோழிப்பிள்ளை.

தோழிப்பிள்ளை யாரெனில், மைத்துனனை ஏற்படுத்தினும் வேற்றுமையில்லாமல் உபசரிக்கவும், மணவாளருக்குக் கிடைக்கும்

காசுபணங்களைக் கிரமமாகச்சேர்க்கவும், பெண்ணிற்குச் சீதனங் கொடுக்கின்ற தோழிப்பெண்ணை சகலாபரணங்களுடன் தத்தம் பெற்றுக்கொள்ளவும், சுதந்தரமுடையோனுதலால். முற்காலத்தில் பெண்ணுக்குச் சீதனமாக புரோகிதர், வித்துவான், ஆளடிமை, தோழிப்பெண், நிலம், ஏர் முதலியவற்றைக்கொடுத்து வந்தார்கள்; அக்கால் தோழிப்பெண்ணைத் தோழன்மாப்பிள்ளை கலியாணம் செய்வது வழக்கம். அந்தநெறியாகமைத்துன னிருக்கவேண்டுமென்பதாம். இதுபூர்வ நியதி.

தாலியினுருவம்.

தாலியாவது, தாலி என்பது தாள்—நீதாணி என்ற பதமாம் அது தாலியென மருவி வழங்குகின்றது—அதனுருவம் புருடனுடைய பாதம்போலாம்—சிலர் பொட்டாக அணிகிறார்களேயென்றால், அதுவும் புருடனுடைய பாதந்தான். எவ்வாறென்னில் பாத தாமரைபோல வடிவம் பண்ணிவைப்பதாம்.

குலாலமரியாதை.

குலாலனைச் சால் கரகாதிகளைச் சுபவேளையில் வாத்தியத்தோடு கொண்டுவரும்படிசெய்து, அவனுக்குப் படியரிசி தாம்பூலம் முதலியகொடுத்து உபசரிக்கவேண்டும்.

விசுவப் பிரமோபசாரம்.

கலியாண தினத்திற்கு ஏழு ஒன்பது தினத்திற்குமுன் தட்டானிடம் பொன்கொடுத்து, தாலிசெய்து மூன்றுதினத்திற்கு முன்னதாகக் கொண்டுவரச்செய்து குலதேவதாபூசைகளை நடத்தியபின் அவனை உபசரிக்கவும்.

நாத்தினூர் விளையாட்டு.

சிலர் கலியாணப்பெண்ணும் பிள்ளையும் அறைவீட்டிற் போம்போது நாத்தினூர் முன்னதாகக் கதவை சாத்திக்கொண்டு விளையாடுகிறதினுல், நல்ல லக்கினம்போய் இராகு தியாச்சிய உச்சம் வந்துபோம்; ஆதலால், மாப்பிள்ளை பெண் அறைவீட்டிலிருந்து பால்பழமுண்டு மங்கள லாலிவரிசைநடந்து எழுந்து வரும்போது கதவை சாத்திக்கொண்டு வெகுநேரமட்டும் விளையாடுவது மிக உத்தமமாகும்.

பரிய விடயம்.

பெண்ணைப் பெற்றோர் பரியம்வாங்கிக்கொண்டு பெண்ணைக் கொடுப்பது விற்றுவிட்டதுபோலும்; ஆதலினுல், பரியம்வாங்குவது வேறென்று சர்வசாத்திரங்களும் கூறுகிறது.

### சீதன விடயம்.

விவாகமானபின் பெண்ணைப்பெற்றவர்கள் அம்பெண்ணின் அருமைபெருமைகளை யுணர்ந்து அதன் சீவனார்த்த விருத்திக்கென்று வீடு-நிலம்-பணி-ஆடை-பொன் முதலிய [illegible] கொடுப்பது உசிதம். இவ்வழக்கம் நெடுங்காலமாய் எல்லாச் சாதியாருள்ளும் சத்தியானுசாரம் நடந்தேறி வருகின்றது. இந்தச் சொத்துக்களைத் தாய்தந்தையல்லது கணவன் முதலினோர் அபகரிப்பது கூடாது. அப்படி செய்யில் அதோகதி அடைவரென்று ஸ்மிருதிகள் கோஷிக்கின்றது.

இப்படியாக அட்டதிக்குப்பாலகர்கள், அவர்கள் [illegible] கள், பூதேவி-சரஸ்வதி-சூரியசந்திரர்-அருந்ததி-[illegible], சுற்றூர்-உறவினர்-ஊரார்-பிராமணராதி சர்வசனங்களின் முன்னிலையில் சத்தரிஷிகள்-நவதீர்த்தங்கள்முதலிய எல்லாங் காணும்படி தாய்தந்தையர் தாரை வார்த்துக்கொடுக்க எல்லாதேவர்களையுஞ் சாட்சிவைத்து பெண்புருடனைநோக்கி "இதுவரையிலும் நான் என் தந்தைதாயின் பாதுகாப்பில் இருந்தேன்; இன்றுமுதல் தங்கள் பாதுகாப்பிலிருந்து தங்கள் குலத்தை விருத்திசெய்யவும், தங்களது சுகதுக்க பாவபுண்ணியமாதிய சர்வத்திற்கும் சுதந்திரியாகவும், இன்று என்தேகத்தையும், உயிரையும் சர்வசுதந்திரங்களோடு தங்களுக்கே தத்தஞ்செய்கிறே" னென்றும், அப்படியே புருடன் பெண்ணைநோக்கி "நீ என் குலவிருத்திக்கும், எனது புண்ணியபாவாதிகளுக்குஞ் சுதந்திரத்திற்கும், என்பிதுரர்கள் முதலினோர்களுடைய போஷிப்பிற்கும் பெருந்துணையாயிருக்கும்படி இப்பெருந் தேவசனமகாசபையார் சாட்சியாக வருவித்துக்கொண்டேனாகையால். என்தேகத்தையும் அத்தேகத்தினாலாகும் எல்லாவிஷயங்களையும் உனக்கே இம்மகா தேவஜன முன்னிலையில் தத்தஞ்செய்து கொடுக்கிறே"னென்றும்பிரமாணத்தோடு சத்தியஞ்செய்துகொடுக்கிறேனென்றும் பிரமாணத்தோடு சத்தியஞ் செய்துகொடுத்து, அதற்கு உறுதிப்பத்திரம்போலும் மங்கலிய முத்திரையை யேற்படுத்தியபின் ஒன்றி வாழ்கின்ற கருத்தே விவாகமானதால் இந்நெறியைப் பிறழ்ந்து நடக்கும் ஸ்திரீபுருடர்களுக்கு என்ன கதி கிடைக்குமோ!

---

### இரண்டாவது விவாகம்.

மதுபானஞ்செய்பவள், தீயநடையுள்ளவள், கணவனுக்கு [illegible] துபாடுசெய்பவள், திராப்பிணியினள், மிகுந்த கொடுமையுடைய

வன், பொருளையழிப்பவன் இவ்வகை மனைவியரை ஜீவனத்திற்குக் கொடுத்து நீக்கிவிட்டு இரண்டாவது விவாகஞ்செய்க.

மலடியான மனைவியை எட்டுவருடத்திற்குமேலும், சாப்பிள்ளை பெறுவாளைப் பத்து வருடத்திற்குமேலும், பெண்ணையே பெறுவாளைப் பதினூறுவருடத்திற்கு மேலும், தீங்குச்சொல்பவளை அப்பொழுதேயும் நீக்கி, வேறு விவாகஞ்செய்துகொள்க. இந்த மனைவியர்களுக்கு மனமகிழப்பொருள் கொடுக்கவேண்டியதில்லை.

கணவனுடைய நன்மையைவிரும்பினவளாயும் நல்லொழுக்கமுடைபவளாயும் இருந்தமனைவி, பிணியுள்ளவளானால் வேறுவிவாகஞ்செய்ய விரும்பினவன், அந்தமனைவியின் அனுமதி பெற்றுக்கொண்டு அவ்வாறுசெய்க. அவளையொருபோதும் அவமதிக்கக்கூடாது என்று மனுகூறியிருக்கிறார்.

## முக்கிய குறிப்புகள்.

விவாகத்தில் பாணிக்கிரகணம் முதலிய மந்திரங்கள் கன்னியாப்பெண் விவாகத்திற்கு மாத்திரமேயாம்.

பாணிக்கிரகண மந்திரஞ்சொல்லி விவாகஞ் செய்துக்கொண்டாற்றான், தருமபத்தினியாவாள். அதிலும் தீவலஞ்செய்யும்போது மனைவியை எழுடி வைக்கச்செய்து அம்மிமதிக்கிற மந்திரத்தைக் கணவன் சொல்லுகிறதினால், அந்தத் தருமபத்தினியின் பெருமை அறியத்தக்கதா யிருக்கின்றது.

பிராமணனுக்குப் பிராமம் முதல் காந்தருவம்வரையில் கிரமமாக ஆறும் க்ஷத்திரியனுக்கு ஆசுரம்முதல் பைசாசம் வரையில் நான்கும், வைசியசூத்திரர்களுக்கு மேற்சொன்னநான்கில் இராக்கதம் நீங்கலான மூன்றும் தருமத்தைக்கொடுக்கத்தக்க விவாகமென்றறியவேண்டியது.

இதுவரையினுஞ் சொல்லிவந்த விவாகவிதிகளே முக்கியமானவைகள்; இவ்விதிகளைக்கடந்தும், தேசாசார காலாசாரமதசாரஜாதியாசார அனுட்டானமாக அநேகவகையால் சில விதியுத்தமாகவேயும் நடந்துவருகின்றன. அது பெரும்பாலும் இந்துமதமல்லாத புறமதங்களிலேயே காணப்படுகின்றன. அது எம்மதத்தார்க்குமாத்திரமே சிறந்தமையான அநாவசியமானவைகளை விடுத்தும அவசியங்களைத்தொகுத்துக் கூறநேர்ந்தது. புனர்விவாகவிஷயங்களையும், மிருதிசாரங்களையும், முற்றும் விரிக்கப்புகின் சற்றுமிகுதல் தரிக்கப்பெறுமையால் இவ்வளவிற்றானே விடுத்து குலதருமங்களை ஒருவாறு கூறுகின்றேம்.

---

# குல தருமம்.

கருப்பதான மந்திரத்தினாலும், சீமந்த ஓமத்தினாலும் - சாதகன்மம்-நாமகரணம்-அன்னப்பிராசனம் - சௌளம் - உபநயனம் ஆகிய இவைகளினாலும்சம்போகஞ் செய்யக்கூடாததினத்தில் தவறிச்செய்ததா லுண்டாகும் தோடமும், தாயினது கருப்பத்திலிருந்ததா லுண்டாகும் தோடமும் நீங்குகின்றன. அன்றியும்,வேதமோதலினாலும், கொல்லாமையும் புலாலுண்ணாமையுமாகிய இவ்விரதங்களைக் கைக்கொண்டிருப்பதினாலும், ஔபாசன ஓமங்களினாலும், தேவ இருடி பிதுர்தருப்பணத்தினாலும் பஞ்சமா எக்கியத்தினாலும் நமது ஆன்மா மோட்சத்திற் குரியதாகின்றது.

## சாதக கன்மம்.

பிறந்த மகவினுடைய கொப்பூழ்க்கொடி அறுப்பதற்கு முன்னர் சாதகன்ம சமஸ்காரம்செய்யவேண்டும். அக்காலே அந்தக் குழந்தைக்கு நெய் தேன் இவற்றில் தங்கத்தை மந்திரத்தோடிழைத்து நாவினில் தடவவேண்டியது. அக்குழந்தை பிறந்த பத்தாவது அல்லது பன்னிரண்டாவது தினத்தில் புண்ணியதிதியில் சுபமுகூர்த்தத்தில் நல்ல நட்சத்திரத்தில் தக்கநாமகரணஞ் செய்யவேண்டியது.

## நாமகரணம்.

அங்ஙனம் நாமகரணமிடுங் காலத்து, பிராமணனுக்கு மங்களத்தையும் க்ஷத்திரியனுக்குப் பலத்தையும், வைசியனுக்குப் பொருளையும், சூத்திரனுக்குத் தாழ்வையும் காட்டும்படியான பெயரையிடவேண்டியது. பிராமணனுக்குச் சன்மனெனவும், க்ஷத்திரியனுக்குவன்மனெனவும் வைசியனுக்கு குத்தனெனவும் தத்தனெனவும், சூத்திரனுக்குத் தாசனெனவும் தொடர்பெயராக இடவேண்டியது பெண்களுக்கு நாமகரணமிடும்போது, அஃது, மங்களமாயும் தீர்க்காக்கரத்தை (நெட்டெழுத்து) யுடையதாயும், அன்னியராற் சுகமாகக் கூப்பிடுவதாயும் ஆசீர்வாதத்தைத் தருவதாயும் இருத்தல் வேண்டும்.

## அன்னப்பிராசனம் முதலியவை.

குழந்தை பிறந்த நான்காம் மாதத்தில்,அதனை வீட்டினின்றும் வெளியிற் கொண்டுவந்து சூரியனுக்குக் காட்டல் வேண்டும். ஆறும் மாதத்தில் அன்னப்பிராசனம் நடத்தல்வேண்டும். பிறந்தமுதல் வருடத்திலாவது, மூன்றும் வருடத்திலாவது வேதத்திற் கூறியுள்ள

வாறு சௌளகன்மஞ் செய்தல்வேண்டும். ஐந்தாவதுவயதில் கல்வியையும், ஏழாவதுவயதில் தனுர்வித்தையும் பயிற்றல்வேண்டும்.

உபநயனம்.

[illegible]ப்பட்ட முப்புரியைப்புடைய இழைகள்கூடி, இடதுதோளின்மேலிருந்து வலதுதோளின் கீழ்த்தொங்கத்தக்க பூணூலைப்பிராமணன் பருத்திநூலினாலும் க்ஷத்திரியன் பட்டுநூலினாலும் வைசியன் வெள்ளாட்டுமயிர் நூலினாலும் தரிக்கக்கடவன். மேற்கூறியவை கிடையாவழி பூணூலை ஆடையினாலாயினும், ஆடை கிடையாவழி மூன்றிழை நூலினாலாயினும் தரித்துக்கொள்ளலாமென்பது பாராசரம். மணம் புரியாதவர்கள் ஓர் சூத்திரத்தையும், மணம் புரிந்தவர்கள் இரண்டு சூத்திரத்தையுந் தரித்தல் வழக்கு, ஆடைபங்கப்பிராயச் சித்தார்த்தமாக மற்றொன்று சேர்த்து மூன்றுமுடி தரித்தலும் வழங்குகின்றது. மூத்திர புரீடங்களைக் கழிக்குங்காலத்தில் மாலையாகத்தொங்குகின்ற பூணூலை முதுகின் புறமாக விடல்வேண்டும். ஒரே ஆடையுடையவனாயிருக்கிறவன் பூணூலை வலதுசெவியிற்சுற்றல்வேண்டும்.

இருபிறப்பாளர்கள் உத்திரியத்தையேனும் பூணூலையேனும் இடதுதோள் மேலும் வலதுகையின் கீழும் போட்டுக்கொண்டால் உபவீதமென்றும், வலதுதோள்மேலும் இடதுகையின் கீழும்போட்டுக்கொண்டால் பிராசீனவீதமென்றும், கண்டத்து மாலையாகப்போட்டுக்கொண்டால் நிவீதமென்றுஞ் சொல்லப்படுகின்றது. மூன்று வருணப் பிரமசாரிகளும் தங்கள் பூணூல் அபரிசுத்தமாயினும் அல்லது பின்னமாகப் போயினும் தண்ணீரிற் புதைத்துவிட்டுப் புதிதாய் மந்திரங்கூறித் தரிக்கவேண்டியது.

சௌளகன்மம்.

குடுமி பூணூல் இல்லாமற்செய்யும் ஸ்ரௌத ஸ்மார்த்தகருமங்கள் வீணாகுமென்று பிருகுசொன்னார் குடுமியை முடிந்து கொண்டவனாகச் சந்திக்கிரமத்தை ஆசரித்தல்வேண்டும். குடுமியைப் பற்றக் களைதல் தருமவிரோதமென அறிக; அங்ஙனம் செய்து வருபவர் வேதவைதிக துவேடர்கள்போலும்; குடுமிவைத்தலாகிய சவுளகன்மம் பிள்ளை பிறந்த மூன்றும் ஆண்டிலும், ஐந்தாம் ஆண்டிலும்செய்யத்தக்கது.

பிராமணனுக்கு எட்டாவது வயதிலும், வைசியனுக்குப் பன்னிரண்டாவது வயதிலும் உபநயன கருமம் நடத்தல்வேண்டும். உபநயனம் இரண்டாம் பக்ஷமாகச் செய்யுமிடத்து, பிராமணன் பதினு

நாலு வயதுவரையிலும், க்ஷத்திரியன் இருபத்திரண்டு வயதுவரையி லும், வைசியன் இருபத்துநான்கு வயதுவரையிலும் செய்துகொள் ளலாகும். ஆகவே, இதனைக்கடந்து மூன்றுவருணத்தாரும் உப நயனஞ் செய்துகொள்ளுவரேல், அவர்கள் காயத்திரி மந்திரத்தினி ன்றும் நீக்கினவர்களாயும், விராத்தியரென்னும் பெயருள்ளவர்க ளாயும், பெரியோரால் வைதிககாரியங்களினின்று நீக்கப்பட்டவர்க ளாயு மெண்ணப்படுகிறார்கள். இங்ஙனமுள்ளவர்களுக்கு வேதம் சொல்லிவைக்கவும் அவர்களிடத்துப் பெண்வாங்கவுங்கூடாது. பின் னர்ப் பூணூலைத்தரிக்க வேண்டியவிதியை இந்நூல் முகப்பிற்காண்க.

கருப்பதானம்-புமிசவனம்-சீமந்தம்-சாதகன்மம் - நாமகரணம்- உபநிஷ்கிரமணம்-அன்னப்பிராசனம் - சௌளம்-உபநயனம் - மகா நாமியம்-மகாவிரதம்-உபநிஷத்து-சோபனம்-உத்துவகனம்- மிருதி என பதினெட்டும். இதனோடு யசன-யாசன அத்தியயன தான பிர திக்கிரகமென்பவற்றையும் சேர்த்து இருபத்துநான்காக கொள்ளு வதுமுண்டு, இஃது உத்தம பிராமணவிதியாம்.

---

இலௌகிக வைதிக பரமசாதனமா யுள்ள

## நல்லொழுக்கம்.

முன்னர்க் கிரகத்தாசிரமத்திற்கு வேண்டிய கன்னிகா மங்கலி யதாரணவிதியையும், பின்னர்க் கன்னிகையோடு கூடிவாழுங்கால் அத்தியாவசியமாய நடத்தவேண்டிய குலதருமத்தையும் ஒருவாறு கூறினோம்; அவ்வாறு இல்லறநெறியைக் கடைப்பிடித்த காலையில் இலௌகிக வைதிகானுகூலமாக நடந்துகொள்ள வேண்டிய விதி யைச்சிறிது கூறத்தொடங்குகிறோம்.

உலகில் தேகாதிகாரியாய் சீவிக்கவேண்டிய ஒருவன் சார்பா லுஞ் சேர்க்கையாலும் வயதாலும் வாழ்க்கையாலும் தொழிலா லும் செய்கையாலும் வாக்காலும் பரிசுத்தனாய் எந்நிலை யுள்ளும் தலைப்படாது தர்மாத்தனாய் வாழவேண்டியதாகலின் வே தாகமாதி சாத்திரோபதேச சகிதமாக ஆன்றோரால் அனுமதிக்கப் பட்டது நீதியேயாம். அவற்றை அவமதித்தோர் நிராநகை அடை வராதலால், யாவரும் கவனிக்கவேண்டியது நீதியேயாம். அவை யாவை எனில்:-

மாதா பிதா குரு தெய்வம் அந்தணர் பசு அக்கினி பெற்றிடும் றோர் கற்றவர் வயதாலும் குணத்தாலும் நிறைந்த பெரியோர்முத

[illegible]ப் பூசிக்கவேண்டும்; முக்காலங்களிலும் சந்தியை வணங்கவேண்டும்.

சுசியான வத்திரம் சுகபோசனம் சுகநித்திரை சந்தோடமான மனசு மிருதுவானநடை இனியவசனம் கோபமில்லாமை தன்னைத் தான் தண்டித்தல் வறுமையிலும் தைரியம் ஈசுரபத்தி முதலியபரம திரவியங்களை ஒரு இமையளவும் விடாது உடலுக்குக் கண்ணைப்படிபோ, அதுபோல இவைகளை மனதுக்குக் கண்ணாக வைத்திருக்க வேண்டும்.

சாத்திரவிசாரணை சாதுசங்கப்பழக்கம் ஆலயசேவை அடியார் பத்தி உயிர்கள் மீது அன்பு குடும்பவொற்றுமை சகோதரவாய்மை நம்பினோரைக் காத்தல் தன்னைப்போல் பிறரை மதித்தல் முதலிய குணங்களை உயிர்போல மதித்தல்வேண்டும்.

பொய்-கள்குடித்தல்-சூதாடல் - பிறர்மனையாளை இச்சித்தல்-புறங்கூறல்-உயிர்வதைசெய்தல்-சொன்னசொல்லை மறத்தல் - கற்றதைமறத்தல்-அடுத்தோரைக் கெடுத்தல்-பெருண்டி-சோம்பல் மிகுதுயில் இவைகளில் ஒன்றையுடையவனானாலும் அவனது மூன்று தலைமுறையும் நரகலோகத்தை அடைந்து வருந்துமாதலால், அவைகளை விடம்போல நினைத்து, விடவேண்டும்.

பகையைவிரும்பல்,துட்டவாகனமேறுதல், தூஷிப்போன்,மந்தன்-பித்தன், பலரோடு பகைகொண்டவன், பாவி, நயவஞ்சகன், கோபமுள்ளவன், இரக்கமில்லாதவன், விபசாரியையுந் தன்மனைவியல்லாரையுஞ் சேர்ப்பவன், அற்பன், அங்கசுசியற்றவன், அழுக்காடையுடையோன் இவர்களைச் சிநேகித்தல் இவைகளெல்லாம் பாமர சொரூபமானதால் இம்மையிலும் மறுமையிலும் பயனற்றவராகின்றார்கள்.

தனிவழிபோகக்கூடாது, வெள்ளத்திற் கெதிரே நீந்தலாகாது, அக்கினிபட்ட வீட்டில் நுழைவதும், மரத்திநுனியிலேறுவதும், பல்லைக் கடிப்பதுவும், மூக்கைத்தூக்கி யிழுப்பதையும் தவிர்க்க வேண்டும்.

வாயைமூடாமல் கொட்டாவி விடுவதும் - பெருமூச்சிடுவதும், தாண்டுவதும், இரைச்சலிட்டுச் சிரிப்பதும், பிறரறியும்படி அபான வாயுவைவிடுவதும், மீசையைக்கடிப்பதும், உதட்டைக்கசக்குவதும் மேற்கண் பார்த்தலும், கண் சிமிட்டல் முதலியதுஞ் சிறிதுஞ்செய்யாதொழிபக்கடவர்.

அசுத்தமும் அயோக்யமான எளிமையும் அம்மணமான ஸ்திரீகளையும் உதய அஸ்தமன காலத்துச் சூரியனையும் ஒரு செவ்வி இமிசித்தலையும் விகார ரூபங்களையும் பார்க்கப்படாது.

நீர்ச்சுழி,சவத்தைப் பூசிக்குமிடம்,பூசிக்கும் வருடம்,மயானம், உத்தியானவனம், கெட்டபெண்களிருக்குமிடம், குடியர்துட்டர்களிருக்குமிடம் முதலிய விடங்களி லெக்காலும் நெருங்கக்கூடாது.

பெண்கள் நடக்குங்காற்று, சுடலைப்புகை, மேகபிடி, அசுத்தநீர் இவைகள் படும்படி கொள்ளப்படாது.

பூசிக்கத்தக்கவர், தேவர், பிராமணர், ஆசாரியர், எசமான் இவர்கள் நிழலில் எப்போதும் நடக்கப்படாது.

மயிர் எலும்பு முள்ளு அசுத்தர் சாம்பல் இவற்றைத் தூரத்தில் விட்டு ஒதுங்கிப்போகவேண்டும்.

கொடியவிட செந்துக்கள் மிருகங்கள் யுத்தசமூகம் பாழ்வீடு ஆற்றுப்பெருக்கு இவைகளினெதிரில் தூங்கல் உட்காரல் நின்றிருத்தல் முதலிய காரியங்களைச் செய்யப்படாது.

காலாலும் பல்லாலும் கொம்பாலும் பாய்ச்சலாலும் பறத்தலாலும் துன்பஞ்செய்யும் பட்சிமிருகங்களையும் பனி எதிர்காற்று வெயில் இவைகளையும் அணுகக்கூடாது.

அம்மணமாயும் அழுக்காடையாயும் உன்மத்தமாயும் குளித்தல் பூசித்தல் தூங்கல் ஆசமனம் முதலிய கிரியைகள் செய்தல்,பெரியோர் முன்போதல் முதலிய தகாதகாரியங்களைச் செய்தலாகாது; இப்படியே ஒற்றை வத்திரத்தோடிருந்தும் செய்யக்கூடாது.

குழந்தை பெண் தெய்வம்எசமான் உவாத்தி மாந்திரிகன்வித்துவான் அரசன் பசு யானை துட்டன் பெரியோர் இவர்களிடத்தில் பகைகொள்ளலாகாது.

பிறர்வாழ்க்கையில் சந்தோடமும், பகைவரிடத்தில் மரியாதையும், உத்தியோகத்தில் மதிப்பும், இராஜாங்கத்தில் அபிமானமும், சுபகாரியத்தில் சாக்கிரதையும், ஆழ்ந்தயோசனையும், எண்ணிச்செய்யுஞ் செய்கையும், ஒருவனுக்கிருக்குமானால் எல்லாவிரதங்களிலும் சிறந்த தருமவானவான்.

முழுகியவுடனே கையினுலுடம்பைத் துடைக்காமல் வத்திரத்தினால் துடைக்கவேண்டும்; பிறர்மேல் நீர்தெரிக்கும்படி உதறலாகாது; தனதுபாதத்தை மற்றொரு பாதத்தால் மிதித்திருக்கக்

பூரங் ஆலயம் பெரியோர் முதலியவற்றை வலமாகச்சுற்றவேண்டுமே யல்லாமல், இடஞ்சுற்றிப் போகக்கூடாது.

சூரியன், சந்திரன், அக்கினி, காற்று, தீபம், சலம், பெரியோர், கடவுள், கோயில்வழி இவைகளின் முன்பு எச்சில் மலஞ் சலம்-தம்பலம்-சையோகம்-அம்மணம் முதலியவற்றைச் செய்யக்கூடாது.

நின்றபடி சலம்விடுதல், சாதத்தைச்சிந்தல், பூசையில்லாமல் உண்ணல், கையூன்றியுண்ணல், ஓரெறும்புக்கேனும் விருந்தின்றி யுண்ணல், கோழை மலமூத்திரம தம்பலம் முதலியவற்றைமிதித்து நடத்தல் ஆகிய இவை ஸ்திரீயத்தியைச் செய்த பாதகத்தில் சேர்க்கும்.

பெண்களையும் பெரியோர்களையும் சாத்திரங்களையும் அவமதித்தல் அன்னத்தைப்பழித்தல் வெறுத்துப்பேசல் முதலிய குணத்தை உடையவரிடத்தில் மூதேவி குடிகொண்டு அவர்களை மிகக் கட்டப்படுத்துவள்.

வெளியிற் போகும்போது, மனைவிமக்களை மகிழ்ச்சியாக இருக்கச்செய்து, தெய்வம் புட்பம் இரத்தினம் பெரியோர் இவற்றிலொன்றைப் பூசித்துப் போகவேண்டும்.

மெலிந்தோருக்கு அனுகூலஞ் செய்தல், விகாதப்பட்டவரை சமாதானப் படுத்தல், அதிதிகளை உபசரித்தல், விருந்தினரைக்கொண்டாடல், சுதேசக்ஷேமத்தை அனுசரித்தல் பயந்தவர்களைத்தேற்றுதல், வித்தைவிவேகம்-நல்லொழுக்கம் நம்பிக்கை நயம்இவைகளையுடையவனாயிருத்தல், காமகுரோத லோபாதிகளுக்குட்படாதிருத்தல், மனமடக்கல் முதலியவைகளை எவனுடையவனோ அவன் மோட்சபதவியைச் சொந்தமாகக் கொள்ளுகிறான்.

வெளியிற் போகும்போது குடை-தடி-பாதரட்சை-உத்தரியம் முதலியவற்றோடு ஒருபுறமாய்-மெதுவாய் செம்படவன் வலைவீசிய அளவுக்குக் கவனித்துப் பார்த்துக்கொண்டுப் போகவேண்டும்.

இவ்வித ஆசாரங்களில் எவனொருவன் தவறுபடாதிருக்கின்றானோ அவன் இம்மைமறுமை யின்பத்தைக் கொள்ளுவதோடு கீர்த்தியும் புகழும்பெற்று, உலகிற் பிரசித்தனாகிறான்; ஆனதால், அவன் உலகிற்குத் தாய்தந்தை முதலிய பந்துவாகக் கொள்ளப்படுகிறான். ஆகையால், அத்தியாவசியம் ஒவ்வொருமனிதனும் இவ்விதிகளைக் கைக்கொள்ளவேண்டும்.

# வியாதி அனுகா விதி.

உலகில் தேகத்தைப் பெற்றபொழுதே பிணி பசி காமாதி துக்கங்கள் உளதாதலாலும், உண்பன அளவற்றகாலத்தில் கேடெய்துவித்தலாலும், ஒவ்வொருவரும் உண்பன உறுவனவைகளில் அளவுபட அனுட்டிக்கவேண்டும்; அந்த அளவைக் கிரமமாக வைத்தற்கென்றே ஆயுள்வேதம் தனுர்வேதம் முதலியவை ஏற்பட்டுள்ளன. அவற்றுள், அவிழ்தங்களைக்கொண்டும், சிலம்பம்மல்ல யுத்தாதி சாதனங்களைக்கொண்டும், அருந்தல் பொருந்தலாகிய வைகளைக் கொண்டும், அளவுபடுத்தலாம்; அவையளவுறப்பட்டிருப்பினும், முதற்கண் எளிதாக விளங்கப்படுவன அருந்தல் பொருந்தல்களே ஆனமையான், இங்ஙனம் அவற்றின் சிலமுக்கியவிதிகளைமாத்திரம் கூறுவாம்.

### வியாதியால்வரும் கேடு.

ஒருவனுக்கு வியாதி சம்பவித்தால் உடனே அவன் தேகம்கெடும். கெடவே, விந்துகெடும்; விந்துகெடவே சந்ததிகெடும்; அதனால் குடும்பக்காப்பு கெடும்; பின்னர்த்தொழில், ஆசாரம் முதலியவைகெட்டு, சோம்பல் வறுமை குடும்பக்கலகம் முதலிய அநேக இடையூறுண்டாய்ப் பாதைப்பட்டுப் பலவகையிலும் துக்கமாகும். ஆனதால், விவேகிகள் நோயில்லா வாழ்வைக் கைக்கொள்ள வேண்டும்.

### வியாதிவருவதற்குக் காரணம்.

முனிவர் சாபத்தாலும் முறையீடாலும் செய்கைத்தவறாலும் காலபேதத்தாலும் இடமாறுதலாலும் உண்டி தவறாலும் பிறர்மனதை வருத்துவதாலும் தேகத்தை வெறுப்பதாலும் பழவினைசம்பந்தத்தாலும் தாய்தந்தையர்களின் சம்போகத்தவறாலும் பெரியோர்களையும் மாதரையும் அவமதிப்பதாலும், ஓரம் பசலாலும் பாவமான காரியங்களைச் செய்வதாலும் தெய்வதூடணையாலும் பேயாலும், தருமகாரியங்களைக் கெடுத்தலாலும் இழிதொழிலாலுமே வியாதிசம்பவித்துத் தேகத்தையுங் குலத்தையும் கெடுக்கின்றதென்று கன்மகாண்டத்திலும் மிருதிகளிலும் கூறப்பட்டிருக்கின்றது. அது யாவருக்கும் மனப்பூர்வகமான பிரத்தியட்சந்தானே! இவற்றுள் தனது அருந்தல் பொருந்தல் முதலிய பாவமில்லாவழியிற் கிடைத்த வியாதிகளை அவிழ்தத்தாலும், இப்பிறப்பில் பாவசம்பந்தமாக உண்டாகும் வியாதிகளையும் செய்கையாதிகளாலுண்டாகும் வியாதிகளையும் ஆசாரம் அனுட்டானம் ஈசுரபத்தி பெரியோரைப்

விருத்தங்கள்:

"பாலுண்போ மெண்ணெய்பெறின் வெந்நீரிற் குளிப்போம்
பகற்புணரோம் பகற்றுயிலோம் பயோதரமு மூத்த
ஏலஞ்சேர் குழலியரோ டிளவெயிலும் விரும்போம்
இரண்டடக்கோ மொன்றைவிடோ மிடதுகையிற் படுப்போம்
மூலஞ்சேர் கறியுணோம் மூத்ததயி ருண்போம்
முதனாளிற் சமைத்தகறி யமுதெனினு மருந்தோம்
ஞாலத்தார் வந்திடினும் பசித்தொழிய வுண்ணோம்
நமனார்க்கிங் கேதுகவை நாமிருக்கு மிடத்தே.

எண்பதிரு பொழுதொழிய மூன்றுபொழு துண்ணோம்
உறங்குவதி ராவொழியப் பகலுறக்கஞ் செய்யோம்
மண்பரவு கிழங்குகளிற் கருணையன்றிப் புசியோம்
வாழையிளம் பிஞ்சொழியக் கனியருந்தல் செய்யோம்
பெண்கடமைத் திங்களுக்கோர் காலமன்றி மருவோம்
பெருந்தாகம் மெடுத்திடினும் பெயர்த்துநீ ரருந்தோம்
நண்பெறவே யுண்டபின்பு குறுநடையுங் கொள்வோம்
நமனார்க்கிங் கேதுகவை நாமிருக்கு மிடத்தே.

ஆறுதிங்கட் கொருதடவை வமனமருந் தயில்வோம்
அடர்நான்கு மதிக்கொருகாற் பேதியுரை நுகர்வோம்
தேறுமதி யொன்றரைக்கோர் தரநசியம் பெறுவோம்
திங்களரைக் கிரண்டுதரஞ் சவளம் விருப் புறுவோம்
வீறுசதுர் நாட்கொருகா னெய்முழுக்கை தவிரோம்
விழிகளுக்கஞ் சனமூன்று நாட்கொருகா லிடுவோம்
நாறுகந்தம் புட்பமிவை நடுநிசியின் முகரோம்
நமனார்க்கிங் கேதுகவை நாமிருக்கு மிடத்தே.

பகத்தொழுக்கு மாதரசங் கரந்துடப்ப மிவைநாட்
படநெருங்கோர் தீபமைந்தர் மரனிழலில் வசியோம்
சுகபுணர்ச்சி யசனபச னத்தருணஞ் செய்யோம்
துஞ்சலுணா விருமலஞ்சை யோகமுழுக் காடை
வகுப்பெடுக்கிற் சிந்துகச மிவைமாலை விடுப்போம்
வற்சலந்தெய் வம்பிதுர்ச்சற் குருவைவிட மாட்டோம்
நகச்சலமு முளைச்சலமுந் தெறிக்குமிட மணுகோம்
நமனார்க்கிங் கேதுகவை நாமிருக்கு மிடத்தே.

நேரிசை வெண்பா.

" திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காம—லுண்ணுங்கா
னீர்சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி."

பசம்பாலையே யுண்பதன்றி மேதிப்பாலை கனவிலும் நினை போம். எண்ணெய் இட்டுக்கொள்ளில், வெந்நீரில் ஸ்நானம் செய் வோம் இரதிக்கொப்பாகிய இளம்பருவ மின்னார்கள் இலவசத் தில் இசைந்தாலும் பகலில் புணர்ச்சி செய்யமாட்டோம் பகலில் நித்திரையும் செய்யமாட்டோம். தன்வயதுக்கு மேற்பட்ட மாத ரையும் இளவெய்யிலையும் இச்சிக்கமாட்டோம். மலஜலங்களை அட க்கமாட்டோம். இந்திரியத்தை அதிகமாக விடுக்கமாட்டோம். எப்பொழுதும் இடது கையைக் கீழாகவைத்து படுப்போம். கிழங்குசேர்த்துச்சமைத்த பதார்த்தங்களை அதிகமாகபுசிக்கமாட் டோம். அமுதத்திற் கொப்பாயிருந்தாலும் முன்னாளில் சமைத்த கறியைப் புசிக்க மாட்டோம். பசித்தாலல்லது சாப்பிடமாட் டோம்.

ஒருதினத்திற்கு இரண்டு முறையேயன்றி மூன்றுமுறைபுசிக்க மாட்டோம். புசித்தவுடன் நித்திரை செய்வது நன்மையென்று சயனசாத்திரத்தில் சொல்லியிருந்தாலும் அப்படி பகலில் நித்தி ரை செய்யமாட்டோம். பெண்களை மாதத்திற்கு ஒரேமுறை புணர் வோம். மிகுந்த தாகமாயினும் போசனம்செய்த முடிவில்தான் சல மருந்துவோம். கருணைக்கிழங்கு தவிர மற்ற கிழங்குகளைப் புசி போம். வாழையின் இளங்கச்சலொழிய முற்றியகாயையும் பழத் தையும் தின்னமாட்டோம். அன்னம் புசித்தவுடன் ஒருநடையாக அரையே அரிக்கால்நாழிகை உலாவினாலொழிய எத்தொழிற்கும் புகமாட்டோம்,

ஆறு மாதத்திற் கொருமுறை வாந்திமருந்துண்போம். ஒன்ற ரைமாதத்திற் கொருமுறை மூக்கில் நசியம்செய்துகொள்வோம். மாதத்திற்கு நான்குமுறை சவரஞ்செய்துக்கொள்ளுவோம். நான் குதினத்திற்கொருமுறை அப்பியங்கஸ்நானம்செய்வோம். மூன்று நாட்கொருமுறை கண்களுக்கு மையிட்டுக்கொள்வோம். கஸ்தூரி முதலிய வாசனைத்திரவியங்களையும் புட்பங்களையும் நடுராத்திரியில் முகரமாட்டோம்,

பூப்பான ஸ்திரீ நடக்கும்போது பறக்கும்தூசியும், ஆடு கழு தை துடைப்பம் இவைகளாலுண்டாகும் தூசியும் மேலே படும்படி நெருங்கமாட்டோம். இரவில் தீபநிழலிலும் மனிதர் நிழலிலும் விருட்சநிழலிலும் தங்கமாட்டோம் போசனம் சீரணமான பிறகு தான் புணர்ச்சிசெய்வோம். மலசலம் அழுக்காடை சீப்பிட்டுவா ரிய அழுக்கு இவைகளை மாலைக்காலத்தில் நீக்குவோம். தன்னலா தரிக்கும் பசுவையும், தெய்வத்தையும், பிதுர்களையும், ஆசாரிய




ரையும், மாலைக்காலத்தில் பூசிப்போம். நகச் சலமும் சிகைச் சலமும் தெரிக்குமிடத்தில் நெருங்கோம். ஆதலால், நோயையுங் குறிப்பிட்டுப்பின்னால் தொடரும் எமனுக்கு நாமிருக்குமிடத்தில் என்னவேலை யிருக்கிறது? ஒன்றுமில்லையே. என்பதாம் மேற்காட்டிய தேரையர் செய்யுளுக்கு கருத்து.

'மலசலத்தை அடக்காமலும் விந்துவை அதிகமாக விடாமலும் உண்ணுமிடத்து நீரைக்காய்ச்சி மோரைவிளாவி நெய்யை உருக்கி உண்ணலும் ஆகிய இத்தன்மையுள்ளவர்களின் நாமத்தை உச்சரித்தாலுமே பிணிவிலகும்' என்று கூறியிருக்கின்றபடி எமனுக்கு நம்மைப்பற்றிய வேலையின்றி திருவருள் சகாயத்தையடைவோம். இது வேதாதிகள் சம்மதமான பிரமாணம். இவ்வரியவிஷயங்களைத் தவறாகக்கொள்ளுவோர் நரகவேதனை அடைவரென்பதை நாம் கூறவேண்டியது அநாவசியமாம்.

அன்றி, இவ்விதி தேகோற்பவம்முதல் மரணாந்தமாயுள்ள நோய் நோயினிலக்கணம்முதலியவற்றை இங்கே கூறவேண்டுவது அநாவசியமும் அளப்பரியசாத்திர வாசமும் ஆதலால், அதைநிறுத்திப் பரமசாதனமாயுள்ள பிரேதசன்ம மடைவாரைப்பற்றிக் கூறத்தொடங்குகின்றேம்.

## பிரேதசன்ம மடைவோர்.

பூர்வசன்மத்தில் மாபாவம் செய்தவனே பிரேத சன்மம் அடைவான். ஒருவன் கிணறும், நடைவாவியும், குளமும், பூஞ்சோலையும், தண்ணீர்ப்பந்தலும், சத்திரமும், தேவாலயமும் உண்டாக்கிப் பலருக்கும் உபயோகமாய்த் தருமம்செய்ய, அவனுடைய குலத்தில்தோன்றிய ஒருவன் பின்பு அவற்றை விலைக்கு விற்பானாயின் அவன் மரித்தவுடனே பிரேதசன்மம் அடைவன்; செய்தவன்தானே அவற்றை விற்பானேனும் அவனும் பிரேதசன்மம் பெறுவான்.

பிறர்பூமியை அபகரித்தவனும், கிராமத்தின் எல்லையையும் பூங்காவின் எல்லையையும் ஆரணியத்தின் எல்லையையும் மாற்றித் தன்னிலத்தோடு சேர்த்துக்கொண்டவனும், குளத்தைத் தூர்த்து நிலம் சேர்த்தவனும், சண்டாளனால் அடிபட்டிறந்தவனும், சலத்தில் மாய்ந்தவனும், பாம்பேனும் நாயேனும்கடித்து மரித்தவனும் இடிவிழுந்து மாண்டவனும், நெருப்பில்துஞ்சினவனும், மாடுமுட்டிமரித்தவனும், கழுத்தில் சுருக்கிட்டு நான்றுமாண்டவனும், விடம்தின்று உயிர்துறந்தவனும் ஆயுதத்தால் மாய்ந்தவனும், சமத்

காரியஞ்செய்யத் தன்குலத்தில் ஒருவனும் இல்லாமல் இறந்தவனும், தேசாந்திரங்களில் ஒருவனும் அறியாமல் துஞ்சினவனும், குஷ்டம் முதலிய ரோகங்களால் இறந்தவனும், திருடனால் மாய்ந்தவனும், விருஷோற்சர்க்கம் செய்யாமல் மாண்டவனும், தாய்தந்தையருக்குச் சிராத்தம் செய்யாமலிருந்து இறந்தவனும் பிரேத சன்மம் அடைவர்.

இறந்த பிராமணனுடைய சமஸ்காரத்தின்பொருட்டு நெருப்பு விரட்டிவைக்கோல் அரிசி முதலியவற்றைச் சுடுகாட்டுக்குச் சூத்திரன்கொண்டு செல்வனேல், இறந்த அப்பிராமணனும் கொண்டு போகும் அச்சூத்திரனும் பிரேதசன்மமடைவார். இறந்த சூத்திரனுடைய சமஸ்காரத்தின்பொருட்டு மேற்சொல்லிய நெருப்புமுதலியவற்றைப் பிராமணன்கொண்டு செல்வானேல், இறந்த அச்சூத்திரனுங் கொண்டுபோகும் அப்பிராமணனும் பிரேத சன்மமடைவர்.

பருவதத்தினின்று விழுந்துமரித்தவனும், சுவரிடிந்துவிழுந்து இறந்தவனும், கட்டிலிலே படுத்திருந்தபடியே துஞ்சினவனும், மேல்வீட்டில் உயிர்நீத்தவனும், இராமகிருட்டிணாதித் திருநாமங்களை உச்சரியாமல் மாய்ந்தவனும் தூரப்பெண் சண்டாளன் முதலியோரைத்தீண்டி ஸ்நானஞ்செய்யாமல் சூதகத்தில் இறந்தவனும், பூப்பாயிருக்கும்போது மரித்தவளும், பிரேதசன்மமடைவர்,

தாய் மனைவி பெண் மருமகள் முதலானவர்களுடைய சரீர தோஷத்தைக் கண்ணுற்பாராமலே பிறர்வார்த்தையைக் கேட்டு அவர்களைச்சாதியினீக்கியவனும் மனுநூலுக்கு விரோதமாய் நிர்மாணஞ்செய்தவனும் சிநேகிதனுக்குத்துரோகஞ் செய்தவனும், பிராமணனையும் பசுக்களையும் கொல்பவனும் கட்குடித்தவனும், குருபத்தினியை கூடுபவனும், வெண்பட்டையும் பொன்னையும் திருடினவனும், பிரேதசன்மமடைவர். பிரேதசன்மம் அடைந்தவரெல்லாரும் பாலைவனத்தில் எப்போதும் சஞ்சரித்து வருந்துவர்.

மரிக்குங்காலத்தில், சீவனைக்கவருவதற்கு காலன் நியமிக்கப்பட்டிருக்கிறான். சீவரது பலவிதமான தோஷங்களால் அச்சீவர் ஆயுட்குறைந்து மாய்கின்றனர், மரித்தவீட்டில் போசனஞ் செய்கின்றவனும் பிறன்மனைவியரைப்புணர இச்சிக்கின்றவனும், தனக்குத் தகாத இழிதொழிலைப் புரிகின்றவனும், வாணாளழிப்பவனும் இகபரத்திற்கு உறுதியாய் நல்வினை செய்யாதவனும், பெரியோர்களைப் பூசியாதவனும், தூய்மையில்லாதவனும், தெய்வபக்

தியின்லாதவனும், பாவங்களையே செய்கின்றவனும் எமலோகத்தில் எப்போதும் நரகவாசஞ்செய்வர்.

பிறன்கேடு சூழ்கின்றவனும், பொய் சொல்லுகின்றவனும், சிவகருணையில்லாதவனும், சாத்திரப்படி நடவாதவனும், தனக்குரிய கருமத்தைத் தவிர்த்துப் பிறனுக்குரிய கருமத்தைப் புரிகின்றவனும் எமலோகத்தில் வாதனைப்படுவர்.

புண்ணியதீர்த்த மாடாதநாளும், செபஓமங்கள் செய்யாத திவசமும் தேவதாராதனம் செய்யாததினமும், புனிதரை வழிபாடியற்றாத பகலும், சாத்திரமுணராத நாளும் வீணாளேயாகும்.

## தேகநிலையும் புண்ணியச்செய்கையும்

தேகமோ நிலைஅற்றது, நிராதரமாயுள்ளது, சுக்கிலசோணிதங்களால் உண்டாகியது, அன்னபானாதிகளால் விருத்தியடைவது, காலையில் உண்ட அன்னம் சாயங்காலம் நசிக்கும், உடனே பசிக்கும்; மீண்டும் உண்ணாவிடின், மெய் குலையும், ஆதலால், சரீரம் அநித்தியமென்றும், அது கருமத்தால் வருவதென்றும் எண்ணி அது மேன்மையடையும்பொருட்டு நற்கருமம்செய்தல்வேண்டும்.

கருமத்தால் வந்ததேகத்தை யாருடையதென்லாம்? அதனை வினைசுமந்து மெலிகின்ற சீவனது எனலாமா? அன்னவத்திரங் கொடுக்கும் தலைவனது என்னலாமா? கருப்பமுண்டுபண்ணும் தந்தையினது என்னலாமா? பத்துமாதஞ் சுமந்து பெற்றதாயினது என்னலாமா? தாயைப்பெற்றவனாகிய மாதாமகனது என்னலாமா? பிதாமகனது என்னலாமா? விலைகொடுத்து அடிமைகொண்டவனது என்னலாமா? சாம்பர்செய்யும் அக்கினியினது என்னலாமா? அல்லது ஈர்த்து அயிலும் நரியினது என்னலாமா? சீவன் போயினபின்பு புழுவாகவும் விட்டையாகவும் சாம்பராகவும் அழியும் சரீரம் ஒருவரதும் அன்று என்றும் முற்றுறுதியை யாவரும் ஓர்ந்து சரீரத்தில் ஆசைவைக்காமல் பகவத்பாகவதாசாரியரைக் கரியங்களைப் புரிதல்வேண்டும்.

பாவங்கள் மனோவாக்குக்காயங்களால் செய்யப்படுகின்றன. அதிகபாவஞ்செய்தசீவன், நாய் நரிமுதலிய இழிந்த சன்மமடையும், அதிகஞ்செய்யாதவன், பூர்வசன்மமே பெறுவான். சீவன்கருப்பவாசஞ் செய்யுங்காலை, தாயினுடைய ... த்திராதிகளாலே அதிகம் துன்புறுவான். இறத்தலினும் பிற...வில் உளதாய துன்

பத்தையும் கருமகதிலையையும் எண்ணி நல்லாற்றில் ஒழுகுதல்வேண்டும். தாய் வயிற்றினின்று பிறந்தவன் பாலியத்தில் பேதைமையால் தனக்கு உறுதியாயதை அறிகின்றானிலன், யௌவனத்தில் மன்மதசேஷ்டையால் அறிகின்றானிலன். முதுமைப்பருவத்தில் சோர்வாலும் கிலேசத்தாலும் ஒன்றனையும் உணர்கின்றானிலன். இவ்வளமே உறுதியுணராமல் ஒழிவோரே பலருளர்.

கருமத்தாலேயே சீவன்பிறந்து இறக்கின்றான். பிறந்து அதிகவயதிராமல் ஐந்துவருடத்திற்குள் மரித்தல் மாபாபத்தினாலென்றறிக. கொடும்பாபம் செய்தவனேபிறந்து உடனேமரித்து மீண்டும் பிறந்துமரிக்கின்றான். அவன் பிறக்கலுக்கும் இறத்தலுக்கும் கணக்கில்லை. பூர்வசன்மத்தில் நன்னெறியில் ஒழுகித் தானதருமங்கள் செய்தசேதனன் புவியில்தோன்றினால், நெடுங்காலம் மனைவி மக்களோடு சுகமாகவாழ்ந்து இறுதியில் நல்லுலகடைவான்.

## ஆன்னிகம்.

### இலௌகிக சிந்தனை.

புத்திசாலியானவன் பிராமமுகூர்த்தத்தில் விழித்து எழுந்திருந்து மனதினாலே தருமத்தையும் அதனோடு விரோதப்படாத அருத்தத்தையும் சிந்திக்கவேண்டும் இவ்விரண்டிற்கும் யாதொரு விரோதமு முண்டாக்காத காமத்தையுஞ்சிந்திக்கலாம். இவற்றையிப்படிச் சிந்திப்பதினாலே இம்மைமறுமைகளின் பிரயோசனம் கெடாமலிருக்கும் தருமவிரோதிகளான அர்த்தகாமங்களை விடவேண்டும். தருமமானாலும் பின்பு சுகத்தையுண்டாக்க மாட்டாததாயும் உலோகவிரோதமாயு மிருக்குமானால் அதையும் விடவேண்டும்.

### காலைக்கடன்.

இப்படி சிந்தித்தெழுந்தபின், தன்னிடத்திற்கு நிருதிமூலையிலே அம்புபாயுமவ்வளதூரத்திற்கு அப்புறமேபோய்ச் சலமலாதிகளை விடவேண்டும். வீட்டினிடத்தில் கால்கழுவுதல் முதலானவர்களுக்கு எதிரிலிருந்து மலமூத்திரங்களை விடலாகாது. உழுதநிலத்திலும்-பயிர்நடுவிலும்-பசுக்களிருக்குமிடத்திலும் -சனசமூகத்திலும்-வழியிலும்-ஆறுமுதலானவற்றின் கரைகளிலும், தண்ணீரிலும்-மயானத்திலும்-மலமூத்திரங்களை விடலாகாது. அன்றி, எக்கியோபவித்திரத்தைக் காதில் சுற்றிக்கொண்டு வத்திரத்தினால் தலையை மூடிக்கொண்டு பகலில் வடக்குமுகமாயும் இரவில் தெற்குமுகமாயுமிருந்து மலசலம் விடவேண்டும்.

இப்படிச்செய்ய சங்கடமிருக்குமாயின், தகுந்தபடி செய்யு லாம். அந்த இடங்களில் நெடும்பேரதிராமனும், ஒன்றும்பேசாமு லும், காரியந் தீர்ந்தவுடனே செத்தைகளினாலே அவ்விடத்தை மறைத்து வரவேண்டும். பின்பு மண்ணினால் அசுத்தத்தின் நாற் றம் ஒழியும்படியானவிதஞ் செய்தல்வேண்டும்.

பின்னர், சுத்தமாயும் அசுத்தபண்டங்களின் சம்பந்தமில்லாத தாய்க்குமிழிகிளம்பாததாயுமுள்ள சலத்தினாலே மும்முறை ஆச மனஞ்செய்து வாய்துடைத்தல், சிரசில் புரோட்சித்தல், இருதய முதலான அங்கங்களைத் தொடுதல் முதலிய செய்கைகளை விதிப் படிசெய்து, பின்பு அகமர்ஷண சூத்தமுதலான மந்திரங்களை உச் சரித்துக்கொண்டே நீராடிச் சந்தியாவந்தனமுதலான கிரியைகளை விதிப்படி அனுட்டிக்கவேண்டும்.

பின்பு மயிராற்றிக்கொண்டு அலங்கரித்தல்முதலான மங்கள வியாபாரங்களைச் செய்துகொண்டு தனக்கு விதிக்கிறவகையாய்த் திரவிய சமாதானஞ்செய்யவேண்டும். சோமசம்ஸதைகள் அவிஸ் சம்ஸதைகள் பாகசம்ஸதைகள் என்று சொல்லப்பட்ட யாகங்க ளெல்லாம் திரவியங்களைக்கொண்டே சாதிக்க வேண்டியதாகை யால் பிராமணன் தனத்தை சம்பாதிக்க வேண்டும். நியாய வழியினாலே தனத்தைச் சம்பாதிக்கும் முயற்சிசெய்துக்கொண்டு மத்தியானமானவுடனே மறுபடி நீராடவேண்டும். அப்படி நீராடு ம்போது, நதிகள் குளங்கள் தேவதாதீர்த்தங்கள் இப்படிப்பட்ட சலங்களிலே நீராடவேண்டும். இவை கிடையாமற்போனால், கிண ற்றிலிருந்து தண்ணீரை எடுத்துக் கொண்டாகிலும், அதற்கும் கூடாதபோது ஒரு பாத்திரத்திற் கொண்டுவந்தாகிலும் நீராட லாம். இப்படி நீராடினபின், பரிசுத்தமான வத்திரமுதலானவை களைத் தரித்துக்கொண்டு தேவதைகளுக்கும் இருடிகளுக்கும் பிது ரர்களுக்கும் அவரவர் தீர்த்தத்தினாலே விதிப்படியே தருப்பணம் செய்யவேண்டும்.

பிதுர் தர்ப்பணம்.

பிதுரர்-பிதாமகர்-பிரபிதாமகர்-மாதாமகர்-மாதுருபிதாமகர் மாதுரு பிறபிதாமகர் என்னும் இவர்களுக்கும் தருப்பணஞ்செ ய்யவேண்டும். விருப்பம் இருந்தால், தாய்-குருபத்தினி - பாட்டி- குரு-அம்மான் முதலானவர்கள் இஷ்டன் அரசன் இவர்களுக்குத் திருத்தியுண்டாகும்படி தருப்பணஞ்செய்யலாம். அப்போது ஜே பிக்கவேண்டிய தென்னெனில்,

சிந்தனை. தேவ-அசுர-யட்ச-நாக-கந்திருவ-ராட்சச-பிசாசகுஹ ய்ய-சித்தகூச்மாண்ட விருக்ஷாதிகளும், சலம்-பூமி-காற்று இவை

களைப்பற்றிய செந்துக்களும் என்னால் கொடுக்கப்படும் இந்தத் தண்ணீரால் திருத்தி அடையவேண்டும்.

நரகங்களில் பல வாதனைகளிலிருக்கிறவர்களுக்கும் சோர்வு நீங்கும்பொருட்டு இத்தண்ணீரை யான் இப்போது விடுகிறேன்.

"எனக்குப் பந்துக்களாயிருப்பவர்களுக்கும்-பந்துவாகாதவர்களுக்கும் - சன்மாந்தரத்தில் பந்துக்களா யிருந்தவர்களுக்கும் உயிர்களுக்கும் நான்விடுகிறேன். இந்த எள்ளுந்தண்ணீரும் சந்தோஷகரத்தோடு திருத்தியுண்டாக்கக் கடவன" என்றுசொல்லி திரிலே தருப்பணஞ் செய்யவேண்டும்.

சூரியார்க்கம்.

இப்படி தருப்பணஞ்செய்வதனால் சகல உலோகத்துக்கும் பிரீதியுண்டாகும். அதனால் மகா புண்ணியங்கிடைக்கும். இப்படி மனசாட்சியில்சந்தோஷகரத்தோடு சிரத்தையுடனே காமியதருப்பணஞ்செய்து, பின்பு மத்தியான்னகஞ்செய்து சூரியபகவானை நின்று சூரியனை நோக்கி,

சிந்தனை. "வேதங்களினாலே பிரகாசித்துக்கொண்டு உலோக சிருட்டி கருத்தாவாய், மகாசுத்தியுள்ளவராய், கன்மசாட்சியாய் ஸ்ரீவிஷ்ணு தேசோமயமாய் விளங்குகிற சூரியபகவானுக்கு நமஸ்காரம்." என்று சொல்லிச் சூரியார்க்கியம் விடவேண்டும்.

வைசுவதேவ பூதபலி.

பின்பு தனது கிரகத்திலிருக்கிற தேவதாவிம்பத்திற்குத் திருமஞ்சனம் கந்தபுட்ப தீபதூபாதிகள் நைவேத்தியம் முதலானஉபசாரங்களால் ஆராதனைசெய்யவேண்டும். இப்படி தேவாராதனம் செய்தபின்பு பிரமாகுதிமுதலான வைசுவதேவஞ்செய்து கிரகங்கள் காசிபர் அனுமதிகளுக்கு அன்னபலி யிட்டு அதன் மிகுதியை பிருத்துவீபற்கனியர்களுக்காக ஒளபாசன சமீபத்திலிடவேண்டியது. பின்பு கிருகத்தின் துவாரத்தில் தாதாவிதாதாக்களுக்கும் நடுவில் பிரமாவுக்கும் நான்குதிசைகளில் இந்திரன், எமன், வருணன், சந்திரன் என்னும் நான்கு திசைத்தேவர்களுக்கும், சகல திசைகளிலும் வாயுவுக்கும், பிரமா சூரியன் இவர்களுக்கும், வடகிழக்கில் தன்வந்திரிக்கும் அன்னபலி இடவேண்டும்.

அதன்பின் அன்னத்தையெடுத்து இருதயநிலமையோடு சுத்தமான பூமியிலே சகலமான பூதங்களுக்காகப்போட்டு இப்படிச் சொல்லவேண்டும்.

சிந்தனை.

தேவதைகள்-மனிதர்கள்-மிருகங்கள்-பறவைகள்-சித்தர்-யட்சர்-நாகர்-தயித்தியர்-பிரேதங்கள்-மரங்கள்-எறும்புகள்-பூச்சிகள்-புழுக்கள் முதலான சர்வபிராணிகளுள்ளும் யார் என்னுலே கொடுக்கப்படும் அன்னத்தை இச்சிக்கிறார்களோ அவர்களுக்கும், எவர்களுக்குத் தாய் தந்தை சுற்றத்தார் யாருமில்லாமலும் அன்னங் கிடையாமலு மிருக்கிறதோ அவர்களுக்கும் இதோ இவ்விடத்தில் அன்னத்தைக் கொடுக்கிறேன். இதனுல் அவர்கள் திருத்தியடைந்து சுகசந்தோடத்தோடு யிருக்கக்கடவார்.

சகல பூதங்களும் நானும் இந்த அன்னமும் மற்ற எல்லாம் ஈசுவரரூபமேயல்லாது வேறல்லாமையாலே, சகலபூதங்களுக்கும் சரீரமான இந்த அன்னத்தை அவர்கள் சவுக்கியத்திற்காக இங்கே இடுகிறேன்; இது எல்லாவற்றிற்குந் திருத்தியாகக் கடவது.

எட்டுவிதமான தேவகணங்களும் ஒருவிதமான மனுஷியகணமும் ஐந்துவிதமான திரியக்கு கணமுமான பதினன்கு பூதகணங்களிலுஞ் சேர்ந்த சகல பிராணிகளுக்கும் திருத்திக்காக இந்த அன்னத்தை இங்கே இடுகிறேன்; இதனுல் அவர்களெல்லாஞ் சந்தோடமடையக்கடவர்.'' என்று சொல்லித் தரையில் அன்னத்தை இடவேண்டும்.

இப்பால், நாய்-சண்டாளர்-பட்சி இவைகளுக்காகவும் பதிதர்களானுலும் புத்திரனில்லாம லிருக்கிறவர் யாருண்டோ அவர்களுக்காகவும் நிலத்தில் அன்னத்தைப் போடவேண்டும்.

அதிதிகளை உபசரிக்கை.

இப்படியெல்லாஞ் செய்தபின் நாலுநாழிகையாவது மேலாவது அதிதிகளுக்காக எதிர்பார்த்திருந்து அதிதிகளை நல்வரவுவினுவுதல் முதலானவைகளினுலேயும் காலலம்பத்தண்ணீர் கொடுப்பதினுலேயும் ஆசனங்கொடுத்து உட்காரவைப்பதினுலேயும் அன்போடு அன்னமிடுவதனுலேயும் அவர்கள் கேட்டகேள்விகளுக்கு பதில் சொல்லுவதனுலேயும் போகும்போது பின்சென்று வழிவிடுவதனுலேயும் சந்தோடப்படுத்த வேண்டும்.

போசனஞ் செய்யுமுறை.

குலமும் பெயருந் தெரியாதவனுய் வேரிடத்திலிருந்து வந்தவனுய் நியதமாயோரூரிலே வாசஞ்செய்தவனுயி நக்கிற அதிதியை நன்றாய்ப்பூசிக்கவேண்டும். அன்னியதேசத்தி லிருந்து வந்தவனு

ப்த் தனக்கு யாதோர் உறவுமில்லாதவனைத் தருத்திரனயிருப்ப வனுக்கு போசனம் ஊட்டாமல் தானேசாப்பிடுகிறவன் நரக மடைவான்.

இப்படியாகவந்த அதிதிகளை குலகோத்திரசாகாதிகளை விசா ரிக்காமல் விசாரியாமல் சதுர்முகனைப்போலப் பாவித்துப் பூசிக்க வேண்டும். மேலும், சுதேசியாய்ப் பஞ்சயக்கிய பாராயணனும்க் குலகோத்திர, ஆசாரங்களிலே தனக்கு நன்றாய்த் தெரிந்தவனு மிருக்கின்ற ஒருவனேயாகிலும் பிதுரர்களுக்காகச் சந்தோடமா ய்ப் போசனஞ் செய்விக்கவேண்டும்.

சந்நியாசி பிரமசாரிகளுக்கும் மும்மூன்று கவளங்களுக்குக் குறையாமல் சாதிக்கவேண்டும்; விபவமிருந்தால் தடையில்லாமல் எவ்வளவாகிலும் யாவருக்கும் வேண்டியமட்டும் கொடுக்கலாம். இப்படியாக முன் சொன்னவர்களுள்ளாக நான்கு வகைப்பட்ட அதிதிகளையும் பூசிக்கிறவன் அதிகடினமான பாதகங்களினின்றும் நீங்குவான்; அதிதியானவன் எவன் கிருகத்துக்குவந்து தன்னு சை முறிந்துபோகிறானே அந்தக்கிரகத்தனுடைய புண்ணியங்களை யெல்லாம் அவ்வதிதி எடுத்துக்கொண்டு தன்பாவங்களை அவனு க்கு கொடுத்துவிட்டுப் போகிறான்.

தாதாவும்-பிரமனும்-இந்திரனும்-வசுக்களும்-அக்கினியும்-சூரி யனும் ஆகிய இவர்கள் அதிதியினிடத்திற் பிரவேசித்து கிரகத் தன் கொடுக்கின்ற அன்னத்தைப் புசிக்கிறார்கள்; ஆதலாலே, அதி திபூசைசெய்ய முயலவேண்டும்.

எவன் அதிதியைவிட்டு உண்கிறானே அவன் அன்னத்தை புண்கிறானில்லை, மற்றுப் பாவத்தையே உண்கிறான்.

பின்பு புத்தகம்போந்த கன்னிகளையும் கருப்பவதியையும் கிழவர்களையும் பாலகரையும் முந்திப்புசிக்கும்படிசெய்து பிந்தி யே தான்புசிக்கவேண்டும். இவர்களெல்லாம் உண்ணுமலிருக்க, தான் முந்தி உண்பானாயின் இங்கே பாவத்தையேயுண்டு மரண மடைந்தபின் நரகத்துக்குப்போய்ச் சிலேத்துமத்தை யுண்பான்.

நீராடாமல் உண்பவன் மலத்தையுண்கிறான்; செபஞ்செய்யா மல் உண்கிறவன் சீரத்தங்களை உண்கிறான்;வைசுவதேவாதி சுத்தி யில்லாமலுண்கிறவன் மூத்திரத்தை யுண்கிறான்; பாலர்முதல் உண்ணுமுன் உண்கிறவன் மிருகமலத்தையுண்கிறான்; ஓமஞ்செய் யாமற்புசிக்கிறவன் கிரிமிகளைப்புசிக்கிறான். அதிதிகளுக்குக் கொ டாமற்புசிக்கிறவன் விடத்தைப் புசிக்கிறான்.

ஒற்றைவஸ்திரமுள்ளவனாகவும் ஈரமான கைகாலில்லாதவனாகவும் புசிக்கலாகாது; சுத்தியுள்ளவனாகவும் சந்தோஷமுடையவனாகவுமிருந்து புசிக்கவேண்டும்; கிழக்கு முகமாகவாகிலும் வடக்குமுகமாகவாகிலும் இருந்துபுசிக்கவேண்டும்; மூலைக்கெதிராகப் புசிப்பதும் மண்கலையோடு புசிப்பதுங்கூடாது. மேலும் சிறந்ததும் இதமானதுமான அன்னத்தையே சுத்த தீர்த்தத்தினாலே புரோட்சித்துப் புசிக்கவேண்டும்.

அங்கவீனர் வியாதிபிடித்தவர் முதலானவர் கொண்டுவந்ததும், அருவருப்பாயிருப்பதும், நன்றாய்ச் சாம்பாரஞ் சேர்த்துப் பாகஞ்செய்யப்படாததுமான அன்னத்தைப் புசிக்கலாகாது.

முக்காலி நாற்காலி முதலானவைகளின்மேல் வைத்திருக்கும் பாத்திரங்களிலேயும் அசுத்தமான தேகங்களிலேயும் சந்தி முதலான காலங்களிலேயும் நானாவித சனங்கள்சேர்ந்த சங்கத்திலேயும் போசனஞ் செய்யலாகாது.

அக்கினிக்கும் பசித்திருக்கிறவர்களுக்கும் யோக்கியர்களுக்கும் இட்டுக்கோபதபாதிகளில்லாதவனாகிச் சிறந்ததும் சுத்தமுமான பாத்திரத்திலே பழையதல்லாத யோக்கியமான அன்னத்தை மந்திரங்களாலே மந்திரித்துப் போசனஞ்செய்யவேண்டும்.

கனிகள் கிழங்குகள் வற்றல்கள் நெல்லி வடகமுதலான வடகங்கள் இலட்டுமுதலான பணியாரங்கள் தவிர, மற்றைப்பழைய உணவுகளையும் சாரமற்ற உணவுகளையும் ஒருபோதிலும் உண்ணலாகாது. மேலும், விவேகமுள்ளவன் தேனைத்தவிர, உண்டு மிகுந்த மற்றவைகளையு முண்ணலாகாது.

உண்ணும்போது மதுரமானவைகளை முதலிலும், புளிப்பு உப்புகளை இடையிலும், கைப்புகாரமுதலானவைகளைக் கடையிலும் உண்ணவேண்டும். அன்றி, முன்னே நீர்வகைகளையும் புசிக்கவேண்டும். இப்படி யுண்பதினாலே பலமும் ஆரோக்கியமும் குறையமாட்டா. போசனாரம்பத்தில் அன்னத்தை நிந்தை செய்யாமலும் மவுனத்தோடு பிராணாதி ஐந்தாகுதிகளை மிகுநியமமாய்ச் செய்யவேண்டும். இவ்விதமாக நன்றாய்ச்சாப்பிட்டுக் கைகால்களை அடிவரையிலும் நன்றாய்ச் சுத்திசெய்துகொண்டு, மறுபடி ஆசமனஞ்செய்து, சொஸ்தமும் சாந்தமுமான மனதோடு கிழக்குமுகமாய் ஆசனத்தின்மேலுட்கார்ந்து இட்டதேவதைகளைச் சிந்திக்கவேண்டும். அன்றியும், "அக்கினியானது காற்றினாலே வளர்க்கப்பட்டு ஆகாசத்தினால் இடங்கொடுக்கப்பெற்று, அன்னத்தைச்

ரணஞ்செய்து என்தேகத்தை திருத்தி படுத்த அதனல் எனக்குச் சுகமுண்டாகக்கடவது. அன்னமானது ரணித்து என் உடற்கூறன பிருதிவி அப்பு தேயு வாயுவுக்கு பலமுண்டாக்க அதனலே எனக்குக் குறைவற்ற சுகமுண்டாகக்கடவது. இவ்வன்னமானது என்னுடைய பிராணம்-அபானம்-வியானம் - உத்தானம் - மானம் என்னும் பஞ்சப்பிராணனுக்கும் புட்டியுண்டாக்க எனக்கு இடையூறில்லாத சுகமுண்டாகக்கடவது. உதராக்கினியும் வடவாக்கினியும் நான் உண்ட அன்னத்தையெல்லாஞ் ரணஞ்செய்து அவ்வன்னத்தின் திரிவினுண்டான சுகத்தை யெனக்கு உண்டாக்கக்கடவது. ஸ்ரீவிஷ்ணு ஒருவரே சகல இந்திரியர்களுக்குந் தேகங்களுக்கும் ஆத்துமாவாகி ஞானசத்திபத ஐசுவரிய வீரியதேசசென்னும் சத்தி உண்டோ அந்தச்சத்தியனுலே நான் உண்ட அன்னமானது எனக்கு ஆரோக்கிய முண்டாகும்படி ரணமாகக்கடவது'' என்று உச்சரித்து வயிற்றைத் தடவிப்பின் எழுந்திருந்து ஆயாசமுண்டாக்கமாட்டாத காரியங்களைச் சோம்பலின்றிச் செய்யலாம்.

---

## சிராத்த விதி.

### சூசனம்.

ஒவ்வொருவரும் உலகிற் பிறக்கும்போதே தீட்டிருத்தலாலும், பின்னர்ப் பிறந்தோருக்கும் மனைமகவாதிய பந்தங்களின் சனனமரண துக்கங்களுடன்பா டிருப்பதாலும், அயுபந்து சனசகிதமாகப் புண்ணிய பாவங்களுக்கேற்ற நரகமோட்ச சங்கற்ப முண்டாதலாலும், ஆன்றோரால்,

> ''புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக்க மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
> வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
> செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
> எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்''

> ''இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ
> யாதுவரு மோவறிகிலேன்''

எனக் கூறியுள்ளமையில் பிறவிகளுள்ளதென்றும் அப்பிறவிகள் தோறும் வாக்காலும் மனதாலுங் கரசரணாதிகளாலுஞ்செய்

யும் விளைக்கிடான துக்கங்களை மறுசனனத்தி லனுபவிக்க வரு மாதலாலும், இதுகாரணமாக முன் பிறப்பிலிருந்த பந்துக்கள் இறந்தாரது ஆன்ம சுகத்தித்திற்காகப் பல கிரியைகள் செய்வது போல ஒவ்வொருவரும் தத்தம் மூதாதைகளினது ஆன்ம சுகத் தின்பொருட்டும், தம் வாழ்க்கைக்காலத்தி லடைந்த பிதுரர் சுக த்தையும், இனி மரணமடைவாரது சுகத்தையும் விரும்பியும், தமது மரணத்தில் நல்லுலகைப் பெறவும் விருடோற்சனம் முதலி ய கிரியைகளை நடத்தவேணுமென்று எல்லா ஸ்மிருதி புராண ஆகம வேதங்களிலும் கூறப்பட்டும், மேலோர்களா லவ்வாறு அனுட்டிக்கப்பட்டும் அனுட்டிக்கப்படுதற்குயோக்கியதையாயுஞ் சிறப்புற்ற புருடார்த்தமாயுமுள்ளன சந்தியாதிய சிரார்த்த நியதி யேயாகும் ஆதலாலே, இதைச் சிர அர்த்தம்—அதாவது தலைமை யானபொருள் என்று கூறப்பட்டது.

இது எல்லா ஆசிரமிகளும், எல்லாபந்துக்களுந் தம்பொருட் டும், பிறர்பொருட்டுஞ் செய்துஞ் செய்வித்துஞ் செய்யப்படுவன வாயுமுள்ள பல திறத்தினவா யிருத்தலால், சந்திக்கிரியை - கிரக நியதி-நல்லொலக்ழுகம்-பிணிவராமை-ஆன்னிகம் முதலியவைகளைச் சொல்லி, பின்னர் இதனைக் கூறத்தொடங்கி, முன்னர்ச் சங்கற்ப விதுர்வர்க்க தேசகால கிரியா அதிகார திரவியவர்க்கங்களை ஏக தேசமாகக் கூறுகின்றேம்.

## சிராத்தகாலம்.

ஒருவன் சிரத்தையோடு சிராத்தஞ் செய்வதனாலே, பிரமன் இந்திரன் உருத்திரன் அசுவனிதேவர் சூரியன் அக்கினிவசுக்கள் வாயுவிசுவதேவர் பிதுரர் இருடிகள் மனிதர் மிருகங்கள் பட்சிகள் நாகங்கள் முதலான ஊரும் செந்துக்கள் மற்றுமுண்டான பூதங் கள் ஆகிய சகலத்தையும் சந்தோடப் படுத்துகிறான்.

மாதந்தோறும் அமரபட்சத்திலும் அமாவாசையிலும் அட்ட மிகளிலும்! சிராத்தஞ் செய்யத்தக்க காமியமான காலத்தைச் சொல்லுகிறேம்; சிராத்தத்திற்கு யோக்கியமான வத்து கிடைத் தபோதும் யோக்கியமான பிராமணன் நேர்ந்தபோதும் வியதீபா தத்திலும் அயனத்திலும் விடயத்திலும் சந்திரசூரிய கிரணங்களி லும் சூரியன் பன்னிரண்டு ராசிகளிற் பிரவேசிக்கிறகாலங்களிலும் நட்சத்திர பீடையும் கிரகபீடையு முண்டாக்குங் காலங்களிலும் கெட்ட கனவுகண்ட பொழுதிலும் புதியதாய்த் தானியத்தைக் கொண்டுவந்தபோதும் காமிய சிரார்த்தங்கள் செய்யலாம்.

அமாவாசைபூரணது அனுடம் விசாகம் சுவாதி இந்த நட்சத்திரங்களோடு கூடுமேயானால் அப்போது செய்கிற சிராத்தம் பிதுரர்களுக்கு எட்டுவருஷத்துத் திருத்தியை யுண்டாக்கும். திருவாதிரை புனர்பூசம் இந்த நட்சத்திரங்களோடு கூடிய அமாவாசையிற்செய்த சிராத்தத்தினாலும் பிதுரர்கள் பன்னிரண்டுவருடம் திருத்தியைப் பெறுவார்கள். அவிட்டம் சதயம் பூரட்டாதிஇவைகளோடு கூடின அமாவாசை தேவர்களுக்குங் கிடையாதபுண்ணியகாலம் இந்த ஒன்பது நட்சத்திரங்களிலும் அமாசை கூடினபோது சிராத்தஞ் செய்வதனாலே பிதுரர்களுக்கு விசேடமான திருத்தியுண்டாகும்.

வைகாசி மாதத்தில் சுக்கிலபட்ச திரிதியையும், கார்த்திகைமாதத்தில் சுக்கிலபட்ச நவமியும் புரட்டாசிமாதத்தில் கிருட்டினபட்சத் திரயோதசியும், மாசிமாதத்து அமாவாசையுமாகிய இந்த நான்கு திதிகளும் யுகாதிகளென்றும் அளவற்ற புண்ணியகாலமென்றும் புராணங்களினாலே சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளிலும் சந்திர சூரிய கிரணங்களிலும் மூன்று அட்சயகைகளிலும் இரண்டு அயனங்களிலும் எள்ளுடன் கூடிய தண்ணீரையாகிலும் பிதுரர்களை உத்தேசித்து ஒருவன் பத்தியோடு விடுவனாகில்அவன் ஆயிரம்வருடம் சிராத்தஞ்செய்த பலனையடைவான். இது இரகசியமான சங்கதி என்று பிதுரர் சொல்லுகிறார்கள். மாசிமாதத்து அமாவாசை எப்போதாகிலும் சதய நட்சத்திரத்தோடு கூடுமாயின் அது பிதுரர்களுக்கு மகாதிருத்திக்கு ஏதுவானகாலம்; அற்ப புண்ணியமுள்ள மனிதருக்கு அதுகிடையாது. இந்தக் காலத்திலேயே அவிட்டம்சேர்ந்ததாகில் அப்போது அன்னமாவது அல்லது ஒரு கைத் தண்ணீராவது பிதுரர்களைக் குறித்துக் கொடுத்தவனுக்குப் பதினாயிரம்வருடம் பிதுர்திருத்திசெய்த புண்ணியங் கிடைக்கும்; அக்காலத்திலே பூரட்டாதி சேருமாகில் அதிற்செய்த சிராத்தத்தினாலே பிதுரர்கள் திருத்தியடைந்து ஆயிரம் யுகமளவும் சந்தோடமாகத் தூங்குவார்கள்.

கங்கை சத்துரு யமுனை விபாசை சரசுவதி கோமதி என்கிற நதிகளுக்கும் நைமிசம் என்னும் இடத்திற்கும் ஒருவன்சென்று ஸ்நானஞ்செய்து அன்போடு பிதுர்பூசைசெய்வானாகில் அவன் தன் பாவங்களையெல்லாம் போக்கிக்கொள்ளுகிறான். பிதுரர்கள் 'நாம் எப்போது புரட்டாசிமாதத்தில் புத்திராதிசெய்த அமரபட்ச திரயோதசி சிராத்தத்தினால் திருத்தியடைந்து' மாசி அமாவாசையிலும் புத்திராதிபர்கள் செய்த புண்ணியதீர்த்தசல தருப்பணங்களி

ளும் திருத்தியடைவோமென்று பாடுகின்றார்கள். மனிதருக்கும் பரிசுத்தமான பொருளும் மேன்மையானகாலமும் சாத்திரங்களிற் சொல்லப்பட்ட விதியும் சற்குணமுள்ள பாத்திரமும் சேர்ந்த அன்பும் கூடுமாயின் சகல இஷ்டங்களும் சித்திக்கும்.

எவன் திரவியவஞ்சனை செய்யாமல் நமக்குப் பிண்டங்களை இடத்தக்கவனோ, விபவமுண்டாகில் வஞ்சனையின்றி இரத்தினம், வத்திரம், வாகனம், தனம் மற்றுமுள்ள சகல போகங்களையும் நமக்காக பிராமணருக்குத் தானஞ்செய்யும்படியானவனோ, அன்னம்போடுவதற்கு மாத்திரமே தகுதியான விபவமுடையவனுயில் இப்படிப்பட்ட காலங்களில் மிகுந்த அன்போடு நல்லபிராமணருக்கு அன்னமிடத்தக்கவனோ, அதற்குஞ் சத்தியில்லாமற்போனாலும் தனக்கு இயன்ற அளவுதானியத்தையாகிலும் பிராமணருக்குத் தாமாய்க்கொடுக்கவல்லவனோ, அல்லது சிறிது தட்சணையாவது கொடுக்கும்படியானவனோ, அதற்குஞ் சத்தியினனாய் நனிகையினாலே சில எள்ளையாவது ஒரு நல்லபிராமணனுக்கு நமஸ்கரித்துப் பத்தியோடு வணங்கிக்கொடுப்பனோ, இதுவுமிசையாதபோது ஏழெட்டு எள்ளுடனே நமக்கு ஒருகைத் தண்ணீரையாவது பூமியில் விடுவல்லவனோ, இதுவுமல்லாதபோது எங்கிருந்தாலும் பசுக்களுக்குத் தக்க உணவை சம்பாதித்து நம்முடைய உகப்புக்காகச் சிரத்தையுடனே பசுக்களுக்குகொடுப்பானோ ஒன்றுமில்லாதபோதில் காட்டுக்குப்போய்க்கைகளை நன்றாயுயரவெடுத்துக் கொண்டு சூரியன் முதலான உலகபாலகரைப் பார்த்து உரத்தசத்தத்துடனே 'எனக்கு பிதுரர்சிராத்தஞ் செய்யத்தக்கதனமாவது மற்றெந்தப்பொருளாவது ஒன்றுமில்லை; என்பிதுரர்கள் திருத்தியடைய வேண்டுமென்பானோ' 'பிதுரிச்சையொன்று தவிர மற்றொன்று மெனக்கில்லை' யென்றும் 'இதோ என்னிரண்டு கைகளையும் வாயுவின்மார்க்கமான ஆகாசத்தில் தூக்கிவிட்டேன்' என்று இவ்வசனங்களைப் படிப்பானோ, அப்படிப்பட்ட புண்ணியவானும் புத்திமானுமான ஒருவன் நம்முடைய குலத்திற்பிறக்கவேண்டும்; என்று பிதுரர்கள் பாடியிருக்கிறார்கள், இப்படி பிதுரர்கள் தனமுள்ளபோதும் இல்லாதபோதும் நடக்கவேண்டிய முறையை முன்சொன்னவிதமாய்ச் செய்பவன் பூரணமாகச் சிராத்தஞ்செய்த பலனை எப்போதும் அடைவான்.

---

## மாளய வைபவம்.

சிராத்தமென்பது வருடாந்த மாதாந்தத்தில் மரணமடைந்தோர் நரகமெய்தாபடி சுகித்திருப்பதைக்குறித்து, தத்தஞ் சமய தெய்வத்தைக் கோறிச்செய்யும் எக்கியாதி கிரியையாம்.

### மாளய சிராத்தஞ் செய்யுங்காலம்.

வருஷருது புரட்டாசிமாத கிருட்டினபட்சத் திரயோதசியில் தேன், பாயாசமிவைகளால் வேள்விச் சிராத்தஞ்செய்யவேண்டும். அதனால் பிதுரர்களுக்கு அட்சயமான திருத்தியுண்டாகிறது. தன் குலாச்சாரமாக முன்சொன்னபடி திரயோதசியில் அபராணகாலத்தில் நமக்குத் தேன் நெய் பாயாசம், இவைகளுடன் சிராத்தஞ் செய்பவன் மறுசனன மடைவானென்றும் பிதுரர்கள் பேரவா அடைவரென்றும் வேதங்கூறுகிறது.

கிருட்டினபட்சத் தசமிமுதல் சதுர்த்தசி நீங்கலாக அமாவாசைவரையிலுள்ள திதிகள் எப்படி மாதச்சிராத்தத்திற்குச் சிறந்தவையோ அதுபோல மற்றதிதிகள் சிறந்ததல்ல; கலியுகத்தில் புலால் நீங்கலாகச் செய்யவேண்டுமென்று வியாக்கியாதா நிருணயங்கூறுகின்றது.

இரட்டைத் திதி இரட்டை நட்சத்திரங்களில் மாளய சிராத்தஞ்செய்பவன் சர்வாபீட்டங்களையும், ஒற்றை திதி நட்சத்திரங்களில் செய்பவன் புத்திரசந்தானத்தையும் மிகுந்த கல்விப்பொருளையு மடைகின்றான்.

சிராத்தஞ் செய்வதற்குச் சுக்கில பட்சத்தைவிட கிருட்டின பட்சமெப்படி விசேடித்ததோ அவ்வாறே பகலில் முன்பாதியை விட பின்பாதி உசிதமானது.

பூணூல் இடபாகமிட்டுக்கொண்டு வல்லிகைமறித்தும் கையில் பவுத்திரத்துடனும் செய்யத்தக்கதான இந்தப் பிதுரர் சிராத்தத்தை மரணகாலம்வரையுஞ் செய்யவேண்டியது.

இரவிலும் இரண்டுசந்தியிலும் சூரிய உதயமாயுஞ் செய்கிற பாகம் நித்தியபாகமென்று சொல்வதால், அவை இராக்கதருக்குரியது.

முன்கூறிய விதிப்படி மாதாந்தரம் சிராத்தஞ் செய்வதற்குச் சக்தியற்றால் திரும் ஆண்டில் மருவும் ஏமந்தருது கிரிட்டும ருது இவைகளிலாவது வஞ்சமா எக்கியத்திற்குப்பின்பு அதில் சேர்ந்த பிதுரர் சிராத்தஞ் செய்யவேண்டியது.

பிதுரர் சிராத்தத்தில் ஓமஞ்செய்வதைவிட்டு அக்கினியில் நிறைவேற்றலாகாது; கருத்தாபத்தியுள்ள கிரகஸ்தனுயிருந்தால் அவன் வைதிக அக்கினியிலும் இல்லாவிட்டால் பிராமணனிடமும் செய்யவேண்டியது; ஆகிதா அக்கினியுள்ள கருத்தாவானவன் மாதாந்தர சிராத்தத்தை கிருட்டினபட்சத்தில் அமாவாசை யல்லாத மற்றத்திதியில் செய்யக்கூடாது; இறந்ததிதியில் செய்யவேண்டியது சிராத்தத்தை மாத்திரமேயாம்.

கொஞ்சமேனுஞ் சத்தியில்லாதவன் ஸ்நானம்செய்து சலத்தினுல் பிதுரர்களைக்குறித்துத் தருப்பணஞ்செய்வானுகில் நித்தியதருப்பணஞ்செய்த பலனை யடைகிறுன்.

### பிதுர்வருக்கம்.

இறந்துபோனவர்களுள் பிதுரர்களை வசுதேவராகவும் பிதாமகர்களை உருத்திரராகவும், பிரபிதாமகர்களை ஆதித்திய தேவர்களாகவும், மூன்றுவகுப்பாகச் செய்யப்பட்டு மேற்படி தேவர்கள் நாமத்தினுலேயே மரணமானவர்களுக்குச் சிராத்தம் செய்யவேண்டுமென மனுகூறுகின்றூர்.

சிராத்தஞ்செய்தவன் விகசத்தையும் அமிர்தத்தையு முட்கொள்ளவேண்டியது.

### தாயாதிகள்.

தன்முதல் ஐந்தாம் பாட்டன் வரையிலுமுள்ள ஏழு தலைமுறைக்குட்பட்ட பங்காளிகளாம்.

### ஆசௌசம் அல்லது தீட்டு.

மரணத்தின்தீட்டு, பங்காளிக ளனைவருக்கும் பொதுவான பிறப்பில் தாய்தந்தையர்களுக்கு மாத்திரம் தொடக்கூடாத தீட்டு; அதிலும், மாதாவுக்குமாத்திரமதிகம்; தந்தைக்குப் பதினேராம் நாள் ஸ்நானத்தோடு தீட்டு நீங்கிவிட்டது.

காமமதிகரித்து வீரியத்தை வெளியில்விட்டவுடன் அவன் ஸ்நானஞ்செய்தால் சுத்தனுவான்; தனக்குப்பிறமனையில் பிள்ளைபிறந்தால் மூன்றுநாள் தீட்டுண்டு.

சாபிண்டர்கள் பத்துத்தினத்திலும் சோதரர்கள் மூன்று தினத்திலும் தீட்சை நிவர்த்திசெய்து கொள்ளுகிறூர்கள்.

---

விகசம்-சிராத்தசேடம் (மீதி); அமிர்தம்-எக்கியசேடம். பிதுர் இறந்தோர்.

இறந்துபோன ஆசிரியனுக்கு மாணாக்கன் திலதருப்பணஞ் செய்தால் குருவின் பங்காளிகளைப்போல் தானும் பத்துநாள் தீட்டிருக்கவேண்டும்.

தாயின் கருப்பத்தில் மூன்றுமாதமுதல் ஏழுமாதத்திற் குள்ளாகச் சிசு இறந்துபோனால் எத்தனைமாதத்திலிறந்துபோகிறதோ அத்தனைமாதத்திற்கும் மாதத்திற் கொருநாளாக தீட்டிருக்கும். உதிரப்பாச்சலுள்ள மங்கைக்கு அவ்வுதிரப்பாச்சல் நின்றவுடன் நாலாம்நாள் ஸ்நானஞ்செய்தால் பரிசுத்தமாவாள்.

மனிதர்கள் சவளஞ் செய்கிறதற்குமுன் குழந்தையிறந்தால் ஒருநாள்தீட்டும் உபநயநகாலத்திற்குள் இறந்தால்மூன்றுநாள் தீட்டுமுண்டு.

இரண்டுவயதுக்குள் குழந்தையிறந்தால் அதை புட்பம் மஞ்சள் முதலியவற்றால் அலங்கரித்து ஊருக்குவெளியில் பரிசுத்த தலத்தில் புதைக்கவேண்டும். இந்தக்குழந்தையைத் தகனம் பண்ணலாகாது. திலதருப்பணமுஞ் செய்யலாகாது; விசனமின்றிப் புதைத்துவிட்டுப் பங்காளிகளனைவரும் மூன்றுநாள் சூதகங்காக்கவேண்டியது அவசியம்.

மூன்றுவருடத்திற்குப்பின் குழந்தை இறந்தால் அதற்காக அந்திரவேள்வி செய்யவேண்டியதில்லை; நாமகரணஞ் செய்தபின் இறந்தாயினும் அதற்குரியபழம் பரப்பல்முதலிய கிரியைகளையே பந்தினர் கூடிசெய்வது நன்று.

தன்னோடு வாசித்தவனுக்கு ஒருநாள் சூதகங் காக்கவேண்டியது; சோதரர்களுக்கு இறப்பிலும் பிறப்பிலும் மூன்றுநாள் வரையில் சூதகமுண்டு.

ஒருபெண்ணை வதுவைக்கு நிச்சயார்த்தஞ்செய்து, விவாகம் செய்கிறதற்குமுன் இறந்துபோனால், யாருக்கு நிச்சயார்த்தஞ்செய்தார்களோ அவனுக்கும் அவன்குடும்பத்தாருக்கும் மூன்றுநாள் சூதகமுண்டு. அப்பெண் தகப்பன்தாய் சுற்றத்திற்கும் மூன்று நாள் சூதகமுண்டு. இம்மூன்று நாள்வரையும் மண்ணுப்பு மாமிசம் புணர்ச்சி இவைகளைநீக்கி நதிகளில் ஸ்நானஞ்செய்யவேண்டியது.

பிறப்பிற்கும் இறப்பிற்கும் உள்ளத்தீட்டு, பங்காளித்தீட்டு.

சிசுவிற்குப் பல்முளைக்கும்பொழுதும் முளைத்தபின்பும் சௌளஞ்செய்தபின்பும் இறந்துபோனால் பங்காளிகளனைவருக்குஞ் சூதகமுண்டு.

சாபிண்டர்களுக்கு இறந்த பத்துநாள்வரைக்குஞ் சூதகமுண்டு. மறையோதி அக்கினியோத்திரஞ் செய்கிறவனுக்கிருந்தால் அவனுக்கு ஒருநாளும் ஓதினவனுக்கு மூன்றுநாளும் ஸ்மார்த்தாசாரமுள்ளவனுக்கு நாலுநாளும் இக்கருமாதியொன்றுமில்லாதவனுக்குப் பத்துநாளுஞ் சூதகமென்று காண்க.

## தேசாந்திரத்தீட்டு.

இதுவரைக்கும் கூறிய சூதகங்கள் சமீபத்திருக்கும்பொழுது செய்யவேண்டியது; இனி, தூரதேசத்தி லிருக்கும் சாபிண்டரும் சோதரரும் செய்யவேண்டிய சூதகமாவது:—

தேசாந்தரத்தில் தன் பங்காளியின் இறப்பையும் பிறப்பையும் பத்துநாளுக்குள் கேள்விப்பட்டால் அந்தப் பத்துநாளோடேயே அவன் சூதகம்போய்விடும்.

இறந்தசேதி பத்துநாளைக்கு மேற்பட்டு அறிவானானால் சாபிண்டர்களுக்குக் கேள்விப்பட்ட நாள்முதல் மூன்று நாள்வரையுஞ் சூதகமுண்டு. ஒரு மாதத்திற்குமேற்பட்டால் சூதகமில்லை. பத்துப் பதினாறு நாளோடே அவன் கேள்விப்பட்டால் அச்சூதகமில்லை. ஆனாலும், ஸ்நானஞ்செய்யவேண்டிய தவசியம். பிறந்தவதந்தி பத்துநாளைக்கு மேற்பட்டுக் கேள்விப்பட்டால் சூதகமில்லை.

சாபிண்டர்கள் பங்காளியின் இறப்பைப் பத்துநாளைக்குமேல் கேள்விப்பட்டாலும் கட்டின வத்திரத்தோடு ஸ்நானஞ்செய்தால் மற்றவர்களை தொடுகிறதற்கு யோக்கியமாகிறான்.

சாபிண்டரில் பல்முளையாத பாலகனிறந்தாலும் வேறுதேயத்திலுள்ள சோதரர்களிறந்தாலும் மூன்றுநாளைக்கு மேற்பட்டுக்கேட்டால் கட்டினவத்திரத்துடன் நீராடினால் சூதகம்போய்விடும்.

பத்துநாள் சூதகமுள்ள இறப்பிலாவது பிறப்பிலாவது மறுபடியும் வேறொருத்தீட்டு நேரிட்டால் முன்னிருந்தசூதகத்தோடே பின்வந்த சூதகமும் போய்விடும். ஆனால், பத்துநாள் சூதகமுள்ள இறந்தவீட்டில் முன்சூதகமும் போய்விடும்; பிறந்த சூதகத்திற்கு இறந்த சூதகமும் ஒக்கும்.

ஆசாரியனிறந்தால் மூன்றுதினமும் அவன் மனைவிபிறந்தால் அல்லது மக்களிறந்தால் ஒருநாள் சூதகமுண்டு; இதுசாத்திரத்தின் முறையே.

வேதமோதி கன்னடை ஆசாரமுள்ள பிராமணன் தன்வழிவிலுள்ளவ ரிறந்துபோனாலும் அம்மானிறந்து போனாலும் மூன்று

நாள் சூதகமுண்டு. மாணக்கன் அம்மான் மித்திரர் பந்து முதலிய வர்கள் இறந்துபோனால் தொண்ணூறு நாழிகைவரைக்குஞ் சூதகமுண்டு.

இரண்டாம் வருணத்தானுகிய க்ஷத்திரியன் தன் தேசத்தரசன் மரணமடைந்தால் பகலானால் பொழுதுபோகிற வரையிலும் இரவானால் நட்சத்திரம் மறைகிறவரையிலும் அந்தந்தத்தேசத்துப் பிரசைகளுக்குச் சூதகமுண்டு; ஆரணவிதி தெரியாதவன் தன் வளவில் இறந்தாலும் ஓர் தினம் சூதகமுண்டு.

இப்பொழுது மொழிந்த பத்துத்தினத்தீட்டும் ஆரியராகிய பிராமணர்களுக்கும், அவ்வாறே க்ஷத்தியருக்கு பன்னிரண்டு நாளும், மூன்றும் வருணத்தாராகிய வைசியருக்கு பதினைந்துநாளும், சூத்திருக்கு முப்பத்தொன்றுநாளும், சூதகமுண்டு.

மேற்சொன்ன விதிப்படியல்லாமல் சூதகநாட்களை அதிகரித்து வைக்கக்கூடாது. ஔபாசன வைதீககாரியத்தையும் இத்தினங்களுக்குமேல் நிறுத்தக்கூடாது. இந்திரனையும் அக்கினியையும் தோத்திரம் தினந்தோறும் செய்கிறதாயிருந்தால் தன் பங்காளி இறந்துபோனாலும் ஒருநாள் அல்லது மூன்றுநாளைக்குமேல் யாதொரு சூதகமுமில்லை.

அடக்க விதி.

மூன்றுவயதிற்குள் இருக்கும் பாலகரைப் புதைத்துவிடவேண்டும். அதற்குமேற்பட் டிறக்கில், தகனமே செய்யவேண்டும்.

சவம் கொண்டு போகும் திசை.

சூத்திரர் ஊருக்குத்தெற்கும், வைசியர் மேற்கும், க்ஷத்திரியர் வடக்கும், பிராமணர் கிழக்குப்பக்கமாகவும் பிரேதத்தைக்கொண்டுபோகவேண்டியது.

விருடோற்சநம்.

மகம் யாக மிவைகளைச்செய்வதினும், விருடோற்சநஞ் செய்வதே புசிதம்; அதாவது, கார்த்திகை பௌர்ணமி உத்தராயண சுக்கில கிருட்டினபட்சத் துவாதசியிலாயினும் மற்ற உத்தம காலங்களிலாயினும் தூயமனதோடு உத்தமபிராமணரால் சபஹோமாதிகளைச்செய்து, பின்னர் மாதருதேவாருச்சனை நவக்கிரகபூசை, பூரணவிதி, சிராத்தகருமம் இவைகளைச்செய்து இடபக்கன்றை வத்திர புட்பாட்சதைகளா லலங்கரித்து நான்கு பசுக்கன்றுகளோடு அக்கினியை வலம்வரச்செய்து வடக்குமுகமாக நின்று 'ஓ! தருமசொரூபமே! பிரமகிருட்டியே!' என்று துதித்து இந்தக்கருமம் எவருக்

காகச் செய்கின்றதோ அவரைக்குறித்து அதன்வாசில் சலப்விட்டு அந்நீரைக் கரத்திலேந்திச் சிரசில் புரோட்சித்துக்கொள்ளல்வேண்டும்; இதுவே விருடோற்சனமாம்.

### சிராத்த தானம்.

இறந்தவனைக் குறித்து விருடோற்சனஞ்செய்யில் உடனே ஏகோதிட்ட சிராத்தஞ்செய்யவேண்டும்; தானுள்ளபொழுதே தன்னைக்குறித்து விருடோற்சனஞ்செய்யாதவர்கள் தாம் இறந்தபின்பு புத்திராதிகளால் எவ்வித நன்மைகள்செய்பினும் பயனில்லை; ஆனால் மரித்த பதினொரு பன்னிரண்டாம்நாட்களிலேனும் சபிண்டிகரணத்திற்கு முன்னமே சோடச சிராத்தஞ்செய்து பிராமணர்கட்குத் ததியாராதனத்தோடு தானங்களுஞ் செய்தல் வேண்டும். அன்றி, பருத்தியின்மேல் சாளக்கிராமம் வைத்து அலங்கரித்துக் கொடுப்பதுமுண்டு.

மரித்தோர் வைதாரணியைக் கடக்கும்பொருட்டுக் கரும்பினாலோடஞ்செய்து பட்டுச்சுற்றி நெய்வார்த்த வெண்கலப்பாத்திரத்தை அதனுள் வைத்துக்கொடுக்கவேண்டும்.

எள்-இரும்பு-பொன்-பருத்தி-நவதானியம் இவைகளைத் தவிராது பிராமணருக்குக் கொடுப்பது விசேடம். ஏழைகளாயின் அவற்றிலொன்று கொடுப்பினும்நன்றே. சத்தியானுசாரம் தில தானமுஞ் சைதானமுஞ்செய்யலாம் —மரித்தவர்களின் புத்திரரில்லாத காலத்தில் பௌத்திராதிகள் இவ்வாறுசெய்வது மிக்கநன்றாம்.

சரீரதிடயான காலத்தில் நதியாத்திரைசெய்வதும் நன்றே. இறந்தபின் வருடந்தோறும் சிராத்தஞ்செய்யவேண்டியது; மற்ற சகோதர, குரு முதலியவர்களுக்குப் புண்ணியஞ்செய்து கொடுக்க வேண்டியது.

சூத்திரசவத்தோடு பிராமணன் சுடலைக்குப்போனால் அப்பிராமணனுக்கு மூன்றுநாள் ஆசௌசமுண்டு. அம்மூன்று நாளைக்குப் பின்பு புண்ணியதீர்த்த ஸ்நானத்தால் புனிதனாகின்றான்.

### சிரவண கிரியை.

மரித்த பாபிகளைச் சிரவணர் பாதுகாத்திருக்கும்படி அவன் சந்ததியார் சிரவணரைப்பூசித்து பன்னிரண்டு நீரோடு அன்னத்தை நிரைத்து அச்சிரவண பாவவாச மறையோருக்கு வழங்குதல் தத்துமம்,

### சந்தியோதக பலம்.

இறந்தவரைக் குறித்துச் சுத்தமாய்ச் சந்தியோடு தினந்தோறுங் கொடுக்கும் உதகத்தால்தாதரும் இறந்தவரும் திருத்தியடைவார்; மாசிகம் முதலியவற்றால் சிவன் திருத்திகரமாகின்றது.

மரித்தவர், பால விருத்தராயினும் உதக கும்பதானம் அவசியஞ் செய்தல் வேண்டும்.

### இடசுத்தம்.

எக்கருமஞ் செய்யத்தொடங்கினும் திருவலகால் துடைத்து கோமயத்தால் மெழுகிக் கோலமிட்டுப் பூசுத்தஞ் செய்தல்வேண்டும். அப்படிச் செய்யாவிடில், செய்யுங்காரியத்தைப் பைசாசரும் அரக்கரும் குடிகொண்டு, முற்றச்செய்யார்கள். பரிசுத்தஞ்செய்த இடமானால் தேவர்கள் பிரீதி கொள்ளுவதோடு பிதிருருக்குச்செய்யுங் கருமமும் பிரீதியாகும்.

### திலதருப்பணம்.

எள்ளு, சாக்ஷாத் விஷ்ணுவினுடலி லுற்பவித்த பரிசுத்த வஸ்துவானதால், அதனைக் கண்டவுடனே பூதபைசாச ராக்கதர்கள் வெருண்டோடுவர். தானங்களில் எள்ளில்லாத தானம் பயன்படாது; சிராத்தத்தில் கறுப்பு எள்ளையே சேர்க்கில் சந்தோஷிப்பார்கள்.

### தருப்பை.

குசைப்புல் ஆகாயத்தி லுண்டானது; அதன் அடியில் பிரமனும், அதன் கடையில் சிவனும், நடுவில் விஷ்ணுவும் வசிக்கின்றனர்; ஆதலால், மூவர் காரணமாக சிராத்தங்களில் தருப்பையைக் கொள்ளவேண்டியதாகின்றது. அப்படி தருப்பையில்லாத கருமம் பயன்படாது. இதுபற்றியே பிராமணர் மந்திரம் விபூதி அக்கினி தருப்பை இவைகளுக்கு நின்மாலிய தோடம் கிடையாது. உபயோகப்படுத்திய தருப்பையையே மறுபடியும் தடையின்றி உபயோகப் படுத்தலாம்.

### கலசம்.

கலசமாவது இட்ட தேவதா சொரூபமாக புண்ணிய தீர்த்தங்களால் நிறைத்து சொன்ன புட்பாட்சதைகளை அதனுள்விட்டு மேலே நூல் சுற்றி, மஞ்சள் குங்குமபுட்ப அட்சதைகளை அணிவித்து சந்நிதி கலைகளைப் பூசி, தூப தீப நைவேத்தியத்தோடு உபசார வந்தன வணக்கங்களைச்செய்து, தமது கோரிக்கையை

விண்ணப்பஞ் செய்வதாம். இவற்றுள் தருப்பைமுடி சிகை; தேங்காய் சிரசு; அம்சதா திலதம் நேத்திரம்; வத்திரம் சருமம்; சூத்தியநூல் நரம்பு எலும்புகள்; கலசம் அங்க மாமிசம்; சலம் இரத்தம்; புட்பமே அகவுறுப்பு; சொன்னமே பிராணத் திபானம் குண சொரூபம் என் றிவ்வாறாகக் கொள்ளப்படுவனவாம்.

### சிரார்தாபசாரம்.

தேவ்காரியத்தைவிட பிதுர்காரியம் சிறந்தது. முன்னம்விசுவ தேவர்களையும், பின்பு பிதுர்களையும், முடிவில் விஷ்ணுவையும் கிரமமாக வருவித்துச் சிராத்தஞ்செய்யவேண்டியது. அப்படியல்லாமல் பிதுரர்களை மாத்திரம் வருவித்துச் சிராத்தஞ் செய்பவன் வமிசத்துடன் அழிகிறான்.

### சிராத்த தானம்

சிராத்தத்தை நந்தவனம், கோயில், நதிக்கரை,கடற்கரை, பொழில் இவ்விடங்களிற் செய்வதே சிறந்தது. அப்படி சந்தர்ப்பப்படாத காலத்தில் பரிசுத்த இடம் அல்லது சனசங்கையற்றஇடம் இவைகள் உத்தமம்.

### சிராத்த திசை.

சிராத்தத்துக்காகவந்த பிராமணர்கள் ஸ்நானஞ் செய்தபின் தேவர்களுக்குக் கிழக்குமுகமாகவும், பிதுரர்களுக்கு வடக்கு முகமாகவும் உட்காரவேண்டும்.

---

## சிராத்தஞ் செய்யும் விதி.

### ஓமம்.

இதனை முடித்த பின்னர், பிராமணனை முன் பூசித்து, அவனது வலது கையில் பௌத்திரத்தைவைத்து எள்ளுடன் சலத்தை அர்க்கியமாகக்கொடுத்து; அவன்முன் அக்கினியை வளர்த்தி ஓமஞ்செய்கிறேனென்று அநுமதி பெற்றுக்கொண்டு அக்கினி சந்திரன் எமன் இவர்களுக்கு தனித்தனி அன்னத்தினால் ஓமஞ்செய்து பின்பிதுரர்களுக்கு ஓமஞ்செய்ய வேண்டியது.

### பிண்டக்கிரியை.

பிதுரர்களின்பொருட்டு அக்கினியில் தென்புறத்தில் அன்னம் ஓமஞ்செய்து பிண்டப் பிரதானஞ் செய்யும் பூமியில் தெற்குநுனி





ப்பான் தருப்பையில் மூன்றிடத்தில் எள்ளுஞ் சலமும் கைமறித்து விட்டு மிகுந்த சாதத்தை மூப்பாகமாக்கிக் கைமறித்து முன் எள்ளுஞ் சலமும் விட்டவிடத்தில் தென்முகமாயிருந்து பிதுரர்களைத் தியானித்துக்கொண்டு பிண்டம்வைத்து அவைகளின்மேல் மறுபடியும் எள்ளுந் தண்ணீரும் விடவேண்டும்.

ஒவ்வொருவரும் தத்தம் சூத்திரங்களிற் சொல்லியபடி பிண்டம் வைத்தபின் பாத்திரத்திலும் கையிலு மொட்டியிருந்த அன்னங்களைப் பிதுரர் பிதாமகர்களைக்குறித்து முன்வைத்த பிண்டங்களி னருகில்போட்டு வடக்குமுகமாகத் திரும்பி ஆசமனஞ்செய்து மும்முறை பிராணாயாமஞ்செய்து அதன்பின் தென்முகமாய் வசந்தருது முதலிய ஆறு ருதுக்களையும் பிதுரர்களையும்மந்திரத்துடன் நமஸ்காரம் புரியவேண்டியது.

எள்ளுந் தண்ணீருமாக முன்விட்ட மீதி சலத்தைத் தொன்னையுடன் கைமறித்தலாகப் பூமியில் விழும்படி மூன்று பிண்டங்களையுந் தனித்தனிச் சுற்றவேண்டியது. அம்மூன்று பிண்டங்களில் கிரமமாகக் கொஞ்சங் கொஞ்சமாக எடுத்து தான் தனித்தனி மோந்து போடவேண்டும்.

ஐந்து வயதானவுட னிறந்தால் அதிக மந்திரமின்றி பத்து நாள் பிண்டம்போடவேண்டும் பன்னிரண்டு வயதுக்குள் அல்லது அதற்கு மேற்பட்டேனும். இறந்தவருக்கு விருடோற்சனம் செய்தல்வேண்டும். சபிண்டீகரணம் செய்வது கூடாது; பால்வெல்லஞ் சேர்த்துப் பிண்டம் போடல்வேண்டும். குடை, கடகம், தீபம்முதலிய தானஞ்செய்யவேண்டும்; இதைச் செய்யாவிடில் மரித்தவன் மரமேயாகின்றான்.

## ஏகோதிஷ்ட பலன்.

திலதருப்பையோடு ஏகோ திட்டாதி சிராத்தஞ் செய்தால் மரித்தவன் மறுபிறப்பில் உத்தம குலத்துதித்துத் தீர்க்காயுளைப் பெறுவான்.

## சபிண்டீகரண பலன்.

இறந்தவன் வருடாந்தத்தில் சபிண்டீகரணம்செய்து இப்பிண்டத்தை அக்குலத்தில் முன் இறந்தவர்களுடைய பிண்டத்தோடு சேர்த்தல்வேண்டும். அப்படி செய்தால், இறந்தவன் பிரேதத்துவம் நீங்கி பிதிர் தேவரோடு சேர்வான்.

## கிரியாதிகாரி.

தனது ஆன்மாவே புத்திரனாக உதித்தலால், தந்தைக்கு மகனும், மகனுக்குத் தந்தையும் கிரியை செய்யவேண்டிய விதியாயிற்று.

சொந்த மனைவிக்கே பிள்ளைபிறந்தால், பிதுர்தேவர் மகிழ்கின்றார்; ஒருவனுக்குப் பல பிள்ளைகள் பிறந்தாலும் முதற்பிள்ளையே கிரியாதிகாரனாகின்றான். என்றாலும், மற்ற பிள்ளைகளும் கிரியாதிகளைக் கட்டாயம் அநுட்டித்தே தீரவேண்டும்.

கன்னிகாதானமாகக் கொடுத்த பெண்வயற்றுப் பௌத்திரனும் சிராத்த காரியங்களுக்கு முக்கியவானாவான்.

வைப்பாட்டிமகன் யாதொரு காரியமும் செய்யக்கூடாது. ஆனால் சில தருமங்களைமாத்திரம் செய்யலாம்; முற்றும் சிராத்த விதியைக் கொள்வானேல், செய்தவனும் மறித்தவனும் நரகம் சேர்வார்.

வேசிமகன் தன்னைப் பெற்றவளை மாத்திரங் குறித்து வருடந்தோறுஞ் சிராத்தஞ் செய்யலாம். ஆனால், பிராமண போசனாதி தானங்களைச் செய்யலாகாது. மீறிச்செய்த வேசிமகனும் பிராமணனும் அதையேற்கும் பிதுரரும் மீளாநரகமடைவர்.

இறந்த பன்னிரண்டாம் நாள், மூன்றும் பட்சம், ஆறுமாதத்தில் சபிண்டிகரணம் செய்யலாம். தந்தைக்குக் கருமாதிகளைச் செய்து சபிண்டிகரணஞ் செய்யாதிருக்கும்போது புத்திரனுக்குக் கலியாணம் நேர்ந்தால் உடனே சபிண்டிகரணஞ்செய்து மணவினையைச் செய்யவேண்டும். ஏனென்றால், மறித்தவன் சபிண்டிகரணம் நடத்துமட்டும் பிரேதத்துவத்தோடிருக்கிறான். அதனால், மகனுக்குச் சிறிது அசுத்தியாம்.

சபிண்டிகரணம் பன்னிரண்டாம் நாளில் செய்வதே உத்தமம் அஃது நடத்தியபின் தாய் தந்தையரின் மூன்று தலைமுறைக்கும் சிராத்தஞ் செய்தல்வேண்டும்.

கன்னிகாதானமாக வந்த மனைவி யிறந்தால் புருடன் தனது கோத்திரஞ்சொல்லி, கிரியாதிகளை செய்தல்வேண்டும். மாமிசவிற்கிரையம்போல், பரியங்கொடுத்துவாங்கிய மனைவி யிறந்தால் அவள் பிதாவின் கோத்திரத்தைச் சொல்லிக் கிரியை செய்யவேண்டும்.

தந்தைக்கு மகனே கிரியை நடத்தல்வேண்டும். இல்லாவிடில் அவன் அண்ணன் அல்லது தம்பி அல்லது அவர்கள் புத்திரரிலா ரேனும், செய்யவேண்டியது. மனைவிமக்கள் முதல் யாவருமில்லாத காலத்தில் தாயாதிகள்செய்யவேண்டும். தாயாதியில்லாவிடில் மாணாக்கன் செய்யவேண்டும். அவனுமில்லாவிடில் புரோகிதனே கருமம் செய்யவேண்டும்.

கிரியானுஷ்டிப்பு.

பிரேதத்தை குறித்துச் செய்யப்படும் சிராத்தத்தில்

| | | | |
|---|---|---|---|
| 1 | பிராமணாசீர்வாதம் | 9 | உடன்சொல்லல் |
| 2 | பிராமணக்ஷேமவிருப்பம் | 10 | ஆவாகனம் |
| 3 | இரட்டைக்குசை | 11 | நமஸ்காரம் |
| 4 | ஓமம் | 12 | எல்லைவரையில் பின்செல்லல் |
| 5 | சேடத்தைநாய் நுகரலாகாதெனல் | 13 | வலம்வருதல் |
| | | 14 | சம்பிரதாயமாகபூதியணிதல் |
| 6 | சேடத்தையுண்ணல் | 16 | ஏகோதிஷ்டம் |
| 7 | விகிரம் | 17 | பணவம் |
| 8 | ஸ்வதா என்றசப்தம் | 18 | பதிற்சப்தம் |

ஆகிய இப்பதினெட்டும்வேண்டியதில்லை; மறந்து செய்யினும், மாநரகவாசமுண்டாகும்.

மரித்தவுடனே கைகால்களைக் கட்டல்வேண்டும்; அங்கு உறவினரெல்லாரும் வந்திருத்தல்வேண்டும்; அப்பிரேதமுள்ள கிராமத்தில் அதைத் தகனஞ்செய்யுமட்டும் அன்னாகாரங் கொள்ளலாகாது; உண்டால் மாமிசமுண்டதோடமும், இரத்தமுண்ட தோடமுமடைவர்; தாம்பூலதாரணம், தந்தசுத்தி, ஸ்திரீசையோகம். தேவபூசை, வேறுசுபகாரியம் இவைகள் நடத்தப்படாது.

நித்திய சிராத்தம்.

நாள்தோறும் ஓர் சற்பாடியனுக்குப் போசனஞ் செய்வித்து அன்னமும் புனலும் ஒருகடத்தில்நிரைத்து இறந்தவனைக்குறித்துத் தானஞ்செய்வதால் இறந்தவர் மகாசுகத்தை யடைகின்றனர்.

பிராமணனுக்குப் புத்திரனுற்பவித்தாலும், விப்பிரன் மரித்தாலும் பத்துநாள் ஆசௌசமுண்டு; அவர்வீட்டில் யாருமுண்ணலாகாது.

மிருகம் அக்கினி இவைகளாலும் தேசாந்தரஞ்சென்றும் இறந்தவனுக்கு உடனே கருமஞ்செய்யலாகாது: ஆனால், கேட்டபோதே ஸ்நானமாத்திரஞ் செய்யவேண்டும்.

அரசனுக்கும் தவசிக்கும், யாகம்புரியும் பாப்பானுக்கும், அவர்கள் தாயத்தாரிறந்தாலும் ஆசௌசமில்லை.

ஒருவனுக்குப் பெண்பிறந்தால் அவன் தாயத்தாருக்கு ஆசௌசங்கிடையாது; அவன் தாய்க்குமாத்திரம் பத்துநாள் ஆசௌசமுண்டு; தந்தைக்கு ஸ்நானமாத்திரமே போதும்.

மணம் யாகம் உற்சவத்திற்காகக் கங்கணம்; பூசை, அநிவியாதி இவைகளைக்கொண்ட காலங்களில் ஆசௌசங் கிடையாது.

ஒரு ஆசௌசம் வந்தவுடனே இடையில் வேறொரு ஆசௌசம்வந்தால் முன்வந்ததோடு பின்வந்ததும் தாயத்தார்களுக்கு நிவர்த்தியாம்.

ஆசௌசம் வருமுன் பிராமணருக்குக் கொடுக்க உத்தேசித்திருந்ததை ஆசௌசம் வந்தவுடனே கொடுக்கலாம்; பிராமணரும் அப்படியே தான் வாங்கவேண்டும்.

ஒருவன், பசு-பிராமணர்-மாதர்-இவர்களை காக்கும் காரியத்திலும் உயுத்தத்திலும், உயிர்விடுவானேல் அவனைக்குறித்து அவனையுற்றவர்கள் ஒருநாள்மாத்திரம் ஆசௌச மிருக்கலாம்; ஒருகால் ஆசௌசமின்றி ஸ்நானஞ்செய்தாலும் போதும்; ஆசௌசமில்லை.

விருடோற்சகம்.

தலசுத்தி செய்து பின்னர், அக்கினிப்பிரதிட்டைசெய்து ஒரே வருணமுடைய காளைக்கன்று ஒன்றும் அதற்குச்சிறிய கடேறிக் கன்றொன்றும் கொணர்ந்து மஞ்சனமாட்டி அலங்கரித்து வாலில் தருப்பணஞ் செய்துவிடுத்து, சாந்தி சிராத்தம்செய்து ஒரு பட்சமட்டும் அந்தணருக்கு ஆன்ம திருத்தியை யுண்டாக்கி, வெள்ளி, எள்ளு நீர்க்கும்பம் வத்திரம் இவற்றைத்தானம்புரியில் நூற்றொரு தலைமுறையிலுள்ளோர் சுவர்க்கம்புகுவர்.

தந்தை தன்புத்திரனுக்கும், தமயன் தனது தம்பிக்கும் சிராத்தஞ்செய்ய நேரிட்டால் தலைமுறையிலுள்ளோரைக் குறிக்காமல், இறந்தவனைக் குறித்துமாத்திரமே செய்யவேண்டும்.

தாய் தந்தையரைக்குறித்து செய்வானாயின், மூன்று தலைமுறையைக்குறித்தே செய்யவேண்டும். ஆசௌசம் விருத்திமுதலியவை நேரிட்டால் அவை நீங்கியதினத்தில் செய்யலாம்.

கருமஞ்செய்பவன் பஞ்சணையில் துயிலலாகாது; இறந்தவன் குணங்களைச் சிறப்பித்துரைக்கவேண்டும்: எமனைத் துதித்தல்வேண்டும். பத்து நாட்களிலும்பிண்டத்தால்இறந்தவன் சரீரமடைகின்றான் இடையில் அல்லது செய்யாவிடின் தேகம்பெறுதுவருந்துவன்.

இறந்தவனுக்கு ஒன்று,மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொரு நாட்களில் நவசிராத்தம் செய்யவேண்டும். முதல்நாளெவ்

விடத்தில் செய்யப்பட்டதோ அவ்விடத்திலேயே மற்ற பத்துத்தினமுஞ் செய்யவேண்டும். அதன்பின் எந்தச் சாதியாருக்கு எத்தனைநாள் ஆசௌசம் விதிக்கப்பட்டதோ அத்தனைநாளும் அவசியம் பிண்டதருப்பணஞ் செய்தல்வேண்டும்.

### மாசியம்.

எந்தமாதம், எந்த (பக்ஷம்) பக்கம்,எந்தத்திதியில் மரிக்கின்றானோ அந்தத்திதியிலே மாசியஞ் செய்யவேண்டும்.

எவன் வருத்தப்பட்டிறக்கின்றானோ அவனைக்குறித்து ஏகோதிட்ட சிராத்தஞ்செய்யவேண்டும். அதனால் அவன் இன்புறுமின்முன். அந்தச்சிராத்தஞ் சத்திரியன் பன்னிரண்டாம் நாளிலும்,வைசியன் பதினைந்தாம் நாளிலும் செய்தல்வேண்டும்.

சூத்திரனுக்குத் தாய்தந்தையர் மரிக்கினும் மகவுபிறக்கினும் ஒருமாதம் அல்லது ஒருபட்சம் ஆசௌசமுண்டு.

### காலம்.

அவிட்டமுதல் ஐந்து நட்சத்திரங்கள் சிரேட்டமானதால் அவற்றில் மரிக்கின்றவனுக்குச் சமஸ்காரங்கள் உடனே செய்யலாகாது; அவைகழிந்த பின்னேசெய்யவேண்டும். இவ்விதி ஒருவாறே கொள்ளல்வேண்டும். ஏனெனில், உயிர்நீங்கியபின் உடல்வைத்திருக்க உதவாதாதலால் உடனே சமத்காரஞ் செய்தல்வேண்டும். 'கனிட்டாபஞ்சகத்தில் சொல்லியபடி இறந்தகால தோடநிவர்த்தியின்பொருட்டுச் சிலகருமங்களை அதிகமாய்செய்யவேண்டும். மேற்படி நட்சத்திரங்களி லிறந்தவர்களுக்கு நற்கதி கிடையாததால், எள்ளு-நெய்-பொன்-மடி முதலிய தானம்புரியவேண்டும்; இவ்வாறு செய்யாவிடில் செய்யவேண்டியவன் துன்பப்படுவான்.

சபிண்டீகரணம் செய்யாமல் மாசிகமாத்திரம் செய்துவரும்போது ஆசௌசம் நேரில் அம்மாசிகத்தை மறுமாசிகத்தோடு சேர்த்து செய்யவேண்டும்.

உபநயனமற்றவன் கிரியைசெய்ய நேரிடின் கங்கற்பவிதானமாய்ச் செய்யவேண்டும்.

ஒரேகாலத்தில் தூரதேசத்தில் அநேகரிறந்ததாகக் கேள்விப்பட்டால், யார் இறந்தானென்று முன்பு கேட்டானோ அவனுக்கு முன்பும் மற்றவருக்குப் பின்பும் கிரியைசெய்யவேண்டும்.

மறித்ததினந் தெரியாது கேள்விப்பட்டால் அமாவாசையில் சேர்த்துக் கிரியைசெய்யவேண்டியது; தினந்தெரிந்தும் மாதந்தெரியாவிடில் ஆடி-புரட்டாசி-மார்கழி-மாசி யிம்மாதங்களில் இருட்டின பட்சத்தில் அட்டமி அல்லது அமாவாசையிலாயினும் செய்யலாம்.

உபநயன மாவதற்குமுன் தந்தையிறந்தால் புத்திரன் கருமங்களைச் செய்யலாம்.

புத்திரனைப் பெறுதவளிறந்தால் புருடன் கிரியைசெய்யவேண்டும். கணவனில்லாவிடில் தாயத்தாரல்லது அவர்கள் புத்திரர் அல்லது புரோகிதர் முதலினோர் செய்யலாம்.

சபிண்டீகரணஞ் செய்தபின் எக்காரணத்தாலேனும் மறந்து பிதுர்த்தேவ ரல்லாரையும்விட்டு இறந்தவனைக்குறித்து மாத்திரஞ் சிராத்தஞ்செய்யில் மறந்தவன், செய்கிறவன், செய்விப்பவன் மூவரும் நரகமடைகின்றார்கள்.

இறந்தவனுக்குப் பலபிள்ளைகளிருந்தாலும், ஒருவருடமட்டும் ஒருவனே செய்யவேண்டும்.

பாட்டனுயிரோடிருக்கும்போது தந்தையிறந்தால் தந்தைக்கு சபிண்டீகரணஞ் செய்யலாகாது, பின் எப்படியென்றால் பாட்டனிறந்தபின்பு சபிண்டீகரணஞ்செய்து அதன்பின் இறந்ததந்தைக்குச் செய்தல்வேண்டும்.

பிதாவும் பிதாவைப்பெற்ற பாட்டியும் உயிரோடிருக்கும்போது தாயிறந்தால், அவளுக்கு சபிண்டீகரணஞ் செய்யலாகாது; அவ்விருவருமாய்ந்தபின் செய்யவேண்டும்.

கணவனோடு மனைவியும் இறப்பளேல், அவ்விருவருக்கும் தனித்தனியே பிராமணரைவருவித்துச் சிராத்தஞ்செய்யலாம்; பாகமாத்திரமொன்றாய்ச் செய்பினும் பிண்டமாத்திரம் தனித் தனியே போடவேண்டும்.

பன்னிரண்டாம்நாள்விதிப்படிசபிண்டீகரணஞ்செய்தலொராண்டு மட்டும் நித்திய சிராத்தம்செய்யில், எவனைக்குறித்துச் செய்கின்றதோ அவனும் செய்வித்தோனும் மோட்சமடைவர்.

சிராத்தகாலங்களில் சேர்க்கவேண்டிய திரவியங்கள் என்னவென்றால், காரைக்கீரை-தேன்-செந்நெல்-வெண்சாமரை-சாமை-வழுதுணை-பிரண்டை-கிழங்குகள்-நவதானியம் - எள்ளு - உளுந்து-பயறு-கோதுமை-மலையகத்தி-கடுகு-நெய்-பால்-கதலி-அவரை - மா முதலியவைகளே சிறந்தனவாம், என்று எல்லா இந்துமத சாத்திரங்களுங் கூறுகின்றன.

இதுவரையிலும் கூறிய சிராத்த சூதககிரியா பேதங்கள் இந்து சமயாதிகளுக்கே ஒருவாறு கூறப்பட்டது. இதனைவிரிக்கின் பெருக்குமெனக் குறுக்கலாயினம்.

# சாத்திர பேதம்.

## சூசனம்.

இதுவரையினும் உலகமும், சீவர்களும் உற்பவித்த விதமும் சீவர்கள் அனுட்டிக்கவேண்டிய முக்கிய சிலபொது விதிகளையும், ஆசிரமானுட்டானங்களையும், நித்தியகருமாதி சமஸ்காரங்களையும் பிதுரர்காரியங்களையும் கூறினோம். இனி, அவரவர்கள் தேவ-பூஜா-விரத-முத்திபிலக்கணங்களைக் கூறத்தொடங்கி, முதற்கண் அவைகளைப்பற்றி விவரமாகத் தெரிவித்திருக்கும் சாஸ்திர சாரங்களைக் கூற ஆரம்பித்தனம்.

சாத்திரங்கள் தேசத்தாலும்-காலத்தாலும்-சாதியாலும் - சமயத்தாலும் ஆசாரத்தாலும்-தொழிலாலும் அவரவர்களின் விவேகவன்மை மேன்மைக்குத் தக்கபடி அளவிறந்ததால் விகற்பசொரூபமாய், பலபாஷாரூபமாகக் காணப்படுகின்றன. ஆதலின், எமது இந்து சமயாசாரசகிதமாய் அநாதியாய் இறைவனாலும் அவ்வழிப்போந்த அறிஞர்களாலும் வழிமுறையேதோன்றி நமது சருவானுகூலபிரபாவமாய் நமது முன்னோர்களாலும் பின்னோர்களாலும் கைக்கொண்டானந்தித்தும் நாமும் வழிப்பட்டுய்யவேண்டியதுமாய், எம்மதத்தாரும் புகழத்தக்கதாய் சருவாதிக்க சிரேயசாய் சித்தி முத்தியாதி ஞானசொரூபமாயுள்ள சாத்திரபேதங்களைமாத்திரங்கூறுகிறேம்.

## சதுர்வேதம்.

ஆதியில் கடவுள் ஆன்மாக்களின் புண்ணியபாவ விதிவிலக்குகளின்பொருட்டு, பொதுவாய், சில சாத்திரங்களை ஏற்படுத்தினர். அதின்பேர் வேதம் என்பதாம். வேதம் என்னும், சொல்லானது வித் என்னும் தாதுவடியாகப்பிறந்து, அறிவு சொரூபம் என்னும் அருத்தத்தைக் குறிக்கும்.

| | |
|---|---|
| 1. இருக்கு | 3. சாமம் |
| 2. எசுர் | 4. அதர்வணம் |

என நான்குவிதமாக உள்ளது.

இவற்றில், இருக்குவேதம் பதினொரு சாகைகளையும், எசுர் வேதம் நூறு சாகைகளையும் சாமவேதம் ஆயிரம் சாகைகளையும், அதர்வணவேதம் ஒன்பது சாகைகளையுமுடையனவா யிருக்கின்

றன. இவைகளில் * விதிர்வாதம்-அருத்தவாதம்-மந்திரவாதம்-நாமதேயம் என்னும் பகுதிகளைக்கொண்டே சருவதருமங்களையும் கூறுகின்றன.

இவைகளுக்கு அதிகாரிகளையும் அதற்குப் பாஷியசூத்திராதிகாரியங்களையும் பிறசாகைகளையும், அனுவாதி பாகுபாடுகளையும் "போதாயன சம்மிதை" முதலியவைகளிற்காண்க.

வேதம் ஒருவரால் எழுதப்படாதது. அதற்கு "எழுதாக்கிளவி" என்றும், ''ஆற்றலழிபுமென்றந்தணர்காணுன் மறைவிப் போற்றி யிரைத்தேற்றின் புறத்தெழுதார்" என்றுங்கூறி, அதனுற்றான் மறையெனவுங் களித்தனரென்றும் ஆன்றோரில் பிரபலரும் கூறியிருக்கின்றனர். அது எக்காரணத்தாலோ தெரியவில்லை என்னெனின் வேதங்களநாதியானே மறைபோரலனுட்டித்தும், அனுட்டிக்கப்பட்டும் அச்சிடப்பட்டு மிருத்தலினாலும், அவற்றின் பாடியங்களும் சூத்திரங்களும் பிறசாகைகளும் அதனங்கங்களும் உபநிடதாதிகளும் கோஷிக்கப்பட்டிருத்தலானும், எக்கலைகளும் வேதத்தினின்றே தோற்றிற்றாக் கொள்ளலானும், உண்மையினுள்ளதா உத்தேசியாதொழியார். 'இங்ஙனம் எனோ கற்றுங்கல்லாவழிக்கழிறினு' ரென்னின், என்னென்பேம். காலாதீமம் காணப்பெறுது காணுழிவடமொழிக் கண்ணின்றி அவ்வறுமையானுற்ற வேற்றுமையாற்றலென்ப.

## வேதாங்கம்.

மேற்சொன்ன வேதத்திற்கு ஆறு அங்கங்களுண்டு.

அதாவது, 1-சந்தசு என்னும் பாதங்களும், 2-கற்பம் என்னும் கைகளும், 3-வியாகரணம் என்னும் முகமும், 4-சிட்சை என்னும் நாசியும், 5-சோதிடம் என்னும் விழிகளும், 6-நிருத்தம் என்னும் செவிகளும் ஆகிய பிரதான அங்கங்களிருக்கின்றன. இவற்றுள்:—

சந்தசுமந்திரசுலோகங்களுக்கு அக்கரகணிதமும்; கற்பம் ஆசுவலாயன, போதாயன, ஆபத்தம்பாதி சூத்திரங்களில் எக்கியப்ரயோகாதிகளையும்; வியாகரணம்வைதிகசகத்திரார்த்தசித்தியையும்; சிட்சைசபதபாஷிக்கிரண வேதாத்தியாயனுதிகளையும்; சோதிடம் திதி-நட்சத்திர-வார-யோகலக்கினுதிகளையும்; நிருத்தம் வைதிக சத்த நிர்வசனத்தையும் கற்பிக்கும்.

---

* விதிவாதம் பந்தமோட்சாதி விதிவிலக்குகளைக் கற்பித்தல் அர்த்தவாதம் சத்தியரூபமாக ஈசுரனைத்துதித்தல் மந்திரவாதம் கிருத்தியங்களை விளக்குதல், நாமதேயம் கிரியாதிகளின் பெயர்களை விவரித்தல்.

### வேதோபாங்கம்.

அந்த வேதத்துக்கு மிருதி புராண நியாய மீமாஞ்சை என்னும் நான்கும் உபாங்கமாம். இவற்றிலக்கணம் மேற்சொல்லுதும்.

### உபவேதம்.

அந்த வேதத்துக்கு-ஆயுள்வேதம்-அர்த்தவேதம்-தனுர்வேதம்-காந்தருவவேதமென உபவேதம் நான்குண்டு. அவற்றுள், ஆயுள்வேதம் வியாதிநிதானம் வியாதிச்சின்னம் மந்திரௌஷதாதி சிகிச்சைகளால் ஆயுள் ஆரோக்கியாதிகளைக்காட்டும். அர்த்தவேதம் தட்சணை-ஆச்சியம்-சருமுதலான உபகரணங்களாம். தர்மாதி சதுட்டயத்துக்குச் சாதனமாம். தனுர்வேதம் சத்துருவை அழிக்கும் தகுதியான மந்திராஸ்திரபிரயோகங்களைக் கற்பிக்கும். காந்தருவவேதம் சாமவேதாதிகளின், ச-ரி-க-ம-ப-த-நி என்னும் சத்தஸ்வர கீதபிரபந்தங்களை விவகரிக்கும்.

### உபநிடத்து.

அந்த வேதத்தில் ருத்திரம் பிரகதாரண்ணியம் சுவேதாசுவத்ரம், கைவல்லியம், காலாக்கினி, சடம், வல்லி, காத்தியாயனம், பிரமம், நாராயணம், அங்கிசம், பரமாங்கிசம், பாற்கரம், பிரமபிந்து, ஆருணி, அமிர்தபிந்து, சரசபிந்து, பிரமகபாலம், தேஜோபிந்து, வாசநேயம், போதாயனீயம், ஆசுவலாயனீயம், சாங்கியாயனீயம், வாசியாயனீயம், சௌனகீயம், சிவசங்கற்பம், சிரவணம், பராக்கிரமம், புரோட்யம், முற்கலம், முண்டகம், மைத்திராயனீயம் என்னும் முப்பத்திரண்டு உபநிடத்துக்களும் ஞானங்கமான விபூதி, ருத்திராக்காதிகளையும் பிரமஞ்ஞானாதிகளையும் விவகரிக்கும்.

### மிருதி

மிருதிகள் மநுஅத்திரி ஹாரிதர் விஷ்ணு யாஞ்ஞவற்கியர் உசனர் ஆங்கிரசத்பமர் ஆபத்தம்பர் சம்வர்த்தர் காத்தியாயனர் பிரகத்பதி பராசர் வியாசர் சங்கிலிதர் தட்சர் கௌதமர் சாதான்மர் வசிட்டர் என்னும் பத்தொன்பது பெயராலியற்றப்பட்டு அவர்கள் பெயரே நூற்பெயராக வழங்கும் பத்தொன்பதுமாம். இவையே தருமசாத்திரங்களாம். இவற்றுள் சங்கலிதமென்னு மிருதியொன்றுமாத்திரம் பொதுவாயுள்ளது, மற்றப் பதினெட்டு மிருதிகளுக்குள், கிருதயுகத்தில் மநுமிருதியும், திரேதாயுகத்தில் கௌதமமிருதியும், துவாபரயுகத்தில் சங்கலிதமிருதியும், கலியுகத்தில் பாராசாமிருதியும் பிரதானமாயிருக்கும்.

### இதிகாசங்கள்.

அம்மிருதிகளிற்கூறும் விதிவிலக்குகளுக்குக் காரணமாகச்சரிதைகள் கூறும். சிவரகசியம் இராமாயணம் பாரதமென்னும் மூன்றும் இதிகாசங்களாம்.

### புராணங்கள்.

காந்தம்-இலிங்கம்-கூர்மம்-வாமனம்-வராகம்-பௌடியம்- மச்சம்-மார்க்கண்டேயம்-பிரமாண்டம்-சைவம் என்னும் சிவபுராணங்கள் பத்தும்; நாரதீயம்-பாகவதம் - காருடம் - விண்டு என்னும் விஷ்ணுபுராணங்கள் நான்கும்; பிரமம் - பதுமம் என்னும் பிரமபுராணங்கள் இரண்டும்; பிரமகைவர்த்தம் என்னும் அக்கினிபுராணம் ஒன்றும், சேர்ந்து பதினெண்புராணங்களாம். இப்பதினெண் புராணங்களும் வேதவியாச மகாமுனிவர் நாலுலட்சம் சங்கைகளாக ஓதியுள்ளார்.

### உபபுராணங்கள்.

ஆதித்தியர்-காந்தர்-சோமர்-கபிலர்-கௌசிகர்-சாம்பர் - சிவதன்மர்- துர்வாசர்-நாரசிங்கர்-நாரதீயர்-பராசர்-பார்க்கவர்-பிமாண்டர்-மாரீசர்-மானவர்-வசிட்டர்-வாயவியர்-வாருணர் என்னும் இருடிகளாலியற்றப்பட்டு அவ்விருடிகள்பெயரால் வழங்கும் பதினேட்டும் உபபுராணங்களாம். இவ்வுபபுராணங்கள் பதினெட்டினுள்ளும் வைதிகதருமங்களையே கூறப்படும்.

### ஆகமங்கள்.

ஆகமங்கள் இருபத்தெட்டு, அவை:—காமிகம்-யோகசம்-சந்தியம்-காரணம்- அசிதம்-தீத்தம்-சூக்குமம்-சகத்திரம்- அஞ்சுமான் சுப்பிரபேதம்-விஜயம்-நிசுவாசம் - சுவயம்புவம் - அனலம் - வீரம்-இரௌரவம்-மகுடம்-விமலம்-சந்திரஞானம்-விபம் - புரோற்கீதம்-இலளிதம்-சித்தம்-சந்தானசருவோத்தமம்-பாரமேச்சுரம்-கிரணம்-பேதம்-வாதுளம் என்பவைகளாம். இவ்விருபத்தெட்டும் சகுணகிரியாமார்க்கங்களை விசேடமாய் நிரூபிக்கும். இவ்விருபத்தெட்டினுள், காமிகம் முதல் அசிதம் வரையுமுள்ள ஐந்தும்கௌசிகமுனிவர்க்காகவும்; தீத்தம்முதல் சுப்பிரபேதம் வரையுமுள்ள ஐந்தும் பாரத்துவாச முனிவர்க்காகவும், இரௌரவமுதல் விபம் வரையுமுள்ள ஐந்தும் கௌதம முனிவர்க்காகவும்; புரோற்கீதம் முதல் வாதுளம்வரையுமுள்ள எட்டும் அகத்திய முனிவர்க்காகவும், ஈச்சுரனாற்கூறியருளியதாம்.

### உபாகமங்கள்.

பாதப்பாரகம்-பரம்-சிவம்-சத்தி-கலை-பிரகாசம்-பாரதந்திரம்-வசிரக்கியம்-சொற்பிரகாசம் என்னும் ஒன்பது உபாகமங்களாம்.

## சாத்திரங்கள்.

மேற்கூறிய வேதங்களும் அவற்றின் அங்கங்களும் உபாங்கங்களும் உபநிடதங்களும் ஆகமங்களும் கூறியுள்ள விடயங்களின் சாராம்சங்களைச் சொல்லும் வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூர்வமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை என்னும் ஆறுமாம்.

## கலைஞானங்கள்.

கலைஞானங்கள் அறுபத்துநான்கு. அவை:— அக்கரவிலக்கணம்-இலிகிதம்-கணிதம்-வேதம்-புராணம்-வியாகரணம்- நீதிசாத்திரம்-சோதிடசாத்திரம்-தருமசாத்திரம்-யோக சாத்திரம்-மந்திரசாத்திரம்-சகுனசாத்திரம்-சிற்பசாத்திரம்-வைத்தியசாத்திரம்-உருவசாத்திரம்-இதிகாசம்-காவியம்-அலங்காரம்-மதுரபாடணம் - நாடகம்-நிருத்தம்-சத்தப்பிரமம்-வீணை-வேணு-மிருதங்கம்- தாளம்-அத்திரபரீட்சை-கனகபரீட்சை-இரதபரீட்சை-கயபரீட்சை-அசுவபரீட்சை-இரத்தினபரீட்சை-பூமிபரீட்சை-சங்கிராமவிலக்கணம் - மல்லயுத்தம்-ஆக்கிராடணம்-உச்சாடணம்-வித்துவேடணம்-மதன சாத்திரம்-மோகனம்-வசீகரணம்-இரசவாதம்-காந்தருவவாதம்-பைபீலவாதம்-கவுத்துகவாதம்-தாதுவாதம் - காருடம் - நட்டம் - முட்டி-ஆகாயப்பிரவேசம்-ஆகாயகமனம்-பரகாயப்பிரவேசம்-அதிரிசயம் இந்திரசாலம்-மகேந்திரசாலம்-அக்கினித்தம்பம்-சலத்தம்பம்-வாயுத்தம்பம்-திட்டித்தம்பம்-வாக்குத்தம்பம்-சுக்கிலத்தம்பம்-கனனத்தம்பம்-கட்கத்தம்பம்-அவத்தைப் பிரயோகமுமாம்.

## பதினெண்வித்தைகள்.

இதுவரையிற்சொல்லி முடித்தவைகளுக்குள்ளே வேதங்கள் நான்கும், வேதாகமங்கள் ஆறும், உபாங்கங்கள்நான்கும்-உபவேதங்கள் நான்கும் ஆகக்கூடிய பதினெட்டும் வித்தைகளாம்.

## பாடியங்கள்.

மேற்குறித்த சாத்திரங்கள் ஆறினுள்ளே மீமாஞ்சையென்பது மிகவும் விசேடமாய் இருபது அத்தியாயத்திலே இரண்டு பிரிவாகக்கூறும். அவ்விரண்டில் முதற்பாகத்தைச் சைமினி முனிவர் உலகோபகாரமாய்ச் சூத்திரங்களாகப் பன்னிரண்டு அத்தியாயங்களால் வேதாதிகரணமென்னும் பெயரிட்டுச் சாத்திர நியாயத்தினாலே இயற்றியருளியது. அது பூர்வ மீமாஞ்சையென்றும் சைமினிசூத்திரமென்றும் வழங்கும். அச்சூத்திரத்திற்குச் சபரரென்னும் முனிவர் பாடியமியற்றினர். அப்பாடியத்திற்குச் சாபரமென்னு

பெயர். அப்பாடியத்தைப் பாட்டாசாரியர் வார்த்திக ரூபத்தில் ஒரு மதாந்தரநூல்செய்தனர். அதற்குப் பாட்டமென்று பெயர். அப்பாட்டாசாரியாரது பிரபாகசிட்டர் முன்சொன்ன சபரபாஷ்யத்துக்கே ஒருமதாந்தரம் செய்தனர். அதற்குப் பிரபாகரமென்று பெயர். மேற்படி மீமாஞ்சையின் இரண்டாம்பாகத்தை வியாசமுனிவர் சூத்திரரூபமாய் எட்டு அத்தியாயத்தில் பரமான்மக பிரதிபாதிகமாய்க் கூறினர்; அது வியாசசூத்திரமென்றும் உத்தரமீமாஞ்சையென்றும் சொல்லப்படும்; அதில்முதல் நான்கத்தியாயமும் தேவகாண்டமாம்.

## அவைதிக சாத்திரத் திரவியம்.

இதற்குமேல் பிரகற்பதி-ஆகித-சுகதரென்னும் இவர்களால் முறையே சொல்லப்பட்ட சாருவாக-சைந-பௌத்தமென அவைதிக சாத்திரமுமுண்டு.

## சாத்தீகபாஞ்ச ராத்திரம்.

இதற்குமேல் சத்திதத்துவவாசி யென்னும்,ஒரு ஆன்மனும் வாசுதேவனும் முறையே பிரதிபாதிக்கப்பட்ட அநுக்கிரமத்தில் சாத்தீகம்பாஞ்சராத்திரமென சாந்திராந்தரத்துவயமுண்டு.

## இலௌகிக சாத்திரம்.

தன்மந்திரியாதிகளாற் சொல்லப்பட்ட ஆயுள்வேதம் தண்டநீதிமுதலானசாத்திரம் திருட்டபலன்களைப் பிரதிபாதிக்கும்.

## வைதிக சாத்திரம்.

சைமினி - அக்கபாதர் - கணாதரென்னும் இருடீசுரர்களால் முறையே சொல்லப்பட்ட பூர்வமீமாஞ்சை நியாயம் வைசேடிகமென திருட்டாதிருட்ட பலன்களைப் பிரதிபாதிக்கிற சாத்திரத்திரயமுண்டு.

## ஆத்தியான்மிக சாத்திரம்.

கபிலர், பதஞ்சலி, வியாசரென்னு முனிவர்களால் முறையே சொல்லப்பட்ட சாங்கியம், பாதஞ்சலம், வேதாந்தமென ஆன்மஞான பலன்களுள்ள ஆத்தியான்மிக சாத்திரத்திரயமுமுண்டு.

## ஆதிமார்க்கிக சாத்திரம்.

மாயாதத்துவ, வித்தியாதத்துவ, வாகளான உத்திரராற் சொல்லப்பட்ட பாசுபதம், கபாலிகம், மாவிரதமென ஆதிமார்க்கிக சாத்திரத்திரயமுமுண்டு.

மேற்கூறிய சாத்திரங்களுக்குப் பிற்கால் ஒவ்வோர் காலத்தில் வழிநூல், சார்புநூல்முதலிய அநேகங் கிரந்தங்கள் தோன்றி அளவில்லாதனவா யிருக்கின்றன. நூறுவயதோடு தபோவரத்தாற் சிறந்த ஒரு தீவிரதரன் தன் ஆயுள்மட்டும் சாத்திரங்களை முற்றுங் கற்கப் புகுந்தானாயினும் அந்நூற்பெயர்களைமாத்திரங் கற்பதும் கடினம். எனவே, சாத்திரங்கள் பலவாதலின் "கற்றது கைம்மண்ணளவு; கல்லாதுலகளவென்று உற்றகலை மடந்தை போதுகின்றாள்" அன்னம்போற் பிறவிப்பயன் யாதெனத்தேறுதலே அவசியமென்றபடி!

## கலிதருமம்.

கலியுகத்தில் மனிதருக்கு வருணாச்சிரம ஆசாரமுள்ள நடக்கையிராது. அதில்லாதபோது இருக்கு-எசுர்-சாமம் என்கிற வேதங்களினாலே உணர்த்தப்பட்ட யாகாதி சற்கிரியைகளும் இல்லை. மேலும், கலிகாலத்தில் தருமமான விவாகங்கள்நடக்கமாட்டாது. குருசிஷ்ய கிரமமுங்கிடையாது. தம்பதிகள் ஒவ்வொருவருக்கொருவர் நடத்துகொள்ளவேண்டிய தருமமில்லை. அக்கினியில் செய்யத்தக்கதே எக்கியமென்ற முறைமையுமில்லை. எக்குலத்தானானாலும் பலவானெவனோ அவனே யாவர்க்கு மரசனாவான். சகல சாதிகளிலேயும் பொருளுள்ளவனே கன்னிகாதானஞ்செய்யப் பாத்திரமாவன். அல்லது, கல்வியொழுக்கங்க ளுடையவனாகமாட்டான்.

பிராமணன் எந்தவழியிலாவது தீட்சதனாவதேயல்லது, சாத்திரங்களிற் சொன்னவிதிப்படியாலே என்கிறதில்லை. கலியில், விதிக்கப்பட்டதே பிராயச் சித்தமென்பதில்லை. எந்தக்கிரியையாகிலும் பிராயசித்தமாக அங்கீகரிக்கப்படும். எவனுக்கு எந்தவாக்கியம் பிரியமாயிருக்கிறதோ அவை சகலமும் சாத்திரமே யாய்விடும், காளிமுதலான எதுவுந் தேவதையாகக் கொண்டாடப்படும். இன்னானுக்கு இந்த ஆச்சிரமம் தகுமென்பதில்லை. எவனுக்கும் எந்த ஆச்சிரமும் பிரவேசிக்கலாகும். ஒருவன்தான் வேண்டியபடி பட்டினியிருப்பதும், வருந்துவதும், கொடுப்பதும் தவமும் சாத்திரங்களிற்சொல்லிய உபவாசகிருச்சிராதிகளைப்போலே தருமமென்று எண்ணப்படும்.

அன்றியும், அற்பமான திரவியமிருப்பதினாலேயே தாமே களவான்களென்கிற செருக்குச் சனங்களுக்கு உண்டாயிருக்கும். அப்படியே பெண்பிள்ளைகளுக்கு கூந்தல் செவ்வையாயிருப்பதினாலேயே சவுந்தரியகருவம் உண்டாயிருக்கும். கலிமுற்றமுற்றப்பொன்னும் மணியும் நல்ல ஆடைகளும் அழிந்துபோகும் மங்கையர் கூந்தலையே அலங்காரமாகப் பெற்றிருப்பார்கள். மேலும், பெண்

பிள்ளைகள் பொருளில்லாத தம்புருடர்களை விட்டு எவனாகிலும் பொருளுடையவனா யிருந்தால் அவனையே புருடனாகத் தேடிக் கொள்வார்கள். எவன் விசேடமாய்ப் பொருள் கொடுப்பானோ அவனையே சனங்கள் சுவாமியென்று கொள்வார்களேயன்றி, நற் குலப்பிறப்பு முதலானவைகளைச் சுவாமியென்பதற்கு ஏதுவாகக் கொள்ளமாட்டார்கள்.

இந்தக் கலியுகத்திலே புத்திக்குப் பயன்பொருள் சம்பாதிப்பதேயன்றி, ஆன்மஞானத்தைப் பயனாகக்கொள்ளமாட்டாது. அந்தப்பொருளும் வீடுமுதலானவைகட்ட உபயோகிக்கப்படுமே யல்லது, யாகாதி கருமங்களுக்கு உபயோகிக்கப்படாது. அந்த வீடு முதலானவைகளும் தன்போகத்துக்கு உரியவையாக்கப்படுமேயல்லது, அதிதி முதலானவர்களுக்கு எவ்வளவும் உரியவையாக்கப்படாது. பெண்களெல்லாம் சளுக்கனாயிருக்கிறவனிடத்தில் காதலுற்று விபசாரிகளாயிருப்பார்கள். புருடரோ அநியாயத்தினாலும் பணஞ்சம்பாதித்தவரிடத்திலேயே மனம்வைத்திருப்பார்கள். எவர்களும் சிநேகிதர் வேண்டிக்கொண்டாலும் மனதிரங்காமல் தங்கள் காரியத்தையே பெரிதாய்ப் பார்த்துக்கொண்டு அரைக்காற் பணத்திற்கும் ஆசைவைத்திருப்பார்கள். சூத்திராதிகள் பிராமணரைத் தங்களைப்போல் சாதாரணமனிதராக நினைப்பார்களேயன்றி விசேடமுள்ளவர்களாக நினைக்கமாட்டார்.

பசுமாடுகளிலும் சனங்களுக்குப் பால் கொடுப்பதைப்பற்றி மேன்மையான எண்ணமேயல்லாது, சாதியைப்பற்றியதாயிராது. இக்கொடியகாலத்தில் பிரசைகளெல்லாம் பெரும்பாலும் மழையில்லாமையைப்பற்றின அச்சமுள்ளவர்களாய்ப் பசிக்கு பயந்து சோர்ந்தவராய் வானத்திலேயே கண்வைத்துக்கொண் டிருப்பார்கள். மனிதர் தவசிகளைப்போலே காய் கிழங்குகளைப் புசித்துக் கொண்டு மழையில்லாமை முதலானவைகளினாலே துக்கப்பட்டவர்களாய்த் தங்களைத் தாங்களே கொலைசெய்துகொள்வார்கள்.

கலிகாலத்தார் சுகமும் உல்லாசமும் அற்றவர்களாய்த் திரவியம் குறைந்தவராய் எப்போதும் பஞ்சத்தையும் பலவகைத்துன்பத்தையுமே பெற்றிருப்பார்கள். கலிவளர்ந்து வருகையில் எவர்களும் அக்கினிபூசை தேவதாபூசை அதிதிபூசைகளையும் பிண்டோதகதானரூபமான பிதுர்பூசையையும் செய்யாதவராகிமுழுகாமலே யுண்டு காலங்கழிப்பார்கள். ஸ்திரீகளும் மிகு ஆசையுங் குறுகின உடம்புமுள்ளவராய்ப் பேருண்டியுண்டு, மிகு பிள்ளைகளைப் பெற்றுச் செல்வமில்லாதவர்களாய் வருந்துவார்கள். மேலும், இரண்டு கைகளினாலேயுந் தலையை சொறிந்துக்கொண்டு கணவன் மாமனார் முதலானோருடைய கட்டளையை மிகுந்த அநாதரத்தோடு திரஸ்காரஞ் செய்துவருவார்கள். இன்னும், பெண்பிள்ளைகள் எப்படி ஆவார்களென்றால், தேகசுத்தியில்லாமல் தங்களைப் போஷிப்பதி

வேயே நிடமுற்று, ஈனமான எண்ணங்கொண்டு, கடினமாயும் பொய்யாயும் பேசுவோர்களாயிருப்பார்கள்.

குலஸ்திரீகள், தாங்கள் தீயொழுக்கமுடையவராதலால் அப்படிப்பட்டவரிடத்திலே சிநேகித்தவர்களாய்த் தங்கள் புருடனுக்குப் பலவகைப்பட்ட தீங்கையுஞ் செய்துவருவார்கள். பிரமசாரிகள் விரதானுட்டானமில்லாமலே வேதத்தியயனஞ்செய்வார்கள். கிரகஸ்தரோ சிறிதேனும் ஓமஞ் செய்யாதிருப்பதுமின்றித் தக்க பொருள்களையுங் கொள்வார்கள். வானப்பிரஸ்தரும் ஊரிலுள்ள வைகளைப் புசித்துவருவார்கள். சன்னியாசிகள் புத்திரமித்திராதிகளிடத்து அன்புடையவர்களா யிருப்பார்கள். அரசரெல்லாம் சனங்களைப் பரிபாலனஞ்செய்வதை முக்கியமாயெண்ணுமல் அந்தவரி இந்தவரியென்று சாக்கிட்டுக் குடிகளுடைய பொருள்களைப் பறித்துவருத்துவார்கள். எவனெவன் யானைகுதிரை முதலானவைகளை மிகவைத்திருப்பனே அவனவனே அரசனுவான். அப்படிப்பட்ட பலகுனியனுயிருப்பவன் சேவகனுவான். வைசியர் பயிரிடுதல் வாணிகஞ்செய்தல் முதலான தங்கள்தொழிலைவிட்டுச் சூத்திரர் தொழிலாகிய பல தொழில்களைச்செய்து பிழைப்பார்கள். சூத்திரரோ சன்னியாசிக்குறிகளைத் தரித்தவராய்ப் பிச்சைவாங்கியுண்டுகொண்டும், அநேகர் தங்களைப்பூசிக்கும்படி செய்துகொண்டும், பாசாண்டவிருத்திகளா யிருப்பார்கள். சனங்கள் பஞ்சத்திலும் வரியிறுப்பதினுலும் துன்பமுள்ளவர்களாய்க் கோதும்பை யவம் என்னும் தானியம் விளையப்பெற்ற நீசதேசங்களுக்குப்போய்விடுவார்கள்.

இப்படி வருணச்சிரம தருமங்கள்கெட்டு வேதமார்க்கமே ஒளித்துப்போய்ப் பாசாண்டமதங்களைக் கைக்கொண்டு சனங்கள் நடப்பதினுலே அதருமம் விருத்தியாவதுபற்றி ஆயுள் அற்பமாய்விடும். அரசர்களுடைய குற்றத்தினுல், மனிதர் சாத்திரங்களுக்கு விரோதமாய் வீணுனதவங்களைச் செய்வதினுலே பாலியத்திலே மரணமுண்டாகும். பெண்பிள்ளைகள் ஆறேழு வயதுக்குள்ளாகப் பிள்ளையைப் பெறுவார்கள். ஆண்பிள்ளைகளோ ஒன்பதுபத்துவயதுக்குள்ளே பிள்ளையுண்டாக்குந் திறமுடையவராவார்கள். பன்னிரண்டு வயதினுள்ளே நரைமுதலியவை உண்டாகும். ஒருவனும், இந்தக் கலிமுதிர்ச்சியில், இருபது வருடங்களுக்கு மேல் பிழைத்திருப்பதில்லை. கலிகாலத்தில் சனங்கள் அற்பஞானமுள்ளவர்களாய் வீண் தவவேடங்களைப்பூண்டு, கெட்ட நினைப்புடையவர்களா யிருப்பாராதலால், கொஞ்சநாளிலேயே நசித்துபோவார்கள்.

தருமம் எவ்வளவெவ்வளவு இழிந்துவருகின்றதோ அவ்வளவவ்வளவும் கலிவிருத்தியாயிற்றென்று புத்திசாலிகள் அறிந்து

கொள்ளவேண்டும். மேலும், எப்போது பாசாண்டர் விருத்தியாகி றார்களோ, எப்போது வேதமார்க்கத்தை அநுசரித்த சற்புருடருக்குத் தீங்குநேரிடுகின்றதோ, எப்போது தருமவான்களுடைய எத்தனங் கெட்டுப்போகின்றதோ, அப்போது கலிமுதிர்ந்து நிற்கிறதென்றறிந்து கொள்ளவேண்டும். எப்போது எக்கியங்களுக்கு ஈசுரனை ஸ்ரீபுருடோத்தமனை எக்கியங்களாலே சனங்கள் ஆராதிப்பதில்லையோ, எப்போது வேதனுல்சொல்லும் காரியங்களிலே புத்தியில்லாமற் பாசாண்டவாக்கியங்களிற் பிரீதி யுண்டாகின்றதோ, அப்போது கலிமகாபலம்பொருந்தியிருக்கின்றுனென்றறிய வேண்டும். ஏனென்றால், கலியினால் சனங்கள் பாசாண்டராலே கெடுக்கப்பட்டவர்களாய், சிருட்டிகருத்தாவாயும் சருவேசுரனுமிருக்கிற பகவானை ஆராதிக்கமாட்டார்கள். இன்னமும், பாசாண்ட புத்தியுள்ளவர்களாய், “தேவதைகள் ஏதுக்கு? வேதங்கள் ஏதுக்கு? பிராமணராலென்ன? தண்ணீர்விட்டுக் கழுவதினுலென்ன சுத்தி?” யென்று பிதற்றித்திரிவார்கள். இப்படிப்பட்ட அதருமங்களினாலே மேகம் அற்பசாரங்களாகவே இருக்கும். வஸ்திரங்கள் சணற்கோணிகள் போலிருக்கும். மரங்கள் வன்னிமரங்களைப்போலற்பமாகவிருக்கும். ஜாதிகளெல்லாம் சூத்திரசாதிபோலிருக்கும். மேலும், தானியங்கள் அணுக்கள்போலவும் பால் நெய் போலவுமாய்விடும். ஓ முனிவரே! கலியில் சனங்களுக்கு மாமனார் மாமியார் ஆசாரியர் மைத்துனர் பெண்டாட்டிகள் வேண்டுமான தொகையுள்ளவராய்யிருப்பார்கள். அன்றியும் மாதா பிதாக்களிடத்திலன்பில்லாமல் மாமியார் மாமனார்களைப் பிரதானமாயனுசரித்துத் தாய்யார்? தகப்பன்யார்? எவனுக்கெவன்? அவனவன் தன்தன் கருமத்தையல்லவோ அனுசரித்திருக்கிறான்? என்றுபேசி வருவார்கள். இக்காலத்திலே நரர் அற்பபுத்தியுடையவராய், வாக்கு-மனம்-காயம் இம்மூன்றுஞ் சுத்தமில்லாமல், தினந்தோறும் பாவத்தையே செய்துவருவார்ள். சத்தியமில்லாதவர்களுக்கும் சவுசமில்லாதவர்களுக்கும் வெட்கமில்லாதவர்களுக்கும் எந்தத்துக்கங்களுண்டாகுமோ அவையெல்லாம் கலிகாலத்திலுண்டாகும்.

இக்கிரந்தங்கள் கோடிக்கும் யாதோரிறைவனுண்டோ அப்பரமான்மாவின் இலக்கணரூபங்களும் லீலாவிரத்தி பரசாதனங்களும் இப்பிரபஞ்சோற்பத்தியின் இரண்டாவது தேவகாண்டத்துள் கூறப்பட்டிருத்தலின், இவ்வளவிலேயே சருவாபீட்டசித்திப்பிரதாபராகிய எமது தயாவிபவசாட்சாத் திருவருட் சகாயத்தால் உலகோற்பத்தி காண்டத்தைச் சம்பூர்ணஞ்செய்கின்றோம். சுபம்.

முதலாவது உலகோற்பத்திகாண்டம் முற்றிற்று.

இரண்டாவது

# தேவோற்பத்தி காண்டம்.

காப்பு.

கலிவிருத்தம்.

பிரம மானப் பெரும்பொருள் போற்றிமுன்
மரும மாகிய மாமறை யாய்ந்துபின்
சருவ தேவர் சரித்திரஞ் சொல்லமா
தரும தேவதைத் தாட்டுணை யாகுமே.

## கணேசர் உற்பவம்.

பூர்வம் பிரமதேவனது களத்திர வருக்கத்தில் உதித்த விபுதையென்னும் இராக்கத ஸ்திரீயானவள் மரகதனென்னும் தவமுனிவரைக்கூடி, கயமுகா சூரனென்னும் பிள்ளையைப்பெற்ருன். அக் கயமுகா சூரனானவன் தனது பருவந் தொடங்கிக் கைலாயத்திற்குத் தென் பாரிசத்தையடுத்து, ஸ்ரீ உமாமகேஸ்வரனைநோக்கி, அகோரமாகிய தவமியற்றி, எவ்வித ஆயுதத்தாலும், தேவராலும், மனிதராலும் இறவாதிருக்க வரம்பெற்றுக் கொண்டு, அந்தவரத்தின் மகிமையால் தெய்வசிற்பியாகிய விசுவகருமாவைத் தருவித்து, தன்பிதாவின்பெயர்விளங்கத்தக்கதாக மரகதபுரியென்னும் பட்டணம் ஒன்று நிருமிக்கச்செய்து தேவர்கள் யாவரும் பணிவிடை செய்ய அரசாட்சிசெய்து கொண்டிருந்தான்.



அன்றியும், அவன் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நேர் விரோதியாகி யாகாதிகிரமங்களைத் தட்டழிப்பவனும், தவனிலைகளைத் தவிர்ப்பவனும், துற்குணமே தலைகொண்டிருப்பவனும், யாவரும் தன்னை வணங்கவேண்டுமென்ற எண்ணமே குடிகொண்டிருப்பவனுமா யிருந்தான். இவ்வாறு கயமுகாசூரனானவன் நீதியற்று, அநீதியாய், அரசுபுரிந்து வருகிறகாலத்தில், விசாலம்பொருந்திய வெள்ளியங்கிரியென்னும் ஸ்ரீகைலாயப்பொருப்பில் முப்பத்துமுக்கோடி தேவர்களும்,நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளும்,

யட்சர், கின்னரர், கிம்புருடர், காந்தருவர், சித்தர், வித்தியாதரர், அட்டவசுக்கள், அட்டவைரவர்கள், நந்தி, பிருங்கி,சாரதர், பதஞ்சலி, வியாக்கிரபாதர், திக்குதேவர்களாகிய இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயுவு, குபேரன், ஈசானன் முதலிய அந்தரவாசிகளும், யோகபூமியரும் அளவிடுதற்கரிய சிவகணங்களும் புடைசூழத்தக்க சிறப்புப்பொருந்திய சித்திரகூடமென்னும் நான்மணிக்கோபுரமும், ஏழுமணிவாயில்களும் அமைக்கப்பெற்ற எண்ணிறந்த பருதிகளைப்போல ஒளிவீசியசிம்மாசனத்தின்கண் வீற்றிருக்குஞ் சிவபெருமானைநோக்கி அவரது இடபாகத்திலெழுந்தருளிய எமது அன்னையாகிய பார்வதி சொல்லுகிறாள்:

"சுவாமி! நாம் வெளிசஞ்சாரஞ்செய்து வெகுநாளானபடியால் இன்று அடியாளுக்குப் போய்வர எண்ணமுண்டாகியது. ஆதலால், தயைசெய்து வாரும்" என, அதற்கு சிவபெருமான் புன்னைகைகொண்டு "பெண்ணே! உன் கருத்தின்படியேபோய்வரலாம்; வாரு" மென்று சொல்லித் தமது பிரதமசணங்கள் யாவையும் நிறுத்தி, பார்வதிசமேதராய் இடபவாகனரூடராய் வெளிப்பட்டு கைலையங்கிரியைச் சூழ்ந்திராநின்ற சிலசோலைகளின் வளங்களையும் ஆங்காங்குள்ள தடாகங்கள், மண்டபங்கள், ஓடைகள் முதலானவைகளையும் பார்க்கும்படியாக எமது அன்னையாருக்குக் காட்டிக்கொண்டே வருகிறபோது வெள்ளியங்கிரிக்குத் தென் புறத்தில் அதிக இரமணீயமாயுள்ள பூஞ்சோலையின் நடுவிலிருக்கும் மண்டபத்தில் சித்திரத்தாலெழுதி யிருக்கப்பட்ட யானையும் அதன்மேலாகிய அற்புதக்கோலமும் துதிக்கையின் திறமும் மெய்த்திறமுங் கண்ட ஆதிசத்தி பிரமித்து சிவபெருமானைநோக்கி "ஓ! சுவாமி! கால்கரங்கள் முதலிய அவயவங்கள் ஓர்விதமாகவும் சிரசுமாத்திரம் பிரணவாக்க ஓங்காரத்திற்கிடாக மௌனயோகத்தைச் சாதித்துப் பிரகாசிக்கின்றதே! ஆகையால், உலகத்திலுள்ள சகல சிவான்மகோடிகளிலும் மிக்க புண்ணியத்தாலுதித்த கண்ணியரூபமென்றெண்ணி இதை மதிக்கின்றேன். நாதா! வென்று மிகவும் ஊக்கமாய்ப் பார்க்கலுற்றாள். அப்போது பரமேசுவரனும் சற்றுத்திருவுளங் கனிந்தபடியால் சத்தி பெண்யானையாகவும், சிவன் ஆண்யானையாகவும் திருக்கோலங்கொண்டு மிருகயோக்கியதைக் கிணங்க அவ்வனங்கள் முழுமையும் ஓடியுலாவித் திருவிளையாடல் புரிந்து அண்டமளாவித் தழைத்தோங்கிய ஓர் சோலைசூழ்ந்த குன்றையடுத்து 'இதுவேநன்' றென மதித்து, மதன்லீலையைத்தடுத்து, மருவிப்புணர்ந்து பிரிவாற்றாது ஒருமித்திருந்து, உள்ளமகிழ்ந்து,வெள்

ளம்பெருகிய மரகதபுரிக்கடுத்த ஓர்பள்ளத்தில் நீர்விளையாடிக் கரை நீத்தபொழுது 'இருடிபிண்டம் இராத்தங்காது' யென்றும் தேவ பிண்டம் தக்கணமே' யென்றும் மொழிவதற்கிணங்க உடனேபிர்ம சொருபமும், யானைமுகமும், சதுர்ப்புயமும், திரிநேத்திரங்களும், வாமனமாயும், ஓங்காரப்பிரண வாக்கரத்தைப்போலப் பிரகாசமுடைய ஒரு சிசு உதித்தது. அச்சிசுவைக்கண்டு ஆதிசத்தி புத்திர வாஞ்சை அதிகரித்து, விட்டுப்பிரிய மனமில்லாதவளாகி, மயக்கங் கொண்டிருக்க, இக்குறிப்பினைச் சிவபெருமான்கண்டு " ஓ பெண்ணே! நீ இச்சிறுவனைக் காக்க இங்கெவருமில்லையேயென்று தைரியத்தைவிட்டுக் கவலைமேற்கொண்டு, தவிக்கின்றாய். உனக்கேன் இந்தத்துயரம்? விரைவாக என்பின்வா! சொல்லுகின்றேன், இதின் மகிமையென்றார். அதற்குப் பார்வதி"ஓ சுவாமி! தாய் தந்தையர்க ளில்லாத அநாதப்பிள்ளையைப்போல இச்சிசுவை தனியாய் இங்கு நிறுத்திவிட்டுத் தாய்தந்தையர்களாகிய நாம் போவது தருமமோ? அல்லது, இச்சிசுவை இக்காட்டில் காப்பாற்றப்பட்டவர்கள் ஒருவருமில்லையே! மேலும், தங்களுக்கு இச்சிசுவைவிட்டுப் போவதற்கு மனத்துணிவு உண்டாகியதைப்போல அடியாளுக் குண்டாகவில்லையே! நான் என்னசெய்வேன்? சுவாமி!" யெனப்,பரமசிவம் சிரித்து அடி பெண்ணே! இச்சிசுவைக் காப்பதற்கு இன்னுஞ் சற்றுநேரத்தில் தேவேந்திராதிதேவர்களும் நமது பிரதமகணங்களும் வருவார்கள்; ஆதலால், உனக்குற்ற பேதைமைக் குணத்தைவிட்டு சீக்கிரம் என்பின் வருவா' யென. பார்வதி பசுபதியுடன் போய்க்கொண்டே யிருக்கையில் முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம் இருடிகணங்களும் மற்றுமுள்ள யாவர்களும்வந்து, சிசுவைச் சூழ்ந்துகொண்டு, "இனி நமக்கு கயமுகாசூரன் பயம் இன்றேடொழிந்தது, இதி லெள்ளளவும் பிசகில்லை; இச்சிறியஉருவங்கொண்டிருக்கும் இவருக்கும் யானைமுகம்; துட்டனாகிய கயமுகாசூரனுக் கிருப்பதும் யானைமுகமாதலால், இவரே கயமுகாசூரனை யெதிர்த்து வெற்றிபெறுவா" ரென்று, யாவரும் களிகொண்டிருந்தார்கள். அப்போது பார்வதி பரமசிவத்தைநோக்கி, " ஓ சுவாமி! நமது பிள்ளைக்கு நாமகரணங்கூடச் செய்யாமல் வந்துவிட்டோமே! அங்கு அதையறிந்து நாமகரணஞ்செய்யப்பட்டவர்கள் அந்தத்தேவர்கள் கூட்டத்தில் யாரேனுமுண்டோ ?" யென்றனள். அதற்குப் பரமசிவம் " பெண்ணே! நமது புதல்வனைத் தேவகணங்கள் முதலானவர்களும் சூழ்ந்துகொண்டிருப்பதினாலே சர்வதேவாதி சிவகணங்கள் யாவரும் சூழ்ந்துப்போற்றப்பெறுமாகையால்

கணபதியென்ற திருநாமம் அக்கணமேதந்தேன்," எனப் பார்வதியிருந்த சந்தோடத்துடன் சிவபெருமானோடு கைலயங்கிரியடைந்தாள்.

தேவகணங்களும் பிரதமகணங்களுஞ் சூழ்ந்திருக்கையில் கணநாதரென்கிற அசரீரிபெற்று அவ்வாறே வாழ்த்தினர்.

இப்பால் கணநாதனைத் தேவர்கள்முதல் யாவருஞ் சூழ்ந்துக் கொண்டிருப்பதை கயமுகாசூரன் தூதர்களும் சிலராக்கதப்பெண்களுங்கண்டு உள்ளேபுக! அங்குயானைமுகமும்நான்குகரங்களும் வெண்மையான ஆடையும் பாசம் அங்குசமும் தரித்து விளங்கும் சிறுபிள்ளையைகண்டு வியப்புற்றதுமன்றித் தேவர்கள் முதலானோருக்கும் உண்டாயிருக்குந் திடதைரியத்தையும் உணர்ந்து அங்கேநின்றும் கயமுகாசூரனுடைய சபைக்குவந்து பணிந்து சொல்லுகிறார்கள். "ஓ அரக்கர்சிகாமணியாகிய எமதிறைவனே! தங்களுக்கு ஏவல்செய்துகொண்டிருந்த மிகவும் அற்பராகிய தேவகணங்களுக்கும் முனிகூட்டங்களுக்கும் இன்றையதினம் உண்டாயிருக்கும் குதூகலத்தையும் சந்தோடத்தையும் பார்க்குங்கால் இன்றுமுதல் அரக்கர் வமிசத்தை அவர் மதிக்கமாட்டார்போலும்! தமது ஆக்கினையைத் தவறிவிட்டார்கள்போலுந் தோற்றுகிறது. நமதுகோட்டையின் அகழிக்குப் புறம்பாகிய பெருவெளியில் அரக்கனுமின்றித் தேவனுமின்றி மனிதனுமின்றிப், பலரூபம்பெற்ற ஓர் சிறுவனைச் சூழ்ந்திருக்கும் தேவகூட்டங்களைக் கணக்கிட எம்மால் முடியாது. அவர்கள்செய்யும் பேரிரைச்சலானது நாம் சுகமடைந்தோம்; பயத்தையொழித்தோம்; அரக்கர் குலத்தைமுடித்தோம்; இனி தவத்தைதொடுத்தோம். என்னும் வீராவேசத்தோடு கூடியதாயிருக்கின்றது. அவர்கள் செருக்கைப்பார்த்துப் பயந்து தம்திடம் அடைக்கலம் புகுந்தோம்" என்று மேலுமேலும் அரக்கர்கள் அபயமிட்டோடி வந்த கூக்குரலைகேட்ட கயமுகாசூரன் அதிககோபாவேசம் மேலிட்டவனாய், கண்களானது கம்மாளனுலையிலிட்டு உருக்கிய செம்பைப்போலச் சிவக்க, மீசைகள்துடிக்க, புருவம்நெறிக்க ஆச்சிராகுரோதனாய், 'அமைச்சர்கா' ளென்று கூவியழைத்துச் 'சீக்கிரம் நமது சேனைவெள்ளத்தைச் சித்தப்படுத்துங்க' ளென்று கடுகடுத்துக்கூறி, உடனே கயமுகசூரன் யுத்தசன்னுத்தனாகி அரண்மனையைவிட்டு வெளிப்படுகிறபோது சில துர்ச்சகுனங்களெல்லா முண்டாயின. அவையாதெனில்; ஆகாயத்தினின்று குறைக்கொள்ளிகள் வீழ்ந்தன; இரத்தமழைபெய்தது, நரிகள் ஊளையிட்டன; நட்சத்திரங்களுதிர்ந்தன; ஓர் அரக்கியின் அழு

குரலோசைகேட்டது; அந்தப்படி பற்பல அவசகுனங்கள் யாவும் உண்டாயின; இவைகளையெல்லாம் பார்த்தும் அந்தக் கயமுகாசூரன் கிஞ்சித்தும் மனங்கலங்காமல் வீராவேசமுடையவனாகி, சேனைகளின் திரள்களுடன், அகழிக்குப் புறம்பேயிருக்கும் பெருவெளியின் சமீபமாகவந்துநின்று, இரணபேரிகை பறையச்செய்தான்.

இவ்வோசையைக்கேட்ட தேவர்களும் இருடிகளும் திடுக்கிட்டு 'இதுவென்னவோ' யுத்தத்திற் காயத்தமான இரணபேரியின் ஓசை கேட்கிறதேயென்று பார்க்கிறபோது, சேனைவெள்ளங்களுடன் திரண்டுவந்திருக்கும் கயமுகாசூரனது இரதத்தைக்கண்டு பிரமித்து, ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளுகிறார்கள். எப்படியெனில், கொடியதுட்டனாகிய இந்தக் கயமுகாசூரன் இச்சிறுபிள்ளையின்பேரில் யுத்தஞ்செய்யச் சித்தப்பட்டு வந்தவனாகத் தோன்றுகிறதே! இதென்ன அநியாயம்? தனக்குச் சமானமுடையவர்களிடத்திலல்லவோ யுத்தஞ்செய்யவேண்டும்? அதைவிட்டு இக்குழந்தைபிறந்து நான்குநாள்கூட ஆகவில்லையே! அன்றி, இக்குழந்தை இவனுக்கு என்ன தீங்குசெய்தது? ஒன்றுங் காணோமே!' யென்றும், சிலர் 'ஐயோ! இச்சிறுகுழந்தை பிறந்ததுமுதல் இவ்விடத்தைவிட்டு எங்கும் போகவேயில்லையே!' யென்றும்,பலவாறுபேசி முடிவில் 'பிரணவசொரூபியாகிய இச்சிறுகுழந்தையினால் இவ்வரக்கன் மடியக்கடவ' தென்று பலதேவரும் ஆசிகள்கூறி, அன்னவர்கள் யாவரும் அச்சிறுகுழந்தையைத் தனியேவிட்டு அருகிருந்த பூஞ்சோலைகளில் மறைந்து கொண்டு "பரமேசனே! உமதுதிருக்குமாரனுக்கு துணையாயிருந்து யாதொரு ஆபத்தும் நேரிடாமல்காத்து இரட்சிக்கவேண்டு" மென்றும், "எமது அன்னையாகிய பர்வதராசகுமாரியே! தங்கள் புதல்வரைக் காக்கவேண்டிய கடமை தங்களதே"! யென்றும் பிரார்த்தித்துக்கொண் டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் கயமுகாசூரனானவன், யுத்தஞ்செய்யும்படி தன்சேனைகளுக்கு உத்தரவுசெய்தான். உடனே சேனவீரர்களும் தங்கள் தங்கள் ஆயுதங்களாகிய பாலா, ஈட்டிதோமரம், பிண்டி, பாலம், கதை முதலானவைகளை குழந்தைவடிவமாகயிருக்கும் பிரணவத்தின்மீது பிரயோகித்தார்கள். இடையில் விற்றிறம் கைத்திறம் மெய்த்திறமுடைய சில வில்வீரர்கள் தங்கள் தங்கள் வில்லை வளைத்து நாணேற்றி குணத்தொனிகாட்டி, மேகாத்திரம், நாகாத்திரம், மின்னலாத்திரம், இடியாத்திரம், வாயுவாத்திரம், அக்கினியாத்திரம், பிரமாத்திரம், சிலீமுகாத்திரம்,

இந்திராத்திரம், சந்திராத்திரம் முதலாகிய அநேகமாயிரம் பாணங்களை சோனாமாரியாகப் பொழிந்தார்கள். இதைக்கண்ட பிரணவ சொரூபியாகிய சிறுகுழந்தை புன்சிரிப்புடன் தன் கையிலிருந்த அங்குசத்துக்குச் சகல அதிகாரமுந் தந்து தனக்கு முன்னதாய்ப் பூமியில் நட்டுவிட்டு ஒன்று மறியாததுபோ லிருந்தது அப்போது அரக்கர்களால் விடப்பட்ட அத்திர சத்திரங்கள்யாவும் ஒன்றின் பின் றொன்றாக வந்தவைகளைப் பிரணவ சொரூபத்தின்மேல் படவொட்டாமல் முன்னேயிருந்த அங்குசமானது கவளீகரஞ் செய்தது. இதனைக்கண்டு அரக்கர்கள் 'இதுவென்ன ஆச்சரியம் நமது பாணங்களின் முன்னின்று உயிர்தப்பினவர்கள் நாளது வரையில் ஒருவருமில்லை, அப்படிக்கிருக்க நாம்விட்ட பாணங்களெல்லாம் விழலுக்கிறைத்த நீரைப்போல இச்சிறுவன்மேல்கிஞ்சித்தும் படாமல் எப்படி மாயமாய்ப்போய் விட்டதென்று ஆச்சரியமு மாச்சரியமுங்கொண்டு, மேலுமேலும் பாணமழை பொழிய அதில் ஒன்றேனும் கணபதியின்பேரில் படவொட்டாமல் யாவற்றையும் அங்குசம் கவளீகரஞ் செய்துவிட்டது அதனால் அரக்கர்படைக்கடலுக்கெல்லாம் கையும் மெய்யும் சலித்து, இதுவென்ன புதுமையாக விருக்கிறது! எத்தனையோ யுத்தஞ்செய்து செயமடைந்தோம்! ஒருகாலத்திலாவது நமக்கு இப்படிப்பட்ட ஆயாசமும் அசக்தியும் நேரிட்டதில்லை! இதைப்பற்றி யோசிக்குமிடத்தில் இச்சிறுவன் மெத்த அசகாய சூரனாகும். ஆதலால், இவன் தனக்கு ஒருவருந் துணையின்றித் தனியேயிருக்கிறான். அன்றியும் இவனுக்கு அத்திர சத்திரங்கள் முதலானவை கிடையாது. மேலும்,இவன் இருந்தயிடத்தைவிட்டு எழுந்திருக்கவுமில்லை. இவன் எப்படிப்பட்ட வீரனோ! இன்று இவனால் நாம் யாவரும் மடியும்படி நேரிடும் என்று தோன்றுகின்றது. அரக்கர் குலத்திற்கு நாசமும், தேவர் குலத்திற்கு நன்மையும் உண்டாமென்பதற்கும் தடையே யில்லையென்று நிச்சயித்து, இனி எத்தனைநாள் பூமியிலிருக்கினும் ஒருநாளைக் கிறப்பது உண்மை யாதலால், நம்மால்கூடியமட்டும் போர் புரிவோம். செயாப செயத்தின்படி முடிகிறதென்று யோசித்துப் பாணப்பிரயோகஞ் செய்வதற்கு சித்தப்பட்டிருக்கிறபோது, கணபதியானவர் அருகில் தழைத்திருக்கும் தருப்பைப் புல்லில் ஒரு திரண மளவுகிள்ளி, அதற்குப் பிரணவமந்திரத்தையோதி, வல்லவனுக்குப் புல்லாயுதமென அரக்கர்மேல் ஏவினார். அந்த அற்பமாகிய புல்லாயுதமானது அதிக உக்கிரமாகச்சென்று,கயமுகாசூரன் சேனைகளையெல்லாங்கொன்று இரணக்களத்தைப் படுகளமாக்கிக்

கயமுகாசுரனைக் கொல்லக் கிட்டியபோதும், அவன் மேகமண்டலத்தில் போயொளித்திருந்து சேனைகள்யாவும் மடிந்துபோயினதற்காக மெத்தவுங்கிலேசப்பட்டு ஒருவாறுகத்தேறி, இராக்கதமாயையால் பெருச்சாளி உருவங்கொண்டு, பூமியோடு பெயர்த்துக்கொண்டோட உத்தேசித்து, பிரணவத்திற்குப் பின்பாகவந்துபூமியைக்கிண்டி முதுகடைவாய் நுழைந்து அசைக்கின்றபோது, அரக்கனது வஞ்சனைக்குப் புன்சிரிப்புகொண்டு கணநாதர் என்னசெய்தாரென்றால், கள்ளவேடம் புனைந்துவந்த அவனை தன்னுடைய பலங்கொண்டு பூமியில்அழுத்துகிறபோது விழிகள்பிதுங்கிநாவைக்கடித்து பிராணன் நீங்குகிற சமயம் நேரிட்டபடியால், மாயரூபியாகிய கயாமுகாசுரன் கணநாதரைப் பலவாறுதுதித்து ஓ சுவாமி தங்களுக்கு எப்போதும் இதே வாகனமாக இருக்கிறேன்! என்னைக் கொல்லாமல் காக்கவேணுமென்று வேண்டிக்கொள்ள, கணநாதர் கருணைகூர்ந்து சூரன் சொற்படியே அவனைத்தனக்கு அந்த கயமுகாசுரன் சொற்படியே அவனை தனக்கு பெருச்சாளி வாகனமாகக்கொண்டார். அதைப்பற்றி ஆகுவாகனன் என்றபெயர் அவருக்கு உண்டாயிற்று.

மற்றொருவிதம்.

ஆதியில் சிவபெருமான் பருவதராச புதல்வியாகிய பார்வதிதேவியை மணம்புரிந்து திருக்கைலாயகிரியை அடைந்து இருக்கிறபோது ஒருநாள், பார்வதிதேவியை அவர் தோழிபார்த்துத் தாயே! சிவபெருமானுக்குப் பிரதமகணங்கள் கணக்கின்றி யிருக்கின்றார்கள். அதுபோல, தங்களுக்கும் ஒருவரிருந்தால் நன்றாக இருக்குமெனப் பார்வதி அவள்கருத்துக்கிசைந்து நீராடச்சென்று அங்குசேகரித்து வைத்திருக்கும் மேன்மையாகிய தேவபரிமளசுகந்தச்சாந்தை இரண்டுகைகளாலும் எடுத்துக்கொண்டு தன் இறைவனாகிய சிவபெருமானது திருவுருவை மனதில் கவனித்தும் துதித்தும் அப்பரிமளச்சாந்தைத் திரட்டிப் பிடித்தபோது உற்பவித்தாரென்றும் சிலர் சொல்லுவார்கள். இக்காரணத்தால் இவருக்குச் சத்தி விநாயகரென்று பெயருண்டாயிற்று.

கணேசர் விவாகம்.

இவ்வதிசயங்களையெல்லாம் மறைவிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த தேவர் முதல் யாவர்களும், அதிக ஆனந்தமடைந்தவர்களாகி ஒன்று கொண்டாடி, பின்பு கணநாதரை அழைத்துக்கொண்டு கைலயங்கிரியைச் சேர்ந்தார்கள். அப்போது கணநாதர்தாய் தந்தையர்களுக்கு இணங்கி வணங்கி நின்றார். அப்படி வணங்கிய

குமாரனைப் பரமசிவம் எடுத்துப் பலவாசிகள் கூறி, பார்வதியிடம் கொடுத்தார். அவ்வன்னையும் கட்டியணைத்து முத்தந் தந்துப் பல மங்களவாழ்த்து வாழ்த்தி, மிகவும் பிரியத்துடன் வளர்ந்து வருகிறபோது, கணநாதரும் தாய் தந்தையர்களுக்கு அன்புண்டாகும்படி மிகவும் விநயமாய் நடந்துகொண்டுவந்தார். சிவபெருமானும் கணபதியிடத்தில் அதிகமான புத்திரவிருப்பத்தைவைத்திருந்தார். இப்படி யிருக்கையில், பார்வதி பரமேசுவரர்களிருவரும் கணபதிக்குத்தக்கவயது வருமளவில் இனித் தாமதமின்றி மணமுடித்துப் பார்க்கவேண்டுமென்ற விருப்பங் கொண்டனர். இப்படிக்கிருக்கிறபோது, திரிலோக சஞ்சாரியாகிய நாரதரெழுந்தருளிப் பார்வதி பரமேசுவரரைச் சேவித்து அவர்களால் மணத்துக்குரிய விசேடங்களைக் கேட்டுச் சந்தோஷத்துச் சிவபெருமானை நோக்கிச் சொல்லுகிறார்: தெள்ளமுதாகி தெவிட்டாத வள்ளலே! பிரமதேவன் புதல்விகளாகிய சித்திபுத்தி யென்னும் மிகச்சுந்தரமுடைய கன்னிகைகளை இக்கணபதிக்கு மணம்புரிவித்தால் மெத்த நன்றாயிருக்குமென, அதற்குச் சிவபெருமான் சந்தோடமடைந்து ஓய் நாரதரே நீர்சொல்லிய கன்னிகைகள் என் புதல்வனுக்குத் தக்க பெண்களாகையால், விரைவாக நீர்தானே சத்தியலோகத்துக்குச் சென்று இங்கு நடந்தவைகளைப் பிரமனுக்குப் புகன்று, இப்படிச்செய்வது சகலருக்கும் நன்றென்று மகிழப்பேசி யிசையச்செய்து, அவ்விடம் விட்டகன்று இங்குவந்து இந்தச் சுபகாரியத்தை நடத்திவைத்துப் பின்பு எங்காகிலும் செல்லும், என்ற பரமசிவத்தின் வார்த்தைப்படி நாரதர் சத்தியலோகத்துக்குச் சென்று சதுர்முகனிடத்திற் கலந்துபேசி முடிவு செய்துகொண்டுவந்து தேவர்கள் முனிவர்கள் நாவலர் பாவலர் காவலர்முதலிய யாவரும் வந்திருந்து, பரமசிவமும் பார்வதியுங்கண்டு களிக்கப், பிரமதேவன் வேதவிதிப்படி ஓம் சாந்திமுதலிய சகலமும் நடத்த, சருவாடம்பரத்துடன் கணபதிக்குத் திருமணமுடித்து, தங்கள் தங்க ளிருப்பிட மேகினார்கள். கணபதியும் சித்திபுத்திகளுடன் கூடிக்கலந்து தழுவி சித்தியென்னும் மனைவியினிடம் இலக்கன் என்னும் பிள்ளையும் புத்தியென்னும் மனைவியிடம் இலாபன் என்னும் பிள்ளையும் பெற்றுப் பரமானந்தமுற் றிருந்தார்.

## பூசாவிரதக் கிரமம்.

அதன் பின்னர் ஒருநாள் சிவபெருமான் பிரமன் தேவர்கள் முதலானோர் முன்னிலையில் கணபதியைப் பூசித்தனர். இரண்டாவது மகாவிஷ்ணுவும், மூன்றாவது பிரமதேவரும், நான்காவது பார்வதியும், பின்பு தேவர்கள்யாவரும் மிகுந்த சந்தோடத்துடன்

பூசித்தனர். இவ்வாறு யாவரும் பூசித்துச் சகலத்திற்கும் பிரபுவா யிருக்கும்படிச் செய்தார்கள். அப்போது சிவபெருமான் கணேச ருக்குப்பலவரங்களைக்கொடுத்து உன்பெயர் 'விக்கின ஹந்தா' என் றார். (இதின் பொருள் யாதென்றால், விக்கினங்கள் அனைத்தையும் போக்குபவன்; சகல கணங்களுக்குந் தலைவனான நீயாவரும் பூசிக் கத்தக்கவனாக வேண்டுமென்பதே) இவ்வாறு சிவபெருமான் ஆசி கூற, சிவகணங்கள் மங்களவாத்தியங்கள்முழக்க, பெரியோர்கள் யாவரும் ஆசிர்வதிக்க, தேவர்கள் கந்திருவர்கள் அச்சரசுகள்வாத் திராட்டிய சங்கீதங்கள் பாடினார்கள். மீண்டும், சிவபெருமான் சபையி லுள்ளவர்களைப்பார்த்து ஆவணிமாத சுக்கிலபட்ச சந்தி ரோதயகாலத்தில் இராத்திரி முதற்சாமத்தில் உச்சகிரக பஞ்சக யோகத்தில் பார்வதிதேவி கணபதியை ஈன்றபடியால் அச்சமயத் தில் கணபதியைப் பூசித்தல் ஓர் உத்தமோத்தமமாதலால், அன்று முதல் மறுவருடம்வரும் அந்தத் திதிவரையில் ஒவ்வொரு சதுர் த்திகளிலும் விரதத்தை நியமத்துடன் எமது கட்டளைப்படிச் செய் யவேண்டும். இப்படிச் செய்வோர் தமது குடும்பத்தில் சகல சவுக் கியங்களையும் பெற்றுச் சுகமடைவார்களென்று கட்டளையிட்டார்.

## கணநாதர் பிரபாவம்.

மேலும், இவ்விரதமானது வருடந்தோறும் ஆவணிமாதம் அமாவாசைகடந்த வளர்பிறை சதுர்த்தி திதி உச்சிப்போது வரை யில் உள்ளதினத்தில் செய்பத்தக்கது. இந்த விநாயகமூர்த்தியை வாசித்தி விநாயகர், என்று பெரியோர்களால் துதிக்கப்படுவார். இம்மூர்த்தி மகாகணபதியின் மூர்த்தி பேதமேயாக இவரை உண் மை அறிவு ஆனந்தவடிவமாகிய சிவமென்றும், சிருட்டி திதி சங் காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களை நடத்தும் சத்தி மயமென்றும் பிரமா விஷ்ணுமுதலிய எல்லாத்தே வர்களையும் சகலாண்டங்களையும் தமக்கு வடிவமாகக்கொண்டிருத் தலால்,விசுவமூர்த்தி யென்றும் எல்லாக் கலைஞானங்களுக்கும் எல் லாக் கருமங்களுக்கும் மூலகாரணராதலின் வேதமாதாவாகிய பிர ணவத்தின் பொருளாயுள்ள இவரைச் சாத்தேயர் 'சத்திக்கணபதி' என்றும், சைவர்கள் 'சிவகணபதி' யென்றும், வைணவர்கள் 'விஷ்ணு' வென்றும், சாங்கியர், 'தத்துவ கணாதிபதி' யென்றும், அத்துவைதிகள் 'இந்திரிய கணாதிபதி' யென்றும், பூர்வ மீமாஞ்சி கன் 'தேவகணாதிபதி' என்றும், வையாகரணிகள் 'சத்த கணபதி' யென்றும், ஆயுள்வேதியர் 'மூலகணபதி' யென்றும் பலவாறு அருச்சிக்கின்றனர்.



கிருட்டிண எசுர்வேதம் அஉ-வது பிரசினம் நாராயணோபநிடத்தில் கூறப்பட்ட பன்னிரண்டு காயத்திரியுள் ந-வது காயத்திரி, கணபதி காயத்திரியாம்.

அதே சங்கிதை நான்காவது காண்டம் ஸ்ரீ உருத்திர நமோவாகப் பிரசினத்தில் கணங்களுக்கும் கணபதிக்கும் வேதவாக்கிய நமஸ்காரங் கூறப்பட்டுள்ளது.

இருக்கு எசுர் சாமம் என்னு மூன்று வேதத்திலும் கந்நாந்துவா, கணபதி, சாதனம் என்ற ஒரேகணபதி மந்திரங் கூறப்பட்டுள்ளது.

அன்றியும், கணேச உபநிடத்து விக்கினஹரவித்தை காணபத பிரமவித்தை முதலியன வேதாந்தத்துள் பிரசித்தமாக இருக்கின்றன.

சைவாகமம் காணபதாகமம் பார்க்கவபுராணம் காந்தம் முதலிய நூல்களுள்ளும் பிரம சூத்திரத்திற்குக் கபிலமுனிவர் செய்த காணபதபாடியத்துள்ளும் விரித்துக் கூறப்பட்ட மான்மியங்கள் பலவுண்டு; அன்றியும், இவருக்கு நாமங்களும் அட்டோத்திரவிதிகளும் பலவுண்டு. அவை உபதேச முகத்தால் தெரிந்துகொள்க.

மேலும், இக்கணபதியின் சதுர்த்தி விரதவிதியைப் பதுமபுராணத்துள் அகத்தியரால் ஸ்ரீராமருக்கும், காந்தத்துள் தூர்வாசமுனிவரால் ஸ்ரீகண்ணருக்கும், பவுடயோத்தரத்துள் ஸ்ரீகண்ணரால் தருமராசருக்கும், பிரமாண்டத்துள் நாரதரால் பகீரத மகாராசனுக்கும் உபதேசித்தபடி கூறப்பட்டுள்ளது.

---

## சுப்பிரமண்ணியர் உற்பவம்.

### துதி.

#### நேரிசை வெண்பா.

கந்தா கடம்பா கதிர்காமா நற்சிவசம்
பந்தா சரவணோற்ப வாகங்கா—மைந்தாவே
லாகுமரே சாவுமைபா லாசுப்ர மண்யாகு
காகுணநீ தாவாதா கா.

இப்பூமியின்கண் அறுபத்தாறு கோடி இராக்கதர்களுக்கு அரசனாகிய அசுரேசன், நந்திதேவரிட்ட சாபக்கொடுமையினால் கேசவனாலும் தேவேந்திரனாலும் அளவற்ற இராக்கதர்கள் மடிந்தபடியால் வன்மைகுன்றித் தன் புதல்வியாகிய சுரசையென்பவ.

ளைப் பரிவாக வளர்த்து வருகிறபோது, குரவனான சுக்கிரன்



அங்குச்சென்று அவளுக்கு மாயவித்தைக ளனைத்தையும் மந்திர பூர்வகமாகப் போதித்து அவள் வல்லபத்தைப் பார்த்து மாயை யென்னும் பெயரிட்டு இராக்கதர் சிறுமையினையும் தேவர்கள் சிறப்பினையும் அரசனுக்கிருக்குங் கவலையையும் தெளிவுற எடுத்துக்காட்டி "இனி உன்னால்தான் இக்குலந் தழைக்கவேண்டும். உன் தந்தையின் மனவருத்தமுந் தீரவேண்டும். ஆகிலும், மின்னலி னொளியினாலே தாழை புட்பிக்கும்; என் மகிமையினால் மழைபெய்யும், அவைபோலவே உன்னால்அசுரர்குலம்விருத்தியடையவேண்டி யிருக்கின்றது; ஆகையால், நீ தடைசொல்லாமல் இலக்குமிக்கு மேலான வடிவுகொண்டுபோய் வனத்திலே தவஞ்செய்யுங்காசிபரை மயல்மூட்டி இரவில் அவரைப் புணர்ந்து வலிய பிள்ளைகளைப் பெற்றுப் பெயரிட்டு, பரமசிவத்தைக்கருதிச்சிறந்தவரங்களைப்பெறும்படி அவுணருக்கடுத்த வேள்விகளையும் விரதங்களையும் மந்திர பூர்வகமாகப்போதித்துப் பிள்ளைகள் நலத்தைப்பெறவும் விரோதிகளாகிய தேவர்கள் பழியின் மூழ்கவும் அரியதவங்களைச்செய்ய அனுப்பிப்பின் திரும்பக் கடவாய்" யென்று சொல்லினர். அதைக் கேட்டு மாயையானவள் சுக்கிராச்சாரியரை வணங்கி "ஓ சுவாமி! தங்கள் கட்டளைப்படியேசென்று முடித்துவருகிறேன்" என்று தந்தையினிடஞ்சென்று ஆசானிட்ட கட்டளையையோதி விடைபெற்றுக் காசிபர் தவமியற்றும் வனத்தைநாடி இலக்குமியும், இரதியும் திலோத்தமையும், மோகினியும் ஒருவடிவங்கொண்டதை யொத்து, உலகிற்கிடையாத மிகுந்த அழகுவாய்ந்த உருவுகொண்டு, பூதலவாசிகளும் பாதலவாசிகளும் விண்ணுலகத்தாரும் தனது எழில்நலத்தைக் காணப்பெறின், மாரன் கணைகளுக்கிலக்காகி மயங்கிவாடித் தன்னைத்தொடரும்படி அன்னத்தைப்போல மெல்லென உலவி, அவ்விடத்தில், சுகந்த பரிமளமிகுந்த மலர்கள்வாய்ந்த அழகிய பூஞ்சோலைகள் மதுரமான சலசமர்த்தியுள்ள தடாகங்கள் சித்திர மண்டபங்களாதிகளைத் தன் வல்லபத்தினாலுண்டு பண்ணி மறைந்திருந்தாள்; அப்போது ஐம்புலன்களையொடுக்கிப் பொறிகளையடக்கிச் சித்தத்தைச் சிவத்தின்கண் செலுத்தி தவத்தி

னின்ற காசிபர், கண்களைவிழித்து நூதனமாக விளங்குகின்ற சிங்காரங்களைப்பார்த்து அற்புதமடைந்து, இதனையாவர் நிருமித்தாரெனப் பலதிசையிலும்நாடி ஒருவரையுங் காணாது, மாயையின் வஞ்சகத்திற்பட்டு ஞானவுணர்வை மறந்து பிரமித்துத் திகைத்து, பொன்னுலக மிரங்கியதோ அளகாபுரம் நழுகியதோ அல்லது பிரமசிருட்டிதானோ சிவன்செயலோ இன்னதென்று நிதானிக்கப்பட வில்லையேயென்று யாதுந்தோன்றாமல் மனவாட்டமுற்று, தவத்தினைத்தொடங்கத் தமதிடத்துக்குச்சென்றார். அப்போது அதையறிந்த மாயையென்பவள், இது சமயமெனக்கருதி வயிரக்குன்றினிடத்துச் சோடசகலைகளை வாய்ந்த சந்திரனைப்போலக் காணப்பட்டாள். காசிபர் அவள் வடிவழகை நோக்கி 'சகத்தினை விளங்கும் இலக்குமியோ! அசுரரை மயக்கிய மோகினிதானோ! என்து பேரறிவைக் கலக்கிய இவளையாரெனமதிப்பேன்! இவள் காலுக்கு இந்திராணியும் ஒவ்வா' ளெனப் பலவிதமாகத் துதித்து மெல்லெனநெருங்கி இவ்வனத்துக்கோ ரணியாகநிற்கின்ற பெண்ணரசியே! உமது வரவென் பாக்கியவசமாகும். ஆதலால் நினது குலம் இருப்பிடம் பெயர் தாய்தந்தை முதலியவைகளைத் தயவுசெய்து சற்றே சொல்லுவாய், என்றுகேட்டார். அப்போது மாயை முனிவரைநோக்கி 'தவத்தினை விரும்பினோர்க்கும் மகான்மார்களுக்கும் உம்மைப்போன்றவர்களுக்கும் இவற்றால் ஆகவேண்டியதென்ன? அன்றியும், ஞான அறிவில்லாத மனிதரைப் போலப் பேசிக் கிட்ட நெருங்கிவருவது நீதியல்ல. நீர் தவஞ்செய்யப்போ' மென்று மறுத்தாள். காசிபர் மனங்கரைந்து 'பெண்கள் சிகாமணியே! தவசித்தி கிடைத்தபின்பும் வருந்துவதேன். பெயர் முதலியதும் பின்னிட்டுத் தெரிந்துகொள்ளுகிறேன். விரைந்து காமனேப் என்னை வருத்துகின்றதால், சற்றுத் தயவுசெய்யவேண்டு'மென்று வேண்டினார். அப்போது மாயை 'ஓ தவசியே! நான் மேருபருவத தட்சணபாரிசத்திற் பெருகும் கங்கைக்கரையைச்சேர்ந்து பின்பு நலத்தைப்பெற விருப்புற்றவளாதலினால், அவ்வாறே போய்வருவேன். நீர் நில்லு' மென்று சொல்லினாள். அதைக்கேட்டுக் காசிபர் மயங்கி 'ஓ பெண்ணரசியே! கங்கை முதலான நதிகளையும் காசியாதி சிறந்த தலங்களையும் பொன்னுலக முதலிய நாடுகளையும் இன்னுமெவைகேட்கினும் இமைப்போதில் தருவிப்பேன். ஆனாலென் பிராணனைமாத்திரம் நிற்கும்படித் தாபத்தைத் தீர்த்து காப்பாய். போகாதே! நில்லும் நில்லும்' என்று தொடர, மாயை தன் மந்திரவலியால் மறைந்திருந்தனள். அப்போது காசிபமுனிவர் பட்ட துயரத்தைச் சொல்லி முடியாது. உடனே சூரியன் மேற்றி

லையின்மன்றாந்து இருள்வந்து சூழ்ந்துகொண்டது. அக்காலையில் பன்னிப்பன்னி இடர்க்கடலிற் படிந்து வருந்துகின்ற காசிபர்முன் னிலையில் சகல துன்பங்களுக்கும் காரணமான மாயையானவள் தான் எண்ணிவந்த எண்ணத்தைப் பெறுவதற்கு இதுவே தருண மென்றெண்ணி,அவர் கண்முன் மின்னற்கொடியைப்போலத் தன் திருவம் வெளிப்படக்காட்டி சென்று சொன்னமயமான ஒருமண் டபத்தைச் சேர்ந்து முதற்மாசத்தில் அவரோடு சரசசல்லாபமா ய்க் களித்தாள்.

அப்போது காசிபரும் அவளை மருவியணைந்து களித்தின்ப முற்றார். அதுகாலையில் பிரமன் விண்டு தேவேந்திரன் விண்ணவர் முனிவராதியர் தத்தம் உள்ளம் நடுங்கப் புயவலிக்கொப்பில்லாத சூரபன்மன் மாயையிடத்துதிக்க, இவ்விருவருடைய தேகத்திலு ண்டாகிய வியர்வையிற் செயசாலிகளாய் வலிபெற்ற முப்பதினாயி ரம் வெள்ளம் தானவர்கள் உதித்தனர். இவர்களையும் முதல் புத்திரனையும் அவ்விடத்தில் நிறுத்திவிட்டு காசிபரை மற்றொரு சித்திர மண்டபத்திற் கொண்டு போய் மாயையானவள் முன்னுருவை மாற்றிப் பெண் சிங்க வடிவுகொள்ள, அவரும் ஆண்சிங்க உருவங்கொண்டு புணர்ந்து இரண்டாஞ்சாமத்தில் ஆயி ரமுகங்களையும், இரண்டாயிரங் கரங்களையும்பெற்ற சிங்கமுகா சூரன் உதித்தான். அப்போது, அவர்களிருவரிடத்திலும் பெரு கிய வியர்வையில் நாற்பதினாயிரம் வெள்ளம் சிங்கமுகம்பெற்ற இராக்கதர் பிறந்தனர். அவர்களையும் அவ்விடத்தில் நிறுத்தி வே றொரு மண்டபத்திற்சென்று மாயைப்பெண் யானையுருப்பெற்று நிற்க, காசிபரும் ஆண்யானை யுருக்கொண்டு கூடினார். உடனே மூன்றாஞ்சாமத்தில் நாற்கோடுகளைப்பெற்ற யானை முகத்துடன் தாருகாசூரன் உதித்தான். அப்போதவ்விருவருக்கும் உண்டாகிய வியர்வையில் நாற்பதினாயிரம்வெள்ளம் யானைமுகங்களைப் பெற்ற அவுணர்கள்பிறந்தார்கள். அவர்களையும் அங்குநிறுத்தி மாயைமற் றொரு சந்திரகாந்த மாளிகைச்சேர்ந்து செம்மறியாட்டின் பேடா யுருக்கொள்ள, முனிவரும் ஆண்ஆட்டின் உருக்கொண்டுகூடினார். நான்காஞ்சாமத்தில் அசமுகியென்னும் பெண்ணானவள் அவதரித் தாள். அப்போதுண்டாகிய வியர்வையில் முப்பதினாயிரம் வெள் ளம் அவுணர் பிறந்தார்கள். அவர்களையும் அங்குநிறுத்தி அவ்விரு வரும் மற்றமண்டபங்களதோறும் சென்று யாளி, புலி, குதிரை, மான், பன்றிமுதலான மிருகங்களினது வடிவைப்பெற்றுப் புணர, அக்காலத்தில் அவ்வைந்து முகங்களையும்பெற்று அறுபதினாயி ரம்வெள்ளம் அவுணர்கள்தோன்றினர். இவ்வாறு மாயையானவள்

காசிபரைக்கூடிச் சூரன்முதலாகிய நான்குபிள்ளைகளையும் இரண்டு இலட்சம் வெள்ளம் சேனைகளையும் ஓரிரவிற்பெற்றனள்.

இவர்கள் உதித்தகாலத்தில் சூரன் பெறவிருக்கிற ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் அளவற்ற துர்நிமித்தங்களுண்டாயின. அவ்வண்டங்களி லுள்ளவர்கள் 'இதென்ன! அனர்த்தத்துக்கு ஏதுவோ' வென்று மனம்கலங்கி யேங்கியிருந்தார்கள். அப்போது சூரபன்மன், சிங்கமுகன், தாருகன் மூவரும் காசிபரைவணங்கி 'இனி யாங்கள் செய்யவேண்டியவைகளைக் கட்டளையிட வேண்டுமென்று வேண்டினார்கள். அப்படி வேண்டிக்கொண்ட பிள்ளைகளின்மேல் கருணைகூர்ந்து 'அப்பா புதல்வர்களே! நான்சொல்லுவதைக் கவனித்துக்கேளுங்கள். முன்னம் நன்மார்க்கத்திலீடுபட்டு, பிரம, தேவ, இராஜ, இருடிகள் ஆசானையடுத்துத் தவம் யாகம் இத்தியாதிகளைச்செய்து மிகுகாலம் நீடித்து அழியாச்சிரஞ்சீவிகளாக விருக்கின்றார்கள். அவர்கள் யாரென்றால், மார்க்கண்டேயர், அசுவத்தாமர், ஆஞ்சநேயர், பலிச்சக்கிரவர்த்தி முதலான சாதுக்கள். இவ்வுலகத்தில் இவரே கேடில்லாவாழ்வைப் பெற்றார்கள். அதுபோலவே நீங்களும் தவம் யாகம் முதலியவைகளினால் சிவபெருமானுக்குத் திருத்தியுண்டாகச் செய்வீராகில், உங்களுக்கொருதீங்கும் நேரிடாமல் சுகசீவிகளாய் வாழ்வீர்களென்றுசொல்லி, பலமந்திரங்களையும் போதித்துப் 'போய்வாருங்களப்பா!' வெனச் சூரன்முதலானோருந் தவஞ்செய்யும் இடத்தை நோக்கிச்சென்று, தவம் யாகங்களை விதிப்படி முடிக்கிறகாலத்தில், தபாக்கினியும் யாகத்தின் புகையும் சகலாண்டங்களிலும் நிறைந்து அங்கங் குள்ளவர்கள் நிலைதடுமாறி நிற்க இடமில்லாமற்றியங்கி மயங்கிச் சிவபெருமானைத் துதித்துப்போற்ற, அப்போது சிவபெருமான் இடபவாகனத்தின்மீது பார்வதி சமேதராய்ச்சென்று, சூரபன்மன் தவநிலையைபடுத்து, தெரிசனங்கொடுத்து, 'அப்பா அரக்கர்குல வேந்தனே! நினது தவத்திற்கும் நீசெய்தயாகத்திற்கும், மெச்சினேன். உனக்குவேண்டிய வரங்களைக்கேள். தருகிறேன். என, சூரன் விண்ணப்பஞ்செய்கிறான்:-'சச்சிதானந்தக்கடவுளே! தேவரீருடைய தெரிசனம்பெற்றுச் சிறப்படைந்தேனாலும், விசாலமாகிய பூமிகளையுடைய பலபுவனங்களைக் கொண்டிருக்கும் அண்டங்களனைத்தினுக்கும் சக்கிரேசுவரனாய் அரசுசெலுத்தவும், அவைகளைக்காக்கவல்ல ஆக்கினைசக்கரமும், நினைத்ததற்குமுன் அவைகளைச்சுற்றிப்பார்த்துவரும் வேகமுள்ள வாகனங்களும், எக்காலமும் அழியாத வச்சிரதேகமும் தந்தருளவேண்டும். இதன்றியும், அலைகளை

வீசுந் திருப்பாற்கடலில் பள்ளிகொள்ளும் கேசவன்முதலானவர் எதிர்த்துப் போர்செய்தாலும் பின்னிடையாமல் அவர்களைவாட்டி யோட்டும் பெருவலிவும், சமத்ததேவாத்திரங்களாலும் நாசமில் லாமல் என்றும் சிரஞ்சீவியாயிருக்கையும் கடாட்சிக்கவேணு' மென்று சூரன் வேண்டிக்கொள்ள, சிவபெருமான் அந்தப்படியே எல் லாவரங்களும் நூற்றெட்டுயுகங்கள் வரையில் ஆயுளுந் தந்துச்சென்றார். பின்பு சூரபன்மன் சிவபெருமான் தந்தவரத்தின் பலத்தால் செருக்கடைந்து, பிரமன் விஷ்ணு முதலானோரையும் ஏவலராகக் கொண்டு, தவம் எக்கியம் முதலானவைகளைக் கெடுத்துச் சகலரையும் துன்பத்துக்குள்ளாகச்செய்து தன்னினங்களை மேன்மையாகவைத்து, தனக்கு நிகர் ஒருவருமில்லையென்று பிறுமாப்புடன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் தன் ஆக்கினைக்குள்ளாக்கி ஏக சக்கிராதிபதியாய் ஆண்டுவந்தான்.

அப்போது, பிரமன் விஷ்ணு முதலானதேவர்களும், சூரபன்மன்செய்யும் அக்கிரமங்களுக்குத் தாளமாட்டாமல் பரமசிவத்தினிடம் முறையிட்டுக்கொள்ள சிவபெருமான் தேவர்கள் குறை தீரவும் அரக்கர்கள் எமபுரஞ்சேரவும் தக்கயோசனைசெய்து பின்பு சுப்பிரமணியரை உற்பவிக்கச்செய்தார்.

அதெப்படியெனில், ஆலகால விடத்தினையுண்டு மன்னுயிரனைத்தினையும் காத்தருளிய சிவபெருமான் தமது அனல்விழிகளின் மூலமாய்ப்படைத்த தீட்சண்ணியமுள்ள தீப்பொறிகளை வாய்வு தேவனும் அக்கினிதேவனும் சரவணப்பொய்கையிற் சேர்ப்பித்துப் பிரமன் விஷ்ணு முதலான தேவர்களும் சரவணப்பொய்கையைச் சூழ்ந்து காத்திருந்தார்கள். அப்போது வானவெல்லையிற் செல்லுஞ் சூரியனுக்குப் பிரியமுள்ள வெண்டாமரைகளுடன் செந்தாமரைமலரையும் படைத்துத் தாங்கியிருக்கும தன்மையைப் போலவே சரவணப் பொய்கையானது சிவபிரான் விழியினிடத்தெழுந்த அனற்பொறிகளையுந் தன்னிடத்தில் தரித்திருந்தது. இப்படிக்கு அருவாய் உருவாய்ப் பலவாய் ஏகமாய்ப் பிரமசொரூபமாய் விளங்கும் சோதிப்பொறிகளானது பின்பு ஒரு உருவத்தினைக்கொண்டு இருபைவிளங்குஞ் சண்முகங்களையும் பன்னிருகரங்களையும் படைத்த ஒப்பற்ற முருகக்கடவுளாக உலகங்களனைத்தும் பிழைத்தற்பொருட்டுத் திருவுருவினைப்பெற்று விளங்கினர். அத்ததியில் நன்னிமித்தங்களுண்டாயின. வானத்தில் தேவதுந்துமி முதலாகிய வாத்தியங்கள் பேரொளியைக்காட்டி முழங்கின. நான்கு வேதங்களுந்துதித்து ஆரவாரங்களைச் செய்தன. பிரமன்

விஷ்ணு தேவேந்திரன் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் இருடிகள் கருடர்கந்திருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் யட்சர் முதலானவர்கள் பரிமளமிகுந்த பாரிசாத புட்பங்களை வாரிவாரிச் "சோனைமாரியைப்போலச் சிவகுமாரன்மீது மங்களகரமாகத்தூவி "கருத்தனே! அடியேங்களிடத்திற் கிருபையுற்றுப்பார்த்து இரக்ஷிக்கவேண்டு"மென்று கொண்டாடிச் சரவணப் பொய்கையைச் சுற்றிச்சுற்றித் திரிந்துக்கொண் டிருந்தார்கள். அதில் விஷ்ணுவானவர் கார்த்திகை முதலிய கன்னியர்களைத் தருவித்து நீங்கள் குழந்தைவடிவு பெற்றிருக்கும் எமது கடவுளுக்கு உங்கள் கொங்கைகளிற்பெருகும் பாலை உண்ணக்கொடுங்களென அவர்களந்தப்படியே பாலைக்கொடுக்க உண்டு வளர்ந்திருந்தார்.

ஆதிசத்தியாகிய பார்வதி மாந்தளிரினும் மெதுவாகிய தன் பாதங்களிற் றரித்திருந்த சொர்னக் கிண்கிணிகளில் சில கழன்று பூமியில்விழுந்தது. அதனைச் சிவபெருமான் கண்ணுற்றமாத்திரத்தில் ஒன்பதுபேர் பெண்ருபந்தரித்துச் சிவபெருமானுக்கெதிரில் நிற்கக்கண்டு அப்பரமசிவத்தின் அருளுணைக்கினால் அப்பெண்கள் உடனே கருப்பமடைந்து வீரவாகுதேவர் முதல் ஒன்பது வீரர்களுடன் அப்பெண்களின் வியர்வைசலத்தினால் செயசாலிகளாகிய இலட்சம் பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்களனைவரையுங் கண்டகறைமிடற்றண்ணல், குமாரர்களே! கேட்பீராக நீங்களனைவரும் சயசாலிகளாக மீறி இந்திரன் முதலிய தேவர்களுக்குப் பகைவராகிய இராட்சதர் முதலியோரைக் கண்டதுண்டமாகச் சங்கரித்து வேரறக்களையவிருக்கின்ற நமது திருக்குமாரனாகிய குமாரசுவாமிக்குப் படைத்துணைவராக இருக்கக்கடவீர்களென்று அனுக்கிரகஞ்செய்து வேண்டிய வரங்களைத்தந்து விடைதரப்பெற்றுக்கொண்டு, சரவணப் பொய்கையினிடத்தில்வந்து சண்முகக்கடவுளுடன் கலந்துசென்று, இராக்கதரோடு யுத்தஞ்செய்து தாருகன், யாளிமுகன், சூரபன்மன் முதலிய ராக்கதர்களை வேரறக்களைந்து, தேவேந்திரன்வேண்டுகோளினால் தேவலோகத்தையடைந்து தேவசிங்காதனத்தில் பட்டாபிடேகஞ் செய்விக்கத் தேவர் சேனாபதியென்று பெயர்வகித்து, இந்திரன் புதல்வியாகிய தெய்வயானையை மணம்புரிந்து சூரபன்மனை மயில்வாகனமாகக் கொண்டார்.

---

## வீரபத்திரர் காளி பூதகணங்கள் உற்பவம்.

### வீரபத்திரர் துதி.

முக்கண்ணுஞ் சடைமுடியும் வாளுங் கொண்ட
  முன்னவனை மூவேழு வுலகம் பூத்து
செக்கர்வான் மணிமவுலி யிடப்பா லோங்குஞ்
  சேயிழையைப் பெற்றூர்த மகஞ்சி தைத்த
உக்கிரமா மூர்த்தியினை யுமையா ளன்று
  உயிர்த்தமா காளியோ டாடல் கொண்ட
விக்கிரமா வீரனையெம் வினைவேர் வீழ்த்தும்
  வீரப் திரதேவைப் பணிந்துய் வாமால்.

சந்திரசடாதரமூர்த்தியாகிய ஸ்ரீசிவபெருமானுக்கு மாமனும் திரிலோகங்களுக் கன்னையாகிய பார்வதிதேவிக்குத் தந்தையும் ஆகிய தக்கன் யாகத்தில் சிவபெருமானுக்குத் தரவேண்டிய அவிப் பாகத்தைக் கொடாமலும், பரமசிவத்தை அவமதித்துப் பேசிய தாலும், பார்வதிகேட்டு மனம்பொறுமல் கயிலைக்கெழுந்தருளி தன் காதனிடத்தில் விண்ணப்பஞ்செய்யத் தாமதகுணத்தினுல் நெற்றிக்கண்ணிலிருந்து உதிர்ந்த அக்கினிப்பொறியொன்றால் சகல உலகமும் நடுங்கி பூகம்பமானதுபோல அசைந்தாட ஆயிரஞ்சிரங்களும் இரண்டாயிரஞ் செவிகளும் ஆயிரம்வாயும் இளம் பிறையை யொத்த கோரைப்பற்களும் இரண்டாயிரங்கரங்களும் அவற்றில்குந்தம், வாள், பலகை, வேல், தோமரம், பிண்டி, பாலம், எருகுலிசம், சூலம், வில், சரம், தண்டம், வச்சிரம் முதலிய படைகள் மின்னலைப் போலசொலிக்கவும் பாதாரவிந்தங்களில் தண்டை வீரகண்டையுடன் உதித்தபடியால் இவருக்கு வீரபத்திர ரென்னும் பெய ருண்டாயிற்று.



அச்சமயத்தில் உமயவளது கோபாக்கினியினல் கண்ணினின்றும் பத்திரகாளியுதித்தாள். அவ்விருவர்காட்சியைச் சிவபிரான்

உமைபவளுடன்கண்டு கிருபாநோக்கம் பாலித்தகாலத்தில் அவர்களிருவரும் சிவபெருமானுக்கும் பார்வதிக்கும் வந்தனம்புரிந்து "எங்களுக்கு என்னகட்டளை" யென்று கேட்டார்கள். அப்போது பரமசிவம் அவர்களை நோக்கி "நம்மையன்றித் தக்கன் வேள்வி நடாத்துஞ் சாலைக்குட்சென்று அவிப்பாகத்தைக்கொடுத்தால் வாங்கிவருவீர். தடுப்பானாயின் அவன் சிரத்தைக்கண்டித்து அவனுக்குதவியாய்ச் சூழ்ந்திருக்கும் தேவர்முதல் யாவரையும் அதஞ்செய்து யாகத்தை அழித்து மீண்டும் வரக்கடவீர் அதுசமயத்தில் நாமும் அவ்விடத்திற்கு எழுந்தருளுவோமென்றுரைத்து உடனே தனது வியர்வையிலும் மயிர்களிலும் அளவற்றபூதங்களையும் காளிகளையும் படைத்தார். அவர்கள், யாளி, சிங்கம், கரடி, யானை, புலியாதி கொடிய மிருகங்களின் முகம் ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் விளங்க அதற்கிரட்டித்த கரங்களும் பலவாயுதங்களைக்கொண்டு பிரகாசிக்கப் பாதங்களில் வீரகண்டயமும் சிலம்பும், ஒலிக்கப் பசியினால்வருந்தி ஒருநொடியில் உலகங்களனைத்தையும் அழிக்கவல்ல பூதங்களும் காளிக்கூட்டங்களும்சூழ வீரபத்திரரானவர் அதிகவிரைவாகத் தக்கன் யாகசாலையைச் சூழ்ந்துகொண்டு பூதத்தலைவரைநோக்கி 'இவன் வாசலினிடங்களினும் புறத்தினும் வானவெல்லையினும் நீங்கள் காவல்கொண்டு ஒருவரையும் விடாமல் பாதுகாத்திருங்க' ளென்று கட்டளையிட்டு, தனது வீரமும்பிரதாபமும் யாவருக்கும் தெரியும்படி உக்கிரங்கொண்டு வெகுண்டு சீறி, பிரமன் விஷ்ணு தேவர்கள் முதலானோர் தலைகாட்டாதபடிக்கு வாட்டித் தக்கனையும் அவன் மனைவியையுங்கொன்று யாகத்தை அழித்துச் சின்னபின்னப்படுத்துகிறபோது, கைகளறுந்தவர்களும் மெய்களறுந்தவரும் கால்களறுந்தோரும் தோள்களறுந்தோரும் சிரங்களறுந்தோரும் உரங்களறுந்தோருமாக, வீரபத்திரசுவாமியானவர் சினமிகுந்து இருடிகணங்கள்தவிர மற்ற தேவர்கள் கூட்டங்களில் ஒருவரையேனும் விடாமல் அடித்து புண்படுத்தியபோது பிரமன் சிவபெருமானை வேண்டிக்கொண்டு 'ஒகருத்தனே! எனது குமாரனாகிய தக்கனைத்தருவிக்க வேணு' மென்று துதிக்கச், சிவபெருமான் வீரபத்திரரைக் கடைக்கண்ணாற் பார்த்தமாத்திரத்தில் வீரபத்திரர் அக்குறிப்பையுணர்ந்து தனதுகோபந்தணிந்து சந்துட்டராக இருந்தார். உடனே சிவபெருமான் தக்கன் தேகத்தைத் தருவித்து அவ்விடத்தில் வெட்டுண்டு கிடந்த ஆட்டுக்கிடாயின் தலையைப்பொருத்தித் தமது கடாட்சத்தினால் தக்கனோடு அங்குமடிந்துக்கிடப்பவர்களையெல்லாம் எழுப்பி வீரபத்திரர் முதலான பூதகணங்கள்சூழக் கயிலைக் கெழுந்த ளினர்.

## பசுவின் அங்கலட்சணம்.

### விருத்தம்.

வானுலகு மண்ணுலகும் மறையு மெல்லா
வைப்பு மருட் பிரமாதி யாவு மோங்கத்
தானல்குந் தயிர்நெய் மோர்ச் சருமம் கோரோ
சனைபயங்கோ சலமாதி யாவுந் தந்திங்
கேனையெக்கி யாதிகட்கு முயிராய்த் தேவ
ரேற்றங்க புண்ணியசொ ரூப மாகி
ஆனெனப்பே ருற்றுமறை யாதி யேற்று
மாதியையெம் பசுத்தேவைப் பணிது மன்றே.

கேளாய் பார்வதி! உலகத்திலுதித்த பசுக் கூட்டங்களுக்குப் புல்முதலாகிய ஆகாரங்களைச் சரியாய்க்கொடுத்து காவாமல் எச்சில் தண்ணீர்காட்டுவதும், அவற்றைத் தூரப்பெண் இருக்குமிடத்திலும் அசுசியானஇடத்திலும் புறக் கடையிலும் கட்டுவதும், கன்றுக்குப் பாலைவிடாமற் கரந்து கொள்வதும், அவை பால்கொடாவிட்டால் அடிப்பதும், வைவது முதலாகிய அக்கிரமங்களையே விருத்தி செய்து கொண்டு 'அவற்றின் பாலைக்காய்ச்சித் தயிராக்கிக் கடைந்து வெண்ணெய் யெடுத்து மோரையும் நெய்யையும் விக்கிரயஞ்செய்து மானிடர்கள் சீவனஞ் செய்துக்கொண்டு வருகிறார்கள்.



அப்பசுவின் பெருமையெப்படியெனில் பசுவின் நான்கு கால்களில் பிரமதேவன்; பாதங்களில் குபேரன்; இடையில் நாராயணன்; மயிரில் முக்கோடிதேவர்கள்; வாலில் தருமதேவதைகள், யோனியில் மகாலட்சுமி; மடியில் அமுதகூபாளர்கள்; அடிவயற்றில் பன்னகர்கள்; வயற்றில் அக்கினி; முசுப்பில் சாவித்திரி; நெஞ்சில் பகலனென்னும் தேவதை; வரிமடிப்பில் நீ; கண்டத்தில் நான்; தவடையில் அட்டவசுக்கள்; முகவாய்க்கட்டையில் சந்திராதித்தர்; புட்

டத்தில் சேன்முத்தர்கள்; நடுநெற்றியில் சித்தர்கள்; மூக்கில் வாயு; கோம்பில் எமன்; செவிகளில் சத்த இருடிகள்; முகத்தில் தேவேந்திரன்; அதினிரத்தம் சந்திரகலை; மாம்சம் சத்தி; இந்தப்படியாகத் தேவர்கள் இருடிகள் அனைவர்களும் பசுவின் அவயவங்களிற் பொருந்தியிருப்பதால் அதன் மேன்மையாகிய புனிதத்தைச்சாமானிய மனிதர்கள் உணர்ந்து ஆதரிப்பதுகடினம். மிகுந்த தெளிவினையுடைய விவேகிகள் அதனுடைய அருமையும் பெருமையும் தெரிந்து வினயத்துடன் போஷிப்பார்கள்.

'ஓ பார்வதியே! மேலும் கோலைத்தடிக் கொம்புகளினாலும், முப்புரி கயிற்றினாலும் பிரம்புகளினாலும் மற்றுமெதைக் கொண்டாகிலும் அடிப்பது மாபாதகம்; அன்றியும் நஞ்சை புஞ்சை வயல்களில் மேயும்பசுவைக்கண்டால் ஓசைபடக்கைகளைத் தட்டி அதட்டி யோட்டவேண்டும்; இவ்வுபாயத்திற்கும் அசையாவிடில் தருப்பைப்புல்லினும் வைக்கோலினாலும் உதட்டியாய்த்தட்டித் தட்டிபோட்டுவது மிகவும் புன்னியம்; இதற்குமேற்பட்டுச் செய்யும்படியானதெல்லாம் அதிகபாவமேயாம்; இந்தப்படியாகப் பசுக்களை அடிக்காமலும் கன்றுகளுக்கு எதேட்டமாகப் பாலைவிட்டும்பிரியமாக அருமைபெருமைபாராட்டி அநேகர் சென்மசாபல்யம் பெற்றார்கள். அவர்களில் உனக்கொரு மாஇருடியின் கதையை விபரமாகச் சொல்லுகிறேன். கேளாய் மலைமகளே! பிரமஞான சம்பன்னராகிய சுமித்திரமா முனிவரென்னும் தவசிரேட்டர் ஒரு பசுவின் கன்றை வளர்த்துவந்தார். அதெவ்வண்ணமெனில் விடியற்காலத்தில் இம்முனிவரெழுந்தவுடன் பசுவின் கன்றினிடம் வந்து தீர்க்கதெண்டனிட்டெழுந்து சென்று, ஸ்நானநுட்டானங்களை முடித்துக்கொண்டு திரும்பவும் வந்து அப்பசுவையவிழ்த்துச் சுத்தமாகிய இடத்தில்கட்டிப் புல்முதலாகிய ஆகாரங்களை எதேட்டமாய்த் தந்து ஆசித்து நேசித்தார். இந்தப்படியாய் அம்முனிவர் பசுவின் மேல் அதிகபிரியம் வைத்துத் தடவிக்கொடுப்பதும், சொரிவதும், குளிப்பாட்டுவதும் புல்லிருக்கு மிடத்தில்விட்டு மேய்த்தும் வருகிறகாலத்தில், அங்கொரு எருதுவந்து இப்பசுவுடன் பொலிந்துபோயிற்று. அதனால் பசு கருப்பந்தரித்துப் பூரணமாகிக் கடாறிக் கன்றை ஈன்றுகன்றைப் பரிவுடன்பார்த்துப் பால்கொடுத்துவர, நாளுக்குநாள் அக்கன்று விருத்தியடைந்து சிலவருடங்களுக்கெல்லாந் தாயொருகன்றும் தானொருகன்றும் ஈன்றது. அவை இரண்டும் தழைத்துக்கன்றுகள் போட இவ்வண்ணம் ஒவ்வொரு வருடத்திற்குந் தப்பாமல் கன்றுகளை ஈன்றுவந்ததால் 'பலதுளிபெரு

வெள்ள' மென்பதுபோலப் பசுக்கூட்டம்பெருகி, பெருத்தமந்தையாயிற்று இதைக்கண்டு சுமித்திரமாமுனிவர் ஆசைமேலிட்டு அன்புடன் அப்பசுக்கூட்டங்களை மேய்ப்பதும் தேய்த்துக்குளிப்பாட்டுவதுமாகிய வேலைகளுக்கு கிஞ்சித்துஞ்சலியாமல் போஷித்துக் கொண்டிருந்தார்.

இந்தப்படியாக நாள்தோறும் பாராட்டி கொண்டிருக்கும் சுமுத்திரமாமுனிவரிடத்தில் பழகியபிரியத்தினால், பசுக்கள்யாவும் அம்முனிவர் சென்றால் சென்று, நின்றால் நின்றும், படுத்தால் படுத்து இப்படி அவரைவிட்டுப் பிரியாமலிருந்தன. அவரும் அவற்றின்மீது அன்புமாறுமலும் அவற்றின்குறிப்பறிந்து புசிதாக முதலியதும் அருந்தச்செய்வதுடன் நோயடையாமல் அவிழ்தம்கொடுத்தும் காப்பாற்றிக்கொண்டு, அப்பசுக்களின் கன்றுகளைப்போலத் தானுமொரு கன்றாய்ப் பசுக்களின்முலையில் வாயைவைத்துப் பாலையுண்டு, தான் மானிடனென்றும் அவை பசுக்களென்றும் பேதமெண்ணாமல் அவைகளுடன் விளையாடி காலங்கழித்து வந்தார். இவரது நடவடிக்கைகளை அங்கேவசிக்கும் தவசிகள்கண்டு வியப்புற்று, இவருக்குப் பீனரிஷியென்றும் நூதனப்பேரிட்டழைக்கக் காலங்கழித்து வந்தார்.

இவ்வண்ணம் சிலகாலம் பசுக்களைமேய்த்துவருகையில் அமாவாசைகடந்து மூன்றுவதுநாளிலிருந்து சந்திரன் நாளுக்கு நாள் விருத்தி யடைவதைப்போல, பசுக்கூட்டங்கள் கன்றுகளை மேலும்மேலும் ஈன்று விருத்தியடைந்து ஆயிரம்பசுக்களாகி, பெருத்த மந்தையாயிற்று. இம்மந்தையை ஒருநாள் பீனமகாமுனிவர் ஓட்டிக்கொண்டுபோய் அங்குள்ள ஒருமடுவின்கரையோரம் மேயவிட்டுத் தான் ஒருமரத்தடியில் உட்கார்ந்திருந்தார். அப்போது அம்மடுவின் நடுவிலிருந்து சலம் கரைபுரளும்படியாக மிகு ஆரவாரத்துடன் விளையாடிக்கொண்டிருக்குஞ் சிலஸ்திரீகளைக் கரையோரம் மேய்ந்து கொண்டிருந்த பசுக்கூட்டங்கள்கண்டு பிரமித்து; அவர்களைநோக்கி "நீங்களெந்தவூர்? உங்கள் பேரென்ன? தவசிகள்வசிக்கும் இக்காட்டிற்கு என்னகாரணமாய் வந்தீர்கள்? இவைகளை ஒளியாமற் சொல்லவேண்டு" மென்று வேண்டிக்கொள்ள, மடுவில்குளித்து விளையாடிக் கொண்டிருந்த ஸ்திரீகள்கேட்டு, பசுக்கூட்டங்களை நோக்கிச் சொல்லுகின்றார்கள்:—

"கேளுங்கள். ஆனிரைகளே! பூர்வத்தில் நாங்கள் பசுவாக இருந்தோம். பாகபசுவாகி உயிர்விட்டபடியால், இப்போது உத்தமப்பெண் பிறப்பாக இருக்கின்றோம். நாங்கள் 'வசிக்கும் உல

கம் ஆனுலகென்றும், பசுலோகமென்றும் சொல்லப்படுமென்ன, அம்மொழிகளைக்கேட்ட பசுக்கூட்டம் அனைத்தும் அம்மாதர்களை நோக்கி "பெறுதற்கரிதாகிய·புனித பதவியையடைந்த பெண்களே! தயவுசெய்து எங்களையும் நீங்களடைந்த ஆனுலகஞ்சேரும்படியான உபாயத்தைச்சொல்லி, உங்களுடன் சேர்த்துக் கொள்ளும்படி நாங்கள் உங்கள் திருவடியைத்துதித்து வேண்டுகிறோ' மென்று நயமாகப்பேசிய பசுக்கூட்டத்தின் சொற்களைக்கேட்ட பெண்களுக்குத் தயாளம்பிறந்து "நீங்களனைவரும் இக்காட்டிற் கடுத்த நாட்டையடைந்து அந்நகரத்தையாளும் அந்திராசன்செய்யும் யாகபசுக்களாகி உயிரைவிடுவீர்களானால், பசுலோக மடைவீர்க" ளென்று தக்க உபாயத்தைநவின்றுசென்றார்கள் இந்த இரகசியத்தைக்கேட்ட ஆவினங்க ளனைத்தும் பிரயானந்தமடைந்து யாகத்தில் பிராணனை விடத்திடங்கொண்டு, நாட்டுக்குச்செல்ல உத்தேசித்து, மறுபடியும் நாமென்ன நன்றி கெட்டவர்களாக நம்மைக் காப்பாற்றிவந்த சுமித்திரமாமுனிவரைவிட்டு யாகபசுவாகி இறந்தபோதிலும் செய்தவமறந்தால் கைதவமாகு மென்றபடி நமக்கு ஆகாரந்தந்து காலமறிந்துக் காப்பாத்தின முனிவரைவிட்டு நாம் மாத்திரம் புனிதபதவியடைவது தருமமல்ல, இம்முனிவரையும் நம்முடன் அழைத்துப்போவதே மிகவும் விசேடமென்றுயோசித்து முனிவரிடம்வந்து தங்கள் கருத்தை யறிவிக்க, அவர் சம்மதியாமல் கடுகடுத்து பேசியதால் உடனே நாட்டில் வசிக்கும் சில கபிலைப்பசுக்கள் இந்த விருத்தாந்தங்கள்யாவு முணர்ந்து காட்டில் வசிக்கும் வைதிக பசுக்களை நோக்கி உங்களுக்கு இம்முனிவரைக் கொல்லத் துணிவுண்டாகமாட்டாது. நாங்கள் கொன்றுவிடுகிறோம். ஆகிலும், இவரைக் கொல்லுவதினால் எங்களுக் குண்டாகும் பலன்யாது? விரதங் கெட்டாலும் சுகமுண்டாகவேணும்; சுகங் கெட்டாலும் விரதபலனுண்டாக வேணுமென்றபடி பெங்களுக் கேதேனும் ஒரு பலன் கிட்டும்படிச் சொல்வீராகில் இம்முனிவரை ஒரு இமைப்பொழுதில் கொன்று விடுகிறோமென்ற நாட்டுக் கபிலைப் பசுக்களை நோக்கி காட்டுவைதிக பசுக்கள், ஓ கபிலைப் பசுக்களே! கேளுங்கள். யாரேனும் எங்களைத் தானங்கொடுத்த பலனைப்பார்க்கிலும் நூறுபங்கு அதிகபலன் உங்களைத் தானம் பண்ணினவர்களுக்கு உண்டாகக்கடவதென்று வரங்கொடுத்தன. இவ்வரத்தைப் பெற்றுக்கொண்ட கபிலைப்பசுக்கள் ஆனந்தத்தையடைந்து களிப்பின் மிகுதியால் முனிவரைப்பாய்ந்து கொன்றுவிட்டன. உடனே,முனிவரது பிராணனை ஆனுலகத்தார் எதிர்கொண்டழைத்

துப்பேசய், பசுலோகத்திற் சேர்த்தார்கள். பின்பு அம்முனிவர் வளர்த்த ஆவினங்கள் குற்றமற்ற அக்கிராசன் யாகபசுக்களாகி, மரித்து ஆனுலகடைந்து பினமகாரிஷியையும் அவரைச்சார்ந்தவர் களையுங்கண்டு வணங்கிப் புனித சென்மம் பெற்றன.

ஆகையால் ஓ பார்வதி! சகலமான தேவதைகளும் பசுவினி டத்தில் வசித்திருப்பதால் தேவதைகளைப் பார்க்கிலும் பசுக்கள் மேலாகிய புனிதம் பெற்றன. என்று மகாதேவன் புகலக்கேட்ட ஆதிசக்தி ஆனந்தமடைந்து பரமசிவத்தைப் பணிந்திருந்தாள்.

---

## விஷ்ணு உற்பவம்.

### விஷ்ணு துதி.

திருவருளா லுலகேழு மளித்துக் காத்துத்
தேவரெலாம் பரவுமருட் கடவுளாகி
அருமறையா றங்கநெறி யருட்கோ லோச்சு
மாதியனை யுலகுண்ட மாலையந்நா
ளருச்சுனற்குப் பரபோத முபதேசித்த
வண்ணலைப்பூ மாதுவளர் மார்பினனைத்
திருமாலை யரக்கர்குலத் தேவைத் தேவர்
செல்வத்தை சிந்தித்துப் பிறவி தீர்வாம்.

விஷ்ணுவென்பவர் சகல லோகாதிகாராய், மும்மூர்த்தி சொரூபராய், பஞ்சகிருத்திய தாணுவாய், சகலாண்ட கோடிகளையும் தனது கிருபாகடாட்சத்தினால் தனுகரண புவன போகங்களையுங் கொடுத்துக் காப்பவராய் வைகுந்த லோகவாசராய், அவாத்த சமத்தகாமனாய், விளங்கும் மூர்த்தியாக்கும்: இவரை வேதங்களெல்லாம் 'காப்புடைக் கடவு' ளென்று கூறுகின்றது. இவர் சுத்தப் பிரம சொரூபராதலால், பிறப் பிறப்பு, சுகதுக்கம், முதலிய மாயாசம்பந்தங்களில்லையாயினும் பத்த பாகவத தாசானுதாசர்களின் உள்ளக் குறிப்பினெறியே எழுந்து காத்த திருவுருவங்கள் அனந்தமாம். அவற்றுள் முக்கியமானவை பத்து அவதாரங்களாம்; அவற்றை முன்னஞ் சொல்லுகிறேன்.



அந்தப்பத்து அவதாரங்கள் அடைவதற்கு முன்னம் வைகுந்தத்தில் தேவாதி

சகல சிவான்மாக்களும் பணியும்படி எழுந்த திருவுருவம் ஒன்றுண்டு. அதுதான் ஸ்ரீமகாவிஷ்ணு மூர்த்தி என்று கூறுவது. இவர் திரிமூர்த்திகளில் ஒருவர். இவர் பிரளயகாலத்தில் சகல அண்ட சராசரங்களையும் தமது குட்சியில் வைத்துக் காப்பவர். இவருக்கு சிரீதேவிபூதேவி நீளாதேவியென மூன்று மனைவிகளுண்டு, புதல்வர்கள் இருவருண்டு. இவரெடுத்த அவதாரங்கள் பத்து. இவருக்குப் பஞ்சாயுதங்கள். கனகமயமான ஆடையுடுப்பவர். கண்டத்தினிடத்தில் வனமாலை, வனகமாலை, கௌத்துவாபரணந் தரிப்பவர். இவரது மகிமைகள் பலவுண்டு; இவைகள் எல்லா முடைய மூர்த்தி காரணத்தைச் சுருக்கிச் சொல்லுகிறேன்.

அவை யாவையெனில்:—

| | |
|---|---|
| மூன்று மனைவி | இலக்குமி, பூதேவி, நீளாதேவி. |
| புதல்வ ரிருவர் | பிரமன், மன்மதன். |
| வாகனம் | கருடன். |
| குணம் | சத்துவம். |
| ஆயுதம் | சங்கு, சக்கர, கதா, கட்க, தண்டம். |
| ஆடை | பீதாம்பரம். |
| மாலை | துளவம், தாமரை. |
| கொடி | கருடன். |
| ஆபரணம் | கௌத்துவமணி. |
| இடம் | வைகுந்தம். |
| சயனம் | சேடன். |

இம் முக்கியாமிசங்களை பரத்துவ பூர்வ பட்சாதி பரமாரிய வேதாதிகலைக ளெல்லாங் கூறின.

ஆதியில் வடவாலிலைத் துளிரின்மேற் படுத்து யோகநித்திரையிலிருந்த விஷ்ணுவானவர் பூமண்டலத்தை சிருட்டி செய்யவெண்ணிப் பாற்கடலில் ஆதிசேடன்மீது சயனித்திருக்க அக்காலத்தில் அக்கடலினிடத்திலிருந்த உலகமாதாவாகிய இலக்குமி தோன்றி விஷ்ணுவினுடைய வலதுமார்பில் தங்கினாள். அதற்குக் காரணம் யாதெனில், உலகத்தில் பிள்ளைகள் மீது தாய்க்கிருக்கும்படியான பிரியம் தந்தைக்கு மிராது; ஆகையால் புருஷாகாரி வடிவாகியும் ஸ்ரீவிஷ்ணுவின் திருமார்பில் அமர்ந்திருந்தாள்.

தசாவதாரங்களாவன:—

| | | | |
|---|---|---|---|
| 1-வது | மச்சாவதாரம். | 6-வது | பரசுராமாவதாரம். |
| 2-வது | கூர்மாவதாரம். | 7-வது | இராமாவதாரம். |
| 3-வது | நரசிங்காவதாரம். | 8-வது | பலராமாவதாரம். |
| 4-வது | வராகவதாரம். | 9-வது | பௌத்தாவதாரம். |
| 5 வது | வாமனாவதாரம். | 10-வது | கட்காவதாரம். |

## மச்சாவதாரம்.

துதி.

வாரிதி யினின்மறை கொடுமுகு சோமுக
சூரனை யடுமா தவமச் சாவ
தாரனை மாயனை தாமோ தரனையென்
காரண நாதனை நாடிப் பணிவோம்.

பிரமதேவ னிடத்திருந்த இருக்கு எசுர், சாம, அதர்வண மென்னும் நான்கு வேதங்களையும் சோமுகாசூரனைவன் திருடிக்கொண்டுபோய் கடலில் ஒளித்துக்கொள்ள பிரமன் மிகவுந் துயரமுற்று, தேவர்கள் கூட்டத்துடன் பாற்கடலுக்குச் சென்று,



மகாவிஷ்ணுவைச் சேவித்து வணங்கி, சுவாமி அடியோர்கள் கடைத்தேரும் பொருட்டு அனுக்கிரகித்த வேதங்களைச் சோமுகாசூரன் கவர்ந்துகொண்டுபோய், கடலில் ஒளித்துக்கொண்டிருக்கிறான். ஆதலால், தயைசெய்து அவ்வேதங்களை வரவழைத்து ரட்சிக்கவேண்டுமென்று வேண்டிப்போற்ற, மாயன் பிரமனைநோக்கி நீ சங்கடப்படவேண்டாம்; உன்னிட்டப்படியே வேதங்களைத் தருவித்துக் கொடுக்கிறேனென்று சொல்லியனுப்ப, பிரமன் விடைபெற்றுச்சந்தோடமடைந்துதேவர்கள்கூட்டத்துடன் சத்தியலோகஞ் சேர்ந்தான். பின்பு மகாவிஷ்ணுவானவர் பெருத்தசேற்கண்டைஉருவமெடுத்துக் கடலிற் புகுந்து, சோமுகாசூரனை வதைத்து, வேதங்களைக்கொண்டுவந்து, பிரமதேவனுக்குக் கொடுத்தார். இக்காரணத்தால் இவருக்கு மச்சாவதாரரென்று பெயருண்டாயிற்று.

---

## கூர்மாவதாரம்.

துதி.

மார்பிருந்த மலர்மாது சூடி நீத்த
மாலைதனை யவமதித்த மகவா னுக்கம்
பார்பிரித்துப் பாலாழி யுய்ய ஞேக்கிப்
பண்ணவர்மந் திரநாட்டி யசுர ரோர்பால்
சேர்ந்திழுப்ப வாமையுரு வாகித் தாங்கித்
தேவருக்கு மமுதளித்துக் காத்து மாளும்
சூர்த்தடிந்த திருமாலை வைகுந் தத்திற்
றுலங்குமா விண்டுதனை துதித்து வாழ்வாம்.

முன்னொருகாலத்தில் தூருவாசமா இருடியானவர் வாசுதேவனை சேவிக்கும் நிமித்தம் வைகுந்தத்திற்குப் போகிறபோது, தெய்வப்பெண்கள் மகாலட்சுமி சூடிக்களைந்த மலர்மாலைகளை அன்போடு எடுத்துக்கொண்டு எதிர்வரக் கண்டு அம்மாதர்களை நோக்கி "ஓ வனிதையர்களே! இந்த மாலைகளில் எனக்கொன்று தரவேண்டு"மென்று கேட்க, அவ்வனிதையர்களோ இவருக்கொருமாலை கொடாவிடில் மிகுந்த கோபசொரூபராகிய இம்முனிவர் சபிப்பாரென்று பயந்து அம்மாலையில் ஒரு மாலையைக்கொடுக்க, அதனை மிகுந்த பயபத்தி விசுவாசத்துடன் தூருவாசமமுனிவர் இரண்டு கரங்களாலும் பெற்று கண்களில் ஒத்திக்கொண்டு அதிக விநயமாய்க் கையில்கொண்டு வைகுந்தத்திற்குச் சென்று இலட்சுமி நாராயணனைத் தரிசித்து வணங்கிப் போற்றித்



திரும்பி, தேவலோகத்துக்கு வருகிறபோது தேவேந்திரன் வெள்ளையானையின்மீது ஏறித் தென்னாட்டை வலம்வருகிற ஆடம்பரத்தைக்கண்டு, தூருவாசகர் சந்தோஷித்து, 'தவசியாகிய நமக்கேனிந்த பூமாலை; இந்த மாலையைத் தரித்துக்கொள்ளத்தக்க பிரபு இவனல்லாது, மற்றவர்கட்குத் தகா'தென்று உற்சாகத்துடன் மலர்மாலையை இந்திரன்கையில் கொடுத்தார். அதையவன் ஆனையைச் செலுத்தும் அங்குசத்தில் மாட்டியெடுத்து யானையின் மத்தகத்தின் மீது அலட்சியமாய்ப் போட்டான். அதனால் யானைக்கு அருவருப்புண்டாகித் தனது தும்பிக்கையினாலே அம்மாலையையெடுத்துக் கீழேபோட்டு, அத்தவசியின் முன்னிலையிற் காலினால் துவைத்தது. அதைக்கண்டு தூருவாசகர் இரௌத்திராகாரமாய்க் கண்கள் சிவந்து மிகச்சினந்து உக்கிரங்கொண்டு இந்திரனைப்பார்த்துச் சொல்லுகின்றார்:—

"அடா! இந்திரா! புட்பமாலைகளின் விடயத்தில் மிகுந்தபிரியனும் இதனைத் தரிக்கத்தக்கப் பிரபுவும் நீ என்று மதித்து சாட்சாத்து உலோக மாதாவாகிய ஸ்ரீமகாலட்சுமி சூடிக்களைந்த பூமாலையை உனக்கு யான் கொடுத்தேன். அம்மாலையை நீ அசட்டையாய்வாங்கி யானையின்காலில்போட்டு மிதிக்கச்செய்தாய். இப்படி நீ செய்ததற்குக் காரணம் யாதென்றால் தேவர்களுக்கெல்லாம் இராசனென்றும் இவ்வுலகத்துக்கு அதிபதியென்றும், காமதேனு கற்பக விருட்சம் முதலான சகலசெல்வமும் நமக்கிருக்கிறபோது இந்த மாலை யெம்மாத்திரம்? இது ஒரு லட்சியமோ என்றும்

அலட்சியமாய் உனக்குண்டாகிய செல்வச் செருக்கினால் நம்மைக் கூட இலட்சியஞ் செய்யாமற்போனாய். ஆதலால், செல்வத்திற்குக் காரணமாகிய லட்சுமிகடாட்ச மில்லாமற்போகக் கடவா"யென்று சபித்துவிட்டு மனதுக் கிசைந்தபடி சென்றார். உடனே சூரிய சந்திர கிரகநட்சத்திரங்கள் காமதேனு கற்பகவிருட்சம் மகாலட்சுமி முதலானதுகளும் போய்ப் பாற்கடலில் மறைந்துபோயின. மூவுலகங்களும் கடாந்த காரமான இருள்சூழ்ந்துகொண்டது. இதுகளையெல்லாங்கண்டு இந்திரன் தனது குருவாகிய பிரகற்பதி பகவானிடத்தில் முறையிட, அவர் பிரமதேவனிடத்திற்குச் சென்று அறிவிப்பாயாகில் உனக்குற்ற துயரம் நீங்குமென்றார். அவ்வாறே இந்திரன் தேவர்கள் கூட்டத்துடன் சத்தியலோகஞ்சென்று பிரமதேவனைக்கண்டு வணங்கி, தனக்குநேரிட்ட குறைகளைச்சொல்லி வேண்டிக்கொண்டான். பிரமன் இந்திரனைநோக்கி 'இக்காரியம் நம்மாலாகத் தக்கதல்ல. சகல உலகங்களுக்கும் நாதனாகியும் ஆதிமத்தியாந்த ரகிதனாகியும் விளங்கும் விஷ்ணுவினிடம் போகலாம்; வாரு' மென்று சகல தேவர்களுந்தொழ பார்கடலுக்குவந்து யோக நித்திரையிலிருக்கும் பகவானைநோக்கி, இருகரங்களையுஞ்சிரமிசைக் கூப்பி, கேசவா தாமோதரா, மாதவா, இருடிகேசா, புண்டரீகாட்ச, புருடோத்தமா, சனார்த்தனா, கருணாநிதி, ஆபத்பாந்தவா, அநாதரட்சகா, ஆதிமூலமேயென்று துதிசெய்யும் முறைகளைக்கேட்டு விஷ்ணுவானவர் அதி யுற்சாகத்துடன் கருடன் மீதேறிவந்து காட்சிதந்தார். அப்போது பிரமன் அஞ்சலிசெய்து தேவேந்திராதி தேவர்களுடைய கோரிக்கைகளை விண்ணப்பஞ் செய்து அது முடியு முபாயந் தேடவேண்டுமென்று கோருவதை விஷ்ணுவானவர் கேட்டு யோசித்து, தக்க முயற்சியுடன் அவர்களுடன் கலந்து மந்தரகிரியைத் தருவித்து, பாற்கடலில் மத்தாக நாட்டி, வாசுகியைத் தாம்பாகபூட்டி, தேவர்கள் ஒரு பக்கமும் அசுரர்கள் ஒரு பக்கமுமாக யிருந்து, திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். அப்போது முதலில் ஆலகாலவிஷம் பிறந்தது. பின்பு சூரியன் சந்திரன் கிரக நட்சத்திராதிகள் ஐராவதம் காமதேனு கற்பகவிருட்சம் நவநிதி ஸ்ரீமகாலட்சுமி அமிர்த முதலாகிய பொருள்களெல்லாம் பிறந்தன. அந்தக்காலத்தில் மந்தரகிரியைக் கடலில் மூழ்காவண்ணம் ஆமை யுருவங்கொண்டு திருமால் தமது முதுகிற்றாங்கினார். இது கூர்மாவதாரங் கொண்டதற்குக்காரணம்.



## வராகவதாரம்.

### துதி.

தாயினுங் கருணை கூர்ந்தித் தாலமே முளர்த்து மன்பர்
சேயினு மெளிது வந்துஞ் செகமெலா மளித்துக் காத்தும்
நாயினுங் கடையே மெம்மை நல்கியும் நவிலு மெல்லா
மாயிலங் கியவை குந்த வாசனை வணங்கு வாமால்.



இந்த அவதாரம் எடுத்ததற்குக் காரணம் காசிபருக்குத் திதிக்கும் பிறந்த இரணியன் இரணியாக்க னென்னும் புதல்வர் இருவர்களும் மூவுலகங்களையும் தனிச்செங்கோல் செலுத்தி தேவர்கள், யட்சர், கின்னரர், கிம்புருடர், சித்தர் வித்தியாதரர், முதலானோர்களையும் செயித்து, கருவபங்கம் செய்து சந்தோடத்துட னிருக்கிறபோது இளையவனாகிய இரணியாக்கதன் தவஞ்செய்து பிரமதேவனிடத்தில் கதையும் செயந்திமாலையும் பலவரங்களும் பெற்றுத்தோள்கள் பூரித்து ஆரவாரித்து, தேவர்கள் முதல் யாவரும் தயங்க இப்பூமியை அடியோடும்பேர்த்துப் பாதலத்திற் கொண்டுபோய் வைத்துக்கொண்டு எதிரியெவன் வருவானென்று எதிர்பார்த்திருந்தான். அப்போது சுயம்பு மனுவானவர் இரணியாக்கதன் பூமியைப் பேர்த்தெடுத்துக்கொண்டு போனதைப்பற்றி சீவராசிகள்மேல் தயை யுடையவராய்ப் பிரமதேவரிடஞ்சென்று வணங்கிப்போற்றி "எந்தையே, இரணியாக்கதனனவன் இந்த அவனி முழுதையும் கொண்டுபோய்ப் பாதலத்தில் ஒளித்துவைத்துக் கொண்டான். ஆகையால், நான் அரசுபுரியும் செயலில்லாமல் தேவரீரை வந்தடைந்தேன் என்று திசைமுகன் சிந்தித்து அழகுபொருந்திய மேகவண்ணனைப்பணிந்து "தந்தையே! அவனியை யருள்" ளெனப் போற்றிய படியால் மாயவன் குறுகிய வராகவுருவமாய்த்தோன்றி அண்ட முகட்டையளாவி அகண்ட மந்தரவரையை நிகர்த்த நரன்கு கால்களிலும் நவமணிகளிழைத்த சிங்கங்களிருக்கும் குகைகளையொத்த செவிகளும் வச்சிராயுதத்துக் கொப்பாகிய மயிர்களைச் சிலிர்த்து செவிகளை நெறித்து வாலைவா னுலகத்தைப் பார்க்கத் தூக்கி கிளம்பும்போது, மந்தரகிரியை இடறித்தள்ளி ஆகாயத்தை யளாவிய மகமேரு பருவதமானது தூள்தூளாகிப் போக, உத்தியானது சகல உலகங்களிலும் அதிக உக்கிரத்துடன் கடலுக்குள் புகுந்து பாதலலோகத்தை யடைந்து காசினியைத் தமது கோட்டிடை

அமைத்து அசையாது கொண்டுவருகிறபோது, இரணியாக்கதன் மறுத்து 'விடு விடு' என்று கதையைச் சுழற்றியறைந்தான். அதனை வராகமூர்த்தியானவர் வச்சிராயுதத்துக்கு நிகராகிய தமது மயிர்களால் தட்டிவிட்டுத் தீவிரமாக அவனியைக் கொண்டுவந்து பொருந்த அமைத்துவிட்டு, இரணியாக்கதனை எதிர்த்து வடவாக்கினியைப்போலக் கோபமிகுந்து சக்கிராயுதத்தைவிடுத்து அவன் சிரசை யறுத்தெறிந்தார். விண்ணவர்கோனாகிய வராகமூர்த்தியானவர் அத்ததியில் பிரமன், இந்திரன் முதலாகிய தேவகணங்கள் மலர்மழை பெய்துபோற்ற, பூமிதேவியானவள் அங்குவந்து சக்கரக் கையனைக்கண்டு பணிந்துத் துதித்துப் புகழ்ந்து கொண்டாடி நிற்க, தந்தையாகிய ஸ்ரீ தரன்கண்டு அம்மாதை மணந்துப் பழமபடி பாற்கடலில் சென்று படுத்து யோகஞ் செய்திருந்தார்.

இவ்வண்ணமாக இரணியாக்கதன் வராகமூர்த்தியினால் மாண்டதைக்கேட்டு அவன் மனைவியாகிய சில்லிகைப் பிரலாபித்துக்கொண்டே சென்று பூவராகமூர்த்தியைச் சேவித்து அவரருளைப்பெற்று நற்கதியடைந்தாள். இப்பால் இவன் தமையனாகிய இரணியன் தம்பி மாண்டுபோனதைக் கேட்டுச் சினமிகுந்து மாயனை எவ்விதத்திலேனும் முடித்துப் பழிக்குப்பழி வாங்கவேணுமென்று முயன்று தவவேடம்புனைந்து வேதத்திற் சொல்லியிருக்கின்ற தவங்களையெல்லாஞ் செய்து தன்மனதில் நினைத்து வாயினாற் கேட்ட வரங்களெதுவோ அவையெல்லாம் பிரமதேவன் கொடுக்கப்பெற்றுக் கொண்டுவந்து சிவன், பிரமன், விஷ்ணுவாதிய மும்மூர்த்திகளும் முடிவுகாணப்படாத சகல பூதங்களுக்குள்ள பலத்தையும் ஒருமிக்கப்பெற்று எக்காலத்திலும் அழியாமல் நித்தியமாயிருக்கின்றவனென்று வேதவேதங்களால் சொல்லப்பட்ட செகதீசனாகிய, ஸ்ரீமகாவிஷ்ணும், பிரமனும், சடாமகுடத்தையுடைய சிவனும், படைத்துக்காத்து அழிக்கின்ற இந்த ஒரு அண்டத்தின்மட்டுந்தானோ இதற்கு இப்புறத்திலுள்ள அளவில்லாத பல அண்டங்களிலுள்ளவர்களும் தன்பெயரையே சொல்லும்படி வாழ்ந்திருந்தான். எட்டுத் திக்குகளையுந் தாங்குகின்ற ஐராவதமுதலாகிய அட்டகஜங்களில் வலதுகையில் ஒருயானையும் இடதுகையில் ஒரு யானையுமாக இரண்டு கையினாலும் இரண்டு யானைகளைச் சுண்டைக்காய்போல அலட்சியமாக எடுத்து ஒன்றோடொன்றை முட்டவிடுவான்; அளவு காண்பதற்கரிதாகிய ஆழத்தையும் அகலத்தையுமுடைய ஏழு சமுத்திரங்களையும் தோணி முதலானவைகளில்லா

மல் கணுக்காலளவு ஆழமாகயெண்ணித் தன்காலாலேயே நடந்து கடந்து கரையேறுவான். ஆகாசகங்கை முதலான மகாநதிகளில் சலங் கொஞ்சமென்று நினைத்து அவற்றின் கிட்டவும் போகான் சத்தமேகங்களின் சலத்தைக் குளிர்ச்சி போதாதென்று எட்டியும் பாரான். சமுத்திர சலத்தை உப்பென்று கருதி அதில் மூழ்கவேமாட்டான். பின்னெப்படி ஸ்நானஞ் செய்வானென்றால், அண்ட முகட்டை உடைத்து அதற்கு அப்புறத்திலிருக்கும் பெரும்புறக்கடலின் சலத்தில் ஸ்நானஞ் செய்வான். இவ்விதமாகப் பெரும்புறக்கடலில் ஸ்நானஞ்செய்து நாகலோகத்திற்குப்போய் நாககன்னிகள் உபசரிக்க அறுசுவை பதார்த்தங்களுடனும் பால்-பழம்-பஞ்ச கச்சாயங்களுடனும் இட்டான்னம் புசித்து கருப்பூர தாம்பூலங்கொண்டு, கந்த புட்பாதிகளைத் தரித்து இளைப்பாறி இந்திர லோகத்திற்குப்போய் அமிருதபானம் பண்ணி இந்திராணி முதலாகிய தேவ ஸ்திரீகள் சத்திரம்பிடிக்க சாமரம்வீச, காளாஞ்சியேந்த, அரம்பை, மேனகை, முதலாகிய தேவதாசிகள் பரதநாட்டியஞ்செய்ய தேவேந்திரன் முதலான பல தேவர்களும் ஏவல்கேட்க, அந்த இந்திரனுடைய் சுதன்மமென்னும் மண்டபத்தில் சொன்னமணிச் சிங்காசனத்திலிருந்து வேடிக்கையாகப் பொழுதுபோக்கி சத்திய லோகத்திற்குப்போய்ப் பிரமனுடனே சனகசனந்தன சனாதன சனற்குமாரர்களும் மற்றுமுள்ள சகல இருடிகளும் புடைசூழ அந்தப் பிருமாவின் திரிலோகத்திலிருந்து சம்பிரமத்துட னிராப்பொழுது போக்குவான் ஒருசமயத்தில் விமானத்தின்மேலேறி, சந்திர மண்டலத்திற்குப்போய் அந்தச் சந்திரனைப்போலவே சஞ்சரிப்பான். ஒருவேளையில் தேரின்மேலேறி அதைச் சூரியமண்டலத்திற்கு நடத்திக்கொண்டுபோய் அந்தச் சூரியனைப்போலவே யுலாவுவான். எட்டுத் திசைகளிலும்போய்த் திக்குப் பாலர்கள் செய்யுங்காரியத்தையும் தான் செய்வான், மகமேருவின்சிகரத்தில் பிரசண்ட மாருதம் மோதியடித்தாலும் யுகாந்த கால இடியிடித்து விழுந்தாலும் மகாபிரளயம்வந்தாலும் சற்றேனும் சலனமில்லாமல் சொன்னச் சாயையும் சித்திர விசித்திரமாயுமிருக்கின்ற பெரியகோட்டைக்குள் நவரத்தின கசிதமாயும் திவ்வியதேசோமயமாயும் பிரகாசிக்கின்ற அழகிய மண்டபத்தில் மாணிக்க சிங்காசனத்தில் சக்கரேசுரனாய் வீற்றிருந்து அகண்டாதிபத்தியமாக இராஜரீகஞ்செய்வான். பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமாகிய இவைகளுக்கு அதிதேவதையா யிருக்கின்றவரனைவரையும் தள்ளித் தான் அவர்களுக்குப் பிரதியாயிருந்து அவர்கள் செய்கிற கிருத்தியங்களெல்லாந் தானேசெய்வான். கமலக்கண்ணனாகிய ஸ்ரீமகா விஷ்ணுவும் அக்கினிக்கண்ணனாகிய சிவனும் இவ்விரண்டுபேருங்

தவிர, மற்ற சகல லோகத்தாரும் தன் பெயரையே சொல்லித் துதி செய்ய, பிராமணர் முதலானவர்கள் மூவகை அக்கினிகளையுங்கொண்டு வேதோத்தமாகச் செய்கின்ற யாகங்கள், எக்கியங்கள், இருதுக்களில் தேவர்களைநோக்கி அவர்களுக்குக் கொடுக்கின்ற அவிப்பாகங்களையெல்லாம் தனக்குக் கொடுக்கும்படி அந்தத் தேவர்களையெவருந் தானுமிருந்துவாங்கி உண்பான். ஆக்குதல், காக்குதல், அழிக்குதல், என்கிற இந்த முத்தொழில்களையும் மும்மூர்த்திகளுந் தைவிட்டு ஒதுங்கி நிற்கும்படிச்செய்துத் தானே முத்தொழில்களைச்செய்யத் தலைப்படுவான். யோகீசுரர்களெல்லாம் அவனாலே தங்கள்பதங்களை இழந்தார்கள். தேவர்களும் தங்களுக்கு அவனே முக்கியமான தெய்வமென்று எண்ணி அவன் பாதத்தையே அருச்சிக்கிற தல்லாமல் மற்றொருவரையும் பூசிக்கிறதில்லை. முற்காலத்திலே அமரர்களும் அசுரர்களும்கூடி மிகு பிரயாசமாகத்தூக்கி நட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்த மத்தாகிய மந்தரகிரியை அவன் தன் கையில் ஊன்றுந் தடியாகச் சிலநாள் பிடித்துக்கொண்டிருந்து பின்பு அது தன்கைக்கு வன்மைபோதாதென்று எறிந்துவிட்டான். சூரியன் உதித்து ஒடுங்குகின்ற ஸ்தானங்களாகிய உதயகிரி அத்தமான கிரி என்கிற இரண்டு மலைகளும் அந்த இரணியனுடைய இரண்டு காதுகளுக்கும் குண்டலங்களா யிருக்கின்றன என்றால் மற்றும் அவன் பராக்கிரமத்தைச் சொல்லவேண்டிய தென்ன. நான்முகப் பிரமன் முதலாகிய தேவர்களும் தேவகுருவாகிய பிரகற்பதியும் சதாகாலமும் கற்பதுங் கேட்பதும் அவனுடைய கீர்த்திப் பிரதாபமே. அநாதியாகி அறியாதிருக்கும், வேதங்களும் அந்தவேதங்களுக்கு அதிதேவதையும் இரணிய நமாவென்றே சொல்லுகிறது. செபம் தபம் முதலானவைகளையும் சகலரும் அவனை நோக்கியே செய்கிறார். அவன் ஓரடிவைத்தால் பூமி தாழ்ந்துபோம். ஆயிரம் பணாமுடிகளையுடைய ஆதிசேடனும் முடிசோர்ந்து போவான். அவன் எழுந்து நின்றால் அண்டமுகடு சிரசிலே முட்டி அப்பாலுயர்ந்து போம். அவன் நடந்தால் பஞ்சமா பூதங்களும் நடுங்கிச் சலிக்கும். அவன்பெற்ற வரத்தினாலும் அட்டசித்திகளாலும் ஆணிலும்பெண்ணிலும் அலியிலும் உயிருள்ளனவாகிய சித்துப் பொருள்களாலும் உயிரில்லாததுகளாகிய சடப் பொருள்களிலும் சகல சராசரங்களிலும் சருவந்தரியாமிபோலப் புகுந்து சஞ்சரிப்பான். மண்ணிலும் மடியான், வானிலும் அழியான், நீரிலுஞ் சாகான்; நெருப்பிலும் வேகான், காற்றிலும் இறவான். தேவர்கள் யட்சர்கள் பிரமன் விஷ்ணு உருத்திரன் முதலானவர்களும் அவனைக்கொல்ல எத்தனப்பட்டாலும் உயிர்மாயாது மற்றமனிதர்கள் மிருகங்கள் பறவைகள்

முதலான பல சீவராசிகளாலும் அவனுக்கு மரணமேயில்லை. அவனுக்கு அகத்திலும் சாவில்லை; புறத்திலும் சாவில்லை; இரவிலுஞ் சாவில்லை; பகலிலுஞ் சாவில்லை; அண்டர்கள் முனிவர்கள் மற்ற யாவரும் இடுகின்ற சாபங்களும் அவனைச் சேர்கிறதேயில்லை. தெய்வீகமாகிய சக்கராயுதம் சத்திவேல் எமதண்டம் எமபாசம் பிரமதண்டம் பிரமபாசம் பிரமாத்திரம் நாராயணாத்திரம் பாசுபதாத்திரம். இந்திராத்திரம், அக்கினியாத்திரம், வருணாத்திரம், நாகாத்திரம், மாயாத்திரம் முதலாகிய அநேகவகை ஆயுதங்களும் அவனைக் கொல்லமாட்டா. எமன்வந்து பிடித்துக்கொண்டு போனாலும் சாகமாட்டானென்றால், பின்னை யார்தான் அவன் பிராணனை மாய்க்கின்றவர்கள். பஞ்சமாபூதங்களும் ஒன்றாகக்கூடி ஓருருக்கொண்டுவந்தாலும் மாளான். வேதத்திற் சொல்லப்பட்ட மந்திரங்களினாலும் ஔடதங்களினாலும் இறக்கமாட்டான். பெற்ற பிதாவே அவனைக்கொல்ல ஏற்பட்டாலும் பிராணலயப்படான். அவனுடைய நிலைமையிதுவாகும். எல்லா உலகங்களுக்குந் தானொருவனே தலைவனாகி யாரும் தனக்கெதிரில்லாமல் மகத்தாகிய தீரசூர பிரதாபத்துடனே வாழுங்காலத்தில், அந்த இரணியேசுவரன் அறிவுடையவர்களுக்கெல்லாம் மேலாகிய அறிவினையுடையவன். நல்லோர்கள் யாரினும் மிகவும்நல்லவன். வேதத்தைக்காட்டிலும் மகா பரிசுத்தமுள்ளவன். தாயைப்பார்க்கிலும் அதிக அன்புள்ளவன். அளவிறந்த தவத்தினையுடையவன். இப்படிப்பட்ட அருமையாகிய நற்குணங்கள் யாவும் பொருந்திய மானுபாவன், ஒருவன் அருமைத் திருமகனை உற்பவித்து, பிரகலாதனனென்ற பெயரினையுடையவனாய், வளர்ந்து ஐந்துவயதுள்ள சிறுபிள்ளையாயிருக்குங்காலத்தில், அநேக யுகங்களைக்கடந்தும் அபிவிருத்தியாகிக் கொண்டிருக்கின்ற ஆயுசையுடையவனும் பதினான்குலோகத்தாரும் தன் பாதத்தை வணங்கும்படி ஏகசக்கிரேசுவரனுமிருக்கின்ற இரணியாசுரன் மனமகிழ்ச்சிகொண்டு உருகி மகனைப்பார்த்து அடா! என் புத்திரசிகாமணியாகிய பிரகலாதனா! நீ சகலசாத்திரங்களையுங் கற்றுக்கொள்ளென்று சொல்லி அபரிமிதமாகிய கல்வியும் விவேகமுடைய அசுரகுருவான சுக்கிராசாரியார் புத்திரன் சண்டாமார்க்கனென்பவனை அழைப்பித்து நீர் என் கண்மணியாகிய பிரகலாதனனுக்கு வேத சாத்திராப்பியாசம் செய்துவையுமென்று திட்டப்படுத்தி அனுப்பினான்.

அவ்வண்ணமே அந்த உபாத்தியாயர் பிரகலாதனனைக் கூட்டிக்கொண்டுபோய், கல்விச்சாலையிற் சேர்த்து, வேதத்தை யோது

33

யிக்கத்தொடங்கி, அசுரேந்திரனுடைய தவகுமாரனைப்பார்த்து, ஐயா 'இரணியாமா' வென்று உன் பிதாவினுடைய நாமத்தைத் முன்னே துதிசெய்யென்று சொன்னர். அதுகேட்டு அந்தப்பாலன் தன்னிரண்டுசெவிகளையும் கைகளால் மூடிக்கொண்டு பேரறிவினையுடைய உபாத்தியாயரே! நீர் இப்படி சொல்லுகிறது நன்றல்லவென்று வேதத்தின் முடிவிலே சொல்லப்பட்ட தத்துவார்த்தமாய்விளங்கிநிற்கும் பிரமசாட்சாத்காரத்தின் திருநாமத்தைப் பிரசித்தமாக "ஹரிஓம் நமோநாராயணு" என்று நாவினாற்சொல்லி மனதுருகி தம்பாக்கிருதியா யமைவுற்று நின்று தன்னுடைய இரண்டுகைகளையும் தலையின்மேல் அஞ்சலிபண்ணிக்கொண்டு நமஸ்கரித்துத் தாமரைகளுக்கிணையாகிய கண்களில் ஆனந்தக்கண்ணீர் ஒழுக தேகம்புளகிக்க மயிர்க்கூச்செறிய இந்தப்பிரகாரம் ஞானத்திற் சிறந்தவனாகிய பிரகலாதாழ்வான் பத்திபரவசனாய்ப் பகவத்தியானத்திலிருந்தான். அப்போது சண்டாமார்க்கன் உடல்நடுங்கி "என்னடாபாவி! சண்டாளா! ஐயையோ! என்னையுங்கெடுத்தாய். இதல்லாமல், உன்னையுங்கெடுத்தாய். நீ கெட்டதுமல்லாமல் சகலத்தையுங் கெடுத்துவிட்டாயே! அடா கெடுவாய்! குலநாசகா! அந்தப் பிரமாதிதேவர்களும் சொல்லுகிறதற்கு அடாததாய் அயோக்கியமானதாயுமிருக்கின்ற ஏதோ ஒன்றைச்சொல்லும்படி உனக்கு புத்திபிறந்து நாவெழுந்ததே! அதுவென்ன காரணம்? ஓகோ! என்ன அக்கிரமத்தைச்செய்ய நினைத்தாயென்றான். அதற்குப் பிரகலாதனன் "ஐயா வித்தியாகுருவே! நான் செய்ததென்னவென்றால், முதல் என்னை உய்யும்படி செய்துகொண்டேன் பின்பு என் தந்தையை உச்சீவிக்கும்படி செய்தேன். அப்பால் உம்மையும் உச்சீவிக்கும்படிசெய்து இந்தவுலகத்தையும் உச்சீவிக்கும்படி செய்ய உத்தேசித்து வேதாத்தியயனம் பண்ணுகின்றவர்கள் ஆதியிலும் அந்தத்திலும் அந்த வேதத்தின் முதற் பொருளாகிய ஸ்ரீ ஹரியையல்லவோ துதிசெய்கிறது சம்பிரதாயமாயிருக்கிறது நானும் அந்தப்படியே சொன்னேன். அப்படி நான்சொல்லியதில் என்ன குற்றமென்று கேட்ட பிரகலாதனனை நோக்கிச் சண்டாமார்க்கன் அடா பிரகலாதனு! தேவர்களுக்கெல்லாந் தலைவர்களாயிருப்பவன் இந்திரன். அந்த இந்திராதிதேவர்களுக்குந் தலைவர்களாயிருப்பவர்கள் திரிமூர்த்திகள். அந்தத் திரிமூர்த்திகளுக்குந் தலைவனாயிருக்கின்றவன் உன்னைப்பெற்ற தந்தையாகிய இரணியேசுவரன். அப்படிப்பட்ட முதல்வனுடைய பெயரைச் சொல்லுகிறதற்கு யோக்கியனாயிருக்கிற பிராமணோத்தமனான என்னைப்பார்க்

கிலும் நீ என்ன விசேஷார்கத் தெரிந்தவன்? இந்தக் கள்ளப்பேர மாகிய பெயரைச்சொல்லி என் குடியைக் கெடுக்காதே. அப்பா! உனக்குப் புண்ணியமாய்ப் போகிறதென்று சண்டாமார்க்கன் சொன்னான்.

அப்போது நின்மல சித்தத்தையுடைய பிரலாதனன் நான் அந்த ஆதிநாயகனுடைய திருநாமத்தையல்லாமல் வேறொன்றை யும் அறியேன். என்னறிவுக்குஞ்சொல்லவேண்டியது பிறிதொன்று மில்லை. அவனுடைய கடாட்சத்தினாலே எனக்குப் போதிக்கப்ப டாத பரமார்த்தமும் வேறில்லை. அன்றி, புராதனமாகிய வேதங் கள் கிரமமாக நிச்சயித்துச் சொல்லப்பட்ட பொருளுக்கெல்லாம் முடிவாகிய பரம்பொருளாயிருக்கின்ற ஸ்ரீமந்நாராயணன் எனக் குள்ளே வந்துபுகுந்து என்னுடைய இருதயகமலத்தைத் தனக்கு உறைவிடமாகக்கொண்டு எழுந்தருளி யிருக்கிறான். ஆகையால், அவனைவிட பெறுதற்குறியபயன் உனக்கு வேறொன்றுமில்லையா னாலும் நான் அறியாதது ஏதாவதிருந்தால் அதை நீதிதவறாமல் ஓதுவியும். ஐயா உபாத்தியாயரே! பிரமசிரேட்டர்களெல்லாம் யாரைப்பணிகின்றார்? நான்குவேதங்களும் எந்த புருடோத்தமன் கலியாணகுணங்களைக் கூறுகின்றது? ஞானிகள் எந்தவத்துவைப் போற்றுகின்றார்கள்? உபநிடதங்கள் எதைச் சொல்லுகின்றன? அமரர்களும் முனிவர்களும் துதிசெய்கின்ற அந்த சருவேசுரன் திருநாமத்தைச் சொல்லவேணுமேயல்லாமல் வேறே சொல்லத் தக்க பொருளும் ஒன்றுண்டோ? மகானுக்களானவர்கள் இருக் காதியிலே தங்களினாலும் அக்கினிட்டோமாதி யாகங்களினாலும் தத்துவஞானத்தினாலும் மற்றுமுள்ள எவ்வகைப்பட்ட சாதனப் பொருள்களாலாகிலும் சாதித்தும் பெறுவதற்குரிய பொருளையே நான் முக்கியமாய்ப் பெற்றிருக்கிறேனாகையால், இனியொருவர் ஓதுவிக்கும்படியும் ஓதிக் கேட்பிக்கும்படியும் கேட்கத்தக்கபொ ருள் ஒன்றுமில்லை. மேலும் ஆரணியவாசஞ்செய்தும் மலை குகைக ளிற் சேர்ந்தும் கிருட்டிணாச்சனந்தரித்தும் சிரமுண்டிதஞ்செய்தும் சடைவளர்த்தும் அக்கினிமத்தியிலிருந்தும் தவஞ்செய்தும் அட் டாங்கயோகஞ்செய்தும் ஞானநிட்டைசாதித்தும் இந்தக் கிரமத்தி னால் மோட்சத்தையடைந்த முத்தாத்துமாக்கள் பெற்ற பாக்கி யத்திலும் மிகவும் உற்கிருட்டமாகச் சொல்லப்பட்ட பகவத்கடா ட்சமாகிய பரமபாக்கியத்தைப் பெற்றேன். இதற்காகிலும் அதிக வருத்தப்பட்டு சம்பாதிக்கவேண்டிய பொருள் என்ன இருக்கின் றது? ஸ்ரீபுருடோத்தமனுடைய அடியார்க்கடியார்களா யிருக்கின்

றவர்கள், செவியினுற் பல கேள்விகளைக் கேளாதவர்களானுலும் வாயினுற் பலநூல்களைப் படியாதவர்களானுலும் தேவர்களுக்கு அபிப்பாகங் கொடுக்கின்ற மந்திரங்களைச் சொல்லுகின்ற சதுர் வேதங்களின் பூர்வார்த்த உத்தரார்த்தங்களும் அறிவார்கள் வித்துவசெனங்களும் ஆவார்கள். உண்மைப்பொருளையுங் காண்பார்கள் அவர்களுடைய பிரபாவத்தை யாரறிவார்கள்? எனக்கும் சதுர்முகப்பிரமனுக்கும் சகலமானவர்களிலுமுயர்ந்த தனக்கும் தன்னிலையை அறியக்கூடாதிருக்கின்ற அந்த எம்பெருமான் என் மனதிலெழுந்தருளி யிருக்கின்றமையால் எனக்குச் சகலமும் எளிதிற் கிடைத்திருக்கின்றன. ஐயா உபாத்தியாயரே! உமக்குமிதை விட புத்தமானது மற்றென்றில்லை. இந்தப்படியே எம்பெருமான் திருநாமத்தை நீரும்சொல்லி இந்த அனுட்டானத்தையே கைக்கொண்டு உம்முடைய ஆன்மா உச்சீவிக்கின்ற விதத்தை நாடிக் கொள்ளுமென்று சொன்னுன்.

இவ்வாறு பிரகலாதனன் சொல்லக்கேட்டு அந்த சண்டாமார்க்கனென்கிற உபாத்தியாயர் அதற்குப் பதிலாக யாதொரு மொழியுஞ் சொல்லாமல் மனது திடுக்கிட்டு, இனியெனக்கென்ன பெருமை யிருக்கின்றது? என் பிராணனுக்கு முடிவு வந்துவிட்டதே! இதற்கு வகையொன்றும் குறியேனே! இரணியனிடத்திற்குப்போய் அவனைக்கண்டு நல்ல விசேஷத்தைச்சொல்லித் தப்பி வருகிறதே மகாபிரயாசம். அப்படியிருக்க, இக்கொடுமைதங்கிய கொள்ளையை எப்படி மனந்துணிந்து நாவுகூசாமற்சொல்லுவேன்? அப்படியல்லவென்று துணிந்து சொன்னுல் அவனென்னசொல்லுவானே? ‘நான் வேதங்கற்பிக்கச்சொன்னுல்’ ஏதேதோ துர்ப்போதனைகளைப்பண்ணி, என் பிள்ளையின் புத்தியை நீ கெடுத்துவிட்டாயென்பானே? கோபங்கொண்டு கொலைசெய்வானே? ஐயோ! நான் இதுவரையிலும் சுகமாக சீவித்திருந்தேன். இப்பொழுதெனக்குக் கிரகசாரந்தான் போதாதோ? ஐயையோ! இதேது தன்மசங்கடமாகயிருக்கிறதென்று எண்ணுததுமெண்ணி, முகம் வாடிக் கிலேசமடைந்து பயந்து நடுநடுங்கிக்கொண்டே போய் இரணியனைக்கண்டு அதிக பயபத்தி விசுவாசத்துடனே சாட்டாங்கமாகவிழுந்து வணங்கி எழுந்து கைகட்டிவாய்பொத்தி வத்திரத்தை யொதுக்கிக்கொண்டுநின்று “ஓசுவாமி! அடியேனொரு கனவுகண்டேன். அதைத் தேவரீரிடத்திற் சொல்லும்படி வந்தே” னென்று சொன்னுன். ‘அது என்ன ஐயா’ வென்று இரணியன் கேட்க, “எங்களுக்கெல்லாந் தந்தையாயும் குலதெய்வமாயுமிருக்



கின்ற இரணியேசுரனே! உம்முடைய குமாரன் இம்மையினும் மறுமையினும் வாயினற் சொல்லத்தகாததாயும் மனதினல் நினைக்கக்கூடாததாயு மிருக்கின்ற சொற்களை ஒருவர் சொல்லிக் கொடுக்காமல் தானே சொல்லிக்கொண்டிருக்கிறன். வேதமோ தென்று சொன்னல், ஓதாமல் நான் முன்னமேதானே சகலார்த் தங்களையும் அறிந்திருக்கிறேனென்று சொல்லுகிறன்" என்று சொன்னன். உபாத்தியாயன் சொல்லைக்கேட்டு இரணியன் "ஐயா சண்டாமார்க்கரே! பிராமணர்களுக்கு யோக்கியமல்லாததாயும் முன்பு யாவருஞ்சொல்லி யக்கிரமத்திலே சம்பந்தப்படாததாயும் நீர் வெறுக்கும்படி அவன் தன்னறிவினலே புதுமையாக எடுத்துச் சொன்னதுதானென்ன? சொல்லு" மென்றன். அதற்குப் பிராமணன் பயந்து சிரசின்மேற் கைகூப்பி வணங்கி சொல்லுகிறன். காதுக்குள்ளே விடநாகம் நுழைவதுபோல மகா கொரமாயிருக்கிற சொல்லை அடியேன் தேவரீரிடத்திற் சொல்லுவேனுகில், இரௌரவா[illegible]த்திலே போய்விழுவேன். என்னுவும் இப்பொழுதே வெந்து இற்றுவிழுமென்று சொல்ல அதுகேட்டுக் கொடியவனுகிய இரணியேசுரன் ஆச்சரியசித்தனுய் என்குமாரனை அழைத்து வாருங்களென்று ஆக்கியாபித்தான். அந்தக்கணமே தூதர்களோடிப்போ யழைத்துவந்தார்கள். தனக்கு ஒரு துணையும் வேண்டாமலிருக்கின்ற ஏகமூர்த்தியைத் துணையாகப்படைத்த பிரகலாதனன்வந்து தன் பிதாவைக் கண்டு சேவித்தான். அப்படி சேவித்தபுத்திரனை மணியாரம்பிரகாசிக்கின்ற தன்மார்பினிடத்திலணிந்த பொற்சுண்ண முதலானவை அவன்மார்பிற் படியும்படி அன்பினலிறுகத்தழுவிப் பக்கத்தில் வைத்துக்கொண்டு அவனுடைய திருமேனி முழுமையும் பார்த்து "அப்பா பிரகலாதனு! உன் உபாத்தியாயர் கோபிக்கும்படி பழுதாக நீ என்னவார்த்தை சொன்னுய்? அதைச் சொல்" என்று இரணியன்கேட்க ஐயா வேதமோதும்போது முதலில் சொல்லவேண்டியதை நான் உச்சரித்தேன். அறிந்தாலும் நினைத்தாலும் கேட்டாலும்சொன்னுலும் துன்பக்கடலைக் கடப்பதற்கு உரியது இதுவேயாம். இதைவிட மேலாகியது வேறென்றுமில்லையென்று பிரகலாதனன் சொன்னன். தேவர்களையும் மற்ற யாவர்களையும் காட்டிலும் தக்க வொழுக்கத்தையுடைய அந்தப் பிரகலாதனன் இவ்வாறு சொல்லவே துட்டனுகிய இரணியன் குற்றமில்லாத உபாத்தியாயர் சொல்லியபடி இவன் ஏதோ விரோதமானமொழியைச்சொல்லியே யிருப்பான்போலத் தோன்றுகின்றது. ஆகிலும் இவனுடைய அபிப்பி

ராயத்தை அறிவோமென்றுதனக்குத்தானே யோசித்துக்கொண்டு அடா குழந்தாய்! நீசொல்லிய சொல்லென்ன? அதைச் சீக்கிரமாகச் சொல்லென்றுகேட்க, பிரகலாதனன் சொல்லுகிறுன்.

கேளும், என் தந்தையே! "மனதில் எண்ணினதையெல்லாங் கொடுப்பதும் அதையனுபவித்துக் கடந்தால் மோட்சத்தையடையும்படிச்செய்வதும் ஓமங்கள் யாகங்கள் செய்தவர்களை அவைகளுக்குரிய பதவிகளிற் சேர்ப்பதும் ஏகவத்துவாகியிருக்கின்ற பகவானுடைய திருநாமமேயாம். பூமண்டலத்தில் பிரமலோகபரியந்தம் வாழ்கின்ற எண்ணிக்கையில்லாத பூதபௌதிக சராசரங்கள் யாவற்றினுள்ளும் கலந்து நிறைந்து அந்தக்கரணங்களிலும்பொருந்தி அங்கிருந்து உதிக்கின்ற உணர்வினல் உணரப்படுவது இந்த திருவட்டாக்கரமேயல்லது வேறில்லை. திரிநேத்திரங்களையுடைய மகாதேவனும் சதுர்முகப் பிரமாதிகள் தொடங்கி மனிதர்வரையினும் இந்தத் திருமந்திரத்தைமறந்தவர்கள் இறந்தவர்களே. இதை யொருவர் காண்பிக்க ஒருவரறிவது மகாபிரயாசம். அப்படியானல், எப்படிதான் அறிகிறதென்றல் சொல்லுதற்குரிய அதிகாரியாகிய சதாசாரியனும் கேட்பதற்குரிய பக்குவனுகிய சீடனும் கூடி ஒருமித்திருந்து காட்டக்கண்டறிந்தால் அறியலாம். மற்றப்படி அநாதிகாரியனுகிய ஆசாரியனும் பக்குவமில்லாதவனுகிய சீடனும் அதன் நிலையைக்காட்டவும் அதன் குணங்களை யறியவுமாட்டார்கள். சனனமாகிய சமுத்திரத்திற் பழவினையாகிய சுழலினின்றும் கரையேற்றுகின்ற நல்ல மரக்கலமாக இருப்பதும் யாவருக்குங் கிடைப்பதற்கு அருமையாகிய பூடணமாயிருப்பதும் சொல்லவும் பேசவும் மங்களகரமாயிருப்பதும் இருடிகள் வேதத்தின்முடிவில் இலக்கியமாகத் தெளிந்தெடுத்த மெய்ப்பொருளு மிதுவே இதற்குச் சமானமும் அதிகமும் இதுவேயல்லாமல் மற்றொன்றுமில்லை. உம்முடைய ஆன்மாவுக்கும் என்னுடைய ஆன்மாவுக்கும் இவ்வுலகத்திலுள்ள சகல ஆன்மாக்களுக்கும் இதுவே உறுதியான பொருளென்று நான் மதித்துச் சொன்னேன்" என்று தத்துவ ஞானிகளிற் சிறந்தவனுகிய பிரகலாதாழ்வான் விசிதமாகச் சொல்லவே, இரணியன் சோதிமின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற தன் கையிலேந்திய வீரவேலாயுதத்தைச் சுழற்றிக் கண்களை நெருப்பு சொலிக்க விழித்து "அடா துஷ்டப்பயலே! நான் பிறந்தநாள் முதல் இந்நாள்வரைக்கும் இந்தப்பெயரைச்சொன்ன வாயையும் இதைநினைத்த மனதையும் என்னுடைய ஒப்பற்ற சக்கராக்கினியானது தகித்துவிடும். அப்படியிருக்கப் பின்னையாருனக்கிந்த

பெயரைச் சொல்லிக்கொடுத்தவர்கள்? நீ எவரிடத்திற் கற்றுக் கொண்டாய் சீக்கிரத்தில் உண்மையைச் சொல்லடா!" என்று காலாக்கினி சொரூபமாய்க் கோபித்து தேவர் முனிவர் முதலாகத் திரிலோகங்களிலுமுள்ள சகலமானவர்களும் என்னுடைய உபய பாதத்தையே தியானஞ்செய்கிறதும் என்பெயரையே துதிசெய்கிறதும் அவர்களுக்கு விதியாகையால் அவர்களெல்லாம் உனக்கு இதைச் சொல்லுகிறதற்குப் பயப்படுவார்கள். எப்படிதான் நீ அறிந்தாய்? அந்த விஷ்ணுவானவன் என்னிடத்தில் யுத்தஞ்செய்யும்படி அநேகமுறைவந்து எதிர்த்துத் தானேறிய கருடவாகனத்தின் வேகத்தால் தப்பியோடிப்போய்க் கடலிலேவிழுந்து அமிழ்ந்து இன்னமும் எழுந்திராமல் கிடந்து உறங்குகின்றான். அவ்வாறு உறங்குகின்றவனுடைய பெயரை யுனக்கு உறுதியென்று சொன்னவர்களைக்காட்டடா? சமுத்திரத்தின் சிறுமணலையெண்ணி அளவிட்டாலும் நம்முடைய குலத்திலே கூறிய பெரியோர்களை அளவிடக்கூடாது. அத்தனைபேர்களும் அவனொருவனேகொன்று தீர்க்கும்படி மாண்டுபோனார்கள். எலியானது தனக்குக் கூற்றுவனாகிய கொடியபாம்பின் பெயரைச்சொன்னதனால் அதற்கு என்ன நன்மையுண்டோ? அந்தப்படித்தானிருக்கிறது நீ அந்தச் சத்துருவின்பெயரைச்சொல்லுகிறது. உனக்கிந்தச் சொட்டுப்புத்தி வந்ததற்குக்காரணம் என்னவென்று சொல்லலாம். மேலேழுலோகங்களையுங் கீழேழுலோகங்களையும் தன் வயிற்றிற்குள்ளே அடக்கி வைத்துக்கொள்ளத்தக்க சந்தேகமற்ற பலத்தையுடைய என் தம்பியாகிய இரணியாட்சனென்பவனை ஒரு பன்றியாகவடிவெடுத்துக் கொம்பினாற்குத்தி யெறிந்தவனுடைய பெயரைச்சொல்லுகிறதற்கோ உன்னை நான் பிள்ளையாகப்பெற்றது? பெற்ற தந்தையின் பெயரைச் சொல்லுகிறதற்கல்லவா? உலகத்திற்கும் அதிலுள்ள யாவருக்கும் எல்லாவற்றிற்கும் நானொருவனே தலைவனாக இருக்கிறேன். சகல உயிர்களையும் ஆக்கல், காத்தல், அழித்தலென்கிற இம்மூன்று தொழில்களும் என்னாலே செய்யப்படுகின்றன. இந்தப் பிரத்தியட்சமாகிய காரியத்தைப் பாராமல் வேறே காரணமுண்டென்று நீ சொல்லுகிறது எந்தவேதத்தின் சம்மதமென்று தேறினாய்? ஆதியந்தமில்லாத அளவிறந்த உலகங்களிலும் வேதம் எந்தமார்க்கமோ அந்தமார்க்கத்தையே சார்ந்து அது சொன்ன விதிப்படியே குற்றமற்ற நல்வினையைச் செய்தவர்கள் மேன்மைப்படுவார்கள் தீவினையைச்செய்தவர்கள் தாழ்ந்தவராவார்கள் ஆராயுமிடத்தில் இது எதார்த்தமாம். பூர்வத்தில் மகத்தாகித்தவத்தைச்

செய்ததினால் அரியரப்பிரமாக்கள் திரிமூர்த்திகளென்று யாவருஞ் சொல்லத்தக்க பதத்தைப்பெற்றார்கள். பின்பு நான் அவர்களைப்பார்க்கிலும் விசேடமாகிய தவத்தைச்செய்து உண்மையாகிய ஈசபகத்துவத்தை வகித்ததனால் அந்தப்பதத்தை அவர்களிழந்து இனி யிச்சித்தாலும் அது கிடைப்பது கூடாதென்று நினைத்துப் பூரணமாகிய என்னதிகாரத்துக்குள்ளடங்கி நடக்கிறார்கள். புத்தியில்லாத இளம்பிள்ளையாகிய நீ இப்பொழுது செய்தபிழையை நான் பொறுத்துக்கொண்டேன். இனிமேலிப்படிப்பட்ட விரோதமாகிய வார்த்தைகளைச் சொல்லாதே. உபாத்தியாயர் என்ன சொன்னாலும் அதையே இதமாகக் கொள்ளக்கடவாய். இனி வாசித்துக்கொள்ள போடாவென்று இரணியேசுரன் சொல்ல, அதற்கு "ஐயா உமக்கு நான் அறிவிக்கவேண்டிய சிலவார்த்தைகளுண்டு. அதை நீர் அசட்டைபண்ணாமல் கேட்டறியவேண்டும்; அதென்னவென்றால் வேதமாகிய கடலுக்குக் கரையாகியும் யாவரும் கற்கின்றகல்விக்குப் பிரையாகியு மிருக்கின்றதென்றும், வித்தில்லாதவிளைவு ஒன்றுமில்லை. ஆதலால், உம்முடைய பயித்தியத்தை விட்டுவிடுவீராகில் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலக் காண்பீர். தனக்குள்ளேயிருந்து உலகங்களையெல்லாம் உற்பவிக்கச்செய்தும், தானும் அவற்றிற்குள்ளே கலந்திருந்து தனக்குப் பின்னுமில்லாமல் முன்னுமில்லாமல் ஏகவத்துவாகி அழியாதிருக்கிறவனுடைய மகிமைப் பிரபாவமானது ஒருவரால் நிச்சயித்துச் சொல்லத்தக்கதோ? விரிந்து சுருங்கியிருக்கின்ற பிருதிவி முதலாகிய தத்துவங்களையெல்லாம் வெவ்வேறாகப் பகுத்துக்காண்கின்ற சாங்கியநெறியும் யோகநெறியும் என்று இரண்டுவழிகளுண்டு. அவைகளை அறிந்தவர்களுக்கல்லது மற்றவர்களுக்கு அவனுடைய மேலாகிய உயர்ந்தநிலை இன்னதென்று அறியக்கூடுமா? வேதமுடிவில் சித்தென்றுதெளிந்து சொல்லப்பட்ட மெய்ப்பொருளாகிய அவனுடையதன்மையை, தம்மைத்தாமறிந்த ஞானசீலர்கள் அறிவார்கள். அப்படியல்லாமல் விடயங்களையே பொருளென்று மதித்துக்கொண்டிருக்கின்ற பித்தர்களுமுண்டு. அவர்கள் தம்மை யறியாமல் அவனுடைய தன்மைகளையும் அறியார்கள். அவர்கள் மோட்சமும் பெறமாட்டார்கள். பிரத்தியட்சமாகிய பிரமாணங்களால் அளவிடப்படாததாயும், மனதுக்கு அகோசரமானதாயும், உபநிடதங்களிற் சொல்லப்பட்ட வாக்கியங்களாலும் அந்த வாக்கியார்த்தங்களாலும் அறிவிப்பதற்கு எட்டாததாயுமிருக்கின்ற அந்தப் பரமபுருடனுடைய இரகசியத்தின் உண்மையைக்காணுதபாம

ர்களில் ஆரறிவார்கள்? கீழ்மேல் நடுவாகிய மூன்றுலகங்களையும் முக்குணங்களாகியும் யாவரும் யாவுமாகியும் இவைகளுக்கு வேறுபட்டும் நீக்கமில்லாமலிருக்கின்ற ஒப்பற்ற நிலைமையுடைய பரம்பொருளாகிய ஒருவனுடைய கிருத்தியங்கள் பிரமாதி தேவர்களாலும் முனீசுரர்களாலும் அறியப்போமோ? கன்மமும் அந்தக் கன்மத்தாலாகிய பயனும் அப்பயனைத்தருகின்ற கருத்தாவும் தானேயிருக்கின்றான். அவனுடைய அருமையையும் பெருமையையும் ஆரேனும் அறிவார்களாகில், அவர்கள் இகபரமென்கிற கடலைக்கடந்து கரையேறுவார்கள். மந்திரமும் மாதவமும் அவற்றால்வரும் பிரயோசனமும் அவைகளைக்குறித்துக் கிரமமாகச் சொல்லப்பட்ட தெய்வமும் வேதமும் வேள்வியும் ஆகுதியும் அவனே. முறைதவறாமல் முன்னேகொடுக்கவேண்டியபலனை முன்னே கொடுக்கிறதும், பின்னே கொடுக்கவேண்டியபலனை பின்னே கொடுக்கிறதும் அந்த நாராயணன் செய்கையே. அதை அவனுடைய அற்புதமாகிய மாயையினாலே அநேகரறியாதிருக்கிறார்கள். நல்வினையானது நன்மையும் தீவினையானது தீமையுமாகிய ஒவ்வொரு பலனைக் கொடுக்குமல்லாமல் விசேடமாகக் கொடுக்கமாட்டா. அந்தப் பகவானுடைய கருணையின்பிரபாவம் அப்படியல்ல. சனன மரணத்துக்கு ஏதுவாகிய இருவினைகளும் பற்றற்றுப்போம்படிச் செய்து ஆசிரதர்கள்நினைவிலென்னென்ன உண்டோ அவையெல்லாம் அவர்களுக்குக் கொடுக்கின்றான். இதையறிந்தும் வேறு திருஷ்டாந்தரமும் வேணுமோ? யாககிருத்தியங்களைச்செய்கின்ற சோமயாசிகள் யாகமுடிவிலே அந்தச் சேடசாயிக்கு ஒரு ஆகுதி கொடுப்பார்களானால் அது சராசரங்களுக்கெல்லாம் பிரீதியாகும். வேதமும் இப்படியே சொல்லுகின்றது. மூலப்பிரகிருதியென்னும் மாயையினிடத்திலிருந்து தோன்றிய பஞ்சபூத பௌதிகங்களைத் தந்தமுதற்பொருளானது அந்தப் பூதபௌதிகங்களாலாகிய மிருககதியும் அவைகளுக்கு மேலாகிய மனுடகதியும் அதுகளுக்கு மேலாகிய தேவகதியும் ஆகிய இவ்வகையாயுள்ள எழுவகைத் தோற்றத்திலும் போக்குவரவற்ற நிலைமையை அடையாதவர்களுடைய அறிவுக்கு எட்டுமோ? பிரமன்முதலான சராசரங்களெல்லாம் அந்தச் சோதிசொரூபியின் திருநாபிக்கமலத்தின் பொகுட்டில் ஒரு புரைக்குள்ளே அடங்கிருக்கின்றன. காண்கின்றவர்கள் கண்களுக்குள்ளும் காட்டுகின்றவர்களுடைய கண்களுக்குள்ளும் அவனொளித்திருக்கிறான். பஞ்சபூதங்களுக்குள்ளும் நிறைந்திருக்கிறான். சகலருடைய நினைவிலுஞ் செய்கையிலுஞ் சொல்லிலும்

வாழ்த்திருக்கின்றான். இந்திரியங்கள் தோறும் சேர்ந்திருக்கின்றான். இப்படிக்கெல்லா மிருக்கின்றதைத் தானெவ்வளவும் நினைக்கிறதுமில்லை. முன்பு ஏகாட்சரமாகிய பிரணவமும் பின்பு துவயாட்சரமாகிய நமசத்தமும் அப்பால் பஞ்சாட்சரமாகிய நாராயணாய வென்பதுமாகிய எட்டெழுத்தும் மூன்றுபதமும் இரண்டு சந்தியுமாய்த் தழைத்திருக்கின்றான். காமவெகுளி மயக்கங்களினாலுண்டாகிய பீடைகளையெல்லாம் நிவர்த்திசெய்கின்ற அந்தச் சட்குணபரிபூரணனான எம்பெருமானுடைய திருநாமத்தையும் அதன் மகிமையையும் குறித்துப் பேசாதவர்கள் அவனது இருப்பை எப்படியறிந்து பேசமாட்டுவார்கள்? காலமும் கருவியும் இடமும் பயனும் அந்தப் பயனையனுபவிக்கின்றவனும் சீலமும் அதுகொடுக்கின்ற சம்பத்தாயும் விகாசமாயுமிருக்கின்றான். சங்கீதவித்துவான்கள் சத்தசுரங்களையும் தங்களுக்குள்ளே உதிக்கின்ற உணர்வினால் முன்பு சிந்தித்துக் கண்டறிந்து பின்பு வீணையினிடத்தில் வாசிப்பதினால் செவிக்குவிடயமாகும்படி அறிகிறதுபோல பெரியோர்கள் யோகத்தில் தியானத்தின் வழியாகத் தரிசித்து அந்த யோகநிட்டையிலே புறத்திற் காண்கின்றதனால், அகத்திலுள்ளவனாகியும் புறத்திலுள்ளவனாகியும், ஆகாசமானது மற்ற பூதங்களுடன் சேர்ந்திருந்தும் அதினுடனே கலவாமலிருப்பதுபோலே இவன் பிருதிவி முதலான தத்துவங்களுடனே கூடியிருந்தும் அதுகளிலெல்லாம் கலவாமலிருப்பதுபோலே தாக்கற்றுநிற்பவனாகியும் வேதங்களும் பிரமிக்கின்ற தன்மையையுடையவனாகியு மிருக்கின்றான். ஓங்காரமாகிய ஓரெழுத்துக்குள் அதனுயிராயுமிருக்கின்றான். அறிவுக்கறிவாயுமிருக்கிறான், மூவுலகங்களையும் தழுவி யிருப்பதனால் புகையும் அக்கினியும்போலவு மிருக்கின்றான். பல பேதமாகிய சமயங்களைப்பற்றி வாதிக்கின்ற சமயவாதிகளுடையமாறுபாடுகளையொழித்து ஏகபாவனையாய் பேசுகின்றவர்களுக்கெல்லாம் பல மலர்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட மாலையினிடத்துள்ள மலர்களைப்போலவும், கடலும் அதனலையும்போலவும், வேறுபாடில்லாமலுமிருக்கிறான். இப்படிப்பட்ட பரமான்மனை நீரிகழ்ந்துபேசி உம்மைச் சார்ந்திருக்கின்ற செல்வமும் உம்முடைய தீர்க்காயுளும் பெயரற்றுப் போம்படி நீரும் பிராணனையிழந்துவிடுகிறீரேயென்று நினைத்து ஆனந்த சகதீசனுக்குத் தெண்டன்சமர்ப்பித்து மங்களாசனமாக அவனுடைய திருநாமத்தைச் சொன்னேனென்று பிதாவுக்குத் தெரியும்படிச் சொன்னான்.

இவ்வாறு ஸ்திரோநின்று பிரகலாதனன் சொல்லவே அந்த இரணியனுக்கு எவ்வகை யுலகங்களும் அஞ்சும்படிச் சமுத்திரத்

திற்றேன்றிய ஆலகாலவிஷத்தைப்போலப் பிரபலமாகிய கோப மூண்டது. சூரியனும் சந்திரனும், ஆகாசமுஞ் சுழன்றன. பூகம்ப முண்டாயிற்று. அவனுடைய கண்கள் உதிரத்தைக் கக்கின கொடி போலப் புகையெழும்பி யுகாந்த காலாக்கினியைப்போல உக்கிர மாகிய அக்கினி சொலித்தது. இவ்விதமாகப் பொங்கி அந்த இர ணியேசுரன் "என்னுடனே பகைக்கின்றவர்கள் இனி வேறில்லை. குடலுக்குள்ளே தினவுபோல என்னிடத்தில்தானே பிறந்து என் சத்துருவுக்கே நானடிமையென்று சொல்லுகின்றான். ஆகையால், இவனைக் கொண்டுபோய் கொலைசெய்யுங்கோ"ளென்று ஆக்கியா பித்தான். அந்த நிமிஷத்திலேதானே காலனைப்பார்க்கிலும் அதிக மான கொடுமைகளைச் செய்கின்றவர்களாகிய அசுரர் அநேகர் வந்து, ஒரு யானைக்குட்டியைச் சிங்கத்திரள்பிடித் திழுத்துக்கொ ண்டு போவதுபோலப்பற்றி இழுத்துக்கொண்டுபோய் மலைபோல் உயர்ந்த இரத்தினகசிதமாகிய வாசலுக்கு வெளியிலேநிறுத்தி மழு வாள் சூலம் வேல், குந்தம், கதை முதலாகிய ஆயுதங்கள் அநேக மாயிரங்களைக்கொண்டு, பிரக்லாதனன்மேல் பிரயோகஞ்செய்து, 'இவனை உயிருடனே தின்று தீர்ப்போ'மென்று இடியைப்போலக் கொக்கரித்துக் கண்களால் நெருப்பைச் சொரிந்தார்கள். அப் போது சீவகோடிகளினிடத்தில் பெற்றதாயைப்போல அன்பைச் செலுத்துகின்ற அந்தப் பிரகலாதனன்மேல் தவத்தைச்செய்யாத் பாவிகளாகிய அசுரர்கள் பிரயோகித்த ஆயுதங்களெல்லாம் நல் லொழுக்கத்தையடைந்த மெஞ்ஞானியின் சகாயத்தைப் பெற்ற ஒருவனை அவன் பகையாளிகள் வைத வசைச்சொல்லைப்போலாய் விட்டன.

அவன் ஒரு தன்மையாகிய வைராக்கியசித்தத்தையுடையவ னாய்த் தான் அகக்கண் புறக்கண்களால் தரிசிக்கப்பட்ட தற்பர னாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடியை மறவாமலும் அவன் திருநாமத்தை விடாமலும் தியானம் பண்ணிக்கொண்டிருந்தத னால் அவன்மேலெறிந்தனவும், எய்தனவும் அவனையெற்றியனவும் குத்தியனவும், அரிந்தனவுமான சகலபடைகளும் முறிந்து ஒடிந்து உதிர்ந்து சிறுபொடிகளாய்ப்போயின. அவனுடைய திருமேனியி லுண்டாகிய தினவைக்குறித்துச் சொரிந்த அம்மாத்திரம் உபத்தி ரவமும் அவை செய்யவேயில்லை. அதையந்த அசுரர்கள் பார்த்து ஆச்சரியங்கொண்டு இரணியனிடத்தில்வந்து 'சுவாமி! எங்களிடத்தி லுள்ள ஆயுதங்களையெல்லாம் பிரயோகஞ்செய்தோம். அவை யெல்லாந் தவிடுபொடியாய்விட்டன. உம்முடைய குமாரன் சரீ

ரத்துக்கு யாதொரு துன்பமுமில்லை. இனிமேல், நாங்கள் செய்ய வேண்டிய தென்ன'வென்றார்கள். அதைக்கேட்டு அசுரேந்திரன் மிகுந்த கோபமுண்டானவனாய்ப் பிரகலாதனன் கபடமான நெஞ்சுடையவனாகையால், ஏதோ மந்திரக்கட்டினால் அந்த ஆயுதங்களெல்லாம் தன்னுடம்பில் தாக்காமல் முறிந்துபோம்படி செய்தான். நல்லது இப்பொழுது நீங்கள் கோரமான அக்கினியை மூட்டி அதிலே அவனைக்கட்டித் தள்ளிவிடுங்களென்று ஆக்கியாபித்தான். அப்படியே அந்தத் துட்டர்கள் அதிக நீளமும் அகலமும் ஆழமுள்ளதாக ஒரு பெரிய குழிவெட்டி அந்தக்குழியிலே பருவதம்போலப் பருத்த புளியங்கட்டைகளை மேலும்மேலும் நிறைய அடுக்கி ஆயிரங்குடம் எண்ணெயும் ஆயிரங்குடம் நெய்யும் கொண்டுவந்து சொரிந்து தணல் மூட்டினவுடன் சுவாலையானது தெய்வலோகமட்டும்போய்க் கொழுந்துவிட்டு நெருப்பு பற்றிக்கொண்டு பிரளயகாலாக்கினிபோல எரியும்பொழுது அங்கிருந்தவர்களெல்லாம் உயிர்சோரும்படி எம் ஐயனாகிய பிரகலாதாழ்வானைக் கையுங்காலுங்கட்டி நிர்த்தாட்சணியமாய்த் தள்ளிவிட்டார்கள். அவன் உலகபிராட்டியனுடைய திருவடியை நமஸ்கரித்துக்கொண்டே "நாராயணா நாரத பாராயணா" வென்று துதிசெய்து நின்மலசித்தத்துடன் அதிலே விழுந்தான். அதியுட்டினமாகிய அந்த அனலானது அவனுக்குக் குளிர்ந்து சீதள சந்தனக்குழம்பு போலாய்விட்டது. அப்பொழுது அசுரர்கள் இரணியனிடத்திற்குப்போய் "ஐயா! தேவரீர் உத்தரவின்படி நெருப்புக்குழியில் தள்ளியும், உம்முடைய புத்திரனை அந்தப் பெருநெருப்பு எவ்வளவுந் தகிக்கவேயில்லை. இனி யென்னசெய்கிற" தென்று கேட்டார்கள். இரணியேசுரன் விழிகள் சொதிக்கும்படி மிகவும் குரோதத்தைக்கொண்டு "அப்படியா? அந்த அக்கினியைகட்டிச் சிறையிடுங்கள். இந்தத் திருட்டுப்பயலை அட்டமாநாகங்களைவிட்டு கடித்து உயிர் குடிக்கும்படி செய்யுங்கள். அவன் சாகாமலிருப்பதைப் பார்ப்போ"மென்று ஆக்கியாபித்தான். அனந்தன், வாசுகி, சங்கன், குளிகன், பதுமன், மகாபதுமன், தட்சகன், கார்க்கோடகன் என்கிற தெய்வீகமாகிய சர்ப்பங்களெட்டும் இரணியேசுரன் நினைத்தமாத்திரத்தில் அதிசீக்கிரமாக வந்து "எங்களுக்கென்ன கட்டளை"யென்று கேட்டுணர்ந்து, அவன் சொற்படியே கொடிய விஷாக்கினியைச் சிந்துகின்ற வாயினாலிறைச்சலிட்டுச் சீறிப் பிரகலாதனனுடைய அழகிய திருமேனியில் வாளைப்போல நீண்டு வளைந்து கூர்மையாயிருக்கின்ற பற்களூன்றும்படி மரணமடைவதற் கேதுவா

கிய திதிருட்சத்திரங்களில் அதிக கோபமாகக்கடித்தன. கடித்த
வுடனே படம்விரித்துக் கொண்டாடின. தரையிலும் புரண்டன.
அப்போது பிரகலாதனன் தன் சரீரம் துடிக்காமல் எம்பெருமானு
டைய திருநாமத்தை உச்சாரணம் பண்ணிக்கொண்டிருந்தான்.
பக்கத்தில் நின்றவர்கள் பயத்தினால் வாயின்வழியாக இரத்தத்
தைக் கக்கவும் பாம்புக்கு வைரியாகிய கருடனும் நடுர்ந்தலை
யடையவும் சிவந்த மேகத்திற்குள்ளே பாலசந்திரன் நுழைகிறது
போலக் கடிமீளாத உருப்புகளில் காளி, காளாத்திரி, எமன், எம
தூதனென்கிற நான்குபற்களும் தைத்து உருவமெழுப்பிக் கடித்
தனால் அந்தப் பாம்புகளின் பற்களெல்லாம் வலியற்று ஒடிந்து
உதிர்ந்தன. பிரகலாதனைக் கடித்தவிடங்களெல்லாம் விடம்பாயா
மல் அமுதம்ஊறி ஒழுகத் தலைப்பட்டது.

அதுகண்டு தூதர்களோடி "ஐயா அட்டநாகங்களுஞ்சூழ்ந்து
கடித்தும் அவற்றின்பற்கள் அழுந்தவும் இல்லை. உம்முடையமைந்
தனுக்கு விடமேறவுமில்லை" என்று இரணியனுடனே சொன்னார்
கள். அவன்கேட்டு கோபச்சிரிப்பு சிரித்து "ஐராவத யானைமுன்
னே இவனைக் கொண்டுபோய்போட்டு, அதன்காலாலிடறச்செய்து
விடுங்க"ளென்றான் அந்தப்படியே தூதர்கள் தெய்வீகமாகிய பாச
ங்களைக்கொண்டு பிரகலாதனை கை, கால், மார்பு, கழுத்துகளி
லும் இறுக்கி ஒடுக்கிக்கட்டி எடுத்துக்கொண்டுபோய் வெள்ளை
யானைமுன்னே போட்டார்கள். மின்னலைப்பழிக்கின்ற தன் கொம்
புகளினாலே பிரகலாதனனுடைய வயிரமாகியமார்பில் அது குத்தி
யழுத்தியது. அவ்விதமாக அழுத்தவே அந்தத் தந்தங்கள் நான்
கும் இளவாழைத்தண்டைப்போல முறிந்துபோய்விட்டன. அது
கண்டு உண்மையில்லாத அசுரர்கள் கண்ணிமைப்பதற்குள்ளாகப்
போய் "ஐராவதம் உம்முடைய குமாரனைப்பாய்ந்து குத்தி, கொ
ம்புகளற்று விழுந்த"தென்று சொல்ல, அசுரேந்திரன் கோடை
காலத்துச் சூரியனைப்போலச் சுடுகின்ற கண்களையுடையவனாய்க்
கோபித்து "அவனை ஏழுநிலைகளையுடைய நமது பெரிய உப்பரி
கையின் வாயிற்கோபுரச் சிகரத்தின்மேல் ஏற்றி பூமியிலே தள்ளி
விடுங்க"ளென்று உத்தரவுசெய்தான் பிரசண்டவாயுவைப் பார்க்கி
னும் அதிகபலத்தையுடைய கொலையாளர்கள் அவனை அப்படியே
கட்டித் தூக்கிக்கொண்டுபோய் மாமேருவைப்போல" அண்ட
பரியந்தமுயர்ந்த இரணியனுடைய வாயிலிலிருக்கின்ற கோபுரச்
சிகரத்தின்மேலேற்றி அங்கிருந்து தலைகீழாக உருட்டித் தள்ளி
விட்டார்கள். அந்தச்சமயத்தில் பூமாதேவியானவள் இரணியனு

டைய தம்பியாகிய இரணியாக்கதன் தன்னைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு போனபோது வராகமாயவதரித்துக்கொண்டு தன் ஆபத்தைநீக்கிய பகவானுடைய பத்தன் இவனாகையால் இவனுக்கு வந்த ஆபத்தை நீக்கவேணுமென்றெண்ணிப் பிரகலாதனனிடத்திரக்கத்தையுடையவளாய், அவனுக்கு யாதொரு உபத்திரவமுமில்லாமல் மாந்தளிருக்கொப்பாகிய தன் கைகளினால் அவனை எதிரே ஏந்திக்கொண்டாள். அதை இரணியன் அறிந்து உடல் வெதும்பி, புத்திரவாஞ்சல்யமென்பது கடுகளவுமில்லாமல் "அடா தூதர்களே! அந்தக் கள்ளப்பயலைப்பிடித்து யாவராலும் அசைக்கப்படாத பெரியமலையுடனே நெருக்கிக்கட்டி கரைகாணக்கூடாத சமுத்திரவெள்ளத்திலே விட்டுவிடுங்க" ளென்று ஆக்கியாபித்தான். அவர்கள் அந்தப்படியே பிரகலாதனனை பருவதத்துடனே சேர்த்துக் கட்டிக்கொண்டுபோய், கடலின் நடுவிலேவிட்டார்கள். நடுநிலைமையையுடைய ஏகநாயகன் திருநாமத்தைச் சோரவிடாதவனாகையால், பிரகலாதனனுக்குப் பாதலபரியந்தம் ஆழ்ந்த பெரிய சமுத்திரமானது சிறியமடுவைப்போலிருந்தது. அந்த நெடியமலையும் சுரைக்குடுக்கையைப்போல மிதந்தது. அலைமோதுகின்ற கடலிலே மூழ்காமல் மேலேமிதக்கின்ற பருவதத்துடனே அந்தப் பாலன் இருப்பது எப்படியிருந்ததென்றால், மகா பிரளயத்தின்மத்தியிலே ஆலிலையின்மேல் குழந்தைவடிவுகொண்டு சயனித்திருந்த சகரட்சகனைப்போலேவிளங்கினது. அன்றியும் அவன் தீர்க்க வைராக்கியத்தையுடையவனாய் சகதீசனுடைய சகத்திரநாமங்களையுஞ் சொல்லித் தலையின்மேல் கைகூப்பிக்கொண்டு பிரமத்துடன் கலந்திருந்தான்.

அதை அசுரர்களாலறிந்த மகாபராக்கிரமசாலியாகிய இரணியன் "அவனைக் கொண்டுவந்து என்முன்னே விடுங்க" ளென்றான். அவ்வாறே பருவதத்துடன் சேர்த்துக்கட்டிய கட்டுகளையவிழ்த்துப் பிரகலாதனனை விடுவித்துக்கொண்டு வந்துவிட்டார்கள். அவனைக்கண்ட இரணியனுக்குச் சரீரமெரிந்து புழுங்கி "இவனுக்கு விடங்கலந்த அன்னம், பதார்த்தம், பால், பழம், பஞ்சகச்சாயம் முதலாகிய பட்சணைகளையூட்டி இவனைக் கொல்லுங்க" ளென்றான். அந்தப்படியே அநேகவகைப்பட்ட விடான்னத்தையும் ஊட்டினார்கள். அவையும் அவன் உண்டு பகவத்கடாட்சத்தினாலே சீரணஞ்செய்துகொண்டு சாகாமலிருந்தான். அதுகண்டு இரணியன் "இவனை இருப்புப்பணையின்மேல் வைத்து, கை கால் தலை உடல் முதலானவை சிதைந்து பொடிபொடியாய்ப் போகும்படி, சம்மட்

டிகளைக்கொண்டு அடியுங்க'' ளென்று ஆக்ஞாபித்தான். அவ்வண்ணமே கொலையாளர்கள் பிரகலாதனைக்கட்டி இருப்புப்பனையின்மேல்வைத்து பெரிய இருப்புச் சம்மட்டிகளைக்கொண்டு பலமாக ஓங்கியடித்தார்கள். கணக்கில்லாத அரக்கர்கள்கூடி மூச்சுவிடாது ஓயாமலடிக்கவே 'இனியேது இவன்பிழைக்கிறது? கனவிலுமில்லை' யென்று சகலமானவர்களும் எண்ணும்படியாயிருக்கின்றசமயத்தில், 'அந்தப் பிரகலாதாழ்வான் தனக்குள்ளே அந்தரியாமியா யிருக்கின்ற எம்பெருமானுக்கு கைகளோ அநேகமாயிரம்; திருவடிகளோ அளவிறந்தன; திருக்கண்களோ எண்ணத்தொலையாதன' என்று அவனுடைய அவயவ முதலாகிய ரூபநாம குணங்களை ஒழியாது தியானித்து மனமுருகிக்கொண்டிருந்தானேயல்லாமல், தன்னை அடிக்கிறார்களென்கிற நினைவு சிறிதாவது கொள்ளவில்லை. என்னசெய்தும் பிராணன் நீங்காததுகண்டு இரணியன் இவன் மாயையினால் தன்னுடலுஞ் சிதையாமல், உயிரும்பிரியாமலிருக்கத்தக்க உபாயத்தையுடையவனாகி யிருக்கின்றானாகையால், இனி நானே இவனைக் கொல்லுகிறே' னென்று கோபித்து உலகங்களெல்லாம் நடுங்கும்படிச் சமீபத்தில்வந்தான். அப்படித் தன்னைக் கொல்லவந்த பிதாவைப் பிரகலாதனன் வணங்கி "ஐயா! என்னுயிரை வாங்கும்படி நீர் வருத்தப்படவேண்டாம். இது உம்மாலே சாத்தியமாகத்தக்கதல்ல. சகல புவனங்களையும் உண்டாக்கிய ஸ்ரீமந்நாராயணனே கொல்லும்படி யிருக்கின்ற'' தென்று சொன்னான். அதைக்கேட்டு இரணியேசுரன் "அடா! உலகங்களையுண்டாக்கினவர் யார்? என்பெயரைத் துதிபண்ணிக்கொண்டிருக்கின்ற திரிமூர்த்திகளா, அல்லது முனிவர்களா, மற்ற யாவர்கள்? அதைத் தெரியச்சொல்லடா!'' என்றான். அப்படிப்பட்டவனொருவன் உண்டாயிருந்து அவனைக் காட்டுவானாகில், அவனைக் காணலாமென்று நினைத்து தனக்குங் கோபமூண்டெழுந்தும் இரணியனு பிள்ளையைக் கொல்லவில்லை அப்போது பிரகலாதனன் 'ஐயா! உலகத்தை யுண்டாக்கினவனாரென்று கேட்டீரல்லவோ? முன்கூறியபடியே உலகங்களைப் படைத்தவனும், அவைக்குள் நானுபேதமாகிய உயிர்களைப்படைத்தவனும், அந்த அழியாதஉயிர்கள்தோறும் அந்தரியாமியாயிருந்து அங்கங்கே வாசஞ்செய்கின்றவனும், மலரினிடத்தில் மணமும் எள்ளினிடத்தில் எண்ணெயும்போல அளவில்லாத பல பொருள்களிலும் கலந்திருக்கின்றவனுமாகிய ஸ்ரீமகாவிஷ்ணு என்பவன்தான் அவன்; என் கண்களாலே நோக்கிக் காண்பதற்கு எங்கும் நிறைந்திருக்கின்றானென்று சொல்லவே

இரணியேசுரன் தன்னுடைய தந்தங்கள் பிரகாசிக்கும்படி கலகல வென்று சிரித்து "அடா! உலகத்திலுள்ள பல பொருள்களிலும் அந்த மகாவிஷ்ணுவென்கிற ஒருவன் புகுந்து நிறைந்திருக்கிறு னென்று சொன்னையே! அதை நான்கண்டு, பின்பு அதற்குத்தக்க படி செய்கிறேன் அப்படியே அந்தத் திருடனிருப்பானகில் அவ னுடைய நிலைமை திருட்டாந்தப்படுத்து;பார்ப்போ"மென்று சொ ன்னன், அதற்குப் பிரகலாதனன் "ஐயா! அந்தப் புருடோத்த மன் அணுவிலுமிருக்கின்றான். அந்த அணுவை அநேகங் கூருகச் செப்பப்பட்ட பரமாணுவிலும் இருக்கிறன். மகமேருவிலுமிருக் கின்றான். இவ்விடத்தில் நிற்கின்ற தூணிலுமிருக்கின்றான். நீர்சொ ன்ன சொல்லிலு மிருக்கின்றான். அவனில்லாத பொருளொன்று மில்லை. இந்த அதிசயத்தைப் பார்க்கவேணுமானல், சீக்கிரத்தில் சந்தேகமின்றிச் சோதித்தறிந்துகொள்ளும்" என்றான்.

இவ்விதமாகச்சொல்லவே இரணியன் நல்லதென்று சம்மதித் துப் பின்னுஞ் சொல்லுகின்றான். தேவர்களுக்கும் உனக்கும் ஒத் தவனுகிய இந்த உலகமெங்கும் நிறைந்திருக்கின்ற அந்த மகாவிஷ் ணுவை இங்கே நிற்கின்ற தூணினிடத்திலிருக்கக் காட்டு; காட்டா மற்போவாயானல் மத்தகத்தையுடைய மதயானையைச் சிங்கமா னது அறைந்து கொல்வதுபோல உன்னை நான் கொன்று உன்னு திரத்தைக்குடித்து உடலைபுந் தின்றுவிடுவே"னென்றான்.

அதுகேட்டு அறிவிற்சிறந்தவனுகிய பிரகலாதனன் "கேளு மையா! பிதாவே! என்னைக் கொல்லுகிறேனென்று அடிக்கடிச் சொல்லுகின்றீர்; என்னுயிரை உம்மாலே கொல்லப்படுகிறதற்கு அத்தனை எளிதாகியதல்லவே! நான் உமக்கு முன்னமே சொன்ன சருவேசுரன் நீர் குறித்த இடங்களிலெல்லாம் அவசியம் காணப் படுகிறன். காணுமற்போவானேயாகில், என்னுயிரை நானேமாய் த்துக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்யாமல், பின்னும் பிராண னுடனிருப்பேனனல், அவனுக்கு நான் அடிமையல்ல. எனக்கவ னுண்டவனுமல்ல'வென்றுபிரதிக்கினைபண்ணினன். இரணியேசுரன் தன்னுடைய வச்சிரதந்தங்கள் பிரகாசிக்கும்படி சிரித்து, காலாக் கினிபோல மனங்கொதித்து, 'நல்லதுநல்ல' தென்றுசொல்லி, இடி விழுந்ததுபோல அதிக ஆரவாரத்துடன் எதிரேயிருந்த சொன்ன மாயெ நெடியதூணை உருமிப்பார்த்து வீரகண்டாமணியணிந்த "தன்னுடையவல்துகாலைத் தூக்கி உக்கிரத்துடனேஒங்கியுதைத்து, இதிலே எவனிருக்கின்றான்; காட்டடா" வென்றான்.



## நரசிங்காவதாரம்.

### துதி.

அரக்கரணிக் குலமாயைச் செயலனைத்து
மாவிகொடு வானவர்பால் மருவிற் றென்ன
மறக்கொடிய விரணியனை மார்பு கீண்டு
வழுதியா மழிபுரக்குந் திருமார் பானை
வரக்குரிசிற் பிரகலா தனனைக் காத்த
மாதவனை நரசிங்க வடிவு கொண்ட
அறக்கருணைத் திருமாலை யமர ரேற்றை
யனவரத மூர்த்தியாத் துதித்து மன்றே.

இரணியன் அப்படி உதைத்த மாத்திரத்தில் அந்தத்தூணிலிருந்து ஒரு பேரோசையானது எழுந்துதிசைகளைக்கிழித்து அண்டமுகட்டையும் பீறிக்கொண்டு ஊடுருவும்படிச் சிவந்தகண்களையுடைய சிங்கமானது லோகாலோகங்களெல்லாம் கிடுகிடாயமானமாக மிகவும் உக்கிரமாய்ச் சிரித்தது. சருவஞ்ஞனும் சருவபரிபூரணனுமாகிய எம்பெருமான் அந்தத்தூணில் குறித்தஉடனே பிரகலாதாழ்வான் எழுந்து தன்னைமறந்துக் கூத்தாடினான், ஆனந்தக்கண்ணீர்விட்டழுதான்; அவர்விடயமாயிருக்கின்ற திவ்வியசுருதிகளைப் பாடினான்; சிரசின்மேற் கைகளை அஞ்சலிபண்ணிக்கொண்டு சாட்டாங்கமாக விழுந்து சேவித்தான். அந்தச் சமயத்தில் சாட்சாத் திருமார்பன் நரசிங்க வடிவுகொண்டு அத்தூணினின்று பலருமறியும்படியாய் நகைத்தனன். அதைக் கேட்ட இரணியாசுரன் கொக்கரித்து அடடா! தூணிலிருந்து நகைத்தாயோ! நீயாரடா! இந்தப் பையன் சொன்ன விஷ்ணுதானோ? எனக்குப்பயந்து ஓடிப்போய் இதுவரையிலும் நீயொளித்துக்கொண்டிருந்த சமுத்திரத்தில் இடம்போதாதென்றோ இப்பொழுது இந்தத்தூணைத்தேடி இதிலே வந்து ஒளித்துக்கொண்டாய்? ஆகட்டும் என்னுடனே யுத்தம்பண்ணத்தக்க வல்லமையை உடையவனானால், தூணைவிட்டுசீக்கிரமாகப்புறப்படு ஏன்காலதாமசஞ் செய்கிறாயென்று சொல்லிப்பின்னும் அதட்டி ஆர்பரித்தான். அப்பொழுது, அண்டம் வெடித்ததுபோலப் படீரென்று அந்தத்தூணும் பிளந்து உக்கிர நரசிங்கமானதுபிறந்தது. பிறந்த உடனே அதுவளர்ந்தது. அப்படி வளர்ந்தது அட்டதிக்குகளையும் பகிரண்டமுதலானவைகளையும் அளந்துக்கொண்டேபோய் நிறைந்தது. ஆயினும் பகிரண்டத்திற்கு அப்பால் நடந்தசெய்தி என்னவோ அதையாரறிந்துச் சொல்லுகின்ற

வர்கள். ஆகாசம் ஏழுமேலும் கிழிந்தது. பரிமளம்பொருந்திய துளபமாலையைபணிந்த நரசிங்கமூர்த்தியின் திருவுருவானத்தை பூரெரிப் போனதை நாமறியமாட்டோம் திருவடித் தாமரைகள் பூமியிலே தோயும்படி நின்றபொழுது நெடிதாகிய அண்டமுகட்டில் சத்திய லோகத்திலிருந்த பிரமதேவன் அன்றுதான் அந்த நரசிங்க மூர்த்தியினுடைய திருவுந்திக் கமலத்தில் உற்பத்தியானவன்போல விளங்கியிருந்தான். அப்பொழுது நரசிங்கமூர்த்தியானவர் சேனைகளையெல்லாம் அதாகதம் நாசஞ்செய்து இரணியனைப் பிடித்து அந்திநேரத்தில் அவனுடைய கோபுரவாயிற்படியில் தமது திருத்தொடைகளின்பேரில் இரணியாசுரனை வைத்து வச்சிராயுதம்போன்ற தமது நகங்களினால் அவன்மணிமார்பை இரண்டாகப்பிளந்து அவனுடைய உதிரங்களையெல்லாம் கொப்புளித்துக்கொண்டு, அவனைச்சம்மாரஞ்செய்து அவனால் தேவர்களுக்குண்டாயிருந்த துன்பங்களைப் போக்கினார். சகலநற்குணங்களைப் பொருந்திய பரமபாகவதசிகாமணியாகிய பிரகலாதனைச்செய்த தண்டனைகளைச்சகிக்காமல் காப்பாற்றும் பொருட்டும் சகலசராசரங்களிலும் வியாபித்துக்கொண்டிருப்பானென்று யாவருக்கும் நன்றாய்ப் புலப்படும்படிக் காட்டும் பொருட்டும் விஷ்ணுவானவர் நரசிங்காவதாரஞ்செய்து தேவர்களுக்கும் மற்றியாவர்களுக்கும் உண்டாகிய கட்டங்களைப் போக்கிக் காத்துப் பழையபடி திருப்பாற்கடலில் ஆதிசேடன்மேல் சயனித்து யோகநித்திரை செய்திருந்தார்.

---

## வாமனாவதாரம்.

### துதி.

வானவரை வருத்தவுணற் கறுத்தெந் நாளும்
  வதைந்தகல மாயைபருந் தொழில்க ளோட
ஞானநெறி சிறக்கமறை யோங்கக் கூறும்
  நானிலமு மோனியரு மகிழ வஞ்சத்
தானவர்பால் மூவடியேற் றகில வண்டந்
  தனையளந்தோ ரடிபான்மா வலிச்சீர் சென்னி
மேனிறுத்திச் சிரளித்த வாமனேசன்
  வித்தகத்தாண் மலர்முடித்து மகிழு வாமால்



பின்பொரு காலம் மகாவிஷ்ணுவானவர் மோகினி வேடம்புனைந்து அமுர்தத்தை அசுரர்களுக்குக் கொடாமல் அமரர்களுக்குப் பகுந்துகொடுக்க, அப்போது அசுரர்களுக்கும், அமரர்களுக்கும் அமோகமான யுத்தம் நடந்தது அக்காலத்தில் பிரகலாதனன் பேரனாகிய மாவலியானவன் வெகுண்டு தேவர்களை அநாகதம் செய்ய மகாவிஷ்ணு மிகுந்த கோபங்கொண்டு வச்சிராயுதத்தைப் பிரயோகித்து மாவலியைத் தரையில்வீழ்த்திவிட அதையறிந்து அசுரகுருவாகிய சுக்கிராசாரியன் ஓடிவந்து அவனுக்குச் சஞ்சீவி மந்திரத்தை யோதினன் அம்மந்திரபலத்தினுல் மாவலியுயிர் பெற்றெழுந்து எவ்விதத்திலாகிலும் தேவர்களைச் சயித்து இந்திரன் வாழ்வைத் தான் பெறவேண்டுமென்ற எண்ணங் கொண்டவனாகி சுக்கிராசாரி முதலானோரைவணங்கிப் பூசித்து உன்னத ஆசனத்தி லிருக்கச்செய்து கோதானமுதல் சோடசதானங்களையும் அவாரியாகக்கொடுக்க அவைகளையெல்லாம் பெற்றுக்கொண்டு சுக்கிராச்சாரி முதலானோரும் பெருமகிழ்ச்சியடைந்து மாவலியைக்கொண்டு விச்சுவசித்தெனும் வேள்வியைப் பிரமன் முதலான தேவர்களும் நடுங்கும்படி முடிக்க அவ்வேள்விக் குண்டத்திலிருந்து சொன்னமயமாகிய குடை கொடிமுதலாகியதோடு நான்குஅசுவங்களுடன் அழியாத இரதம் ஒன்றும் பினாகத்திற்குச் சமமாகிய ஒருவில்லும் அம்புறாத்தூணியுடன் தோன்ற அவற்றைக்கண்ட மாவலி இனி தேவர்களைவென்று ஜெயம்பெறுவேனென்று சந்தோடமடைய அப்போது பிரகலாதனன் தன்பேரனுக்குண்டாகிய சந்தோடத்தையுணர்ந்து அழியாதகவசமும் நவமணிமாலையுங் கொடுத்தான் அதையணிந்துக்கொண்டு இரதரோகணஞ் செய்து மேல்நாட்டையடைந்து வில்லைவளைத்து நாணேற்றிட்டு லோகாலோகங்களும் அட்டதிக்குப் பாலகர்களும் திக்குயானைகளும் ஆதிசேடனும் குலகிரிகளும் நடுங்கும்படி தனுசினது டங்கார ஓசையைக்காட்டினன். அவ்வொலியைக்கேட்ட தேவர்கள் முனிவர்கள் யாவரும் தேவகுருவாகிய பிரகஸ்பதியினிடம்சென்று வணங்கி மாவலியினுல் செய்யப்பட்ட தனுவோசையினுல் தங்களுக்குநேரிட்ட பயத்தைத் தெரிவிக்கக்கேட்டு பிரகற்பதியானவன் அனைவோரையும் நோக்கிச்சொல்லலுற்றான்,—

கேளுங்கள் தேவர்கள் முனிவர்களே! சுக்கிராச்சாரி அந்தனர் சமுகத்துடன் வேதவிதிப்படி விச்சுவசித்தென்னும் வேள்வியை

முடித்து அந்த ஓமகுண்டத்திலிருந்து வந்த அழியாஇரதமும், அழியாதவில்லும் கவசமும் முதலானவைகளையும் மாவலிக்குக் கொடுக்க அவன் அதையணிந்து இரதத்திலேறித்தேவர்களையும்மற்றியாவர்களையும் வென்று செயம்பெறவெண்ணி யிங்குவந்திருப்பதால் இப்போதவனை வெல்ல உங்களால் ஆகாது. பிரமன், விஷ்ணு, சிவன், மூவரும் ஒன்று கூடிவந்து மாவலியையெதிர்த்துச் சண்டைசெய்ய முயன்றபோதிலும் அந்தமாவலியை வெல்லுவதற்குத் தக்கயுக்தியை யானென்னசொல்லப்போகிறேன். ஆகிலும்யுத்தஞ் செய்வதைவிட்டு மாவலியைச் சிநேகித்து கொண்டு வாழக்கடவீரெனக்கேட்டு தேவேந்திரன்முதல் தேவர்கள் யாவரும் மனக்கலக்கங் கொண்டு தேவலோகத்தைவிட்டு ஓடி ஒளித்திருந்தார்கள்.

இதைக்கண்ட மாவலி மகிழ்ந்து அப்பொன்னகரத்தில் அசுரர்கள் களிக்க நிருதர்கள்வியக்கத் தேவேந்திரன் ஏறும் சிங்காசனத்தின்மீதேறி அரம்பை, ஊர்வசி, திலோர்த்தமை, மேனகை இவர்கள் ஆடவும்பாடவும் வெண்சாமரம்போடவும் மற்றுமுள்ளவர்கள் தன்னைச்சூழ்ந்து நாடவும் தேன்பொருந்திய பாரிஜாதமாலையையணிந்து சகலருங்கொண்டாட தேவசிங்காதனத்தின் மீது பொருந்தி திசைகளையெல்லாம் தன் கைவசப்படுத்திக்கொண்டு அரசாண்டிருந்தான். அநேக யாகங்களைச்செய்தும் அளவிறந்த தானங்களையளித்தும் யாசகர் முதலாகிய ஏழைகளெங்கு மில்லாதபடிக்குத்தானஞ்செய்து செயசாலியாகிச் சிறந்து உலகத்தை யாளுவதைக்கண்ட அதிதியானவள் சோர்ந்து கண்களில் நீர் பெருகவிட்டுக் கொண்டுதன்கொழுனனாகிய காசிபனைக்கிட்டி "என் பிராணநாதரே! தேவேந்திராதி தேவர்கள் இடரைப்போக்கவும் அசுரர்குலத்தை நாசமாக்கவும் தக்க ஒரு புதல்வனை பாலிக்கவேணு"மென்று விநயத்துடன் வேண்டிக்கொள்ளக் காசிபர் சொல்லுகின்றார்.

கேளாய்பெண்ணே! அசுரர் மிகுந்த சங்கடத்தை யடையவும் தேவேந்திரன் முதலான தேவர்களும் முனிவர்களும் மகிழ்ச்சியடைந்து சுகத்தைப் பொருந்தவும் உனக்கொரு சுதன் சூரியனைப் போல பிரகாசத்தைப்பெற்று உதிக்கக்கடவன். அதற்கு ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருமந்திரத்தைத் தியானித்து விரதமிருப்பாயாகில் உன்மனதுக்கினிய பாலன் உதிப்பானென்று சொல்லக்கேட்டு அதிதியும் சந்தோடமடைந்து பங்குனிமாசத்தில் சூரியனிருக்கும் திதிமுதலாக துவாதசிவரையில் விரதத்தை அனுட்டித்துப் பன்னிரண்டு அக்கரத்தோடு மணம் பொருந்தியமலர்களால் மாதவனை

யருச்சித்து விரதத்தை முடிக்கப் பகவான் கருடன்மீதூர்ந்துவந்து அதிதிக்குச் சேவைதந்து நிற்க அதிதிபலவாறுகப் புருடோத்தமனைக்கொண்டாடித் தன்னைமறந்து ஆனந்தக்கண்ணீருதிர்த்து உருகிவாடிக் கதறுவதைக்கண்டு பகவான் அவள் பக்திக்கிரங்கி, "உத்தமகுணத்திற்சிறந்த பெண்மணியே! உனக்கென்னவரம்வேணும்? கேள்" என அதற்கு அதிதி "ஓசுவாமி! தேவர்களுக்குண்டாகிய சிரமத்தைப் போக்கும்படியான தீரமுடைய ஒரு புத்திரனையளிக்கவேணு"மென்று வினவியபோது முராரி "ஓ அம்மணீ யானுனக்குத்தனயனாய்ப் பிறக்கிறே"னென்று சொல்லி மறைந்தருளினார். பகவான்தோன்றி வரமளித்த விவரத்தைத் தன்னாயகனுக்கு அறிவிக்கக்கேட்டுக் காசிபர் ஆனந்தமடைந்து பரிவோடு தன்மனைவியைக் கூடினமாத்திரத்தில் கருப்பம் உண்டாகி, கன்னியாமாதம், சுக்கிலபட்சம், துவாதசி திதி, திருவோணநட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் மகாவிஷ்ணுவானவர் வாமனமாகப்பிறந்தார். வாமனமென்றால் குள்ளம் என்று பொருள். இவ்வுருவத்துடன் பிறந்தபிள்ளையைமிகுந்த ஆதரவுடன் எடுத்தணைத்துப் பிரியமாக வளர்த்துச்சாதகம், சவுளம், உபநயனம் செய்வித்து வித்தை கற்பித்து வேதசாத்திரத்தில் தேர்ச்சி பெறச்செய்து பிரகற்பதிபகவான் முப்புரிநூலளிக்கக், காசிபர்தண்டையளிக்க, அதிதி கௌபீனங்கொடுக்க, வியாசர் கமண்டலந்தர, குடையும் மரவடியும் சத்தரிஷிகளீய, மான்றோலை அவனிப் பாவையளிக்க, சூரிய சந்திரர்கள் குண்டலங்கொடுக்க, சரசுவதிசெபவடம் அளிக்க, பிரம்தேவன் காயத்திரி மந்திரத்தை யோத இத்தியாதி பிரயோசனங்களைப்பெற்று பிரமசாரிவைதிகத்தை யடைந்து வாமனமூர்த்தியானவர், அவ்விடத்தைவிட்டு நடந்து நருமதைநதிக்கு வடதிக்கில் பிருகுமகாமுனிவர் ஆசிரமத்தில் யாகஞ்செய்துகொண்டிருக்கும் மாவலியின்பாற் செல்ல பிரமசாரியைக்கண்டு மாவலியெதிர்கொண்டுவந்து அழைத்துப்போய் தருப்பாசனந்தந்து பலவிதமாய்ப் பூசித்து அவர் திருவடித் தீர்த்தத்தைச் சிரசின்மேற்கொண்டு பணிந்து, "ஓ சுவாமி! தங்கள் தரிசனத்தினால் பாவனமாய்விட்டேன் இந்தயாகமும் பவித்திரமடைந்தது இனித் தங்களுக்குவேண்டிய வத்துவெதுவோ அதை யறிவித்தால் தடையின்றி அவசியந்தருகிறேன், என்றமொழியைக்கேட்டு வாமனமூர்த்தி களிப்படைந்து, அவிகொடுப்பதில் உனக்குச்சமானமாகிய புருடர்களும் உலகத்தில்உண்டோ மெத்த புண்ணியவான் நீயென்றுகேள்விப்பட்டல்லோ உன்னிடத்திற்குள் வந்தேன் ஆகிலும்யான் பொருந்தியிருந்து பகவானை யிடைவிடாமல் தியானிக்கவும்யாகம் செய்யவும் உன்னு

டையபூமியில் என்னுடைய அடிகளால் மூன்றடிநிலம் மனப்பூர்த்தியாய்த் தானஞ்செய்வையாகில் எனக்குமெத்த புண்ணிய முண்டாமென்று சொல்லியபிரமசாரியின் மொழியைக்கேட்டமாவலி சந்தோஷமடைந்து 'அப்படியே தருகிறே'னென்று தன்மனைவியின் கைகளால் எள்ளுடன் சலங்கொட்டி மூன்றடி தத்தஞ்செய்யப்போகிற சமயத்தில், சுக்கிராசாரி அவ்விடந்திற்குவந்து மாவலியைக்கண்டு சொல்லுகிறார்.

கேளாய்,சக்கிரவர்த்தியாகிய அரசனே! மூன்றடிநிலம்யாசிப்பவன் சாமானியனென்று நினைத்து அலட்சயமாக இதென்ன அற்பம் மூன்றடி நிலந்தானேயென்று எள்ளுந்தண்ணீரும் விட்டு தானங்கொடாதே! இவன் சாட்சாத்து ஸ்ரீமகாவிஷ்ணுவென்று நின்மனதில் கெட்டியாகநம்பு. இவன் ஏதோ கபடஞ்செய்ய உத்தேசித்துஇத்தன்மையாகிய வடிவங்கொண்டு வந்திருக்கிறான் ஆதலால், மூன்றடிநிலம் இவனுக்குத் தானம் கொடுப்பாயேயாகில், குடிமுழுகிப்போம் சாக்கிரதையயிரு என்றுதடுக்க மாவலிசொல்லுகிறான் குருநாதரே சகல அண்டபிண்ட சராசரங்களையும் தன்வயிற்றில் வைத்துக் காப்பாற்றும் ஆதிமத்தியாந்த ரகிதனே இருகரங்களையும் ஏந்தியாசகஞ் செய்கிறபோது நானெப்படியில்லையென்று சொல்லுவேன். மேலும் சருவநியந்தாவாகிய பகவான் கைகள் கீழும் என்கைமேலுமாக நான் அவருக்கு தானங்கொடுக்கவும் அவர் பெற்றுக்கொள்ளவும் நானென்னபாக்கியம் பண்ணேனோ? அதன் பலன் வாய்க்கவும் அதனை வேண்டாமென்று யானெப்படி தடுத்துச்சொல்லுவேன். அன்றியும் பரமபதமும் கைலாசமும் ஆகிய இவ்விரண்டு பதவிகள் தவிர மற்றெதவாகிலும் வேண்டுமென்றுயாசிப்பவர்களுக்குத் தடையின்றிக்கொடுக்கிறேனென்று யான் சங்கற்பம்செய்துக்கொண்டிருப்பதால், அற்பமாகியமூன்றடி நிலத்தைக்கொடுக்கமாட்டேனென்று கூற என்மனஞ் சம்மதிக்கவில்லை ஆகையால், எனக்கு எவ்விதகட்டம் வந்து சம்பவித்தபோதிலும் அனுபவித்துத் தீர்ப்பேனே யல்லாமல் தியாகியென்று வருமவருக்கு நாத்தியென்று கனவிலுஞ் சொல்லமாட்டேனென்றுசொல்லித் திடசித்தமுடையவனாகித் தான் எள்ளை பகவான் கையில் போட்டுத் தன் பத்தினியைத் தண்ணீர்விடும்படி சொல்லியபோது, அவ்வுத்தமி செம்பிலிருக்கும் சலத்தை விடும்பொருட்டுச் சாய்த்தாள் அச்செம்பின் மூக்குத்துவாரத்தில் சுக்கிராசாரி வந்து புகுந்து ஒருதுளி சலம்கூட விழவொட்டாமல் அடைத்துக்கொள்ள அதை யுணர்ந்து வாமனமூர்த்தியானவர் தன்கையிலிருந்ததருப்பப்புல்லினால் அச்செம்பின் மூக்கில் குத்தினார் உடனே

தண்ணீர்வெளிப்பட்டுத் தன்கைமேல்விழ மாவலிச்சக்கிரவர்த்தி மூன்றடிநிலம் மனப்பூர்வமாய்த் தத்தம் பண்ணினன். இக்காரணத்தினால் சுக்கிராசாரியருக்கு ஒருகண் பொட்டையாகியதின் புவாமனமூர்த்தியானவர் திரிவிக்கிரமனாகி பூமியையெல்லாம் ஓரடியாக அளந்து மற்றோரடியால் ஆகாயத்தை அளந்து மூன்றாவது அடிக்குநிலம் எங்கே? இதற்கு வழியென்ன? சொல்வாய் என்று திரிவிக்கிரம மூர்த்தி மாவலியைக்கேட்க, அதற்கு மாவலி யோசித்துப்பலவிதமாய் பகவானைக்கொண்டாடி அண்டத்துக்கும் பிண்டத்துக்கும் ஏக ரூபமாக நின்றதை மாபலியுணர்ந்து என்னையனே அடியேன் சிரசு அன்றி வேறுநிலம் ஊசி நாட்டுவதற்குக்கூடக் கிடையாதே அசத்தியனாய்விட்டேன். இதற்கு யானென்ன செய்வேன்?' என்று கலங்கிவாடும் மாவலியைக் கிருபைக்கண்ணால் பார்த்து மூன்றாவதடியை அவன் சிரசின்மேல் வைத்து அழுத்திப், பாதல உலகத்திற்சேர்த்து தேவேந்திரனுக்குத் தேவலோகத்தைத் தந்ததுபோல மாவலிக்குப் பாதல உலகத்தைத் தந்துஅவனுக்குத்தானும் குபேந்திரனாக இருந்து கடாட்சம்செய்தார். வாமனாவதாரஞ் செய்ததற்கு மாவலிகாரணமாகும்.

## பரசுராமாவதாரம்.

### துதி.

பாராச ருயிர்குடித் தமர ரங்காள்
  படுவரக்க ரோடமர் செய்தாற்றா நிற்ப
நீரணிசெஞ் சடைக்கடவு ளருளால் வான
  நிலந்திருத் திரிசிகா வென்பவர்க்கு மூன்று
யேரியிரத் தந்தந்த பெரியா னன்று
  ஈன்றாளை மாய்த்துசம தக்கினித்தன்
சீரணிந்த பரசுரா மப்பே ரண்ணற்
  திருவடியைக் குருவடிவா யிறைஞ்சு வாமால்.

சந்திரகுலத் தோன்றலாகிய காதிமகாராசன், தன் புதல்வியாகிய சத்தியவதியென்னுங் கன்னிகையை, வேதசாத்திர புராணேதிகாசங்களிற் றேர்ந்த இருசிகமாமுனிவருக்குக் கொடுத்து மணம்புரிவித்து மகிழ்ச்சியடைந்தான். அதுகாலையில் காதிமனைவியும் தன் புதல்வியாகிய சத்தியவதியும் தவசிரேட்டராகிய இருசிகமாமுனிவரை நோக்கி "எங்களிருவருக்கும் மகப்பேறளிக்கவேண்டு" மென, வேண்டிக்கொண்டு இறைஞ்சிநிற்க முனிவர் இரண்டு மந்திரத்தினால் உபயருக்கும் புத்திரப்பேறுண்டாகும்படி அருளி



அதில் சாந்த குணத்தினையுடைய ஒருபிள்ளையும் இராசசகுணமுடைய ஒருபிள்ளையும்உதிக்குமென்று சொல்லி, தீர்த்தயாத்திரை செய்யச்சென்றார், அந்தப்படியே காதியின் மனைவியும் அவள் புதல்வியும் மந்திர விதியின்படி அநுட்டித்துவர, அப்போது காதியின் மனையாள் சாத்துவிககுணத்தினைப் பொருந்தியகருவையடைந்தாள் இருசிகமாமுனியின் மனைவி சத்தியவதி இராசச குணத்தினையுடைய கருவைத்தரித்தாள் இப்படிக்கிருக்க, தீர்த்தயாத்திரைச் செய்து அம்முனிவர்வந்து இதனையறிந்துமனைவியை நோக்கி "அடிபெண்ணே நினது அன்னை வேதத்திற்சொல்லிய நெறியை யடையும்படியான புதல்வனைப் பெறுவாள் நீயோ கொரேரமாகிய குணத்தினையுடையபிள்ளையைப்பெறுவாயெனச் சொல்லக்கேட்டு சத்தியவதி மனோவியாகூலமடைந்து "தவத்திற்சிறந்த முனிவரா கியஉமக்கு பிறக்கும் புதல்வன் சாந்தகுணத்தைப் பெறுமல் கொரேரமாகிய கெட்டகுணத்தை அடைவது நீதியோ" வென்று வாட்டமடைந்திருக்கும் மங்கையைநோக்கி, அம்முனிவர் சொல்லுகிறார்.

கேளாய்பெண்ணே! உனக்கேன்மனோவியாகூலமும் முகவாட்டமும் நேரிட்டது? இதற்குகாரணம் கொரேரகுணமுடைய பிள்ளை புதிப்பானென்று யான்சொல்லியபடியினுலல்லவோ உனக்குஇக்கவலையுண்டாகியது? இந்த சிந்தனையை விட்டுவிடு உனக்கு சாந்தம் தயைமுதலாகிய நற்குணங்கள் வாய்ந்த சற்புத்திரனுதிக்கக்கடவன் அன்றியும் அவனுக்குப் பிறக்கும்புதல்வன் உலகம் யாவும் நடுங்க க்ஷத்திரதேகத்தைப் பொருந்திக் கீர்த்தியை யடைவா"னென்று இருசிகமாமுனிவன் இயம்பக்கேட்டு, சத்தியவதி மிகவும் சந்தோட மடைந்திருந்தாள் அக்காலத்தில் காதியின்மனைவி அழகிற்சிறந்தபுதல்வனைப்பெற்றாள் அச்சிறுவனுக்குச் கௌசிகனெனும்பெயரிட்டு வளர்த்து சகலகலைகளையும் ஓதுவிக்க அதனால் தெளிவடைந்து தவஞ்செய்யமுன்று, தனக்குநிகர் ஒருவருமில்லையென்றுசொல்லும்படி, பஞ்சாக்கினி நடுவிலிருந்து தவமியற்றி மகாமகிமைபொருந்திய விசுவாமித்திரரென்று இரண்டாவதுபெயர் வகித்து நற்கீர்த்தி யடைந்திருந்தார்.

அதன்பின்பு இருசிக மாமுனிவர் மனையாளாகிய சத்தியவதி ஒருமகனைப்பெற்றாள். அச்சிறுவனுக்குச் சமதக்கினியெனப்பெயரிட்டுத் தகுந்தகாலத்தில் சௌளம் உபநயன முதலாகிய நற்கருமங்கள்யாவும் முடித்துக் கல்வியிற் பயிற்சியடையச்செய்து இரே

ணுகையென்னும் கன்னிகையை மனம்புரிவித்தார்கள். சமதக்கினி யும் இரேணுகையைக்கூடி, தருமமார்பனென்றும் சுமதனென்றும் இரண்டு பிள்ளைகளைப்பெற்று, தவசீலர்கள் யாவரும் சந்தோஷிக்க வேதவிதிப்படி அச்சிறுவர்களுக்கு நல்லநாள் பார்த்து சாதகம், சௌளம், உபநயனம் முதலானநற்கருமங்களை நடத்தி கல்வியிற் றேர்ச்சியடையச் செய்து சமதக்கினி முனிவர் சந்தோஷத்துட னிருக்கிறநாளில், பூவுலகத்தினில் அரசருங் கொடியவசுரரும் அத ருமமார்க்கங்களை நடத்திவருவதால் புண்ணியங்குறைந்து பாவ மேலிட்டபடியால் பூமாது பரதவித்துப் பூமிபாரஞ்சுமக்கமாட் டாது பகவானைக்குறித்து முறையிட்டுக் கதறியழுது புலம்புகிற தைக்கேட்டு, சாட்சாத்து பகவான் இரேணுகைவயிற்றி லுதித்தும் பரசுராமரெனப் பேர்வகித்தும் சாதகஞ், சௌளம் உபநயன முத லானவை சமதக்கினி முனிவர் நடாத்தி, கல்வியிற்றேர்ச்சியடை யச்செய்து வருகிறகாலத்தில், பதிவிரதையாகிய இரேணுகைவழக் கப்படி ஒருநாள். நதிக்குச்சென்று ஸ்நானஞ்செய்துகொண்டிருக் கிறபோது, ஆகாயமார்க்கமாய் கந்தருவனொருவன் தன்பத்தினி யோடுசெல்ல அவனிழலானது சலத்திற்றோன்ற, அதைக்கண்டு இரேணுகாதேவி பிரமித்து 'இப்படிப்பட்ட புருடன்கூட உலகத்தி லிருக்கிறானா' வென்று தனக்குத்தானே ஆச்சரியமடைந்துக் கரையேறிமணலைச்சேர்த்து பாண்டமாகாததால் மனக்கவலையடை ந்து இதற்குநானென்னசெய்வேன்? இதுவென்னமாயமோதெரிய வில்லையே முனிவர் பூசைவேளையுந் தப்பிப்போகிறதே நாயகன் என்ன கோபிப்பாரோவென்று பலவாறுசிந்தித்துக்கொண்டேவ ந்து சமதக்கினிமாமுனிவர் திருவடியில்விழுந்து, சரணாகதி யடைந்து, நடந்த உண்மையைச் சொன்னாள். இதைக்கேட்ட சம தக்கினிமாமுனிவரும் தன்னுடைய யோகதிருட்டியினால் நடந்த விதங்களையறிந்து "அடிபெண்ணே! கற்புடைய மாதரசிபோல அபிநயித்து இங்கு வந்துசேர்ந்தாய். என்னுடைய பூசையைக்கெ டுத்ததுமன்றி நீயும் ஆகாயமார்க்கமாய்சென்ற கந்திருவனைச்சலத் தில் பிரதிபிம்பத்திற்கண்டு ஆசைப்பட்டு, பதிவிரதாதருமங்கெட் டு, விபசாரியானாயென்று விடங்கக்கிய சருப்பத்தைப்போலச் சீறி வெகுண்டு கோபங்கொண்டு, மூத்தகுமாரர்கள் இருவரையும் நோ க்கி நீங்கள் இவளைக்கொண்டுபோய் இரண்டுதுண்டாய் வெட்டி யெறியுங்களென்று" கட்டளையிட்டார். அவர்கள் தந்தையின் சொல்லைக்கேளாமல் மறுத்தார்கள். உடனே சமதக்கினி முனிவர் பரசுராமரை நோக்கி இம்மூவர்களையும் வெட்டியெறிந்து வரக்கட

வர்பென்று ஆக்கியாபிக்க பரசுராமர் தந்தையின் சொற்படி தமையன்மாரிருவர்களையுந் தாயையும்வெட்டி யெறிந்து தந்தையினிடம் வந்துசேர்ந்தார். அப்போது சமதக்கினி மாமுனிவர் பரசுராமர் விஷயத்தில் மெத்தசந்தோடமடைந்து அடாபுத்திரசிகாமணியே! உனக்கென்ன வரம்வேண்டும், கேள் தருகிறே' னெனப் பரசுராமர் தந்தையைநோக்கி "ஐயா யான் வெட்டியெறிந்த தமையன்மார் இருவரும் என் அன்னையும் உயிர்பெற்று வரும்படியான வரந்தரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, "அப்படியே யாகுக" வென்று சமதக்கினிசொல்லிய மாத்திரத்தில், சிரங்கள் பொருந்தி மெய்துலங்க நித்திரையினின்றும் விழித்தவர்போல மூவருமெழுந்து வந்து சமதக்கினி மாமுனிவரைப் பணிந்து அவரனுமதியின்படி நடந்து வந்தார்கள்.

அக்காலத்தில் அரசர்களில் மேன்மைப்பட்டவனுகியும் தருமங்குன்றுமல் மநுநீதிப்படி அரசாண்டு வருபவனுகியும் அரிய தவத்தினுல் மிகுந்த வரங்களைப்பெற்றவனுகியும் ஆயிரங்கரங்களைப் பெற்றவனுகியும் விளங்கும் கார்த்த வீரியார்ச்சுனனென்னும் வேந்தன் மிருகவேட்டையாடும்பொருட்டு இரதகசதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகள் புடைசூழ நாட்டைவிட்டுப் புறப்பட்டுக் காட்டையடைந்து முனிவரைக்கண்டு வணங்கி வினயமாகத்துதிசெய்ய சமதக்கினிமுனிவர் கார்த்தவீரியார்சுனனை ஆதரித்து ஆசிகள் கூறி இருக்கச்செய்து பலவேதமொழிகளைக் கூறி உண்ணும்வேளையாயிற்றென்று கருதிகாமதேனுவையழைத்து வேந்தன்முதல் அனைவரும் அருந்தும்படி அன்னம்பரிமாறக் கட்டளையிட அந்தப்படியே காமதேனுவானது கார்த்த வீரியனுக்கும் அவனுடைய சேனைஅனைத்தினுக்கும் பொற்கலங்களில், அருசுவையன்னமுடன் பலகாரவகைகளையும் அளித்துப் புசிக்கச்செய்து சந்தன புட்ப தாம்பூலாதிகளை உதவக்கண்டகார்த்த வீரியார்ச்சுனன் சமதக்கினிமாமுனிவரை நோக்கிச் சொல்லலுற்றான்.

மும்மலங்கள் அகற்றி ஐம்பொறிஅடக்கி முதல்வனைத்துதிக்கும் தவசிரேட்டரே! எங்களனைவருக்கும் அமுதுபடைத்த காமதேனுவையெனக்களித்தால், மெத்தநன்மையாக இருக்குமென்று சொல்ல, சமதக்கினிமுனிவர் கொடேனென்று மறுக்கக்கார்த்த வீரியார்ச்சுனன் அக்காமதேனுவைப் பிடித்துக்கொண்டு நால்வகைச்சேனைகளுடன் நாட்டுக்குப்போவதைப் பரசுராமர்கண்டு, கோபங்கொண்டு, பரசுஎன்னும் ஆயுதத்தினுல் அவன்சேனைகளையெல்லாம் வெட்டியபோது அதிலிருந்துபெருகிய இரத்தமானது

கடலைப்போலபரவ, நிமைப்பொழுதில் பதினேழக்குரோணி சே னைகளும்மடிந்து குறைத்தலையெழுந்து கூத்தாடவதையுங்கண்டு கார்த்தவீரியன் கண்களிரண்டிலும் நெருப்புப்பொரிகள் பறந்து கனன்றெழுந்தபோது ஏழுகடல்களுங்கலங்க மேருகிரிபோற் வளர்ந்து பரசுராமரைஎதிர்த்து பிரமாஸ்திரம், பாசுபதாஸ்திரம், நாரா யணாஸ்திரம், முதலாகிய அதிகதீட்சண்ணியமான அநேக பாணங் களைப் பிரயோகஞ்செய்தான். அவற்றையெல்லாம் பரசுராமர் தமது மழுவாயுதத்தினாற்றுணித்து வாழைவனத்தைக் கழிப்பது போல அவன்கரங்கள் ஆயிரத்தையுங்களைந்து, சிரத்தையும்வெட்டி யெறிந்தார் அப்போது கார்த்தவீரியன் சுதர்கள் பயந்துபரசுரா மரை வணங்கிசொல்லுதற்கரிய காமதேனுவைக் கொடுக்கஅதைப் பெற்றுக்கொண்ட பரசுராமர் தனக்குண்டாகிய கோபந்தணிந்து தந்தையின் ஆசிரமஞ்சேர்ந்தார் பின்பு கார்த்த வீரியன் சுதர்கள் ஆயிரம்பேர்களுந் தங்கள் நகரஞ்சேர்ந்திருந்தார்கள்.

இங்கே பரசுராமன் தன் தந்தையைவணங்கிக் கார்த்த வீரிய னுடன் சேனைகளை யெல்லாம் மடிந்தவிபரத்தை அறிவிக்கசமத க்கினி முனிவர் மனங்கரைந்து "அடாசுதனே! ஒருஅரசனை வதை செய்தபடியால், எனக்குப்பாவம் நேர்ந்திருக்கிறது. அப்பாவத் தைப்போக்கும் நிமித்தம் ஒருவருடகாலம் தீர்த்தயாத்திரை செய் துவரக் கடவாயென்று கூற, அந்தப்படியேசென்று திரிபதை யமுனை கவுதமி சரசுவதி பம்பை காவேரி கன்னியாகுமரி முதலா கிய திவ்விய நதிகளில் மூழ்கிக்கொண்டு வருடமுடிவை யறிந்து வனத்தில் வசித்திருக்கிற காலத்தில், கார்த்தவீரியன் சுதர்கள் ஆயிரம்பேர்களும் பரசுராமன் தீர்த்தயாத்திரை செய்யப்போயிரு ப்பதையறிந்து, இது நல்ல சமயமென்றுணர்ந்து வந்து, சமதக் கினி முனி சிரத்தைக் கொய்துபோக, இதையறிந்த இரேணுகை வியாகூலமடைந்து, ராமா சீக்கிரம் வரவேண்டுமென்று அழுதாள் அப்போது பரசுராமர் சுப்பிரமணியக் கடவுளைப்போல அங்கு வந்து, சிரமறுபட்டு உயிர்நீங்கிய தந்தையைக்கண்டு விசனப்பட்டு அழுது முடிவில் ஒருவாறுய்த்தேறி, அன்னைக்குப் பல நீதிகளை யோதித் தேற்றிச் சொல்லுகிறார்:—

"ஓ அம்மணீ! இப்பூமியாளும் வேந்தர்கள் குலத்தை மூவெழு தலைமுறைவரைக்குங் கொன்று என் தந்தைக்குப் பிரேத சமத் காரம் முடிப்பே"னென்று சபதஞ்செய்து, அங்கே நின்றும் வை ராக்கிய சீலனாகிப் புறப்பட்டுக் கார்த்தவீரியன் நாட்டையடைந்து அவன் புதல்வர்கள் ஆயிரம்பேர்களையும் மழுவாயுதத்தினால்வெட்டி

பெரிந்து, அதைவிட்டு நடந்து, அவனியையாளும் அரசர்கள்
ளைம் இருபத்தொரு தலை முறையையுங்கொன்று அவர்கள் உதி
ரத்தைச் சேர்ந்தபஞ்சக மடுவிற் சேர்த்துத் தந்தையின் தேகத்
தைச் சுமந்துவந்து, அக்கினியிற் கிடத்திச் சடங்குகள் நடத்தி
உதிரமடுவில்மூழ்கி, அந்த உதிரத்தில் எள்ளைக்கூட்டித் தருப்பணங்
கொடுத்து முடித்தபின்பு சிராத்தங் கொடுக்கவேண்டிக் காசிப
முனிவரை நோக்கி மாமுனிவரே! இச்சிராத்தப் பொருள்களனை
த்தையுங் கைக்கொள்ளுமென்று வேண்ட, காசிபர் "யான் பெற்
றுக்கொள்ள மாட்டேனென்று அவமதிப்பு செய்தபடியால், பரசு
ராமர் கோபங்கொண்டு, காசிபனைப்பார்த்து "நீர் ஒரு இமைப்
பொழுதும் நான் ஆளும்படியான இப்பூமியி லிருக்கக்கூடாது.
இதைவிட் டெங்காகிலும் போ" மென்றனன். அதைகேட்டுக் காசி
பர் அதி விரைவினிற் பூமியிலுள்ள நகரங்கடோறும் கடந்து
மனித சஞ்சாரமில்லாத பருவதத்தில் வசித்திருந்தார். அவ்விடத்
திற்குப் பரசுராமர் சென்று, காசிபரைக்கண்டு ஓ மகான்மாவே!
எனது பூமியில் வசிப்பதில்லையென்று முன்னம் நீர் சொல்லிவந்து
இப்புவிமீது உயர்ந்த இம்மலையின்மீது வசிப்பதோ? ஞாயமோ?
வெனக் கேட்க, தருமத்திற் சிறந்த காசிபர் அம்மலையைவிட்டு
மேரு பருவதத்திற்குப்போயிருந்தார். பின்னும், பரசுராமன் அங்
கேசென்று காசிபரைக்கண்டு பணிந்து சொல்லுகிறன்:—

கேளும் நிகரில்லாத முனிவரே என்னைப்பெற்ற பிதாவுச்குச்
செய்த சிராத்த வஸ்துக்களைக் கைக்கொள்ளாமல் என்னை அவமதித்
துவந்து இப்பருவதத்தின் மீதிருப்பது தருமமேயானாலும் புவியின்
மீதிருப்பதில்லையென்று நவின்றுவந்த, என்னுளுகைக்குட்படாத
ஞாலமெதுவோ அங்குபோய் அமர்ந்திரும். மேலும், எனது காவ
லிற்பொருந்தாத அவனிதானுளதோ? கிடையாது ஆகையால் சிரா
த்த வஸ்துக்களைப் பெற்றுக்கொண்டு உமக்கிஷ்டமான இடத்தில்
சுகித்திரும் அதைக்கைக்கொள்ளாவிடில் என்னுடைய நாட்டினி
லிருக்கத்தகாதென்று சொல்லக்காசிபர் அதைக்கேட்டு அப்பருவ
தத்தையும்விட்டு அப்புறம் உத்தரதிசையை நாடிச்சென்று அங்கு
ஒரு காட்டில் அமர்ந்திருக்கிறநாளில், படிகநிறமுடைய ஆண்கபோ
தம் ஓர்பேடையை அடைந்திட ஆசையுற்று கிட்டியபோது பெண்
கபோதம் ஐயா என்னுடைய நாயகன் சுகத்துடனிருக்கும்போது
நீதிதப்பியென்னைப்புணரவருவது தருமமோவென்று சொல்லக்
கேட்டு ஆண்கபோதம் எனதுபராக்கிரமத்தினல் உன்னையான்பிடித்
துப் புணர்ச்சிசெய்தால் உன்னுடைய நாயகன்வந்து என்னை யென்

னசெய்யக்கூடுமென்று சொல்லப் பெண்கபோதம் இப்புவியின்மீது அரசர்குலத்தை கருவறுத்த பரசுராமர்கையாழிவந்திடுமெனப் பகர உடனே ஆண்கபோதம் பெண்கபோதத்தைப் பற்றியமாத்திரத்தில் சக்கரம்வந்து ஆண்கபோதத்தின் சிரத்தை அறுத்து விட்டது. இதனை யங்கு வசித்திருந்தக் காசிபமுனிவர் கண்டு, பரசுராமன் ஆக்கினைக் குட்படாத பூமியில்லையென்று உணர்ந்து, பரசுராமன் முன்சென்று, நின்னுக்கினைக் குட்படாத் அவனியெங்குமில்லை, ஆகையால், நின் பிதாவின் சிராத்தத்திற்குற்ற வத்துக்களைத் தாருமென்று சொன்னக் காசிபர் வசனத்தைக்கேட்டுப், பரசுராமன் களிப்படைந்து, பலவிதமாய்க் காசிபரைத் துதித்து, பிதாவின் சிராத்த வத்துக்களையெல்லாந் தருவித்து காசிபர்முன்னம் வைத்து, பத்தி பூர்வமாய் வணங்கி "ஓ சுவாமி இவ்வத்துக்களைக் கைக்கொண்டு இன்னமும் ஏதாகிலும் வேண்டியிருந்தால், கேளும் தருகிறேனென்று சொன்ன பரசுராமரை நோக்கிக் காசிபர் சொல்லுகின்றார்." ஓ ஐயா! சிராத்தத்திற்குத் தட்சணையாக நினது காவலுக் குட்பட்ட அவனி முழுமையுங் கொடுமெனப் பரசுராமன் அந்தப்படியே கொடுக்கப்பெற்றார்.

அப்போது ஆகாயத்தில் வசிட்டர் கவுதமர் முதலியசத்த இருடிகள் கூட்டத்தில் அமர்ந்திருக்கும் தந்தையைக்கண்டு சந்தோடத்தை யடைந்திருக்கும் பரசுராமனை நோக்கிக் காசிபர் "ஐயா! பூதானங்கொடுத்த புண்ணியவானே! நீ இந்தப் பூமியெல்ங்கும் சஞ்சரிக்கக்கூடாது, வேறெங்கேயாகிலுஞ் சென்றுவாசஞ்செய்யென்று சொல்லிய உடனே பரசுராமன் தனக்குநிற்க நிழலில்லாததால், மிகவுஞ் சங்கடமடைந்து கடல்சூழ்ந்த நாடுகள் காடுகள் கணக்கில்லாத பருவதங்களிலெல்லாம் அமர்ந்திருக்கக், காசிபர் அவ்விடங்கள்தோறுஞ் சென்று தடுக்கப், பரசுராமன் தளர்ந்து உளம்வாடி வருணன் முன்சென்று, "என் மழுவாயுதத்தை எறிகிறேன். அது எத்தனைதூரம்போய் விழுகிறதோ அத்தனை தூரம் பூமியை எனக்குக் கொடுவென, அதற்கு வருணன் "அப்படியே கொடுக்கிறே"னென் றிசைந்தவுடன், பரசுராமன் மழுவாயுதத்தை விட்டெறிந்த மாத்திரத்தில், அதுபோய் விழுந்த இடத்தைப் பார்க்கவ குலத்தோன்வந்து பார்க்கு முன்னமே, விபுர்கள் எறிந்தார்கள். உடனே வருணன் அம்மழுவாயுதம் விழுந்த நாற்பதுயோசனை நீளமாகிய பூமியைப் பரசுராமருக்குக்கொடுக்க, அது மலையாளப் பெயரினையுடைய சசியநற் பருவதமாக நிகழ்ந்தது. அதில் பரசுராமர் அமர்ந்திருந்தார்.



## இராமாவதாரம்

### துதி.

பொன்னும் புகழுமயோத் தியின்மூ வைப்பும்
  புரக்கவரு தசரதமன் னவனற் பேறு
பெற்றாங் காத்திரா வணனு ராவிக்
  கினியமருந் தாயெம்மைப் புரக்கு மன்பாய்
முன்னிரா மேச்சுரத்தி லருச்சித் தேத்தி
  வாழ்வுற்ற மாதவனை முகுந்தன் றன்னை
பன்னிரா மப்பேரெம் பரனை மாலைப்
  பண்ணவனைக் கண்ணனையாம் பரவு வாமால்.

அசனெனுமரசன் அழகிய இந்து மதியினைக்கூடித் தசரதனைப் பெற்றான். அத் தசரத சக்கரவர்த்தி சுமந்திரனை மந்திரியாகப் பெற்று, கோசலை, கைகேசி, சுமித்திரையாகிய மூன்று மனைவிகளுடன் கூடி, சத்தியம், பொறுமை, தயை சாந்தமுதலிய நற்குணங்களை யுடையவனாய், மநுநீதிக்கிணங்கி, தான தருமங்களை இடைவிடாமற் செய்து, சாமபேத தானதண்டமெனும் சதுர்வித உபாயங்களால் அயோத்திமா நகரை அறுபதினாயிரம் வருடம் ஆண்டு வருங்காலத்தில், மகப்பேறில்லாமல் வியாகூலமடைந்து, குலகுருவாகிய வசிட்டரைப்பணிந்து, தன்மனத்திருக்கும் புத்திரப்பேறில்லாக் குறையை விண்ணப்பஞ்செய்ய, வசிட்டர் அரசனுக்கு ஆசிகூறி "அரசனே! விசனப்படவேண்டாம், உனக்குப் புத்திரப்பேறுண்டாகும்படி ஒரு தந்திரஞ் சொல்லுகிறேன். அந்தப்படி நீ செய்வாயாகில், அவசிய முனக்குப் புத்திரவியாகூலம் நிவர்த்தியாகு"மென்றார். அதென்ன வெனில், விபண்டகமாமுனிவர் புதல்வராகிய கலைக்கோட்டுமா முனிவரை வரவழைத்து அவரைக்கொண்டு புத்திரகாமேட்டியாகஞ் செய்விப்பையாகில், நின்மனத்து உதித்த புத்திரக்கவலை நீங்கு மென்பதைக்கேட்டு, சந்தோடவசத்தராகி, கலைக்கோட்டு மாமுனிவரை வரவழைக்கும்பொருட்டு சுமந்திரருடன் சில சைனியங்களை அனுப்பிவிட்டு, யாகத்துக்கு வேண்டிய சாமக்கிரியைகளைச் சேகரித்துச் சித்தப்படுத்திவைத்து முனிவர் வரவுக் கெதிர்பார்த்திருந்தார்.

அங்கே சுமந்திரர் சென்று ரோமபாத மாராசன் கொலுக்கூடத்தில் எழுந்தருளியிருக்குங் கலைக்கோட்டு மாமுனிவரைக்கண்டு வினயத்துடன்வணங்கி தெண்டனிட்டு, தசரதசக்கிரவர்த்தியின் வேண்டுகோளையறிவித்து, சுவாமி அவசியம் தேவரீர் அயோத்தி

மாநகரத்திற் கெழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, அதற்குக் கலைக்கோட்டு மாமுனிவர் சம்மதிக்க, நவரத்தினங்களிழைத்த சிவிகையின்மேல் அவரையேற்றிக்கொண்டு, சுமந்திரனவர் அயோத்திமாநகரத்தின் அருகிலிருக்கும் சோலையில் முனிவருடன் தங்கி, சில வேவுக்காரர்களால் முனிவர்வரவை அரசனுக்குத்தெரிவிக்க, சக்கிரவர்த்தியும் அதனையறிந்து உடனே சகல சேனைகளும் புடைசூழ, சோலையினிடத்திற்கு வந்து, முனிவரைக்கண்டு வணங்கிப் பலவிதமாய்த் துதிக்க, முனிவர் சக்கிரவர்த்திக்கு ஆசிகள் கூறிப், பிரியமாகச் சிலதருமங்கள் வசனித்துப், பின்புசோலையை விட்டுச் சக்கிரவர்த்தியுடன் அயோதிமா நகரத்தையடைந்து யாகத்தைத் தொடங்கி மந்திரலோபம், கிரியாலோபமின்றி யாகத்தை நடத்துகிறபோது, தேவேந்திராதி தேவர்களுடன் பிரமதேவன் பாற்கடலுக்குச்சென்று அரவணைமேற்றுயில்கின்ற எம்பெருமானைப் பலவிதமாகத் துதிசெய்ய, அன்பர்க்கெளியனாகிய விஷ்ணு தேவர்களுடன் துதிசெய்யும் பிரமதேவன் முறையைக்கேட்டு, அவரையன்புடனழைத்து "உங்களுக்குற்ற குறையென்ன" அதைச்சொல்லுமெனப் பிரமதேவன் சொல்லுகின்றான் ;—

"கேளும் எனையீன்ற தந்தையே! அடியேன் வயிற்றிலுதித்த புலத்தியன்றன் புதல்வனாகிய விச்சிரவனுக்கும் சுமாலிபுதல்வியாகிய கைகேசிக்கும் பிறந்த இராவணனனவன் முனிவர்கள் தேவர்கள் முதலானோரையும் மிகவும் இமிசைசெய்கிறான். இதனால் அவர்கள் மெலிந்து நலிந்து மேனிகுலைந்து பயந்து வாட்டமடைந்து, சிங்கசொப்பனங்கண்ட யானைகளைப்போல நடுநடுங்கி, ஒளித்துக் கொண்டிருக்கிறார்கள்; மேலும், இந்திரனைச் சிறைபடுத்தினான் சூரியன் இரதத்தை இலங்கையின்வழிப் போகவொட்டாமற் சாய்ந்துபோகும்படி கட்டளையிட்டிருக்கிறான். சந்திரன் வருணன் முதலானோரை வேலைக்கமர்த்திக்கொண்டான். தேவஸ்திரீகளை அடிமைவேலைசெய்ய நியமித்துக்கொண்டான். ஆகையால், அவனைத் துரிதமாகச் சங்கரித்து, யாகம், யோகம், தவம், தானம், தருமம் முதலானவைகளும் தவறுதலின்றி நடக்கும்படிச்செய்து, தருமத்தைநிலைநாட்டி எங்களைக் காக்கவேண்டுமென்று மிகவும் வினயமாய் நயந்து வேண்டிக்கொள்ள, அதற்குப் பகவான் பிரமதேவனை நோக்கிச் சொல்லுகின்றான்.

"கேளாய் பிரமனே! நிசிசரர்க்கிறைவனாகி அதன்மவழிநடக்கும் அந்த இராவணன் தன்புத்திரமித்திர களத்திராதிகளுடன் இராக்கத குலத்தை வேருடன் களையும் பொருட்டு ஆதிசேடனும்

சங்கு சக்கிரமும் பாணும்மனித அவதாரமெடுக்கும் நிமித்தம் அயோத்திமா நகரத்துறையாளும் தசரதச்சக்கிர வர்த்திக்குத் தனயர்களாய்ப் பிறக்கப்போகிறோமென்று சொல்லி பகவான்மறைந்து போயினார். உடனே பிரமதேவர்களை நோக்கிச்சிவன் முதல் நீங்களனைவரும் விரைவாகக் காட்டிற்குச்சென்று கவிக்கூட்டங்களாய் அவதாரஞ்செய்யுங்களென்று சொல்லிப் போயினான். அந்தப்படியே தேவர்களும் சிவபெருமானும் பிரமதேவனும் ஆரணியத்திற்சென்று கவிகளாய் அவதரித்து விருத்தியடைந்து கொண்டிருந்தார்கள். இங்கே, பகவான் அயோத்திமா நகரத்திற்குச் சென்று யாககுண்டத்தில் பாயசரூபமாகியிருந்தார். யாகமுடிந்தவுடன் அந்தயாககுண்டத்திலிருந்து ஒரு திவ்வியபுருடன் பாயாசம் நிரப்பியபாத்திரத்துடன் வெளியில்வந்து அப்பாயசத்தை தசரதமகாராசன் கரத்திற்கொடுத்தான்.

அதைப் பெற்றுக்கொண்ட சக்கிரவர்த்தி கோசலை கைகேயி சுமித்திரை யிம் மூவருக்கும் பகுந்துகொடுத்தார். அதைப்புசித்த மூவரும் கருப்பம் அடைந்து பத்துமாதமும் நிறைந்து கோசலை பெற்றபிள்ளைக்கு 'இராம' னென்றும், கைகேயிபெற்ற பிள்ளைக்குப் 'பரத' னென்றும், சுமித்திரை பெற்ற பிள்ளைகளிரண்டில் ஒருவனுக்கு 'இலக்குமண' னென்றும், மற்றொருவனுக்குச் 'சத்துருக்க' னென்றும், திருநாமங்களிட்டு, மிகவுஞ் செல்வமாக நாளுக்குநாள் வளர்த்து வந்தார்கள். ஐந்து வயதாகவே அன்னப்பிராசனம் சௌளம் உபநயன முதலியவைகளை முடித்து வேதசாத்திர புராண இதிகாசங்களிற் றேர்ச்சிபெறச்செய்து, இன்பமிகுந்த அன்புடன் போற்றி வருங்காலத்தில் ஓர்நாள், காவிகாம்பர தண்டுகமண்டலதாரியாகிய விசுவாமித்திரமாமுனிவர் தசரதன் சபைக்கெழுந்தருளி 'இராமனைத்தாரு' மென்று கேட்க, அதற்குத்தசரதன் 'யான்வந்து தங்கள் பாகத்துக் கிடையூறுசெய்யும் அரக்கர்களை வதைசெய்கிறேன்' பதினாறுவயதுடைய பாலனை இராமனுக்குவில்லைப் பிடிக்குந் திறம் நன்றாய்த் தெரியமாட்டாது. ஆதலால், அவனையனுப்ப மாட்டேனென்று மறுத்திடக், கவுசிகர் வெகுண்டுசீறி,இராமனுடைய வீரப்பிரதாபத்தைநீயறியமாட்டாய்; எனக்குவிரோதியும் நின்குலத்திற்குக் குருவுமாகி விளங்கும் வசிட்டமாமுனிவரைக் கேட்டால் தெரியும் ஆகையால், அவரைக் கேட்டாகிலும் அறிந்துகொள்ளும் என்றகவுசிகர் மொழியைக் கேளாமல் இராமன் மெலிருக்கும் அன்பினால் 'அனுப்பமாட்டே' னென்று மொழிந்த தசரதன்மீது அதிகசினங்கொண்டவராகி கடின வார்த்தைகளைவிண்டு சபையைவிட்டு நீங்கிப்போயினார்.

அதைக்கண்ட தசரதன் தன்குருவாகிய வசிட்டருக்குத்தெரிவிக்க, அவர்யோசித்துச் சொல்லிய நியமனப்படி விசுவாமித்திரரைவரவழைத்து, அவரிடத்திற்றான் புரிந்த அபசாரத்திற்காக இராமருடன் இலக்குமணரையுங் கூட்டி அவருடன் அனுப்பினான் அவர்களை அழைத்துக்கொண்டு அதிகமகிழ்ச்சியுடன் கவுசிகர் முன்னும் இராமன்பின்னும் இராமனுக்குப்பின் இலக்குமணனுமாகப் போயினர். சுகுமாரமானதேகத்தைப் பெற்றவர்களானதால் சூரியனால் வெப்பமும் கால்கள்நோயும் பசிதாகமும் நேரிடாதிருக்கும்படி பலா அதிபலாவென்ற இரண்டு மந்திரத்தை அவ் இருவர்களுக்கும் முனிவர் ஓதி அழைத்துக்கொண்டு போகிறபோது மார்க்கத்தில் இருண்டவன மொன்றைக்கண்டு இராமர் கவுசிகரைநோக்கி "ஓசுவாமி! இவ்வனமானது யாருடையது? இது இருக்க வேண்டிய காரணமென்ன? இதுசொல்லவேண்டுமென்றுவினவ, இராமரை நோக்கிக்கவுசிகர் சொல்லுகிறார்.

"சூரியகுலத்தை விளக்கவந்துதோன்றிய இராமசேனாய். இவ்வனமானது தாடகையென்னும் அரக்கியும் அவள்புதல்வர்களாகிய மாரீசன் சுபாகுவென்னும் அரக்கரும் வசிக்கும் வனம். அந்த அரக்கியின் தேகமானது மைநிறமாயிருப்பதால், அச்சாயையினால் இவ்வனம் முழுதும் இருள் சூழ்ந்துக்கொண் டிருக்கிறது." என்று சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில், ஒருவர் முகம் ஒருவருக்குக்காணப்படாமற் போயிற்று. அப்போது இராமன் கவுசிகரைப்பார்த்து "ஓசுவாமி! இருந்தாற்போலிருந்து இங்கு அதிக இருள் கவ்விக்கொண்டதை யோசிக்கில், இது மெத்த ஆச்சரியமாக விருக்கிறதேயென அதற்குக் கவுசிகர் இராமனைப்பார்த்து "ஓராமா! அதோபாராய் பருவதாகாரமான தாடகையானவள் ஆகாயமார்க்கமாய்வருகிறாள். அவள் வராமுன்னமே நினது கோதண்டத்தை வளைத்து தீட்சண்ணியமான பாணத்தை வில்லிற் பூட்டிப் பிரயோகஞ் செய்துகொல்லு" என்றார். அதைக்கேட்ட இராமன் 'முதல் பெண்ணின்பேரில் அஸ்திரப்பிரயோகஞ் செய்வது தருமமல்லவே'யென்று யோசித்துக் கொண்டிருக்க இதைக் கவுசிகர் குறிப்பினாலறிந்து 'ஓ ராமா! இவளைப் பெண்ணென்று எள்ளளவும்யோசிக்கவேண்டாம். இவ்வுலகின்கண் அநேகமாயிரம் உயிர்களைக்கொன்ற மாபாதகியாகுமிவள் நீ பரிதாபங்கொள்ள வேண்டாம் சமீபித்து இவள்வரு முன்னே அஸ்திரத்தைப் பிரயோகித்துக் கொன்றுவிடு என்ற கவுசிகர் வார்த்தையைக் குருமொழியாகக்கொண்டு பாணப் பிரயோகஞ்செய்து அவள் சிர

யைக்கண்டித்துவிட்டான். அதைக்கண்டு கவுசிகர் தேகம்புளகித்து இராமனை ஆலிங்கனஞ்செய்து கொண்டாடி அவ்விடத்தைவிட்டு நடந்து, தன் ஆச்சிரமத்தையடைந்து, யாகத்தைத் தொடங்கிய காலத்தில் மாரீசன் சுபாகுவென்னும் அரக்கர்களிருவரும் ஆகாய வீதியில் நின்று அப்பாசனம் செய்து மாமிசம் எலும்பு முதலானவைகளை யெறிந்தும் இப்படிப்பல விதங்களாகிய அக்கிரமங்களைச் செய்தும், யாகத்தை அழிக்க முயன்றிருப்பதை விசுவாமித்திரரால் சொல்லக்கேட்டு இராமன் சிலபாணங்களைவிட்டு சுபாகுவைக்கொன்று மாரீசனை நெடுந்தூரத்திற்கொண்டுபோய்த் தள்ளும்படிச்செய்து, அந்த யாககுண்டத்தில் கொசுகுகூடப் பறவாமலிருக்கும்படி மிகுசாக்கிரதையாய்க் காத்திருந்தான்.

அப்போது யாகத்தைமுடித்துக் கவுசிகர் மனக்களிப்படைந்து இராமலக்குமணர் இருவரும் அநேக சத்திர அத்திரங்களையும் அதற்கனுகூலமாகிய மந்திரங்களையும் போதிக்கப்பெற்று, அவ்வாச்சிரமத்தில்தானே அவ்விருவரும் இருக்கிறபோது, மிதிலைநகரத்திலிருந்து சிலதூதர்கள் சுயம்வரஓலை யொன்று கொண்டுவந்து விசுவாமித்திரருக்குக்கொடுக்க அவர் அவ்வோலைச்சுருளைக் கைப்பற்றிப் பிரித்து வாசித்து, சங்கதியை யுணர்ந்து, இராமனைப்பார்த்து, என்கண்மணியாகிய ராமா! நான் மிதிலை யென்னும் நகரத்துக்குப் போகவேண்டியதாக விருக்கிறது. ஆதலால், நீயும் நின் தம்பியாகிய லக்குமணனும் அயோத்திமா நகரத்திற்குப் போயிருங்கள் திரும்பி வருங்காலத்தில் அப்படியேநான் அயோத்திக்கு வந்து உங்களைப்பார்க்கிறேன். "என்று சொல்ல அதற்கு இராமன் "ஓ சுவாமி! அந்தச் சுயம்வரத்திற்குத் தங்களைமட்டிலுமா வரும்படி ஓலையில் வரைந்திருக்கிறது? தங்கள் சீடர்கள் சமேதராய் விசயஞ்செய்ய வேண்டுமென்று எழுதியிருக்கிறதே! அதைத்தாங்கள் கவனித்துப் பார்க்காமல், சீடர்களாகிய எங்களையுங்கூட அழைத்துப்போகாமல், அடியேங்கள்மீது கிருபையில்லாமல், அயோத்திக்குப்போகும்படி உரைப்பதுதருமமோ? தங்களைவிட்டுப்பிரிய மனமில்லாத எங்களை இப்படி அநாதரவு செய்துவிட்டுப்போகத் தங்களுக்கு எப்படி மனத்திட முண்டாகியதோ?" என்றிவ்வண்ணம்பலவாறு தாபந்திரியப்படுகின்ற இராமனைப் பார்த்துக் கவுசிகருக்குக் கிருபையுண்டாகி, "இராமா! நீதுயரப்படவேண்டாம். உன்னிஷ்டப்படியே மிதிலைக்கு அழைத்துப்போகிறேன். சிந்தனை வேண்டாமென்று சொல்லித் தேற்றி, விசுவாமித்திரர் இராமலக்குமணர்களை அழைத்துக்கொண்டு மிதிலைமாநகரத்தை நோக்கிப்



போகிறபோது, இராமனுடைய திருவடிகள் பட்டு கல்லாயிருந்த அகலிகை சுயரூபம் பெற்றெழுந்திடக்கண்டு, கவுசிகமா மோசியை "ஒசுவாமி! இம்மாது யாருடைய மனைவி? கல்லாயிருந்திடக் காரணமென்ன? இது சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொண்ட இராமனை நோக்கி நடந்த சவித்தாரங்கள் யாவற்றையும் அறிவிக்கக்கேட்டு, இராமன் கௌதமரைவரவழைத்து, அகலிகையை யொப்பித்து, அவரால் சில ஆசிகளைப்பெற்று, கௌதமர் ஆச்சிரமத்தைக்கடந்து, சரசுநதியைத் தாண்டி மிதிலைநகத்தை யடைந்து சனகமாராசனால் பூசிக்கும்படியான சிவன்வில்லையொடித்து சானகியைத்திருமணம்புரிந்தான். ஊர்மிளையைலக்குமணன்வதுவைசெய்தான் குசத்துவசன் புதல்விகளாகிய மாண்டவி சுருதகீர்த்தியென்னும் இரண்டு கன்னிகைகளைப் பரதனும் சத்துருக்கனும் மணம்புரிந்து சனகமாராசனால் விடைதரப்பெற்று அயோத்திமாநகரத்தை நாடிவருகிறமார்க்கத்தில், பரசிராமன் எதிர்ப்பட அவனொடு யுத்தஞ்செய்து வென்று, அவனால் கொடுக்கப்பட்ட வில்லையும் தவபலனையும் பெற்றுக்கொண்டு, அயோத்திமா நகரத்தைச் சேர்ந்து சீதையுடன் கூடிச் சுகித்திருக்குநாளில், ஓர்நாள் தசரதமகாராசன் தன் குலகுருவாகிய வசிட்டரைப்பார்த்துச் சொல்லுகின்றான்,

"கேளும் எங்கள் குலதெய்வமே! யான் கானகமேவித் தவஞ்செய்து பரகதியடையும் மார்க்கத்தை விருப்பங்கொண்டபடியால், தருமம் நீதி பலம்பராக்கிரமத்திற்சிறந்து நிகரில்லாத எனது சிரேட்டப்புதல்வனாகிய இராமனுக்குத்திருமுடி சூட்டவேணு" மென்று தசரதன் இட்டப்படியே திருமுடி சூட்டும்படி வசிட்டமாமுனிவர் நேமிக்கக்கேட்டு, அரசன் சந்தோடவாரியிற் படிந்துஅதற்குவேண்டிய வத்துக்களை யெல்லாம் சேகரித்துத் திருமுடிசூடும்பொருட்டு அந்தப்புரத்திலிருக்கும் இராமனைச் சுமந்திரரால் வரவழைத்துஅபிடேகஞ் செய்விக்கத் தொடங்கியபோது, இந்த விருத்தாந்தம் யாவுங்கேட்டுக் கூனியானவள் கைகேசியினிடஞ்சென்று சொல்ல, கைகேசி அரசனிடஞ்சென்று "மன்னவரே! முன்னமெனக்கு நீர் தருகிறேனென்று சொல்லிய வரங்களைத் தாரு"மென்று பின்னுஞ் சொல்லுகிறள். அதென்னவெனில், பரதன் நாடாளவும், இராமன் பதினான்குவருடங்காடாளவும், இவ்விரண்டு வரத்தையுந் தாருமெனக்கேட்ட தசரதன் உயிர்நீங்கிய தென்றியம்பும்படி மெய்சோர்ந்து நிலத்தில் வீழ்ந்தான். அந்த விதத்தைச் சுமந்திரரால் இராமனறிந்து மரவுரிதரித்துச் சீதையும் இலட்சுமணனும் பின்வர நாட்டைவிட்டுக் காட்டையடைந்து, குகப்பெருமானால் ஓடத்தின்

மீதேறிவர நதியைக்கடந்து பானகள்வாசஞ்செய்யும் வனத்திற்குச்சென்று பரத்துவாசர் ஆச்சிரமம் அடைந்து, அவர் மகிழவணங்கி விடைபெற்று, சித்திரக்கூட பருவதத்தை நாடிப்போயினன்.

சுமந்திரன் அயோத்திமாநகரைச்சேர்ந்து தசத மகாராசனைக் கண்டு சானகி இலட்சுமணருடன் இராமர் சித்திரகூடபருவதத்திலிருக்கிறார்களென்று சொல்லிய மொழியைக் கேட்டவுடன் தசரதன் உயிர்துறந்தான். இதைக்கண்டு வசிட்டமாமுனிவர் நடந்தவர்த்தமானங்களைக் கேகயநாட்டிலிருக்கும் பரதனுக்குச்சொல்லி உடனழைத்து வரும்படிச் சிலதூதர்களையேவினர். அத்தூதர்கள் சென்று பரதனைக்கண்டு "நம்தமையனாகிய இராமருக்கு மகுடஞ்சூடுகிறதால் வாருமையாவென்று சொல்ல, மிகவுமகிழ்ந்துப் பரதன் சத்துருக்கருடன் அயோத்திக்கு வந்து, தன் அன்னையால் தந்தைமாண்டதும் தமையன்வனத்திற் சேர்ந்ததுவுங் கேட்டுக், கொடியவளாகிய தாயைவைது அவ்விடம் விட்டுச்சென்று, மரித்துச்கிடக்குந் தந்தைக்குச் செய்யவேண்டிய உத்தரகிரியைகளனைத்தையும் செய்துமுடித்துக் கலங்கிவாடுகின்றபரதன் தன்னைவசிட்டர் தேற்றி, முடிசூடிக்கொண்டு நகரத்தை யாளுமென்று சொல்லக்கேட்டு, பரதன் மெய்நடுங்கி "என்தமையனை யழைத்துவந்து அவருக்கு முடிசூடி அவர்சொல்லும் ஏவலைக்கேட்டு நடப்பதே நீதி" யென்றுரைத்துதானுஞ் சடைமுடி தரித்து மரவுரியணிந்து நகரத்திலுள்ள சிலரும் வசிட்டரும் தன்பின்வரச்சென்று, குகன்விடும் ஓடத்திலேறிக் கங்கையைக்கடந்து மலைகளுக்கு அரசாகத்தோன்றுஞ் சித்திரகூட பருவதத்தை நண்ணி, இராமரது நிகரில்லாத திருவடியில் விழுந்து அழுதுவாடிக் கொடியபாவியாகிய அடியேனைப் பெற்ற அன்னைசெய்த கொடுமையினால் உம்மைப்பிரிந்த விசனத்தினாலே நமது தந்தைமேலுலகை யடைந்தாரென்ற மாத்திரத்தில் இராமர் 'கோ' வென்று கதறியழுது புலம்பக்கேட்டு, வசிட்டர்தேற்றி இராமர் கைகளால் பிண்டமும் எள்ளுந்தண்ணீரும் விடச்செய்து, கருமகாரியங்களை முடித்தார். பின்புபரதன் தந்தையை நற்கதியடையச் செய்வித்த இராமரை நோக்கி "அண்ணாதாங்கள் அயோத்திக்கெழுந்தருளிப் பட்டாபிடேகஞ்செய்து கொள்ளுமென்று மிகவும் வேண்டிக்கொள்ளும் தம்பியாகிய பரதனைநோக்கித்,, தம்பி பரதா பதினன்குவருடம் கானகத்திற்போக்கியபின்புயான் அயோத்திக்கு வருகிறேன்" என்று சொல்லக்கேட்டு, பரதன் இராமரது பாதுகையைச் சிரசின்மேற் றாக்கிக்கொண்டு அயோத்திமாநகரத்

திற்கிடையிலிருக்கும் நந்திக்கிராமம்சேர்ந்து பாதுகைக்கு மருட்ஞ் சூட்டி வருடங்களைக் கணக்கிட்டுக்கொண்டிருந்தான்.

இங்கே இராமர் சித்திரகூட பருவதத்தைவிட்டுத் தம்பியிலட்சுமணர் முன்னும் சானகிபின்னும் அவளுக்குப்பின் தாமுமாகப் போகிறபோது மலைப்பாம்பினுருவங்கொண்டுலாவும் விராதனைக் கொன்று, அவன் மேன்மையாகிய கதியைச்சேர அருள்புரிந்து, சரபங்கர் ஆச்சிரமம்சேர்ந்து அவரையிணங்கி வணங்கி விடைபெற்றுச்சென்று, குருமுனிவரைக் கண்டுபணிந்துநிற்க, அவர் ஆசிகள் கூறிப் பலகணைகளும் தூணீரமும் அளிக்கக்கைக்கொண்டு விடைதரப்பெற்றுப் பஞ்சவடி தீரத்தையணுகி சடாயுவைக்கண்டு க்ஷேமம் வினவி, அந்தப்பஞ்சவடியிற் பன்னசாலை ஒன்றைத் தம்பியினல் இயற்றி அங்குத்தங்கி யிருக்கும்போது இந்திரன் புதல்வனுகிய சயந்தனென்பவன் சீதையின் வடிவத்தைக்கண்டு மயல்கொண்டு காகரூபமாகியோர் மரத்தின்கிளையினில் இருந்து, சமயம்பார்த்துக் கிளையைவிட்டுக்கிளம்பி, சீதையின் தனத்தைக் கிறிவிட? இராமன் முனிந்து அங்கிருந்த ஓர்புல்லைக்கிள்ளி மந்திரத்தை யோதிவிட அந்தப்பாணமானது காகாசூரனைவிடாமற் பின்றொடர்ந்து உலகங்கள் யாவற்றையுந் திரிந்து அலைந்து, முடிவில் அவன்தன்னைச்சரணு கதியடைந்தமையால், சுத்தப்பிரம சொரூபியாகிய இராமர் கிருபா நோக்கம்வைத்து, அக்காக்கையின் ஒருவிழியைப்பிடுங்கி ஒருமணி யிருபக்கமும் ஓடும்படி கடாட்சஞ் செய்திருந்தார். அது காலையில் சூர்ப்பநகையானவள் நிகரில்லா மோகினிவடிவங் கொண்டுவந்து "என்னையணைந்திடு"மென்று உரைசெய்யக்கேட்டு, இராமன்மறுத்திட, அவள் இலட்சுமணரைக் கிட்டி "என்னைக்கூடியின்பநல்கு" மென இலட்சுமணர் சினந்து அவள் நாசி செவி யிவைகளை அறுத்தெறிய, இரத்தம் பீறிட்டு ஒழுக, அவள் கரனிடஞ்சென்று அழுது புலம்பி நடந்தவைகளெல்லாம் சொல்ல, அவன் அறிந்து வெகுண்டு தூடணன் திரசிரன் முதலாகிய பதினாலாயிரம் வெண்கலரதக்காரர்கள் புடைசூழயானை குதிரை இரதங்களுடன் புறப்பட்டுச்சென்று, இராமருடன் எதிர்த்து யுத்தஞ்செய்து இரத்த வெள்ளம் பெருகியோட, அதில் குறைத்தலைப்பிணங்களாட, அத்திரசத்திரங்களால் அறுபட்டுப் பூமியின்மேல் விழுந்து மடியும்படிச்செய்து செயம்பெற்று இராமர் பன்னசாலையைச் சேர்ந்து சீதையுடன் மகிழ்வாயிருந்தார்.

இதைக் கண்டசூர்ப்பநகை மிகவும் பிரலாபித்துக்கொண்டே இலங்கையைச்சேர்ந்து இராவணன் அடிகளிற்பணிந்து "அண்ணு!

நினக்குப் பழுதில்லாத இலட்சுமிக்கு நிகரானபெண்ணைக் கொண்டு வரும் பொருட்டு அவளை யணுகிப்பிடிக்கச் சென்றபோது, இராமனுக்கிளைய இலட்சுமணன் எனது செவிமூக்கினையுங் கொய்தான். இச்சேதியை கரனிடஞ்சொல்லி, யான்முறையிட, அவர்கள் அனைவரும் வெகுண்டு மனிதருடன் யுத்தஞ்செய்து மடிந்துபோனார்கள். என்று வயிறெறிந்து அழுது புலம்பிச் சொல்லிய சூர்ப்பநகையின் மொழியென்னும் மன்மதன் கணைகள் இராவணன் செவி வழிப்புகுந்து மார்பைத்தொளைக்கச் சீதையின்மேல் மாறுதமயல் கொண்டவனாகி, மாரீசனையடைந்து "விரைவாக நீ பஞ்சவடிதீரத்திற்குச்சென்று சீதையை இங்குவந்து சேரும்படியான முயற்சியைத்தேடும்" என்றான். அந்தப்படியே மாரீசனும் பஞ்சவடியை யணுகிசொன்ன மான் வடிவெடுத்துச் சானகி முன் திரிய, தன்மாயையால் நிமிடத்திற்கு நிமிடம் வெவ்வேறு வன்னங்களாகத்தோன்றிடும் மானைக்கண்டு சீதை பிரமித்து இராமரைநோக்கி "ஓநாதர இம்மானைப்பிடித்துத்தாரும் சுவாமி" யென்று செப்பிய சீதையின் மொழிக்கிசைந்து, இராமர் மானைத் தொடர்ந்து பிடிக்கச்சென்றபோது, மானனது கைக்கு அகப்படாமல் ஓடி மிகுதூரம் காட்டினிற்புகுந்து இராமர் கைபாணத்தினால் அடிப்பட்டு மானுருவாக இருந்த மாரீசன் பிராணனை விடுகிறபோது 'சானகி இலட்சுமணா' வென்று கூக்குரலிட்டு அழைந்துக்கொண்டே உயிர்துறந்தான் அக்கூக்குரலோசையைக்கேட்டு, சானகி இலட்சுமணரை நோக்கி "நமது அண்ணனுக்குஏதோ ஆபத்து நேர்ந்ததுபோல இருக்கிறது. ஆதலால், விரைவாகச்சென்று பாரும்" என அதற்கு இலட்சுமணர் "எனதன்னையே! ஸ்ரீராமருக்கும் ஆபத்து நேரிடுவதுண்டோ? ஒருகாலும் தாங்கள் அப்படிநினைக்கவேண்டாம். மானுருவமெடுத்துவந்த மாரீசனே நம்மை ஏதோவகைமோசஞ் செய்யும்பொருட்டு கூக்குரலிட்டானேயன்றி, எனதண்ணனுக்கு யாதொருசங்கடமும் நேரிடவில்லை. அப்படியேதாகிலும் விபத்து நேரிடும் காலதில் உலகமேது உயிர்களேது? அண்டமேது? சகலமும் அழிந்துபோகும்." யென்று உமதுமனதில் உண்மையாகக் கருதுமென்று செப்பிய இலட்சுமணருடைய மொழிகளைக்கேட்ட சானகி பதைபதைத்துத்துடிதுடித்து "எனது நாயகருக்குத்தீங்கு நேரிட்டதென்று யான்சொல்லியுங்கேளாமல் இவ்விடத்தில் தானேகாலம்போக்கிக்கொண்டிருக்கிறாயல்லவா"வென்றுகடுஞ்சினங் கொண்டு துக்கப்பட்டாள் அதை இலட்சுமணர்கண்டு "இதற்கென்னசெய்வேன்! அண்ணனே அன்னையைக்காத்துக்கொண்டிருக்

கும்படி நேமித்துப்போயினர், அன்னேயோ அண்ணனைப்போய்ப் பார்க்கும்படி கட்டளையிடுகிருள். தருமசங்கடமாயல்லவோநேர்ந்தது" அன்றியும் அண்ணன்மனைவியைத் தனியேவிட்டுப் போவேனேயாகில் அந்தச் சமயத்தில் அரக்கர்கள் யாரேனும் வந்து அன்னையைக் கொண்டுபோவார்களோ என்று சந்தேகங்கொண்டு அப்பன்னசாலை நான்குபுறமும் கோடுகிழித்து "அன்னையே! யார் வந்து அழைத்தபோதிலும் இக்கோட்டைத் தாண்டிப்போகவேண்டா" மென்று சொல்லிவிட்டு இலட்சுமணர் தமையனைத் தேடிக்கொண்டுபோயினர்.

அப்போது இராவணன் சன்னியாசிவேடம் புனைந்துவந்து பிச்சைகேட்டுச் சீதையை வஞ்சித்து எடுத்து இரதத்தில்வைத்துக் கொண்டு போகிறதைச் சடாயுகண்டு அவனுடன் போர்புரிந்து இராவணன்செய்த வஞ்சனையால் அடிபட்டுக் கீழேவிழுந்தான். அதைக்கண்டு சீதை புலம்பி யழுது தன்கணவனுக்குத் தன்னை இராவணன் எடுத்துப்போயின சங்கதியைச் சொல்லும் பரியந்தம் உயிருடனிருக்கக்கடவீரென்று சொல்லிப்போயினள். இராவணனே சீதையைக் கொண்டுபோய் இலங்கையிற் சேர்த்து அசோகவனத்தில் சிறைப்படுத்தி அநேக இராக்கதர்களைக் காவல்வைத்திருந்தான். அவர்கள் நடுவிலே சானகி மெத்தவும் துக்கப்பட்டுக் கொண்டிருந்தாள்.

அவ்விடத்தில் இலட்சுமணர் கானகத்திற் புகுந்து இராமரைக்கண்டு நடந்தவற்றைச்சொல்லி இராமரை யழைத்துக்கொண்டு வந்து பன்னசாலையில் சீதையைக்காணுமல் மனந்தடுமாறிச் சடாயுவினுல் சங்கதியைத்தெரிந்து அவர் உயிர்பிரிந்திட தகனகாரியங்களை முடித்து, அயமுகி என்னு மரக்கியைக்கண்டு அவள் நாசியையும் இலட்சுமணர் கொய்ததுமன்றி அக்காட்டிலுள்ள உயிர்களையெல்லாம் வாரிவாரிப்புசிக்கும் கவந்தங்களைக்கொன்று நற்கதியையும்படி யருள்புரிந்து மதுரமாகிய கனிகளையளித்துத் தொழுதிடுஞ்சவரிக்குப் பரமபத மளித்துப் பம்பாநதிக்கெய்தி, கபிசிரேட்டனகிய அநுமானைக்கண்டு பேசி கதிரவன்சுதனகிய சுக்கிரீவனைநேசித்து துந்துபியெலும்பை மிதித்து மிகுதூரம்போகச் செய்து மராமரமுருவக் கணைதொடுத்து வாலியை வதைத்து அநுமானல் சானகியிருப்பிடமறிந்து எண்பதுவெள்ளம் வானரசேனைகளுடன் சென்று தென்கடலைச் சேர்ந்திருந்தார்கள். இங்கே இலங்கையில்விபீடணர் இராவணனைப்பணிந்து "அண்ணுசிலகாலம்

உயிருடனிருந்து இலங்கையை ஆளவிரும்பினால், ஆதிதேவனாகிய ஸ்ரீராமர்தேவியான சீதையை விட்டுவிடும் இல்லாவிடில் வந்ததைப் படு' மென்றுசொல்லக்கேட்டுஇராவணன்வெகுண்டு கோபித்தெழுந்து "சபையைவிட்டுப் போடா"வென்று முடுக்க, விபீடணர் நான்கு மந்திரிகளுடன் இலங்கையைவிட்டு வெளிப்பட்டு, கடற்கரையிற் றங்கியிருக்கும் ஸ்ரீராமர் திருவடியில் சரணம்புகுந்து வேண்டிக்கொள்ள, ஸ்ரீராமர் கிருபைக்கண்பார்த்துச் "சிரஞ்சீவியாக இருக்கக்கடவர்"யென்று வாழ்த்தி, இலட்சுமணரைக் கொண்டு இலங்கையைப் பாதுகையால் மகுடஞ்சூட்டி, "எனதுபேருள்ளமட்டும் அரசு செய்திருப்பா"யென்று சொல்லி, இராவணனுக்குண்டாகிய மூலபலம், இலங்கையின் வரலாறு முதலானவைகளையும் விபீடணராலறிந்து வருணன்மேல் அக்கினியாத்திரப் பிரயோகஞ்செய்ய, வருணன் நடுநடுங்கி ஸ்ரீராமர் முன்வந்து சரணமடைந்து தன் முதுகின்மேல் அணை கட்டிக்கொள்ளும்படிச் சொல்லிப்போக, ஸ்ரீராமர் வானரக் கூட்டங்களைக்கொண்டு மலைகளைத் தருவித்துச் சேது பந்தனஞ்செய்து, வானரசேனைகளுடன் அணையின்மேற் சென்று சுவேலமலையிற் சேர்ந்திருக்க, அக்காலத்தில் இராவணன் ஏவலினால் சுகசாரணர்க ளிருவரும் வந்து வானரசேனைகளுடன் கலந்திருப்பதை விபீடணரறிந்து,சோரர்களென்று அவர்க ளிருவரையும் பிடித்து ஸ்ரீ ராமரிடஞ்சேர்க்க, இராமர்சுகசாரணர்களைப்பார்த்து இலங்கையை விபீடணருக்குப் பட்டங்கட்டியதும், தசரதராமனென தான் வந்திருப்பதையும் அவர்கள் இராசனான இராவணனுக்குச் சொல்லும்படி கட்டளையிட்டு, கட்டுகளை அவிழ்த்துவிடும்படிக் கட்டளையிட்டார். அந்தப்படியே கட்டுகளை அவிழ்த்துவிட சுக சாரணர்க ளிருவர்களும் இலங்கையை அடைந்து இராவணனைக்கண்டு பணிந்து, நடந்த வர்த்தமானங்கள் யாவுஞ் சொல்லக்கேட்டு இராவணன் இருபது கண்களினின்றும் அக்கினிப் பொறிகள் சிதறப் பற்களைக்கடித்து மீசைதுடிக்கச், சினங்கொண்டு தெற்குக் கோபுரத்தின்மீதேறிச் சுக சாரணர்கள் காட்டப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது இராவணனைச் சூரியபுத்திரனாகிய சுக்கிரீவன் சுவேல மலையின்மேலிருந்து கண்டு கோபங்கொண்டு, அங்கேநின்றுங் கிளம்பி, இராவணன் மேற் பாய்ந்து மல்லயுத்தம்புரிந்து, முடிவில் இராவணன் சிரத்திற் பூண்டிருந்த நவமணிகளிழைத்த கிரீடத்தைக் கொண்டுவந்து ஸ்ரீராமர் திருவடியில்வைத்து வணங்கிநின்றான்.

இப்படி வணங்கிநின்ற சுக்கிரீவனை நோக்கி, ஸ்ரீராமர் "சிலநீதிகளையுரைத்து, வாலியின் குமாரனாகிய அங்கதனை, யழைத்து,இரா

வனிடத்திற்குச் சென்று'சீதையைவிட்டுப் பிழையென்று" சொல்லி, அவனுரைக்கும் மறுமொழியைக் கேட்டுக்கொண்டு வாவென்று தூதனுப்ப, அவன்சென்று சில நீதிகளை யுரைத்துங் கேளாமல் மறுத்து, யுத்தஞ் செய்வதற்கே யிசைந்திருக்கும் வகையையறிந்துவந்து சொன்னான். அதைக்கேட்ட ஸ்ரீராமர் சேனைகளுடன் யுத்தகளத்திற்குச் சென்று, இலட்சுமணரை இராவணனோடு யுத்தஞ்செய்யும்படி அனுப்ப, அவர் விடைபெற்று வானர சேனைகள் சூழப்போய் இலட்சுமணர் இராவணனுடன் போர் புரிகிறபோது, இராவணன் வெகுண்டு இலட்சுமணர் அசந்து நிற்கும்படி ஓர் கணை ஏவினான், அக்கணையானது வருகிற வேகத்தினைக் கண்டு வாயுகுமாரனான அனுமான் ஓர் இமைப்பொழுதில் அக்கணையைத்தடுத்து இலட்சுமணரைத் தன்கையா லணைத்துப்போக, இதைக்கண்ட தேவர்கள் பாரிசாத மலரைப் பொழிய, முனிவர்கள் துதித்திட, தேவதுந்துமி முழக்கினார்கள். அப்போது பிரகாசம் பொருந்திய தேரின்மீதிருந்து இராவணன் அனேக பாணங்களைச் சோனைமாரி பொழிவதுபோல பொழிந்தான். அந்தப்பாணங்களையெல்லாம் ஸ்ரீராமர் தன் கோதண்டத்தினிடமாகச் சில பாணங்களினால் இரதகச துரகபதாதிகளையெல்லாம் பெருங்காற்றி லடிப்பட்ட பஞ்செனப்பறக்கச்செய்து, மேலும் சில கணைகளினால் இராவணனேறிய இரதமும் சாரதிகுதிரை அவன்கைபிற்பிடித்த வில்மகுடமுதலியவைகளும் நிலத்தில்விழ அறுத்தெறிந்து; பின்னும் அவனைநோக்கி "அடா! இராவணா! உனது சம்மதியென்னசொல்லு; நிராயுதனாகி நிலத்தைக் கீறிக்கொண்டு நிற்கிறாய், இன்றுபோய், நாளை வாடா, வென்று சொல்லியமாத்திரத்தில், இராவணன் நாணமடைந்து இலங்கையைச் சேர்ந்தான்.

இவ்வண்ணம் நிராயுதனாகிவந்த இராவணனைக்கண்டு மாலியவான் மிகவும்பதைத்து"அடாராவணா! நான்சொல்லும் புத்தியைக் கேள்; சுகப்படுவாய். அதென்னவெனில், அன்னியன் மனைவியைக் கைப்பற்றுவதே தோடம். அதிலும், ஸ்ரீராமர் மனைவியைக் கொண்டுவந்து சிறைவைத்திருக்கிறாய்; அந்த இலட்சுமியின் மனம் நொந்தால் நீவெந்து சாம்பலாகி விடுவாய். ஆகையால், அத்திருமகளைக் கொண்டுபோய் ஸ்ரீராமரிடத்தில் விட்டு திருவடியில் விழுந்து சரணாகதி யடைவையேயாகில், நின் புத்திர மித்திர களத்திரங்களுடன்செழித்து வாழ்ந்திருப்பாய். அப்படி நீசெய்யாவிடில், உனக்குண்டாகிய பராக்கிரமத்துடன் மூலபலம்யாவும் இராமபாணத்துக்

கிரையாவது திண்ணம். உனக்குச் சுயபுத்தியில்லாவிடினும் என் சொல்புத்தியாகிலுங்கேட்டு நடந்துகொள்ளு; அப்பா”வென்று பல பலவிதமாய்ப் படித்துச்சொல்ல, இதைக்கேட்டு மகோதரன் சினங்கொண்டு, இராவணனைநோக்கி “ஓசுவாமி! தாங்களிந்த பித்தப்பிடித்தக் கிழவன் வார்த்தையைக் கேட்கவேண்டாம்; மிகுபலமுடைய தங்கள் தம்பியாகிய கும்பகன்னனை விடுத்து, கொடும்பகைவராகிய ஸ்ரீராமலட்சுமணருடன் வானரசேனைகளையும் நாசப்படுத்தும்படி உத்திரவளிப்பீராகில், அவனால் யாவரும் மடிந்துபோவார்கள். பின்பு உமது இட்டப்படி சீதையைக் கூடியிருக்கலாமென்ற மந்திரியின் சொல்லைக்கேட்டு இராவணன் சந்தோஷமடைந்து, தூதர்களை யனுப்பிக் கும்பகன்னனைத் துயில்நீக்கி எழுப்ப, அவன் அண்ணனிடம்வந்து பணிந்துநிற்கக்கண்ட இராவணன் சொல்லுகின்றான்:—

“அடாதம்பி! கும்பகன்னா! நீசென்று சண்டைசெய்து வானரசேனைகளுடன் மனிதர்களையுங்கொன்றுசெயம்பெற்றுவா”வென்று சொல்லக்கேட்டு, கும்பகன்னன் அண்ணனாகிய இராவணன் சொற்படி யுத்தகளத்திற்குச்சென்று, வானர சேனைகளைக்கொன்று, ரத்தவெள்ளம் பெருகியோடும்படி செய்து, சுக்கிரீவனைப் போராடிப்பிடித்துப் பிணித்துக் கட்டிக்கொண்டு விரைவாகத்திரும்பி இலங்கையைநோக்கிப் போகுமளவில், ஸ்ரீராமர் கும்பகன்னன்மீது சில பாணங்களைத் தொடுத்துச் சுக்கிரீவனை விடுவித்துப் பின்னுஞ் சில கணைகளால் கும்பகன்னனது கைகால்களைத் துண்டித்துச் சிரத்தையும் அறுத்துக் கடலில் விழும்படித்தள்ளினர். அதுசமயத்தில் இராவணன் மருத்தனென்னும் அரக்கனைச் சனகமாராசனைப் போல உருவங்கொள்ளச்செய்து அவனை யழைத்துக்கொண்டு போய், இராவணன் சீதையின் முன்னம் விடக்கண்டு, வைதேகி தந்தையென்றே நிச்சயித்து இடர்க்கடலில் மூழ்கிவாடி யழுதுபுலம்புகிறபோது, தூதர்கள் அவ்விடத்துக் கோடிவந்து இராவணனைக்கண்டு வணங்கி “ஓசுவாமி! தங்கள் சகோதரராகிய கும்பகன்னன், ஸ்ரீராமபாணத்தால் அறுப்பட்டு மாண்டா”னென்று சொல்லக்கேட்டு, இராவணன் இடியோசையைக்கேட்ட நாகத்தைப் போலயேங்கி பழுதுபும்பி, ஒருவாறுகத்தேறி, அதிகசினங்கொண்டு அதிகாயனைபழைத்து, யுத்தத்திற்கனுப்ப, அவன் அனேக யானைக் கூட்டங்களுடன் சமர்பூமியையடுத்து, அனேக கணைகளை விடுத்து வானரசேனைகளை வாட்டுகிறபோது, இலட்சுமணர் சோனைமாரியைப்போலப் பாணங்களைச்சொரிந்து, முடிவில் பிரமாத்

திரத்தினால் அதிகாயன் சிரத்தைக்கொய்து, பின்னும் இராவணன் மைந்தர்களை ஒன்றுய்க்கட்டி யெதிர்த்து, அவர்களை இருளைப் போக்கும்படியான இரவியின் சுதனாகிய சுக்கிரீவன் முதலானோரும் கைகளால் சின்னபின்ன மாகும்படி யடித்துக்கொன்றதைத் தூதுவர்சென்று சொல்ல, இராவணன்கேட்டு பலவாறு துக்கப்பட்டுத் தேவேந்திரனைச் செயித்த இந்திரசித்தையழைத்து "நீபோய் யுத்தஞ்செய்து மனிதரையும் வானர சேனைகளையும் வதைத்துச் சிதைத்து வரக்கடவாய்" யென்று சொல்லி யனுப்ப, இந்திரசித்தன் சிவனும் பிரமதேவனும் பயமடையும்படியாகச் சேனைத்திரள்களைக் கூட்டிக்கொண்டு, இரணக்களம்வந்து சினமிகுந்து தன்வில்லை வளைத்து அனேகமாயிரங் கணைகளைத்தொடுத்து, வானரசேனைகளைக்கொன்று வானுலகேற்றி, நாகாத்திரத்தைப் பிரயோகித்து இலட்சுமணருடன் மற்ற வானரங்களையுங்கட்டி யுருட்டிவிட்டுஇலங்கையை யடைந்தான்.

இந்திரசித்து போனபின்பு தசரதனுக்குப் புதல்வனாகவந்து தோன்றிய நமதிறைவனும் இராமனுமாகிய சகதீசன்விசனமுற்றழ சொன்னமலையைபோலக் கெருடபகவான் ஆகாயத்தில்வந்து வட்டமிட்ட மாத்திரத்தில் நாகாத்திரக்கட்டுகள் படபடென் றறுந்துவிட இலட்சுமணர்முதல் வானரசேனைகள் உயிர்பெற்றெழுந்து ஆரவாரஞ்செய்ய, இதனைக்கண்டு தூதுவர்களோடி இராவணனிடத்திற் சொல்லக்கேட்டு, இராவணன் சினங்கொண்டு அணுவளவேனுங் கருணையென்பதில்லாத கொடியவர்களாகிய கரன்புதல்வர் முதலாகிய சில அரக்கரையேவினான். அவர்கள் கடலைப்போலத் திரண்டுவந்து எதிர்க்க, அவர்களைச் சூரியகுமாரனாகிய சுக்கிரீவன் முதலான வானரவீரர்கள் சூழ்ந்துகொண்டு, இமைக்குள்ளாகக் கணக்கில்லாத அரக்கர்களை யடித்துக்கொன்று, வீழ்த்தியதைக்கண்ட கரன்புதல்வன் முப்புரமெரித்தச் சிவனைப்போலக் கோபங்கொண்டு, வருணாத்திரம் வாயுவாத்திரங்களை விடுத்தான். இதைக்கண்ட ஸ்ரீராமர் சிலகணைகளால் வருங்கணைகளை நடுபாதியில் கண்டித்து, வேறொரு கணையைவிடுத்துக் கரன்சுதன் சிரத்தை யறுத்திடக்கண்டு, தூதுவர்களோடி இராவணனுக்குச் சொல்லக்கேட்டு, அரக்கர்கள்கோனாகிய இராவணன் இந்திரசித்தினையேவ அவன் சேனைகள் புடைசூழவந்து இரணகளம் புகுந்து எதிர்க்க, இலட்சுமணர் சோனைமாரியைப்போல அனேக பாணங்களைச்சொரிந்து அறுபதுவெள்ளம் இராக்கதரை மடித்திடக்கண்டு, இந்திரசித்தன் பிரமாத்திரப் பிரயோகஞ்செய்யவெண்ணி, ஆகாயத்தில் மறைந்

தான். அச்சமயத்தில் மகோதரனெனவன் தேவேந்திராதி தேவர்கள் முனிவர்கள் மனிதர்கள் உருவாய்த் தோன்றிடும்படி மாயை இயற்றியதை இலட்சுமணர் முதல் வானரசேனைகளுங்கண்டு திகைத்துக்கொண்டிருக்கும் சமயம்பார்த்து, ஆகாயத்தில் மறைந்திருக்கும் இந்திரசித்தன் பிரமாத்திரத்தைப் பிரயோகிக்கக்கண்டு, தேவேந்திராதி தேவர்கள் பயங்கொண்டு கவலையுற, இலட்சுமணருடன் வானரசேனைகள் அடங்கலும் பிரமாத்திரத்தினற் கட்டுப்பட்டு பூமியின்மீது சாய்ந்தார்கள்.

இதனைக்கண்ட ஸ்ரீராமர் மயங்கித்தியங்கி இவ்விதமாய்த் துக்கப்பட்டாரென்று சொல்லமுடியாத துக்கசாகரத்தில் முழுகித்துயரப்படுவதைக்கண்டு, சாம்புவந்தர் ஏமனப்படி அனுமான் சொர்ன்னமலைக் கடந்து அப்பால் வெகுதூரஞ்சென்று, சஞ்சீவி பருவதத்தை யெடுத்துக்கொண்டுவந்திட, அக்காற்றுபட்ட மாத்திரத்தில், பிரமாத்திரம் விடுபட்டு, உயிர்பெற்றுத் தெளிவடைந்தார்கள். இப்பால் இவ் வாச்சரியத்தைக்கண்ட தூதுவர்களோடி இராவணனுக்கறிவிக்கக்கேட்டு, கோபாக்கினி அதிகரித்துத் தன் சுதன்றனை நோக்கி, 'இனி யென்னசெய்கிறதென அதற்கு இந்திரசித்தன் சொல்லுகிறன்:—

"தேளுந்தந்தையே! யான் இரணகளத்திற்குச்சென்று சிலமாயையினல் அவர்களைமயக்கி, நிகும்பலையாக முடித்து, வானரசேனைகளுடன் நரர்களையுங்கொன்றுவருகிறே" னென்றுசொல்லி இந்திரசித்தன் இரணகளமேவி மாயையினல் சீதையைப்போல் ஒருமாதுதனை இயற்றி அனுமான்முதலனைவருங்காண வெட்டி யெறிந்து, "இதோ! யான் அயோத்திமா நகரத்துக்குச்சென்று அங்குள்ள அனைவரையும் வதைத்துவருகிறேன்" என்று யாவருங்கேட்கச்சொல்லி, நிகும்பலையை நோக்கிப் போயினன்; கொடியோனகிய இந்திரசித்தன் வெட்டினதைக்கண்ட அனுமான் சானகி மாண்டனளேயென்று இராமர்முன் சொல்ல, ஸ்ரீராமர்கேட்டு விசனமுற்றிடுமளவில், விபீடணர் அசோகவனத்திற்குச்சென்று, சானகியைக்கண்டுவந்து அவைகளையெல்லாம் விவரித்து ஸ்ரீராமரிடம் செப்ப, மகிழ்ந்தார். மாயைசெய்து நிகும்பலைக்குச் சென்று யாகஞ்செய்யும் இந்திரசித்தை இலட்சுமணர் அனுமானுடன் சென்று கண்டு, அவன் யாகத்தையழித்து, அவனை சின்னபின்னப் படுத்துகிறபோது, இந்திரசித்தன் சினங்கொண்டு பிரமாத்திரம், பாசுபதாத்திரம், நாராயணாத்திரங்களைத் தொடுத்து இலட்சுமணர்மேரில் பிரயோகிக்க, அவைகளையெல்லாம் இலட்சுமணர் தக்ககணைகளையேவி, நடு

ப்பாதியிற் கண்டித்து, வேறொருகணையால் அவன் தலையிற்பிடித்த வில்லொடுகரத்தையுந் துண்டித்து, மற்றொருகணையால் அவன் சிரத்தையறுத்து பூமியில்விழத் தள்ளினர். இதைப்பார்த்திருந்த தூதர்களோடி இராவணனுக்குத் தெரிவிக்கஅதைக்கேட்ட இராவணன் வர்டைக்காற்றினால் அடியற்றுவிழும் மரத்தைபபோலப் பூமியில் விழுந்து மகனே! மகனே! யென்று பத்துவாயினாலுங் கத்தியழுது, அமர்க்களத்திற்குவந்து, புதல்வன் தேகத்தை யெடுத்துக் கொண்டு, இலங்கையைச்சேர்ந்து திலதைலத்தில் அத்தேகத்தைவிட்டுக் கெடாமலிருக்கவைத்து, மூலபலத்தை அமர்க்களத்திற் கேவினன்.

இராவணனால் அனுப்பப்பட்ட மூலபலசேனைகள் ஆயிரம்வெள்ளமும் கடல்புரண்டு வருவதையொத்து இரணக்களம்வந்துசேர, அச்சேனைத்திரளைக்கண்ட வானரசேனைகள் பயந்து மனக்கலக்கங்கொண்டோட, அவற்றை அங்கதன் ஓடாமலிருக்கும்படி தடுத்து தைரியங்கூறுகிறபோது, அக்குறிப்பையறிந்து ஸ்ரீராமர் சேனைத்திரளின்மேல் மோகனாத்திரத்தைப் பிரயோகிக்க,அக்கணையானது சென்று இங்கும் இராமன், அங்கும் இராமன், எங்கும் இராமனாகத் தங்கி தோன்றியதைக்கண்டு, அச்சேனைகள் ஒருவருக்கொருவர் அடித்தும், கடித்தும், இடித்தும், பிடித்தும், எற்றியும், குத்தியும், இழுத்தும், கிழித்தும் பலவாறாக மடிந்து போயினார்கள். இச்சங்கதியைத் தூதுவர்களாலறிந்த இராவணன் மணித்தேரின் மீதேறி அமர்க்களம்வந்து வானரசேனைகளைப் பலகணைகளால் வாட்டிக்கொண்டேவந்து, இலட்சுமணர்மீது அமோகமான அத்திரங்களை யேவ, அதனை விபீடணன்மொழியினால் இலட்சுமணர் நாராயணாத்திரப் பிரயோகஞ்செய்து அவ்வத்திரங்களை அறுத்தெறிந்தார். அதைக்கண்டு இராவணன் விபீடணன்மேல் கோபித்து வேலாயுதத்தைப் பிரயோகித்தான். அந்த வேலாயுதம் வருகிற வேகத்தைக்கண்ட இலட்சுமணர் விரைவாகச்சென்று விபீடணன் மேல் படவொட்டாமல், தன் மார்பில் படும்படியேற்றுப் பூமியிற் சாய்ந்தார். இதைக்கண்ட இராவணன் மகிழ்ச்சியுடன் தன்நகர் சேர்ந்தான்.

அப்போது சாம்புவந்தர், அனுமானால் மறுபடியும் சஞ்சீவி தருவித்து இலட்சுமணர் உயிர்பெறச்செய்து,மனங்களித்திருந்தார். அந்தவேளையில் பிரமதேவன் மொழியால் மாதலிஇரதத்தைக்கொண்டுவந்து நிறுத்த, கருடன்மீதுவரும் ஸ்ரீராமர் கருடாழ்வாரைவிட்

டுக்கிழிறங்கி வைகுண்டத்தின்மீதேறி அரக்கர் குலபதியைப்போல வந்து நிற்கும் மகோதரனைக்கண்டு ஸ்ரீராமர் சில அத்திரங்களைத் தூண்டி நமனுலகஞ்சேர வாட்டியபோது, இராவணன்கண்டு மந்திரியென்று வெந்துருகிக் கோபாவேசங்கொண்டு, இரதத்தின்மேலேறி அங்குவந்து அனேக அத்திரங்களை வானரசேனையின்மீது பொழிந்தான். அதைக்கண்டு, ஸ்ரீராமர் தமது கோதண்டத்தினிடமாக அமோகமாக அத்திரங்களைப் பிரயோகித்து அவன் விட்ட அத்திரங்களையெல்லாம் கண்டிக்கக்கண்ட இராவணன் ஒரு சூலாயுதத்தை விட்டெறிய, அதனை ஸ்ரீராமர் காலாத்திரத்தைப் பிரயோகித்துத் தூள்படச்செய்து பின்னும் ஆயிரம் கணைகளை விடுத்து இராவணனுடைய சிரங்களையும் கைகளையும் அறுத்திட, இமைப்பொழுதில் சிரங்கர மனைத்துங் கிளைத்திடக்கண்டு வியந்து, இணையிலாத கணைகளைவிடுத்து அவற்றை அறுந்தறுந்துத்தள்ள, அவை மறுபடியும் கிளைக்க, முடிவில் சதுர்முகாத்திரத்தால் பிரமதேவன் கொடுத்த வரமும் உரமும் அழிந்து பூமியின்மீது விழுந்து இராவணன் மடிந்தான். உடனே தேவர்கள் பாரிசாத மலர்களைப் பொழிய, துந்துமி முழங்க, மேலோர்களாகிய முனிவர்கள் நடிக்க மயன்மகளாகிய மண்டோதரியழுது புலம்பித் தானும் மடிந்திட ஸ்ரீராமர் ஏவலினால் விபீடணர்சென்று இராவணனுக்கும் அவன் பத்தினிக்கும் பிரேதச் சடங்குகளை நடத்தி, அக்கினியினாற் சமக்காரஞ்செய்து, வேதவிதிப்படி திலசலம் விடுத்து, விபீடணர் ஸ்ரீராமரிடம் மேவியிருக்க, அந்தவேளையில் அனுமான் ஸ்ரீராமர் ஏவலாற்சென்று சீதையைக்கண்டு வணங்கி, இராவணன்மடிந்த நலங்கள் யாவற்றையுஞ் சாற்றிடக்கேட்டு, சீதைமகிழ்ந்து நீராடி அணி பணி தரித்துத் திரிசடையுடன்வந்து, ஸ்ரீராமரை வணங்கி நிற்க, அவர் சந்தேகிக்கக்கண்டு உடனே சீதை அக்கினியில் மூழ்க, அக்கினிதேவன் பயந்து நடுங்கிச் சீதையைச் சிரத்தின்மேற் சுமந்துக் கொண்டுவந்து, ஸ்ரீராமரைப் பலவிதமாக துதித்து வணங்கக், கருணையுடன் ஸ்ரீராமர் சீதையைக் கைபற்றுவிதமறிந்து, சிவன் பிரமன் இந்திரன் முதலியோர் துதித்துப் போற்றிவேண்ட, ஸ்ரீராமர் மகிழ்வுடன் சீதையை அங்கீகரிக்க, அமரர்கள் மலர்மழைபொழிய, துந்துமி முழங்கத், தசரதன் அங்குவர, ஸ்ரீராமர் தந்தையை வணங்க, வணங்கின மைந்தனை தசரதன் மார்புறத் தழுவினன். பின்னும், சீதைவந்து வணங்கப் பெரிய அரசன் மருகிக்குப் பல ஆசிகள் கூறிட, இலட்சுமணர் வந்துபணிய அவரை மார்போடணைத்திடும் தந்தையை நோக்கி "அண்ணா! துயரமடைந்திருக்

கும் பரதனும் அவன் அன்னையுமாகிய இவ்விருவர்மீதும் தங்களுக்கிருக்குங்கோபத்தைமாற்றும்படிவேண்டுகிறேன்; கிருபைசெய்யு" மென, அதற்கு தசரதன் "குமாரனே! உன்னை வனத்திலோட்டும்படி விளைத்த கைகேசியையும் அவள் பிள்ளையாகிய பரதனையும் இகழ்ந்தேன்; மேலோனாகிய நீ இவ்வண்ணம் சொல்லும்படியான உன்மொழியினாலே இவர்கள் மீதிருந்த கோபத்தை நீக்கினேன்; மேலாகிய சேல்கெண்டையையொத்த நேத்திரங்களையுடைய சானகியைக் கூடிவாழ்ந்திரு எனச்சொல்லிப் போயினான்.

பின்பு அமர்க்களத்தில் மடிந்துகிடக்கும் வசந்தனுயிரை அனுமான் சொர்க்க லோகத்திற்குச் சென்று கொண்டுவந்து வசந்தனை எழுப்பிவிட, ஸ்ரீராமர் சீதை இலட்சுமணர் சுக்கிரிவன் விபீடணர் முதலாகிய எழுபத்திரண்டு வெள்ளம் வானரசேனைகளுடன் புட்பக விமானமீதேறிச் சேதுசேர்ந்து, சீதையைநோக்கி ஸ்ரீராமர் சொல்லுகின்றார்.

கேளாய்பெண்ணே சானகி இத் திருவணையைச் சேவித்தால் பாவங்களையும் போக்கிப் புனிதராகும்படிச் செய்யும் என்று சொல்லித் தன்னுடைய கோதண்டத்தின் ஓர் முனையினால் சலத்தைக்கீறி இத்தீர்த்தத்தில் மூழ்கினாலும் சகலபாவங்களும் நீங்குமென்றுசாற்றிப் பரத்துவாசர் ஆச்சிரமஞ்சேர்ந்து, அவரடியிற் பணிந்து அவரளித்திடும் விருந்தைப் புசித்துக்கொண்டிருந்து ஒருநாள் அநுமானை யழைத்து," நீ விரைவாக அயோத்திக்குச் சென்று பரதன் சந்தோடிக்கும்படி, என்வரவை யறிவித்துவாவென்றனுப்ப, அனுமான் அயோத்திக்குச்சென்று, அக்கினியில் விழுந்திறக்கத்துணிந்த பரதனைத் தடுத்து. ஸ்ரீராமர் வரவைப்புகன்று, மறுபடியுந் திரும்பிவந்து, பரத்துவாசர் ஆச்சிரமஞ்சேர்ந்து, ஸ்ரீராமரை வணங்கித் தான் போய்வந்த காரியத்தைச்சொல்லிக் களிப்புடனிருந்தார்.

அங்கேபரதர் மிகுசந்தோடத்துடன் ஸ்ரீராமர்வரவை யெதிர்பார்த்திருந்தார். இங்கே, ஸ்ரீராமர் புசித்துப் பரத்துவாசரிடத்தில் இனியமொழிகள் புகன்று, விடைபெற்று, யாவருடனும் புட்பகவிமானமீதேறி அயோத்திமாநகரத்திற்கு அருகிலிருக்கும் நந்திக் கிராமத்திற்குச் சமீபமாகவந்து விமானத்தை விட்டிறங்கிய ஸ்ரீராமரையும் சீதையையும் பரதனும் சத்துருக்கனும் பணிந்து நிற்க, இலட்சுமணர் பரதரைப் பணிந்துபோற்ற, சத்துருக்கன் இலட்சுமணரை வணங்கிப் போற்ற, அவனையெடுத்து அணைத்துப்

பல ஆசிகள் கூறினபின்பு, ஸ்ரீராமர், சீதை, இலட்சுமணர், பரதர், சத்துருக்கர், விபீடணர், சுக்கிரீவர், அனுமார்முதல் வானரசேனைகளுடன் புட்பக விமானமீதேறி, அயோத்திமா நகரத்தையடைந்து, சரயுநதியிற் படிந்து, வேதியர் வேதமோதிட வசிட்டர் ஸ்ரீராமன் சிரசினில் மகுடஞ்சூட்டச், சீதையருகேநிற்க, பரதர்குடைபிடிக்க, இலக்ஷுமணர் சத்துருக்கர் கவரிவீச, அனுமான் திருவடியைத்தாங்க, மன்னர் மண்டலீகர்கள் முதல் யாவரும்வணங்கிப்போற்ற, ஸ்ரீராமர் அயோத்திமாநகரத்தை தருமமும் நீதியும் மென்மேலும் விசேடிக்க, ஆண்டுவருங்காலத்தில் வழக்கப்படி ஒருநாள் நகர்சோதனை செய்துக்கொண்டுவருகிறபோது, வண்ணனொருவன் தன்மனைவி தனிவழியேசென்று ஓரிரவு தங்கி மறுநாள் வந்து வீட்டிற்சேர, அவன் அவளைப்பார்த்து "அடி விபசாரி! இந்நகரத்தையாளும் இராமன்மனைவி சீதையை இராவணனெடுத்துக்கொண்டுபோய் ஆறுமாதம்வைத்திருக்கும் அளவை ஸ்ரீராமன் அறிந்தும் வானரசேனையுடன் சென்று இராவணனை மடித்து மறுபடியும் சீதையை யழைத்துவந்து மகுடாபிடேகஞ்செய்துக்கொண்டு வாழ்ந்துவருகிறான். அதைப்போல யானு முன்னைச்சேர்ந்து உன்னுடன்கூடி, வாழ்ந்திருப்பேனோ? மெத்த நன்றாகயிருக்கின்றது நினது செய்கை" யென்றுசொல்லி பழித்தான் இம்மொழியைக் கேட்ட ஸ்ரீராமர் இவ்வாறே சனங்களனைவரும் சொல்லுவார்களெனத் தன்மனதிற்கருதி, அதிகவிரைவாகத் தன்னரண்மனையைச் சேர்ந்து இலக்குமணரை யழைத்து, "சானகியை இரதத்தின் மீதேற்றிக்கொண்டுபோய்க் கானகத்தில்விட்டு வரக்கடவாயென்றுசொல்ல, அந்தப்படியே இலக்குமணர் சீதையை இரதத்தின்மீது ஏற்றிக்கொண்டுபோய், மேன்மையாகிய வான்மீகர் வனத்தில்விட்டுத் திரும்பிவந்து நகரம்சேர்ந்தார்.

அங்கேசானகி ஒண்டியாகத்தவித்து அழுது புலம்பிக்கொண்டிருக்கும் அழுகுரலைக்கேட்டு வான்மீகமுனிவர்வந்து, சானகியைக் கண்டு, "நீ ஆரம்மா! உன்னூரெது? பேரென்? நினது தாய் தந்தையர்கள் யாவர்? இந்த இருண்டகாட்டிற்கு வந்து தனித்து ஒண்டியாயழவேண்டிய காரணம் யாது? இவைகளெல்லாம் ஒன்றேனும் ஒளிக்காமல் சொல்லுமம்மா" வென்று வினவி, சானகி வாய்மொழியினால் சகல விவகாரங்களையும் அறிந்து, அம்முனிவர் சானகியைத் தேற்றிப் பன்னசாலைக்குள் அழைத்துச்சென்று "அம்மணி! நீ இங்குத்தானே யாதொரு கவலையுமின்றிச் சுகமாகயிரு, உனக்கொரு குறையும் வரமாட்டாது. யாவற்றிற்கும் யா

னிருக்கிறே"னென்று தைரியஞ்சொல்லித் தன்னிடத்தில் மிகு பரிவோடும் வைத்துப் பாதுகாத்துவருகிற காலத்தில், சானகிக்குக் கருப்பம் நிறைந்து இரண்டு குமாரரைப் பெற்றிட, வான்மீகர் தெரிந்து அப்பாலர்களில் மூத்தோனுக்குக் குசலனென்றும் இளையவனுக்கு இலவனென்றும் நாமகரணஞ்சாற்றி, உத்தமர்களாகிய பிராமணர்களுக்குக் கணக்கு மிதமில்லாத தானதருமங்களை வழங்கிச் சாதகம் வரைந்து, மிகவும் பிரியமாக வளர்த்துவந்தார் அச்சிறுவர்களிருவரும் வான்மீகமாமுனிவர் அனுக்கிரகத்தினால், அதிசபாலியத்திலேதானே வில்வித்தையிற் றேர்ச்சியடைந்து, காட்டிலிருக்கும் பலவித மிருக வேட்டைகளாடி வருகிறபோது, சத்துருக்கனும் அக்காட்டிற்குவந்து வேட்டையாடிக்கொண்டிருக்க, இலவன்கண்டு "எங்கள்காட்டினுள்வந்து வேட்டையாடுகிற நீயா"ரென்று தடுத்து அமோக யுத்தஞ்செய்கிற பாலனைக் கண்டு, சத்துருக்கன் ஆச்சரியமடைந்து அப்பாலனைநோக்கி மிக நயந்து கேட்டுக்கொண்டும், அப்பாலன் மீறித் தன் சேனைகளையெல்லாஞ் சின்ன பின்னப் படுத்துவதைக்கண்டு, சத்துருக்கன் வெகுண்டு கோபமீறிச் சுறுக்காகிய சில பாணங்களைத் தொடுத்து இலவனைக் கொன்று தன்னகரஞ் சேர்ந்தான்.

இது சங்கதியை யறிந்து வால்மீகர் வேகமாக அங்குச் சென்றுத் தன் தவவன்மையினால் இலவனை யெழுப்பி அழைத்துவந்து, பன்னசாலையிற் சேர்த்துத் தவத்திலிருந்தார். அயோத்தியில் ஸ்ரீராமர் கொலுக்கூடத்தில் மேவிச் சிங்காதனத்தில் வீற்றிருக்கிறபோது, பிராமணனொருவன் தன் புதல்வன் மரித்துக் கிடப்பதை யறிந்து மிகவுந் துக்காக்கிராந்தனாகி, மரித்த மகனையெடுத்துத் தோளின்மீது சாத்திக்கொண்டுவந்து, ஸ்ரீராமர் முன்னங்கிடத்தி, "ஓ இராமா! நினது அரசாட்சியில் ஏதோ அக்கிரமம் நடந்திருக்கிறது; ஆகையால் என் புதல்வன் மரண மடைந்தா"னென்றுக் கூக்குரலிட்டுக் கதறியழுதான். அவனை ஸ்ரீராமர் "ஓ பிராமணோத்தமரே நீர் விசனப்படவேண்டாம்; இன்னுஞ் சற்றுநேரத்தில் உன் புத்திரன் உயிர்பெற்றெழுவான்" என்று சொல்லிப் பிராமணனைத் தேற்றிச் சத்துருக்கனை யனுப்பிப் பார்த்துவரும்படி நேமிக்க, அந்தப்படியே சத்துருக்கன் சென்று தேடிப் பார்த்துக்கொண்டு வருகிறபோது, பஞ்சமனொருவன் தன் குலதருமத்தைவிட்டு மேல் குலத்தா ரனுட்டிக்கும் தவஞ் செய்வதைக்கண்டு அவனைக்கொன்ற மாத்திரத்தில் பிராமணன் புதல்வன் உயிர்பெற்றெழுந்தான்.

39

அதைக்கண்ட பிராமணன் ஸ்ரீராமரை வாழ்த்திப் புதல்வனையழைத்துச் சென்றான்.

சூரியனைப்போல இப்பூமண்டல மெங்கும் வியாபித்து தருமங் குன்றாமல் நீதிவழுவாமல் அரசுபுரிந்திடும் ஸ்ரீராமர் வேதவேதியரும் முனிவர்களும் மகிழ முறை நெறிப்படி அசுவமேதயாகத்தை குற்றமின்றி நடத்துகிறநாளில், சானகியின் சிறுவராகிய குசலவர்களுக்கு வான்மீக மாமுனிவர் சவுளம் உபநயனஞ்செய்வித்து நான்மறைகளையும் ஓதுவித்துத் தான்செய்த இராமாயண சுலோகங்களனைத்தையும் விரித்துரைத்துக் கற்பித்துவைக்க, அவர்களிருவரும் அயோத்திமா நகரத்தையாளும் ஸ்ரீராமரிடத்திற்குச் சென்று இராமகதையைச் சொல்லக்கேட்டு, ஸ்ரீராமர் மிகவுமகிழ்ந்தும் நீங்க ளாரப்பாவென்று வினவுகிறபோது, வான்மீகமாமுனிவர் அங்குவந்து ஸ்ரீராமரால் பூசிக்கப்பட்டு ஆசிகள் கூறிச் "சத்திய சந்தனாகிய ஸ்ரீராமா! இவ்விரண்டு சிறுவர்களும் நினது புதல்வர்க"ளென்று சொல்லக்கேட்டு, தசரதராமன் முன்னங்கொண்ட மகிழ்ச்சியைவிட எண்மடங்கு அதிக சந்தோடமடைந்து பூரித்துத் தனையர்களை இரு கைகளினாலும்வாரிச் சேர்த்தணைத்து, சானகியையழைப்பித்து அக்கினியில் மூழ்குவாயென்ற மாத்திரத்தில் அவ்வுத்தமி அதற்கிசைய அப்போது பிரமாவின் ஏவலினால் பூமாது அங்குவந்து ஸ்ரீராமர் எதிரில் சீதையைத் தன்கைகளா லெடுத்தணைத்துப் புவியைக் கிழித்துக்கொண்டு போயினாள்.

இந்தப்படி பூமாது சீதையை யெடுத்துக்கொண்டு போயினதைக்கண்ட ஸ்ரீராமர் சினங்கொண்டு தவசிகள் முதல் யாவரும் நடுக்கங்கொள்ளக் கோதண்டத்தை வளைத்து, கணைகளைத் தொடுத்துவிடுஞ் சமயத்தில், சிவன், பிரமன், தேவேந்திரன்முதல் முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளுங் கூடி ஸ்ரீராமர் முன்வந்து, அதருமத்தைப் போக்கித் தருமத்தை நிலைநாட்டி எங்களை இரட்சிக்கும் பொருட்டு அல்லவோ, நீர் நர உருவம்பெற்றது? அதைத் தாங்கள் நன்றாயோசித்துத் தங்களுக்குண்டாகிய கோபத்தைமாற்றிக் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். ஸ்ரீராமர் அப்போது அவர்களுக்கு இரங்கி கிருபாநோக்கம்வைத்துச் சினத்தை யடக்கிப் பூமண்டலத்தை பதினோராயிரவருடம் அரசாண்டிருக்கிற காலத்தில், அன்னையாகிய கோசலை மரிக்க அக்கினி சமஸ்காரஞ்செய்து திலோதகம் விடுத்துச் சுகித்திருக்கிறகாலத்தில், எமன் பிராமண உருவங்கொண்டு தன் முன்

வந்து ஆசிகள்கூறி, "நற்குணத்திற் சிறந்த விற்பன விவேகியாகிய உத்தமனே! நானுனக்குச் சொல்லப்போகிற சங்கதிகள் முடியும் பரியந்தம் இங்கு ஒருவரும் வராதிருக்கும்படி நீ செய்பு''மென்ற, மாத்திரத்தில், ஸ்ரீராமர் இலக்குமணனையழைத்து 'தம்பி! இலக்குமணா! இங்கு ஒருவரும் வராதபடிக்கு நீசென்று துவாரத்தில்காத்திரு''வென்று சொல்லியனுப்ப, பிகரொருவரு மில்லாத ஸ்ரீராமர் சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கிறபோது பிராமண உருவமர்ந்த எமன் சொல்லத் தொடங்கினன்:—

"அகிலபுவன கருத்தாவாகிய ஸ்ரீராமா! சிருட்டி திதிசங்கார மூலமாகிய ஐயனே! தேவரீர் பிரமதேவன்வேண்டலால் இராக்கத குலத்தைச் சங்கரிக்கும்பொருட்டு, நராவதாரஞ் செய்தீ''ரென்று சொல்லிக்கொண் டிருக்குமளவில், கோபமே சொரூபமாகக்கொண்ட தூருவாசமாமுனிவர் விரைவாகவந்து துவாரத்தில்நுழையக் கண்ட இலக்குமணர் "முனிவரே! இப்போது உள்ளேபோகச் சமய மல்ல''வென்று தடுக்கத் தூருவாசர் கோபித்து, "உன் குல மற்றுப்போகும்படி சபிப்பே''னெனக்கேட்ட இலக்குமணர் [illegible]ந்த அம்முனிவரை உள்ளேவிட முனிவனைக்கண்ட [illegible]தல் பிராமண உருதரித்துவந்த எமன் மறைந்துபோயினன். தூருவாச மாமுனிவரைக்கண்டு ஸ்ரீராமர்சகல உபசாரங்களுஞ்செய்து மகிழ்ந்து வணங்கி நிற்க நோக்கி,தூருவாசமாமுனிவன் "ஸ்ரீராமா நீ பராபர வத்துவாகிய ஸ்ரீமந் நாராயண''னென்று சொல்லிப்போயினன். உடனே, ஸ்ரீராமர் பிராமணனைக் காணமல் தியங்கி மயங்கி 'தூருவாசமாமுனிவரை உள்ளே விட்டவர்கள் யாவ'ரென்று வினவிய சொல்லைக்கேட்ட இலக்குமணர் விசனமடைந்து, 'அண்ணன்சொல்லை மறுத்து தூருவாசமுனிவரை உள்ளேவிட்ட மாபாவியான யான் இனி இப்பூமியி லுயிருடனிருக்க மாட்டே'னென்றுகருதி இளையவர் சரயுநதியில் விழுந்து ஆதிசேட னுருக்கொண்டு பரம பதத்தை யடைந்தார். இது சங்கதியைக்கேட்ட ஸ்ரீராமர் மிகவுங் கவலையுற்று 'இலக்குமணனில்லாத இப்பூமண்டலத்தில் இனி நானிருக்க மாட்டே'னென்று திடங்கொண்டு, தமது குமாரர்களாகிய குசலவர்களுக்கு விரைவாக முடிசூட்டி, அரசுசெய்ய விதித்து, அநுமானைநோக்கி, "பிரமபதவி பின்பு பெறுவாய்; இன்னுஞ்சில கால மிரு'' என்று விடைகொடுத்து, விபீடணருக்கு "இலங்கைமாநகரத்தை யாண்டிரு''மென்று விடைதந்து பரத சத்துருக்கருடன் சரயு நதியில் படிந்து பரத சத்துருக்கள் சங்கு சக்கரங்களாகத் தன் கரங்களில் வந்திலங்க, தானும் ஸ்ரீமந்நாராயணனுகிக் கருடன்

மேல் துலங்கி, சக்கிரீவன்முதல் வானர சேனைகளுடன் அயோத்திமா நகரத்திலுள்ள யானைகள் குதிரைகள் சிற்றெறும்புமுதல் சகல உயிர்களும் பிரமலோகத்தை யடையும்படி கிருபைசெய்து, தேவர்கள் மலர்மழைபொழிய, அந்தர துந்துமிமுழங்க, விரசையைக் கடந்துபோகையில், சானகிவந்து அடிபணிந்து மருவ வைகுண்டமா நகரத்தை யடைந்தார்.

---

## பலராமாவதாரம்

### துதி.

அலகி லாமறை யாதிய கலையெலாம் பரவும்
மலமி லாதபேர் வானநாட் டையனை யானை
விலகி லாமன விண்டுவை வெம்பகை முடித்த
மலமி தாலுறும் புத்திரன் மலரடி பணிவாம்.

பாசிலாத அப்புவியை யாளுகின்ற மன்னர்களில் மிகவுங்கீர்த்திபெற்ற சந்திர குலத் தரசனாகிய போசனென்பவன் வடமதுராபுரியை நீதி வழுவாது அரசு புரிந்துவந்தான். அவ்வரசனுக்கு உக்கிரசேனனென்றும் தேவகனென்றும் இரண்டு புதல்வர் பிறந்தார்கள். இவர்களுக்குத் தகுந்தகாலத்தில் சௌளம் உபநயனம் கல்விப் பயிற்சி வில்வித்தை யானையேற்றங் குதிரையேற்ற முதலான சகலவித்தைகளிலும் தேர்ச்சி உண்டாக்கி, விவாகம்முடித்து உக்கிரசேனனுக்கு மகுடஞ்சூட்டி, போசமாராஜன் திருநாட்டையடைந்தான். இவ்வுக்கிரசேனமாராஜன் சத்தியம், பொறுமை தயை முதலாகிய நற்குணங்கள் நிறைந்து மநுநீதி தவறாமல் வட மதுராபுரியை ஆண்டுவருகிற காலத்தில், ஓர் புத்திரன் பிறந்தான். அவனுக்கு கஞ்சனென்று திருநாமமிட்டு வளர்த்து வந்தார்கள். இச்சிறுவன் கொலை கட்களவு காமம் பொய்முதலாகிய தீக்குணங்களெல்லாந் திரண்டு ஒருருவமாகி, அதருமம் நாளுக்குநாள் மேலிட்டுப் பெருகவும் தருமம் நாளுக்குநாள் தேய்ந்து சுருங்கவும் மாயவஞ்சம் பெருகவே வளர்ந்தனன். தருமன் நீதி குன்றவே தவழ்ந்தனன். எங்குந் திரண்ட நோய்கள் உயர்ந்திட நடந்தனன். மேலாகிய நன்மார்க்கங்கள் பழுதுறச் சினமுடையவனு யிருந்தனன். மேலும், இவன் தந்தவக்கிரன், சாலுவன், சிசு



பாலன், சராசந்தன் முதலான துட்டர்களை நேசித்து, மகததேச வரசன் புதல்வி களிருவரை மணந்து, மனம்போன போக்காய் நடந்துவருகையில், இவனுக்குபின் எட்டுப் பிள்ளைகளைப் பெற்று வளர்த்துப் பெண்பிள்ளை யொன்றேனு மில்லையே! என்று ஏக்கங் கொண்டிருந்த உக்கிரசேன மாராசன் தன் தம்பியாகிய தேவனுக் குதித்த பெண்பிள்ளையைத் தன் புதல்வியெனப் பாவித்து மிகவும் பிரியமாய்த் தேவகியெனத் திருநாமமிட்டு வளர்த்துவந்தான். அச் சிறுவர்களும் மூன்றாம்பிறைச் சந்திரனைப்போல் நாளுக்கு நாள் விருத்தியடைந்து சாமுத்திரிக சாத்திரவிதிப்படி சகலஇலட்சணங் களும் பொருந்தி, செந்தாமரை மலரிற்றோன்றிய மகாலட்சுமிக்கு நிகரென தேவகி விளங்கிடும் நாளில், உக்கிரசேன மாராசன்கண்டு பரிவினால் 'இவளுக்குத்தக்க நாயகனைத்தேடிமணமுடிக்கவேண்டு' மென்றுகருதி, சபைக்குவந்து சிங்காதனத்தின் மீது வீற்றிருந்து மந்திரிகளுடன் யோசனை செய்கிறபோது மதியிற் சிறந்த மந்திரி யொருவன் அரசனைநோக்கிச் சொல்லுகின்றான்:—

"கேளும் எங்களையாண்டு ரட்சிக்கும் சந்திரகுலத்தோன்றலே சாருகதேசத் தலைவனாகிய சூரசேன மாராசன் புதல்வன் வசுதேவ னெனும்வீர னாச்சரியப்படும்படியானவடிவமர்ந்தவன்விண்ணிலும் மண்ணிலும் அவனுக்கு நிகரானவர்களில்லை ஆதலால் அவன் தங் கள் புதல்விக்குத்தக்க நாயகனென்று சொல்லிய மந்திரியின் மொழியைக்கேட்டு, தேகம்புளகித்து வசுதேவரையழைப்பித்து, சுபலக்கினத்தில் தேவகியைக்கொடுத்து மணமுடித்து, ஆயிரத்தெ ண்ணூறு இரதங்கள் நானூறு யானைகள் பதினாயிரம் குதிரைகள் இருநூறு தோழிப்பெண்கள் இன்னும்பலவித சீதனங்களைத்தந்து, வதூவரர்களை இரதத்தின் மீதேற்றிக் கஞ்சன் இரத சாரத்தியஞ் செய்ய, அனேக மேளவாத்தியங்கள் முழங்க, வடமதுராபுரியை வலமாக வருகிறபோது, ஆகாயத்தில் நின்றும் அசரீரி கஞ்சனை நோக்கி "அடாகஞ்சா! இத் தேவகியின்மக்களி லெட்டாம்பிள்ளை உன்னுயிரை வாங்குவன்" என்ற மாத்திரத்தில், கஞ்சன்திடுக்கிட் டுக் கண்களில் அக்கினிப் பொறிபறக்கக் கோபங்கொண்டு, "இவ ளேநமக்கு பகையாளியாயினு" ளென்றுகருதி, இடையிலிருந்த வாளையுருவிக் கையில்பிடித்துக்கொண்டு இரதத்தின்மேல் தட்டுக் குச்சென்று, தேவகியின் நீண்டகுழலைப்பற்றி யக்கொடியபாவி வெட்டிடத் துணிந்த காலத்தில்,வசுதேவர் கஞ்சனைநோக்கி, "மை த்துனரே! தீவரப்படாமல் கொஞ்சம் பொறுமையை வகித்திரும். உலகத்தில் அற்பர்செய்யுந் தொழிலை உம்மைப் போலொத்த மே

லோர்கள் செய்யத்துணிவது நீதியல்ல. அந்தணர்களைக் கொன்றவர்கள் பெண்களை மடித்தவர்கள் நிரரநரகத்தில்வீழ்வார்களென்று பலநூல்கள் முறையிடுவதைமறந்து இக்கொடிய காரியஞ்செய்ய நீமுயல்வது தகாது. அசரீரிசொல்லிய மொழியினாலன்றோ உமக்கித்தனை கோபமுண்டாயிற்று? நினதுயிர் மாயாவண்ணம் யான் ஒரு புத்திசொல்லுகிறேன். அதென்னவெனில், இந்த தேவகிவயிற்றில் பிறக்கும் எட்டுபிள்ளைகளையும் கொண்டுவந்து உமக்குக் கொடுக்கிறேன். அவர்களை வேண்டுமானால் கொன்று உமதுயிரைக் காப்பாற்றிக்கொள்ளும். இப்பெண்ணைக் கொல்லாமல் விட்டுவிடு" மென்றும், "அரசனே! உம்முடைய அருளொக்கத்தினால் நாங்கள் வாழ்ந்திருப்பதைவிட்டு, உம்முயிரைப்போக்க நாங்கள் நினைப்போமா? ஒருகாலும் நினைக்கமாட்டோம். அப்படியல்லவென்று உம்மைக் கொன்று மடிக்கும்பொருட்டு, இம் மங்கையின்வயிற்றிற் பிறக்கும் மைந்தர்கள் விளங்கி, எங்களுக்கென்ன பலனைத் தருவார்கள்? உயிருடன் நீர் இருந்தால் நாங்கள் பலவிதத்திலும் பயனைப் பெறுவோம். இது உண்மையாக நம்பு"மென்று வசுதேவர்கூறியமொழியைக்கேட்டு, கஞ்சன் எல்லையில்லாத மகிச்சியடைந்துதேவகியைக் கொல்லாமல் சந்தோடத்துடன்சென்று அரண்மனை சேர்ந்தான்.

இங்கே தேவகியும் வசுதேவரும் தங்கள் நாட்டை யடைந்து இரதியும் மதனும்போலக் கூடிவாழ்ந்து, ஒரு புதல்வனைப்பெற்றார்கள். அம்மகனை எடுத்துக்கொண்டுபோய் வசுதேவர் கஞ்சனிடங் கொடுக்க, அக்குழந்தையின் வடிவழகையும் வசுதேவருடைய சத்தியவாக்கையும் மிகவாக மதித்து, "வசுதேவரே! மறுபடியும் உம்முடைய புதல்வனை யெடுத்துக்கொண்டுபோம்; இவனாலெனக்கொருதீங்கு மில்லை; இவனுக்கு எட்டாவது புத்திரனல்லவோ எனக்கு மிகுந்த பகைவன்; அவனைப்பிடித்து நான் மடியச்செய்கிறேன்" என்றுசொல்லிப் பாலகனை வசுதேவர் கையில்கொடுக்கப் பெற்றுக்கொண்டு வசுதேவர் கஞ்சனிடத்தில் விடைபெற்று அவ்விடம்விட்டுப் புறப்பட்டு நடந்து, தன்னரண்மனைபுகுந்து, அந்தப்புரஞ்சேர்ந்து மனைவியின்கையில் பாலனைக்கொடுத்து, நடந்த விருத்தாந்தத்தைத் தெரியச்சொல்லி, அப்பாலகனுக்குச் சாதகருமமுடித்து, சுருதகீர்த்தியென்னும் நாமகரணஞ்செய்து, வளர்த்துவந்தனர். பின்பு தேவகி ஒன்றின்பின்னொன்றாகப் பலவருடங்கழிய, ஐந்துபிள்ளைகளைப்பெற்று, தேறினமனத்துடனிருக்க, வசுதேவர் மிகமகிழ்வுடன் உரோகணிமாதைமணந்து அவளுடன் இன்பசுகமடைந்து விதிப்படி வாழ்ந்திருந்தான். அக்காலத்தில் திரிலோக சஞ்சாரியா

கிய நாரதர் கஞ்சனுடைய சமுகத்தில் வரக்கண்டு, அவரை எதிர்சென்று அழைத்துவந்து, தகுந்த ஆசனமளித்து, அவர் திருவடிக்கு விதிப்படி பூசித்துத் தூபதீபமளித்து, தீர்க்க தெண்டனிட்டெழுந்து போற்ற, கொடியோனுக்கு நாரதர் சொல்லுகின்றார்:—

"கேளாய். கஞ்சமாராசனே! உனக் கனுகூலமாகிய ஒரு காரியத்தைச் சொல்லுகிறேன். இது உண்மை. இதனை உன்மனதில் வைத்துக்கொள். அது யாதென்றால், முன்னொருநாள் உக்கிரசேனமாராசன் வேட்டையாடுவதற்குக் கானகமேவி யிருந்தபோது, அவன்மனைவி பூம்பாகி மூன்றுநாள் ஸ்நானஞ்செய்து அன்றுகடந்து, நான்காவதுநாள் நவரத்தினங்களிழைத்த பொன் மாளிகைக்குள் புகுந்து பஞ்சணையின் மீதிருந்து, விரும்பித் தன் கணவனாகிய உக்கிரசேன மாராசனைநினைந்து, எதிர்பார்த்து வருந்தி இருக்குங் காலத்தில் கந்திருவர்களில் ஒருவன் தருமனென்பவன் அம்மாதின் மனத்தையறிந்து, உக்கிரசேன மாராசனைப்போல உருவங்கொண்டு நடந்துவரக்கண்டு, அம்மாது மகிழ்ந்து எதிர்சென்றழைத்து வந்து உபசரித்து, நயவசனங்கள் மொழிந்து, இன்பமடையும்பொருட்டு நாயகனையணுகி இருந்தபோது, தன் கணவன் பழக்கமாகச் செய்யும்படியான குறிகளில்லாததால், அவ்வணங்கு திடுக்கிட்டு பயந்து, இவன்யாவனோ, வென்று தியங்கிமயங்குகிறபோது, அக்கந்தருவன் ஆகாயத்தில் தோன்றினான். அவனைக்கண்டு, வஞ்சித்து வந்து என்னைக்கூடிக் கற்பழித்தாயாதலால், அடாநீசனே! நீ பெற்றவுருக்கொண்டு வந்தனையோ அவ்வுருவத்திற் குடைய பிள்ளையினால், நீமடிவாயென்று சாபமிடப்பெற்று, கந்தருவன் விசனத்துடன் போயினான். அக்கந்தருவன் சுதன்யென்று நினது அன்னை சொல்ல, உக்கிரசேன மாராசன்கேட்டு மனத்துயரடைந்து, சோதிடர்களால் சாதகருமம் வழங்கியபோது அவர்களால் சொல்லப்பட்ட நினது கெட்ட குணங்களைக் கேட்டு உக்கிரசேனன் பின்னுங் கவலையுற்றான். அன்றியும், உக்கிரசேனன் தேவன் வசுதேவன் தேவர்கள் விஷ்ணுமுதலானோருடன் போர்செய்து மடிந்தகாலநேமியென்னும் அசுரனாகிய நீ, கஞ்சனாகப்பிறந்தாய் ஆகையால், இவர்கள், அவர்களைக் கொல்வதும், அவர்கள் இவர்களைக் கொல்லுவதுமாக இருக்கிற விருத்தாந்த மனைத்தையும், நானறிந்தமட்டும் விரித்துக் சொன்னேன். இதுவுமன்றி, நினதுதங்கை தேவகிபிள்ளைகளுக்குள் ஒருவன்வந்து உன்னை மடித்துக் கொன்றுவிடுவா"னென்று சொல்லி நாரதமாமுனிவர் போயினார்.

பின்பு கஞ்சன் தனக்குத்தானே இந்தப்படி யோசிக்கிறான்: 'நமக்குத் தாயும்பகை; தந்தையும்பகை; மற்றுமுள்ள பந்துக்களும்பகை; தங்கையும்பகை; அவள்வயிற்றிலுதிக்கும் பிள்ளையும் பகை; யாவரும் பகைவராயிருக்கிறார்கள். இதுவென்ன ஆச்சரியம்' என்றுநினைத்து அகம்வாடி வியர்த்து விரைவாகவெழுந்து திடுதிடென்றோடி, தேவகியின் நீண்ட மனைக்குள் புகுந்து, கண்களில் நெருப்புப்பொறிபறக்க வெகுண்டு, அவள் பெற்றபிள்ளைகள் ஆறு பேர்களையும்பிடித்துப் பற்களைக்கடித்து ஆவியைப்போக்கி, வசுதேவருக்குக் கால்கரங்களில் விலங்குபூட்டிட அவர் துயரப்படக்கண்டு தேவகி மனவருத்தங்கொள்ள, அவளுக்கும் விலங்குபூட்டி உக்கிரசேனனையும்பிடித்துவிலங்குபூட்டி, கடுங்காவலிலமைத்து 'இன்னும் யாரிருக்கிறார்க'ளென்று யோசித்துக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் உரோகணிக்கு வசுதேவர் சைகைகாட்ட, அம்மாது திடுதிடென்றோடி ஆயர்பாடியிற் புகுந்து, நந்தகோபன்மனையிற் சென்றிருந்தாள்.

பின்பு கஞ்சன் உக்கிரசேனன் உருக்கொண்டுவந்து, தன்னைச் சேர்ந்த கந்தருவருடன் யுத்தஞ்செய்து, அவனைமடித்து எண்டிசையும் செயங்கொண்டு, மகுடம்புனைந்து சிங்காதனத்தில் வீற்றிருந்து, வஞ்சனை சூது கொலைமுதலாகிய துட்டசெய்கைகளை மலைபோலத் தினந்தினஞ்செய்துக்கொண்டு, இருக்கிறகாலத்தில் இராக்கதர்கள் நீதிநெறியைக்கடந்து அரசர்களை நோகப்பண்ணி, உலகத்துக்கெல்லாம் வேதனை யுண்டாகும்படி அக்கிரமஞ்செய்ய, அதருமமேலிட்டு தருமங்குறைந்தமையால், பூமிபாரத்தைச் சுமக்கமாட்டாமல் பூமாது தேகமெல்லாம் மெலிந்து, மனஞ்சோர்வடைய துக்கப்பட்டு, துட்டர்களாகிய இராக்கதர்களை வேரறச்செய்யவேண்டியதற்குத் தக்கயோசனை யென்ன என்றுகருதி முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளும் புடைசூழ்ந்து போற்றும் பிரமதேவன் சபைக்குச்சென்று, சொரூபந்தரித்து நின்றனள். அவனிமாது ஆவின்வடிவமாய் வரக்கண்ட தேவர் தேவேந்திரன் முனிவர்கள் பிரமன்முதல் யாவருந் திரண்டெதிர்சென்று ஏத்திப் போற்றிப்பணிந்து, முலைப்பாலைத்தந்து காப்பாற்றும் பசுவைக்கண்டு மகிழும் கன்றைப்போல மனதுருகிச் சொல்லுகின்றார்கள்:—"அன்னையே! நீவந்தகருத்தையறிந்தோம். அதுயாதெனில், வல்லமையில் மிகுந்த அரக்கர்கள் மானிடரிடத்தில் அகமிரமங்கள்செய்ய, அதினால் மெலிந்து இவ்விடம்வந்தாய் உனக்கு நேரிட்டிருக்கும் இடர்களைபோக்குவதற்கு எங்களாலாகாது. ஆத

லால், மனக்குறைகளைத் தீர்ப்பவனும், செகமுழுவதையுங் காப்பவனும், மாபலியினிடஞ்சென்று மூன்றடிபூமி தாவென்றுக் கையேந்தி யிறப்பவனும், அண்டாண்ட சராசரங்கள் யாவற்றையும் உண்டு உமிழ்ந்து பாலிக்கும் எம்பெருமான் நினதுபாரத்தை நீக்கி இரட்சிக்கும் பெருமையைப் படைத்தவனுகையால், அம்மாயவன் அமர்ந்திருக்கும் பாற்கடலினிடத்திற்கு நாமனைவோரும்போதல் நன்று என்றுசொல்லி; பூமாதுடன் யாவரும் பாற்கடலைச்சேர்ந்து பகவானைப் பலவிதங்களாகப்புகழ்ந்து கொண்டாடியபோது, சகதீசன் துயிலொழிந்து கருடன்மீது அமர்ந்து வலமார்பினில் கமலை விளங்கப் புறப்பட்டார். அப்போது ஆகாயத்தில் துந்துமிமுழங்க, சூரியனும் சந்திரனும் தியங்கிமயங்க, சூல்கொண்ட மேகநிறத்தையொத்த திருமேனி பிரகாசிக்க, சங்கு சக்கரம் தண்டுவாள் சாரங்கம் கரத்திலிலங்க, அனைவருங்காணத் தோன்றினன். அச்சேவையைத் தரிசித்து யாவரும் தங்களைமறந்து ஆனந்தக்கண்ணீர்விட்டுப் பாடியாடினர்கள். அதுசமயத்தில் பசுவின்வடிவங் கொண்டிருந்த பார்மகள் எம்பெருமான் திருவடியில்விழுந்து இறைஞ்சியெழுந்துநின்று கைகூப்பி, "என்மனதிற்கினிய மணாளரே! துட்டராக்கதர்கள் இப்பூமியெங்கும் நிறைந்து உண்மையைப் பேசமாட்டார்கள். பொய்வசனங்களையே பிதற்றுவார்கள். வஞ்சம் மாயம் கொலைமுதலாகிய அக்கிரமங்களைச் செய்வதற்குச் சிறிதேனும் மனங்கூசமாட்டார்கள். இப்படிப்பட்ட கொடியதுட்டர்களைச் சுமக்கவும் அவர்கள் செய்யும்படியான அக்கிரமங்களை நினைக்கவும் என்தேகம் நடுங்குகிறதே! முன்னம் சானகியை யெடுத்துக்கொண்டுபோய் அசோகவனத்திலிருத்திக் கடுஞ்சிறைவைத்த பாவியாகிய இராவணனை வதைத்து மீண்டும் சானகியை கைப்பிடித்தாண்ட ஸ்ரீராமர் அடியாளைக் கைசோர விட்டால், யானெவ்வண்ணம் உய்வேன்! தேவரீரைவிட இவ்வேழைக்கு கதிவேறில்லையே!" என்று கண்ணீர் விட்டுக் கதறியழுவதை நோக்கி, விஷ்ணுவானவர்

"கேளாய் ஆரணங்கே! வசுதேவருக்கும் தேவகிமாதுக்கும் யான் மைந்தனுகப் பிறந்து, பாவிகளனைவரையும் பற்றறுத்து, நினக்குற்ற பூபாரத்தைப் போக்குகிறேன்." என்று பகவான் திருவாய்மலர்ந்தருளக்கேட்டு, புவிமாது வாசவன் கமலாசனன் முதலானயாவரும் அப்போது பரமானந்தமடைந்து, ஒருவருக்கொருவர் மலர்களை வாரியிரைத்துக்கொண்டு வெறிகொண்டவர்கள் போல ஆடினர்கள். இந்தப்படியாகத் தேவர்கள் முனிவர்கள் மற்றியாவர்களும் வணங்கி இணங்கிப் போற்றித் தன்னை மறந்தாடு

ின்ற அனைவரையுங் கடாட்சித்துப்புவிமாதைத்தேற்றி, "உங்கள் உலகத்திற்குப் போங்க"ளென்று விடைதந்து, மாதவன்பாற்கடல் நடுவிற்சென்று, தனக்குச் சயனமாகிவிளங்கும் அனந்தனைநோக்கி ஒருவார்த்தை சொல்லுகிறன்.

"கேளாய் சருப்பராசனே! கற்பினிற் சிறந்த தேவகியின் வயிற்றில் ஏழுமாதந்தங்கி, கருப்பமாகியிருந்து பின்பு உரோகணி வயிற்றில் மூன்றுமாதம் பொருந்திப் பிறந்து வளரக்கடவாயென்று முன்சொல்லி அனுப்பி, மாயையை வரவழைத்து 'ஆயர்குலக் கொடியாகிய யசோதையின்வயிற்றில் நீபோய்த்தங்கிப் பிற்பாடு தேவகியின்வயிற்றி லிருக்கும் ஏழுமாதத்திய பிண்டத்திற்கு யா தொரு அபாயமும் நேரிடாமல் உபாயமாய் வெளிப்படுத்தி உரோ கணியின் வயிற்றினிற் சேர்ந்திடு" வென்று சொல்லிய இலட்சுமி நாயகன் சொற்படியே மாயையானவள் சென்று தேவகியின்வயிற் றில் ஏழுமாதத்திய கருவதாய் விளங்கும் சிசுவை ஒருவருக்கும் புலப்படாமல் தந்திரமாய் வெளிக்கு வாங்கி எடுத்துக்கொண்டு போய், அந்த மாயையானவள் உரோகணியின் வயிற்றிற் பொருந் தச்செய்து, தான்சென்று யசோதையின் கருப்பையிற் றங்கினள். மற்ற மூன்றுமாதமுங் கடந்தபின்பு உரோகணிதேவி பிள்ளையைப் பெற்றாள் அப்பிள்ளை பூமியில் எந்தப்பாகத்தில் விழுந்ததோ அந் தப்பாகம் தாழ்ந்து மற்றொருபாகம் உயர்ந்து கொண்டது. இத ளுல், அப்பிள்ளை மிகுந்த பலமுடையவனென்று கருதிப் பலராம னென்று ஒருநாமமும் தேவகியின் வயிற்றில் ஏழுமாதமும் உரோ கணியின்வயிற்றில் மூன்றுமாதமும் தங்கிப் பிறந்த இக்காரணத் தால் அச்சிசுவுக்கு சங்கர்ஷணனென்று இரண்டாவது நாமமும் கலப்பையை ஆயுதமாகப் பெற்றவனுதலால் அலாயுத னென்றும் மூன்றுதிருநாமமுண்டாகியது. இதற்குபின் நந்தகோபன் தனக் குமெத்த நேசனுகிய வசுதேவன்மனைவி ரோகணிபெற்றபிள்ளைக் குச் சாதகருமம்செய்து முடித்து, அனேக தானதருமங்களைச்செ ய்து மிகவும் பிரியமாக இச்சிறுவனை வளர்த்து, தக்கவயதில் சௌள ளம், உபநயனம் முதலான கருமங்களைச்செய்து முடித்து, அப்பா லனை அன்பாகப் பாதுகாத்து வந்தான். பலராமருஞ் சிலநாள் போக்கி, சாந்திபரிடத்திற் சென்று வணங்கி மூன்றுமாதத்தில் நான்குவேதம் பஞ்சகாவியம் ஆறுசாத்திரம் பதினெண்புராணம் இவைகளை யெல்லாம் ஓதித் தேர்ச்சியடைந்து, மிகவும்துட்டனு கிய பிரலம்பாசூரனை வதைத்து எவ்வனபருவ மடைந்திருக்கிற போது, ஆவிர்த்தக தேசத்திற் கிறைவனுகிய இரேவகமகாராசன்

மகாலட்சுமிக்கு நிகராகிய சுபலட்சணங்கள் வாய்ந்த கன்னிகையைப் பெற்று வளர்த்து, வேதநெறியினை புடைய மறையோர்கள் ஆசிகூற, மகிழ்ந்திருக்கிறநாளில், இரேவதி கன்னிகை மங்கைப் பருவ மடைந்தகாலத்தில், இரேவகன் இம்மங்கைக்குத் தக்க நாயகனை உலகமெங்குந் தேடிக் காணுமல், இம்மங்கையுடன் இரதத்தின்மே லேறிக்கொண்டு பிரமதேவன் சபைக்குச் சென்றான். அங்கே நவரத்தினங்க ளிழைத்த சொன்னமண்டபத்தில் இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வாயு, வருணன், குபேரன்; ஈசானன், என்னும் அட்டதிக்குப் பாலகர்களுந்தொழ மங்கைபாகன், நாகர், சித்தர், வித்தியாதரர், தேவர், சாரணர், இயக்கர், சூரியன், சந்திரன், கருடர், கந்தருவர், கின்னரர், கிம்புருடர், தும்புரு, நாரதர் முதலாகிய முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணுயிர முனிவர்களுஞ் சூழ்ந்து நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணுதி இதிகாசங்களினுல் பலவாறு புகழ்ந்து வாழ்த்த ஆர கிரீடகேயூரம் முப்புரிநூலுந் துலங்க, பிரகாசம் பொருந்தி தேக சாயை விளங்க, பங்கயவாசனத்தின்மீது சதுர்முகன் வீற்றிருந்து தேவர்கள் முதலானோருக்கும் விடைதந்து தனது தொழிலாகிய சிருட்டியில் முயன்றிருக்கும்போது, இரேவகமாராசன் இரேவதியுடன் சென்று பிரமதேவன் திருவடியில் விழுந்துவணங்கித் துதி செய்து போற்றக்கண்ட பிரமன் அவ்வரசனை நோக்கி நீர் இங்கு வந்த காரணம் யாதென்றுவினவ, இரேவகன் பிரமனைநோக்கி "எங்களைச் சிருட்டிசெய்த எந்தையே! என்றனுக்குப் பிரிய புதல்வியாகிய இம்மங்கைக்கு தக்கநாயகனை மண்ணுலகிற் காணுமல் இவளுக்கு நாயகனுக எந்த ராசனைச் சிருட்டிசெய்திருக்கிறீரோ அதைத்தெரிந்துக்கொள்ளும் பொருட்டுத் தங்களிடத்திற்கு அடியேன் வந்தேன்" என்று சொல்லக்கேட்ட நான்முகன் சிரித்துச் சொல்லுகிறுன்.

"கேளாய் இரேவக மாராசனே! நீ பூலோகத்தைவிட்டு என்னிடம் வந்துசேர்ந்த இப்போது திரேதாயுகங் கடந்து துவாபரயுகம்பிறந்துவிட்டது இதைவிட்டு நீ பூலோகத்திற்குப் போவதற்குள் துவாபரயுக அந்தியமாகும் அங்கு தனக்கு நிகரில்லாத புய பலபராக்கிரமத்தைப்பெற்ற பலராமருக்கு நின்கன்னியைக்கொடுத்துமணம் செய்வித்துச் சுகமுடனிரு" என்று சொல்லி விடைதரப் பெற்றுக்கொண்டு இரேவகமாராசன் தன்புதல்வியுடன் இரதமேறிப் பூலோகத்திற்கு வந்து இரங்கி மூன்று உலகங்களிலும் இல்லாதபோகபாக்கியங்கள் நிறைந்த துவாரகாபுரத்தையடைந்து





உரோகணியின் சுதனாகிய பலராமனை நோக்கி "சக்கிரவர்த்தியாகிய பலராமரே பிரமதேவன் என்னுடன் சொன்ன மொழி பிசகாமல், இம்மண்ணுலகத்தின்கண் நிகரில்லாத அழகுவாய்ந்த பொற்கொடியையொத்த என் புதல்வியை நினக்குத்தந்தேன் என்றரேவக மாராசன் மொழியினைக்கேட்ட பலராம சக்கிரவர்த்தி, ஆகாயத்தை யளாவிய உயரமாய் நீண்டு நிற்கும் அம்மங்கையைப் பார்த்து தன்கையில் விளங்கும் அலாயுதத்தை ஆகாயத்தில்தூக்கி அவள் தோளில்மாட்டி வலிக்க, அம்மங்கை உயரம் நீங்கி குள்ளமாயினாள் இவ்விந்தையைக்கண்டு ஆச்சரியமடைந்து மலர்மாரிபொழிந்தனர் தேவர்கள்; துந்துமிமுழங்கியது. வசுதேவர் மகனை வாரித்தழுவி மகிழ்ந்தான். தேவகியும் உரோகணியும் யசோதையும் சந்தோடித்தார்கள். அங்குவந்திருந்த பிராமணர்களும் முனிவர்களும் பலஆசிகள் கூறினார்கள். பணிலம், முரசு, பேரிகை, காகளம், சின்னம் முதலான வாத்தியங்கள் முழங்க, கின்னரிதாளங்கள் ஆர்ப்ப, வேலையொத்தக் கண்களையுடைய மாதர்கள் வீதிகள்தோறும் நவரத்தினங்களினால் ஏராளமாகக் கோலங்களெழுதித் தங்கள் மாடங்களை யலங்கரித்து அடங்கா மகிழ்ச்சிகொண்டிருந்தார்கள். பூரண கும்பங்கள் நிறைத்து, வாழைகமுகு முதல் மலர்களினால் அலங்கரித்து, தீபங்களேத்திப் பலமாதர்கள் சோபனம் பாடினார்கள். மாப்பிள்ளையாகிய பலராமருக்கு மங்களஸ்நானஞ் செய்வித்து, ஆடை யாபரணங்க ளிலங்க அமைத்து, இரேவதிமங்கைக்குத் திருமஞ்சனஞ் செய்வித்து, அணிபணிகளைப் பூட்டி மைதீட்டி இருவரையும் மணவறையின் மீதிருத்தி முனிவர்களும் அந்தணர்களுங்கூடி ஓமம்வளர்த்தி ஆகுதிநிரைத்தார்கள். அப்போது இரேவதியின் கழுத்தில் சங்கை யொத்த திருமேனியையுடைய பலராமர் மங்கலநாண்சாற்றி மங்கைமார்கள் அனைவரும் மகிழ அம்மிமிதித்துத் தீவலம்வந்து, ஆகாயத்திற் றோன்றும் அருந்ததியைத் தரிசித்து, அந்தணர்கள் ஆசிகூற, தவமுனிவர்கள் பல்லாண்டிசைக்க மங்களவாழ்த்துபெற்றுப் பலராமர் தாய்தந்தையர்களை வணங்கினார். இரேவதியும் மாமன் மாமிகளைப் பணிந்தும் பலராமருடன் வணமிகுந்த மலர்களை யணிந்து இன்பமடைந்து பிரியமாகச் செல்வம் நீதி குன்றாமல் துவாரகையில் இரேவதி மங்கையுடன் கூட இன்பங்களையடைந்து மிகுந்த களிப்புட னிருந்தார்.

---

## கிருட்டிணவதாரம்.

### துதி.

வானுலகு மண்ணுலகு மறையு மோரேழ்
வைப்புமரு னெறியும்வை திகமு மோங்கத்
தானவர்தங் குலமழியப் பார தப்போர்
தமைநடத்த வாயர்பா லவத ரித்த
வானவனைப் பார்த்தனுக் குபதே சித்த
வள்ளலைமா தவனைமறை நர்தன் றன்னைக்
கானமருந் துளவணியு மொப்பி லானைக்
கண்ணனைமா வண்ணனையாங் கருது வாமால்.

ஸ்ரீமகாலட்சுமியை மார்பினிற்றரித்த விஷ்ணுவானவர் அரவரசனை தேவகிவயற்றி லுதிக்கும்படி யனுப்பிப் பின்பு பாற்கடலை நோக்கி நீ ஆயர்பாடியிற்சென்று எண்ணிலாத பசுக்கூட்டங்களாக அவதரிக்கக் கடவாயென்று கிருபைகூர்ந்து அனுப்பி, அண்டர்களை நோக்கி 'நீங்கள் அவனிக்குப்போய் முனிவர்கள் மரபினில் யாதவகுலத்தில் அவதரிப்பீரென்று அனுப்பின காலத்தில், பிரமதேவன் அட்டவசுக்களில் முதல்வனாகிய துரோணனென்பவனையும் அவன் மனைவியாகிய தரையென்பவளையும் பார்த்து, மாதவன் தேவகிவசுதேவனுக்குப் புதல்வனாய்ப் பூதலத்தினி லுதிக்கப் போகிறபடியால், நீங்களிருவரும் யாதவகுலத்தில் நந்தகோபன் யசோதையாக அவனியிற்சென்று அவதாரஞ் செய்யுங்க'' ளென்று சொல்லினான். அவன்மொழிப்படி அவ்விருவர்களு மிகுந்த சந்தோடத்துடன் அவதரித்தார்கள். அந்த யாதவ



குலத்தில அணடர்களும் அவர்கள் மாதர்களும் கோபாலரும் கோபிகளுமாய் வந்தவதரித்து, பகவான் கட்டளைப்படி பாற்கடலானது கணக்கில்லாத கோகுலங்களாக அவதரிக்க, அவற்றைப்பாதுகாத்துக்கொண்டு சீவிப்பதனால், அண்டர்களுக்குக் கோபாலர்களென்று நாமமுண்டாயிற்று பெண்களெல்லாம் பசுக்களின்பாலைக் காய்ச்சித் தயிர்வெண்ணெய் மோர்படுத்தி விற்பனை செய்வதால், அவர்களுக்குக் கோபிகளென்ற திருநாமமுண்டாயிற்று இவர்கள் வசிக்கும் ஊருக்கு ஆயர்பாடியென்று பேர்வழங்கியது.

இந்தப்படியாய் யவரும்வந்து அவதரித்துப் பசுக்களும் விருத்தியடைந்து செழித்துவர, அந்த ஆயர்பாடிக்குச் சிற்றரசன் நந்த

கோபன் தருமம் நீதிகுன்றமல் ஆயர்பாடியைப் பாதுகாத்துக் கொண்டு கஞ்சனுக்குப் பகுதிசெலுத்தி வந்தான், இப்படிக்கிருக்கிற போது விஷ்ணுவானவர் தேவகியின்வயிற்றில் தங்கப் பத்து மாதமும் பூர்ணமாகி யக்ஷகின்னர கிம்புருட கருடகந்தருவசித்த வித்தியாதராதி முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் வேத சுருதிகளினால் கொண்டாட துட்டர்கள் உயிர்துறக்க இட்டர்கள் மேலு மேலும் செழிக்க மாசங்களில் அதிசிரேட்டமாகிய ஆவணிமாதத்தில் புதவாரத்தில் கிருட்டினபட்சத்தில் அட்டமியும் உரோகணி நட்சத்திரமுங் கூடிய நான்காம்பாதத்தில் அமுதயோகத்தில் கௌலவா கரணத்தில் இடபலக்கினத்தில் நடுராத்திரியில் வசுதேவரும் தேவகியுங்கண்டு திருவடிகளுக்கு அருச்சனைபுரியவும் ஆகாயத்தினின்றும் தேவர்கள் பாரிசாதமலர்களையிறைக்கவும் அவதாரம்பண்ணினார்.

மேலும், பகவான் அவதாரஞ் செய்த காலத்தில் கிரகங்கள் ஒன்பதும் எந்தெந்த இராசியில் நின்றிருந்த தென்றால், இலக்கினத்தில் குருவும் சந்திரனும், கடகத்தில் இராகும்; சனி துலாத்திலும் கேதுவும் அங்காரகனும் மகரத்திலும் ஆதித்தன் சிங்கத்திலும் சுக்கிரனும் புதனும் கன்னியிலும்; தங்கிய சுபமாச சுபவார சுபதிதி சுபநட்சத்திர சுபயோக சுபகரண சுபக்கோள்கள் அமைந்த சுபவோரையில் நீலமேக நிறத்துடன் அவதாரஞ் செய்தார். எந்த ஊரில் என்றால் மிகவுஞ் சிரேட்டமாகிய இராசதானியாகும் வடமாமதுரையில் கணக்குக்கடங்காத மகிமைகளையுடைய திருமாது மணாளன் சிறுபிள்ளை வடிவமாகியுஞ்சகலவுலகங்களையும் தன்வயிற்றிற்குள் வைத்துக் காத்துக்கொண்டும், இராசச தாமத சாத்துவிகமென்னும் முக்குணங்களுக்கும் மேற்பட்ட சுத்த சத்துவகுணநிதியாகிய பகவான் கிருட்டின மூர்த்தியாகி அவதாரஞ்செய்து, தேவகி வசுதேவருக்கு சேவைதந்தார். அச்சேவையில் ஈடுபட்ட தம்பதிக ளிருவரும் ஆனந்தம் பிரமானந்தம் பரமானந்தத்தை யடைந்து, விராட்டுச் சொரூபத்தைச்சேவிக்க அவர்களால் முடியாமல், கண்களை மூடிக்கொண்டு பலவிதமாகத்துதித்து முன்போலக் குழந்தைவடிவமாகி யிருக்கும்படி வேண்ட, அவ்வாறே பகவானும் சிறுகுழந்தை வடிவமாகிப் பழயபடி சேவைதந்தார். குழந்தையுருவமாகிய பகவானை நோக்கி தேவகி மொழிகின்றாள். "கனவான்களாகிய யோகீசுரர்களுக்கும் தவமுனிவர்களுக்கும் ஞானக்கண்ணினால் தேவரீருடைய விராட்டுச் சொரூபத்தைச் சேவிக்க முடியாதென்று பல நூல்களும் முறையிட்டுக்கொண்டிருக்க, ஊன

க்கண்களைப்பெற்ற எங்களால் அபாரமான வடிவத்தைத் தெரிசிக்கக் கூடுமோ' கர்த்தனே! தாங்கள் அவதாரஞ் செய்யப்போகிற உண்மையை அசரீரியினால் கேட்டு, கஞ்சன் எங்களை இச்சிறைச்சாலையில் அடைத்ததுமன்றி விலங்குகளும் பூட்டினான். அன்றியும் நினக்கு மூத்தவர்களாகிய ஆறுபிள்ளைகளையும்கொன்ற அந்ததுஷ்டனால் பயமடைந்திருக்கும் எங்களைக் காக்கவேண்டும். யானிழைத்த நோன்பின்புலன் சிறிதும் வீண்போகாமல்பலித்தது! இவ்வண்ணம்சொல்லிக் கண்ணீருங் கையுமாக அழுது புலம்புகிற தேவகி, அன்னையைக் கண்ணன் தேற்றிப் பயத்தைமாற்றி வசுதேவரை நோக்கி "அண்ணா என்னை விரைவினி லெடுத்துக்கொண்டுபோய் ஆயர்பாடியிலிருக்கும் யசோதையின் பக்கலில்கிடத்தி, அவ்வசோதையின் பக்கலிலிருக்கும் யோகமாயாசத்தியைக் கொண்டுவந்து என் அன்னையின் பக்கலில்கிடத்துமென்றுசொல்லிய உலகநாதனை நோக்கி "அண்டரண்ட சராசரங்களில் வசிக்கும் சகல ஆன்மகோடிகளின் உள்ளும் புறம்புமாக இருந்து வசிக்கும் ஐயனே! தங்களுக்குத் தெரியாத தொன்றுண்டோ? யான்எவ்வாறு நின்னை யெடுத்துக்கொண்டு ஆயர்பாடிக்குச் செல்லுவேன்?" என்ற வசுதேவரை நோக்கி செகதீசன் "அண்ணா தாங்கள் ஏதுக்கும் யோசிக்கவேண்டாம் யாதுக்கும் நானிருக்கிறேன். உமதுகரத்தினால் என்னைத் தொடுவீரேயாகில் உடனே உமது கால்கரங்களில் பூட்டியிருக்கும் விலங்குகள் தன்கடை கழன்றுவிடும்" என்று சொல்லக்கேட்டு, வசுதேவர் விரைவிலெழுந்து குழந்தையைக் கையினால் தொட்டவுடனே விலங்குகள் கழன்று விழுந்தது இதைக்கண்டு வசுதேவர் மிகவும் சந்துட்டியடைந்து, அக்குழந்தையை இருகரங்களினாலுமெடுத்துக்கொடுக்கும்படியாக யேந்திக்கொண்டு, சத்தப்படாமல் நடந்துபோகிறபோது, அந்த தாழிட்டிருக்கும் கதவுகளெல்லாம் குழந்தையின் பரிசத்தினால் தங்கடை திறந்துகொண்டன. அன்றியும், காவலிருந்த சூரர்கள் அனைவரும் கையில் உருவினவாளாயுதத்துடன் தங்களைமறந்திருந்தார்கள். அந்தச் சமயத்தில் வசுதேவர் குழந்தையை எடுத்துக்கொண்டு நடந்து, யமுனை யாற்றைக்கடந்து ஆயர்பாடிக்குள்புகுந்து, நந்தகோப நுடைய வீட்டிற்குட்சென்று குழந்தையை யசோதையின் பக்கலில் கிடத்தி, அவள்பெற்ற பெண்குழந்தையை யெடுத்துக்கொண்டு மதுரா நகரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

இவ்விடத்தில் வினாவொன்றுளது அவையாதெனில், இவ்வசுதேவர் தன்பிள்ளையைக் கொண்டுவந்து யசோதைபக்கலில் கிட

த்தி யசோதையின் பிள்ளையை யெடுத்துக்கொண்டு போகிற போது அவ்விடத்தில் காவற்காரர்கள் முதல்யாவரும் நித்திரைசெய்துகொண்டே யிருந்தார்களோ? என்று. யசோதை பெற்றபிள்ளை யிருமாபாசத்தி யாதலால் அவளுடைய மாயையானது காவலர் முதல் யாவரையும் கப்பிக்கொண்டது. இந்தமாயையால் கட்டுப் பட்டவர்களாகிய அனைவரும் தங்களை மறந்து சொக்கி யிருந்தார்கள். யசோதையும் மாயையினால் கட்டுபட்டு மெய்ம்மறந்திருந்தாள். ஆதலா லித்தனை சுலபமாய் வசுதேவர் மாயையை யெடுத்துக்கொண்டு மதுராநகரத்திற்குச்சென்று, காராக்கிரகத்துக்குள் புகுந்துபோகிறபோது கதவுகளெல்லாம் தாமாகவே மூடிக்கொண்டு பழையபடி தாளிட்டதுபோலத் தோன்றியன. இதனைப் பார்த்துக் கொண்டே வசுதேவர் சென்று தேவகியின் பக்கலில் மாயையைக் கிடத்தின மாத்திரத்தில் முன்போல விலங்குகள் தாமாகவே வந்து கால்கரங்களில் மாட்டிகொண்டன.

உடனே மாயையாகிய குழந்தை காகாவென்று அழுதது அவ்வழுகுரலைக்கேட்டுக் காவலர்களோடி அந்தப்புரத்தில் நித்திரை செய்திருக்கும் கஞ்சனையெழுப்பி, "தங்கள் தங்கை தேவகிபிரசவித்தாள், பிள்ளை அழுகுரலைக்கேட்டுத் தங்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டுஇந்தராத்திரியில்வந்தோ'மென்றுசொல்லியகாவலர்கள்மொழியைக்கேட்டு, கஞ்சன்வீராவேசங்கொண்டு இடையில் தரித்திருக்கும் வத்திரம் அவிழ்ந்து பூமியில்விழவும், சிகைமுடியவிழ்ந்து அலையவும், இரௌத்திராகாரமாக அந்தப்புரத்தைவிட்டு விரைவாக ஓடிவந்து, காராகிரகத்தின் கதவுகளுக்கு போட்டிருந்த முத்திரை சரியாகயிருக்கக்கண்டு, அவற்றை உடைத்துக் கதவுகளைத் திறந்து கொண்டு, உள்ளேபிரவேசித்து, தங்கையாகிய தேவகியைக்கூவி "நீபெற்றகுழந்தையை யெடுத்துக்கொண்டுவா" வென்று சொல்லக்கேட்டு, தேவகி நடுநடுங்கிப் பிள்ளையையெடுத்துக்கொண்டு கண்களில், நீர் கால்வாயைப்போலப் பெருகியொழுக, கஞ்சனைக் கண்டு "அண்ணா! இப்பிள்ளை யாணல்ல; பெண்குழந்தை; ஆண்பிள்ளைப்பிறந்தாலல்லோ உனக்குப் பகையாளி? இதுபேதையாகையால், இப்பெண்குழந்தையினால் உனக்கெதுவுங் கெடுதிநேரிட மாட்டாது! முன்னம் எனதுபிள்ளைகள் அறுவர்களைப்பிடித்துப் பதைக்கக் கொன்றுவிட்டையே! அதனால் உனக்குண்டாகிய பிரதாபத்தையும் பிள்ளைகளைப் பறிகொடுத்து வயிறெரிந்திருக்கும் என் மனமும் குளிரும்படி, இப்பெண்பிள்ளையைத் தயைசெய்து எனக்

குக்கொடுத்து உலகத்தில் நற்கீர்த்தியையடையும்" என்றதேவகியின் துக்கவசனங்களைக் கேட்டும் சிறிதும் தயாளமில்லாத கடினமனதையுடைய பாவியாகிய கஞ்சன் "பெண்குழந்தையானாலும் ஆண்குழந்தையானாலும்பிடித்து அதைக்கொல்லாமல்விடுவேனோ" வென்று சொல்லிக்கொண்டே, தேவகியைக் கிட்டி நெருங்கி அவள்கையிலிருந்த குழந்தையின் கால்களைப் பிடித்து இழுத்துச் சமீபத்திலிருந்த பாராங்கல்லின்பேரில் அறைந்து கொன்றுவிட எண்ணங்கொண்டு விட்டெறிந்தான். அக்குழந்தை மாயாசத்தியானதால் தன்னுடைய மாயையால் கல்லின்பேரில் விழுகாமல் நின்று ஆகாயமார்க்கத்தில் கிளம்பி ஆடையாபரண அலங்கிருதையாகி பதினாறுகரங்களும் அவைகளில் ஆயுதங்களுமுடையவளாய், பலவித அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகைமுதலாகிய தேவப்பெண்கள் ஆடல்பாடல் பலவிதங்களாகிய வாத்தியங்கள் முழங்க சகல ஆடம்பரத்துடன் யோகமாயாசத்தி தோன்றினாள். அவளைக் கண்டு கஞ்சன் திப்பிரமையடைந்து யாதொன்றும் மனதுக்குத் தோன்றாமல் தியங்கிமயங்கி நின்றான். அவனைப்பார்த்து யோகமாயாசத்தி சொல்லுகிறாள்:—

"அடாகஞ்சனே! வஞ்சநெஞ்சினைக் கொண்டு என்னைக் கொல்ல நினைந்து கல்லின்மேல் விட்டெறிந்தாய். அத்தனை இலேசாக என்னைக்கொல்ல நின்னாலாகுமோ? இவ்வெண்ணங் கொண்ட நின்னைக் கொல்லும்பொருட்டு எங்கும்வியாபித்து உள்ளும்புறம்புமாய் வசிக்கும் சகதீசுவரன் அவதாரஞ்செய்து ஒருகிரகத்தில் வளர்ந்து கொண்டிருக்கிறார். இதையறியாமல் உலகத்திலுள்ள சனங்களைப் போல என்னைக் கேவலமாகநினைந்து பதம்பார்த்தாய். அன்றியும் நின்தங்கையின் பிள்ளைகளென்று சிறிதும் யோசிக்காமல் ஆறுசிறுவர்களையும் பிடித்துமடித்த மாபாவியாகிய நினது ஊழ்வினையின் பலன் உனது பிராணனை வாங்கச் சேரும்சமயம் சமீபித்துவிட்டது. ஆகையால், சாக்கிரதையாய் நினதுபிராணனைக் காப்பாற்றிக் கொள்ளடா" வென்றுசொல்லி மறைந்துபோயினாள்.

இந்தப்படியாக யோகமாயாசத்தியானவள் சொல்லக்கேட்ட கஞ்சன் பயந்து மெய்நடுங்கி அந்தோ! நாரதமாமுனிவர்சொல்லக் கேட்டு உத்தமர்களாகிய தேவகி வசுதேவர்களைப் பிடித்து விலங்கிட்டுக் காவலில்வைத்ததுமன்றி அவர்கள்பெற்ற அருமைப்பிள்ளைகள் அறுவர்களையுங் கொன்ற மாபாவியானே னென்று சொல்லி அவர்கள் திருவடிகளில் விழுந்து தண்டனிட்டு 'உங்கள் வாக்கினால்

என்னையொன்றுஞ் சொல்லாமல் யான் செய்தபிழைகளை மன்னித்துக்காக்கவேண்டு' மென்று வேண்டிப் பலவித நயவார்த்தைகளைப்பேசி அவர்கள் கால்களிற் பூட்டியிருந்த விலங்கை தறித்துக் காவலினின்றும் விடுவித்து, உக்கிரசேன மாராசனையும் சிறைச்சாலை விட்டு நீக்கித் தன்னுடைய அந்தப்புரஞ் சேர்ந்து படுத்துக்கொண்டு நித்திரைபிடிக்காமல் அன்றிரவெல்லாம் மிகவும் மனக்கவலை கொண்டிருந்தான்.

அங்கே ஆயர்பாடியில் யோகமாயாசத்தியை வசுதேவர் எடுத்துப்போனவுடனே மாயைவிலகி அனைவருக்கும் சோகம்நீங்கிச் சுபபுத்தியுண்டானது. அப்போது யசோதை தன்பக்கலிலிருக்கும் ஆண்குழந்தையின் வடிவழகைக்கண்டு மிகுந்தகளிப்பினால் பூரித்திருந்தாள். அன்றிரவுபோக்கி மறுநாட்காலையில் ஆயர்பாடியெல்லாம் யசோதைக்குப் பிள்ளைபிறந்த சங்கதிதெரிந்து புருடர்களும் பெண்களும் அடங்கா மகிழ்ச்சியடைந்து தங்கள் தங்கள் சத்தியானுசாரம் பால் தயிர் வெண்ணெய் நெய் இவைகளை பானைகளில்நிரப்பிக் காவடிகளில் கொண்டுவந்து கொடுத்து, குழந்தையைப் பார்த்து ஆனந்தபரவசமடைந்து, தங்களைமறந்து ஆடுவதும் பாடுவதும் பலவாத்தியங்களை முழக்குவதுமாக ஆயர்பாடியிலுள்ள சனங்கள் யாவரும் அறிவழிந்து இருந்தார்கள். பின்பு நந்தகோபர் தனக்குப்பிள்ளை பிறந்த ஆனந்தத்தினால் பதினாயிரம் கன்றுகளுடன் பசுக்களை உத்தமர்களாகிய பிராமணர்களுக்குத் தானஞ்செய்து சாதகன்மம் முடித்து பன்னிரண்டாம்நாள் தங்கள் பந்துக்கள் முதலானோரையும் வரவழைத்து, கர்க்காசாரியரால் கிருட்டினனென்று நாமகரணமிட்டு, பூதானம், கோதானம், இரணியதானம், வத்திரதானம், கன்னிகாதான மென்னும் சோடசதானங்களும் அவாரியாகச்செய்து பந்தினர்களுடன் அனைவருக்கும் அன்னமளித்து, சந்தனபுட்ப தாம்பூலாதிகளைத்தந்து, அனைவருக்கும் விடையீந்து அனுப்பிவிட்டுக், கிருட்டினனை நாளுக்குநாள் செ[illegible]ாக வளர்த்து அதிகபரிவோடும் பாதுகாத்து வந்தார்.

## பூதகி வதை.

இங்கே மதுராநகரத்தில் கஞ்சன் ஓர் மண்டபத்திலிருக்கும் ஆசனத்தின் மீது வீற்றிருந்து, மந்திரிகளை வரவழைத்து யோகமாயாசத்தி சொல்லி மறைந்துபோயின விவரங்களனைத்தையும் விரித்துரைத்து, "என்னுயிர்பிழைக்கும் வகைக்கு வேண்டிய உபாயங்களை யோசித்துச் சொல்லுங்க" ளென்று வினவ, கஞ்சனைநோக்கி

தேனுகன், பெலம்பன், கேசிசாணூரன், முட்டிகன், சகடன், பகன் முதலாகிய தன்மந்திரிகள் அனைவரும் சொல்லுகின்றார்கள்.

"கேளும் அரசே! இதற்கோ தாங்கள்பயப்படுவது அந்த அரி குழந்தைவடிவாயிருக்கிறானென்றல்லோ சொன்னீர். எங்களை யனுப்பினால் நாங்கள்சென்று மூவுலகங்களிலுந் தேடிப் பார்த்துக் கொன்றுவருகிறோம். விடைதாருமெனக் கஞ்சன்கேட்டு, "நீங்களிப்போது போகவேண்டாம். இன்னுஞ்சிலநாள் பொறுத்து அனுப்புகிறேன். அப்போது சென்று அவனைக்கண்டு பிடித்துக்கொன்று வாருங்கள். முதலில் பூதகியை அனுப்புகிறே" னென்றுசொல்லிப் பூதகியையழைத்து, "நீசென்று அவனியிலிருக்கும் மனைகள் தோறும் புகுந்து அங்கங்குள்ள ஒருவருடத்திற்குள்ளாகிய சிசுக்களையெல்லாம் மடித்துவரக்கடவா"யென்று கட்டளையிட பூதகியுங்கஞ்சன் சொல்லியவண்ணம்நூதனமாகிய அச்சரஸ்திரீயோவென்றுஒவ்வொருவரும் கண்டுமயங்கி தியங்கும்படி மேலாகியவடிவழகுபொருந்தி இரண்டுதனங்களிலும் ஏராளமாக நஞ்சைப் பொருந்திக்கொண்டு பலதேசங்களிற்சென்று ஒவ்வொரு மனையிலுமுள்ளபிள்ளைகளுக்கும் தன் தனத்தின்பாலை ஊட்டுபவள்போல விடத்தினால் கணக்கடங்காச் சிசுக்களை மடித்து ஆயர்பாடிக்குவந்துநந்தகோபன்மனையிற்புகுந்து யசோதையையணுகி "இத்தனை அழகுவாய்ந்த பிள்ளையைப்பெற்ற உனக்கு நிகரான மங்கைகளுலகத்திலுளரோ?" யென்று பலவிதமாகப்புகழ்ந்து அவளருகிலிருக்கும் பிள்ளையைத் தன்கைகளால் தழுவி, உச்சிமோந்து முகத்தோடுமுகம் வைத்து முத்தமிட்டு, எடுத்துக்கொண்டு ஓர் மனைக்குள்புகுந்து, தன்மடியின்மீது சிறுவனைக்கிடத்தி, வஞ்சகிவதை செய்யக்கருதிவிடப்பாலையீந்தனள். மாதவன் அவள் முகத்தைநோக்கி, இருகைகளாலும் தனத்தைப் பிடித்து வாயில்வைத்துப் பாலையுண்பவன்போல உயிரையும் உண்டான். அம்மாத்திரத்தில் பூதகி தன் சுயரூபமாகிய இராக்கதவடிவுடன் ஆறுயோசனை நிகளத்திற்கு விழுந்தாள். அவள் விழுந்த இடத்திலிருந்த மனைகள் செடிகொடிகள் அனைத்தும் பொடிப் பொடியாய்ப்போக, இவ்வோசையினால் ஆயர்களும் உரோகணியும் 'ஆகா! இதுவென்ன விந்தையென்று அலறினார்கள் யசோதையோ அக்கினியில்விழுந்த பங்கயத்தைப்போல உடல்வெம்பி, அனலிடுமெழுகுபோல உள்ளம் முருகி, வாடைக்காற்றினால் சல்லிவேரற்றுவிழும் மரம்போலப் பூமியில் வீழ்ந்தாள் அப்போது யசோதையைச் சூழ்ந்திருந்த ஆயர்மாதர்கள் பூதகியின்மார்பில் துலக்கிய

திருவனையெடுத்து மிகுந்த அன்புடன் யசோதையின் கையில் கொடுக்கப் பின்ளையைக்கையில்வாங்கி அணைத்து உச்சிமோந்து அழுது புலம்பினள். அதைக்கண்டு கண்ணனும் அழுதுதேம்பிய காலத்தில் உரோகணியும் மற்றுமுள்ள மங்கையர்களெல்லாஞ்சமீபித்து,பால க்கிரகதோடம் பற்றியபடியால் குழந்தைதேம்பித் தேம்பி அழுகிறுனென்று கருதி, பசுவின்பாலைக்கொண்டு அயினிகழித்து மறைய வர்க்கிந்து, ஆவின்கோமயஞ்சேர்த்துக் கண்ணனுக்கு திருமஞ்சன மாட்டி, பன்னிரண்டு நாமமுஞ்சாத்தி வேதியர்கள் வேதமந்திர நீர்தெளித்து கோதானம் பெற்றுச்செல்ல, சிலமாதர்கள் பலதரம் கற்பூரம் சுற்றிப்போட்டு ஆயிரநாமங்களுடைய பகவான் காப்பாத்தவேணுமென்று காப்பிட்டார்கள்.

அப்போது கஞ்சனுக்கு வருடத்திய பகுதிபணங்கட்ட மதுராநகரத்திற்குப் போயிருந்த நந்தகோபாலன் பணத்தைச்செலுத்திவிட்டு அதிவேகமாகவந்து ஆயர்பாடியிற்சேர்ந்து நடந்த விபரீதங்களை அங்குள்ளவர்களாலறிந்து, பருவதாகாரமாய் விழுந்து கிடக்கும் பூதத்தைக்கண்டு, மயங்கித்தியங்கி பயந்து ஏங்கி, மகனையெடுத்தணைத்து முத்தமிட்டு உச்சிமோந்து, "யாதவகுலத்தரசனுகிய வசுதேவர் இங்கு நடக்கப்போகிற விபரீதத்தை எவ்வாறே தெரிந்தசொன்னர். இதுமெத்த ஆச்சரியம்! ஆச்சரிய" மென்று சொல்லி என்மகனைக்காத்துப் பேயினுயிரையுண்ட எம்பெருமானுக்கு நமஸ்கரிக்கிறேன் என்று கைகூப்பித் தண்டனிட்டுப் பெருமகிழ்ச்சியுடன் தரித்து, ஒரா தனங்கள் முதலாகியதுஞ்செய்து பிராமணர்களுக்கு அநேககோதானங்கொடுத்து, மேருபருவத சிகரத்தையொத்து மடிந்தவளுடைய உடலைக் கண்டகோடாலியினுல் துண்டுதுண்டாகத் தறித்து, சுடலையிற்சேர்த்து தீகொண்டு கொளுத்தச் சுடுநாற்றமின்றி, பரிமணம்வீச, அவள் பரகதியடைந்தாள். விடப்பாலைக் கொடுத்து உயிரைவாங்கக் கருதியவஞ்சிக்கு நல்வீடு அளித்தபகவான், இரவும்பகலும் மூலைப்பாலைக் கொடுத்து அன்பாகவளர்க்கும் பெற்றதாய்க்குப் பரமபதம் கொடுப்பதற்குத் தடையேயில்லை! இதற்கையமில்லை. அதின்பின்பு நந்தகோபாலன் மிக அருமையாய்க் கண்ணனைப் பாதுகார்க்கும்படி சட்டதிட்டஞ்செய்ய யசோதையும் மகனைக்கைவிடாது மிகு சாக்கிரதையாய் வளர்த்து வந்தாள்.

## சகடாசுரன் வதை.

அவ்வருட அந்தியத்தில் நந்தகோபாலன்-ஊராரனைவருக்கும் தெரிவித்து வரவழைத்து பத்தரை மாற்றுத் தங்கத்தில் நவரத்தி

னங்கள் பதித்த தொட்டிலைப் பலவிதமலர்களினும் அலங்கரித்து வாசனைத் திரவியங்களைத் தெளித்து அத்தொட்டிலில் தன்பிள்ளையாகிய கண்ணனையிட்டு அநேக மேளவாத்தியங்கள் முழங்க, மிகு ஆடம்பரத்துடன் பலபெண்களினால் இனிமையாகிய பாட்டுகளுடன் தாலாட்டிக் கொண்டிருக்கும் வேளையில், அங்கே மதுரா நகரத்தில் பூதகிமடிந்த சமாச்சாரங்கேட்ட கஞ்சன் சகடாசுரனையழைத்து "நந்தகோபன் மனைக்குச்சென்று அங்கு மிகவும் வடிவழகமைந்த பிள்ளையைக் கொன்றுவா" வென் றிசைத்தனுப்ப, அவ்வசுரன் அவ்வாறே சென்று அக்குழந்தையை யிட்டிருக்கும் தொட்டிலினிடம் மறைந்து சமயம்பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது நந்தகோபன் யசோதை உரோகணியிவர்கள் அடங்கா மகிழ்ச்சியடையும் படியாகப் பல இசைகளாகிய பாட்டுகளைப்பாடி மங்களவாழ்த்துகளானவுடன் கண்ணனுக்கு திருட்டிகழித்து, பற்பலதானங்களைப் பூசுரருக்கும் மாதர்களுக்கும் ஈந்து அனுப்பி, தம்மவர்களுடன் பரிவாக அன்னபானாதி அறுசுவையுண்டு, களித்துச் சந்தனபுட்ப தாம்பூலாதி பரிமள திரவியங்களை உதவி, விடைதரப்பெற்று வந்திருந்த யாவரும் தங்கடங்கள் இல்லம் சேர்ந்தார்கள். பின்பு நந்தகோபன் முதலானோரும் புசித்து ஆயாசந்தீர்த்துக் கொண்டிருக்கும் வகையையுணர்ந்து,சகடாசுரன் நல்லமயம்வாய்த்ததென்று அதிகமகிழ்வுடன் கமலக்கண்ணனை வதைசெய்யக்கருதி, சமீபமாகச்சென்றான். அப்படித்தனது சமீபமாக வந்த அசுரனது திடத்தையறிந்து கண்ணன் தன்னுடைய மெல்லிய செந்தாமரையையொத்த திருவடிகளினால் அவனை உதைமேலுதையும் இடைவிடாமலுதைக்க அவ்வுதையினால் அரக்கன் எலும்புகள்முறிந்து, நரம்புகளறுந்து மெய்யொடிந்து பூமியில் விழுந்து மடிந்தான் அவனது மார்பின்மேலிருந்து கண்ணன் மிகவும் விம்மிவிம்மிச்சிறியழ,அவ்வழுகுரலோசையைக்கேட்டு,யசோதைஉரோகணிமுதலிய பலவனிதைகளும் மனமெலிந்து திடுதிடென்றோடிவந்து கண்ணனைப்பார்த்து, விசனமுற்றிருக்கிறபோது, ஆயர்கள் பலருடன் நந்தகோபனும் அங்குவந்து, பருவதாகாரமாயுருண்டுகிடக்கும் அசுரன் மார்பின் மேற்றுலங்கி, வீறுவீறென்றழுகிற குழந்தையைப்பற்றியெடுத்து, யசோதையின் கையில் கொடுக்க, அவள்வாங்கிப் பிள்ளையைப்பார்த்து ஏங்கியணைத்து பலவிதபாட்டுகளையும் பலவித பராக்குகளைக் காட்டியும். விடாது தேம்பித்தேம்பி யழுகிறதைக் கண்டு யசோதை "அடியம்மா நானென் செய்வேன் குழந்தையழுதழுதுக் குரலுங்கட்டிக்கொண்டதே! வியர்வை வழிகின்றதே! கை

மிலும் காலிலும் நிற்கவில்லையே! அடாமகனே! யென்று கூவி மெய் சோர்ந்தாள். அதைக்கண்டு சிலமாதர்கள் யசோதையைக்கிட்டிப் பலவித உபசாரஞ்செய்யச் சோர்வுநீங்கியெழுந்து, பிள்ளைக்குப் பால்கொடுக்கச் சிறுவன் உண்ணுவதைக்கண்டு மனோதுக்கம் நீங்கி மகிழ்ந்திருக்க, நந்தகோபாலன்கண்டு சந்தோடத்தினால் சிறுவனை யெடுத்து மெய்யைத்தடவி உச்சிமோந்து கொஞ்சிவிளையாடிச் சற்றுநேரம்வைத்திருந்து, மறுபடியும் யசோதையின் கையில்கொடுத்து வேதமந்திரங்களினால் வேதியர்களால் ஓமம்வளர்த்தி மஞ்சள் நீர்சுற்றி எறிந்து பூதம்பசாசுகள்சேராவண்ணம் அட்டவக்கிரத்தை யோதிக் குளிசமெழுதிக் கட்டினபின்பு யசோதைகுழந்தையை யெடுத்தணைத்தாள் உடனே நந்தகோபன் அரக்கப் பிணத்தையெடுத்தப்புறத்தெறிந்து குழந்தையை மிக்கபரிவுடன் பாதுகாத்து வந்தான்.

## துருணாவர்த்தன் வதை.

இப்படிச் சிலநாள் சென்றபின்பு யசோதைகண்ணனுக்கு ஒருநாள் நீராட்டி மடியின்மேல் வைத்துக்கொண்டு நவரத்தின பரணங்களைப் பூட்டிக்கொண்டிருக்க, சிறுவன் சுமக்கக்கூடா தபாரமாகியதை யுணர்ந்து திட்டெனப் பூமியின்மேல்விட்டு 'இவனென்ன பரந்தாமனோ? ஆயிரநாமனோ? செகன்னாதனோ? வேதனைப் பெற்ற மாதவனோ என்று தனக்குத்தானே யோசித்துக்கொண்டிருக்கிறபோது, கஞ்சனுடைய ஏவலால் துருணாவர்த்தனென்னும் கொடிய அரக்கன் ஆயர்பாடியையணுகி உக்கிரமாகிய கோபத்துடன் சுழல்காற்றின் வடிவெடுத்து, பூமியெங்கும் நடுங்க பருவதங்கள் அதிர, பறவைக் கூட்டங்களனைத்தும் மடிய, மேகங்களெல்லாம் பரந்தோட, மரங்களெல்லாம் வேருடன்பஞ்சுபோலக் கிளம்பி ஆகாயத்திற் பறந்துபோய் ஒன்றின்மேலொன்று விழுந்து அடிபட்டு ஒடிந்து தூளாகிக் கருந்தூள் செந்தூள் கிளம்பி ஆகாயத்தை மறைக்க, வானுலகத்தோர்கள் 'இதுவென்னயுகாந்தகால முடிவோ! சண்டமாருதமோ! யாதொன்றுந் தெரியவில்லையே" என்று அஞ்சி நடுக்கமுற்றிருக்க வந்தான் அவ்வரக்கன் இங்கே. ஆயர்பாடியிலிருந்த கோபிகைகள் ஆயர்கள் புதல்வர்கள் பசுக்கள் கன்றுகள் முதல் யாவற்றும் புழுதி மழையெனக் கருதி திசைகளெல்லாம் மாயைகண்டு அழுதுவாடி மெய்குலைந்து ஓடினார்கள். இதைக்கண்ட கொடியனாகிய அரக்கன் இது நல்ல தருணமெனக் கருதி, சிறுகுழந்தை வடிவாயிருக்கும் செகதீசனைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பி மடிக்க எத்தனிப்பதை யறிந்து, குழந்

தைவடிவாயிருக்கும் பகவான் அரக்கனுக்குச் சுமக்கப்படாதபார மாக விளங்கினார். அரக்கன் சுமக்கமாட்டாமல் பூமியில்விழும்படி விட்டுவிடவே பகவான் விடாமல் தன் கைகளிரண்டையும் அவன் கழுத்தில் மாட்டிக்கொண்டு நெருக்கத் தொடங்கினார். இதனால் இவ்வரக்கன் விழிகள் பிதுங்கி நாக்கு வெளிப்பட, பற்கடித்துக் கொண்டு பூமியில்விழுந்து, உயிரைவிட அவன் மார்புமீது விளங்கி னார்.

அந்தவேளையில் யசோதையானவள் சுழல்காற்றி லகப்பட்டு விறுவிறென்று எழும்பும் மணலினால் கண்ணைத்திறக்காமல் மூடிக் கொண்டிருந்து, காற்று நின்றவுடன், கண்களைத் திறந்துபார்த்து, குழந்தையைக் காணாமல் தேடிவாடி முகத்தி லறைந்துக்கொண்டு கன்றையிழந்த பசுவைப்போலப் பூமிமேல் விழுந்து புரண்டு அழு து புலம்புகிறபோது, அருகிலிருந்த உரோகணி முதலான மடந் தையர்கள் தேற்றத் தேறியெழுந்து, முன்னம் பூதகியின் விடமூலை யுண்டு பிழைத்தாய்; இரண்டாவது சகடாசூரனால் மெலிந்துநொந் து தேகமெலிந்து தேறிவருகிறகாலத்தில். பாழாகிய சுழல்காற் றி லகப்பட்டு எங்குபோனாய்? அடாய் மகனே! அழகானமக னே! உன்னைக் கண்ணாற்பாராமல் இனி யென்னுயிரை உலகில் வாழவைப்பேனோவென்று புலம்புகிறவேளையில் நந்தகோபனும் ஆயர்களும் அவர்கள் மாதர்களும் வந்து அடித்துமோதி விழுந் தழுது எழுந்து இப்படிப்பட்ட மாயஞ்செய்து சிறுவனையெடுத்துக் கொண்டுபோன வல்லமை யுள்ளவன் யாவனென்று ஏங்கியெங்கு மோடி வாடிதேடித் திரிந்துக்கொண்டு வருகிறபோது, அங்கோ ரிடத்தில் மடிந்து கிடக்கின்ற அசுரன் மார்பின்மீது இருக்கும் மைந்தனைக்கண்டு, சிலர் ஊருக்குச்சென்று சொல்லக்கேட்டு, யசோதை உரோகணி நந்தகோபன்முதல் ஆயர்களும் மாதர்களும் பெருந்திரளாகக் கூடியோடிச் சிறுவனைக்கண்டு, யாவருந் துபர முற்றுச் சிறுநகையுடன் பல்லாபரணங்க ளிலங்க நீலமணியைப் போலப் பிரகாசிக்குந் திருமேனியையுடைய புதல்வனை ஆயர்க ளெடுத்துவந்து யசோதையின் கையில் கொடுக்க, அம்மாது புதல் வனைக்கண்டு அழுது அணைத்து உச்சிமோந்து களித்து அன்புடன் முலைப்பாலூட்ட, உண்ட புதல்வனை சொல்லுதற்கரிதாகிய மகிழ் ச்சியோடு உரோகணியெடுத்து மார்புடனணைத்து நந்தகோபனி டங்கொடுக்க அவரும் மைந்தனை யெடுத்துத் தழுவி முத்தமிட்டு யாவரும் அகம்சேர்ந்து உத்தம பிராமணர்களை அழைப்பித்து, புதல்வனுக்கு எந்தத் தோடமும் அணுகாவண்ணம் செய்யவேண்

டிய சிகிச்சையாதோ அதைச் செப்புங்களென்று பிரார்த்திக்க, அம்மறையவர்கள் வேதமந்திரங்களையுச்சரித்து தோடங்கள்சேரா வண்ணம் மங்களவாசிகூறி 'ஐயா! நந்தகோபரே! நீர்செய்யும் அரி திரு வாராதனையின் பலத்தால் நினது புதல்வனுக்கு யாதொரு விபத்தும் நேரிடாமல் உயிர்பெற்றிருக்கிறு'னென்று சொல்லிநடந்தார்கள். பின்பு யசோதை தன் புதல்வனுக்கு நீராட்டிச் சீராட்டி மைதீட்டி பல பணிகளைப் பூட்டி மலர்சூட்டி வடிவழகைக்கண்டு களித்து கொஞ்சிக்கொண்டிருந்தாள்.

அப்போது கிருஷ்ணன் கோட்டாவிவிட அவ்வாயினிடத்தில் சத்த சமுத்திரங்களும் அட்டகுல பருவதங்களும் அட்டதிக்குப் பாலகர்களும், யானைகளும், சூரிய சந்திர நவக்கோள்களும் முப்பத்து முக்கோடி தேவர்களும்,நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளும் பல ஜீவராசிகளும் நிறைந்திருக்கின்ற அண்டபிண்ட பிரமாண்டங்கள் யாவற்றையுங்கண்டு யசோதை நடுங்கி நின்மலனும் நித்திய ஆதிமத்தியாந்த ரகிதனும் ஆதிமூர்த்தியாய் விளங்கும் விஷ்ணுவே வந்து நமது வயிற்றிற் பிறந்தானென்று நெஞ்சமுருகி ஆனந்தமடைய, உடனே பகவான் 'இவள் நம்மை இன்னவனென்றுத் திடஞ்செய்து விட்டால் மோச'மெனக்கருதி,தன் மாயையையேவி, மகனென்று கருதும்படிச் செய்தார். மாயையினால் யசோதைகட்டுப்பட்டு பேதைமதியால் மோகமதிகரித்து புத்திரவாஞ்சை மேலிட்டுத் தன்மகனென்றே பாராட்டி அதிககளிப்புடன் போடித்து வந்தாள்.

## குக்குடாசுரன் வதை.

இவ்வண்ணமாகக் கண்ணன் நாளுக்கு நாள் வளர்ந்து தவமும் பருவமடைந்து, இங்கு மங்குமாக ஊர்ந்து வருகிறபோது, ஒருநாள் கஞ்சனால் ஏவப்பட்ட அசுரனொருவன், குக்குட வடிவமெடுத்துத் தன் முன்னம்வந்து நின்று கொல்லுதற்குச் சமயம்பார்த்துக்கொண் டிருக்கக்கண்டு, சக்கரத்தையேந்தும் வலதுகையினால் அவன் சிரத்தின்மேல் ஓங்கி யறையவே அவ்வறையின் பாதை சகிக்கமாட்டாமல் பதறிப் பதறிக்கூவி அவ்வசுரன் பூமியின்மேல் விழுந்து மாண்டான். அவ்வசுரன் மெய்பதறிக்கூவிய ஓசையைக் கேட்டு நந்தகோபன் யசோதை முதலானவர்களும் மெய்குலைந்து நடுங்கி வேகமாபோடிக் குழந்தையை யெடுத்துத்தழுவி உச்சிமோந்து ஆதரித்து, எமனைப்போன்ற அவுணன் யாக்கையைத் துண்டு செய்து கொண்டுபோய்க் ககனத்தில் விட்டெறிந்து உத்தம பிரா

மணைரக்கொண்டு வேதமந்திரங்களால் ஓமம்வளர்த்தி, பலவித தீப திருட்டிகள்சுற்றியெறிந்து மங்கள ஆசிகள்கூறினபின்பு யசோதை கண்ணனுக்குச் சுந்தரீராட்டி, நெற்றிக்குச் சுட்டிமுதல் பல ஆபரணங்களைச்சூட்டி, இனியில்லாத மகிழ்ச்சியுடன் பாலுண்ணக் கொடுத்து ஆனந்த மடைந்திருந்தாள்.

## வெண்ணெ யுண்ணல்.

பிறகு கண்ணன் தத்தித் தத்தி நடக்கும் பருவமுண்டாகி நடந்துகொண்டு வீட்டிலிருந்த வண்ணமே, ஆயர்கள் வீடுகள்தோறுஞ்சென்று பால் தயிர் வெண்ணெய்களையுண்டு, வெறும் பாண்டங்க ளாக்கிவிடுவான். இந்தப்படியாக ஆயச் சிறுவர்களைக் கூட்டிக்கொண்டு தினமுஞ்சென்று, எட்டாமல் உறிமேல் வைத்திருக்கும் வெண்ணெய்ச்சட்டிகளைக் கொம்பினுற் குற்றி வெண்ணெய்களைக் கையில்தாங்கிச் சிறுவர்களுக்கும் குரங்கிற்குங் கொடுத்துத் தானும் புசித்து, வெறும் பாண்டங்களாகச் செய்து வருவதைக் கண்டு ஆயமாதர்கள் எல்லாங்கூடி, 'எவ்விதத்திலாகிலுங் கண்ணனைப் பிடித்துக்கொண்டுபோய், யசோதைக்கு மெய்ப்பபடுத்தி அவனைத் தண்டனை செய்விக்க வேண்டு'மென்றுக் கூட்டத்தில்பேசி முடிவு செய்துகொண்டு, ஆயமாதர்க ளனைவர்களும் தங்கள் தங்கள் வீடுகளைமூடித் தாழிட்டு மனைக்கு வெளியில் நாற்புறமும் கண்ணனைக் கைப்பிடியாகப் பிடிக்கும்பொருட்டுக் காத்திருந்தார்கள். கண்ணன் எப்படியோ உள்ளே புகுந்து பால் தயிர் வெண்ணெய்களைப் புரையிடுவதற்கும் ஒருதுளியேனும்வைக்காமல்புசித்துவிட்டு ஒருவீட்டிற் பாடுவான், ஆடுவான்; ஒருவீட்டில் பெருகப் பெருகச் சிரிப்பான்; ஒரு வீட்டில் திட்டுவான்; ஒரு வீட்டில்நங்கு காட்டுவான்; ஒரு வீட்டில் கிளிமொழிவதுபோலப் பேசுவான்; இன்னொரு வீட்டில் குயிலைப்போல மொழிவான்; இன்னொரு வீட்டில் மயிலைப்போல அகவுவான்; மற்றொரு வீட்டில் பிராமணத்தியைப்போலும் மொழிவான்; இந்தப்படியாகக் கண்ணன் பல்வித பறவைகளைப்போல ஓசையிட்டுப் பின்பு எப்படியோ மாயமாய் அவர்கள் கண்களுக்கு அகப்படாமல் போயிருந்தான். உடனே ஆயமாதர்கள் கதவுகளைத்திறந்து உள்ளேபோய்ப்பார்த்து, ஒருத்தி 'வெண்ணெயைக் காணோ'மென்றும், வேறொருத்தி, பாண்டத்தில் நிரப்பிவைத்த பாலில் ஒருதுளி தயிர்கூட இல்லையேயென்றும் இந்தப்படியாக ஆய மாதர்களெல்லாம் கூக்குரலிட்டு சந்து சந்துகளில், மந்தை மந்தையாகக்கூடிப் பேசிக்கொண்டுவந்து, யசோதையைக்கண்டு "நின்மகன் செய்யும் அக்கிரமங்களை நாங்க

னென்னவென்று சொல்லுவோம். இந்த அநியாயம் எங்காகிலும் உண்டா? எங்களைப் பிழைக்க ஒட்டவில்லையே? எட்டாமல் உறியின்மேல் வைத்திருக்கும் வெண்ணெய் பால் தயிர் நெய் இவைகளை எல்லாம் புசித்து வெறும்பாண்டங்களாகச் செய்வதுமன்றிக் கன்றுகளையெல்லாம் அவிழ்த்துவிட்டு, 'பாலூட்டிவிடுகிறது' என்றுசொல்லி எங்கள் கணவர்களை எழுப்பி யனுப்பி அவர்போக எங்களைக் கட்டியணைத்து முத்தமிடுகிறான். இந்தப்படி இவன் செய்யும் துன்மார்க்கங்கள் மெத்த உண்டு. அவைகள் முழுமையுஞ் சொல்லவேண்டுமென்றால், கணக்கு மிதமில்லை. ஆகையால், நாங்கள் எவ்வாறு சீவனஞ்செய்வது? நின் மகனுக்குத்தக்க நீதிகளைச் சொல்லி,தண்டனை செய்வாய்" என்று ஆயமாதர்கள் சொல்லக் கேட்டு, யசோதைசிரித்து கோபிகாப் பெண்களைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

"கேளுங்கள் ஆயர்மாதர்களே என்மகனுக்கு அக்கம்பக்கத்திலிருக்கும் வீடுகளுக்குப்போகவழிதெரியாது. எப்போதும்இடைவிடாமல் என்னைவிட்டு எங்கும் போகவுமாட்டான். இவனையென் வேலையினிமித்தம் கீழேவிட்டால், சேர்த்துக் கட்டிக்கொண்டு எப்பொழுதும் என்னைவிட்டகன்றுபோகான். இதுவுமின்றி, இன்னம் கண்களைத்திறந்து நன்றாய்ப்பார்க்க அறியாச்சிறுவன்மீது இத்தனைபேர்களும் கோள்சொல்ல வந்தீர்களே இதுமெத்த நன்றாயிருக்கிறது! அநேகநாளாய் மதலைப்பேறில்லாமல் இப்போது தான் பகவான் கிருபையினால் ஒருபிள்ளையைப்பெற்று என் ஆவல்தீர வளர்த்துவருகிறேன். இந்த ஒருபிள்ளை எனக்கிருப்பது உங்களுக்கு மனந்தாளவில்லையோ? ஒவ்வொரு நாட்டிலுமுள்ள குடிகள் அரசனுக்கு நன்மையைக்கருதி 'எங்களரசனுக்கு ஒரு புதல்வனை யளிக்கவேணும் பகவானே' என்று தியானஞ்செய்வார்கள். இந்த நாட்டிலிருக்கும் குடிகளாகிய நீங்கள் அரசனுக்கிருக்கும் ஒருபிள்ளையைக்கண்டு பொறாமைப்படுகிறீர்கள், இந்நாட்டின் அநியாயத்தைப்போல எந்நாட்டிலும் நடவாது" என்று விட்ரோவார்த்தைகள் பகர்ந்து மேலுஞ்சொல்லுகிறாள். "அடிமாதர்களே! என்மகன் உங்கள்வீட்டிற்குவந்து பால் தயிர் வெண்ணெய் நெய் இவைகளைத்திருடித்தின்றானென்றல்லவோ சொன்னீர்கள்; மறுபடியும் அவன் அங்குவந்து திருட்டுவேலை செய்ததைக்கண்ட ஒவ்வொருவரும் அவனைப் பாலுங்கையுமாகப் பிடித்து என்முன்கொண்டுவந்து விடுங்கள் நான் தக்கபடி உங்கள் முன்னி

லையிலே தண்டிக்கிறேனென்று சொல்லக்கேட்ட ஆயர்மாதர்கள் அனைவர்களும் பதில்மொழி சொல்லாமல் தங்கள் தங்கள் அகம் புகுந்து கிருட்டினன் வரவுக்கெதிர்பார்த்திருக்கிறபோது, வழக்கப்படி ஒருநாள் கோபாபாலச் சிறுவர்களுடன் கிருட்டினன் ஆயர் பாடிக்குவந்து வெண்ணெய் தயிர்பால்நெய் இவைகளைக் களவு செய்து புசித்துக்கொண்டிருக்கிறபோது, சிலமாதர்கள் கூடிக் கிருட்டினனைப்பிடித்து, ஒரு அறைவீட்டிற்குள் போட்டுக் கதவைப் பூட்டிவைத்து, அவர்கள் அனைவருங்கூடி யசோதையிடஞ் சொல்லவந்து, யசோதைமடியில் பாலுண்டுகொண்டிருக்கும் கிருட்டினனைக்கண்டு ஆச்சரியப்பட்டு நாணமடைந்து, இதுவென்ன மாயமோவென்று நினைந்து உண்மையை யசோதையினிடத்திற் சொல்லிவிட்டுபோயினார்கள். பின்பு யசோதை தன்மைந்தனை மிகு பிரியமாகக் காப்பாற்றிவந்தாள்.

## ததிபாண்ட விகலனம்.

ஒருநாள் யசோதை தன்குழலலைய, மலர்கள்வீழ, காதில்தரித்ததோடுகளிரண்டும் அசைந்தாட, தனங்களிரண்டும் கச்சையை விட்டு நழுவி ஊசலாட, கழுத்தில் விளங்கும் நவரத்தினமணிமாலைகள் பிரகாசிக்க, முகத்தினில் வேர்வையானது முத்துகளைப்போல் விளங்க, இருகரங்களிலுந் தரித்தவளையல் கலகலென்று ஒலிக்க, சிரமத்தினால் பெருஞ்சுவாசம்வீச மத்தினால் தாழியில் இருக்கும் தயிர்கடைந்துக் கொண்டிருக்கும்போது, மிகுந்தபசி கொண்டவனைப்போல கண்ணன் 'அம்மா பாச்சிகொ' டென்று, மத்தைப் பிடித்துக்கொண்டு அழுது, மத்தைவிடுத்து இருகையாலும் துகிலைப்பற்றியிழுக்க, பசுவானது கன்றுக்கிரங்கி பால்கொடுப்பதை போல யசோதை கண்ணனை யெடுத்து அணைத்து, மனமுருகி உச்சிமோர்ந்து முலைப்பால் கொடுத்துக்கொண் டிருக்கும்போது, தீ அதிகமாகையால் அடுப்பில்பால்பொங்கி விழுவதைக்கண்டு, சிறுவனை நிலத்தில்விட்டுப் பாலையிறக்கி வைக்கும்பொருட்டு யசோதைப் போயினாள். இதைக்கண்ட கண்ணன் மிகுந்த கோபத்தோடு அங்கிருந்த ஓர் கல்லையெடுத்துத் தயிர்பாண்டத்தையுடைத்து அதிலிருந்த வெண்ணெயைத் தின்றுவிட்டு காலிலணிந்திருக்கும் சிலம்பின் ஒலிகேளாவண்ணம் மெல்லெனச்சென்று ஒருதனி வீட்டிற்குள் நுழைந்து, உரலையுருட்டித் திருப்பி அதன்மேலேறி நின்று உரியின் சிக்கத்தையறுத்து பாண்டத்திலுள்ள வெண்ணெயை அள்ளி குரங்கிற்குக் கொடுத்து, பயந்தவனைப்போல அன்னை

பின் வரவுக்கெதிர் நோக்கிக்கொண் டிருக்கும்போது, அங்கே யசோதை நிலை அவித்துப் பாலேபிறக்கி வைத்துவிட்டு புதல்வின் என்னசெய்கின்றான் என்றுவந்து தயிரானது நதிபெருகியதைப் போலப் பூமியில்நிறைந்து ஓடுவதையும் பாண்டம் பலவோடுகளாய்ச் நொறுங்கியிருப்பதையுங்கண்டு, வயிறு நிறம்பப் பால்கொடுக்க வில்லை என்றகோபத்தினாலே தயிர்ப்பாண்டத்தை உடைத்தான் போலக் காண்கிறதென்று யோசித்துத், தானும் மெத்தக்கோபங் கொண்டவளாகிக் கையில் ஒரு பிரம்பை எடுத்துக்கொண்டு கண்ணனை எங்குந்தேடியுங் காணாமல் மனைமுழுதும் ஆராய்ந்து வருகிறபோது ஓர் அறைவீட்டினுள்ளே வெண்ணெயை அள்ளி அள்ளி நெடுநேரம் குரங்கிற்குக் கொடுத்துக்கொண்டிருக்கும் மைந்தனைக் கண்டாள். அன்னையைப்பார்த்துப் பயந்து ஓடுகிறபாவனையாய் அவ்விடம்நீங்கி யோட, இடையிற்றரித்த ஆடை அசைய, குழலவிழ்ந்து மலர்மாலை வீழ, முத்துமாலைப் பவழமாலை இரத்தினமாலைகள் அசைந்தாடி மின்ன, தனங்கள் ஊசலாட, கைகளிலணிந்த வளையல் ஒலிக்க, பாதங்களில் பூண்டசிலம்பரற்ற அன்னநடையையொத்த யசோதை பின்தொடர்ந்து அவனைப் பிடிக்க ஓடியகாலத்தில், கண்ணன் ததிபாண்டரங்கன் மனையிற் புகுந்தபோது, அத் ததிபாண்டரங்கன் கண்ணன் திருவடியில் விழுந்து வணங்கி எழுந்து சொல்லுகின்றான்.

அருந்தவர்களுக்கும் யோகிகளுக்கும் நான்முகனுக்கும் இந்திரனுக்கும் மறைகளுக்கும் அகப்படாத ஆதிமூர்த்தியாகிய நின்னை சேவித்தேன். எனது பாவங்களை யொழித்தேன் இனி யான் அடையவேண்டிய சுகம் வேறொன்றுமில்லை. என்மனதில் குடிகொண்டிருப்பது நின்படைவீடொன்றன்றி வேறொரு கவலையுமில்லை என்று வேண்டும் ததிபாண்டரங்கனைக் கண்ணன் பார்த்து "தாதா தங்கள் கருத்தின் படியே செய்கிறேன். இப்போது எனதன்னை என்னைப்பிடித்து அடிக்கும்படியாய்ப் பின்றொடர்ந்து ஓடிவருகிறாள், அவள் வராமுன்னம் என்னைத்தாங்களிந்த சாலின்உள்ளே ஒளித்து வைத்துக் காப்பாற்றும்" என்றுசொன்ன கண்ணமூர்த்தியின் கருத்தின்படி ததிபாண்டரங்கன் தான் உட்கார்ந்துக் கொண்டிருக்கும் சாலை எடுத்து அதினுள் கண்ணனையிருத்திச் சாலைக்கவிழ்த்து முன்போலத் தான் அதின்பேரில் உட்கார்ந்து கொண்டான். அந்தச்சமயத்தில் யசோதை ஓடிவந்து, "ஐயா ததிபாண்டரங்கரே என் மகன் கண்ணன் இங்குவந்தானே அவனெங்கே? யென்றாள் அதற்குபொய்சொல்லா வாசகனாகிய ததி

பாண்டரங்கன் இதோ என்புட்டத்தின் கீழிருக்கிறானென, அம்மொழியை யசோதை பொய்சொல்லுகிறானெனக் கருதிச் சுற்றுமுற்றும் பார்த்து எங்குங்காணாமையால். "இவனெப்படிப்போனான்? நமதுகண்முன் இந்தவீட்டில் தானே நுழைந்தான், இவனென்ன மாயனோ? விரலத்தனை சிறுவன் இவன்செய்த இந்திரசாலத்தையோசிக்கையில், மிகவும் ஆச்சரியமாகத் தோன்றுகின்றது, இப்போதோ நமக்குமெத்த களையாகவும் மெய்சலித்துக் காலோய்ந்து விட்டதே நாம் இவனைப்பிடிப்பது மெத்தவும் அசாத்தியமே!" என்று தனக்குத்தானே யோசித்துக் கொண்டிருக்கிறபோது ததிபாண்டரங்கன் 'இது நமக்கு நல்லகால' மெனக்கருதி இனியில்லாத ஆனந்தமடைந்திருந்தான். அந்தவேளையில் கண்ணபரமான்மா ததிபாண்டரங்கனையழைத்து "தாதா! இனியென்னை, விட்டுவிடு"மென ததிபாண்டரங்கள் "ஓ கபடநாடக சூத்திராவதாரா! குருடாகி இருக்கும் எனக்கு இரண்டு கண்களுந் தெரியும்படி கிருபைசெய்வையாகில், உன்னைவிட்டுவிடுகிறேன். இல்லாவிடில், நினதுதாயிடஞ் சொல்லி உன்னைப்பிடித்துக் கொள்ளச்செய்வே" னென்று பயமுறுத்தினான். சிங்கம் பள்ளையாட்டுக்குப் பயந்து ஓடியதுபோல சகதீசன்பயந்து ததிபாண்டனுக்கு இரண்டு நேத்திரங்களும் தெரியும்படி கிருபைசெய்யத் ததிபாண்டன் தனக்குப்பகவான் கிருபையால் குருடு நீங்கிக் கண்கள் தெரிய மிகுந்த சந்தோடத்துடன் இரண்டு நேத்திரங்களினாலும் உலகத்தைப் பார்த்து வெறுப்புண்டாகி, "சிருட்டிதிதிசங்கார மெத்தொழிலுக்கும் காரணமாகிமுச்சுடராகி ஆதிமுதல்வனாகி விளங்கும் ஸ்ரீகிருட்டினா! வாசுதேவா! தேவரீர் கிருபைசெய்த இவ்விரண்டு நேத்திரங்கள் மேலும்மேலும் பாவத்துக்கேதுவாக இருக்கிறதேயல்லாமல், புண்ணியம் சிறிதுஞ் சம்பாதிப்பது அரிதாகக்காணப்படுகிறது. ஆகையால், நரவேதுவாகிய இந்த வுலகத்தில் ஒரு இமைப்பொழுதும் இருக்கமனமில்லாத அடியேனுக்குத் தேவரீரது நித்தியவிபூதியையளித்துக் காக்கவேண்டு" மென்று துதிக்க, 'ததிபாண்டன் கருத்தின்படி உண்டாகக்கடவது' யென்று பகவான்மனத்தில் நினைத்தமாத்திரத்தில், ஆகாயத்திலிருந்து நவரத்தினமானது ததிபாண்டன் முன்வந்துதோன்ற, ததிபாண்டன் அவ் விமானத்தின் மீதேறி அவ்விமானம் ஆகாயமார்க்கமாய்ப் போகிறபோதுயாதவர்களும் மாதர்களும் யசோதையுங்கண்டு ஆச்சரியமடைந்து, ததிபாண்டனது உத்தமகுணங்களைப் புகழ்ந்துகொண்டிருக்கிறபோது, சாலிற்குள்ளிருந்த கண்ணன் வெளிப்பட்டுத் தன் அன்



ஊராகிய யசோதையின் முன்வந்து யாதொன்றும் அறியாதவ னைப்போலத் தேம்பித் தேம்பி யழுதுக்கொண்டிருக்க, தன் சமீ பத்தில் நெருங்கிய மகனைப்பார்த்து யசோதைஇலகுவாய்ப் பிடி த்துக்கொண்டு வீட்டிற்கழைத்துப்போய் உரலிற்கட்டி விட்டாள்.

## மருதமரச் சாபநிவர்த்தி.

அவ்வுரலை இழுத்துக்கொண்டு, புறங்கடையிற் சென்று இர ண்டு பிரிவோடுங்கூடிய மருதமரத்தின் சந்தில் நுழைந்துபோகிற போது, முன்னம் இராமாவதாரத்தில் பாதத்தூள்பட்டுக் கல்லுரு வம் பெண்ணுருவ மானதுபோல, மருதமரமானது சல்லிவேருடன் அறுந்து பூமியிற் சாய்ந்து, அதிலிருந்தும் இரண்டு புருடர்கள் தோன்றினார்கள். அவர்கள் யாரெனில், குபேரன்பிள்ளைகளாகிய நளகூபர மணிக்கிரீவனென்று சொல்லப்பட்டவர்கள். இவர்கள் இருவரும் என்னகாரணத்தினால் இச்சாபத்தைப் பெற்றார்களென் றால், முன்னமொருநாள் இவ்விருவரும் அநேக மாதர்களுடன் கானகமேவி, மதுபான மாந்தர்களாகி, மனிதசஞ்சாரமில்லாத ஒரு தடாகத்தில் ஆடையில்லாமல் திகம்பரர்களாகி, சலக்கிரீடை செய்துகொண் டிருக்கிறபோது, அம்மார்க்கமாக திரிலோக சஞ் சாரியாகிய நாரதமாமுனிவர் வரக்கண்டு, மாதர்களெல்லாஞ் சீக் கிரங் கரையேறித் தங்கள் தங்கள் ஆடைகளைத் தரித்துக்கொண் டார்கள். புருடர்களிருவரும் அவரைக்கண்டும், மதிக்காமல்ஆடை யில்லாமல் திகம்பரிகளாய் நின்றிருக்க, நாரதர் கண்டு அவர்களை நோக்கி, நீங்கள் செல்வச் செருக்கினாலும், 'நாம் குபேரனுடைய பிள்ளைகள்; நமக்கு நிகர் இவ்வுலகத்தில் யாருங்கிடையாதென்ற கெருவத்தினாலும், மதுபானத்தினாலும் அகங்கரித்து திகம்பரர்க ளாய் நின்றபடியால், நீங்களிருவரும் பூலோகத்திற்குசென்று நூறு தேவவருடம்மருதமரமாகயிருந்து பகவான் திருவடிப்பரிசத்தினால் பழைய சன்மம்பெறக் கடவீர்க'ளென்று சபித்துப்போயினார். இக்காரணத்தினால் இவர்களிருவரும் பூலோகத்துக்குவந்து மருத மரமாகி இருந்து பகவான் பாதம்பட்டுப் பழைய வுருவம்பெற்று சகதீசனுடைய சேவைசெய்து தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு மருதமரம் முறிந்த ஓசையைக்கேட்டு யசோதை உரோகணி நந்தகோபன் முதலானோரும் ஓடிவந்து கண்ணனை வெளியே எடுத்து யசோதையின் கையிற்கொடுத்து, இத்தனை பருத்தமரம் ஒடிந்து விழுவதற்குப்பெருத்தகாற்றும் அடிக்கவில்லை! எவர்களும் வெட்டவுங்காணோம்! இதை யோசிக்குமிடத்து, இப்

பிள்ளையால் மரம் முறியதள்ளுவதற்குச் சத்தியுண்டோ? இது மெத்த ஆச்சரியத்திற்குக் காரணமாக விருக்கிறதென்று யோசித்துக்கொண்டிருக்கையில், உபநந்தன் நந்தகோபாலனைப்பார்த்து "ஐயா! உமது புதல்வன் பிறந்தநாள்முதல் நாளது பரியந்தம் அவனுக்கு மேலும் மேலும் விபத்துகள் சம்பவித்துக்கொண்டே யிருக்கிறது. இதை யோசிக்கையில் உமது புதல்வனுக்கு பூதகி சகடன் சுழல்காற்று குக்குடன் முதலான துட்டர்கள் உபத்திரவங்களை, தெய்வமாகிய அரியே நம்பங்கில் இருந்துக் காப்பாற்றினரென்பதற்குச் சந்தேகமில்லை. இத்தனை விபத்துக்கள் நடந்திருப்பதை நாம் கண்ணாரக்கண்டும், இவ்விடத்திலேயே இருப்போமாகில், இன்னமும் பல துர்நிமித்தங்க ளுண்டாகும்போலக் காண்கின்றது. ஆகையால், நாம் வாசமாயிருக்கும் பதியைவிட்டு அனைவர்களும் யமுனாநதிக்கரையி லிருக்கின்ற பிருந்தவனத்திற்குச் சென்று மாடகூட மண்டபங்கள் ஆலயங்கள் முதலானவைகளையும் அழகாகக் கட்டிக்கொண்டு, அதில் குடியேறியிருப்போமாகில் மெத்தவும் நலமுண்டாகுமென்றும் அன்றியும் அங்குப் பசுக்கள்மேய்வதற்குப் புல்லும் அதிகமாக விருக்கிறது; புனலுமுண்டு; கனிகாய்கள் யாவும் எதேட்டமாக இருக்கின்றமையால், தேவலோகத்தைப் போல நன்றாக குளிர்ச்சியும் சுகமும் சவுக்கியத்தையுந் தரும்படியான அந்தயிடத்திற்கேபோவது பலவிடயங்களுக்கும் அனுகூலமாமென்றும்சொல்லினன். உபநந்தன் மொழிகளைக்கேட்ட நந்தகோபன் அவன்இட்டப்படிக்கு மாடங்கள் கூடங்கள் மண்டபங்கள் ஆலயங்கள் தடாகங்கள்முதலியவைகளையெல்லாம் அங்கேகட்டி பெருநாள் கொண்டாடிப் பிருந்தாவனத்தில் குடியேறி இலட்சுமிகடாட்சம் பெருகிச் செழிக்க நந்தகோபன் இனிதமர்ந்திருந்தனன்.

## பெகாசுரன் வதை.

ஒருநாள் நந்தகோபன் பலராமமரையும் கிருட்டினமூர்த்தியையும் அழைத்து "நீங்களிருவர்களும் ஆயர் சிறுவர்களுடன் கூடச் சென்று இளங்கன்றுகளை மேய்த்துக்கொண்டு வாருங்க" ளென்று உரைசெய்ய அந்தப்படியே அவர் இருவரும் ஆயர் சிறுவர்களுடன் கன்றுகளை யோட்டிச்சென்று தன் சொற்படியாவரும்நடக்கும்படி கன்றுகளைக் கண்ணன் மேய்த்துக்கொண்டிருக்கும்போது, பூதகி சகடன் திரிணாவர்த்தன் குக்குடன் முதலாகியவர்கள் மடிந்துபோன சமாசாரத்தைக்கேட்டு, கஞ்சன் மிகவுங்கோபித்து உள்ளம்பதைத்து ஆலகாலவிடத்தைப் போன்ற பகாசுரன்

அகாசுரன் இவ்விருவர்களையும்நோக்கி, "நீங்கள்சென்று நந்தகோபன் மைந்தனைக்கொன்று வாருங்களென்று சொல்லியனுப்ப அக்கொடியர்க ளிருவரும் பிருந்தாவனத்தை யடைந்து, ஒருவன் கொக்காகவும் மற்றொருவன் பசுவின் கன்றாகவும் உருவமெடுத்துக்கன்றுகளுடனே கன்றுருவங்கொண்டவனும், கொக்கின்வடிவங்கொண்டவன் ஓர்மலையின்மேல் பெருத்தவெண்மையான மலையிருப்பதை யொத்தும் இருந்தார்கள். அதில் கன்றுருவங்கொண்டவன் துள்ளியோடுவதும், திரும்பிவந்து கன்றுக்கூட்டங்களுடன் சேர்ந்துபுல்லைத் தின்னுவதும், தண்ணீர்புசிக்கும் விந்தையையுங் கண்ணன்கண்டு நகைத்து, மெல்லென அந்த அவுணக்கன்றினை பிடித்து அங்கிருக்கும் விளாமரத்தின் கனியுதிரும்படி விட்டெறிந்தமாத்திரத்தில் அவ்வடியினால் கனிவீழ்ந்தது, மன்றி அரக்கனும் மடிந்து பூமியில் விழுந்தான். இதைக்கண்டு கைலையங்கிரிக்கொப்பாகிய பகாசுரன்கோதித்து விரைவாகவந்து மூக்கினாற்கொத்தி, அன்றுலகளந்தவனை விழுங்கின மாத்திரத்தில் அதன்வயிற்றிற்குட்சென்ற கண்ணமூர்த்தி காலாக்கினியைப் போல எரிகிறபோது, அவ்வக்கினியினால் நேரிட்ட வருத்தத்தைச் சகிக்கமுடியாமல் அவ்வரக்கன் உமிழ்ந்தவுடனே, மிகுமணம்பொருந்திய துளபமாலையைத் தரித்த கண்ணன் ஆத்திநார்கிழிப்பதைப்போல மாயக்கொக்கைப்பிடித்து இரண்டாய்க் கிழித்தெறிந்தான்.

## அகாசுரன்வதை.

அப்போது பகாசுரன் மடிந்தவகையையறிந்து, அகாசுரன் சினமிகுந்து பற்களைக்கடித்து மீசைதுடிக்க கஞ்சனைநோக்கி "நான்சென்று நந்தகோபன் மகனைக்கொன்று வருகிறே" னென்று சொல்லி வெளிப்பட்டு, பிருந்தாவனத்தை யணுகிக், கன்றுகளை மேய்க்கும் பொருட்டு ஆயர்சிறுவர்களும் பலராம கிருட்டின மூர்த்திகளும் வருகிற வழியில் பெருத்த பருவதத்தைப்போலப்பாம்பின்வடிவங்கொண்டிருந்தான். பலராமகிருட்டினர்களுடன் செல்லும் ஆயர் சிறுவர்கள் யாவரும், வழியிலிருக்கும் மலையைக் கண்டு 'நேற்றைத்தினம் இவ்வழியாகத்தானே வந்தோம்; அப்போது இல்லாதமலை இன்றெங்கிருந்து வளர்ந்து விட்டது' என்று ஆச்சரியப்பட்டு, 'ஆகிலும், இதுமலையேயன்றி வேறொன்றுமல்லவென்று கன்றுகளுடன் யாவரும் அம்மலையின் மீதேறிப் போகும்போது, அகாசுரன் நெருப்புக்காற்றடிப்பதுபோல சுவாசம் வீசி, சுவாசத்தால் கன்றுக்கூட்டங்களுடன் யாவரையுமிழுத்தி விழுங்கினான். அவருடன் கிருட்டினபகவான் அதின்வாயிடத்தில்

புகுந்து நீண்டமாத்திரத்தில், அகாசுரன் தேகம் இரண்டாய்ப் பிள ந்து சிரம்வெடித்து சீவன்பிரிந்து சிதறி மாண்டான்.

## காளிய நிர்த்தனம்.

பலராமகிருட்டினர்கள் ஆயர்சிறுவர்களுடன் கன்றுகளையோட்டிக்கொண்டு, யமுனைநதியின் சார்பில்விளங்கும் காளியமடுவின் சமீபத்திற்சென்று கன்றுகளைவிட்டு மேய்த்துக்கொண் டிருக்கிறபோது, ஆயர் சிறுவர்களிற் சிலர் மடுவின் சமீபத்திற்குப்போய் மெய்சோர்ந்து விழுந்துவிட்டதைக்கண்ட கண்ணன் 'இக்காளியன் இங்கிருப்பதால் புல்பூண்டு மரங்களுந்தீந்து காய்ந்துபோவதுடன் ஆகாயத்திலும் பறவைகளும் பறக்கக் கூடாமல் இவன் விடச்சவாலையினால் மடிந்து போகிறது. இந்தநீர் மனிதர்களுக்கும் பசுக்களுக்கும் உபயோக மில்லாமல் இவனொருவனே இம்மடுவில் சுகித்திருப்பது தருமமல்லவென்று கருதி, அங்குப் பட்டுப்போயிருந்த ஒருகடப்பை மரத்தின்மீதேறி அம்மடுவின் நடுவில் குதித்தமாத்திரத்தில், சலம் தத்தளித்துத் தளும்பிக் கரைக்குமேல் ஓடிப்பரவியது. இவ்வோசையைக் கேட்டு, காளியன்திடுக்கிட்டு 'இதுவென்ன ஆச்சரியமாக விருக்கிறது? நாம்வசிக்கும் இம்மடுவின் நாற்புறமும் இரண்டுகாத தூரத்திற்கும் எந்தப் பிராணியும் வந்து தலைகாட்டமாட்டாது. அப்படிக்கிருக்கும் நமது விடாக்கினியையும் மீறிவந்தவன் யாவனோ' வென்று சீக்கிரமாக எழுந்து ஆயிரம் சிரங்களின் பக்கத்தில் விளங்கும் செவிகளாகிய இரண்டாயிரம் கண்களிலும் அக்கினிப் பொறிகள் பறக்க, வாயினின்றும் விடத்தைக் கக்கிக்கொண்டு சீறியோடிவந்து கண்ணனாக அவதாரஞ்செய்திருக்கின்றான் ஆதிதேவன் என்றுணராமல் சாமானிய மனிதனெனப் பாவித்து, மேல் விழுந்து கடித்து, உடலைசுற்றிக்கொண்டு எலும்பு நொறுங்கும்படி இறுக்குகிறபோது, கரைமீதிருந்த ஆயர்பாலர்களும் பலராமரும் கன்றுகளும்விசனப்பட்டு,கண்களில் நீர் பெருகவிட்டு அழுதுவாடி யுருகும்போது, சில சிறுவர்கள் ஓடி இந்த விருத்தாந்தத்தை நந்தகோபனுடன் சொன்னார்கள்.

அதைக்கேட்டு நந்தகோபன் முதல் கோபாலர்களும் யசோதைமுதல் ஆயர்மாதர்களும் ஓடிவந்து மடுவின் கரைசேர்ந்து பாம்பினால் பிணைக்கப்பட்டிருக்கும் கிருட்டின மூர்த்தியைக்கண்டு மராமரங்கள் வேரற்று வீழ்வதைப்போல நந்தகோபன் மெய்மறந்து பூமியில்விழ, யாவரும்வீழ்ந்து முகத்திலறைந்துகொண்டு அழுது கலங்குகிறபோது, யசோதை நானினி யென்மகனை எப்போது

காணப்போகிறேன்? மகனைப்பிரிந்து ஒருகணமேனும் உயிர்பெற்றிருக்கமாட்டேன். இந்தமடுவில் விழுந்து, என்னுயிரைமாய்த்துக் கொள்ளுகிறே,"னென் றெழுந்தோடுகிறபோது, இதைக்கண்ட உரோகணிமாது சிரித்து அனைவர்களையுந் தடுத்துத் தேற்றி, 'சற்று பொறுத்திருங்கள். இவ்விடத்தில் நடக்கும் வேடிக்கையைப் பார்த்து நீங்களே சந்தோஷிக்கப் போகிறீர்க'ளென்று சொல்ல அனைவர்களும் அந்தப்படியே கண்ணிமைகொட்டாமல் கண்ணனைப் பார்த்திருந்தார்கள்.

அப்போது காளியனால் பிணைத்து நெருக்குண்ட கிருட்டின பகவான், தேகத்தை வளர்த்தி காளியன் காயத்துள்ள எலும்புகளொடியச்செய்து, கட்டுகளை விடுவித்து அவனது சிரத்தின்மீது தன் திருவடிகளால் நடனஞ்செய்கிற காலத்தில், காளியன் படங்களும் ஆயிரம் சிரங்களும் நொறுங்கிக் கதறுகிறபோது, நாகப் பெண்கள்வந்து கிருட்டினமூர்த்தியின் பாதங்களில் விழுந்து, தங்கள் நாயகனைக்காப்பாற்றி மங்கலியப்பிச்சைத் தரவேணுமென்று வேண்டிய அம்மாதர்கள் முறைகளுக்கு இரங்கி, அவனைக்காத்து அவ்விடத்தைவிட்டு ஓட்டினான். இவைகளை யெல்லாங் கண்ட நந்தகோபன் யசோதை முதலிய யாவருமென்றுமில்லாத சந்தோடத்தையடைந்து, மகனை வாரித்தழுவி முத்தமிட்டு உச்சிமோர்ந்து யசோதை ஆனந்தித்தாள் நந்தகோபனும் இப்படியே ஆனந்தித்தான். மற்றவர்களெல்லாங் கொண்டாடிச்சென்று இல்லஞ்சேர்ந்து களிப்புடனிருந்தார்கள்.

பின்னொருநாள் ஆயமாதர்கள்கூடி யமுனா நதிக்குவந்து தங்களாடைகளைக்களைந்து கரையின்மீதுவைத்து நதியிலிறங்கி நீராடிக் கொண்டிருந்தபோது, கிருட்டினன் அங்கொருவர் கண்களுக்கும் புலப்படாமற்சென்று கரையின்மீதிருந்த ஆடைகளை யெல்லாம் எடுத்துக் கொண்டு, ஒரு புன்னைமரத்தின் மீதேறி, அதின் கிளைகள் தோறும் ஆடைகளைக்கட்டித் தானும் அதின்மீது இருந்தான்; மாதர்கள் நீராடிவந்து கரைசேர்ந்து ஆடைகளைத் தேடிக்காணாமல் நான்குதிக்குகளிலும் பார்த்தும் அகப்படாமல், துயரமடைந்து அங்கோர் புன்னைமரத்தின் மீதிருக்குங் கண்ணனைக்கண்டு, ஆடையைக்கொடுமப்பா, வென்று மிகவும் வேண்டிக் கொண்டும் கூறையைக்கொடாதபடியால் அம்மாதர்கள் பின்னும்துயரப்படுவதைக் கண்டு, 'நீங்கள்யாவரும் கரையேறி இங்குவந்து இரண்டுகைகளையும் சிரமேற்கூப்பித் தொழுவீர்களாகில், உங்களுக்கு ஆடையைத்

தருவேனென்று சொல்ல, மாதர்கள் அந்தப்படியே இரண்டுகை களையுங்கூப்பி, தண்டனிடக் கண்ணன் சேலைகளை அவர்களுக்குக் கொடுத்தனுப்பினான்.

மறுநாள் நந்தகோபன் ஆயர்களை வரவழைத்து 'இந்திரனுக்கு பூசைபுரியும்நாள்,இன்றானதால், வேண்டிய பதார்த்தங்களுடன் கொண்டு வாருங்க'ளென்று சொல்லிய மொழியை அருகிலிருந்து கேட்ட கண்ணன் தந்தையாகிய நந்தகோபனை நோக்கி, 'இந்திரனுக்குப்பூசை பொங்கலிடுவது நியாயமல்ல,நமக்குவேண்டிய சகல வத்துக்களையுந் தருகின்ற கோவர்த்தனகிரியே நமது குலதெய்வமாகையால், இந்திரனுக்கிடும் பொங்கல் பூசையை நிறுத்தி, கோவர்த்தனகிரிக்குப் பொங்கல்பூசைசெய்தல் உத்தமமென்றுசொல்ல கண்ணன் மொழியைக் கேட்டுச் சகலருஞ்சரியென் றேற்று, சகல வத்துக்களுடன் கோவர்த்தனகிரிக்குச் சென்று அம்மலையையுத் தேசித்து பொங்கல்பூசை முடித்து நைவேத்தியம்படைக்க, கண்ணன் மலையுருவத்திற்கலந்து யாவற்றையும் புசித்தான். இதையறிந்து தேவேந்திரன் மேகங்களைவிடுத்து 'ஆயரும் அவர்மாதரும் பசுக்களும் அதின்கன்றுகளும் அடியோடுமாய்ந்து போகும்படி ஊழிக்கால மழையைப்போல ஏழுநாள் பெய்யக்கடவ' யென்று [illegible]ளையிட, அவ்வண்ணமே மேகங்கள் யானைத்துதிக்கையைப் போல சொரிவதினால், ஆயர்மாதர்களும் கோபாலர்களும் கோவினங்களும் கன்றுகளும் அல்லோலகல்லோலப் படுவதைக்கண்டு, கண்ணன் இந்திரன் கருவத்தையடக்கவெண்ணி, கோவர்த்தனகிரியைச் சுண்டுவிரலினால் தாங்கிக் குடையாகப்பிடித்து, ஆவினங்களுடன் அனைவரையுங் காத்தான். இதைக்கண்டஇந்திரன், 'இவனை நாம் [illegible]னென்று அற்பமாக எண்ணி மேகங்களைவிட்டு மழை ஏழுநா[illegible] பொழியச்செய்தது நமது அறிவீனமே, என்று நடுங்கி பூலோ[illegible]திற்கு வந்து ஐராவதத்தை விட்டிறங்கி கிருட்டினபகவான் [illegible]வடிகளில் விழுந்து, சரணாகதியடைந்து பலவிதமாகத் துதி[illegible]துப்போற்ற, கண்ணன் கடைக்கண்ணினால் கடாட்சித்து விடை[illegible]ப்பெற்று வானுலகத்தை யடைந்தான்.

[illegible]ன்னர் ஒருநாள் நந்தகோபன் அதிகாலையிலெழுந்து, ஏகாதசி [illegible]தமனுட்டிக்கும் பொருட்டு யமுனாநதியில் ஸ்நானஞ் செய்து[illegible]ண்டிருக்கிறபோது வருணன் தூதர்கள் நந்தகோபனைப்பிடித்[illegible]ாண்டு போய்விட்டார்கள். இந்தச் சவித்தாரத்தைப் பின் செ[illegible]ர்களால் யசோதையறிந்து துக்கப்படுவதைக் கண்ட கண்[illegible]அன்னையைத் தேற்றிப் பஞ்சாயுத்தரானக வருணலோகத்திற்

குச் சென்று வருணனால் பூசிக்கப்பட்டு நந்தகோபனை யழைத்து வந்து வீட்டிற் சேர்த்தான்.

ஒருநாள் கண்ணன் புள்ளாங்குழலை யூதிய இன்பத்தினால் ஆயர்மாதர்கள் யாவரும் தங்கள் தங்கள் கைவேலைகளை விட்டுமயங்கி மாமி மாமன் நாயகன் இவர்களிடத்தும் பயமற்றுத் தங்களைமறந்து கண்ணனிடஞ்சேர்ந்து அசைவற்றிருந்தார்கள்.

அம்பிகாவனத்தில் வித்தியாதரனாகிய சுதரிசனன் அரவமாகி நந்தகோபனை விழுங்கிடக் கண்ணன் தன்காலினாலவனை உதைத்து நந்தகோபனைமீட்டான். பின்னும் சங்கசூடனன் அங்கெய்தி, ஆயர்மாதர்களிலொருத்தியை எடுத் தேகிடக்கண்ட பலராமர், அவனை விடாது பின்றுடர்ந்து சூலாயுதத்தை யெடுத்துச் சுழற்றியதையறிந்த சங்கசூடன், பயந்து அம்மாதைவிட்டேகக் கண்ணன்கண்டு வேகமாயோடி ஓரறையறைந்தவனைக் கொன்றான்.

பின்னும், மிதிலாநகரத்தில் வசிக்கும் யசோதைக்கு மூத்தோனை கும்பனென்பவனுக்கு நப்பின்னை யென்னும் வனிதைபிறந்து வளர்ந்து பேதைப்பருவம் நீங்கிப் பெதும்பைப்பருவமடைந்திருக்கும் நாளில், கும்பனுடைய பசுவின் கூட்டத்தில் காலநேமியின் மைந்தர்கள் ஏழுபேர்கள் இடபஉருவாய் நிற்கிறபோது, கும்ப[illegible] 'இவ்வேழு இடபங்களையுங் கொல்லுபவனுக்கு என்மகளைத்[illegible]வே'னெனக்கேட்டக் கண்ணன்சென்று அவற்றையும் மடித்து [illegible]பின்னை நங்கையை மணந்தான்.

அதற்குப்பின் அரிட்டாசுரன் கேசிலியோமணன் முதலா[illegible]ரைக் கண்ணன்வதைத்துக், கஞ்சன் அனுமதியினால்வந்த [illegible]ரருடன் பலராமர் கண்ணன் நந்தகோபன் இம்மூவருஞ்[illegible]துராபுரியைச் சேர்ந்தபோது, தாருகனென்னும் வண்ண[illegible]த்து அவனிடமிருந்த உயர்ந்த ஆடைகளை யெடுத்து உடுத்[illegible]ண்டு இராசவீதியாகப் போகிறபோது, கஞ்சனுக்கு மண[illegible]ந்திய மலர்மாலைகளைத்தரும் சுதர்மன் அகம்புகுந்து அ[illegible] மாலைகளைத்தரித்து அவனைக்கடாட்சித்துக், கஞ்சனுக்கு [illegible] சந்தனந்தரும் திரிவக்கிரியினிடத்துச் சந்தனம்பெற்றுக் கா[illegible]ந்து, அவளையும் பெதும்பைப்பருவ முடையவளாகக் கிரு[illegible]ய்து, ஆயுதசாலையிற்புகுந்து தனுசுகளனைத்தையும் ஒடித்தெ[illegible] குவலையாபீடத்தைமடித்துச், சாணூரனைவதைத்துக், கஞ்ச[illegible]மாய்த்து, உக்கிரசேனனுக்கு முடிசூட்டி, குருதட்சணையீந்[illegible]ர்பாடிக்கு உத்தாரையனுப்பிமாதர்கள் மனத்துயரங்களைப்போ[illegible]

சராசந்தனை பீமனால் மடித்து, துவாரகையை நிருமித்து, விதர்ப்பராசன் புதல்வி உருக்குமணியை மணந்து, பாண்டவர்களுக்குத் தூதுசென்று, பதினெட்டுநாள் பாரதயுத்தம்நடத்தி, பூபாரத்தைத் தீர்த்து, பழையபடி படைவீடுசேர்ந்து இனிதுவீற்றிருந்தார்.

## கலிக்காவதாரம்.

துதி.

கருமாலை கழியவந்த கடவு ளாரைக்
கருப்பறியார் காணவொணுக் ககனத் தேவை
மருமாலைத் துளவணியு மாமார் பானை
மலைவில்லார் கைப்பாண மாயி னானை
ஒருமாலை யுறம்பேர்த்த வரியை வானோர்
ஒருகணியு மடியானைப் படிய ளந்த
திருமாலைக் கலிக்காவ தாரன் றன்னைத்
திருப்பதத்தைத் திருக்கறவுற் றிருப்ப மாதோ.



மானிட தேகமும் குதிரை முகமும் ஒரு கையில் வாளாயுதமும் மற்றொருகையில்கேடைய மும் இன்னு மிரண்டுகைகளில் சங்கு சக்கரமும் தரித்து, சருவத்திலும் உள்ளும் புறம்புமாய் நிற்கும் விஷ்ணுவாகிய பகவான் அவதரித்துக் காலமுடிவை எதிர்பார்த்துக்கொண்டு பாவங்களைச் சங்கரிக்கவும் அதருமங்களைப் போக்கவும் சித்தமாக விருக்கின்றார்.

---

## கருடன் உற்பவம்

விநதையென்பாள் அருணன் கூறியபடி சாக்கிரதையாக மற்றொரு முட்டையைக் காத்துவருவாளாயினள். முன்னம் தேவரும் அசுரரும் அமுதங்கடைந்து உண்டு மிகுந்ததை ஒரு பொற்கலசத்தில் வைத்து அனேக அத்திரங்களையும் தேவர்களையும் காவல் வைத்துப் போயினார்கள் அக்காவலோடும் அமுதக்கலசமிருந்தது. அப்போது, பாற்கடலிற்றோன்றி இந்திரவாகனமாயுள்ள உச்சைச் சிரவமென்னும் வெள்ளைக்குதிரை கடலோரமாக ஒருநாள் வந்



திருந்தது; இதனை கத்துரு, விநதை என்னும் இரு சகோதரிகளும் கண்டனர். இவருள் விநதையென்பவள் கத்துருவையை நோக்கி 'தங்கையே! இக்குதிரைமாசற்ற மிக்கவெண்மையோடு என்ன அழகாயிருக்கின்ற'தென்ன, கத்துரு வஞ்சகமாக 'வால்புறத்தேசிறிது கருமையுமிருக்கின்ற' தென்ன, இருவரும் சாதமுற்று விநதை 'தங்காய்! பொய் பேசுகின்றனை வால்புறம்கருமையிருக்கில் அடிமையாகின்றேன்; காட்'டென்ன, கத்துரு தமக்கையைநோக்கி 'நாளை வந்து பார்ப்போ'மெனக்கூறி, தம் வீட்டையடைந்து தம் புத்திரர்களிடம் கூறி 'வால்புறம் கருமையை யாரேனும் உண்டாக்குங்க'ளென்ன, அந்நாகர்கள் 'பாற்கடலிற் றோன்றிய மகா பரிசுத்தமான உச்சைச் சிரவத்திற்கு அவ்வாறுண்டாக்குவது கூடா'தென மறுத்தனர். அதனால் கத்துருசினந்து 'நீங்கள் இனி சனமேசயன் சருப்பயாகத்தி லிறக்கக் கடவீர்க'ளெனச் சபித்தனள். இதைக்கேட்ட ஒருவன் அன்னையின் இஷ்டப்படி கருப்புதோன்றப் பொருந்தினன், இதனை விநதைக்குக்காட்டி அடிமையாக்கிக் கொண்டனள். மற்ற சரிதத்தை அமுதங்கொணர்ந்த சரிதத்தில் காணலாம்.

---

## ஆஞ்சனேயர் உற்பவம்.

முன்னம் துட்ட இராக்கதர்கள் செய்யும் அக்கிரமங்களினால் புண்ணியம் நசித்துப் பாவமேலிட்டமையால், பூமிபாரத்தைச் சுமக்கமாட்டாமல் பூமிதேவியானவள் கண்ணீர்விட்டுக் கலங்கிவாடி, சிவபெருமானைச் சரணமடைய, சிவன் தேறுதல்சொல்லி அனுப்பினவுடனே, பிரமனிடம் சென்று அவரை யழைத்துக்கொண்டு தேவர்களுடன் வைகுந்தமா நகரம் சென்று, அங்கு ஆதிசேடன் மீது சயனித்திருக்கும் பரந்தாமனைக்கண்டு "வணங்கி, இராவணாதி இராக்கதர்கள் தவசிகள் முதலான சாதுக்களை நலியச் செய்யும் அகிருத்தியங்களினால் புண்ணியங்குறைந்து பாவமேலிட்டதால் தரைமாது பூமிபாரத்தைச் சகிக்கமாட்டாமல் மிகவும் துக்கப்பட்டு வாடுகிறபடியால், பாவங்கள் நசித்துப் புண்ணியம் மேலிடும்படித் தக்கயோசனை கிருபைசெய்யவேண்டும். செகதீசா" என்றுவேண்டிக்கொள்ளக், கருணாநிதியாகிய திருமால் அருள்சுரந்து ஓ நான் முகனே! நின்னமிசங்கொண்டு சாம்புவந்



தனாகவும், ஓ பசுபதி! நினது அமிசத்தினால் அநுமானாகவும், ஓ தேவேந்திரனே! உன தமசத்தினால் வாலியாகவும், ஓ தினகரனே! நின்னமிசத்தினால் சுக்கிரீவனாகவும், அக்கினிதேவா! நின தமிசத்தினால் நீலனாகவும், உபேந்திரனே! நினது அமிசத்தினால் அங்கதனாகவும், மற்றவர்களெல்லாம் எழுபதுவெள்ளம் ஸைனியங்களாகவும், காட்டில் வானரவடிவுடன் அவதரிக்கக் கடவீர்க''ளென்று ஸ்ரீமுகுந்தன் கட்டளையிட, அந்தப்படி தேவர்கள் தங்கள் தங்கள் அமசங்களாகக் காட்டில் அவதரித்து விருத்தியடைந்துவர, அப்போது வாயுவதயன் மகாவிஷ்ணுவைப் பணிந்து நான் அரூபியாக விருப்பதால் என்னையாவரும் பரிசத்தால் உணர்கிறார்களே தவிர வடிவோடுபார்க்க எவர்களாலு மகாததாலே, தேவரீர் எனது பராக்கிரமமும் கீர்த்தியும் உலகில் பிரபல மாகும்படியாக ஒரு பாலனை அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று அவன் வெகுவாக வேண்டிக்கொள்ள, அதற்கு விஷ்ணு "என தமிசம்பெற்று உனக்கு ஒரு பாலன் உதிக்கக் கடவ''னென்று வரந்தந்தார். அவ்வரத்தைப்பெற்று வாயுதேவன் மிகு களிப்படைந்து விடைபெற்றுச் சென்று அஞ்சனாதேவியை மருவிக்கலந்துபோயினபின்பு அஞ்சனாதேவி கருத்தரித்துப் பூரணமாகி பலாட்டிகமான பிள்ளையைப்பெற்றாள். அஞ்சனாதேவி யீன்றபடியால் ஆஞ்சநேயனென்று பேர் உண்டாயிற்று இந்தப்படியாக அவதரித்த ஆஞ்சநேயன் பிறந்தவுடன் தன்தாயை நோக்கி "ஓ அன்னையே! எனக்கு மெத்தபசியதிகரித்திருப்பதால் யான்புசிக்கத்தக்கது'யாதெனக்கேட்க, அதற்கவள் அநுமானைப்பார்த்து 'அடா' குழந்தாய்! குளிர்ந்த வனங்களிலும் சோலைகளிலும் சிவந்து பழுத்திருக்கும் மதுரமான கனிகளே உன்பசியைத் தீர்க்கத்தக்க பதார்த்தங்க'ளென்று சொல்லித் தன் மகனது பசியைத் தீர்க்கவேண்டி மகனைத் தனியே விட்டுக் கனிகள் கொண்டுவர வனத்திற்குள் போயினாள். இவ்வாறு போயின அன்னையாகிய அஞ்சனாதேவி வருவதற்குள் ஆஞ்சனேயனுக்கு மிகவுங் கடுமையான பசியுண்டாகியபடியால் அப்பசியின் வருத்தம் பொறுக்கமாட்டாமல் வேதனைப் பட்டுக்கொண்டிருக்கிற சமயத்தில், உதயகால மாகியதால் சூரியன் உதித்தான். அந்தச் சூரியவெப்பத்தை இவ்வனுமான் கண்டு தனக்கு அன்னை சொல்லிய கனிவகைகளிலே இதுவுமொரு கனியாமென்று நினைந்து, அச்சூரியன்மேல் அதிகவேகமாய்ப் பாய்ந்தான்; அப்போதந்த வேகத்தைப்பார்த்த தேவர்களெல்லாம் பிரமித்து 'இவன்குழந்தையாயிருக்கிற இப்பருவத்திலேயே பிதாவினுடைய பலத்தை

யும் வேகத்தையும் பெற்றதல்லாமல் கருடவேகத்தையும் பெற்றுச் சூரியன்மேலே யிப்படி பாய்ந்தானல்லவோ? ஆனலிவன் சகலபலமும் பொருந்தி நாளுக்குநாள் பிரபலமாவானாகில் நம்முடைய சத்துருக்க ளாகிய இராக்கதர்கள் அனைவரும் என்னதுன்பத்தையடைவார்களோ'வென்று ஆச்சரியமடைந்தார்கள். 'அக்கால் பிதாவாகிய வாயுபகவான் அக்கினிமயமா யெறிக்கும் சூரிய கிரணங்கள் சீதளசந்தனம் போலக் குளிர்ந்திருக்கக் கடவதென்று வரங்கொடுத்தான். அல்லாமலும், சூரியபகவான் தன்மேற்பாய்ந்து கவ்விக்கொண்டிருக்கும் இவ்வனுமானை விளையாட்டுக் குழந்தை யென்றெண்ணிக்கோபஞ்செய்யாமலும் தனது கிரணங்களினாலே தகிக்காமலும் தயவாக மகிழ்ச்சிக் கொண்டிருந்தான்.

இப்படிக்கிருக்கும் சமயத்தில் கிரணகாலம் நேர்ந்தபடியினாலே சூரியனைப்பற்ற வந்த இராகுவானவன் கவ்விக்கொண் டிருக்கும் அனுமானுடைய பராக்கிரமத்தைக்கண்டு பயந்தோடி தேவேந்திரனிடத்திற்குசென்று ' ஓ ஐயாதேவராசனே! சூரியசந்திரமண்டலங்களைப்பற்ற எங்களுக்கு முன்னமே வரங்கொடுத்திருக்க, இப்போது வேறொருவனுக்கு அந்த வரத்தை நியாயவிரோதமாய்க் கொடுக்கத்தக்கதாக நாங்கள் செய்தகுற்றமென்னமோ? என்ன காரணத்தாலிப்படிக்கு அவமரியாதை செய்வித்தீர்'யென்றுமுறையிட்டழுதான். அதுகேட்ட தேவேந்திரன் அப்பொழுதே மிகவும் கோபத்துடன் ஐராவதத்தின் மேலேறிக்கொண்டு சூரியமண்டலத்திற்கு அதிகவேகமாக சென்று நின்று இராகுவை யழைத்து 'நீ இந்தச்சூரியனைப்பிடி'யென்று யேவினான். அவனந்தப்படியே சூரியனை படுத்து வருவதைக்கண்ட இவ்வனுமான் சூரியபிம்பத்தைவிட்டு இராகுவின் மேற்பாய, அந்த இராகுவானவன் பயந்து நடுங்கி யுளறிக்கொண்டோட்டமாயோடி, தேவேந்திரன் காலடியில் விழுந்து புலம்பினான். அதுகண்ட தேவேந்திரன் மிகவும் உக்கிரமான கோபத்துடன் ஐராவதத்தை பிரசண்ட வாயுவேகமாக நடத்திக்கொண்டு அனுமான்மேற் சீறிவந்தான் அப்போதந்த ஐராவதத்தின் முகத்திலே சிவப்பாய் விளங்குஞ் சிந்தூரப்பொட்டின் வருணத்தை இவ்வனுமான் கண்டு இதுவுமொரு கனியென்றெண்ணி அவ்வைராவதத்தின் மத்தகத்தின்மேற் பாய்ந்தான். அப்படி பாய்ந்தவனைக்கண்ட தேவேந்திரன் பலம்பொருந்திய தன்னுடைய வச்சிராயுதத்தினாலே ஓங்கியடித்தான். அந்த அடிப்பட்டமாத்திரத்தில் இளங்குழந்தையானதால் அனுமான் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தான்.

அந்தவேளையில் இவ்வனுமானுடைய பிதாவாகிய வாயு பகவானானவன் இந்திரன்மேல் முனிந்து இம்மூன்றுலகங்களையும் கணநேரத்தில் அழித்து வெட்டவெளியாகச் செய்கிறேனென்று சபதங்கூறி உலகத்திலேயெங்கும் வாயு பிரவேசிக்காமலடக்கிக்கொண்டு தன் புத்திரனைப்பார்த்து மிகவும் விசனமடைந்து எடுத்துக்கொண்டுபோய், இமயகிரிச்சாரலில் ஒரு பெருத்த குகையினுள் பிரவேசித்து, அங்கு புதல்வனை காத்துக்கொண்டிருந்தான், அப்போது மூவுலகங்களிலும் வாயுவின் பிரவேசமில்லாததால் எறும்பு கடையான எண்பத்துநான்கு இலட்சம் யோனிபேதங்களாயுள்ள சகலபிராணிகளும் வயிறுவிம்மி மரணவாதனைபொறுக்க முடியாமல் துன்பப்பட்டன. அப்போது தேவர்களும் இருடிகளும் பிரமதேவரிடன் சென்று உலகத்திற்குண்டாயிருக்கும் ஆபத்தைத்தெரிவித்து வேண்டிக்கொள்ள, அவர் அந்தத் தேவர்கள் இருடிகளுடனே வாயுபகவான் இருக்குமிடத்தைத் தேடிவந்தார், அப்போது வாயுபகவான் அந்தப்பிரமதேவரைக்கண்டு எழுந்துவந்து நமஸ்கரித்து வணங்கி நிற்க, அக்கால் பிரமதேவன் அந்த வாயுபகவானுடைய விசனந்தீரும்படி தேறுதலைசொல்லி யுபசரித்து, மூர்ச்சித்துக்கிடக்கும் அனுமானைத் தம்முடைய கையினாலே தடவிக்கொடுத்து மூர்ச்சைதெளிவித்து எழுப்பித், தம்முடனே வந்த தேவர்களை நோக்கி நீங்களெல்லோரும் இந்த அனுமானுக்கு வரங்கள் கொடுப்பீர்களென்று அருளிச்செய்தனர்.

## அனுமான் வரம்பெற்றது.

அந்தப்படியே சூரியபகவான் தன்னுடைய கிரண ஒளியிலே நூற்றிலொருபங்கு பிரகாசமுண்டாகக்கடவதென்றும், சகலவித்தைகளையும் சுலபமாகக்கிரகிக்கத்தக்க நுட்பமான புத்தியும் உண்டாகக் கடவதென்றும், வரங்கொடுத்தார். வருணபகவான் கொடுத்தவரமாவது 'இவ்வனுமான் யுத்தகளத்திலே சத்துருக்களால்என்னுடைய பாசத்தாற்கட்டுப்பட்டாலும் மரணமடையா திருக்கக்கடவ' னென்பது. எமதருமராசன் 'இவ்வனுமான்மீது என்னுடைய காலதண்டம் பட்டபோதிலும் மரணமடையாமலிருக்கக்கடவ' னென்றும், குபேரன் தன்னுடைய கதாயுதத்தினாலே இவ்வனுமான் சாகாதிருக்கக்கடவனென்றும், உருத்திர மூர்த்தி தன்னுடைய சூலாயுதத்தினாலே அழிவில்லா திருக்கக்கடவனென்றும், விசுவகருமனானவன் சகலதேவர்களின் அத்திர சத்திரங்களினாலும், அபாயமடையாதிருக்கக் கடவனென்றும், வரங்கொடுத்தார்கள். பின்புபிரமதேவர் தம்முடைய பிரமதண்டத்தினாலும் நாச

மடையா திருக்கக்கடவனென்றும், வரங்கொடுத்து, அவ்வனுமானுடைய பிதாவாகிய வாயுபகவானை நோக்கி, "ஓ சமீரணனே! உன்னுடைய புத்திரன் இனியிந்தப் பட்டணத்தையெறிந்தழித்து இராக்கதர்குலத்தை வேரறுத்து, ஸ்ரீராமர் சந்தோடத்தையடையும்படிக்கு உபசரித்து, அவருடைய அனுக்கிரகத்தினாலே பிரமபதத்தையடையக் கடவனென்று அருள்புரிந்தார்.

## அனுமான் சாபமேற்றது.

பின்பு அனுமான் மும்மூர்த்திகள் முதல் தேவர்களிடத்திலும் அழிவில்லாவரத்தைப்பெற்ற கருவத்தினாலே இந்தப் பதினான்கு உலகங்களிலும் தனக்குநிகரானவர்கள் ஒருவருமில்லையென்று அகங்கரித்து நன்றுதீதுகளொன்றும் தெரியாமல் மதோன்மத்தனாகி தவசிரேட்டர்களாகிய முனிவர்கள் வாசஞ்செய்து கொண்டிருக்கும் ஆச்சிரமங்களிலும் யாகசாலைகளிலும் புகுந்து அவர்களுக்குச் சேகரித்து வைத்திருக்கும் ஓமதிரவியங்களாகிய பால், தயிர்தேன் நெய் முதலானவைகளைக் குடித்தும், கந்தமூலபலாதிகளைத் தின்றும் அவ்விடங்களை எச்சில்களாக்கியும் சந்தன புட்பங்களை யெடுத்தெறிந்தும், கமண்டலமுதலான பாத்திரங்களையுடைத்தும் எடுத்தெறிந்தும் இப்படிக்கு நானாவிதமான பாலிய சேட்டைகளால் யாகஎக்கிய ஓமகாரியங்களுக்கு இடையூறுசெய்துகொண்டிருந்தான். அதனால் எல்லோருமொருவாக்காகத் தன்னுடைய பல பராக்கிரமம் தனக்குதெரியாமற் போகக்கடவதென்று சபித்தார்கள். அப்படிஅந்தமாமுனிகளிட்ட சாபத்தினாலே விடப்பல்லைபிடுங்கப்பட்டபாம்புபோல இவ்வனுமான்தன்னுடைய அகங்கார கருவமும் கோபமுமடங்கிச் சாந்தத்தையடைந்தவனாகி, அந்தத் தபோதனர்களுக்குப் பயந்து நாமென்ன காரியஞ்செய்தோம் நம்முடைய அறியாமை யிப்படியிருந்தது இந்திரன் முதலானோருடைய சாபமும் பெரிதல்ல. திரிமூர்த்திகளின் சாபமும்பெரிதல்ல. அந்தத்திரிமூர்த்திகளுக்கும் சாபத்தைக் கொடுக்கவல்ல தபோதனர்களுடைய சாபத்தைக் கடந்தவர்களொருவருமில்லை. இதையறிந்திருந்தும் நாமிந்த மாமுனிகளுக்கும் அபசாரஞ் செய்தவனானேம் என்றாலோசித்துத் தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு வெட்கத்தை யடைந்தான்.

## அனுமான் சுக்கிரிவனுடன் தோழமைசெய்தது.

அதன்பின்பு வாலியென்றும் சுக்கிரிவனென்றும் பேர்பெற்ற இருவரும் தாரையின்பொருட்டு ஒருவருக்கொருவர் விரோதப்பட்டு, சகலலோகங்களிலும் சென்று வெகுகாலமாக யுத்தம்பண்ணிக்கொண்டு வருகிறகாலத்தில், சுக்கிரிவன் வாலியினாலே அடி

பட்டுச் சகிக்காமலோடி மதங்கமாமுனிவருடைய ஆச்சிரமத்தை யடைந்து அவர்பால் அடைக்கலம்புக, அவர் அந்தச் சுக்கிரிவனு க்கு அபயங்கொடுத்துக் காக்க, அந்தவேளையில் சுக்கிரிவனை இவ் வனுமான் பிராணசினேகிதனுகத் தோழமைகொண்டு அந்தமதங் கமாமுனிவரையுங்கண்டு வணங்கி, வித்தியார்த்தியாகி வேதாங்க முதலான சகலசாத்திரங்களையும் அவரால் ஓதுவிக்கவுணர்ந்து அனுமதிபெற்றுச்சென்ருன்.

## அனுமார் சூரியபகவானிடம் நவவியாகரணமும் வாசித்தது.

பின்பு அனுமான் சூரியபகவானிடஞ்சென்று வணங்கி என க்கு நவவியாகரணங்களும் போதிக்கவேணுமென்று பிராத்தி க்க அதற்கந்த சூரியபகவான் அனுமானைநோக்கி "அஞ்சனை சிங்கமே! நான் யேறியிருக்கும் இரதமானது ஒரு சுவாசநேரத் துக்கு இருபத்தோராயிரத்தறுநூறு யோசனைதூரம் அதிவேகமா கச் சதா காலமுஞ் சஞ்சரித்துக்கொண்டிருப்பதால், ஓரிடத்திலிரு ந்துபாடஞ் சொல்வதற்குச் சாவகாசமில்லை. இப்படியாக ஓய்வில் லாதிருக்கும் என்னிடத்திலே நீ வியாகரணங்கள் கற்றுகொள்ளு வதற்கு உனக்கு வல்லமையுண்டாகில், ஓதுவிக்கிறேன்" யென்று சொல்ல அதற்கிவ்வனுமான் சூரியபகவானைப்பார்த்து, "தேவரீ ருடைய அநுக்கிரகவிசேடத்தினுலே உம்மிடத்தில் அந்த வித்தை யைக் கற்றுக்கொள்வதற்கு எனக்கு வல்லமை யுண்டாயிருக்கு" மென்று சொல்லி, உடன்பட்டுக்குருவினிடத்தில் எதிரேயிருந்து பாடங்கேட்பதுபோல சூரியபகவானுக் கெதிர்முகமாகவே அந்த இரதவேகத்துக்குப்பின்னிடாமல் ஆகாசமார்க்கத்தில் பாய்ந்தபடி யாய் ஆறுதினத்திலே நவவியாகரணங்களையும் பூரணமாய்க் கற் றுக்கொண்டான். மேலும் தயாளத்திலும் சாந்தத்திலும், சத்தி யத்திலும், ஞானத்திலும், நற்குணத்திலும், பிரயத்தினஞ்செய்த காரியங்களை பாதுகாக்கும் மனேதிடத்திலும் இவனுக்குச்சமான மான புருடர்களொருவருமில்லை, இவனுலே தருமங்களெல்லாந் தழைத்து தேவர்களெல்லாரும் சவுக்கியத்தை யடைந்தார்கள். மேலும்பாவங்களனைத்தையும் பரிபாலிப்பவராகிய இராக்கதர்க ளெல்லாருந், துக்கத்தை யடைந்து அழிந்தார்கள். இன்னுமளவி வில்லாத மேன்மை பொருந்திய இவ்வனுமானுனவன் ஸ்ரீராமரு டைய திருவடிப் பணிவிடையை விரும்பி நீங்காதிருந்து, சிரஞ்சீவி யாகி விருத்த பிராமண உருவத்துடன் ஸ்ரீமத் ராமாயணக்கதைப் பிரசங்கத்தைக் கேட்க விருப்பமுற்று, எந்த இடத்தில் நடக்கிற தோ அந்த இடங்கள்தோறும் முன்னதாய்வந்து சிரவணஞ்செ ய்துகொண்டிருந்து, கதை நிறுத்தப்பட்டு யாவரும் போயினபின் பு தான்போவான்.



உ
திருச்சிற்றம்பலம்.

சிவகலாரகசிய மென்னும்

# சிவமகாவைபவம்.

## சிவவணக்கம்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அகரமுத லெழுத்தென்ன யெல்லா மாகி
    யளவையெலா மிகந்தெழுவா யின்றி யெங்கும்
நிகரிலருட் பெரும்போக மளித்துக் காக்கும்
    நின்மலமிட் களயோம நிரஞ்ச னத்தைப்
பகருமா மறைகளெலாம் வழக்கிட் டின்னும்
    பரவவளா ரானந்த வாழ்வை யன்பர்
அகவடிவா யெழுந்தனந்த வடிவா யோங்கி
    டாளுகின்ற பரம்பொருளை யணுகி வாழ்வாம்.

## சிவப் பிரபாவம்.

உலகில் அநாதியாயுள்ள சிவ என்னும் மகாமந்திர ரூபமாகிய சைவமகா சமய பிரபாவத்தைக் குறித்து அளப்பரிய வேதாதி கலைகள் இன்னும் அறைகின்றன வென்ப ஆதலால், எமது சிற்றறிவிற்கெட்டிய சிலவற்றைச் சுருக்கமாகக் கூறத் தொடங்குகிறேம்.

உலகி லான்மகோடிகளின் விவேகவன்மை மென்மைக்கேற்றபடி அகச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், புறப்புறச் சமயம் என அநேக சமயங்கள் தோன்றியிருக்கின்றன. அச்சமயங்களுக்கெல்லாம் சிரசாய், ஒருவராற் செய்யப்படாததாய், அச்சமயங்களுக்கு மாறிலாததாய், என்றும் ஒருபடித்தாய், திருவருட் சொரூபமாய் வேதாதி கலைகளெல்லாங் கொழித்துக் கோடிக்கும் பெரு நெறித்தாய், அத்துவிதமாய்விளங்குவது சைவசமயமேயாம்.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
    புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
    பேதாபே தமு மின்றிப் பெருநூல் சொன்ன

Page numbering incorrect

அறத்தினால் வினைவதா யுடலுயிர்க ணருக்க
    னறிவெளிபோற் பிறிவருமத் துவிதமாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
    சித்தாந்தத் திறனிங்கு தெரிக்க லுற்றும் —சிவப்பிரகாசம்.

நல்குக வுயிர்கட் கெல்லா நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

—திருவிளையாடல்.

விண்ணவரிந் திரன்முதலோர் நார தாதி
    விளங்குசத்த ரிஷிகள்கன வீணை வல்லோ
ரெண்ணரிய சித்தர்மனு வாதி வேந்த
    ரிருக்காதி மறைமுனிவ ரெல்லா மிந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானே யுள்ளங்
    கையினெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றோ
    செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும்.

செப்பரிய சமயநெறி யெல்லாந் தன்றன்
    றெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான
வப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பா
    லடுத்தநூல் களும்விரித்தே யனுமா னாதி
யொப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் யென்ன
    வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கு
மிப்பரிசாஞ் சமயமுமா யல்ல வாகி
    யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி

இயல்பொன்றுந் திரியாம லியம மாதி
    யெண்குணமுங் காட்டியன்பா லின்ப மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
    பண்புறவுஞ் சௌபான பட்சங் காட்டி
மயலறுமந் திரஞ்சிட்சை சோதி டாதி
    மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
யயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தி
    லமர்ந்தது வைதிகசைவ மழகி தந்தோ.

அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்
    றறிஞரெலா நடுவறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
    வைத்திருந்த மாதவர்க்கும் மற்று மற்று

மித்ராதி போககலம் பெற்ற பேர்க்கு
இதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.

—தாயுமானவர்.

அருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேத மென்னும் பாதவம் வளர்த்தனை
பாதவந் தன்னிற் படுபயன் பலவே-அவற்றுள்
இலைகொண்டு வந்தனர் பலரே யிலையொரீஇத்
தளிர் கொண்டு வந்தனர் பலரே தளிரொரீஇ
அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டு வந்தனர் பலரே
அவ்வா றுருப்பு மிவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தம். -குமரகுருபர சுவாமிகள்.

சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறை
என்றுஅளவிலா அறிஞர்க ளிசைத்தனர்.

—அருணைக் கலம்பகம்.

இத்தகைப் பெரும் பிரபாவமுடைய தெய்வத் திருநெறிச் சைவசமயத் திறைவர் யாரோவென்னில், பிறப்பிறப்பின் வசத்தராயுள்ள மும்மூர்த்திகளைப்போலாது

ஒருநாம மோருருவ மொன்றுமிலாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ.

—திருவாசகம்.

அகளமா யாரு மறிவதப்பொருள்.—உந்தியார்.

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று.—களிற்றுப்படியார்.

எனக் கூறிப்போந்தபடி நாமரூபகுணங் குறிகளொன்று மில்லாது என்றும் நின்மலம், நிரஞ்னம், நித்தியம், சதானந்தம், தற்பரம் முதலிய இலக்கணங்களை வாய்ந்து அகலமாய் சிவம் என்னும் பெயரினால் விளங்கப்படுவோராம்.

முன்னர், எமது தயாவிபவனாகிய சிவபெருமான் ஸ்ரீநந்திதேவர் முதலினோருக்கு உபதேசித்த பத்தசாராமுதத்தை, பின்னர்



சவுனக நைமிசாரண்ணியராதி முனிவர்களுக்கு ஸ்ரீவியாசாதிமுனி வர்களா லனுக்கிரகித்தபடி கூறப்புகின் அதுவே ஓர் பெருநூலா மாதலின், அதில் சிறிதே இங்கே கூறுதும்.

சிவமென்னும்பதம், மகாமந்திர ரூபமாக ஆன்மாக்கள் அஞ் ஞானந்த காரங்களை யொழித்து முத்தியைத் தருவதேயல்லாது, அதற்கு அருத்தம் இன்னதென்று இன்னும் பலமறைகளே வழக் கிடுகின்றன. அதனை முற்றுமுணர்ந்த முனிவர்களும் அனுபவ பூர் வகமாய் அறியப்படுவதல்லாது, அறிந்தவண்ணஞ் சொல்லப்படுவ தல்ல. "அதுவானாலதுவே சொல்லும்" என்றும், "அவனருளே கண்ணாகக்காண்பதல்லால் இப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத்த னிவனிறைவனென்றெழுதிக் காட்டொண்ணாதே", என்றும், "சித் தமுஞ்செல்லாச் சேட்சியோன் காண்க", என்று, கூறிக் களித்த னரேயன்றி, வேறோ ரிலக்கணங் கூறவில்லை: அன்றி; சௌபான பட்சமாகக் கூறிய சைவபேதங்களுள்ளுங் கூறுது விட்டனரே யெ ன்னின், தெய்வமொன் றுண்டென்னின் அதன் றிருவருட் பிர பாவ மிப்படியென்று கூறலே வழக்கன்றி, அஃதோர் பொரு ளென்னின்,

எங்கேயிருப்பது?
அதன்பேரென்ன?
அதன்செயலென்ன?
அதன்குணமென்ன?
அதையீன்றாரார்?
அதிருந்தகாலமெப்போ?
அதன்உறவினரெவர்?

என்பதாகிய குணங்குறியாதியவைகளைக் கூற நேரிடும். நிறம், குணம், பெயர், குலம், செயல், காலம் இடம் முதலிய இவற்றை யுடையதற்குச் சுகதுக்க முதலியன உளவாகலான், அவை கடவு ளுக் கிலக்கண மாகா.

சாத்திரங்களும், சர்வஞ்ஞத்துவம், சர்வேச்சுரத்துவம், சர்வ நியந்திருத்துவம், சர்வாந்தர்யாமித்துவம், சர்வகற்பிதத்துவம், என் னுந் தெய்வத் திருவருட் குணங்களையே யன்றி, வேறில்லாதலால் சிவனென்னும் மகா வாக்கியத்திற்கு பிரதியருத்தம் வேறில்லை. ஆயினும், 'அங்கிங்கெனாது எங்கும்பிரகாசமாயானந்த பூர்த்தியாகி' ஆன்ம கோடிகளுள்ளும் அபூதமா யிருந் தாண்டருள் புரியும் இறைவர்,

"மறைமுத றனக்கு நாமரூபங்கள் மருவுத லில்லையே யெனினும்
கறையற விளங்கு மாயையி னாலே கற்பிக்கப் பட்டன வாகு

முறைநவச் சிவன்மா தேவன்மூற் பெயர்க ளுருத்திர னுமங்க ளாகு
மறைப்பர பிரம முதற்பெயர் பரத்துவளர் வாசகமாமால்."

—சூதசங்கிதை.

"அகளமா யாரு மறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற." —திருவுந்தியார்.

"அறிவரியான் றனைபடைய வாக்கையாக்கி
அங்கங்கே புயிர்க்குயிரா யறிவுகொடுத்தருளால், செறிதலினால்."

—சித்தியார்.

"அகாமுதல வெழுத்தெல்லாமாதி
பகவன் முதற்றேயுலகு" —குறள்.

எனக்கூறியபடி உலகமுதற் பொருளாம்; சிவமுதற்பிருதிவியீ றதாய் விளங்கும் யாவுங் கருணையர்லோங்கி நாமரூப வசத்தாய்அ வற்றுள்ளும் அபூதமாய், 'அவனன்றியோ ரணுவுமசையா தென்பா' ரை எல்லாமியக்கி,

"உருமேனி தரித்துக்கொண்ட தென்றது முருவிறந்த
வருமேனி யதுவுங்கண்டோ மருவுரு வானபோது
திருமேனி யுபயம்பெற்றோஞ் செப்பிய மூன்றுநந்தங்
கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவுதாமே"

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதல் கற்ற கேள்வி, வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக் கப் பாலா, யெல்லாமா யல்லவுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச், சொல்லாமற் சொன்னவரை நினையாம நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்." —திருவிளையாடல்.

என்றபடி ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு மூர்த்தி தலம், தீர்த்தமாயும்: குருலிங்க சங்கமமாயும், அடியாருள்ளக் குறிப்பிற் கேற்கப் பல்வேறுவடிவங்களாயுந் திருவுருக் கொண்ட மூர்த்த பேதங்களும். இலீலாவைபவங்களும்; திருவருட் பிரபாவங்களும் அனந்தமாகும். அவற்றுள் சிலவற்றைமாத்திரமே எளிதிலுணரு மாறு சங்கிரகமாகக் கூறுமாறுற்றனம் என்னை யெனின்,

பிறப்பு.

மற்றேனைய தேவர்களைப்போல நமது அருட்பெரும் பரம் பொருளுக்கு சனனமரண சுகதுக்காதி சங்கற்பங்கள் எக்காலத் திலுமில்லை.

கன்னபுர மாலே கடவுளினும் நீயதிகம்
உன்னிலுமோ நானதிக மொன்றுகேள் - முன்னமுற்ற
உன்பிறப்போ பத்து வுயர்சிவனுக் கொன்றுமிலே
என்பிறப்போ வெண்ணி லிலே

என்றும், 'பிறப்பொடு இறப்பு மில்லான்' எனவும் புலவர் பெருந்தகையார் அளப்பரியார் இசைத்துள்ளார். ஆயின், ஸ்ரீவல்லாளமகாராஜனுக்கும் கௌரி யென்பாளுக்(திருவிளையாடலில்)க்கும், பட்டினத்தடிகளுக்கும், இன்னேயாருக்கும் புத்திரராகத் தோன்றினரே யென்னின், வாயிலா னுதித்தா ரில்லையே. சிலரறியாமையாற் கற்பிதமாகக் கூறினுரேனும் வேதாதிகளே சங்கீகரிக்கத் தக்கதாகா. ஆனதாலேயே வேதம்பொதுவாகத் தியானரூபமாகவும்; ஆகமம் அதனை விரித்து அடியார்கள் சகலரூபமாய் வழிபட்டுய்யுமாறு கிரியாரூபமாகவும்; புராணங்கள் அம்மூர்த்த பேதங்களை யடியாரும் அவர்மரபினரும் சிரத்தாபத்தியினராயடையுமாறு கதாரூபமாகவும் கூறப்பட்டிருக்கின்றன.

ஆனல் சாத்திரங்களுள்ளே அநேக திருவுருவங்களும், அங்கலட்சணங்களும், மணியுடைகளும், மனைமகவாதி சார்புகளும் இடம் தொழிலாதிகளும் கூறப்பட்டுள்ளதே, அவையாதோ வென்னின், மேற்கூறியபடி தம்மைவழிபடும் அன்பர்கள் கோரியவாறு எழுந்தருளி யாட்கொண்ட மூர்த்திபேதங்களாம். இது கலாதீதமாக அடியார் குறிப்புநெறியே வெவ்வேறு வடிவு பூண்டமையால் செயலும், அருளும் பலவாகும். அவைக ளங்ஙன முண்டாயதெவ்வாறென்னின்,

## இலீலாபேதங்கள்.

உலகில் ஆன்மாக்கள் அனேகராயும், அஞ்ஞானிகளாயும், ஞானிகளாயும், பாவிகளாயும், புண்ணியராயும், இருவினைக்கீடான அநேகசரீரமுடையவர்களாயும், புவன போகங்களை யனுபவிப்பவராயும், கீழ்ப்போன அனந்த சனன மரணவசத்தராயும், யோகிகளாயும், பலவேறுவகைப்பட்டவராயும் வதியும் ஆன்மாக்களுய்யுமாறு மானிடர்போலும், மன்னர் போலும், வானவர் போலும், மிருகமாயும், விருத்தராயும், பாலராயும், அடியார்போலும் அநந்த திருவுருவங்களைப்பூண்டு கடாட்சிக்கப் புறப்பட்டு இகபரார்த்தங்களை யடையும்படிக்கு உலகையும், உலகத்துள் ஆன்மாக்களின் சுகத்திற் கேதுவான பதார்த்தங்களையும், அவைகளைத் தெரிந் தனுபவிக்கத் தக்க விவேகத்தையும், அறிவிற் கெட்டாவிடத்

தறிந்து நடக்குமாறு வேதாதி கலைகளையும், அக்கலைகளிற் சந்தே கந் தோன்றிய விடத்திற் றெளியுமாறு ஆசாரிய பீடங்களையும், இன்னும் உலகிற் காதாரமான எவ்வகைப் பொருள்களையு மளித்து, ஆன்மாக்களுள் எந்தோறும் அபூதமாயிருந்தும், ஆன்மாக்க ளுணராவிடத்துத் தாமே அவரவர்க் கதுவதுவாயு மிருந்த திருக் கோலங்களே மூர்த்த பேதங்களாம். அவற்றுள் சிலவற்றைக் கூறுவாம்.

திருவிரிஞ்சையில் ஓர் செட்டியாருக்கு வழிகாட்டி மார்க்கசகாயரென்றும், திரிசிரபுரியில் ஓர்பெண்ணுக்குத் தாய்போ லெழுந்தருளி பிரசவநோயினைத்தீர்த்தமையால் தாயுமானவ ரென்றும், வேளூரில் ஆன்மப்பிணியைத் தீர்த்தலால் வைத்தியநாத ரென்றும், மதுரையில் யானைக்கருளியதால் ஐராவதேச்சுரரென்றும், நாவல்நீழலில் யானையாதிகளுக் கருளியதால்சம்புகேசுரரென்றும்; பலமூர்த்தங்களைக் கொண்டதன்றி, மாமனுய்வந்து வழக்குரைத்தும், மாணிக்கம்விற்றும், விறகுசுமந்தும், மண்வெட்டியும் வேடவடிவுகொண்டும், பாலின்றி வருந்திய பன்றிக்குட்டிகளுய்யுமாறு பால்கொடுத்தும், மருத்துவஞ்செய்தும், தண்ணீர்பந்தல் வைத்தும் சோறளித்தும். குதிரையோட்டியும், பொன் கொடுத்தும், அரசாண்டும், இதுபோன்ற அளப்பரிய திருவிளையாடல்களைச்செய்தும் விளங்கினர். அவ்வாறுகொண்ட திருக்கோலங்களில் காணப்பட்ட சிவசின்னங்க ளனந்தமாகும் அவற்றுள்,

கங்கை.

ஒருகால் கயிலையி லுமையம்மையார் சிவபெருமான் விழிகளை ஓர் விளையாட்டாகப் பின்வந்து மூடினர். உடனே உலகங்களெல்லாம் இருள்மூடிக்கொண்டது. அதனுல் தேவர்முனிவரெல்லாம் தங்கள் கருமங்களும், பகலிரவாதி பொழுதுகளும் தோன்றாமையால், பெருமானிடத்துற்று இறைஞ்ச, அக்கால் பரமன் நமது நுதல் விழியைத் திறந்து பழயபடி உலகை விளங்கச், செய்தனர். இதனை யுணர்ந்த அம்மையார் 'அபசாரம் நேர்ந்ததே' யெனப்பயந்து அச்சத்தோடு கையையெடுக்க; அக்கால் தம்பத்து விரல்களினின்றும் நீர்த்துளிகள் மகாபிரளயம்போலுய் பெருகிக்கடல்வழி கொள்ள நேர்ந்தன. இப்பெரும வெள்ளப்பெருக்கிற்கு அஞ்சிய பிரமாதி தேவர்களெல்லாம் இறைவன் மாட்டடைந்து தெரிவிக்க, பெருமான் அவ்வெள்ளத்தை யழைத்துச் சடையிற் றரித்து உலகுக்கோர் கெடுதியும் நேராவண்ணம் காத்தனர். இது அம்மையாருடைய சிறந்த கைவிரலினின்றும் உண்டானமையால் கங்கையெனப்

பெயரும், அதை யணிந்ததால், சிவபெருமானுக்குக் கங்காதரர் என்றோர்பெயரும் உண்டாயின். பின்னர், இறைவன் தரித்ததனை அரியயனிந்திராதிகள் தத்தம் பதிகளுக்கும் சிறிதுகொண்டு சென்றனர்.

திருமால் வாமனவதாரத்தில் மாவலிபால் மூவடிமண்வேண்டி உலகையளந்த பொழுது அண்டம் பிளந்தொழுகிய ஆகாயகங்கை மாளவதேசவழியாய்ச் சமுத்திரத்தை அடைந்தது. இந்தியதியா வைணவர் சிவபிரா னணிந்தனரெனக் குழறிவழிகின்றனர். அவைமலங் கொழுக்க வாய்ப்பிதற்றும் பித்தென்க.

## பூலோககங்கை.

அயோத்தியையாளும் சகரசக்கிரவர்த்தி விடுத்த அசுவமேதப் புரவியை தம்வாழ்வு அழிவதை நோக்கிய இந்திரன் வஞ்சகத்தாற் பிடித்து, பாதலத்தில் தவம்புரியும் கபிலமுனிவரிடங் கூட்டிப்போயினன். இதனை யறியாத சக்கிரவர்த்தியின் மைந்த ரறுபதினாயிரவரும் எங்குந்தேடிக்காணாது, பாதலத்தைத் தோண்டி முனிவர் பக்கலி லிருக்கக்கண்டு முனிவர் வஞ்சமேயென முனிவரைத்துடிக்க, முனிவர் விழித்து, அவரெல்லாரையும் சாம்பராகச் சபித்தனர்; இதனை யறிந்த சகரன் தம் பௌத்திரனால் புரவியைக் கொணர்ந்து யாகத்தை முடித்தனன். அதன்பின் அவன் சந்ததியாரில்பகீரதன் என்பானொருவன் தோன்றி, தம்முன்னோர்களாகிய சகரர்கள் சாம்பராயினமையை யறிந்து பதினாயிரவருடம் பிரமனை நோக்கித் தவமியற்ற, பிரமன் பிரத்தியட்சமாகி ஏ! பகீரத! நீ விரும்பியவாறுதற்கு சாட்சாத், சங்கரன் சடாமுடியினின்றும் கங்கை பரிசித்தாலன்றி யாகாது. அங்ஙனம்வருமேல் உலகம் அழியும். அதனையடக்கற்கு இறைவனன்றி மற்றோராலாவதில்லை. ஆதலின், இறைவனை நோக்கித் தவம்புரிகவெனச் சொல்லிச் சென்றனன். இப்பால் பகீரதன், சிவபிரானைநோக்கித் தவமாற்றலும், பெருமான் கங்கையிலோர் துளிவிட்டனர். அக்கங்கைநதி யுருவேற்று சகரர்கள் சாம்பரிற்படர்ந்து அவர்களை முத்தியிற் சேர்த்தது; அதனால், பகீரதியென்றும், இக்கங்கை தங்கிய கடலைச் சாகரர் தோண்டியதாற் சாகரமென்றுங் கூறியதென்க.

## சந்திரன்.

தக்கன் அசுவனிமுதலிய இருபத்தேழு பெண்களைப்பெற்று, சந்திரனுக்கு மணம்புணர்த்தி, சந்திரனைநோக்கி "நீயிந்த இருபத்தெழுவ, ரிடத்திலும் பாரபட்சமின்றி யிருப்பா" யென்று கூறி

னன். சிலகாணிங்கிச் சந்திரன் கார்த்திகை, உரோகணி யிவ்விருவ ரிடத்தில் மாத்திரம் பற்றுடையனு யிருந்தமையால், மற்றமாதர் கள் அதனைத் தந்தைபால் கூறத் தக்கன் பின்னும் சந்திரனை நோக்கி வற்புறுத்தினன். சந்திரன் மீண்டும்கேளாது பழயபடியே யிரு ந்தமையால், மற்ற பெண்களும் தந்தை யாகிய தக்கனிடத்துமீண் டுந் தெரிவிக்க, இதைக்கேட்ட தக்கன் சினந்து "சந்திரன் நாளுக் கொருகலையாய்க்குறைந்து இறக்கக்கடவ" னெனச் சாபமிடலும், சந்திரனவ்வாறே கலைகளெல்லாங்குறைந்து ஒருகலையோடுவருந்தி இந்திரனிடஞ்செல்ல, இந்திரன் பிரமனிடம் விடுக்க, பிரமன் அங் ஙனம் சிவன்மாட்டனுப்ப, சந்திரன்கயிலைக்கெய்தி கருணாநிதியா கிய பெருமானிடத்து விண்ணப்பிக்க பெருமான் யாவுங்கேட்டு "ஏ! சந்திரா! நீ நமது சடைமுடியி லிருக்கக்கடவை. இருக்கின், தக்கன் சாபத்தால் நாளுக்கொருகலை தேய்ந்தும் முடிவில் ஒருகலைமாத்திர முன்னைவிட்டு நீங்காமனு மிருக்கக்கடவை" யென்று வரமளித்து, சடாமுடியினிடத்துத் தரித்தனிர். இதனால் சந்திரசேகரரெனப் பெற்றனர்.

## பிச்சாடனமூர்த்தம்.

முன்னொரு கற்பத்தில், தாருகாவனத்தில் வேத வேள்விக ளாற் சிறந்த முனிவரர் அநேக ரிருந்தனர். அவர்கள் தம்மைத்தா மே வல்லவராய்க்களித்து, தாம் பரவும் வேதவேள்விகளே முத்தித ருவதாய்க்கருதி, இறைவன் பாற்சிறிதும் புத்தியிலராய் அவமே பலபகல் கழித்து, தவநெறியொழித்து நவமாய் எண்ணில்லாத யாகாதிகளைச் செய்துவருங்கால், உயர்வொப்பில்லா உமையொரு பாகன் "ஐயோ! முனிவரர் வீணாள்கழித்து வாணட் பெயராநின் றார், எங்ஙனமுய்வா" ரெனக் கருணையாலாளத் திருவுளங்கொ ண்டு திருமாலை நோக்கி "மாலே! முன்பாற்கடல் கடைந்தநாள் கொண்ட மோகினி யுருவைத்தாங்கி முனிவராண்மையை யழிக்கக் கடவை" யென்றிசைத்துத் தாமே ஒரு நவவுருவைத்தாங்கி, கை யிற் பலிவோடும் சூலமுமேந்தி, இருடிபத்தினிகள் வசிக்கும் வீதி யில் மெல்லநடந்து, இனியவோசையோடும்பாடிப் பலியேற்பார் போல ஏகரூபியாய்ச்செல்லுவா ராயினர். இவ்வினிய பண்ணோசை யை அம்முனிமனைவியர் கேட்டு வாயிலில்வந்து பெருமான் பிச்சா டனத்திருக்கோலத்தைத் தரிசித்து, அவரது பேரழகையும் இன் னோசையையு முணர்ந்து,இச்சைகூர்ந்து வருந்துவாரும், காமத்தாற் பிணிக்கப்பட்டெதிர் நோக்குவாரும், கலைநெகிழ்வாரும், வளைசோ ர்வாரும், உள்ளங்கசிந்துருகுவாரும், நாணழிவாரும், புணரப்பிர

ர்த்திப்பாரும், ஐயமிடுவாருமாயினர். இங்ஙனம் வருந்தும் நங்கையர்பால் இறைவர் மாயசால வித்தையென்ன நாற்பத்தெண்ணாயிரம் புதல்வர் தோன்றி இறைவனைப்பணிய, இறைவன் 'நீவிர்எம்மைக்கோரித் தவம் புரியுங்கள்' எனக்கூறிப் புறம்போயினர்.

திருமால் பெருமான் திருவாணையைப் பெரிதுவந்து முன்னை மோகினி உருவைத்தாங்கி முனிவரர் பாலெய்த, முனிவர்கள் மோகினியுருவைக்கண்டு கரைகாணாக் காமத்தாழ்ந்து, யாகாதிகருமங்களை விடுத்து, தத்தம் பெண்டிரை அவாவிச் சென்று காணாழிக் கற்பழிந்தாராய்க் காணப்படுதலின், 'ஈதென்னை' யென் றுள்ளத் துணர்ந்து, திருமாலே மோகினி யுருக்கொண்டு தவநிலைகுலைத்தாரென்றும், நம்பனேபிச்சாடன வுருக்கொண்டு மாதர் கற்பழித்தாரென்றுந் தேறி, 'அந்தோ! பிராயச் சித்தஞ் செய்தற்கு மேலாய் பழிப்பினவாயிற்றே! என்றுக்கிரமித்து, சங்கரனை யழிக்கின்றோமெனச் சபதங்கூறி, ஓர் அபிசாரவேள்வி செய்தனர்.

புலியாடை

அதினின்று பேரிடியும் ஊழித்தீயும் ஒன்றுசேர்ந்ததென்று நினைக்கும்படி கருச்சனையோடு அக்கினிக்கண்ணும், உக்கிரரூபமும் மலைபோற்பருத்த உருவும்தாங்கிய ஒரு புலிதோன்றியது. அதனை நோக்கி 'நீ விரைவில் உமாபதியைக் கொல்லுகவென விடுக்க. அவ்வாறே புலிபரமனைநோக்கி உலகமஞ்சும்படி செல்லுகையில், எல்லாம் வல்ல இறைவன் புலியினெதிரே சென்று அதனைக் கொன்று அதன் சருமத்தை யுரித்து ஆடைபோல அரையி லணிந்தனர்.

மழு.

பின்னர் அவ்யாகத்தினின்று ஓர் மழுத் தோன்றியது. அதனையும் முனிவர் 'சம்புவைச் சங்கரிக்க' வெனவிடுப்ப, அங்ஙனம் முனிவரானை கடவாது எமது திருவருட்பெருஞ் சோதியினெதிரில் நெருங்கலும், பெருமான் வலக்கையிற் பற்றி 'நற்றவமுடையாய்! இங்ஙனே நமக்கோர்படையாகுக' வெனத் தரித்தருளினர்.

மான்.

அதன்பின் அவ் வோமாக்கினியினின்று மீண்டு ஒரு மான் தோன்றினது, அதனையும் முனிவரர் 'சதாசிவன்அஞ்சாத்திறத்தை யழிக்கக்கடவை' யென விடுப்ப, அம்மான் சராசரமனைத்துமஞ்சுங்க ஆக்கிரமித்துஆகாயவெல்லையி னுலகங்கள் வருந்துமாறோலமிட்டு வருதலுங், கண்ணுதல்கண்டு ஆசிகூறித் தம் இடக்கரத்தேந்தினர்

### அரவம்.

பின்னர் ஒருகால், காசிபர் மனைவியரில் கத்துரு, விநதை யென்னு மிருவரும் தத்தம் அழகைச் சிறப்பித்து, அழகில்லாள் சிறை படுவதாகச் சரதமிட்டு முனிவரை யடுத்துக் கேட்டலும், முனிவர் கத்துரு சிறந்தாளென, விநதை சிறைபட்டு, சிறையாற்ருது வருந்தி, 'சிறைவிடுக்க'வெனக் கோறலும், கத்துரு 'வானுலகிலுள்ள அமுதளிப்பின் விடுப்பா'மென, 'ஆகுக'வெனக்கூறி, விநதை தங்குமாரனுகிய கருடனுக்குணர்த்த, கருடன் வானவர் காவலையழித்து அமுதங்கொணர்ந்து வருங்கால், திருமால் எதிர் சென்று 'நீ மிக்க வன்மையன் யாதுவரம் வேண்டு'மென, கருடன் "உம்மைவிட்டுப் பிரியாவரமே வேண்டும்" என்ருன் திருமால் சமய மிதுவே யெனக்களித்துக் "கருடனே! நீயென்றும் எனக்கு வாகனமாகவும், சருப்பங்களுக் கமுதூட்டா திருக்கவும் வேண்டு" மென, அப்படியே கருடன் சம்மதித்து பாம்புகட்கு அமுதூட்டாவகை கூறித் தாயினிடம் கலசத்தைக் கொடுத்து,சிறைவிடுத்து தனது மாற்ருந்தாயாகிய கத்துருவைபெற்ற அரவங்களைக் கொன்று வதைத்தலோடு சிவபூசையும்பெற்று, திருமாலுக்கு வாகனமாயினன். இதையறிந்த பாம்புகள் நாமும் சிவனையடைந்து என்றுங் கருடனுலும் நசிக்காவகை யடைவாமென்றுவிரும்பி சிவார்ச்சினை செய்தலும், சிவபெருமான் அரவத்து அருச்சனைக் கிரங்கி அப்பாம்பினங்களை ஆபரணமாக அணிந்தனர்.

### கங்கணம், அரைநாண், காலணி, கடிசூத்திரம்.

முன் தாருகாவனத்து இருடிகள் புலி, மான், மழு இவைகளை ஏவிய பின்னர், அவ்வபிசார வோமத்தினின்று பிறப்பித்துச் சிவன்மேல் நாம் ஏவியவையனைத்தும் பயனற்றதாயின வென்று உத்தேசித்து வேண்டும் சருப்பக் கூட்டங்களைச் சிருட்டித் தேவினுர்கள். அவ்வரவங்கள் மகா பிரளயம் போலும் விடச்சுவாலை வீசி மிக்க ஆவேசத்தோடும் நெருங்கலும், சந்திரசேகரர் 'என்னை! கொடுந்தன்மை யுற்றீர். அஞ்சற்க இதோயாமணிந்துள்ள சருப்பவினத்தோடும் வாழ்வீராக'வென ஆசிகூறி, அவ்வரவங்களைக்கையினிடத்துக் கங்கணமாகவும், காலினிடத்து வீரகண்டைபோலும் இடையில் அரைநாணுகவும், கடிசூத்திரமாகவுந் தரித்தனர்.

அன்றிச் சேடன் முதலினேர், ஒரு காலத்தபயமாக வந்து அடைந்தனவாகவும், அவற்றையு மணிந்ததாகவும் பிறசரிதங்களும் மிக்குளவாயினும், என்றும் நிலையால் அணிவகையிற் சிறப்புற்றவகைக ளிவையே யெனக்கூறுப.

பூதகணங்கள்

அத்தாருகாவன முனிவர்கள் "என்னே? சிவன்மிக்க சதுலமுடையான்போலும்! நாமனுப்பியவனைத்தும் அவன்முன் பயனற்றவாயின! ஆயினும் ஆருக"வெனக் கொழுந்தழலினில் பூதவெள்ளங்களைச் சிருட்டித்து, 'குழகனைக் கொல்லுக'வென விடுப்ப, பூதகணங்கள் அஞ்சாதனவாய், வெடிகுரலோசையோடும் படபடத்து உக்கிரத்தோ டெதிர்வரலும், சிவபிரான் அவர்களைக் கருணையோடு மழைத்து, 'நீங்கள் மிக்க நல்லவர்களே! நமதிடம் வந்தமைக்கு ஒருறுதி வேண்டு மன்றோ? இன்று முதல் நமது சேனையாக இருக்கக் கடவீராக' எனக்கூற, அங்ஙனே பூதகணங்கள் இறைவன் திருவாஞ்ஞையைக் கடவாதிருக்கின்றன.

வெண்டலை

பின்னர் முனிவர் தாங்கள் கோரியபடி யாகாமையின் மிக்க மந்திர வன்மையோடும் பீதிகொள்ளுந் தன்மைத்தாய், புன்னகையோடு கூடியதாய், ஒரு வெண்டலையை யுண்டாக்கி விடுப்ப, அதனைப் பெருமான் கரத்தாற்பற்றிச் சிரசிலணிந்தன ரென்ப.

துடி உடுக்கை.

அப்பால் முனிவர்கள் தம்முயற்சிகளனைத்தும் வீணாதலைக் கருதி அச்செயலனைத்திற்குங் காரணமாயுள்ள மந்திரங்களை விடுப்ப, அவையாவும் ஒன்று சேர்ந்து உடுக்கைபோலும் வடிவுடையதாய், பெரு முழக்கத்துடனே கயிலாசபதியின் முன்னேசெல்ல, பெருமான் கரத்தாற்பற்றி 'இனிய ஓசையை முழக்குக'வென ஆஞ்ஞாபித்தனர்.

முயலகன் அக்கினி.

மீண்டும் முனிவர்கள் 'எவ்வகையாலுஞ் சிவன்சாகாது அனைத்துந் தன்வயங் கொள்ளுகின்றனன். பேராற்றலுடையான்போலு'மெனச்சரதங்கூறி மிக்ககோபாவேசத்துடன் மறுபடியும் வேறோர்யாகமியற்ற, அதினின்றும் ஒரு சூரனுதித்தனன். அவன்பேர் முயலகன் அம்முயலகனையும் அந்த யாகாக்கினியையும் நோக்கி "மற்றவைகள் போலாது எவ்விதத்துஞ் சாம்பசிவனைக் கொல்லக் கடவீர்க" ளெனவிடுப்ப, அவ்வண்ணமே முனிவர் கூற்றைக்கடவாது எதிர்வருதலும், சிவபுரான் அக்கினியைக் கரத்திற்றாங்கியும் முயலகனைக் கீழ் தள்ளித் தமது வலது பாதத்தான் மிதித்தும் அருளினர். முயலகன் வேறுகதியின்றி முதுகையசைத்தலும், சிவனார்பாதத்தாலழுத்தி நடித்தனர். பின்னர்முனிவர்கள் அனே

கஞ்சாபமிட, அவைகள் அவரிடஞ் செல்லாமைகண்டு சிவபத்த ராப் நற்றவம்புரிந்து, சைவநெறி நின்று முத்தியடைந்தனர்.

யானைத்தோல்

கயாசுரனென்னு மரக்கனொருவன் பிரமன்மாட்டு அநந்தவ ரங்களைபெற்று, தானவரையும் வானவரையும் இமிசைசெய்து, மண்ணுலகத்தவரையும்வருத்தி, காசிப்பதியையடைந்து தன்ஆண் மையைக்காட்ட, அதற்கு முன்னமே இவன்கொடுமைகளை வான வர்கள் காசியினடைந்து சிவபெருமானிடத்து விண்ணப்பித்திருத் தலின், சிவபெருமான் இக்கயாசுரனெதிரில்வந்து வடவாக்கினியு மஞ்சத்தக்ககோபாவேசத்துடன் அக்கினிகளை விழியினிடமாகச் சிந்திகயாசுரனைப்பிடித்துக் கீழேதள்ளி அவன்சிரத்தை மிதித்துத் தம்திருநகங்களாற்பிளந்து,அவன் தோலையுரித்துத்தரித்தருளினர் இதனை யறிந்து முன்வருந்திய மண்ணுலகத்தவரும், வானோரும். தானவரும் இன்றன்றோ நமதிறைவனால் சுகமுற்றனமெனத் தொ ழுதிறைஞ்சினர்.

கபாலம்.

இறைவன் அடியார் மாட்டுமோனிடவுருக்கொண்டு அநந்த முறைதோன்றினர். அக்காலங்களில் அடியார்போலுங் கையிற் றண்டமும் கபாலமுந் தாங்கினர். அன்றி ஒருகால் தாருகாவன முனிவரிறுமாப்பை யொழிக்குமாறு திகம்பரராய்ப் பிக்ஷாடனத் திருவுருவைத்தாங்கி யாசிப்பார்போலும் சென்றனர். யாசிப்பார் கரபாத்திர மேந்துவது முறைமைப்பற்றிப் பலியேற்பதற்கு ஒரு கலந்தாங்கினர் என்க.

சுடலையாடி யென்பது

திருமாலுக்குச் சிவாக்கினையின்படி விஷ்ணுகற்பம் ஒன்றுகழி யின், சருவான்மாக்களுடன் சருவலோகங்களும் மயானரூபமா கும். அக்கால்சிவபெருமானொருவரே நடம்புரிவர். இக்காரணத்தா லேயே இறைவனைச் சுடலையாடியென்பார்.

தருமவிடை.

இத்தகைய தேயுப்பிரளயத்தில் சகலதருமங்கட்கும் அதிதே வதையாகிய தருமதேவதை தாமும் இறக்கவருந் தீங்கினைக் கருதி, ஓர் இடபவடிவையேற்று, சங்கரன்பாலணைந்து "ஐயனே! பிரள யஞ் சம்பவித்தலின், இறத்தற்கஞ்சி யடைந்தனன், ஆதலின், அடியேன் இறவாவகையும், சுவாமிதனைச் சுமக்கும்பேறும், சுமத் தற்காம் வன்மையும் பாலித்தருளல் வேண்டு" மென் றிறைஞ்ச,

எண்ணினு ரெண்ணி யாங்கின்னருள்புரிபு முன்னவன் "ஏ! அறத் திருவே! அஞ்சற்க" வென்றபயமளித்து அதன் சிரமேற்றமது அபயாத்தத்தைச் சூட்டி "நீ எண்ணியாங்காகுக யாம் நின்னை நீங்கேம் நீயே எமக்குவாகன மாகுக" வென்றிசைத்து அங்கீகரித் தனர். ஆதலால், சிவபெருமான் பரிபக்குவமுற்ற ஆன்மகோடிகட்கருளுநாள் தருமசொரூபத்தோடும் காட்சித்தருவார்போலும் இடபத்தோடும் யெழுந்தருளுதலென்க.

மால்விடை

முன்னே ஒருகற்பத்தில் எமதிறைவன் தேவர்கள் வேண்டு கோளால் திரிபுரதகனஞ் செய்தற்குச் சூரியசந்திரர்களையே சக்கரமாகவும், மேருமலையைவில்லாகவும், திருமாலை அம்பாகவுங் கொண்டு இரதத்திலாரோகணிக்கத் திருவுளங்கொண்டகாலத்து அச்சு முறிந்தது. அக்கால் திருமால், எம்பெருமான் கிருபா விசேடத்தாலாற்றஅன்பினை யுடையராய் ஒரு வெண்மையாய இடப வுருவாகித்தாங்கி "ஆ ஆ! நாம்பெற்றபேறேபேறு; நம்தவமேதவம்; நம்மைப்போல்யார் இறைவனைத்தாங்கும் வன்மையினர்? இனிநமக்கு யாதுகுறை" யென்றிவ்வாறு இறுமாப்புற்று மகிழ்ந் தனர். இதனைபெருமான் திருவுள்ளக் குறிப்பாலறிந்து ஓர் இலீலையாக நடித்தனர். அதற்காற்றுது திருமால் இறைவனைச் சுமத் தற்கேலாது வருந்திவிழிகள் பிதுங்க, செவிவாய்களி லிரத்தஞ் சிந்த, கால்மடிய, தலைநால விழுந்து சோர்தலும், வெள்ளிவிடையை நோக்கி "மாலே! யாதுவரம் வேண்டு"மென, திருமால் "ஐயனே! அபாயம் காத்தருளுக; தேவரீருக்கு முன்னமேயே தருமவிடையொன்றிருப்பினும், மால்விடை யெனயானுந் தேவரீரைத் தாங்கும் வன்மையியயளித்து அருளுக" வென இறப்ப, அடியாருள்ளக் கோயிலுடைய சந்தானகற்பகமனையாராகும் நமது பரமபதிபுன்னகையோடு உவந்து திருமால் விரும்பியவாறு அரிய வரத்தையளித்து அன்றுமுதல் வெள்விடையாகித் தாங்கப்பெற்றனர்.

குதிரைவாகனம்.

முன் ஒரு சமயம் சைவசமையாசாரியர் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகசுவாமிகள் மதுரைபாண்டியாாசனிடம் மந்திரியாக விருந்தகாலத்தில், பாண்டியன் அமைச்சரை நோக்கி "ஐயா நம் அரசாங்கத்திற் கமைதியான குதிரைகளைக் கொள்ள வேண்டு" மென்ன, "அங்ஙனமே வருவிப்பா" மென்றிசைத்து வேண்டும் திரவியங்களோடு கீழ்க்கடலை நோக்கிச் செல்ல, சங்கரன் மாணிக்கவாசகரது தீவிரதரத்தைநோக்கித் திருப்பெருந்துறையிற்குருமூர்த்

தமா பெழுந்தருளி உபதேசஞ்செய்தாண்டனர். அதன்பின், சுவாமிகள் மன்னன் திரவியமனைத்தும் அடியார்களுக்கும் சிவதரும காரியாதிகளுக்கும் ஆலயமுதலியவைகளுக்குஞ் செலவுசெய்து விற்றிருந்து தம் பரிசனர்களால் மன்னனுக்கு 'ஆடித்திங்களன்று பரிகளோடும் வருவ' மென்றுரைக்க விடுத்தனர். அவ்வாறேமன்னன் ஆடித்திங்களன்றும் வாராமையான் மீண்டும் ஓலைவிடுக்க, அவ்வோலையைச் சுவாமிகள் சிவபிரானிடத்து விண்ணப்பிக்க, பெருமான் ஆவணிமூலத்தன்று புரவிகள் வருமென்று ஒரு நிருபமனுப்புக வென்றிசைக்க, அவ்வண்ணமே மாணிக்கவாசகர் ஒரு நிருபம்விடுத்திருக்குநாள் இறைவன் கனவிலெழுந்தருளி "மாணிக்கவாசக! முன்செல்லுகபின் புரவிகள் வரு" மென, அவ்வாறேமணிவாசகப்பெருமான் பாண்டியனை யடைந்திருக்குநாள், முன்னிசைத்த திருவாக்கின்படியே வனத்திலுள்ள நரிகளையெல்லாம் புரவிகளாகச் செய்து ஓட்டிக்கொண்டு வந்தனர். எமது கண்ணுதல் சதுர்விதபுருடார்த்தங்களையே கால்களாகவும், வேதகாண்டமிரண்டுமே செவிகளாகவும், பரவுணர்ச்சியிரண்டுமே விழிகளாகவும் விதியேமுகமாகவும், நிடேதமே வாலாகவும், தந்திரங்களேபுறவணியாகவும், மந்திரங்களே சதங்கை, இரவிமதிகளே இடமாகவும், பிரமதாரகமே கடிவாளமாகவுங்கொண்டு ஒரு புரவியின்மேலாரோகணித்துவந்தனர்.

மற்ற சரிதங்களை, "திருவிளையாடல்" "ஆலாசியமான்மியம்," "வாதவூரடிகள் புராண" முதலியவற்றுற் காண்க.

## பாற்கடல் கடைதல்.

முன்னே ஒரு கற்பத்தில் தேவர்களும், அசுரர்களும், தாயாதிகளானமையால், தீராப்பகையை மேற்கொண்டு யுத்தஞ்செய்து அனேகர் மாண்டனர் அதனால், தேவர்கள் அமுதுண்டு நரைதிரைகளை யொழித்து நெடுநாளிருந்து யுத்தஞ்செய்து தாங்களே வெற்றிபெறக்கருதி, தங்களுக்குள் ஒரு முடிவு செய்துகொண்டு பிரமனிடம்கூற, பிரமன் திருமாலிடங்கூற, திருமால் 'நல்லது ஆகுக' வெனக்களித்து, திருப்பாற்கடலை யடைந்து மந்தரகிரியை மத்தாகவும், வாசுகியை நாணாகவும், சந்திரனை அடைதாணாகவுஞ் சேர்த்து, ஒருபுறம் வானவரையும், மற்றொருபுறம் தானவரையும் விடுத்து, இருதிறத்தாரிடத்துமுள்ள படைகளினால் 'ஒருகால் யுத்தத்திற் சேதுவாமாதலால் அப்படைகளை ஒருங்கேவாங்கி ததீசிமுனிவரிடம் ஒப்புவித்து வாசுகித்தாம்பை யீர்க்கச்செய்ய, அவ்

வாறே தானவர் வானவர் இருபுடைகளினும் மாறிமாறியீர்க்க, அம் மந்திரமலை அசைதலைக்கண்ட திருமால் ஆமைவடிவாகி அம்மலை யின் அடியையும் முடியையும் தாங்கிநிற்க, தேவர்கள் நெடுநாள் கடைந்தமையின் அரவமாகிய அட்டநாகங்களி லொன்றான வாசு கியென்னும் பாம்புவருந்தி தம்முாலாற்றாது தனது ஆயிரம்வாயி னின்றும் விடஞ்சிந்தியது.

## விடபானம்.

அவ்விடம் உலகனைத்தும் இருள்மூடிக்கொள்ளும்படி பரவ, தேவர் முதலினோர் பயந்தோடினர். இக்கதியைத் திருமாலறி ந்து அதிவிரைவாக வானவர்க்குத் தைரியங்கூறி அவ்வாலகால விடத்தை எதிர்சென்று மறித்தனர். மறித்தலும் அவ்விடம் திரு மால் திருமேனியைக் கருநிறமாக்கி வீறிச்சென்றது அக்கால் திரு மால் முதலிய தேவரனைவரும் வேறோ ராற்றுமாதரனையின்றி, கை லாசபதியினிடமடைந்து விண்ணப்பம்செய்து நிற்றலும், சருவத யாபரன் திருமாலைநோக்கி 'அஞ்சற்க' வென்றபயமளித்து, அருகே நின்றசுந்தரரால் ஆலகாலவிடத்தை வருவித்து, தமதங்கையிற் றாங்கி யுண்டனர். உண்டகாலத்து உமையம்மையார் 'ஐயனே! கண்டத் தளவிலேயே நிறுத்துக' வெனக்கோறலும் அங்ஙனமே இறைவன்கண்டத்திற்றங்கக் கொண்டு நீலகண்டரெனப் பெயர் பெற்றனர்.

அதன்பின் தேவர்கள் வேண்டுகோளால் 'சுகமே பாற்கடல் கடைந்து அமுதுண் டுய்வீர்க' ளென வரம்பாலித்தனுப்ப, திருமா லாதிய தேவர்கள் பாற்கடலடைந்து முன்னைபோல் திருமால்கூர்ம வடிவாகி மந்தரகிரியைத்தாங்க, தேவரும் அசுரரும் வாசுகியை யீர்த்துக் கடைந்தனர்.

## பாற்கடலில் தோன்றியவைகள்.

1. மூதேவி தோன்றி, வருணருக்கு மனைவியாயினள்.

2. தன்வந்திரி தோன்றி, உலகமுழுவதுக்கும் மருத்துவ ராய்ப் பதினெண்சித்தர்களி லொருவருமாயினன்.

3. அறுபதுகோடி அரமகளிர்கள் தோன்றி இந்திரன் பதி யையடைந்து இந்திரபோகத்தைச் சுகித்தனர்.

4. சுரைதோன்ற அதனை தேவர்களுண்டு, சுரர் எனப் பெற் றனர்; அவுணரதனை வெறுத்தமையால், அவர்களுண்ணப்பெறாது அசுரரென்றிசைக்க நேர்ந்தனர்.

5. உச்சைச்சிரவமென்னும் புரவிதோன்றி இந்திரனுக்கு வாகனமானது. இதனை க்ஷீரவாசி யென்பர்.

6. கௌத்துவமென்னும் மணிதோன்றி திருமாலுக்கு ஆப்ரணமாக மார்பிடமமர்ந்தது.

7. அரிசந்தனம், கற்பகம், மந்தாரம், சந்தானம், பாரிசாதம் என்னும் பஞ்சதருக்களும் தோன்றி அமராபதியையடைந்தன.

8. ஐராவதம் என்னும் வெண்ணிறமுடைய ஒரு யானைதோன்றி இந்திரனுக்கு வாகனமாகவும், திக்கானைகளி லொன்றாகவுமாயிற்று.

9. காமதேனு என்னும் ஒரு தெய்வப்பசுதோன்றி இந்திரனிடத்தும் அவனேவலால், வசிட்டாதி முனிவரிடத்து மாயிற்று.

10. சிந்தாமணி என்னும் எடுக்க வெடுக்க எக்காலத்துங் குறைவுபடாத ஓர் இரத்தின கடாரந்தோன்றி சசிமணாளனுக்குலப்பானது.

11. சங்காகாரமாகவும் பதுமாகாரமாகவு முள்ள சங்கநிதி பதுமநிதி தோன்றி குபேரனுக்குச் செல்வமாயின.

12. சந்திரன் தோன்றி ஆகாயவீதியி லொளிசெய்தலையும், கிரகாதிகளி லொன்றாதலையும் பெற்றனன்.

13. சரசுவதிதோன்றி பிரமனுக்கு மனைவியாக அவன் நாவினும், மலராசனத்திலு மமர்ந்ததன்றி, சருவகலைகளுக்கும் வித்தியாகாரணி யாயினள்.

14. இந்திராணி தோன்றி இந்திரனுக்கு மனைவியானதன்றி, என்றுங் கன்னிப் பருவத்தையும்; எத்தனை இந்திரர்கள் தோன்றி மறையினும் சாமெக்காலத்தும் மாறாத தன்மையையும் பெற்று, கிழ்த்திசைக் கதிதேவதையாயு மாயினள்.

15. இலக்குமிதோன்றி திருமாலுக்கு மனைவியாய், திருமால் மார்பினிடந் தங்கினதன்றி, அட்டைசுரிய போககாரணியு மாயினள்.

பின்னர் இவ்வாறளப்பரிய வானாட்டுச் செல்வங்களெல்லாந் தோன்றின.

### கிரகண காரணம்.

முடிவில் அமுதந்தோன்றிற்று. இவ்வமுதத்தைத் தானவரும் வானவரும் எமக் கெமக்கென்று வாதிட்டு அனேகர்காலமாயினர்.

இதைத் திருமால்கண்டு ஒரு மாயைபோலும் மோகினி வடிவங்கொண்டு தேவருக்குமாத்திரம் அவ்வமுதத்தைப் பகுந்தளித்து வருங்கால், அசுரர் இருவர் அவ்வானவர் கூட்டத்துள் மாறுவடிவாயிருந் தமுதருந்தினர். இதனைச் சூரிய சந்திரரால் திருமாலறிந்து அவ்விருவர் தலையையும் அறத்தெறிந்தனர். பின்னர் அந்தானவரிருவரும் அமுதுண்ட விசேடத்தா லிறவாமல் சிவார்ச்சனைசெய்து இராகு கேதுவென்னுங் கிரகங்களாய்த் தம்மைவெளியிட்ட செங்கதிர் வெண்கதிர்களைத் தீராத்துயர்செய்து வருகின்றனர்; இவையே கிரகண காலமாம். சுரர் அமுதருந்தித் தீர்க்காயுளெய்தி அசுரரை அதஞ்செய்து பொன்னுலகுசேர்ந்து வாழ்ந்திருந்தனர்; இது நிற்க.

மீண்கண்அணிந்தது.

சோமுகாசுரனெனும் ஓர் அசுரன் சாட்சாத் பரமபதியைநோக்கித் தவஞ்செய்து அநேகவரத்தைப்பெற்று, தேவர்களஞ்சும்படி ஆண்மையுற்றுத்திரிவான். தன்தோளின்தினவை ஆற்றுமாறு மேருமலையை யெடுத்து விளையாடுவான். இத்தகைய் பராக்கிரமத்தோடு அஞ்சானாய்ப் பிரமபதியைநோக்கி வருஞ்சமயத்து,பிரமன் வெருவியோடலும், "ஏயே இவன்வன்மை இவ்வளவுதானோ";வென்று உதாசினம்பேசி அவன் மாட்டுள்ள நான்குவேதங்களையும் கள்வாடிக்கொண்டு கடலுக்குட் புகுந்து களித்துலாவியிருந்தனன். இதனையறிந்த பிரமன் பிதாவாகிய திருமாலிடஞ்சென்று, சிருட்டிக்குக் காரணமாகிய ஆரணத்தைச் சோமுகன் சூறைகொண்டானென் செய்வேமென்றாற்ற, திருமால் சோமுகனிருப்பையறிந்து திமிங்கில முதலிய மச்சங்களையும் விழுங்கும் வண்மையோடும் ஒரு பெரிய மச்சவுருவையேற்று சோமுகனைவதைத்து ஆரணத்தைக் கைக்கொண்டு, பிரமன்பாலளித்தனர். அங்ஙனம் மச்சாவதாரன் ஆழிநீரைக்கலக்கி சத்தசாகரமுமொன்றாகும்படி உழக்கித் திரிதலை வானோர்கண்டு, 'மண்ணுலகழியும்போலும் விண்ணோடொருங்கே யொழியும்போலு' மென்றையுற் றிறைவனுக்கிசைப்ப, இறைவன் ஒரு வலைஞனைப்போல ஒரு பெருவலைகொண்டு திருமாலாகிய மச்சத்தைப் பிடித்துச் செதுக்கிக் கண்ணைப்பிடுங்கலும், திருமால் பூர்வவுணர்ச்சியால் பழயவடிவையேற்று அருச்சித்தகன்றனர். அக்கால் தேவர்கள் "ஐயனே இன்னொருகால் திருமால்இறுமாப் புறுவண்ணம் அம்மச்சவிழியையுந் தரித்தருளவேண்டுமென்றிறைஞ்ச, அங்ஙனமே சிவபெருமான் அவ்விழிகளைக் கைவிரல் மோதிரத்தமைத்தருளினர்.

## வராகக்கோடணிந்தது.

இரணியாக்கதனென்னுமசுரன் தவத்தால் பிரமன்பாட்டு அரிய வரத்தைப்பெற்று நிகரற்றோனாய் வாழுநாளில், ஒருநாள்உலகத்தைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு சமுத்திரத்தில் மறைந்தனன். இக்கூற்றுக்கஞ்சிய அமரர்வேண்டுகோளால் திருமால்வராக வடிவமுற்று, கடலைக்கலக்கி இரணியாக்கதனென்னு மசுரனைக்கண்டு அவனைக்கிழித்துக் கொன்றுவிட்டு, பூமியைக் கொம்பினுனியால் தூக்கிவந்து சேடனது முடியில்வைத்தனர். அதன்பின் திருமால்மமதையால் வராகரூபத்தோடும் அகிலமெல்லாம் நடுங்கும்படி புலாவி, மேகங்களும் அட்டகுல பருவதங்களும், நவநாகங்களும் நாகலோகமும், நானிலமும் தட்டுகெட்டு, கலங்கும்படியாகத்திரிந்தனர். இதனை ஆற்றுவார் வேறின்றி தேவர்களெல்லாம் வருந்தி, சிவபெருமானிடத்து விண்ணப்பிக்க, கருணாகரமூர்த்தியாகிய கைலாசபதி கருணையால் உலகுயிர்களை இரட்சிக்குமாற்றலால், தேவர்களுக்கபயமளித்துத் தாமொரு வேடவுருவேற்று, தங்கரத்துள்ள முத்தலைச் சூலத்தாற்குத்தி வீழ்த்தி, ஒருகொம்பை பொடித்தனர் உடனே திருமாலுக்கு முன்னையுணர்ச்சியுதிக்க, சிவபெருமானைத் துதித்துப்பணிந்து பழயவுருவை வாய்ந்து சென்றனர். பின்னர், தேவர்கள் வேண்டுதலால் மற்றெக்காலேனும் திருமால் இங்ஙனம் மாலெய்தி வாதைபடாவண்ணஞ், சிந்திக்குமாறு அவ்வராகத்தி னொற்றைக்கொம்பை ஆபரணம்போலுந் தமது திருவுருவிற்றரித்தருளினர்.

## பிரமகபாலம்.

ஒருகால் மேருசிகரத்தில் வீற்றிருக்கும் பிரமவிஷ்ணுக்களைத் தேவமுனிவர்கள் நெருங்கி "உலகில் சருவகாரணமாய், ஒப்புயர்வில்லாராய், நித்தியானந்த சொரூபராய், நின்மலராயுள்ள பிரமம் யாது" என்று வினவலும், பிரமன் 'யானே' என்ன, திருமால் 'யானே' யென்ன, சண்டையிட்டு யாவராலும் அடக்கற்கரிய மமதையையடைந்து வாதிட்டிருந்தனர். வேதமும் பிரணவமும் வேறுவேறு உருக்கொண்டு வந்து "வீணே கருவ மடைதலாகாது. யாவற்றிற்கு முதற்பொருள் சாட்சாத் உமாபதியேயாம். நீவிரேன் இவ்வண்ணம் வாதிடுத" லெனக் கூறியுங் கேளாராய் மீண்டும்வாதிட்டகங்கொண்டு அமர்புரியுங்கால், இடையே இவர்களிறுமாப்பழியுமாறும், உலகுய்யுமாறு முள்ளங்கூர்ந்த வெள்ளைசடைமுடி வள்ளலார் ஒருசோதியுருவமாக அமர்ந்தனர். இச்சோதியாதோவெனப் பிரமன் நிந்தைகூறினன். திருமால் அகிலாண்ட நாயகரா

கிய பரமசிவக்கடவுளேயெனத் தேர்ந்திறைஞ்சினன். பிரமன் மதியாது நிந்தித்தானாயினும் கருணாகரக்கடவுளாகிய பெருமான் பொறுத்து,பிரமன்நடுத்தலை அவமதித்தது. ஆகையின் அதன் இறுமாப்பொழியவும் மற்றோர் தருக்கொழியவும் சிந்தித்தலும், உடனே வைரவக் கடவுள்தோன்றி,பிரமனது நடுத்தலையைக்கொய்துவானவர் முனிவர் நகரங்கடோறும் எதிரப்பலியேற்று, பிரமனுக்கு உயிர்ப்பிச்சையளித்து இரத்தப்போக்கா லிறந்தோரை யெழுப்பினர். பின் பிரமன் 'சிவாபசாரஞ்செய்தோமன்றோ' வென்றிறைஞ்சி, சிவபெருமானை நோக்கி "ஐயனே! அடியேனவமதித்தலை மன்னித்து என்சிரசைக் கரத்திற்றானே தேவரீர் வைத்திருக்க வேண்டுகிறேன்" னென்று வேண்ட, அவ்வாறே சிவபெருமான் பிரமகபாலத்தைக் கையிற்றரித்தருளினர்.

வீணை.

ஒருகால் கைலாசபதி தட்சணா மூர்த்தமாக எழுந்தருளியிருக்கையில் தும்புரு, நாரதர், சுகர்முதலிய இருடிகணங்கள் சாமவேதத்தை யாழிலமைத்துப் பெருமானுவக்கப்பாடுதற்கிச்சைகூர்ந்து சிவபிரானிடத் தடைந்து, இசையிலக்கணத்தைக் கிருபைசெய்யும்படி வேண்ட, பத்தரனுகூலராகிய சிவபெருமான்முனிவர் வேண்டுகோளுக்குவந்து இசையிலக்கணத்தையும், கருவிகளி னிலக்கணத்தையும், அவைகளைப் பாடுதற்கேற்ற கால விலக்கணத்தையும், அதன் பிரயோக பிரயோசன விலக்கணங்களையும் தெளிவுபடக் கூறிய உபதேசத்திற்கேற்ப, தாமே யாழேந்தி இடதுதோளிற் சாத்திப் பாடிக் காட்டினர். அதுமுதல் தேவர் முனிவர் சித்தர் முதலினோ ரனுட்டானத்தில் விளங்குகின்றது. அதனாலேயேசாமகீதப் பிரியரென்றும் வினோத தட்சணா மூர்த்தரென்றும் யாழ் வல்லாரென்றும் உலகிற் கூறப்போந்தனர்.

புத்தகம்.

பார்வதியார் தக்கன் மகளென்னும் வசை நீங்குமாறு பரமபதியின் ஆஞ்ஞையால் பருவதராச குமாரியாகத் தோன்றியிருந்த நாளில், சனகாதி முனிவர்கள் நால்வரும் சிவபெருமானையடைந்து "கருணா நிதியே! யாவுங் கற்றனம். உண்மை நிலையீதெனத் தெரியாது வருந்துகின்றனம். கிருபைகூர்ந்தருள வேண்டு"மென்றிரப்ப, உமை யொருபாகன் "ஆகுக" வெனக்கூறி, நந்திபால் காப்பிருத்தலைப்புகன்று, ஒரு சிவஞான நூற்றொகையிற் கொண்டு கிரமப்பட உபதேசித்தனர்.

### மன்மத தகனம்.

பின்னர் அதனை அனுபவித்துக் காட்டுவார்போலும் ஓர் இமை யளவுநேரம் பதுமாசனத்தில் சின் முத்திராங்குசத்தோடு நிட்டை கூடியிருந்தனர். அதனால், உலகங்களெல்லாம் விவகாரங்களற்று, முத்தொழிலும் நடவாதிருந்தன. இதனைக்கண்ட தேவர்கள் தேவ தேவோத்தமனின் ஞான நிலையைக் கெடுக்கவும் உலகமெல்லாம் பழயபடியே விரிந்து விவகாரங்கள் நடக்கவும் யோசித்து இந்திர னால் மன்மதனை இறைவன்மேல் மலர்க்கணையை விடுத்து யோகத் தினை பழிக்கச்செய்ய,இறைவன் நெற்றிக்கண்ணைத் திறந்து மதன னைத் தகித்து, சாம்பராக்கினர். அக்காலருகிலிருந்த இரதிவேண் டலால், இரதி கண்ணுக்குமாத்திரம் உருவமாகவும் மற்றோர் கண் ணுக்குத் தோன்றுமலு மிருக்க, அவனுக்கு வரமளித்தனுப்பினர். அதனால் இறைவனுக்குக் காமநாசனென்றும் மதனுக்கு அநங்க னென்றும் பெயராய தென்ப

### கலசம்.

வேண்டுவார் வேண்டியவண்ணம் விருப்பி நல்கும் வேதவே தாந்த நாயகராகிய சாட்சாத் சம்புவானவர் ஆன்மாக்களின் பாச வொழிபிற்காக, இலகிளேசுர புவனத்தில் அளப்பரிய அனேக கோடி நிகள அகலமுடைய ஏகரூபமாய் ஆசாரிய மூர்த்தமா யெழுந்தருளி யிருப்பார். அவ்வவசரத்தில் வலது கைத்தலத்தில் மழுவும் சூலமும் இடது கைத்தலத்தில் கலசமும் ஏந்தியிருப்பார்.

### தண்டம்.

சருவ கருத்தத்துவ, சருவமங்கள,தேசோமயராய் அனவரத மும் தமது பத்த நேசர்களது திருவுளக் குறிப்பி னெறியே யொ ழுகும் ஸ்ரீ பரமபதியின் கிருபா விசேடமன்றி ஆன்மாக்களுக்கு வேறு துணையின்மையால் திருவருட்சொரூபரே அடியார்கோறிய வா றெழுந்தருளி கிருபைசெய்வார். அதனாலேயே அவருக்கு ஆப தோத்தாரண ரென்பர் அங்ஙனம் மானுடச்சட்டை தாங்கியெழு ந்தருளும் அவசரத்து இரண்டுகரமும் அக்கரமிரண்டி லொன்றில் கபாலமும் மற்றொருகரத்தில் தண்டமும் ஏந்திவருவர். (காஞ்சி புராணம்.)

### சிரமாலை

பிரம விஷ்ணுக்களை யுண்டாக்கி, அவர்களில் பிரமனைக்கொ ண்டு உலகத்தைச் சிருட்டித்தும், விஷ்ணுவைக்கொண்டு காத்தும் பின்பு சங்கரித்தும் பலவாறு இம் முத்தொழில்களைச் செய்கை

யில், பிரம விஷ்ணுக்கள் முடிவான காலத்தில் சங்கரித்து அவர்கள் எலும்புகளையும் சிரங்களையு மாலைகளாக அணிந்தருளுவர்.

## திருநீறு.

முன்பொரு கற்பமுடிவில் இவர்களை யெல்லாம் நெற்றிக்கண் பொறியால் நீறுபடுத்தி அந்தப் பொடியைத் தமது திருமேனியில் தரித்துக்கொண்டருளினர். அன்றி விபூதியானது:

பரமசிவனுடைய அக்கினிபோன்ற திருமேனிமேல் இயல்பாகப்பூத்துள்ளது அது அநாதியான விபூதி பின்பு தேவர்முதல் சராசரங்களையெல்லாம் இறுதிக்காலத்தில் நீறாக்கித் தம்முடைய திருமேனியில் தரித்தருளினர். அது ஆதிவிபூதி நெருப்பின்மேல் நீறு பூத்திருப்பது இப்போதுந் திருட்டாந்தமாகக் காணலாம்.

## உருத்திராக்கம்.

முற்காலத்திலே தாரகன் என்னும் அசுரன் எந்தையாகிய கந்தவேளாற் கொல்லப்பட்டபின்பு, அவன் புத்திரர்களாகிய தாரகாட்சன் வித்துவான் மாலியென்னு மூன்றசுரர்களும் வரபலத்தினால் முறையே பொன்மதில், வெள்ளிமதில் இருப்புமதில் என்னுமூன்று நகரங்களைப் பெற்றுச் சிவபத்தியுடையராய்ச் சிவபூசையாதியன செய்தும், தேவர்கள்யாவருந் தமது தந்தையைக் கொல்லுவித்தராகலின் பழிக்குப்பழிவாங்கநினைந்து அவரை வருத்துவாராயினர். அத்துன்பங்களையெல்லாஞ் சகிக்காதவிஷ்ணு, பிரமன் முதலியவர்கள் யாவருஞ்சென்று சிவபெருமானது திருச்சந்நிதானத்தையடைந்து முறையிட்டு புலம்பினர். அதனைத் திருச்செவியாற் கேட்டவளவிலே பரமநாதனாகிய சிகண்டபரமசிவன் அடைக்கலம்புகுந்த தேவர்களை நீக்காது காத்தலும், தம்மீது அன்புடையராய்ப் பூசையாதியன செய்தொழுகும் அசுரரை யொறுக்காது காத்தலும் முறையாமாதலின் மௌனங்கொண்டவராய், தேவர்களின் பெருந் துன்பைத் தமது திருவுளத்தடைத்து இரக்கமுற்று, அவர் துன்பம்நீங்குமெல்லையை நோக்கி, ஆயிரந்தேவவருடமளவுந் தமதுமூன்று திருக்கண்களையும் மலர்த்திக்கொண்டிருப்ப, அவைகளினின்றும் நீர்பொழிந்தது. சூரியவடிவாகியவலக்கண்பொழிந்த நீரிலே பன்னிரண்டு உருத்திராக்கமரமும், சந்திரரூபமாகிய இடக்கண் பொழிந்தநீரிலே பதினாறு உருத்திராக்கமரமும், அக்கினியுருவாகிய நெற்றிக்கண் பொழிந்தநீரிலே பத்து உருத்திராக்கமரமும் உதித்தன. இடக்கண்ணில் வெண்ணிற உருத்திராக்கந் தோன்றிற்று.

வலக்கண்ணினின்று கபிலநிற உருத்திராக்கமும், அதினின்று செந்நிற உருத்திராக்கமும், அதினின்று பொன்னிற உருத்திராக்கமுந் தோன்றின. நெற்றிக்கண்ணிற் பொழிந்த நீரினின்றும் கருநிற உருத்திராக்கந் தோன்றிற்று அவைகளுள் ஒவ்வொன்றையுஞ் சத்தி, விஷ்ணு, பிரமன், சத்தமாதர்கள், அட்டவித்தியேசுரர், திக்குப்பாலகர், ஏகாதசருத்திரர், அட்டவர்கள், அசுவனிதேவர்கள், துவாதசாதித்தர்கள், ஆதிசேடன், முனிவர்முதலிய கணங்கள் யாவரும் பிரீதியாகக்கேட்டுச் சிவபெருமான் ஆஞ்ஞைப்படி தரித்துக் கொண்டனர்,

## ஆமையோடு தரித்தது

பாற்கடல் கடைந்தபோது மந்தரமலையாகிய மத்தினைத்தாங்கிநின்ற மாயவன் அவதாரமாகிய ஆமை, கடலேழையும் ஒன்று கூட்டி அதன்வெள்ளம் அவனியையழிக்கும்படி கலக்கி, சிந்துவைச் சேறுபடுத்தி இலக்கயோசனை மேன்முதுகும் கால்களினளவைக் கணக்கிட்டறிய ஏலாதவிதமாயியைந்ததாதலின், திமிங்கலமுதலிய சலப்பிராணிகளையெல்லாம் புசித்தும் பசிதணியாமல் சலத்தையுங் குடித்துத் தரைதெரியும்படி சேற்றையும் நக்கியது. அதனாற் கலங்கிவெளிப்படுத்தப்பட்ட கடல் நீர் யுகாந்தவெள்ளம் போல எங்கும்பரவியது. தாமோதரனாகிய ஆமை தனக்குக்கிடைத்த பலபொருளையுந் தின்னத்தலைப்பட்டது. இதனையறிந்த சூரிய சந்திரர் கடலிற்றோன்றிச் செல்லுவதற் கஞ்சினர். உலகமெங்கும் இருட்பிழம்பாயது மகபதியும் மலரோனும் வையமழியுமென்று மனங்கலங்கி, ஸ்ரீகைலாயமலையையடைந்து திருநந்திதேவராஞ்ஞையால் மகாசந்நிதானத்தினுட் சேர்ந்து, சிவபெருமானைச் சேவித்துத் துதித்துநின்று "எம்பெருமானே! எளியேங்கட்கு இடுக்கணெய்தினால், அதனையகற்றி அருள்செய்வோர் யாவர்; அடைக்கலம் அடைக்கலம்! அச்சுதன் ஆமைவடிவு கொண்டு ஆர்கலியிலிருந்து அவன் புரியும் அல்லல் அறைதற்பாலதோ; அறியார் போன்றிருப்பது தேவரீரது திருவருளுக் கழகாமோ? விரைவில் அதனைவிலக்கி எங்களைக் காக்கவேண்டும்" என்று குறைகூறியாசித்தனர்.

சிவபெருமான் தேவமாருடர்கட்குத் திருவருள்செய்யத் திருவுள்ளங்கொண்டு, "அமரரே! அஞ்சன்மின்" என்றுஉடன்வரக்கொண்டு உததியையடைந்து தமதுதிருக்கரத்திருந்த சூலப்படையால் அக்கூர்மத்தின் உடலைசெகுத்து, அதன் இறைச்சியைக் குடைந்தெரிந்தனர். அதனைப் பார்த்துக்கொண்டிருந்த பண்ணவர் களி

கூர்ந்து ஆர்த்து "கருணை நிதியே! கமலைச் செல்வன் மீண்டுங் கருவி மடையாமல் அவ்வோட்டினைத் தேவரீர் திருமேனியிலுள்ள திருவாபரணங்களோடு ஒன்றாக அணிந்துகொள்ளவேண்டும்" என்று வேண்ட, அடியாரவாவிய அடைவே அருள்புரியும் அண்ணலார் அக்கூர்மத்தின் முதுகோட்டையுந் தமது திருமார்பிலுள்ள பிரம விஷ்ணுக்களின் சிரமாலைக்கு நடு நாயகமாக வணிந்தனர்.

சிவபெருமானுக்குள்ள சின்னங்கள் இவ்வளவுதானோ என்னில், அவைகளை இவ்வளவுதானென்றளவிட்டு கூறுதற் கடங்காது. என்னையெனில், சிவபெருமான் அடியாரபீட்ட பிரார்த்தமாக,

| | |
|---|---|
| மாணிக்கம்விற்கச் | செட்டியாகவும் |
| வைக்கையைடைக்க | ஒட்டராகவும் |
| விரகுசுமந்து | விலியர்போலவும் |
| மாமனாகவந்து | தவசிபோலவும் |
| அரசாள | மன்னராகவும் |
| அருச்சுனருக்காய் | வேடராகவும் |
| எல்லாம்வல்ல | சித்தராகவும் |
| கௌரியென்பாருக்கு | விருத்தவேதியராகவும் |
| சிரகிரியில் | மருத்துவச்சியாகவும் |
| பன்றிக்குட்டிகளுக்காகப் | பன்றிவடிவாகவும் |
| ஸ்ரீசுந்தரருக்காகத் | தூதுவராகவும் |
| திருமால்மச்சாவதாரத்தில் | வலைஞராகவும் |
| தமிழ்ச்சங்கத்திற் | புல்வராகவும் |
| பிரமவிட்டுணுக்களுக்காக | மலைவடிவாகவும் |
| (பிரபுலிங்கலீலையில்) | மத்தளம்வாசிப்பவராகவும் |
| மதுரையில் | வளையல்விற்பார்போலவும் |
| சிறுத்தொண்டரிடத்து | சங்கமராகவும் |
| தாருகாவனத்தில் | அதிதியைப்போலவும் |

இதுபோல் யோகியாகவும், முனிவராயும், குதிரையோட்டியும் ஓலைகாட்டியும், தண்ணீர்ப்பந்தல் வைத்தும், சோறளித்தும், ஆசாரியராயும் சீடராயும் திருவுருவங்கொண்டு அவரவர்கள் இட்டம்போல வேண்டிய போகங்களை யளித்து இடுக்கண்களையொழித்து எல்லாச் சித்திகளையு முதவு மொப்புயர்வில்லாத நமது சிவம் இத்தன்மையர்தானெனக்கூறவொண்ணாது, அனந்தமாகும்உருவங்கள்தோறுந் தாங்கிய சின்னங்கள் அளவில்லாதனவாகும். ஆனதால் எம்பெருமானுக்கு எல்லாம் சொந்தமே ஆயினும் ஒன்றமில்

லாதவரேயானதால், அறிஞர்கள் உலகமெல்லாம் இறைவனையன்றி வேறில்லை. உலகத்திலுள்ள சமயங்களெல்லாம் இறைவனேயாகும் ஆனதால்,

"அறிவிலா அறிவி ஞர்கள் வேறொரு சமயஞ் செய்தே
எறிவினாற் சொன்னாரேனும் எம்பிராற்கேற்றதாகும்"
—ஆளுடைய அரசு

"தாவர சங்கமங்களென் றிரண்டுருவினின்று
மாவரன் பூசையேற்று மன்னுயிர்க்கருளை வைப்பன்"
—சிவஞான சித்தியார்.

என்று கூறியும் அவ்வாறு சமயங்கள் பலவும், அச்சமயங்கள்தோறும் தாங்கி சித்தாந்தபேதங்கள் பலவும், அப்பேதங்கள் தோறும் கொண்ட திருமேனிகள் பலவும், திருவுருவங்கள் தோறும் செய்த அற்புதலீலைகள் பலவும் இலீலைகள்தோறும் தாங்கிய சின்னங்கள் பலவுமாதலின் இன்ன வகையினர்தாமென்று சொல்லப்படுவ தல்லாமையாகும்.

(திருநாவுக்கரசு சுவாமிகள்.)

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் மாசொன் றில்லா
னொப்புடைய னல்ல னொருவனல்ல
னோரூர னல்லனோ ருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லா
லிப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே" என்றும்

சிவரூபம்.

"கோடி மறைகளினுங் கூறரிய வான்பொருளைத்
தேடி யறியுந் திடமெங்கே நாடகத்தா
லவனே நா மாகி யறிவ ரவரே
சிவமென்பார் வேறில்லைத் தேர்."

என்றும் கூறப்பட்டனர். ஆனதால், இறைவனது திருவுருவங்களையும் அவர் திருச்சின்னங்களையும் கூறாது, இவ்வளவிலேயேவிட்டு அவர்கொண்ட சிவலீலாபேதங்களைக்கூறத் தொடங்கினோம்.

## இலிங்க உருவம்.

சிவலிங்க உருவமானது.—நாமரூபாதி இலக்கணஇலக்கியங்களைக்கடந்து குணாதீதமாய் சருவாதிக்க, சருவேசுர, சதானந்த,



தற்பரமாயுள்ள சிவம் தம்மை உலகோர் வழிப்பட்டுய்வதற்கு இலக்கியமின்றி இலக்கணம் விளங்கப்படாதது போலவும், கண்ணில்லாமல் பிரகாசம் காணப்படாததுபோலவும் நினைப்பின்றிச் செய்கையாகாததுபோலவும், தாலத்தைமுன்புகாட்டித்தனிப்பிறைகாட்டுவார்போலவும், மானைக்காட்டி மானைப் பிடிப்பார்போலவும், மூடமாயுள்ள ஆன்மாக்கள் தியானவழி நிற்குநிமித்தம் ஓர் அறிகுறியாய் எழுந்தருளியதாம். இவ்வுருவம் நமது சிவத்திற்குள்ளனவாகிய

சகளம்-ரூபம், நிட்களம்-அரூபம், நிட்கள சகளம்-ரூபாரூபம், என்னும் மூவகையில் நிட்களசகளமாகும்.

இவ்விலிங்கத்தின் பீடிகை சத்தியும், இலிங்கம் சிவமுமாம் எனவே கிரியாஞான சத்திசொரூபம் சிவலிங்கமெனப்படும். அன்றி இலிங்கரூபத்தை உலகாகாரமென்றும் அதனால் உலகாதி எல்லாம் அவரேயாய் நிற்பர் என்னும் அறிகுறியென்பாருமுளர்; என்னினும், சம்மதமே.

இலிங்கம் என்பது. இலிங்-லயம்; கம்-தோற்றம் என்பதாம். எனவே எல்லாவற்றிற்கும் காரணரூபமாயுள்ளது என்றபடி.

சிவபெருமான், புறத்தே சிவலிங்கமுதலிய திருமேனிகளுங்குருவுஞ் சங்கமும் ஆதாரமுமாகக்கொண்டு நின்றும், அகத்தே உயிர் இடமாகக்கொண்டுநின்றும், ஆன்மாக்கள்செய்யும் வழிபாட்டைக் கொண்டருளுவர் ஆதலால், ஆன்மாக்கள் அவரைவழிபடும் இடங்கள் இவைகளேயாம். சிவத்துக்குப் பெயராகிய இலிங்கம் என்னும் பதம். உபசாரத்தால், அச்சிவம்விளங்கப்பெறும்ஆதாரமாகிய சைவமுதலியவற்றிற்கு வழங்கும். சிவபெருமான் இவ்விடங்களின் நிற்பர் என்றது, அவர் எங்கும் வியாபகர் என்றதனோடு மாறுபடுமென்றோ? மாறுபடாது. சிவபெருமான், எங்கும் வியாபகமாய் நிற்கினும், இவ்விடங்களின் மாத்திரமே தயிரில் நெய்போல விளங்கிநிற்பர். மற்றை இடங்களிலெல்லாம் பாலில்நெய்போல வெளிப்படாது நிற்பர். சிவலிங்கம் பரார்தலிங்கம், இட்டலிங்கம் என இருவகைப்படும். சிவபெருமான் சங்காரகாலம்வரையுஞ் சாந்நித்தியராய் இருந்து ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கப்பெறும் இலிங்கமாம். இது, தாவலிங்கம் எனவும், பெயர்பெறும்.

சுயம்புலிங்கம், காணலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம், மாநுடலிங்கம் என ஐவகைப்படும். இவைகளுள்ளே, சுயம்புலிங்கமாவது தானே தோன்றியது. காணலிங்கமாவது, விநாயகர் சுப்பிரமண்யர் முதலிய கணர்களாலே தாபிக்கப்பட்டது. தைவிகலிங்கமாவது, விட்டுணுமுதலிய தேவர்களாலே தாபிக்கப்பட்டது. ஆரிடலிங்கமாவது, இருடிகளாற் ருபிக்கப்பட்டது; அசுரர் இராக்கதர் முதலாயினோராற் ருபிக்கப்பட்டதும். அது. மானுடலிங்கமாவது, மனிதராற்ருபிக்கப்பட்டது. மானுடலிங்கத்தின் உயர்ந்தது ஆரிடலிங்கம். அதனின் உயர்ந்தது தைவிகலிங்கம். அதனின் உயர்ந்தது காணலிங்கம். அதனின் உயர்ந்தது சுயம்புலிங்கம்.

அக்கினி சொரூபம்.

சிவபெருமானுக்கு இயற்கையாயுள்ளது அக்கினிவடிவம்; ஆனதாலேயே அவரை சோதிசொரூபரென்றும், பரஞ்சோதியென்றும், அழலாடி யென்றும் கூறுப. மேலும், பஞ்சபூதங்களிலே முதற்காரணமாயுள்ளது அக்கினி. அக்கினியைன்றி எக்கிருத்தியங்களும் நடவாது. அதுபோலச் சருவபூதங்களுக்கும் பூதமாயுள்ள நீரூர்த்தமேனியராதலால் பூதநாதனென்றும் கூறப்பட்டனர்.

அன்றி, ஒருகால் பிரமவிட்டுணுக்கள் நம்மிருவரில்யார்பெரியவரென, பிரமன்யானே பெரியவனென, திருமால் நீயல்ல நானேயெனச் சண்டைசெய்திருந்தனர்; இவர்கள் கருவத்தை யழிக்கும் பொருட்டு இருவர்மத்தியிற் சோதிசொரூபமாய், சிவலிங்காகாரமாக எழுந்தருளி அசரீரியாக உங்களிருவருள் சோதிவடிவாயெழுந்தருளிய இதன் அடிமுடிகளை யார் அறிகின்றுரோ அவரேபெரியோரென்றுகூற, அதனைக்கேட்ட பிரமவிட்டுணுக்கள் தங்கள் இறுமாப்பையகலாது அவ்வாறே பிரமன் அன்னரூபமாய் முடியையும், திருமால்பன்றிவடிவாய்ப் பாதலத்தைத்தோண்டி அடியை யுங்காணும்படியாய்ச்சென்று யுகக்கணக்காய்த்தேடியும், கைகாலோய்ந்திளைத்தும் காணாராய்வருந்திப் பழையபடியே பூமியையடைந்து 'இதுஎல்லாம் வல்ல ஏகன்செயலாகும் ஆனதால், நாம் அவமதித்துத் தேடுவோமெனக்கொண்ட கருவமொழியுமாறும், நாம் அறியாமல் நம்மையேபெரியோரெனச் சண்டையிட்ட மமதையை நீங்குமாறும் ஓர் இலிங்கப்பிரதிட்டை செய்துபூசிப்போம், என்று பூசித்தனர். அதற்குச் சிவபெருமான்களித்து, கைலாயத் திருக்கோலங்களோடு காட்சிதந்து, பின்னர் அயனரிகளின் வேண்டுகோளால் அகண்டமாயிருந்த சோதிரூபமானது மலையுருவாகி * அருணாசலம் எனப்பட்டது.

---

* அருணன்-சோதி, ஒளி, அக்கினி என்பனவாம்.
அருணம்-சிவப்பு; சைலம்-மலை; செம்மலை-அக்கினி என்பதுபொருள்.

சரபரூபம்.

ஒரு காலத்தில் இரணியாக்ஷதனென்னுமசுரனுக்குத் தம்பியாகிய இரணியனென்னும் அசுரன் அனேககாலம் சிவபெருமானை நோக்கித் தவம்புரிந்து எல்லாவரங்களையும் பெற்று ஏகசக்கிராதிபனாய்த் தேவர்களைத், தன்னேவலுக்குள்ளாக்கி இம்சைசெய்து, எல்லாரும் 'இரண்யநம' வென்று துதிக்க வாழுநாளில், இதனைப் பொறாத இமையவர் விண்டுமூர்த்தியைக்கண்டு விளம்ப, சாரங்கன் தனதொருகூற்றை அவனது தவப்புதல்வனாகச் சனிப்பித்தனன். அப்புதல்வன் ஐந்துவயதடையப் பள்ளியில்விட்டுப் படிப்பிக்க, எத்தனிக்கையில், உத்திரவின்படி உபாத்தியாயர் இரணயாயநம என்றுபோதிக்க, சிறுவனாகிய பிரகலாதன் 'நாராயணாயநம' என ஐயர் அரசனுக்கு அறிவிக்க, அரசன் பலவகைத் தண்டஞ்செய்தும் பயனுறாமையால் "நீ கூறுகின்ற பரம்பொருள் யாண்டுளது" எனக்கேட்க, பிதாவை நோக்கிப் பிரகலாதன், "இறைவனெங்குமுளன்" எனக் கூறினன். அதைக்கேட்ட இரணயகசிபு கோபங்கொள்கையில், நாராயணன் நரவடிவுஞ் சிங்கவடிவுங்கூடிய நரசிங்கமாகத் தூணைப்பிளந்துகொண்டு வெளிவந்து அவனுடன் அரும்போராற்றி, அத்தானவத்தலைவனைத் தன்மடியிலிருத்தி, நகங்களால் மார்பைப்பிளந்து குடரைப்பிடுங்கி மாலையாயணிந்து இராப்பகலுக்கிடையாகிய சாயங்காலப்பொழுதில்மேலிட்டு, ஒருதுளியுதிரமுங் கீழ்விழாமற் கையிலேற்றும் வாய்வைத்துப் பருகியும் உயிர்மாய்த்தனர். அவனைச் சங்கரித்தகாலத்தையே இரணியவேளை யென்பர். திருமகள் கொழுநன் அசுரனுதிரமருந்திய வெறியால் அவனிமாக்களைவாரி வாயிற்பெய்து, செருக்குற்ற செயல் கண்டஞ்சி, தேவர் ஒருநொடியி லுலகமழியுமெனவுட் கொண்டோடிச்சென்று, திருக்கைலையை யடைந்து திருநந்திதேவரால் சிவபிரானுக்குரைப்ப, பரமசிவன் "பயப்படாதீர்கள்" என்றுபகர்ந்து, இருசிரமும், இணையில்லாச்சிறகும், கூரியநகமுமுடைய எட்டுக்காலும், நெடியவாலும், பேரிறைச்சலும், கடுங்கோபமுங்கொண்ட சரபத் திருவுருவுடன் நரசிங்கத்தை நண்ணி, இடிமுழக்குப்போலிரைந்து, உதிரவெள்ள மூற்றெடுத்தோட, சிங்கச்சிரசையும் கைகளையும் கறித்துத்தள்ளி, மேலுட்கார்ந்து சிங்கத்தின் சருமத்தையுரித்துத் திருமேனிமேற் போர்வையாகக்கொண்டு வெள்ளிமலையை யடைந்தனர்.

பரமசிவ விநாயகர்

ஐந்து யானைமுகமும், பத்துகரமும், மயில்வாகனமும் உடையவர்.

முன்னொரு கற்பத்தில் மரீசியென்னும் முனிவர், மானதசரசு யென்னும் நதிதீரத்தில் இருபத்தோராயிரவருடம் கணேசரைநோ

க்கித் தவம்புரிந்து, கணேசர் வரப்பிரசாதத்தால் உலகங்க ளெல்லார் தன்னைப்பணியவும், தானிகரற்ற அரசாட்சிசெய்யவும், பிரர்வதிபாரே புத்திரியாகி அவதாரஞ்செய்யவும், பரமசிவன் விநாயகமூர்த்தமா யெழுந்தருளி மணம்புணரவும், இதுபோலனந்த வரங்களையும் எல்லாத் தேவமுனிவர்களும் பணியுங் கீர்த்தியையு மடைந்து பிரமன் தேவவல்லியென்னும் ஒரு பெண்ணைச் சிருட்டித்துக் கொடுக்க, மணம்புரிந்து வாழும்காளில், சிவாஞ்ஞையால் யமுனா நதியில்ஒரு தாமரைக்கமலத்துள் உலகமெலா மீன்று காத்தருளும் உமையம்மையார் ஒரு சங்குவடிவா யெழுந்தருளி நாளுக்குநாள் வளர்ந்து குழந்தைவடிவாயிருக்க, இதனை மரீசிமுனிவர் உணர்ந்து "ஓஓ நாம்விரும்பிய அகிலாண்டேசுரியாரவதரித்தனர்போலு"மென்றெடுத்துச்சென்று சீராட்டி,வல்லபையெனத் திருநாமமிட்டுவளர்த்து வருநாள், அம்மையாருக்குப் பிரிவாற்றாது முனிவராஞ்ஞையால் குற்றேவல்ர்சூழ, அனேக முனிவர்வசிக்கும் ஒருவனத்து தவச்சாலையையடைந்து ஏகாக்கர மந்திரத்தை யுச்சரித்துத் தவம் புரிவாராயினர். அவ்விடத்து இறைவன் சிவவேதியர்போல எழுந்தருளினர்; இவர்வருகையைத் தாதிகளால் அம்மையார் தெரிந்து எதிர்கொண்டுவணங்கி, "சுவாமிகாள் யாரோ? இவ்விடம் எழுந்தருளிய காரணம் யாதோ"வென் றுபசரிக்க; பிராமணர் "ஓ பெண்ணே! நாம் உம்மை மணம்புரியும் இச்சையாக வந்தோ"மென்று ஆசீர்வதிக்க, அம்மை அதிககோபாவேசத்துடன் "அறிவற்றவனே! என்ன கூறினாய்? எனது சிவபத்தியையும் பாராமல் நீ விரும்புவது தகாது சருவாதிக்கராயுள்ள சாட்சாத்து சங்கரனையன்றி மற்றோரைக் கனவிலும் நினையேன். அப்பரமதயா நிதியே என்னை விவாகஞ் செய்யி னல்லாமல்,மற்றவராகார்"என்றுமறுக்க சுவாமிகள் நிசரூபத்தோடு ஐந்து யானைமுகமும், பத்துத் திருக்கரங்களுமாக மயில்வாகனா ரூடராய்க் காட்சிதந்து மரீசிமுனிவர் வேண்டுகோளால் சருவாடம்பரத்தோடும் அம்மையாரை மணம் புரிந்தனர். இவரை வல்லபை விநாயகரென்றும் பரசிவ விநாயகரென்றும் கூறுவர்.

## பஞ்சமுக மூர்த்தி.

சாந்தம், சுத்தம், சதானந்தம், நித்திய, அகண்டம், தற்பரம் என்னும் மங்கள குணங்களைவாய்ந்த சருவாதிக்கராகிய சாட்சாத் பரமசிவம், ஆன்மாக்கள் தியானபரராய் உச்சிவிக்கும் நிமித்தம் சகள ரூபமாய்,சருவசமமாக, கன்மசதாக்கிய திருவுருவையுடைய ஐந்து திருமுகமும் பத்துத் திருக்கரங்களும், அக்கரங்கள்தோறும் சூலம், மழு, மணி, தமருகம், வச்சிராயுதம், வாள், கட்கம், நாகம்

பாசம், அங்குசம், நீலோற்பலம், அக்கினியும், அபயகரமும், படிகநிறமும், செஞ்சடாமுடியும், ஒரே தேகமும், உபயபாதமும், பரிவட்டமும், மாலையும், புன்னகையு முடையவரா யிருப்பார்.

இவருக்குக் காமிகாதி வாதுளமீறாகிய ஆகமம் இருபத்தெட்டும்; முறையே திருவடி, கணைக்கால், பாதவிரல்கள், கெண்டைக். கால், முழந்தாள், தொடை, குய்யம், கடித்தானம், முதுகு, கொப்பூழ், உதரம், நாபி, முலை, கண், கழுத்து, செவி, திருமுடி, கை, மார்பு, முகம், நாவு, கபோலம், நெற்றி, குண்டலம், உபவீதம், ஆரம், இரத்தினாபரணம், பரிவட்டம், இவைகளாகும்.

ஐந்து முகங்களாவன; ஈசானம் தற்புருடம் வாமம் அகோரம் சத்தியோசாதம் என்பனவாம். இதுமுறையே பராசத்தி கிரியாசத்தி ஞானசத்தி இச்சாசத்தி ஆதிசத்தியென்னும் பஞ்சசத்திகளால் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகமென்னும் பஞ்ச கிருத்தியங்களையும் நடத்துவதாம். இதனையே பிரம விஷ்ணு ருத்திர சதாசிவ மயேசுரரென்னும் பஞ்சமூர்த்தி சொரூபமென்பர். இம் மூர்த்தத்தை வழிபடுவோர்களுக்கு இம்மையில் பூர்வமல நாசமும் ஞானமோக்க பிராத்தியும் எல்லாபோகமும் எளிதிற் கைகூடும்.

இச் சதாசிவமூர்த்தி இருபத்தைந்து முகமும் புலியாடை அரவாபரணம் சங்கு சக்கரம் வேல் வாள் நாகம் சூலம் முதலிய ஆயுதங்கள் விளங்கப் பிரகாசிப்பர். இவரது வைபவாதிகளை ஆகமாதிகளே விரித்துக்கூறும்.

### எமனை யுதைத்தது.

மிருகண்ட முனிவர் என்பவர் முற்கல முனிவர் தவப்புதல்வியாகிய மருத்துவதி யென்னுங் கன்னியை மணந்து நெடுங்காலம் புத்திரரின்மையாற் காசி கேத்திரத்தை யடைந்து மணிகர்ணிகையில் நானஞ்செய்து சிவபெருமானை நோக்கிப்புத்திரப்பேற்றினை பாவித் தவஞ்செய்ய பெருமான் பிரத்தியட்சமாகி "முனிவனே! தீக்குணம் ஊமை செவிடு குருடு முடம் தீராப்பிணி அறிவின்மையாகிய இவற்றோடுகூடிய நூறுவய துயிர்வாழும் புதல்வன் வேண்டுமோ? அல்லது அழகு நல் வடிவு நோயின்மை எம தன்பு முதலியவற்றைப்பெற்று பதினாறுவயது சீவித்திருக்கும் மைந்தன் வேண்டுமோ? என, முனிவன் "வயதகுறைந்து வாழ்வாறுயினுஞ் சற் புத்திரனையே விரும்பினேன்." என்று விண்ணப்பிக்க, அவ்வாறே வரமளித்து அந்தர்த்தான மாயினர். பிறகு சிறிதுநாளில் அம்முனி





வன் மனைவி கருப்பமுற்று நல்ல சுபமுகூர்த்தத்தில் ஒரு மைந்தனைத் தந்தனள். தேவர் புட்பமாரி பொழிந்தனர். தேவதுந்துபி முதலியன முழங்கின. பிரமதேவன் அச்சிறுவனுக்கு 'மார்க்கண்ட' னென நாமகரணஞ் செய்தனன். உபநிட்டானம் சந்திமிதித்தல் அன்னப்பிராசன முதலியவற்றை முறைப்படிசெய்து ஒரு வருடத்திற் குடுமிபிர்களைந்து, இரண்டாம் வருடங் கன்னவேதனமியற்றி, ஐந்தவயதில் உபநயனம் நடத்தி, வித்தியாப்பியாசஞ் செய்வித்தனர். மார்க்கண்டேயர் வேதாகமமுதலிய நூல்களிற்றேர்ந்து 'சிவபெருமானே உண்மைப்பொருள்' என் றுணர்ந்து சிவபத்தியுஞ் சிவனடியாரிடத் தன்பு மதிகரித்தனர். அவ்வாறிருக்கையில் வயது பதினாறாகவே தாய் தந்தையர் இவரைப்பற்றி யெப்போதுந் துன்புற்றிருந்தனர். அதனை யுணர்ந் 'தென்' னெனக் கேட்க, உண்மையுரையாராகிக் கடைசியிற் சிவபெருமான் தனக்களித்த வரத்தைத் தந்தைசொல்ல, "எந்தையே! யான் சிவார்ச்சனைசெய்து பெருமானது பேரருளால் எமனைவென்று வருகிறேன் அஞ்சவேண்டாம்" என்று கூறி விடைகொண்டு காசிக்ஷேத்திரத்தில் மணிகர்ணிகைக்கருகே சிவலிங்கப் பிரதிட்டைசெய்து பூசித்து எம்பெருமானால் "எமபயம் நீங்குக" என்னும் வரம்பெற்று, மீண்டும் பூசாகாலந் தவறாது பூசித்து வருகையில், மரணதிசை குறுக, எமனது கட்டளைப்படி ஒரு தூதன்வந்து அவரது பூசாபலத்தினாற் சமீபிக்கக்கூடாதவனாய்ச் சயமினி நகரஞ்சேர்ந்து தன் தலைவனுக்குச்சாற்ற, அவன் கோபித்துத் தன் கணிகராகிய சித்திரபுத்திரரை வரவழைத்து அவர்கணக்கை விசாரித்தறிந்து தன் மந்திரியாகிய காலனையனுப்ப, காலன்போய்ப்பார்த்துத் தன்னாலொன்றுஞ் சாயாதவனாய்த் திரும்பிவிட, எமன் ஆலகாலம்போற் கொதித்துத் தன் மகிடவாகனத்தை யழைப்பித்துத் தானே அதின்மீதேறி மழு தண்டம் பாசம் சூலம் இவற்றையேற்று, குடையுங் கொடியுந் தூதர்தாங்கிவர, மார்க்கண்டேயரைக்கிட்டி யழைக்க, அவர் வராமையால் வெகுண்டு நெருப்பெழச் சிரித்துப் பற்களைக்கடித்து, சிரத்தை யசைத்துப் "பிரமாதி தேவர்களும் யானுமே ஒருகாலத்திற் போவோமானால், நீயோ வரமாட்டாதவன்" என்று கோபத்துடன் நிலைமலைபோல நின்று கழுத்திற் பாசத்தை வீசியிழுக்க, எத்தனிக்கையில், மார்க்கண்டேர் பயந்து சிவலிங்கக்குறியைத் தழுவி நின்றனர். அப்பொழுதில் ஆபத்து சகாயராகிய சிவபெருமான் "அஞ்சற்க" என்றருளிச்செய்து, அச்சிவலிங்க மூர்த்தத்தினின்றுந்தோன்றித் தமது இடதகாலா லுதைக்க, இமைப் பொழுதில் எமன்

உயிர் நீக்கினன். பின்னர் பூமியில் மரணுவத்தை யின்மையாற் பூதேவி சுமையாற்றளாய்க் குறையிரப்ப, அருட்பெருங்கடலீண்டும் அவனை யெழுப்பினர். மிருகண்டு புத்திரராகிய மார்க்கண்டேயரைச் சிரஞ்சீவியாக்கிக் காலனையடக்கிய கோலமே காலாந்தக மூர்த்தமெனப் பெயர்பெறும்.

## அர்த்தநா ரீசுரர்.

ஒருகால் திருக்கைலையில் சிவபெருமான் சருவதேவ பூசிதராய்ச் சாட்சாத்து உமையம்மையாரோ டெழுந்தருளி யிருக்கையில், மகாமுனி சிரேட்டராகிய பிருங்கியானவர் பார்வதி தேவியாரைப் பணியாமற் சிவபெருமானை மாத்திரம் பணிந்து பலவகையாகப் பாடிப்புகழ்ந்து நிற்பதுகண்ட இமயவல்லி, 'இம்முனிவன் யாவன்? எம்மைச் சிறிதும் மதித்திலன்' என்று முனிந்து, சத்தியாகிய தனது கூறுகவுள்ள உதிரமாமிசங்களை அவருடலிற் சிறிதுமின்றி ஆக்கிராணித்துக்கொள்ள, அவர் சிவக்கூறுகவுள்ள என்பையும் நரம்பையுமே கொண்டதோற் பதுமைபோலத் தள்ளாடி நின்று தம்மைப் பிரார்த்தித்ததுகண்ட தாணு மனந்தரியாராகவொரு கோலையுதவ, பிருங்கிமுனி களித்து மூன்றுகாலுடன் முன்னின்று கூத்தாடிப் பலவகையாகப் பாடிச் சென்றனர்.

கவுரியம்மையார், கனவருத்தமுற்றுக் கடுகியெழுந்து கணவராகிய கண்ணுதலை நமஸ்கரித்து எம்பெருமானே! எளியேன் தவமிழைக்க எண்ணினேன். ஏழையேற்கு இன்னருள் புரியவேண்டும் என்று விண்ணப்பித்து விடைபெற்றுத் திருக்கயிலையை நீங்கி ஐங்கரக்கடவுள் அறுமுகக்கடவுள் சததமாதர் முதலானோர் தம்மைப் புடைசூழ்ந்து நிற்க, ஒருமலைச்சாரலில் எழுத்தூணின்மேல் நின்று எண்ணற்குமரிய தவத்தை எண்ணில்லாககால மியற்றினர்.

சிவபெருமான் உமாதேவியார் தவத்திற் கிரங்கித் திருவருள் புரியத் திருவுளங்கொண்டு இடபவாகனரூடராய், சமத்த தேவர்களுந் தம்மைப் புடைசூழ்ந்துவரவும், சருவ வாத்தியங்களு மொலிக்கவும், வேதங்கள் கோடிக்கவும், மலைச்சாரலையடைந்து எமதன்னையாகிய ஈச்சுரியின் தவச்செயலைக்கண்டு சந்தோடித்துக் காட்சிதர, தேவியார் திருக்கண்களாற் றரிசித்து விழியினின்றும் ஆனந்தபாட்பஞ்சிந்த அடியற்றமரம்போலச் சாட்டாங்கமாகத் தரைமேல்விழுந்து பணிந்தனர். மாதேவர் மனக்களிப்பு மிக்கவராய் "மாதே! யாது வரம்வேண்டும்" என வினவ, மலைமகள் மணவாளனை வணங்கி 'வள்ளலே! தேவரீர் வேறும், அடியேன் வேறுமாக விரு

ப்பதில் வெறுப்புற்றேன். வாமபாகத்தில் அடியாள் கலந்திருக்கவேண்டும்' என, சிவபெருமான் அவ்வாறே தமது திருமேனியில் வாமபாகத்தை அம்மையாருக் கருள்செய்து இடபாரூடராகித் தேவியாருடன் திருக்கயிலாயகிரியை யடைந்தனர். 'பாதி சரீரம் வாமபாகத்திற் சிவபெருமானுமாகவீற்றிருக்குந் திருக்கோலமே அர்த்தனாரீசுரமெனப்படும்.

சங்கர நாராயணர்.

முன் ஒரு கற்பத்தில் அகிலகாரணராகிய சாட்சாத்து விஷ்ணுமூர்த்தி நமது சங்கரனைநோக்கி நெடுநாள் அரிய தவஞ்செய்தனர். அத்தவத்திற்குச் சிவபிரான் மகிழ்ந்து பிரசன்னமாகி "திருமாலே! யாது காரணமாகத் தவம்புரிகின்றாய்? நீயோ மகா தவசிரேட்டன்; இரட்சிப்புக்கடவுள்; அன்றி மாபாசால கபடநாடக சூத்திரன் என்று உலகங் கொண்டாடத்தக்க, மகத்துவங்களைக் காட்சித்திருக்கின்றோம்." என்றுகூற, திருமால் "ஓ-சர்வகாரண மூர்த்தியே! சுவாமிகளை இடைவிடாது சிந்திக்கவும், தங்களைவிட்டகலாதிருக்கவும் கிருபை செய்ய வேண்டு" மென்று பிரார்த்திக்க, சங்கரன் "அவ்வாறே நீ சிவத்தியான பரனுயும் எமது இடபாகததில் இருக்கவுங்கடவாய்" என்று திருவாய்மலர்ந்து அந்தர்த்தானமாயினார். அங்ஙனமே திருமால்பரா சத்தியாகிச் சிவபிரானுக்குப் பாரியாயினர். அத்திருமால், பார்வதியாயும், புருடராகையால், விஷ்ணுவாயும், குரோதமுற்ற காலத்தில் காளியாயும், போர்முகத்தில் துற்கையாயும் விளங்குவர்.

ஆகையால், புருடபாகம் வலதுபக்கமும், பெண்பாகம்இடதுபக்கமுமெனக் கூறுவதுபோலச் சிவபெருமானது வாமபாகத்தை மகாவிஷ்ணு பூசைசெய்து பெற்றுக்கொண்டனர். அதுமுதல் சிவனும், திருமாலும் ஒரேவடிவாய் (அர்த்தனாரீசுரர்போல) வலதுபாகம் செந்நிறமும், மழுவும், அபயகரமும், இடதுபாகம் பச்சைநிறமும் சக்கரமும், வரதகரமுமாக ஏகரூபமாய் ஏகாசனத்தில் எழுந்தருளியிருப்பர். இவ்வாறு சங்கரரும், நாராயணரும் ஏகரூபமாயிருப்பதுபற்றி சங்கர நாராயணரெனக் கூறப்பட்டது.

"ஆற்றல்வடி வாட்டங்கை யவுணராலு மகல் விசும்பு தனிபுரக்க மமர ராலு, மாற்றரிதா யெவ்வுயிர்க்கு மயக்கஞ்செய்யுமாயை யினைக் களித்தனமெம் மிடப்பா னீயே, யூற்றிருந்து நறவொழுகுந் துவளத் தாரோ யுனையிகழ்ந்தோ ரெமையிகழ்ந்தோ ரென்ன வோதி, யேற்றையிருங் கொடியுயர்த்த செக்கர்வேணி யிறைவனுயர் தடங்கயிலை யெய்தினனே."

"இடமால்வலந்தானிடப்பாறுழாய் வலப்பாலொண்கொன்றை
வடமாலிடந்துகிறோல்வலமாழியிடம்வலமா
னிடமால்கரிதால்வலஞ்சேசிவனுக்கெழினலஞ்சேர்
குடமாலிடம்வலங்கொக்கரையாமெங்கள் கூத்தனுக்கே."

என்று கூறும் ஆத்தவாக்கியங்களா லுண்மையறிக.

ஒருகாலத்தில் உமையம்மையார் சிவபெருமானை நோக்கி விரதங்களுட் சிறந்த சோமவார விரதத்தை ஆச்சிரயித்து வசிட்டாதி முனிவர்கட்கு அன்னமளிக்கையில் இறைவியாரது தவச்செயலைக் காண விரும்பிய எம்பெருமான், 'விஷ்ணுமூர்த்தி பாரியாகிப் பின்வர, தாம் விருத்தவேதிய வடிவேற்று எழுந்தருளி, விமலையின் விரதத்தைச் சோதித்து, பெருமான் தமது நிசவடிவும், திருமால் முதலிற் பார்ப்பதியுருவும் பின்னர்த்தனது நிசவடிவுங்காட்டத், தேவியார் தரிசித்துக் களித்தனரெனவும் ஒரு சரிதமுளது.

திரிபுரதகனம்.

தாரகாசுரன் பெற்றதனயராகிய தாரகாட்சன், கமலாட்சன், வித்துன்மாலி யென்று மூவரும் பிரமனைநோக்கிப் பெருங்காலதவம் புரிகையில், பதுமன் அவர்கட்கு முன்தோன்றக் கண்டுபணிந்து நின்று பலவகையாகத் துதித்து "அண்ணலே அடியேங்கட்கழியாவர மருளவேண்டு" மென, மலரோன் "மைந்தரே! மடியாதிருப்போர் வையகத்திலில்லை. கற்பகாலங்கழியின் யானும் இந்திராதி தேவர்களும் இறப்போம்; ஈசனே யிறவாதவன்; ஆதலின், அது நீங்க மேம்பாடாவது,மோட்சமாவது வேண்டிற் றருவோம் "எனதானவர்" பொன் வெள்ளி இருப்பினாலமைந்த மதில்கள் பொருந்திய முப்புரம் பூமி-அந்தர-சுவர்க்கமெனும் மூவுலகங்களிலும் வேண்டும்; அவை ஆயிரவருடத்திற் கொருமுறை விரும்பிய இடத்திற்குப் பெயரவேண்டும். அப்புர மூன்றும் ஒன்றுபட்டபொழுது சிவபெருமானே ஒரு கணையா லழித்தாலன்றி வேறொருவரானு மழியாவரம் வேண்டும் எனக்கேட்க, பிதாமகன் அவ்வாறே பிரசாதித்துத் தனதுலகு சார்ந்தனன்.

தாரகாட்சன் முதலாயினோர் அளவில்லாத அவுணர்சேனையையுடையவராய், மாயனென்னுந் தானவத்தச்சனை வருவித்துத் தங்கள் விருப்பின்படி பூமியிலிருப்புமதிலும், அந்தரத்தில் வெள்ளிமதிலும், சுவர்க்கத்திற் பொன்மதிலுமாக, பல வளப்பமும் நிறைந்த முப்புரம் நிருமிக்கச்செய்து, தமக்குவேண்டிய தொன்றுமின்றி, சிவலிங்க பூசனைமுதலியவற்றைக் குறைவரச்செய்து வாழ்ந்திருப்

பிறும், தமது அசுரகுலத்தியற்கை குன்றாதவராய், வைகுந்த முதலிய தேவநகரங்களையும், உலகிலுள்ள பலபதிகளையும், திரிபுரத்தோடுசென்று சிதைத்து வருவதாற் சினந்த இந்திரைகேள்வன், இந்திரன்முதலிய இமையவரையுடன் கொண்டுபோயெதிர்த்துத் தன் புற்றுச் சகியாமல், தேவர் குழுவுடன் திரும்பி மேருமலையின் வடபாலிற் பலகாலந்தவஞ்செய்ய, பரமபதிஇடபாரூடராய்க் காட்சிதந்தனர். தேவர்கள் நமஸ்கரித்துத் திரிபுரத்தவர் தீமையை விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் "அவர்கள் நமதடியராதலின் அவர்களைச் செகுத்தல் அடாது" என்றருளி அந்தர்த்தானமாயினர்.

அப்போது விண்டு வானவர் "தேவர்களே! அஞ்சாதீர்க"ளென்று தாம் புத்தவடிவுகொண்டு, நாரதமுனிவர் சீடராக உடன்வரத் திரிபுரமடைந்து, பிடகாகமம் பிரசங்கித்து, அவரைமருட்டிப் பவுத்தராக்கினர். அம்மாயையிலகப்படாதார் மூவரேயாதலின் திருமால் ஏனையோரைப் பார்த்து 'நீங்கள் அம்மூவரையும் பாராதீர்கள். அவர்கள் இழிதொழில் பூண்டோர்" என்று கூறி, நாரதருடன் மேருமலை படைந்து தேவகூட்டத்துடன் சிவபிரானைச் சிந்தித்துத் தவத்திருந்தனர். பெருமான் அஃதறிந்து அருள்வடிவாகிய திருநந்திதேவரை விளித்து, "தேவர்கள் பாற்சென்று திரிபுரத்தவரைச் செயிக்க இரதமுதலிய யுத்தகருவிகளைச் சித்தஞ்செய்யக் கட்டளையிடுக" என, நந்தியெம்பெருமான் மேருமலைசேர்ந்து அவ்வாறேஅமரர்கட்கு ஆஞ்ஞாபித்துச்சொல்ல, தேவர்கள்களிகூர்ந்தனர்.

மந்தரகேசரி மலைகள் அச்சாகவும், சந்திர சூரியர் சக்கிரமாகவும், இருதுக்கள் சந்தியாகவும், பதினான்கு உலகங்கள் பதினான்கு தபுடுகளாகவும், நதிகளும் நதங்களும் நாட்டுங் கொடியாகவும், நட்சத்திரங்கள் நல்லவிதனமாகவும், மோட்சலோகம் மேல்விரிவாகவும், மரங்கள் சட்டமாகவும், நாள்முதலிய காலத்திரயங்கள் (கடுப்பாகிய) எண்ணெயூற்றும் இடுக்குமரமாகவும், அட்டபருவதங்கள் தூணாகவும், எட்டுத்திக்குக்கயங்கள் இடையிற்றூங்கவும், சத்தசமுத்திரம் திரைச்சீலையாகவும், ஞானேந்திய கன்மேந்தியங்கள் கலன்களாகவும், கலைகள் முளையாகவும், புராணம்-வேதாங்கம்-சாத்திரம்-மநுக்கள் மணியாகவும், மருத்துக்கள் படியாகவுமமைந்த திவ்வியமான ஒருதேரைச்செய்து, வேதங்கள் நான்கையும் நான்கு திகுரைகளாகப் பூட்டி, பிரமனைத் தேர்ச்சாரதியாய் நிறுத்தி, பிரணவமே குதிரைதூண்டுங் கோலாகக்கொண்டு, கங்கை அதிதிமுதலிய தேவநங்கையர் நாற்புறமுஞ் சாமரையிரட்டவும், தும்புருநாரதரிசைபாடவு மமைத்து, அரம்பைமுதலிய கணிகையர் நடிக்கவுஞ்

சமைத்து, மேருமலையை வில்லாகவும்; வாசுகியை நாணியாகவும் நியமித்து, திருமால்பாணமும், சரசுவதி வில்லிற் கட்டியமணியும், அக்கினி தேவன் அம்பின்கூர்வாயும், வாயு அம்பிற்கட்டிய இறகுமா யேற்படுத்தித் திருக்கயிலாயகிரியை யடைந்து திருநந்திதேவரைப்பணிந்து அமரர் அமர்க்கருவிகளையமைத்துக்கொண்டடைந்தனரென்று அருள் வள்ளல் சந்நிதியில் அறிவிக்கவேண்டும் எனப் பிரார்த்தனை செய்தனர்.

அவர்சென்று விண்ணப்பிக்க, இறைவர் தேவியாருடன் இடபாரூடராய் இரதத்தையடைந்து இமையவர் எண்ணத்தின்படி அதிற்காலூன்ற, அதனச்சுமுறிந்தது; அச்சுதன் அக்கணமே விடைவடிவாகி எம்பிரானை ஏற்றுத் தாங்கமாட்டாமல் தரைமேல் விழ, சிவபெருமான் திருவருண்மேலிட்டா லிறங்கினர். பிரமன் ஸ்ரீவிநாயகக்கடவுளைப்பூசித்தனன். அவரருளால் அவ்விரதம் முன்போலாக அதன்மேற்பெருமான் அம்மையாருடன் ஆரோகணித்தனர். மூத்த பிள்ளையார்-இளைய பிள்ளையார் - திருமால்- இந்திரன் முதலான தேவர்கள் தத்தம் வாகனங்களி லேறி வரவும் முப்பத்துமுக்கோடி தேவர்களும், மற்றோரும் எப்பக்கலுஞ் சூழ்ந்துவரவும், சத்தஇருடிகளாசிர்வதி கவும், திருநந்திதேவர் பொற்பிரம்பு கொண்டு முன்செல்லவும், பாநுகம்பன், வாணன், சங்குகன்னன் முதலிய சிவகணநாதர்கள் வாத்தியமிசைக்கவும், சிவபெருமான் இரதாரூடராய்த் திரிபுரத்தை சரற்கால சந்திரபுஷ்ய நக்ஷத்திரத்திற் சமீபித்தனர்.

அமரர்கள் அப்பொழுது ஐயனைப் பணிந்து "அண்ணலே! வில்லைவளைத்துக் கணைவிடவேண்டு" மென்று பிரார்த்திக்க, சிவபெருமான் தனது திருக்கரத்தேந்திய மேருமலையாகியவில்லை யெடுத்து வளைத்து, வாசுகியாகிய நாணேற்றினர். அதில் அம்புபூட்டித் திரிபுரத்தை யழிப்பின் அந்தரர் அந்தமில்லாத அகந்தையுறுவ ராதலின், அவ்வாறின்றி இடப்பால் வீற்றிருக்கும் இமையவல்லியைக் கடைக்கணித்து, பிறகு புன்னகைசெய்யப் புரமூன்றுந் தீப்பற்றிச் சாம்பராயின.

இவ்வாறு திரிபுரத்தோடு பொருதவரை புரங்கள் தீப்பற்றிச் சாம்பராயின. பிறகு பெருந்தகையினரான சிவனடியே சிந்தித்து வந்தமூவரும் யாதொரு தீமையுமின்றிப் பெருமான்பால் வந்து பணிய, கண்ணுதல் அவர்களைத் துவாரபாலகராக அருளி, தேவர்களை அவரவரிடத்திற் கனுப்பித் திருக்கைலைமலைக் கெழுந்தருளி

னர்; அமரர் துயர் திரும்படி முப்புரத்தைச் சிரித்தெரித்தலின், சிவபிரான் திரிபுராந்தக மூர்த்தியெனத் திருநாமமுற்றனர்

விஷ்ணுக்குச் சக்கரமளித்தது.

உலகமுழுவதும் ஒரேசெங்கோலின லரசுபுரிந்து வந்த குபன் என்னும் மன்னன் காரணமாக திருமால், ததிசிமுனிவரையெதிர்த்துச் சமர்புரிந்து சகிக்கமுடியாராய்த் தமது சக்கராயுதத்தை அம்முனி புங்கவன்மேற் பிரயோகிக்க, அது அம்முனிசிரேட்டரது வச்சிரயாக்கையிற்றுங்கி வாய்மடிந்து மீண்டது. அதுகண்ட அச்சுதன் அச்சமுற்று, மாயாரூபமொன்று தன்போ லுண்டுசெய்தனன். முனிவர் முனிந்து தமதுகாற்பெருவிரலையசைக்கக் கணக்கில்லாத விண்டுமூர்த்திகள் வெளியேதோன்றினர், அதனால்; அவர் தவவலிமிகுந்தவரென்றும், அவரைவெல்லத்தக்க வல்லமை தன்னிடத்திலில்லையென்றும் சாரங்கன் தெரிந்து அம்முனிவரைச் சரண்செய்து மீண்டு தன்னுடன்போந்த வானவலர நோக்கி, "யான் தீயரைச்செகுத்து உலகைப் புரக்குந் திதிக்கடவுளாதலின் எனக்கித்தகைய சக்கரம் இன்றியமையாதது. இதுபோல வேறொன்று யாண்டு பெறுவேன்" என்றிசைத்துவருந்த, இமையவர் "சலந்தரனென்னுந் தானவத் தலைவனைச் சங்கரன் சங்கரிக்குமாறு திருவடிபாற்கீறி நிருமித்த சுதரிசனமென்னுஞ் சக்கரப்படை அம்மாதேவன் பாலுள்ளது" என மறுமாற்றங்கூறினர்.

அதுகேட்ட திருமால் சிந்தைகளித்துச் 'சிவார்ச்சனையாலதனையடைவே' னென்றுள்ளத்தமைத்து ஒரு சிவலிங்கக்குறியை தாபித்துப் பாசுபத விரதம்பூண்டு சங்கற்பஞ்செய்து திருவெண்ணீறுதரித்து அக்கமாலைசூடி, தேவர்கள் பூசைக்குரிய உபகரணங்களைச் சித்தஞ்செய்துகொடுக்கப் பரமபதியைப் பதுமமலர் ஆயிரத்தால் நாடோறும் பவன்முதலிய திருநாமங்களோதி அருச்சிக்கத்தொடங்கினர். அவ்வாறு நிகழ்ந்துவருகையிற் பத்திவலையிற் படுவோராகிய பரமேச்சுரன் அவர்அன்பின் முதிர்ச்சியை ஆர்கலிசூழ்ந்த அவனிமாக்கட்கறிவிக்க, ஆயிரங்கமலத்தில் ஒருகமலத்தை மறைவாக்கினர். விண்டு உணராராகிப் பண்டுபோல பவன் முதலிய சகத்திரந் திருநாமங்களையோதி ஒவ்வொரு கஞ்சமாகவெடுத்துப் பூசித்துவந்து கடைசியில் ஒரு திருநாமத்திற்கு மலர்காணாராய் "இஃதென்னை யானாக வுடையார் திருவிளையாட்டு" என்றெண்ணி தமதுபூசை முட்டுப்படாவண்ணம் விழியொன்றைப் பிடுங்கி மலராகப் பாவனை செய்து அருச்சித்து முடித்து ஆனந்தக்கடலாளழுந்தினர்.

உடனே பிறைசூடிய பெருந்தகையார் களிகூர்ந்தவராகிச் சோதிமயமான பேருருவுடன் தரிசனந்தர, திருமால் அட்டாங்க பஞ்சாங்கமாகப் பலமுறைபணிந்து வேதவாக்கியங்களாற் றுதித்துக் கையேற்று நிற்க, கருணை வள்ளல் "கமலைகேள்வ! உன்பூசைக்கு மனங்களித்தோம், உனதுகண்ணை யளித்தோம். கமலக்கண்ணன் என நாம மடையக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளி, தமது திருக்கரத்தி லிருந்த சுதரிசனம் என்னுஞ் சக்கராயுதத்தைப் பிரசாதஞ் செய்து "எத்தகைய வலியின ராயினும் நின்னை யெதிர்த்தோரை இது இமையளவிற் கொல்லும் ஆற்றலுடைய" தென்று அநுக்கிரகித்தனர். திருமால் இவ்வரங்களையும், சுதரசனத்தையும் பெற்றுப் பலமுறைபணிந்து அருவியாறுபோற் கண்களில் ஆனந்த பாட்பஞ் சிந்தப் பலவகையாகப் பாடி ஆனந்தக் கூத்தாடி எம்பெருமானது திருவடியை முடியிற்சூடி வைகுந்தத்தை நாடி இடையறுச் சிவபத்தியுடன் வீற்றிருந்தனர்.

## சுநந்தமுனிவர் முஞ்சிகேச முனிவரெனப் பெயர்பெற்றகாரணம்.

ஸ்ரீவடாரணியத்தின் மகிமையைச் சிவபிரானுற் சொல்லக்கேட்ட சுநந்தமுநிவர், பெருமான் அநுக்கிரகித்த வண்ணந் தாண்டவ தரிசனத்தை விரும்பி ஆங்கடைந்து தவத்திருந்தனர். அவ்வாறிருக்கையிற் கண்ணுதல் கைவிர லணியாகிய கார்க்கோடகன் திருவிரலில் விடத்தைக்கக்க, விடையூர்தி "நம்மைமனத்திற் கருதாது மமதையோடு நீ செய்த தீமைக் காகத் திருக்கைலையை நீங்குக" என நாகம் நடுங்கிப்பணிய, நாதன் "வடாரணியத்தலத்திற் பலவாண்டுக ளிருந்து அருந்தவம் புரியுஞ் சுநந்தருடன் சண்ட தாண்டவத்தைத் தரிசித்துப் பிறகுவருதி" என, கட்செவி கருடனுக்கஞ்சி முறையிட, இறைவர் "இத்தீர்த்தத்தின் மூழ்கி ஆண்டுள்ள முத்தி தீர்த்தத்தில் முளைக்க" என, அரவு அவ்வாறே ஆலவனமடைந்து அருந்தவஞ் செய்யுஞ் சுநந்தரைக்கண்டு தொழுது தனதுவரலாற்றைச் சொல்ல, சுநந்தமுநிவர் மகிழ்ந்து தன்பக்கலிற் றவமியற்றப்பணித்து, பழையபடி நெடுங்காலந்தவத்திருப்ப, முநிவரைப் புற்றுமூடி முடிமேல் முஞ்சிப்புல் முளைத்தமையால், அவர் முஞ்சிகேசமுநிவரெனப் பெயர்பெற்றனர்.

---

## சாமுண்டி உற்பவம்.

நிசும்பன் சும்பன் என்னும் நிசாசரிருவர் செய்துவருந் தீமையைப்பொறுத தேவர்கள். பார்வதியாரை நோக்கிப் பலகால் அரு

ந்தவஞ்செய்ப, இறைவி இமையவர் முன்தோன்றி "அமரரே! நீங்களவாவிய அடைவே அவர்களை யழிப்பேன்" என்றருளிச்செய்து மலைச்சாரலையடைந்து தவவடிவேற்று வசித்திருக்கையில், சண்டன் முண்டன் என்னுந்தானவரிருவர் சாம்பவியைச்சார்ந்து "தார்குழலே! தனித்திருப்பானேன்? சாற்றற்கரியவலியுடைய சும்பனிடஞ் சேர்க" எனச் சொல்ல, அம்பிகை "அருந்தவ மாற்றும் யான் ஆடவரோடுரையாடேன். அரைக்கணத்தகலுமின்" என்றறைய, அவர்கள் சும்பாசுரன்பால் தேவியின் பொலிவை வியந்து செப்பி, அவனேவலாற் சிலபடையுடன் மீட்டுஞ் சென்றழைத்தும் வாராமை நோக்கி வலிதிற் கைப்பற்றி யீர்க்கக் கருதுகையில், விமலை வெகுளி கொள்ள அம்மையார் தோளிலிருந்து அனேகஞ்சேனையும் ஒருசத்தியும் அவதரித்து, அவ்விருவரையுஞ் சேனையுடன் சங்கரித்தனர். "சண்டனையுமுண்டனையுஞ் சங்கரித்தமைபாற் சாமுண்டி யெனப்பெயர் பெற்றுத்தரணியோர் தொழ வாழுதி" என அச்சத்திக் கருளினர். அவற்றையறிந்த நிசும்பன் சும்பன் என்போர் அநேக அசுரருடன் ஆர்பரித்து வந்து, அம்மையை யெதிர்த்து அத்திரமாரி சொரிய, உமாதேவியார் தமதுடலினின்று சததமாதர்களையுஞ் சிவதூதியரையும் உதிப்பித்து, யுத்தத்திற்கனுப்பி அவர்களால் அசுரச்சேனையை யழிப்பித்து, தாமே முதலில் நிசும்பனையும் பிறகு சும்பனையுமாய்த்தனர்.

---

## சண்டி அல்லது காளி யுற்பவம்.

ஆற்றலுடைய அவ்விரண்டசுரர்கட்கு மிளையாளாகிய குரோதியென்பவள் பெற்ற இரத்தபீசன் தனதுடர் சோரியில் ஒருதுளி தரைமேல்விழுந்தால் அத்துளி தன்னைப்போலத் தானவனுமாறு வரம்பெற்றவன். அவன் இச்செய்தியறிந்து இமைப்பொழுதிலெதிர்த்தனன். அந்நிருதனுடன் சமர்செய்கையில் உதிரத்துளிகட்கு ஒவ்வோர் உருவேற்றது கண்டோடிவந்து உமையம்மையோடுரைப்ப, தேவியார் சினமிகத் திருத்தோளினின்றுங் காளி தோன்றினள். "பெண்ணே! யான் இரத்த பீசனைச் சங்கரிக்கையில் உதிரத்துளியொன்றும் பூமியில் விழாமல் உன் கைக்கபாலத்தேந்தி யுண்ணக்கடவாய் என்று பணித்து, அவளுதிரபானஞ் செய்துவர, இறைவியார் இரத்த பீசனை இமைப்பிலழித்து, இமையவரை அவரவர் நாட்டிற்கேக விசைத்து, காளியைக் களிப்பித்து அவளுக்குச் சண்டியென்றுபெயரும் தெய்விகமும் சிவபெருமானிடம் நிருத்தஞ்செய்து அவர்பக்கலில் வசித்தலும் ஆகிய இவற்றை அருக்

கிரகித்து, சத்தமாதர்கட் கருள்செய்து அந்தர்த்தானமாயினர். காளி அசுரர் உதிரமருந்திய ஆற்றலாலும், இறைவியாரிடம்பெற்ற வரத்தாலு மிறுமாந்து மாமிசம் நிணமுதலியவற்றைப் புசித்து, மோகினி இடாகினி பசாசு பூதங்கள் புடைசூழ ஒருவனத்திலிருந்து மற்றொரு வனத்திற்குப்போய் உலகமுழுவது முலவி வடாரணியத் தருகில்வந்து யாவரையுந் துன்புறுத்தி வாழ்ந்திருந்தனள். இஃதிவ்வாறிருக்க.

ஒருநாள் திருவாலங்காடு சென்ற நாரதமுனிவருக்குக் காளியின் தீச்செயல்களைக் கார்க்கோடக முனிவர்கூற, நாரதர்கேட்டுச் செல்லுமளவில் காளி விழுங்கவர, அவர் கரந்துசென்று விண்டுவைக்கண்டு விடயத்தை வாய்விண்டனர். திருமால் சிவபிரான்பால் விண்ணப்பஞ்செய்ய, இறைவர் "இப்பொழுதே அக்காளியின்வன்மை குன்ற வடவனமடைவோம்" என்று கூறி, சுநந்த முனிவரர் கார்க்கோடக முனிவர்கட்குக் கருணைசெய்யக் கருதி ஆலவன மடைந்தனர்.

## காளியோடு நடன மாடியது.

மாதேவன் வயிரவவடிவு கொண்டமையின், உடன்வந்த பூதகணங்களுடன் காளிபின்சேனை எதிர்த்து ஆற்ருது காளிக்கஞ்சிய, அவள் அமர்க்கோலங் கொண்டுவந்து ஐயனைக்கண்டு பயந்து 'நிருத்த யுத்தஞ்செய்வோம்' என நிகழ்த்த, முன்னே னிசைந்து முஞ்சிகேச கார்க்கோடகர்கட்குத் தரிசனந்தந்து திருநடனத்துக்குத் தேவருடன் வந்தனர். அக்காலத்து அமரர் அவரவர்கட் கிசைந்த பல வாத்தியங்களை வாசித்தனர். அநவரதம் - அற்புதம் - இரௌதிரம்-கருணை குற்சை-சாந்தம்-சிருங்காரம்-பயம்-பெருநகை-வீரியமென்னும் நவரசங்களும், அபிநயமும் விளங்க வாத்தியங்கட்கொப்பப் பாண்டரங்கமாகிய சண்டதாண்டவத்தைக் காளியுடன் செய்கையில், கருணை நிதியின் திருச்செவியிலிருந்த குண்டலமானது நிருத்தவேகத்தால நிலத்தில் நழுவ, அதை இறைவரேதிருவடியொன்றினுலெடுத்துத் தரித்துத் திருத்தாண்டவஞ்செய்து காளியைத் தோல்வியடையச் செய்தனர். அவள் செயலற்று நாணிப் பணிந்தனள். அருள்வள்ளல், "ஈண்டோர் சத்தியாயிருத்தி" என அநுக்கிரகித்து இரு முனிவரும் எண்ணில்லா அடியார்களுந்தமது தாண்டவக் கோலத்தைச் சருவகாலமுந் தரிசிக்கும்படி ஆண்டு வீற்றிருக்கின்றனர்.

## சிதம்பர இரகசியம்.

பரமாகாய மென்றும், சிற்றம்பல மென்றும், பேரம்பலமென்றும், ஞானகாய மென்றும், பொதுமன்ற மென்றும் கூறுகின்ற இச்சிதம்பர க்ஷேத்திரத்தின் மகிமையைப் புராணங்களிலே மாத்திரம் புகழப்படுவதன்று; வேதத்தும் தரிசினோப நிடதத்திலேயும் "சிதம்பரம் இருதயமத்தியிலுள்ளது" என்று ஓதப்பட்டிருக்கின்றது. இதனால் இது விராட்டுப் புருடனுடைய இருதய தானமென்பது துணிபெண்க.

அது பற்றியே புராணங்கள் இவ்வாலயங்கள்கட்டும்பொழுது யோக முதல்வராகிய ஸ்ரீபதஞ்சலிமுனிவர் சிதம்பரரகசிய மறிந்து அதனை விசுவகன்மாவுக்கு அனுக்கிரகிக்க, அவன் அவராணையைச் சிரமேற்கொண்டு ஆலயஞ் சமைத்தனன் என்று கூறுகின்றன. ஒரு மகாயோகியின் சரீரத்தை வடக்கே தலையும், தெற்கேபாதமுமாகவைத்து நோக்கின் அதுவும் இவ்வாலய அமைப்பும் ஒத்திருக்கும், இவ்வாலயத்தேயுள்ளே ஆயிரக்கால் மண்டபம் தலையின் புறத்திருக்கும் ஆயிரவிதழுள்ள கமலமெனப்படும் மூளையையும், சிவகங்கை அம்மூளையின் மேல்புறத்துள்ள சந்திரபுட்கரணி யெனப்படும், அமுதவாம்பிகையையும் உவமையாய்ப் பெற்றிருக்கின்றன. சாக்கிராவத்தையிலே ஆன்மாவினுடைய அறிவு மூளையிலே விளங்குவது இயல்பாதலால், தேவவிமானத்தில் விடியற்காலமும் பிரதோடகாலமுமாகிய மார்கழி ஆனிமாசங்களில் ஆயிரக்கால் மண்டபத்திலே ஆனந்த நடராசமூர்த்திக்கு மகாகும்பாபிடேகம் நடந்துவருகின்றது.

இவற்றின் தென்புறத்திலே ஸ்ரீ குருமூர்த்தியும் சோதிலிங்கமும் எழுந்தருளியிருக்கு மிடம் விசுத்தி தானமாகப் பாவிக்கப்படும். அதற்குத் தெற்கே திருச்சிற்றம்பல மென்னும் மகாசபையிருக்கின்றது. அங்கே பிரம, விஷ்ணு, ருத்திர, மகேசுர சதாசிவர்களுக்கென ஐந்துபீடங்க ளிருக்கின்றன. திருவைந் தெழுத்தாகவைந்தும் ஐந்துபடிகளா யிருக்கின்றன. தத்துவதாது விகங்களாகிய தொண்ணூற்றாறு பதார்த்தங்களும தொண்ணூற்றாறு பலகணிகளாயிருக்கின்றன. நடுவிலிருக்கும் நான்கு பொற்கம்பளங்கள் நான்குவேதங்களும், சுற்றியுள்ள இருபத்தெட்டுமரகதக்கம்பளங்கள் இருபத்தெட்டு ஆகமங்களுமாம். இவைகளுள் அடங்கிய இடத்தைத் சுத்தவித்தையெனவும், இரகசியமுதல் நடராசமூர்த்தி எழுந்தருளியிருக்கும் இடம் வரையில் உள்ளபீடம் பிரணவபீட

மெனவும் படும். அப்பிரணவ பீடத்தின்கண்ணே சகலத்திருமேனி யுடைய ஸ்ரீமதானந்த நடராசமூர்த்தி யெழுந்தருளியிருக்கின்றனர் அதன்பின் வாயுபாகத்தில் சகள நிட்களமாகிய வியத்தா வியத்த லிங்கமும், அதன் பின்னே ஆரண ஆகமங்களும் அறிந்தோத வரியதும், குணவரம்பு கடந்ததும், திருச்சிற்றம்பலம் என உயர்ந்தோரால் புகழ்ந்தேற்றப் படுவதுமாகிய அழியாப் பரஞ்சுடர்ச்சிவ வொளிச் சிதாகாசவடிவம் விளங்கா நிற்கும். இச்சிதாகாச வடிவினையே ஊனக்கண்ணாற் கண்டோர் இரகசியமென்பர். கருப்பக் கிரகமாய் இவ்விடத்தே அகிலலோக மாதாவாகிய சிவகாமசுந்தரி யென்னும் பராசத்தியாரோடு தூல நடராசமூர்த்தியும், சூக்கும நடராச மூர்த்தியும், சூக்குமபற்றே ரிலிங்கமும் உள்ளன.

இரகசியத்தை நிட்களமென்றும், வியத்தா வியத்த இலிங்கத்தைச் சகள நிட்கள மென்றும், ஸ்ரீமத் சதானந்த நடராசமூர்த்தியைச் சகளவடிவ மென்றுங் கூறப்படும்.

இப்பால் கீழ்ப்புறத்திலே சண்டேசுவரத் தானத்தில் பிரமதேவரும், தென்புறத்தில் திருமாலும், வடபுறத்தில் வைரவராகிய சங்கார உருத்திரரும் இருக்கின்றனர்.

விமானத்தின்மேலுள்ள ஒன்பது கலசங்களும் வாமை முதலிய நவசத்திகளாம். கைமரங்கள் அறுபத்துநான்கும் கலைகளாம். செப்பேடுகள் இருபத்தோராயிரத் திருநூறும் மனிதர்களால்விடப்படுகின்ற சுவாசங்களாம். அவ்வோடுகளைப் பொருத்தப்பட்டுள்ள ஆணிகள் எழுபத்திராயிரமும் அச்சுவாச சஞ்சார ஆதாரமான எழுபத்திராயிர நாடிகளாம். மற்ற அளவில்லாத இரகசியங்கள் முன்னே சொல்லி வந்தவைகளுள் விளங்கப்பட்டிருக்கின்றன.

இச்சபையின் தென்புறத்திலுள்ள கனகசபைமுன்னேசொல்லி வந்த சபையின் அநேகபாகங்களை வாய்ந்ததும், பதினெண்மகா புராணங்களையே பதினெண் கம்பங்களாகப் பெற்றதுமாய், மணிபூரகத்தானமுமாய் எல்லாவற்றுள்ளும் புகழ்ப்பெற்றதுமாய் பிரகாசிக்கப் படுகின்றது. இவ்வாறு இங்குள்ளசபைகளெல்லாம் பஞ்சகோசங்களையும் உணர்த்தும் தெய்வத் தன்மையினவென்று கூறப்படும்.

அவையாவன:—இராசசபை (ஆயிரக்கால் மண்டபம்) அன்னமயகோசமும், தேவசபை (பேரம்பலம்) பிராணமயகோசமும், நிருத்தசபை மனோமய கோசமும், கனகசபை விஞ்ஞானமயகோசமும், சிற்சபை ஆனந்தமய கோசமுமாம். அன்றியும் திரிபுராதந்

திரத்திற் சொல்லிய மூன்று கூட்டங்களும் மூலகூடம், தேவகூடம், இரகசியகூடம் என இங்கு குறிக்கப்பட்டன. மனிதருடைய இருதயம் சரீரத்தின் நடுவிலிராமல் சிறிது இடதுபுறத்தே விலகியிருத்தலால், இங்கும் ஆலயத்தின் சரி நடுவுக்குச் சிறிது இடப் புறத்தே கருப்பக்கிரகம் அமைந்திருக்கின்றது. இருதயத்திலே இரத்தம்பிரவேசிக்கும் வழி நேரிலின்றி பக்கங்களிலிருப்பதால் இங்குவழிகள் கருப்பக்கிரகத்தின் பக்கங்களிலமைந்திருக்கின்றன. இச்சிற்சபையின் தென்புறத்தே மகாவிஷ்ணு தானமும், அதற்குத் தெற்கேசங்காரகிருத்தி மூர்த்திதானமும் அதற்குத் தெற்கேகணபதி தானமும் தருமவடிவாகிய இடபதேவதானமும், கோபுரமும் இருக்கின்றன. ஐந்து ஆவரணமதில்களும் ஒரேவித அளவில் அமைந்தன; சரீரத்திலும் பிராணன் பன்னிரண்டங்குலம் அதிகமென்னும்யோகநூற் பிரமாணங்கொண்டே இரண்டாவது மதிலிற் கோபுரம் வைக்கப்பட்டிருக்கின்றது

இத்தகைய மகாமேன்மை பொருந்தியது சிதம்பராலயம். இவ்வாலயத்திலே சாத்திரவிதிப்படி மெய்யன்போடு சுவாமி தரிசனஞ்செய்ய, ஞானமுதிக்கும்; பந்தம்நீங்கும்; பூரணத்துவ முண்டாம்; ஆனந்தம் விளையும்; ஆன்மநிலை விளங்கும்; அத்துவைத முத்தி சித்திக்கும். இத்தலத்தின் மகிமையை வேதாகமாதிகளே சிறிதுவசனிக்குமென்றாலும் ஒருவகையாற் பதஞ்சலி, வியாக்கிரபாத ருற்பவமும் உபமன்னிய மகாமுனிவ ரவதாரமும் அவர்களின் அரியதபோமகத்துவமும், அவர்களின் பொருட்டுத் தம்பிரானார் ஆனந்தத்தாண்டவ முண்டாயதும், இத்தலமகத்துவமும், சதாநிருத்தவிலக்கணமும் கூறத்தொடங்கினேம்.

---

## வியாக்கிரபாத மகாமுனிவ ருற்பவம்.

பிரம இருடிகளி லொருவராகிய மத்தியந்த னென்பவருக்கு வியாக்கிரபாதமகாமுனிவர் புத்திரராக அவதரித்து வேதாதிவித்தைகளைக் கற்றுத் தந்தையினால் சிவரகசியத்தை உபதேசிக்கப்பெற்று, தில்லை வனத்திலே ஒரு தில்லை விருட்சத்தின்கீழ் ஒருசிவலிங்கந்தாபித்து, தமக்கு ஒரு பன்னகசாலையு முண்டாக்கி, இரண்டிடத்தையும் பணிந்து திரிகரணமும் ஒன்றுபட்டவராய் பூசித்துவரும் நாளில், பூசைக்காகச் சேகரிக்கும் புட்பங்களில் சில குற்றமுள்ள புட்பங்க ளிருக்கக்கண்டு வருந்தி இறைவனைநோக்கி "ஐயனே! புட்பங்களை விடிந்தெடுக்கில் வண்டுகளால் பிழைபாடுள்ளவைகளா

யிருக்கின்றன. விடியுமுன்னமே சென்றெடுப்பமென்றால் வழிதெரியவில்லை புட்பவிருட்சங்கள் உயர்வாயெட்டாம லிருக்கின்றன. அன்றி, மேலேறிப் பறிப்பமென்னில் பனியால் வழுக்குகின்றன; என்செய்வேன்'' என்று விண்ணப்பிக்க, சிவபெருமான் முனிவரை நோக்கி, "அன்பனே! நீ விரும்பியபடி விருட்சங்களைப்பற்றி யேறுவதற்குப் புலிக்கால்களும், வழிதெரிந்து நடக்கவும் மலர்களைப் பார்த்தெடுக்கவும் நகங்களிற் கண்களும் அநுக்கிரகஞ் செய்தனம்'' என்றுமறைந்தனர். அதனால் அம்முனிவர் வியாக்கிரபாதரெனப் பேர்பெற்று, சிவபிரானைப் பிரிந்த பிரிவாற்றாமையால் ஆடிப் பாடிப் பரவசமுற்று வருந்தி பழமைபோல் புலிக்கால்களையும், கண்களமைந்த நகங்களையுங்கொண்டு சிவபூசாவிதிகளைக் குறைபாடின்றி நடத்தித் தம்நிலைமாறாது வாழ்ந்திருந்தனர்.

---

## உபமன்னிய மகாமுநிவ ருற்பவம்.

இவ்வாது இருக்கும் நாளில் இவரது தந்தையாகிய மத்தியந்தனர் புத்திரவாஞ்ஞையால் வந்துகண்டு சந்தோடித்து சந்ததிக்கிரமத்தின் பொருட்டு வசிட்டமாமுனிவர் தங்கையை விவாகஞ்செய்வித்துச்சென்றனர். அதன்பின் வியாக்கிரபாதரும், அவர்மனைவியாரும் ஒரு புத்திரனைப்பெற, அதனை அருந்ததி தனது ஆச்சிரமத்திற் கொண்டுபோய்க் காமதேனுவின் பாலையூட்டிவளர்த்து வந்தனர் அதன்பின் வியாக்கிரபாதர் அபேட்சையால் புத்திரனைக் கொண்டுவந்து இனிய பதார்த்தங்களைக் கொடுக்க, அக்குழந்தை உண்ணாது அழ, அதனை முனிவர் உணர்ந்து "என்செய்வோம். தெய்வமே துணை'' யென்று யோசித்து ஸ்ரீதிருமூலத்தானர் சந்நிதியிற்கொண்டுபோய்விட அவ்விடத்துங் குழந்தை அழுதலால் சிவபெருமான் கருணையினால் திருப்பாற்கடலை வருவித்துக்கொடுக்க, உண்டு குழந்தை சந்தோடித் திருப்பதையறிந்து மகிழ்ந்து, தந்தபரிலையையும் சிவபூசைத்திருத்தொண்டையுஞ் சிறிதும் நீங்காது ஸ்ரீகண்டபரமசிவம் தாருகாவனத்து இருடிகளின்பொருட்டு அநுக்கிரகதாண்டவஞ் செய்தனரெனத் தெரிந்து அத்தரிசனத்தை என்றுகிடைக்கப் பெறுவோமென வருந்திவாடி இறைவர் திருவருளினையே துணைப் பற்றிப் பூசித்திருந்தனர்.

## பதஞ்சலி மகாமுனிவர் உற்பவம்.

இப்பால் திருப்பாற்கடலிற் பள்ளிகொள்ளுந்திருமால், சேடசயனத்தைநீங்கித் தனியே ஓர் ஏகாந்த தானத்தில் யோகியர்

போது மெழுந்தனி 'அரஅர, சிவசிவ, சம்போ' என்று கண்ணீர் பனித்து உடல் மெக்குவிட்டு மயிர்க்கூச்செறிய ஆனந்தபரவசரா யிருந்தனர். அதனைச் சேடனும் மகாலட்சுமியும் நோக்கி அச்ச முடையராய், பின்னர் திருமாலைநோக்கி "ஐயனே! முன்போற் பள்ளிக்கொள்ளாமலும் கவனியாமலும் ஒருவாறு யிருக்குங் கருத் தைத் தெரிவிக்கவேண்டு" மென்று பிரார்த்திக்க, திருமால் புன் னகையுடையவராய் இலட்சுமியையும், சேடனையும் நோக்கி "நீங் கள் விரும்பியபடி என் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறேன் அது என்னெனில், வைகுந்தத்திற்கும் மனோவதிக்கும் மிடையி லுள்ளசோதி சொரூபமாய் உயர்ந்த உத்தர கயிலாய கிரியில் குக் குமமாயுள்ள பரபதியைச் சென்று நேற்று வணங்கியபோது அம் மகா கருணாநிதி என்னை அருகழைத்து கிருபையோடு அபயாத்தங் கொடுத்து, தம் வீரசிங்காதனத்தினின்று எழுந்தருளினர். அக் கால், பானுகம்பனால் ஊதப்பட்ட சங்கங்கள் கோடிக்கவும், வே தங்கள் துதிக்கவும், கணநாதர்கள் சேவிக்கவும், தபோதனர் 'அர கர' வென முழங்கவும், தேவர்கள் சூழ்ந்து பரவவும், அம்மேரு கிரியின் அடிவாரத்துள்ள ஓர் ஏகாந்த மண்டபத்தை யடைந்து * மீமாஞ்ச நெறியைக் கைப்பற்றியதாருகாவன இருடிகளின் அகந்தையை நீக்குமாறு என்னை ஒரு மோகினிவடிவுகொண்டு வர ச்செய்து தாம் ஒரு சித்தபிச்சாடன உருவை வகித்து மிதியடியும்,

---

* மீமாஞ்சநூல் பிரபஞ்சம் அநாதி நித்தியமெனவும், ஆன்மா க்கட்கு வேறாகக்கருத்தா ஒருவரில்லை யெனவும், சிவன் முதலா யினோரெல்லாரும் அநித்தியரெனவும், வேதம் அநாதிநித்தியமெனவு ம், வேதத்திற்கூறப்பட்ட சிவன் முதலிய சத்தங்களே பிரமமெ னவும். அச்சத்தங்களின் வேறாகிய தேவர்களை அச்சத்தங்கள் அறிவிப்பனவல்ல வெனவும், வேதம்விதித்த இட்டிமுதலிய கரு மங்களே இருமைப்பயன்களையும் பயக்குமெனவும் கூறும், இந் நூல்செய்தவர் சைமினிமுனிவர்.

தேவதாருவனத்து இருடிகள், மீமாஞ்சைநூலே உண்மைநூ லெனக்கொண்ட மயக்கத்தினாலே சுவதந்திரராகிய சிவபிரான்மா ட்டன்பு செய்தலையொழித்து, வேதம் விதித்தகருமங்களை அநுட் டித்துத் தங்கள் மனைவியர்கட்கும்மீமாஞ்சகமதத்தைப்போதித்து அவர்களைக் கற்பின்வழிநிறுவிப் பரதந்திரர்களாகிய தங்களைச் சுவ தந்திரர்களெனத்துணிந்து ஒழுகினார்கள். இதனையறிந்த பெருங்க ருணைக்கடலாகிய சிவபெருமான் அவ்விருடிகளுக்கும் அவர்களு

பிச்சா பாத்திரமும், விபூதிப்பையும், உருத்திராக்க தாழ்வடமும், எஞ்ஞோபவீதமும், கோவணவுடையும் தாங்கி மிக்க ரூபலாவண்ணியத்தோடு தமருகத்தை கையினிடங் கொண்டு புன்னகையோடு கண்ட ஸ்திரீகள் மனதைக் கரைத்து மோகாந்தகாரத்தில் விழ்த்தும், மாயாவித்தைப் பொருந்தி, காமனுமஞ்சுங் கடியமோகினியுருவோடு மென்னைப் பின்பற்றிவரக் கட்டளையிட்டுத் தாருகாவனத்து இருடிகள் வாசத்தானத்தையடைந்து எனது மோகினி யுருவத்தால் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் தவநெறியினின்று நீங்கிக் காமவிகாரிகளாகச்செய்து, அம்முனி பத்தினியர்களின் இடங்களைச் சுவாமிகளடைந்தனர்.

"அக்கால், அந்நங்கையர்கள், எமது சுவாமிகளது பிச்சாடனத் திருவுருவைநோக்கி காமாந்தகாரமே மனோ சொரூபிகளாய்க்

---

டைய பத்தினிகட்கும் மீமாஞ்சகமதமே மெய்யெனக் கொண்ட மயக்கத்தை ஒழித்து, அவர்களை ஆட்கொண்டருளத் திருவுளங் கொண்டு, தாம்பிச்சாடன மூர்த்தியாகி, விஷ்ணுவை மோகினியாக்கி யருளினர். இருடிகள் மோகினியினுடைய பேரழகைக் கண்ட வழித் தாங்கள் காமத்தான் மீதூரப்பட்டு நியமமிழந்து, கருமாநுட்டானங்க ளெல்லாம் கைவிடுத்தமையானும், சிவபெருமானைக் கோறற்பொருட்டுத் தாங்கள்செய்த அபிசாரவேள்விமுதலியனவெல்லாம் பயன்படா தொழிந்தமையானும், தாங்கள் கொண்ட மீமாஞ்சகமதம் பொய்யெனத் தெளிந்து தாங்கள் பர தந்திர ரெனவும், சுத தந்திரராகிய கருத்தா ஒருவர் உண்டெனவும், அவர் சிவபெருமானே யெனவும், அவரது திருவருள் வயத்தானன்றிப் பாவத்தி னீங்கலும் புண்ணியஞ் செய்தலும் இயலாவெனவும், பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும் எனவுந் துணிந்து அவரை வழிபட்டிருந்தார்கள். இருடிபத்தினிகள் பிச்சாடன மூர்த்தியினுடைய பேரழகைக் கண்டவழி முன்னர்க் காமவயத்தர்களாகி, மீமாஞ்சயமதம் பொய்யெனத் தெளிந்து, பின்னர்ச் சிவஞானவயத்தர்களாகிப் பேரின்பம் பெற்றுய்ந்தார்கள். இதுகாறுங் கூறியவாற்றாற் சிவபெருமான் செய்தன வெல்லாம் ஆன்மாக்கட்கு முத்தியின்பம் பயத்தற் பொருட்டாமென்பது தெள்ளிதிற் பெறப்படுதலானும், அவர் இருடிபத்தினிகளைக் காமித்தலுங் கூடலுஞ் செய்யாமையானும், அவர் செயல்கள் குற்றமாகாமை தெளிக. (சுத தந்திரர்-தம்வயமுடையவர். பரதந்திரர்-பிறர்வய முடையவர்.)

காமத்தால் மெலிவாரும், பிச்சையிடுவாரும், வளைகழலுவாரும், கலைநெகிழ்வாரும், புணரக் கோருவாரும், பின்பற்றி வருவாரும், ஐயனைக் கேட்பாரும் பிரமிப்பாருமாயினர். இந்நிலையால் ஒவ்வொரு இருடிபத்தினிகளுக்கும் ஒவ்வொரு புத்திரராக நாற்பத்தெண்ணுயிரம் பாலர்களுதித்து இறைவனையல்லால் தவசிகளாயினுர்கள்.

"இதனை உணர்ந்த முனிவர்கள் இவை சிவன் திருவிளையாடலேயெனத்தெரிந்து ஓரபிசார வேள்வியியற்றி, அதினின்று புலி, மான், மழு, அக்கினி, பாம்பு, பூதங்கள் வெண்டலை, மந்திரங்கள், படைகள் முதலியவைகளைச் சிருட்டித்து சிவபிரானைக் கொல்வீர்களாகவென அனுப்பினர். அவைகளை நமது உமாபதியினருகே செல்லுதலும், பெருமான் அவைகளை வதைத்தும், வருத்தியும், ஆடையாகவும், ஆபரணமாகவும், ஆயுதமாகவுந் தரித்தருளினர். இதனை முனிவர்களறிந்து ஒரு முயலகனைச் சிருட்டித்தனுப்ப அவனையும் தமது காலினுல் மிதித்தும், பின்னர் மந்திர அட்டகருமாதிகளைவிட அவைகளைத்தமது காற்சிலம்புகளுக்கு * தரிசாகக்கொண்டும்முனியாராகி அரிய நடனத்தைச்செய்ய விரும்பினுர்.

"பின்னர்முனிவர்கள் தங்களால் இனிசெய்யத்தக்க காரியங்களொன்றுமின்றி, தபோபலங் குறைந்து, ஓமாக்கினியும், மந்திரங்ளும் நீங்கிய விசனத்தாற் சோர்ந்து தம்பிராணுர் திருநடன வேகத்தால் உடல் குழைந்து ஆச்சரியமும் துணிபுமுற்று விழுந்தார்கள். யானும் நிருத்தவேகந் தாளாது வருந்தி வீழ்ந்தனன். அதனைக் கண்ட பெருமான் "அஞ்சாதினை என்னைப் பிடித்தனர். அக்கால், இடபாரூடியாக, பார்வதி ஆகாயவீதியாக வந்துசேரலும் சுவாமிகள் அம்மையார்மீது திருக்கண்சாத்தி யருளினர்; தேவர் புட்பமாரிபெய்தனர்.

"அந்த நிருத்தகோலமானது, சுவாமிகளது செஞ்சடை திக்கெங்குமசையவும், சுவாலாக்கினியை யேந்தியகரம் கொள்ளிவட்டம்போற் சுழலவும், எண்டிசையின் இடியோசையைத் துடியோசை கொள்ளவும், முயலகனை மிதித்துக் கால்மாறிக் கோடிசூரியோதயம் போல் எழுலகும் ஆனந்த மெய்தும்படியிருக்தது. இதனைநோக்கிய முனிவர்கள் தங்கள் ஆணவமல மொழிந்து மிகுந்த அன்போடு, அச்சமும் பயமும் பூண்டு ஆனந்த பாஷ்பம் பொழிய, கமண்டலம், தருப்பை, தண்டு இவைகளைக் கொண்டு இறைவன் சந்நிதியையடைந்து குணலைக் கூத்தைச் செய்தார்கள், அவர்

* தரிசு-காற்சிலம்பினுள் கலிக்கும் பரல்.

பன்னியர் சிவநெறியைக் களித்துக்கடைபிடித்தனர். தேவர்க ளெல்லாம் அஞ்சலியத்தராணர்கள், தும்புரு நாரதர் வீணைவாத் தியஞ் செய்தனர். பூதகணங்கள் துணங்கைக் கூத்தாடின, சித் தர் இயக்கர் முதலினோர் ஆனந்தமெய்தினர். அக்கால் அருகே யிருந்து தரிசித்தபேராற்றலாலும், ஆனந்தத்தாலும் அவரது பிரி வாற்றாமையாலும் யான் சித்தம் ஒருப்பாடுற்றிருந்தனன்."

இவ்வாறு திருமால் சொல்லக் கேட்ட ஆதிசேடன் ஆராத அன்புடையவனாய் இப்போதேநிருத்தங் கண்டவரைப்போல ஆன ந்தமடைந்து, ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, சிந்தித்திருக்குங்கால், மீண்டுந் திருமால், சேடனைநோக்கி "நீ சிவபிரானை நோக்கித் தவ ஞ்செய்க, உன்னைப்பாயலாகக் கொண்டிருக்கப் பிரியமில்லை. ஆத லின் உனது குமரனை எனக்குப் பாயற்றொழில்செய்யக் கற்பித்து. நீபரம்பொருளை யடைந்து வாழக்கடவாய். அதனால், நீ மலத் திரையம் நீங்கி முத்திப்பேற்றை யடைவா" யென ஆசீர்வாதஞ் செய்தனுப்பினர்.

அவ்வாறே ஆதிசேடன் திருமாலனுமதிபெற்று, தேவதேவர் கட்கும் பெறுதற்கரிய உத்தரகைலாயவரையையடைந்து, ஒருபாரி சத்தில் யாககுண்டமியற்றி, அண்டமுகடளாவ அக்கினியைக் கற் பித்து, தனது புணமுடிகளினுள்ள ஆயிரமிரத்தினங்களும் ஆதித் தகிரணபத்திகளைத்தள்ள, மகாநியதியோடும் தன் சுவாசத்தை இரேசகபூரகமுஞ் செய்யாது, உணவையுங்கொள்ளாது, வேறொன் றையுஞ் சிந்தியாது, காலகணிதமும் நோக்காது, தனது கரணேந் திரங்களை யெல்லாஞ் சிவகரணமாகக் கொண்டு அரியபெருந் தவ ம்புரிவாராயினன். அக்கால் சருவானுக்கிரக சந்திரசடாதரமூர் த்தி பிரமனைப்போல அன்னவாகனரூடரா யெழுந்தருளி 'யாது காரணம் பற்றித்தவம்புரிகின்றாய்? யாது வரம்வேண்டும்? கே" ளெனச், சேடன் "பிரமதேவரே! எமது இறைவனை யன்றி, மற் றோரை விரும்பினே னல்லன். ஆதலின், நீர் வந்தது வீணுக்கே" யென, பிரமன் "யார் கொடுத்தாலென்ன? உன் கோரிக்கையைக் கூறுகத் தருவே" னென்று கூற, ஆதிசேடன் "பிரமதேவரே! எனக்குப் பதவிகளிலும், சித்திகளிலும், வித்தைகளிலும், வேறு போகபாக்கியங்களிலும், யாதும் விருப்பமில்லை. எமது சாட்சா த்து உமாபதிதேவ தாருகவனத்தில் அருளியதாகிய சருவானுக்கி ரக ஆனந்த நிருத்தத்தை எப்போது தரிசிக்கப்பெறுவேமென் னும் பேராசை யொன்றுபற்றியே தவம் புரிகின்றே" னென்று சொல்லும் போதே வாய்குளறி, மயிர்க்கூச்செறிந்து, ஆனந்த

பாட்பஞ் சிந்திப் பரவசமுற்றனன். இதனை யறிந்த பிரமதேவர் "ஓ அரவரசே! சொன்னமறைபுந் தொடர்ந்தறியாச் சோதியனை காண்பதே கடினம். காணினும் நிருத்தம் புரிவதே கடினம். ஆதலின் முடியாததை முடிக்கக் கருதுவது பிராந்தியாகும்" என்று நகைத்தருளி, "சேடனே! தாருகா வனத்தில் யார்வேண்டவந்து நடனமாடினர்? நீமுற்றும் பயித்தியமாயினை" என்றுகூற, ஆதிசேடன் "அன்னவாகனரே அனவரததாண்டவஞ் செய்பவர் சிவபிரானன்றோ? அவரைத் தரிசிக்கா தொழியேன் ஒருகால் தரிசியாமலே இந்தப் பிறவி எனக்கு நீங்குமேயாயினும் என்சித்தம் நிருத்தங் காணவேணுமென்னும் ஆசையையுடையதாயிருத்தலால் என் சரீரம்நீங்குங்கால் இந்தக்கருத்தே வித்தாக. வேறொரு சரீரங்கொண்டு அந்த நிருத்தத்தைக் காண்பேன். அப்படியிருக்க, நீர் சொல்லுவதடாது" என்றுகூற, அவ்வாறு ஆதிசேடன் கூறியமனோபலத்தைப் பிரமனுக யெழுந்தளிய ஸ்ரீ கண்ட பரமேசுரர், தேவகணங்களும், உருத்திரர்களும், முனிவர் முதலினோரும்சூழ, உமையொரு பாகராய்ப் பிரகாசித்தனர். இச்சிவ, சொரூபத்தைச்சேடன்கண்டு "ஐயனே! சரணம்! அமலனே! சரணம்! அரனே! சரணம்! ஆதியே சரணம்!" எனத் துதித்து வணங்கிப் பிரார்த்திக்க, சிவபெருமான் கருணைகூர்ந்து பாவனுதீட்சை பண்ணி ஸ்ரீ யத்தத்தைச் சேடன் சிரமேல் வைத்து, "இத்தகைய அருந்தவத்தாலன்றி நமது நிருத்தம் தரிசிக்கப்படுவதல்ல, நமது சத்தியத்தைக் கேட்பாயாக. நாதாதி பிரிதிவியந்தமான தத்துவமெல்லாஞ் சுத்தமாயை அசுத்தமாயை என்னும் இரண்டு காரணத்திலும் ஆன்மாவின் கன்மசிவன் வழியாகத்தோன்றும். அஃதெங்ஙன மெனில், குடம் சால் கரகமுதலானவை நிமித்தகாரணமான குலாலனை யொழிந்து உண்டாவன அல்லவென்கிற சிலத்தை ஒக்கும். கிஞ்சிக்கினனை ஆன்மாசடத்துவங்களைப் பொருந்திப் புசிக்க அறிவெப்படி யுண்டாமெனில் விளங்கிய பஞ்சகிருத்திய பேதமெல்லாங் கன்மகாரியம் வரும்படிசெய்தற்கு அநாதியே பிராணனுக நின்று நாம் நடத்துவோமென்றருளிச்செய்து, சகளநிட்களமும் நமக்குப் பரிக்கிரகரூபமுஞ்சைவதந்திர ரூபமுமாயிருக்கும் இந்த இரண்டு ரூபங்களையும் நீயின்று விசாரிக்கில் அசுத்தமாயை சுத்தமாயை என்னுமிவைகளையுபாதானமாகக்கொண்டு பாசவிலங்கை முறிக்கும்படிக்குச் சகலர் பிரளயாகலரிவர்களுடைய கன்மகாரியத்திலேயிவர்களைப்போலத் தூலசூக்குமமாய்வந்து சத்திநிபாதமுதித்துப் பாசச்சேதம்பண்ணிச் சுத்த கேவலத்திலே கூட்டுகிற கிரியாசத்தி அதி

ட்டானமான ரூபமொன்று; மற்றொன்று விஞ்ஞான கலரிற் பக்குவரில் பாமுத்தர்க்கு கிராதிகாரமா யிரட்சிக்குமிடத்தில் கலாதீதமுமாய் ஞானமுமாய்க் கண்டிக்கப்படாத ஞானக்கிரியையாயிருக்கும் அபாமுத்தர்க்கு இரட்சிக்கு மிடத்துச் சாதி காரணரூபநாதம் விந்துசொரூபமாயிருக்கும்.

முன்சொல்லப்பட்ட சகளம் நாலுக்கும் நிட்களம் நாலுக்குமப்பாலாகி நம்முடைய பிரகாசமான சுபாவசத்தியேநமக்குவடிவு இதற்கு ஞேயமான பிராணன் நாம்; எமக்குப் பரமபதம்-பரமஞானம் - பராற்பரமென்று பெயர்; சங்காரம் - இரட்சை - சிருட்டி - திரோபவம் - அநுக்கிரகம் என்கிற பஞ்சகிருத்தியம் நம்முடைய கூத்து; அநந்தமான வேதங்களும் அநவரததாண்டவம் நாம் பண்ணுவோமென்று துதியாநிற்கும். ஆனாலும் அவை,இன்னகாரணத்தினாலே யென்றும், இன்னகாலத்திலேயென்றும், இன்ன திக்கிலே யென்றும், இன்னவிடத்திலேயென்றும் அறியமாட்டா. அழகுவிளங்கின தேவதாருவனத்தி னடுவே தெரியநின்று நாரணன் முதலோர்காண நிருத்தஞ்செய்தநாள் தேவதாருவனம்பூமிக்குமத்தியமல்லாத பகுதியினாலே அசைந்தபடியைக்கண்டு வெற்றியுடைத்தான நாங்கள் சிறிது பொழுதிற் றீர்ந்துவிட்டோம். உனக்குமிப்போது இவ்விடத்திலேநின்று தரிசிப்பிக்கும் கூத்தன்று. சத்தியமான ஆநந்த நிருத்தத்துக்கு அதிட்டானமான ஞானசபை பொன்றுண்''டென் றருளிச்செய்தார்.

அப்போது ஆதிசேடனும் வணங்கித்துதித்து''யான்பிறவிக்கடலிலேயாழாமற்கறையேறிப்பிழைக்க,அரிபிரமாதிகள்வேதங்கள் காண்பரிதாய்ப் பிரதியட்சம் அநுமானம் ஆகமமென்கிறபிரமாணங்களுக்கும் அப்பாலாய் எப்போதும் எல்லாப்பதார்த்தங்களிலும் விளங்காநிற்கும் ஞானசபை இவ்வுலகத்திலே ஓரிடத்திலே புண்டாய் தேவரீருடைய ஆதியந்தமில்லாத பூரணஞானத்தினாலே காட்டவேண்டுமென்கிற சுட்டறிவுமுண்டாகிச் சருவவியாபியாயிருக்கிற தேவரீரே ஏகதேசருமாய்ப் போக்கு வரவு முடையவருமாய் அத்தில்லை வனத்தில் வந்தீராகில்,கிருதார்த்தனாவேன்அன்றோ''வென்றான். அப்போது ஆதிசேடனைப்பார்த்து தாபரமாயிருக்கிற அண்டசிருட்டியும் சங்கமமன சரீரசிருட்டியு மொக்குமாதலாலே சரீரத்தில் இடை நாடி யிடத்திலும், பிங்கலைநாடிவலத்திலும், சுழிமுனைநாடி நடுவிலும் போமாறுபோல, இந்தப்பரதகண்டத்தில் இடை நாடி இலங்கைக்கு நேரேபோம். பிங்கலைநாடி நன்றாகவுயர்ந்த இமயபருவதத்துக்கு நேரேபோம். இந்த இரண்டு நாடிக்கு நடுவேபோஞ் சுழிமுனைநாடி நன்மைமிகுந்த தில்லைவனத்திற் செவ்வையேபோய்க்கூடும் அந்தப்பதியில் ஸ்ரீமூலத்தானமுடையீ தம்பி

ரானர் சுயம்புவான குறியுண்டு; அந்தச் சிவலிங்கத்துக்குத் தெற்காக நாலுதிக்கிலுஞ் சூழ்ந்து பொருந்தின வேதங்களுக் கெட்டா நிலைபெற்ற அம்பலமொன்றுண்டு. அவ்விடத்திலே அநவரதத் தாண்டவஞ் செய்வோம். முன்சொன்ன அம்பலமானது சத்திய மான ஞானுகாசமாதலால், நிவிர்த்தியாதி பஞ்சகலாசூனியம் பிறந்த மகாசங்காரகாலத்தினு மழியாது ஆதியந்த சூனியமாயெக் காலமும் பொருந்தியுள்ளது. சுத்தாத்துமாக்க ளெண்ணிறந்தசிவ புண்ணியத்தைச் செய்தால் முன்செய்த சிவபுண்ணியத்தினாலே கன்மசாமியம பிறந்தவளவில் ஆசாரியனாலே சத்திநிபாதமு மலபாகமு முண்டாகிப் பாசச்சேதம்பண்ணி யொழியாத ஞானக்கண்ணைப்பெற்றவரே அரிபிரமாதிகள் நாடுதற்கரிதான சிதம்பரத்தைக்காண்பார்கள். இப்படிக்காண ஞானதிருட்டி பெறுதவர் எண்பத்துநான்கு நூறாயிரம் அச்சிலும் பிறந்துழல்வர். ஆகதால்,ஏ அரவரசனே! நீயோ நஞ்சுநிறைந்த பெரியவாய்களும் மிகுந்த ஒளிவிளங்கும் கண்களும், ஆயிரம் முடிகளும், சர்ப்பரூபமுமாக யிருக்கின்றனை; உன்னை உலகத்தார் காணில் அஞ்சுவார்கள். ஆதலால் ஓர் உபாயஞ் சொல்லுகின்றேன்; கேட்பாயாக அதென்னவென்றால்,

முன்னொருகாலத்தில் அத்திரிமகா முனிவரும், அவர் மனைவியாராகிய அநசூயையென்பாரும், புத்திரபாக்கிய மில்லாமல் உன்னைப் புத்திரனாகப் பெறக்கருதித் திருமாலைநோக்கித் தவஞ்செய்ய அவரெண்ணப்படியே திருமாலளித்தனர். அப்போது வேறுபிறவியெடுக்கப் பயந்து அவ்வநசூயை இருதுவாய் நானஞ்செய்துகரையிலேவந்தேற, அவள்கையிலே ஐந்துதலையோடுகூடிய பாம்பாக வந்தவதரித்தனை. அதனை அவள்கண்டு பயந்த உடனேபாதத்திலேவிழுந்தனை. அதனால் உனக்குப் பதஞ்சலி யெனப் பெயராயிற்று. அதுபோல் முன்னை உணர்வுமாறாது அப்பதஞ்சலியென்ற பெயரையே தரித்து நாகலோகத்துக்குப் பொருந்தினவழியே செல்லுவையானால் அந்நாகலோகத்துக்கு நடுவிலொருமலையுண்டு அதன்தென்புறத்தில் ஒருபிலத்துவாரமுண்டு அதன் முடிவில் தில்லைக்காடொன்றிருக்கின்றது. அதனுள் வடபாகத்தில் ஆலவிருட்சநீழலில் நாமுனக்குச் சொன்ன மலையின்கொழுந்து மூலத்தானமூர்த்தியாய் பொலிவுபெற்றிருக்கின்றது. அவ்விடத்தில் நமது ஆனந்தத் தாண்டவத்தைக் காணவேண்டுமென்று அரிய தவநெறியோடும் நம்மைப் பூசித்துக்கொண்டு வியாக்கிரமபாதரென்று ஒரு மகாமுனிவரெழுந்தருளி யிருக்கின்றனர். அவரிடம் நீயும்போய் இருப்பாயாக நாம் தைப்பூசத்தில் வியாழக்கிழமையோடுகூடிய சித்தயோகத்தில் மத்தியானகாலத்தில் நமது நிருத்தத்தைத் தரிசிப்பிப்போம் என்றுகூறி அந்தர்த்தானமாயினர்.

இப்பால் ஆதிசேடன் இறைவன் திருவாணையைச் சிறமேற் கொண்டு ஆடிப்பாடி உள்ளம்பூரித்து இறைவர் திருவருளினாலே பழைய சேடவுருவம் நீங்கி பதஞ்சலிரூபம் பெற்று இறைவன் திருவாணையின்படியே நாகராசர்கள் பணிபுரியத் தில்லைவனத்தையடைந்து சுகந்தசோலை பொழில் தடாக முதலியவைகளையுங்கண்டு ஏத்தி யிறைஞ்சி, பின்னர் அங்கு அரியதவக்கோலத்தோடு மெழுந்தருளிய வியாக்கிரபாதரது திருவுருவத்தையும், சடாமுடியையுங் கண்டு ஆனந்தித்து 'நமது கைலாசபதி கூறிய பெருந்தகையார் இவரேபோலு' மென் றதிசயித்து, புலிமுனிவரருகிற் சென்றனர். அக்கால் புலிமுனிவர் பதஞ்சலி மகாமுனிவர் திருவுருவைக் கண்டு களித்து உபசரித்து, "சைவக்கொழுந்தே! எங்குபோவதற்காகக் குறித்துப் போகின்றீர்கள்? தங்கள் ஊர், பெயர், இடம் முதலியவைகள் எங்கே" யென்று கேட்க, அவருக்கு பதிலுத்தரமாக, பதஞ்சலிமுனிவர் "ஐயனே நான் ஆதிசேடன், எமது அருட்பெருங் கருணைக்கடலாகிய சாட்சாத் பரமபதி தேவதாருகவனத்திலே முன்னம் நிருத்தம்புரிந்த மகா மகிமையைத் திருமால் எனக்கருளி விடைதரபெற்று, நமது சம்புவை நோக்கி நெடுநாள் தவஞ்செய்தனன். அத்தவத்திற் கிரங்கி அபயாத்தஞ்சூட்டி "அன்பனே தில்லைவனஞ் செல்லுக; உன்கருத்தையே வாய்ந்த வியாக்கிரபாதரென அங்கோர் முனிவரும் எழுந்தருளி யிருக்கின்றனர். அவரோ டொருமைபாராட்டித் தபோநிலையி லிருப்பின், தைப் பூசம் குருவாரம் சித்தயோகத்தன்று மத்தியான காலத்தில் திருநடனத்தைத் தரிசிப்பிப்போ" மென்றருளினர். அவ்வண்ணம் இங்கு அடைந்தனன்." என்று கூறியிருந்தனர்.

இதைக்கேட்ட புலிமுனிவர் பரவசராய் ஆராமைமீதூரத்தீராக்காதலுற்று, "என் புண்ணியமே! அருட்சுடரே என்னையாண்டருளக் கருணை கூர்ந்தனர்போலும்! சோதி சொருபர் பத்தர்கருத்தை மறவார்போலும்! தேவரீரை யானடையப்பெற்ற பாக்கியமே பாக்கியம்! என் தவமே தவம்! என் எண்ணமே நல்லெண்ணம்! எனப் பதஞ்சலியாரைக் கட்டித்தழுவி யாடிப்பாடி, பின்னர் "என் கருத்தை மலர்ந்த அமுதவாசகரே! வாருங்க" ளென் றழைத்துச் சென்று புண்டரீகப் பொய்கையில் மூழ்குவித்து ஸ்ரீ திருமூலத்தானர் சன்னதியிலே கொண்டுபோய் வணங்கச்செய்து, அங்குள்ள அற்புத தெய்வரகசியங்களைத் தரிசிப்பித்து, சாகமூல பலாதிகளை விருந்தருத்தி, திருப்புலீச்சுரத்துக் கருகிலுள்ள குளத்துக்கருகில் ஒரு பன்னசாலை கட்டுவித்து ஆங்கு பதஞ்சலி முனிவரைவிடுத்து, பின்னர் வியாக்கிரபாதர் தம் நிலையிற்றானே யிருந்தனர்.

உ

திருச்சிற்றம்பலம்.

திருத்தில்லைக் கனகசபை.

# ஆனந்தத் தாண்டவ தரிசனம்.

நடராசர் துதி.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

தளகம்.

அளப்பரிய பகுதியெலா மருளா லோங்கி
அளவையெலாங் கடந்தபரஞ் சோதிக் குன்றை
களமகள மிகளமெனக் கணித்துக் காணுக்
காரணத்தைக் காணுதே காண்பார் தங்கள்
உளத்தூறு மமுதத்தை யும்பர் வாழ்வை
யுயர்வொப்பொன் றில்லாத தேவை யெங்கும்
விளங்குபர சிவவடிவை யகண்ட மான
மெய்ப்பொருளை வேதமெலாம் படிக்கு மொன்றை

கற்றுரு முடிவேதென் றின்னுந் தேடிக்
கணக்கறியா வானந்தக் கடலைக் கற்றூர்
சொற்றுறையா னளவுபடாத் துறையை மோனத்
தூமணியை யானந்த நிருத்தங் காட்டும்
நற்றவத்தை நால்வருக்கு மருளி ஞானை
நம்பனையென் நாயகனைக் கனக மன்றுட்
பற்றுடைய பரனைபர சிவனை ஞானப்
பண்டிதனைப் பாரேழும் படைத்த தாயை.

திருவருளைச் சிவக்கன்றைத் தெய்வத் தேவைத்
திருநெறியைச் சிவஞானக் குருவை யெங்கள்
அருமருந்தை யானந்த வடிவை முத்தி
யரசையடி யார்க்குற்ற தருவை யெல்லாம்
பெருகுகின்ற பெருமானைப் புலியும் பாம்பும்
பெண்ணரசுங் காணநட மாடுந் தில்லைக்
கருமணியைக் கண்ணுதலைக் கடவு ளானைக்
கான்மாறி நடிப்பாரைக் கருத்துள் வைப்பாம்..

திருச்சிற்றம்பலம்.

இப்பால் பதஞ்சலி முனிவர் தம்பிரானார் திருவடித் துணை பற்றி இமையுமாறுத அன்புடையவராய்த் தவநெறியைப் பூண்டு வாழும் நாளில், அனேக முனிவர் முதலானோர் புதுமை புதுமையாகவந்து தம்பிரானாரைப் பணிந்திறைஞ்சி, மரத்தினீழலில் வசித்திருந்தனர். அவர்களும், அவர்களது எலும்பும் உடலும் கரைந்துருகும்படி இறைவன் ஆஞ்ஞையைப்பாராட்டிக்கொண்டு சுகமே வாழ்ந்திருப்பாராயினர்.

இவ்வாறு புலிமுனியும், பதஞ்சலி முனிவரும் அனேககாலம் பூசித்துத் தவநெறியே சிவநெறியென்று உறுதிகொண்டு வீற்றிருக்கும் நாளில், முன்னே வந்திருந்த மூவாயிர முனிவர்களும் அருகே வரவும்,அவர்களை நோக்கி "நீங்களும் இச்சித்த இடம்போக; சுபதினத்திலே நமது இறைவன் நடன தரிசனார்த்தமாக வருவீர்களாகவெனச்சொல்லி அனுப்பி, 'என்று நடனங்காண்போ'மெனக் கால அளவையைக்" கணித்திருக்கும் நாளில்,வியாழக்கிழமையும், சித்தயோகமும் தைப்பூசமும் பொருந்த ஓர் நாள் வரவும் அன்று பகல் உச்சிப்பொழுதில், மிக்க ஆவலோடு எதிர்நோக்கி ஆனந்த பரவசராய் 'அரகர' வென்றிசைத்து புளகாங்கிதரா யிருந்தனர்.



அக்கால் தேவ தேவர் வருகின்றார்; சிவனார்வந்தார்; ஓம்வந்தார்; உமாபதிவந்தார்; மாலயன் தேடற்கரியவர் வந்தார் என்று பேரிகை சத்திக்கவும், பானுகம்பர் தமது ஆயிரம்வாய்களிலும் ஆயிரம் சங்குகளை வைத்து, அதனை மாறுசெய்வதாக, சங்கநாதங்கள் கோஷிக்கவும், தாண்டவபேதங்களும், தாளபேத மார்க்கங்களும், ஆயிரந் தோள்களையுடைய வாணசுரன் முழக்குகின்ற 'தொம்' என்னும் குடமுழாவினது அனுகரணவோசையும், தோற்கருவி, தொளைக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி, நரம்புக்கருவி என்னும் பஞ்சகருவிகளும் கோஷிக்கவும்,வேதகோஷ்டமும்,பெருமான் திருவடித் தாமரையி லணிந்துள்ள சிலம்போசையும் கேட்டனர். அன்றித்தேவர் முனிவர் முதலானோரால் வருஷிக்கும் மந்தாரமலரைப் பூமியிற்சிந்தக் கண்டார்கள். அதனால் சொல்லுதற்கரிய ஆனந்தத்தையடைந்து ஆடிப்பாடினார்கள். தம்பிரான் எழுந்தருளும் திருநடனமும் வேதவாத்தியாதி கோட்டங்களும் கண்ணுக்குத் தோன்றாமல்மோகித்து விழுந்தார்கள்; மீண்டும் எழுந்து ஆற்றாது முகமெலாங்கண்ணீர்சோரப் பரவசமானார்கள். நமஸ்கரித்தார்கள், துதித்தார்கள். திசாதிசைகளைச் சுற்றிப் பார்ப்பார்கள். 'ஈசனே ! இறைவனே !

ஏகனே! அருள் செய்வாயாக'வென அலறுவார்கள்; இவ்வாறுவரு ந்திவாடி ஓங்கி இரங்கி சோர்வடையுங்கால், எண்ணிறந்த பத்தி பொருந்தின வியாக்கிரபாதரும், பதஞ்சலியாரும் இவர்களுடைய பரமகுருவாய் ஸ்ரீகண்ட பரமேசுரர் ஞானதிருட்டியை அநுக்கிரகிக்க, அநாதியே சகசமான ஆணவத்தை நீங்கி இத்தன்மையதென்று அறியக்கூடாத மிகுந்த ஞானப்பிரகாசமான மன்றில் ஞானசத்தியை அதிட்டித்துத் தம்பிரானார் நிருத்தஞ்செய்யக்கண்டார்கள்.

ஊன்றருளிய ஸ்ரீபாதமும் தூக்கியருளிய சிவந்தபாதமும், திருவடிகளிற் றரித்தருளிய திருச்சிலம்பும், திருமேனியின் மிகுந்த பிரகாசமும் அழகிய திருத்தொண்டையும் சாத்தியருளிய புலித்தோலாடையும், அதுதரித்த அரையும், அவ்வரையிற் சாத்தியருளிய கச்சினழகும். அழகுநிறைந்த திருவுந்தியிலே பொருந்திய உதரபந்தனச் சேவையும், திருஎஞ்ஞோபவீதம் பொருந்தின திருமார்பும், வீசியருளிய சிவந்தகரமும், புயங்கம் பொருந்தின ஸ்ரீ பத்தத்தைக்கவித்தருளிய பிரகரசமும் பரநாதம் பொருந்தின வனவிபதமருகமும், தீயகலும் முன்னே திரண்டதோளும், நீலவொளிபொருந்தின திருமிடறும் திருத்தோடும் வெள்ளிய சங்கக்குழையும் பொருந்தின திருச்செவியும் வெளிபடக் குற்றமற்ற திருவாய்ப்பவளமும், நீக்கமறச்சிரித்தருளிய மோகனமும் மேலான தாமரைமலரின் அழகுபோன்ற திருமுகப்பிரசன்னமும், மலர் அணிந்த குழலியார் என்கிற உமாதேவியைப் பார்த்தருளுகிற திருநயனங்களின் கடாட்ச விளக்கமும், திருப்புருவத்தின் அழகும் அழகிய திருநெற்றியும், பின்தாழ்ந்து விரிந்த கற்றைச்சடையும் சருப்பமும் நீங்காத கொன்றை மாலையும் கங்கையும் சந்திரனும் திருமேனியிற் பிரம உத்தூளனமும், இருண்டமேகத்தை யொத்த திருக்குழலிலே மணம்பொருந்திய மலர்கள் சேர்ந்துச் செருகின திருமுடியும் நல்ல திருநெற்றியும் திலதமும் பொருந்தின இரண்டு வில்லையொத்த திருப்புருவமும், வடித்த வேல்போன்ற விழியும் திருக்காதும் விளங்குங் குமிழமலர்போன்ற திருமூக்கும், ஆதொண்டைக் கனிபோலும் திருவாயிதழும், முத்துபோலும் நகையும், பச்சென்ற திருமேனியழகும், கன்னிக்கமுகுபோன்ற திருக்கழுத்தில் நித்தியமான பொலிவினையுடைய திருமங்கலநாணின் அழகும், பக்கம் பொருந்தின மூங்கிலைப்பார்க்கிலும் அழகிய, தோளும், கைத்தாமரையிலே ஏந்தும் மேலான அழகுவிளங்கின செங்கழுநீர்ப்பூவும், செங்கழுநீர்த்திருமாலையுங் கோங்கின் அரும்புக

ஊ நிந்தித்த திருத்தனங்களும் திருவாபரணமும், அடியொத்த மருங்கும் பெரும்பாம்புகளின் விரிந்த படங்கூடியதை ஒத்தநிதம் பத்தலத்திற் சாத்தியருளியபரிவட்டமும், மிகவும் அசைந்த நிலை யும், சிவந்த ஸ்ரீ பாதத்திற் சாத்தினபொற்பாடகத்தின் மேலே ஒளி விளங்கும் திருச்சிலம்பும்பொருந்தின பரமேசுவரியார் அதிசயித் துக் கண்டருள,

சத்தியே திருமேனியாகக்கொண்டு சத்திகாண ஆடிய தம்பி ரானார் ஆயிரமாதித்தப் பிரகாசம் ஒன்றாகக் கூடின மண்டலம்போ ல குறைவற நிறைந்து, நாடுதற்கரிய ஞான சபையில், நம்போல் வாரை இரட்சிக்கவேண்டி முன்பு பிரம விஷ்ணுக்கள் தேடிக் கா ணுதசோதி சொரூபத்தை யநுட்டித்து, நிருத்தஞ் செய்தருளக் கண்டார்கள்.

ஒப்பில்லாத அளவற்ற தாண்டவத்தைப் பொருந்துஞ் சிவ பெருமானுடைய நிருத்தம் கண்ணுக்குப் புலப்படத் தெரிந்த வள வில் அவயவத்தில் யாதொரு சேட்டையுமற்றுச் சிரத்திலே கைம் மலர்பொருந்த, விழிநீர்த்தாரைக்கொள்ள, நடுக்கமுற்று உரை குழறிவியாக்கிரபாதரும் பதஞ்சலியாரும் இன்பசாகரத்திலேமிதந் தார்கள். இனிவேறே யென்செய்வார்?

சுட்டுணர்வுக் கப்பாற்பட்ட முதல்வரது சத்தியமான சுபாவ ம் விளங்கின ஞானத்துக்கு மேலான சிதம்பரப் பிரகாசமும், தே வரீருடைய திருமேனியின் பிரகாசத்துடன் கூடும் அந்தப் பிரகாச மும், பார்வைக் கடங்காத படியாலே, "ஆச்சரியமான திருமேனி யை யுடையவரே! சத்தினிபாதக் குறைவினாலே எங்கள் நினைவு முடிக்கப் பெறுகின்றோ மில்லை" யென் றென்றும் வருந்துகின்றா ர்கள்.

"சருவகாரணரே முன்னாள் மதனன் வெந்து வீழத் நீக்கண் ணாற் பார்த் தருளிய பரிபூரணரே! தேவரீருடைய புகழ் பொருந் திய நிருத்த மெல்லாநுங் காணக் கடாட்சிப்பீராக இருளையும் மயக்கத்தையும் நீக்கும்படியான உமது கிருபை பொருந்தின திருவடிஞானம் பணித்தருள்வீராக" வென்று பலவிதமாகச் சா கைகளினாலே விண்ணப்பஞ்செய்தன வேதங்கள்.

ஒப்பில்லாத சிவ பெருமானது சந்நிதியிலே நின்று விஷ்ணு வும் பிரமாவும் முன் நான்கு வேதங்களும் தேசோரூபத்துக் கஞ்சா மல் வேண்டிக் கொள்ளுகிற வழியை ஒன்றும் அறியாத யாங்களு மின்பம் பெறும்படி பிருதிவிமுதல் முப்பத்தா றென்று சொல்லப்

பட்டு வரும் பரதநாத்த்தின்மேலே நிருத்தஞ்செய் பவரே பராபர ப்பொருளானவரே! திருச்சிலம்பு தரித்த ஸ்ரீ பாதத்தை யுடையவரே! பணித்தருள்வீராக" வென்றார் இந்திராதி தேவர்கள்.

"தத்துவங்க ளெல்லாங் கூடினாலும் விடயங்களை யறிய மாட்டா; தத்துவங்கள் கூடாத பொழுது எங்களுக்குக் கேவலம் பொருந்தும், இவ்விடத்து அருள்நீங்கித் தனித்தவிடத்து எங்கள்வாழ்வுது, தேவரீர் அருளில்லா விடத்துத் துரும்பும் அசையாதென்று உண்மையாக வேதாகமங்கள் ஒன்றாகச் சொல்லுதலே அன்றி அவ்விடம் உம்முடைய பூரணம் மொழியவில்லை. ஆதலால் எங்கள் சுதந்தரமான கேவலக் காணியையும், பூரணமான தேவரீருடைய சுதந்தர சத்தியையுந் திருவுள்ளத்திலே கொண்டருளி, எங்களையும் பிரேரிப்பித் தருள்வீராக" வென்றார்கள். அவ்விடத்து நின்ற இருடிகள் முதலானோர்.

அரிபிரமேந்திராதி தேவர்கள் குற்றமில்லாத வேதங்கள் முதலாக உயர்ந்தோராகச் சொல்லப்பட்ட பேரியோர்கள், மூவாயிரம் பிரமவிருடிகள், நல்ல சாரணர், குற்றமில்லா நாரதர், பூதகண முதலானோர், திக்குப்பாலகர், மற்றுமுண்டான இருடிகள்யாவரும் தம்பிரானார் நிருத்தத்தைக் கண்டு கண்களுக்குச் சுகம் வரப்பிரத்தியட்சமாகக் கண்டனர். தங்கள் நினைவு நிரம்பி வழிகிறதுபோலக் கண்ணீரும் புளகமுமாகிய குறிகள் நிறைய வேத கீதத்தோடு ஆநந்தக் கூத்தாடி, பரபோகந் தந்தருளும் தம்பிரானாருடைய காருண்ணிய சாகரத்திலே மிதந்து கணநாதர், "மேலான பதமுள்ளவரே கங்காதரரே சகநத்தைக் கொடுக்கிற ஞானக்கண்ணை எங்களுக்குத் தந்தருள்வீ"ரென்று விண்ணப்பஞ் செய்து புட்பாஞ்சலி பண்ணி அரகரவென்று பரவசராய் நின்று கூத்தாடினர். சில தேவர்கள் எந்தையே ஆகமத்துக்குச் சிந்தாமணியே யென்று ஓடினர். கண்ணீர்த் தாரைகொண்டார். "மலைபோன்று எங்களை மேலிட்டகொடிய தீவினைதீர யாவருந் தேடுமருந்தே யருளைத்தருவீராக" வென்றார்கள்.

விளங்குகின்ற செங்குஞ்சித்தலை, நெற்றியிலே திரிபுண்டரம், சங்கக்குழை பொருந்தின காதுகள், சிறியகண்கள், புன்னகையையுடைய பற்கள், தாழ்ந்தவயிறு, இரண்டு பிரிவாகிய புருட்டபாகம் என்னும் இவைகளையுடைய பூதங்கள் பலம்பொருந்திய கால்கள் பூமியிலே பொருந்த உற்புலிதகரணங்கொண்டு ஆடுவன. எரிபோல்விரிந்த மயிரையுடைய பெருந்தலையும், குழிந்த கண்க

ளும் ஒட்டிய கன்னமும், வாய்க்குவெளியில் புறப்பட்டபற்களும், ஒட்டையின் கழுத்துப்போன்ற கழுத்தும், நீண்ட இரண்டு கைகளும், ஈரலுலர்ந்தவயிறும், சிறிய அரையுமுடையனவாய் உயர்ந்தெற்றுதல் பொருந்திய முட்டிக்காலுடனே பலபேய்கள் குனித்திடுங் குணலைக் கூத்துக்குச்சரியாகக் கைகளைக் கொட்டின. அதன் பிறகு, இதழ் சற்றே நீங்கின புட்பங்கள் நிறையவுள்ளேவைத்துச் செருகின கொண்டைப்புறத்தில் வண்டுகள் யாழோடு கூடச் சத்தசுரமும் மயங்காமர்பாட, தாளுக்குத் தகுதியாகக் கால்வடிம் பிற் பொருந்தின் பொற்சிலம் போசையைக் கூட்டி ஆடினர், பாடாமல் மயங்கினர் பெருமையையுடைய தேவஸ்திரீகள்.

நீலகண்டரது அகண்டபரிபூரணமான அநாதிநிருத்தத்தாலே கண்களைக் குளிர்வித்து கமண்டலம் சோமன்கட்டின தண்டுகள் ஒன்றுக்கொன்று நெருங்கிச் சடையவிழத் திரிபுண்டரம் விளங்க வெகுவிதமாக ஆடினார். பழைய மூவாயிர முனிவர்கள் தும்புரு நாரதர்களும், அழகுபொருந்திய தேவதூதர்களும், மற்றைத் தேவர்களும், காந்தருவவேதபாரகராகிய வித்தியாதரர்முதலானவர்களும், நீங்காத ஆசையோடு "வெற்றியையுடையவரே! பெரியமகம் மேருவை வில்லாகக் கைக்கொண்டவரே! வாசனைமிகுந்த கொன்றை மாலையணிந்த பரமசிவமே! நாகத்தை ஆபரணமாக வுடையவரே! எங்களை இரட்சிப்பீராக"வென்று சந்நிதியிலே முறைப்படி வந்து ஆடுந்தொழிலைப் பொருந்தினார்கள்.

பிரதான வாத்தியமான குடமுழாக்கள் கொக்கரையென்கிற வாத்தியங்கள் சர்வவாத்தியங்களுக்கும் சுருதியான தாளம்-வேய்ங்குழல்கள்-வீணைகள்-தம்பட்டம்-பெரிய கத்திரிகை-பம்பை-தவளச் சங்கங்கள்-தமருகம்-கரடிகை-சச்சரிமுதலான வாத்தியங்களைக் கைக்கொண்ட மேளத்தோர்கள் கூடிவந்து, மேகங்கள் திடுக்கிடவும், சமுத்திரவொலி குறையவும், முழக்குவித்தார்கள்.

அன்புடன் கூத்தாடுந் தொழிலையுடையராய்ச் சந்நிதியிலே பொருந்தினார் யாவரும். பெருவாழ்வு பெற்றுவாழ உண்மையைத் தரிசித்துச் சுபாவகுணத்திலே யழுந்தின வியாக்கிரபாதரும் அந்த நிலையைப் பொருந்தின பதஞ்சலியாரும் பரவசராய் நின்றழுதனர். அதனை இறைவர் அங்ஙனம் சந்நிதியிலே நின்றழும் வியாக்கிரபாதரையும், பதஞ்சலியாரையும் பார்த்தருளி "நாம் கொடுக்க உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்க"ளென்று மகிழ்ந்து திருவாய் மலர்ந்தருள, அப்போது வியாக்கிரபாதர் அன்பினாலே



ஆனந்த பாட்பம்பெருக நின்று கைகூப்பித்தொழுது மனமுருகி தேவரீரை நான் நாள்தோறும் கிரியாவிதிப்படி பண்ணுகிற பூசையை முன்போல உண்மையாகக் கைக்கொண் டருளவேண் டும். இதுவேயன்றி பெறவேண்டியகுறை வேறொன்று மில்லை" யென்றார்.

'நீ வேண்டும்வரத்தை உரையாடுக' என்று அவ்விடத்தில் நிருத்தஞ்செய்யும் பரமேசுரர் அருளிச்செய்ய, அன்புபொருந்திய பதஞ்சலிமுனிவர் (தன்னைக்கூடும் முடிவில்லாத கொடிய தீவினை யில் நீடிக்கும் ஏதுக்களாகிய துக்கவாதனையாலே இன்னம் மனத் தைவந்து பொருந்துமோவென்று எண்ணியோ தெரியாது பூலோ கத்தைப் பொருந்துஞ் சேடமாயுள்ள ஆன்மாக்கள் பிரவித்துன் பந்தீர என்று எண்ணியோ தெரியாது) "அநந்தராகி முன்போல விளங்கப்பட்ட உடம்பில் வாழும் ஆன்மாக்கள் வெளியாரக்கா ணும் அக்காலந்தோறும் அம்பலத்தில் பூரணமாய் நிறைந்த ஞான ப்பிரகாசத்துள் காதலையுடைய துணையாகிய பராசத்தி யுடனேகூட இனி இன்றுமுதல் என்றும் நிருத்தத்தைப் புலப்படுத்தி அருள்வீ ராக" என்று பிரார்த்திக்க, என்னையாளுடைய பரமபதி கிருபா சொரூபராய்த் தம்பொருட்டோர் கருத்து மின்றி நம்மையேகோ றும் இவர்களன்பே யன்பென மகிழ்ந்து, அவர்கள் கோரிய வண்ணம் எக்காலத்தும் நிருத்தத் தொழிலைச் செய்வதாகவும், அவர்கள் பூசையை யேற்பதாகவும், திருவாய் மலர்ந்தருளினர். இக்கிருபா விசேடத்தைப்பெற்ற வியாக்கிரபாதரும் பதஞ்சலி யாருமாகிய இருவரும் ஆநந்தக்களிப்பு மேலிட்டு ஆடினர். மற்று முள்ள தேவர்கள் இருடிகள் முதலாயினோர் ஏழென்று எண்ணப் பட்ட கடலோசைபோல ஆரவாரித்துச் சிரசின்மேல் கையைவை த்துச் சுழலலுற்றார்கள். பூமிவட்டத்தில் மலைக்கு ஒப்பாகநிறையும் படித் தேவர்கள் புட்பமாரி பொழிந்தார்கள்,

அன்றுதொட்டு அரிபிரமேந்திராதி தேவர்களுஞ் சிறப்புடை யபதஞ்சலிபகவானும் திடசித்தமுடைய வியாக்ரபாத முனிவர் முதலான சத்த இருடிகளும், திசைகளில் உள்ளவர்களும் வந்து வணங்கி, முத்தியில் வாழ்வதாக மகதைசுவரியமுடைய பரமேசு வரர் பொன்னம்பலத்தில் எப்போதும் நடனஞ் செய்து பராசத்தி யோடு மகிழ்ந்தருளினர்.

இவ்வண்ணம் பதஞ்சலி முனிவரும், வியாக்கிரபாத முனிவ ரும் என்றுங்காணவும், சர்வான்மாக்களும் உய்யுமாறும் அகம்புற மிரண்டினு மெக்காலத்தினும் காணச் சதானந்தம் புரிவர்.

சிவபெருமான் ஆன்மாக்களுக்குப் பெத்தமுத்திகளைத் திருவருள் செய்தற்பொருட்டும் பஞ்சாக்கரமே திருமேனியாகக்கொண்டு பஞ்சகிருத்தியத் திருநடனத்தை யெஞ்ஞான்றும் இயற்றியருளாநிற்பர். அக்கால், சிவபெருமான் மூன்று திருக்கரங்களாலும்; இரண்டு திருவடிகளாலும் பஞ்சகிருத்திய மியற்றுகின்றார். எவ்வாறெனில், தமருகமேந்திய கரத்தினாற் சிருட்டியும், அமைத்த அத்தத்தினால் திதியும், மழுவேந்திய கையினாற் சங்காரமும், முயலகன் முதுகிலூன்றிய திருவடியினால் திரோபவமும், அநவரத நடம்பயிலும் அடித்தாமரையினால் அநுக்கிரகமும் புரிந்து, ஏனைய ஆன்மாக்களுக்கும் அநாதியே பந்தித்துள்ள பாசவிக்கம்போக்கி முத்தியடைதற்பொருட்டே, அருள்வடிவாகிய அம்மையார் பத்தாநுக்கிரககாரணமாய், பஞ்சாக்கரவடிவாகிய அவ்வாநந்தத் திருநடனத்தை வாமபாகத்தினின்றுந் தரிசிப்பர் மேலும், சிவபிரான் நிருத்தக்கோலங் கொண்ட ஞான்று திருவடியில் நகரமும், திருவயிற்றில் மகரமும், திருத்தோளில் சிகரமும், திருமுகத்தில் வகரமும், திருமுடியில் யகரமுமாகக்கொண்டு, ஸ்ரீ பஞ்சாக்கரமே திருவுருவாக நின்று ஆன்மாக்களின்மீதுள்ள கருணையால் ஐவகையான கிருத்தியங்களையு மியற்றுநிற்பர்.

அக்கால் திக்குகளெங்குந் துந்துபிமுழங்கச் சங்கங்களின் ஓசைபெருக மயக்கமின்றிப் பேரின்பத்தழுந்தித்தேவர்கள் இருடிகள் முதலானோர் வாழப் பங்கமில்லாத இன்பமிகுந்த ஒப்பற்ற உபதேசம் அன்புடையார் தங்களுக்கு எம்மை அடிமையாகவுடையதம்பிரானார் அருளிச்செய்வார்.

## ஏகாதசி.

சிவபெருமான் தேவர் துயரம் தொலையும்படி திருப்பாற்கடலிற்றோன்றிய விடபானஞ் செய்தகாலத்தில், அதனால் தாமொரு தீமையுமடைந்தாரில்லையாயினும், ஒரு திருவிளையாடல் செய்யக்கருதி ஒரு கணப்பொழுது ஒன்றுங் கூறாராய் உமாதேவியார் தம்மையுபசரிக்கும்படி மௌனமாய்ச் சயனித்திருந்தனர். அதுகண்ட அமரர் அரனை யருச்சித்தனர். அத்திதியை ஆன்றோர் ஏகாதசி யென்பர். அற்றையநாள் முற்றும் உணவில்லாது அன்றிரவெல்லாம் நித்திரையினின்று நீங்கி, மறுநாளாகியதுவாதசியிற் பண்ணவர் பாரணஞ் செய்தனர்.

## பிரதோடம்.

அதன்மேற்பட்ட திதியாகிய திரயோதசியிற் சிவபிரான் மலையரச புத்திரியாராகிய உமாதேவியாரை நிறுத்திச் சூலத்தைச் சுழ

ற்றி, கையில் தமருகமேந்தி ஒரு யாமகாலம் நிருத்தஞ் செய்தனர். அக்காலத்தையே வேதசிவாகமங்கள் பிரதோடமெனக்கூறும். இதுபற்றிப் பதினைந்து தினங்கட்கொருமுறைவருந் திரயோதசியைப் பிரதோடமென்பதன்றி, தினந்தோறும் மாலையு மிரவுங்கலக்கும் ஒரு யாமப்பொழுதையும் பிரதோடகாலமெனவும், வருடத்திற்கு ஒருமுறையெய்தும் மகாசிவராத்திரியை வருடப்பிரதோடமெனவுங் கூறிநிற்பர். ஒவ்வொரு தினமும் உதயாதி இருபத்தாறேகால் நாழிகைமுதல் இரவு மூன்றேமுக்கால் நாழிகைவரையும் நாழிகை ஏழரை; இதில் இரசநிமுக காலத்திற் சம்பவிப்பது பிரதோடமெனவும், மத்தியான முகூர்த்தமெட்டினுள் ஏழுகழித்து எஞ்சியஎட்டாவது முகூர்த்தமே பிரதோடமெனவும், ஆகமங்கள் கூறும்,இம்முறைபற்றி மாதப் பிரதோடத்தை மாத சிவராத்திரியென்பர்.

பொங்குங்கங் காதரன் காளமயின் றேயொன்றும்
புகலாம லிருந்தனனோர் கணப்பொழுது புலவோர்
அங்கவனை யிடைவிடா தருச்சனைமுன் புரிந்தா
ரத்திதியே காதசியா மடுத்ததிதி யதனிற்
புங்கவர்பா ரணம்புசித்தே பூர்த்தியுற்று ரதன்மேற்
பொருந்துதிதி தனிலிமவான் பொற்கொடியை வைத்தே
சங்கரனிரு லஞ்சுழற்றி நடித்தனனோர் யாமஞ்
சதுர்மறைநூ லதுபிரதோ டமமெனவே சாற்றும்.

என்னும் பிரமாணத்தா னறிக.

இவ்வாறு ஆன்மாக்களின் பொருட்டு சகளீகரித்த பரமேசுரனது திருமேனியில் ஆயிரத்தி லோரமிசமாக உருத்திரரும் கோடியமிசத்திலொன்றாக பிரமவிஷ்ணுக்களும், லலாடநேத்திரங்களிலிருந்து சூரிய சோமாக்கினிகளும், பிராணனிலிருந்து வாயுவும், கண்டத்தினின்று கணேசரும், இருதயத்தினின்று கந்தரும், நாபியினின்று இந்திரன், யமன், வருணன், குபேரன், பிரத்தியங்கத்தினின்று தேவர்களும், உரோமங்களினின்று இருடிகளும், மற்றஅங்கங்களினின்று மற்றத்தேவர் முதலினோரும் உதிப்பார்களென்று வேதசிவாகமங்கள் கூறுகின்றன.

இந்நியாய நிமித்தம் கற்பங்கள்தோறும் அநேககோடி பிரமவிஷ்ணுவாதி தேவமுனிகளை யெல்லாம் சிருட்டித்தும், மீண்டுதமிடத்தில் ஒடுக்கியும், தாம்மாத்திரம் பிறப்பிறப்பில்லாதவராய் என்றும் நித்தியராயிருப்பர் எனத்துணிபு.

பரமசிவத்தின் திருவுருவைத் திறமாகக்கொள்ளின் மண், நீர் கனல், காற்று, வெளி, இரவி, மதி, உயிர் என்னும் அட்டமூர்த்த

சொரூபமே யென்பதாலும், இவ்வட்டவடிவையன்றி உலகில் வேறொன் றெண்ணக் கிடையாமையாலும், எல்லாமாய் என்றும் நித்தியமாயிருப்பர் என்பது துணிபாம். ஆனதால், சிவன் பிறப்பினிலக்கணம் கூறுதுவிட்டனம். மேலும் அவரது லீலாவைபவங்கள் அளவின்றியிருத்தலால், இந்நூல் இடம் தராமையைச் சிந்தித்து இவ்வளவிலேயேவிட்டு இரண்டாஞ் சம்புவென் றிசைக்கும் நந்தியெம்பெருமா னுற்பவ மெப்படி என்பதைச் சிந்திக்கலுற்றும்.



## ஸ்ரீநந்திதேவர் உற்பவம்.

நந்தீசர் துதி.

எண்சீர் ஆசிரிய விருத்தம்.

குளகம்.

தேவாதி தேவர்கடந் தேவை வானோர்
 செல்வத்தை மூவாத மூர்த்தி யானை
ஓவாத வின்பத்தைக் கயிலை காக்கும்
 உடையானைச் சூலமான் மழுக்கை யானை

நாவாரக் கல்களெலாஞ் சொன்ன வாழ்வை
நான்மறைபு மிரண்டாஞ்சம் பென்றி றைஞ்சும்
காவாளைச் சிலாதரமா முனிவர் பெற்ற
கண்ணுதலைக் ககனுட் டிறைவன் றன்னை
பந்தமெலா மறவெறியும் பரசி ஞானைப்
பார்வதியார் முலையமுதந் தலைக்கொண் டானை
ஐந்தெழுத்தி னுருவானைத் தருமக் குன்றை
அமரர்களும் ஆரணமும் பரவுந் தேவை
முந்துசமண் மூவரெலாஞ் சிவபோ தத்துண்
மூழ்கவரு முனிவிலா முனிவன் றன்னை
நந்தியெனப் பிரம்புங்கைக் கொண்டெம் மீசர்
நற்பதத்தைச் சுமப்பானைப் பணிந்து வாழ்வாம்.

பிரம, விஷ்ணு, ருத்திரர் முதலான தேவர்களும், கருடகின்னரர் முதலான தேவகணங்களும், சனகாதி இருடிகளும், சித்தர்களும் வலம்வந்து வணங்கவும், வேதங்கள் கோஷிக்கவும், கோடி சூரியப்பிரகாசமாக தேஜோன்மயமாய் மகாமகத்துவ மிக்கதாய் விளங்கும் ஸ்ரீமகா கைலாசகிரியில் திருதிமூலையில் மகா தவசிரேட்டராய், சிவ சொரூபமாய், வேறொன்றினும் பற்றில்லாராய், சிதேந்திரியராய் நீரையுங் காற்றையுமுண்டு அநேககாலம் ஒரு முனிவர் தவஞ்செய்து கொண்டிருந்தனர்,

இவர் அளவற்றகாலந் தவஞ்செய்திருந்தமையால் இவர்மேல் புற்றுகளுண்டாகியும், பின்னர் ஒரு பெரியமலைபோலும் மேடிட்டது. அதனுல் அவரை சிலாதரமகாமுனிவரென்பர். (சிலை-மலை, தரம்-சுமத்தல்) இவர்செய்யும் அரியதவத்திற்குக் கருணாநிதியாகிய சாட்சாத் சிவபெருமான் திருக்கைலையில் வீரசிங்காதனத்தினின்று மெழுந்தருளிவந்து முனிவர் முன்னே பிரத்தியக்கமாகத் தோன்றி "அன்பனே! யாதுவரம் வேண்டினை" யென்று கேட்க, முனிவர் பகவானைப் பார்த்து ஆனந்த பரவசராய்ப் பரவிப் பணிந்து புகழ்ந்து 'ஸ்ரீ கைலாசபதியே! எனக்கு வேண்டுவது மற்றொன்றுமில்லை. தேவரீரைப்போல் கருணை, சாந்தம், உயிர்களிமீது இரக்கம் முதலியவைகளைப் பொருந்தி, சிவநெறியுந் தவவடிவுமாறுது, பரவுணர்வே பயனாகக்கொண் டானந்திக்கும் பேற்றினையுடைய ஒரு புதல்வனைக் கடாட்சிக்கவேண்டும். அன்றி, எனக்கு ஒரு திருத்தொண்டு கட்டளை யிடவேண்டும். அதாவது, சுவாமிகளது பாத பக்தி யாருக்கு உலகி லில்லையோ அவனது தலையை அக்கணமே துணிக்க விரும்புகின்றேன். அவ்வாறு யான் செய்யுங்காலத்தில்

தேவரீர் விலக்கக்கூடாது விலக்குவீராயின் யான் விரும்பிய புத்திரவரமும் வேண்டுவதில்லை" யென்று விண்ணப்பஞ்செய்தனர்.

அதனைக் கேட்ட பரமபதி நமது பத்தினிமயின் மிக்கச் சிறந்தோனென்று கருணைகூர்ந்து "ஏ! சிலாதர! நீர் விரும்பியபடியே நமது அமிசமாகவுள்ள இந்நந்தியைப் புத்திரனாகக் கொடுக்கிறோம். அஞ்சாது செல்க." என்றிசைத்துப் பின்னும் கூறுவார். "இந்நந்தியோ நமது சொரூபமேயாகும், நமக்குமிவனுக்கும் யாதொரு பேதமுமில்லை. நம்மைப்போல நித்தியனாய்; அநாதியாய், தருமரூபியாய் பஞ்சாக்கரமே திருமேனியாய் விளங்குபவன்" எனக்கூறி, முனிவருக்கும் விடைகொடுத் தனுப்பிவிட்டு, நந்திதேவரை நோக்கி "நீ இச்சிலாதாருக்குப் புத்திரராகச்செல்வீராக. அல்லது நாமே அவருக்குப் புத்திரராக வேண்டு"மென்றுகூற, அவ்வண்ணமே சம்மதித்திருந்தனர். ஒரு பகல் சிலாதரமுனிவர் யாகத்திற்கு நிலந்திருத்தும்போது நிலந்திருத்தும் கொழுவழியாக நந்தியெம்பெருமான் அயோனிசராய் அவதரித்தலும் முனிவர் தம்மனையிற் கொண்டுபோய்ச் செய்யுங்கிரியாதிகளைக் கிரமமாகச்செய்து சிவாஞ்ஞையால் நந்தியென நாமகரணஞ்செய்து ஏழு வயதிற்குள் சகல கலையும் பயிற்றப்பயின்று நந்திதேவர் பிரமேந்திராதிகளும் அஞ்சுங் கடுந்தவம் புரிந்தனர்.

அத்தவத்திற்கு சங்கரன் கிருபையோடு யெழுந் தருளி "யாது காரணமாக நம்மைவேண்டுகின்றனை" யென்றுகேட்க, நந்திதேவர் ஆராமை மீதூர அஞ்சலியத்தராய் "ஐயனே! வேறெவ்வகைப்பற்றும் சற்றும் வேண்டிலேன். தேவரீரது ஸ்ரீபாதபக்தியொன்றே நியமத்தோடும் பெற்றுய்யக் கோருகிறேன். அதைத்தந்தருளுவீராக" எனப் பிரார்த்தித்தனர். இவ்விண்ணப்பத்தைச் சிவபெருமான் மிக்க பேரானந்தத்தோடுங் கேட்டு மகிழ்ந்துத் தமது கைகளால் நந்தியெம் பெருமானைத் தழுவி ஆசிர்வதித்து "அன்பனே! உம்மைப்பரிசிக்க நமக்குள்ள பேருவகையையாரறிவர், உம்மிடத்துள்ள கருணையால்முன்னமேஉம்மைவாகனமாகக்கொண்டோம். இதை வேதாகமாதிகளுங்கூறும்; இப்போது சருவபூத நாதனும் சருவஞ்ஞத்துவனுமாயென்றும் என்னைவிட்டு நீங்காப்பெரும்பேற்றையடைவையாக" என்று அனுக்கிரகித்தனர், அவ்வண்ணமே நந்தியெம்பெருமான் கைலைக்குக் காவலராய் பிரமவிஷ்ணு முதலிய தேவர்களும் சித்தர்களும் மற்றேனைய சருவபிராணிகளும் வணங்குந் தலைவராய், காப்புற்றிருந்தனர். அமரர்கள் புட்பமழை பெய்தனர்.

இந்நந்தி யெம்பிறைவர் பருப்பதத்தின் நிருதிமூலையில் தவம் புரிந்த இடம் தருமசொருபமாய், சருவாபீட்டசித்திகளும் விளங்குவனவாய் நந்திமண்டலமெனப் பெயர்பெற்றுள்ளது; அன்றிஇந் நந்திதேவர் சிவபெருமானிடத்து பெற்றதபோவரத்தால் நான்கு கரமும், மழுமான், கங்கை, மதி, சடைமுடி முதலியவைகூடியசிவ சொருபமேயாயிருப்பர். இவர் சிவபிரானிடத்து வேதாதிகலைகளை யுங்கேட்டுத் தெளிந்து அனேக முனிவர்களுக்கும், இருடிகளுக்கும் உபதேசித்திருக்கின்றனர். இவரை இரண்டாவது சிவம் என அனேக சாத்திரங்கள் கூறுகின்றன. இவரேபின்னர் ஒருகால் கன்னடதேசத்தில் வசுவேசரென அவதாரஞ்செய்து சைனபௌத்த மதங்களினஞ்ஞானங்களை யொழித்து வீரசைவ சமயத்தை விருத்திசெய்தவர். இவரை வழிப்பட்டவர்கள் பரமசிவத்தை தழுவப்பட்ட பலனையடைவர். இவரை வழிபடாது சங்கரரை எத்தனையுகம் எத்தகைய பெருமித அருமத்தோடு பூசிப்பாராயினும் பயனேயில்லையாம். ஆகையால், சாட்சாத் நந்தி யெம்பெருமானைப் பரவினோருக்கு சருவாபீட்ட சித்தியும் உண்டாகும்.

## சத்திகள் உற்பவம்.

துதி.

எழுவாயும் பயனிலையும் பொருளும் போல
  எப்பொருட்கு நிமித்தமாய்ப் பேதமாகிப்
பழுதறுமா மணியொளிநீர்த் தண்மை யென்னப்
  பரமாகி யகிலாண்ட மெல்லாமான
முழுமுதலை முன்னிலையொன் றில்லாவாதி
  மும்முதலைத் தொழுவார்தம் வினைவேர் வீழ்த்தும்
மழுவலத்தா னிடங்காணு மமல வாழ்வை
  மறைபரவு முமையைமனத் தவிசி லுய்ப்பாம்.

சாட்சாத் பரமபதியின் சந்நிதானத்தில் மலரில்மணமும், எள்ளில் எண்ணெயும், நீரிற் குளிர்ச்சியும், அக்கினியிற் சூடும்போல, அபேதமாய் இறைவர் திருக்குறிப்பினெறியே பஞ்சகிருதியங்களையும் நடாத்தும் சத்தியே உமையென்பர்.

கருணைசொரூபியாக அவ்வம்மையார் கிருத்தியவகையால் பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி என ஐவகைப்பட்டு நிற்கும். அவற்றுள்—பராசத்தி சிவத்தின் ஆயிரத்திலொரு கூறுடையவளாய் பக்குவா பக்குவர்களாகிய ஆன்மாக்களைக் கருணையால் அநுக்கிரகிக்கும்.

ஆதிசத்தி அப்பராசத்தியின் ஆயிரத்தி லொரு அம்சமுடையதாய் ஆணவமலம் பக்குவமாம்படி செலுத்தி விடயசுகத்தைப் பொருத்தும்.

இச்சாசத்தி அவ்வாதி சத்தியின் ஆயிரத்தி லொரு கூறுடையதாய், தனு கரண புவனபோகாதி காரணமாய் சிருட்டியைச் செய்யும்.

ஞானசத்தி அவ்விச்சாசத்தியின் ஆயிரத்தி லொரு கூறுடையதாய் ஆன்மாக்களினது கன்மங்களையும், அக்கன்மங்கட் கேடான தனுகரண புவனபோகங்களையும் உண்டாக்கும்.

கிரியாசத்தி அந்த ஞானசத்தியினது ஆயிரத்தி லொரு கூறுடையதாயிருக்கும். *

"பூவண்ணம் பூவின் மணம்போல."—திருவிளையாடல்

என்றபடி அச்சத்தியினின்றும் வேறாகாக சத்தியின் அதிட்டிப்பே நானுவாக விளங்கும் நாமரூபாதிக் குட்பட்ட எல்லாத் தோற்றமுமாம். அன்றி, இப்பஞ்ச சத்திகளின் பத்திலொரு கூறு கொண்ட பேதமே சகல நிட்களமாகிய சதாசிவரூபம். இதனாலேயே "சத்திதான் சிவத்தை யீன்றும்," என்று கூறப்பட்டது. சத்தியின்றி,சிவாதிக்கம்சங்கற்பவிகற்பாதிகளுக்குடனாகாது."சிவமென்னும் பொருளுமாதி சத்தியோடுசேரினெத்தொழிலும் வல்லதா, மவள்பிரிந்திடி லியங்குதற்கு மரிதரி தெனுமறை யிறைஞ்சிடும்" எனக்கூறியபடி சிவத்தையன்றி சத்திக்கு விவகாரமும் இல்லாமையான், சிவமே சத்தியென்று கொள்ளவேண்டும் இவ்வாறு கொள்ளுதற்கெனவே அர்த்தநாரீசுர மூர்த்தங் கொண்டுள்ளது போலும்.

இவ்வகில மாதாவாகிய பார்வதியாருக்குக் காருண்யத்தாலேயே பலவித நாமரூபங்க ளமையப்பெற்றன. அவற்றுள், சிலநாம விலக்கணங்களை மாத்திரம் கூறுகின்றேன்.

பராசத்தி - மேலானசத்தி, நிட்களை - அருவ வடிவத்தையுடையவள், கேவலை - தனிமையுடையவள், மாயாதீதை - மாயைக்கு எட்டாதவள்; மேற்பட்டவள், - சாந்தை - சாந்த முடையவ

---

* இக்கிரியாசத்தியினால் சதாசிவத்தில் ஆயிரத்திலொரு கூறுகொண்டு அநந்தேசுவரரூபமாய் இருபத்தைந்து உருத்திரசமேதமாகி கிருத்தியங்களைச் செய்வதுவே உமை என்பதாம்.

ள், மகேசுவரி - மகத்தாகிய ஐசுவரியமுடையவள், அமிர்தை - மரணத்தைத் தவிர்ப்பவள், அசலை - சலனமில்லாதவள், (சலனம்-அசைவு) சுமங்கலை - நல்லமங்களத்தையுடையவள், நிவர்த்தி - ஞானமாயிருப்பவள், காளி - கருநிறமுடையவள், கங்கை - பூமியிற் செல்பவள்; கங்காதேவியாயிருப்பவள், பவசரை-பிறவிகட்குக் கரையாயிருப்பவள், மகாமாயை என்பது மாமாயையெனத்திரிந்து நின்றது. மரண அதீதை மரணஅதீதைஎன்பன, மாயாதீதை-மரணாதீதையெனவடமொழிமுடிபு, அதிதம்-எட்டாதது. இவை முதலிய நாமங்களிலுள்ள ஐகாரங்கள் பெண்பாற்பெயர் விகுதிகளெனக் கொள்க. பகவதி-ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் அறுகுணங்களையுடையவள், சம்பவை - சம்புவின் மனைவி, இது சாம்பவியெனவும் வரும். மகிடவாகினி - எருமைக்கடா வாகனத்தை யுடையவள், எருமைத்தலையையுடைய மகிடாசுரன் றலையில் மிதித்து நிற்றலின் இப்பெயர்பொருந்தியது. அச்சுதை - இழியாதவள், பரமகலை - மேலான கலையாயிருப்பவள், அநாதி - ஆதியில்லாவள், மகதி - மகத்தாயுருப்பவள், சத்தயோனி - சத்தத்தை யிடமாகவுடையவள், சத்தம்-ஒலி, சுத்தயோனி-சுத்தமாகிய இடமுடையவள், பிரதான புருடஈச்சுரி- பிரகிருதிமாயைக்கும்புருடதத்துவத்திற்குந்தலைமையானவள், மாவிஞ்சை-பெரியசுத்தவித்தையாயிருப்பவள், காந்தை-நாயகி, குகை-அடியருள்ளக்குகையிலிருப்பவள், சருவசித்தி-எல்லாச்சித்திகளையுங் கொடுப்பவள், கலை-கலாரூபமாயிருப்பவள், அவ்வியத்தலக்கணை-சூக்குமலக்கணமுடையவள், நிர்க்குணி-முக்குணங்களு மில்லாதவள், பிராமி-பிரமசத்தியாயிருப்பவள், சகமாதா-உலகங்களுக்குத் தாய், விபாலினி-இருளாயிருப்பவள். சின்மயை-ஞானமயமாயிருப்பவள், அநந்த விபவை-அளவிடப்படாத விபவத்தையுடையவள், சராதீதை-சங்கமப்பொருளுக்கு மெட்டாதவள், துர்க்கை-துர்க்கத்தை யிடமாகவுடையவள், துக்கத்திறைல் அறியப்படுபவள்.

சுருதி-வேதங்களாயிருப்பவள், சருவாணி-எல்லாச்சொற்களுமாயிருப்பவள், சுவாகை-அட்டமூர்த்த சத்திகளு மொன்றுயிருப்பவள், உருத்திராணி-உருத்திரனதுசத்தி, யோகினி-யோகத்தையுடையவள், சுந்தரி-அழகுடையவள், அம்பிகை-தாய், உலோபை-பாவ ஒறுப்புள்ளவள், விசுவரூபை-உலகத்தை வடிவாகக்கொண்டவள், விசுவம்-உலகம், வரதை-அருட்கொடையையுடையவள், அதிசோபனை-மிக்க மங்களகுணத்தை யுடையவள், மாபலை-பேராற்றலுடையவள், பேராற்றல்-அநந்தவீரியம், சாந்தி-சத்துவகுணமு

டையவள், விபாவனை-பாவனையில்லாதவள், வாக்கியை-மகாவாக்கியங்களின் பொருளா யிருப்பவள், அவை தத்தொம்ஸி முதலியன, பவானி-பவனுடைய மனைவி, பிரமவிஞ்சை-பிரமவித்தையையுடையவள், புருடமோகினி-புருட தத்துவத்தை யிச்சிப்பவள், நாதரூபை-நாதவடி வுள்ளவள், தரை-உலகங்களைத் தரித்திருப்பவள், பிராணவிஞ்சை-பிராணவறிவா யிருப்பவள், விஞ்சை-வித்தையுமாம்.

சத்திபீடம்-சுச.

1 காமகோடிபீடமும்,
2 அன்னபூரணிபீடமும் ஸ்ரீ காஞ்சியிலுள்ளன.
3 இலட்சுமிபீடம், கோபாலபுரத்திலுள்ளது.
4 இரேணுகாபீடமும்,
5 துளசா பீடமும்,
6 சத்தசிருங்கபீடமும் மாதுபுரத்திலுள்ளன.
7 சுவாலாமுகிபீடம் இங்குலேயிலுள்ளது.
8 பிராமரி பீடம் சாகம்பரியிலுள்ளது.
9 துர்க்கைபீடமும்,
10 விந்தியாசல பீடமும் ஸ்ரீ ரர்த்ததந்திகையிலுள்ளன.
11 பீமாதேவிபீடம் விமலையிலுள்ளது.
12 கௌசிகி பீடம் ஸ்ரீ சந்திரலேயிலுள்ளது.
13 நீலாம்பரி பீடம் நீலபருவதத்திலுள்ளது.
14 சாம்புநதேசுவரி பீடம் ஸ்ரீ நகரத்திலுள்ளது.
15 இரகசியகாளிபீடம் நேபாளத்திலுள்ளது.
16 மீனாஷி பீடம் மதுரையிலுள்ளது.
17 சுந்தரிபீடம் வேதாரணியத்திலுள்ளது.
18 யோகேசுரிபீடம் மகாலசத்தியிலுள்ளது.
19 நீலசரசுவதிபீடம் சீனுவிலுள்ளது.
20 வகலேபீடம் வைத்தியநாதத்திலுள்ளது.
21 புவனேசுவரி பீடமும்,
22 காமயோனி மண்டலமென்னுந் திரிபுரபைரவிபீடமும் மணித்தீபத்திலுள்ளன.
23 காயத்திரிபீடம் புட்கரத்திலுள்ளது.
24 சண்டிகைபீடம் அமரேசத்திலுள்ளது.
25 புட்கரேட்சணிபீடம் பிரபாசத்திலுள்ளது.
26 தேவிபீடம் நைமிசத்திலுள்ளது.
27 புருகூதபீடம் புட்கராட்சத்திலுள்ளது.

28 இரதிபீடம் ஆடாடத்திலுள்ளது.
29 தண்டினிபீடம் சண்டமுண்டியிலுள்ளது.
30 பூதிபீடம் பாரபூதியிலுள்ளது.
31 நகுலேசுரிபீடம் நகுலத்திலுள்ளது.
32 சந்திரிகைபீடம் அரிச்சந்திரத்திலுள்ளது.
33 சாரதாபீடம் ஸ்ரீகிரியிலுள்ளது.
34 திரிசூலபீடம் பஞ்சநதத்திலுள்ளது.
35 சூட்சுமபீடம் ஆம்பிராதகேசுவரத்திலுள்ளது.
36 சாங்கரிபீடம் மகாகாளத்திலுள்ளது.
37 சர்வாணிபீடம் மத்திய மாபிதத்திலுள்ளது.
38 மார்க்கதாயினிபீடம் கேதாரத்திலுள்ளது.
39 பைரவிபீடம் பைரவத்திலுள்ளது.
40 மங்களபீடம் கயையிலுள்ளது.
41 தாணுப்பிரியைபீடம் குருட்சேத்திரத்திலுள்ளது.
42 சுயம்புபீடம் வியபிநாகுலத்திலுள்ளது.
43 உக்கிரபீடம் கனகலத்திலுள்ளது.
44 விசுவேவைசபீடம் விமலேசுரத்திலுள்ளது.
45 மஹாநந்தைபீடம் அட்டகாசத்திலுள்ளது.
46 மகாந்தகைபீடம் மகேந்திரத்திலுள்ளது.
47 பீமபீடம் பீமத்திலுள்ளது.
48 பவானிபீடம் வத்திராபதத்திலுள்ளது.
49 உருத்திராணிபீடம் அர்த்தகோடிகையிலுள்ளது.
50 விசாலாட்சிபீடம் அவிமுத்தத்திலுள்ளது.
51 மகாபாகைபீடம் மகாலயத்திலுள்ளது.
52 பத்திரகாளிபீடம் கோகர்ணத்திலுள்ளது.
53 பத்திரபீடம் பத்திரகர்ணிகத்திலுள்ளது.
54 உற்பலாட்சிபீடம சுவர்ணட்சத்திலுள்ளது.
55 தாண்விசைபீடம் ஸ்தாணுவிலுள்ளது.
56 கமலைபீடம் கமலாலயத்திலுள்ளது.
57 பிரசண்டபீடம் சகலண்டத்திலுள்ளது.
58 திரிசந்திரிகைபீடம் குரண்டலத்திலுள்ளது.
59 மருடேசுரிபீடம் மகோடத்திலுள்ளது.
60 சாண்டிகைபீடம் மண்டலேசத்திலுள்ளது.
61 காளிபீடம் காலஞ்சரத்திலுள்ளது.
62 தொனிபீடம் சங்கு கர்னத்திலுள்ளது.
63 தூலபீடம் தூலகேசுரத்திலுள்ளது.
64 பரமேசுரிபீடம் சிவஞானிகளிதயகமலத்திலுள்ளது.

இவ்வாறு வடமொழித்தேவி பாகவதத்திற் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு பீடவகையாலும், திருநாமவகையாலும், அதிகார வகையாலும், "சிவஞ்சத்தி தன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும்" என்று கூறுமாற்றானும் பிரம சைதன்னியத்தி லெழுத்துஞ் சொல்லும் பொருளும்போல ஜகசீவ பரமாக விளங்குவது பால்திணை பாதிவகைப் பட்டதல்லவென்றும் சிவனைக்குறிக்கும் பெயர்களே சத்தியின் திருநாமங்களாமென்றும் பிரதிபாதிக்கும் ஆகமாந்தபிரமாணங்களா லன்னியமே அம்மையெனக்கொள்ள வேண்டியதே சித்தாந்தமும் வேதாதி பூர்வபட்சமும் எனத்துணிபு எனக் கொள்ளக்கிடப்பதுபோலும். ஒருபாதிமால்கொள மற்றொருபாதியுமைபவள்கொள என்பதும்அர்த்தநாரீசுரகேசவார்த்தமூர்த்தபதத்தினு முண்மைபோலும்.

---

## தாட்சாயணி திருவவதாரம்.

### துதி

#### சந்தவிருத்தம்.

தக்க னுறங்கெட வுக்கிர முற்ற தழற்பாவாய்
  தண்டர ளங்கொழி முண்டக மீதுறு சங்கரையே
மிக்கவ ரிடமுறு முக்கணி யேமறை மீதாளே
  விண்ணர சாள்தரு பெண்ணர சேமணி மார்பாளே
அக்கர வம்புனை மிக்கவ ளேயரி யேற்றாளே
  ஆரணி காரணி நீரணி பூரணி யென்பார்பா
லெக்கண முந்துணை யுறுதாட்சாயணி யெம்மானே
  என்று னிணையடி புணைதுணை யருளுக சீர்வாழ்வே.

பிரமதேவன் குமாரனாகிய தக்கனென்பவன்வேதவல்லியென்னும் மனைவியோடுகூடி வாழுநாளில் ஒருநாள் தனது தந்தையாகிய பிரமனிடத்தே 'சிவபெருமானே பரம்பொருளெனக்' கேட்டுத்தெளிந்து அரியதவத்தைச்செய்ய, சிவபெருமான் பிரத்தியட்சமாகி யாதுவரம் வேண்டு"மென்ன, "தக்கன் தான் நிகரின்று பிரசித்தமா யரசுசெலுத்தவும், உமையம்மையார் புத்திரியாய் அவதரிக்கவும், தாங்கள் மருமகனாகி வந்து மணம்புரியவும், வேண்டுமென்ன, அவ்வாறேவரமளித்துச்சென்றனர். பின்னர், உமையம்மையார் யமுனாநதிக்கருகில் காளிந்திநதியில் ஒரு தாமரை மலரில் சங்குவடிவாயிருந்தனர். அவரைத் தக்கன் ஸ்நானஞ்செய்து வருங்கால்கண்டு எடுத்தலும் மகா சோதிவடிவாகிய ஒரு பெண்குழந்தையா யிருக்கப்பார்த்து மகிழ்ந்து மனைவியிடங்கொடுத்து வளர்

த்தனர். குழந்தை ஐந்துவயதான வுடனே தந்தையிடம் ஒரு தவச்சாலைப்பெற்று ஏவலர்சூழத் தவசுபுரிந்தது. அந்நாளில் விருத்தவேதியராய், சிவபெருமா னெழுந்தருளி, தவச்செயலைச்சோதித்து ஏவலரால் தக்கனுக்குத்தெரிவித்து மணம்புரிந்தனர். (மற்ற சரிதங்களை வீரபத்திரர் உற்பத்தியில் காண்க.)

---

## பார்வதி திருவவதாரம்.

### துதி.

#### சந்தவிருத்தம்.

அண்டமேழு மீன்றகன்னி யாயஞான வல்லியா
ஆரணத்தை வைத்தவீச ருக்குமுண்மை யுய்த்தவள்
புண்டரீக ஞர்சிரம் பொடித்தவேளை யீன்றவள்
பூவிறைவ கர்க்குமாதி நாயகிக்கு தென்னையோ
கொண்டபோகி போலுமேரு மன்னன்மங்கை யாயினுள்
குழகனுஞ்சி ருர்களென்ன கோலஞானி யென்றுளான்
அண்ணலன்னை மிக்கொர்யாரு மில்லையாத லாசையா
லணுகிபாடு மாடல்போலு மம்மையப்பர் பாதமே.

ஒருகால் உமையம்மையார் தக்கனுக்குமகளாகிய வசைநீங்குமாறு சிவபெருமானைத்துதிக்க சிவபெருமா னவ்வண்ணமே பார்வதியைநோக்கி "உமையேநமதன்பன் மேருகிரியில்தவஞ்செய்கின்றனன் அவனிடத்தவதரிக்கக்கடவை. யாம்வந்து மணம்புரிந்துவருவோம்" என்று கூறலும், "சுவாமி நானவ்வண்ண மவதரிக்குங்கால் இவ்வுணர்ச்சி மாறாதிருக்கக் கருணைபாலிக்கவேண்டு" மென்றிறைஞ்ச, "அவ்வாறே யாகுகவெனக்கூற" விடைகொண்டு மேருமலையி லொருசார் பொய்கையில், பார்வதியார் புத்திரியாகவும் சுவாமிகள்வந்து மணந்து செல்லவும் தவம்புரிந்திருந்த மலையரசனுக்கு முன்னே ஒரு தாமரைமலரில், குழந்தைவடிவாக வெழுந்தருளியிருந்தனள். அக்குழந்தையை மலையரசன் கண்டு 'நமது அருந்தவம் முற்றியதுபோலும் நமது தவமே தவம்' எனச் சந்தோஷித்து ஆடிப்பாடி 'அகிலகாரணியே அவதரித்தனள்' எனக் கொண்டாடி, தமது மனைவி மேனையிடத்தளித்துச் சீராட்டி வளர்க்கும் நாளில், ஐந்துவயது வந்தவுடனே அம்மையார் தந்தையை நோக்கித் தவச்சாலையொன்று பெற்று அருந்தவம் புரிந்தனள். இத்தவச் செல்வியை மலையரையானும் மேனையும்நித்தியவிரதமாகப் பணிந்து துதித்துச் செல்லுவராயினர்கள். அக்காலத்தில் அம்மே

ருமலையில் ஒரு முனிவர்போலச் சிவபெருமானெழுந்தருளி அடுத்தசனகாதிகளுக்குபதேசித்து பின்னரடுத்த மன்மதனைத்தகித்து தேவர்கள் வேண்டுகோளால் ஒருவயோதிக சைவப் பிராமணர்போல் எழுந்தருளி அம்மைதவத்தை சோதித்து நிசரூபத்தைக்காட்டி அன்பை மேலிடச்செய்து முனிவர்களால் பருவதராசனிடத்து மணம்பேசுவித்து, எல்லாகணங்களும் புடைசூழ மணம்புரிந்தனர். அன்றுமுதல் பார்வதியெனத் திருநாமம்பெற்று அம்மையார் சுவாமிகள் இடபாகத்திலெழுந்தருளி யிருக்கின்றனர்.

---

## தடாதகைப் பிராட்டியார் அவதாரம்.

### துதி.

முன்னமேழ்கடலமைத்தவருலகையு மிரட்டிவானுலகெலாம்பணிய
அன்னவர்க்கணிமுடிகொடையளித்தவனிடத் திருந்தருமறைகொழிக்கும்
கன்னியாகியகௌரியைபாண்டியர்கதிகொளவுற்றமாதவத்தை
பன்னுமாவுலகனைத்துமாயுற்றரு மம்மையைப்பணிபுரிந்துய்வாம்.

முன்னொருகால் விச்சுவாவசு என்னும் விஞ்ஞையன் மகளான விச்சாவதி என்பவள் பார்வதி மந்திரத்தைத் தந்தையானுபதேசிக்கப்பெற்று சத்திபீடம் அறுபத்து நான்கில் முதற்பீடமாகிய மதுரையை யடைந்து தைமாதந்தொடங்கி பல விரதங்களை யனுட்டித்து இருபத்தோராம் மாதம் நிரைந்தவுடனே ஒருவீணையைக்கொண்டுபாடத்தொடங்கினள். இவ்விச்சாவதி பத்திக்கு மீனாட்சியம்மையார் மகிழ்ந்து மூன்று வயதுடைய ஒரு பெண்குழந்தையாய் எதிரேவந்து“ஓ-விச்சாவதியே உனக்கு யாதுவரம்வேண்டுமென” விச்சாவதி ஆனந்தமெய்தித்துதித்துப் பணிந்து“ஓ-லோகமாதாவே நின்பாதபத்தியும் நீ எனக்குப் புத்திரியாகி என்மடியி லிருக்கவும் வரம் பாலிக்கவேண்டும், வேறொன்றும் வேண்டா”மெனத் துதித்து நிற்க, மீனாட்சியம்மையார் விச்சாவதி அன்புக்கிரங்கி “ஓ-விச்சாவதியே! நீ கோரியபடியே நீ மலையத்துவசனுக்கு மனைவியாக காஞ்சன மாலையென்னும் பெயரோடு வருவாய், அப்போது உனக்கு நாம் புத்திரியாகவந்து உன் மடியிலிருப்போம்.” என்று கூறி அந்தர்த்தான மாயினள்.

இப்பால் விச்சாவதி அம்மையாரைத் துதித்து வணங்கி சூரசேன மகாராசனுக்கு மகளாயவதரித்து பொன்மாலை காஞ்சனமாலையெனப் பெயர் பெற்று பார்வதியம்மையார் பாதபத்தியை சிறிது மாறாதவளாயிருந்தாள். அக்காலத்தில், பரதகண்டத்தில்பாண்

டிமண்டலத்தை அரசாண்டுவந்த சந்திரகுலத்துப்பாண்டியர்களில் மலயத்துவச னென்பான் அச்சூரிய குலத்து சூரசேனமகாராசன் புதல்வி காஞ்சனமலை யென்பவளோடு கூடி, இல்லற நெறியினின்று இராச்சிய பரிபாலனஞ் செய்துவரும் நாளில், தமது மதுரை இராசதானியில் எழுந்தருளிய ஸ்ரீசோமசுந்தரக் கடவுளுக் கன்புடையவனாய்த் தொண்ணூற் றொன்பது அசுவமேதயாகஞ் செய்து இந்திரன் சூழ்ச்சியால் நூறுவது புத்திரகாமேட்டி யாகத்தைச் செய்ய அதினின்று மூன்று தனத்தோடும் சகலாடம்பர சர்வாபரணாலங்கிருதையாய் சர்வலோக காரணியாகிய உமையம்மையார் உற்பவித்தனர். இதனைக்கண்ட பாண்டியன் பெண்குழந்தையாய் மூன்று தனத்தோடும் அவரித்ததேயென விசனிக்கலாயினன், அக்கால் அசரீரி "மன்னனே இக்குழந்தையைக் குமாரனாக வெண்ணி எல்லாச்சடங்குஞ்செய்து தடாதகையெனப் பெயரிட்டு முடிசூட்டுக. அக்குழந்தைக்கு நாயகன் வருங்காலத்தில் ஒரு தனம்மறைந்துபோம்" எனக்கூறிற்று. அதனைக்கேட்டு மன்னன் மகிழ்ந்து உலகெலாங்கொண்டாடும்படி எல்லாச் சுபகாரியங்களையுஞ்செய்து முடித்து, தனது அரசையு மொப்புவித்துக் காலமாயினன். அம்மையார்தனது தந்தையினது முடி, வேப்பமாலை, அரசு முதலியவைகளைப் பெற்று, மற்றேனைய அரசர்களும் பகுதிதரயேற்று, அரசாட்சிபுரியுங் காலத்தில் தக்கவயது சமீபித்திருப்பதைதாயாகிய காஞ்சனமாலையுணர்ந்து, இன்னும் நமது குழந்தைக்கு மணமாகாதிருக்கின்ற காரண, மென்னவென்று விசனிக்க, இதைக்கண்ட அம்மையார் "அன்னையே! விசனிக்கவேண்டாம் ஆகும்போதெல்லாமாகும் யான்திக்குவிசயஞ்செய்து வருகின்றே"னென்று கூறி தமது சேனைசைனியங்களோடு எதிர் ஒருவருமின்றி அட்டதிசைகளையும் செயம்புரிந்து கயிலைக்குச்சென்று தேவகணங்களையெல்லாம் போர்புரிந்து அதோகதிப்படுத்த, அதைத் தேவர்கள் சகியாது சிவபிரானிடத்து விண்ணப்பஞ்செய்ய சிவபெருமான் வெள்விடைமீதாரோகணித்து எதிரிலேவரலும், அம்மையார் மூன்று தனங்களிலொன்று மறைந்தன. அதனால் அம்மை 'இவரே நாயகன்போலும்' என நிலங்கீறிநிற்க, சுமதி என்னும் மந்திரியால், நாயகனேயென நிச்சயித்திருக்கையில், பரமசிவம் "ஓ-பெண்ணே! நாளை திங்கட்கிழமை மதுராபுரிக்குவந்து உன்னை மணஞ்செய்து கொள்ளுகின்றேன். நீ முன்னஞ் செல்லக்கடவா" யென்றுகூற, அப்படியே தடாதகையம்மையார் சேனைகளோடு மதுரையையடைந்து, பரிசனர்களால் விவாக காரியத்தைச் சித்தப்படுத்திருக்க, பரமசிவன் குறித்ததினத்தில் தேவர்முதலினோரோடும் வந்துமணஞ்செய்துக்

கொண்டனர். அதன்பின் அம்மையார் தனதுமுடி மாலை அரசு முதலியவைகளைப் பெருமானிடம் ஒப்புவிக்க, அவர் சௌந்தர பாண்டியரெனப்பேர்பெற்று, இராச பரிபாலனஞ்செய்து உக்கிர குமாரனென்றோர் புத்திரனைப்பெற்று, அப்பாண்டியர்மரபைக்காத்தனர். அதுமுதல் அம்மையார் இனிதாக வீற்றிருந்தனர்.

---

## உருத்திரர் உற்பத்தி.

### துதி.

திருத்தமிழ் மூன்றெனச் செப்பு முத்தொழிற்
கருத்தன தருளினுற் கதித்தெண் மூர்த்தமா
யிருத்தெழு வைப்பினு மிலங்கு மொருத்தனி
யுருத்திரர் பதமல ருளங்கொண் டேத்துவாம்.

மகேசுரமூர்த்தி ஒருதிரு விளையாடலாக சதுர்முகனென்னும் பிரமனுடைய நெற்றியினின்றுந் தோன்றி நல்ல இசையோடழுது ஓடினர். அப்போது பிரமன் பார்த்துத் "தெய்வக்குழந்தாய், என்ன காரணத்திற்காக உரோதனஞ் செய்து திராவணஞ் செய்கின்றாய்" என வினவ, அவர் நாமதேயங் கொடுவெனச் சொற்றனர். பிரமன் ஆலோசித்து, "குமாரனே நீ தோன்றி உரோதனஞ்செய்து திராவணஞ் செய்தமையால் 'உருத்திரன்" எனப் பெயர் பெறுவாயாக" வென்றனன். உரோதனம்-அழுகை, திராவணம்-ஓடுதல், உருத்திரன் உருத்-உரோதனம், திரன்-திராவணஞ் செய்தவன். பெயர் இட்டபின்னரும் அவர் ஏழுமுறையழுதனர். அவற்றினின்றும் எழுவர் தோன்றினர். அவர்க்குப் பெயர் தானம் சரீரம் மனைவியர் என்பவற்றையுஞ் சிருட்டித்துக் கொடுத்து உயிர்க்கு உடல்போல, உருத்திரர்களுந் தாம் இருக்குந் தானங்களையே உருவாகக்கொண்டு எண்வகை யிடங்களையும் வடிவமாகக் கொண்டிருக்கச் செய்தனன். (பவன்-எல்லாவற்றையுந் தோற்றுவிப்பவன், சருவன்-எல்லாமுடையவன், ஈசானன்-ஐசுவரியமுடையவன்,பசுபதி-ஆன்மாக்களுக்குத்தலைவன், வீமன் திரிலோகங்களும் பயப்படத்தக்கவன், மாதேவன் மேலானதேவன், உக்கிரன்-கோரமுடையவன்.)

இங்ஙனம் சருவனுக்கு மண்ணே யுருவாகவும், பவனுக்கும் நீரே யுருவாகவும், பசுபதிக்கு அக்கினியே வடிவாகவும், ஈசானற்கு வாயு வடிவாகவும், வீமனுக்கு ஆகாயமே வடிவாகவும், உருத்திரற்கு இரவிவடிவாகவும், மாதேவத்திற்குச் சந்திரனே யுருவாகவும், உக்கிரற்கு அந்தணனுடலாகவுங் கோடலாம். இதனை மேய,

மருவு கணஞ்சேர்ந் தகன்றவிரி மண்ணி னுருவாஞ் சருவனா
பிரதமன்னித் தெண்ணீரி னுருவா யுறையு மெழிற்பவனா
யுருவம் பொருந்திக் கனல்வடிவா யுற்றே யுறையும் பசுபதியாய்
ஊறு புலவை யுருவாகி யொழியா துறையீசானனா
யாறு வொலியாய் வெளியுருவா யமர்ந்தே யுறையும் வீமனாய்
வீறு ரொளிசேர்ந் திரவியுரு மேவி யுறையு முருத்திரனாய்
மாறுப் திரைநீ ரமுதாகி மதியா யுறைமாதேவனாய்
உரைத்தற் கரியவியமான னுருவா யோங்கு முக்கிரனாய்
என வாயுசங்கிதையும் வரையறுத் துரைத்தது.

---

## தெய்வயானை யம்மையார் உற்பவம்.

### துதி.

மாதவரு முனிவரு மறைகள் யாவும்
வானோடு மண்ணுலகு மரிதா னோற்ற
மாதவமே வல்லியுருக் கொடுவா னோடன்
மங்கையெனப் பூங்காவி லுதித்து மேலா
மாதவத்தா லமுதத்தைக் கனியைத் தேனை
மாமணியைச் சர்க்கரையைப் பாலைக் கண்டை
மாதவத்தை மறைமுடியை முருகப் பூவை
மணந்ததெய்வ யானையினை வழுத்தல் செய்வாம்.

ஸ்ரீசிவசண்முகக்கடவுள், காமனும் நாணத்தக்கக் கட்டிளமை மாறாத மிக்க ரூபலாவண்யமும், வாலிபமும், அநேக சூரியர் ஒன்று கூடியதுபோல அதிதேசசும் வாய்ந்து மகா அற்புதத்திருவிளையாடல்களைச்செய்து வருகின்ற காலையில், இவரது அழகும், வன்மையும், கீர்த்தியும் அகிலாண்டமும் புகழுந் தன்மையினையுடையதாயிருந்ததால் இதைக்கண்ட கபடநாடக சூத்திரதாரனாகிய திருமால், சாட்சாத் லோகமாதாவாகிய இலக்குமியாரிடபாகம்பெற்ற அமிர்தவல்லி, சுந்தரவல்லியென்னும் இரண்டுபெண்களும் ஸ்ரீசிவசுப்ரமண்ணியக் கடவுளையே மணஞ்செய்யவேண்டுமென்று நினைத்து ஸ்ரீகைலாயகிரிச்சாரலில் சரவணப் பொய்கையில் தவஞ்செய்து கொண்டிருந்தனர். இத்தவமகிமைக்கிரங்கி ஸ்ரீசரவணப்பெருமான் பிரத்யட்சமாகி அமிர்தவல்லியைநோக்கி நீ இந்திரன் மகளாகவும் சுந்தரவல்லியைநோக்கி நீ ஒரு மான்மகளாகவும் வளர்ந்துக்கொண்டிருக்கக்கடவீர்கள். அவ்வாறு பிறந்துவளருங்காலத்தில் நாம்

வந்து உங்களிருவரையும் மணம்புரிந்து கொள்ளுவோம் என்று அவர்களுக்கு வரமளித்துச் சென்றனர்.

இப்பால் அமிர்தவல்லி யம்மையார் இந்திரனுக்குப் புத்திரி யாக அவதரித்து * நான்கு தந்தங்களுடைய ஐராவதமென்னும் வெள்ளையானையானது வளர்க்கவளர்ந்துக் கொண்டிருந்தனள்.இவ்வாறிருக்குங்காலத்தில், சூரபத்மன் முதலிய அசுரர்கள் அகோர தவஞ்செய்து சிவபெருமானிடத்து அரியவரங்களைப்பெற்று அவ்வரத்தின் பலத்தால் கர்வமடைந்து தேவர்களைவருத்த, அத்தேவர்கள் அரக்கர் கொடுமையைச் சகிக்கக்கூடாமல் அரிபிரமேந்திராதிகளிடம் கூறியாவரும் ஒன்றுசேர்ந்து, திருத்தணியில் எழுந்தருளியிருக்கும் அறுமுகக்கடவுளிடம் விண்ணப்பஞ்செய்ய ஸ்ரீசண்முகக்கடவுள் அத்தேவர்களை நோக்கி "அப்படியே அசுரரைச் சங்கரித்து ரட்சிக்கிறோ" மென்று விடையளித்து, மற்றதேவகணங்களால் சேனாதிபத்தியங் கொடுக்கப்பெற்று, தமது வீரவாகுமுதலிய சேனா சமுத்திரங்களோடும் தாருகன்முதலிய அசுரர்களைச் சங்கரித்து தேவர்களெல்லாம் எதிர்கொண்டு வணங்கத் திருச்செந்துரை யடைந்து அவ்விடத்தில் வீற்றிருந்தருளினர்.

இவ்வாறு முருகக்கடவுள் அசுரர்பயத்தை யொழித்து தேவசேனாபதியெனப் பெயர்பெற்று வானலோகத்தை இரட்சிக்குந் தன்மையைத் தேவேந்திரன்கண்டு சந்தோஷித்து, அவரது புயபல பராக்கிரமங்களை மதித்து,அவர் அனுமதியினால் தனது அருந்தவக் கன்னிகையாகிய தெய்வயானையம்மையாரை, சுபவோரை சுபயோகசுபதினத்தில் சகலாடம்பரங்களுடனே, தேவர்களெல்லாம்புடைசூழ, திருப்பரங் குன்றத்தில் திருக்கலியாணஞ்செய்து கொடுத்து அங்கு ஒரு ()விநாயகராலயமும். ஒரு தீர்த்தமும், ஒரு சிவலிங்கப்பிரதிட்டையுஞ்செய்து போனான். அதன்பின் தெய்வயானையம்மையாரும் ஸ்ரீசண்முகக்கடவுளும் திருத்தணிகாசலத்திற்றானே வீற்றிருந்தருளினர்.

---

* இந்திரனது யானை வளர்த்தமையால் 'தெய்வயானை' எனப் பெயராயிற்றென்க

() இதனைசெங்கழுநீர்ப் பிள்ளையார் கோயிலென்பர்.என்னெனில்,இந்திரன் ஓர்தீர்த்த முண்டாக்கிஅதில் வானுலகத்திலிருந்தசெங்கழுநீர்க்கொடிகளைக்கொண்டுவிட்டுஅம்மலரால்அருச்சித்தனன்அக்காரணத்தாலென்க.

## வள்ளியம்மையார் உற்பவம்

### துதி.

பாலாழி சுமந்தபணஞ் சுமந்த பச்சைப்
பணஞ்சுமந்த குழலூதி சுமந்தமா நீர்
காலாழி சுமந்தகரைத் துண்டன் மிண்டன்
கண்டன்மா வண்டனேர் சண்டன் தண்டன்
பாலாழி தரைகண்டான் பாலே கொண்டான்
பண்ணுண்டா னென்டோளா னண்டா தண்டான்
காலாழி யாறுமுகனர் பாகந்
கதிகொண்டா ளிசைதண்டா மரைகண்டாமே.

இப்பால் சுந்தரவல்லியார் ஸ்ரீகுமாரக்கடவுளிடம் பெற்ற வரம்போல், பரதகண்டத்தில் தொண்டைநாட்டில் மேற்பாடிக்கருகிலுள்ள வள்ளிமலைச் சாரலில் தபாக்கினியை வளர்த்தி அதில்மூழ்கி சூட்சுமதேகத்துடன் அரியதவத்தைச் செய்துக் கொண்டிருந்தனள். அக்கால், முருகக்கடவுள் பிரத்தியட்சமாகி "ஓ-நங்காய்! நீ இப்பிறப்பில் மான்வயிற்றி லவதரிக்கக்கடவாய். அங்கு யாம்வந்து மணமுடிப்போம்" என்று வரமளித்து அந்தர்த்தானமாயினர்.

இப்பால், முன்னோர்காலத்தில் கண்ணுவமகாமுனிவர் ஏதோ ஒரு காரணம்பற்றிச் சிவவேடந்தாங்கிவந்து திருமால் பூலோகத்தில் மனிதனா யவதரிக்கவும், திருமகள் பெண்மானாய்ப்பிறக்கவும், உபேந்திரன் வேடராதிபதியா யுற்பவிக்கவுஞ் சபித்துச் சென்றனர். அதுபோல் திருமால் திருத்தணிகைக்கருகில் ஓர் ஆரணியத்தில் சிவமுனிவரென்னும் திருநாமம்பெற்று தவம்புரிந்திருந்தனர். அக்கால் திருமகள் அவ்வனத்தில் ஒரு பெண்மானாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தனள். உபேந்திரன் மேற்பாடிக்கருகிலுள்ள லவலகிரியில் வேடர்குலத்தில் வேநம்பி என்னும் பெயரோடு மவதரித்து வேடர்களுக்குத் தலைவனாகயிருந்தனன். இவ்வாறிருக்கும் நாளில் ஒருநாள் திருமகளாகிய பெண்மான் சிவமுனிவ ரருகில்வர, முனிவர் அதிகமோகங்கொண்டனர்.உடனே அம்மலைச்சாரலில் சூட்சுமரூபத்தோடு தவம்புரிந்திருந்து சமயம்பார்த்திருந்த சுந்தரவல்லியார் ஒரு பெண்குழந்தையுருவாய் அம்மான்வயிற்றிற்சென்றனள். அதனால், அம்மான் கருப்பமுற்று ஒரு பெண்குழந்தையைப் பெற்றது. அதுதன் சாதியல்லாமல் மானிடப்பெண்ணா யிருந்தமையால் பார்த்து பயந்து அருகில் வள்ளிக்கிழங்கு தோண்டியெடுத்த ஒரு

குழியில் விட்டுப்போய்விட்டது; வள்ளிக்குழியில் கிடந்தமையால், வள்ளியம்மையென் றழைக்கப்பட்டனர்.

அப்பால் தணிகாசலத்துக்கு மேற்கேயுள்ள லவலகிரிபருவதத்தினருகில் பாடீகநகரையாண்டிருந்த வேநம்பியென்பான் தன் சேனையுடன் அவ்வனத்தையடைந்து வேட்டையாடி வருகிறபோது சிவமுனிவ ராச்சிரமத்தில் குழந்தை அழுகை சத்தத்தைக்கேட்டு மற்றவேடரால் கொண்டுவரப்பெற்று, தனக்கில்லாதிருந்த பெண் புத்திரப்பேற்றைக் கடவுளளித்தனரென் றெண்ணிக்களித்துச் சென்று தன் மனைவியிடங் கொடுத்து வளர்த்து யுத்தமானவயது வந்தவுடனே குலாச்சாரப்படி அருகிலுள்ள தினப்புனத்தைக் காக்கும்படியனுப்ப, அவ்வண்ணம் புனத்தை பட்சிமுதலியவை யணுகாதிருக்கும்படி காத்துக்கொண்டிருக்கும்போது ஒரு நாள் அவ்வழியே செல்லும் நாரதர்கண்டு சுப்பிரமணியக்கடவுளிடம் வந்து "ஐயனே! இவ்வழியில் மூவுலகிலும் காணரிய குணரூபவதியாய் ஒரு கன்னிகை யிருக்கின்றனள், தாங்கள் மணம்புரிதல் தகுதியே" என விண்ணப்பித்துச்செல்ல, முருகக்கடவுள் ஒரு வேடன்போலுருக்கொண்டு வள்ளி நாச்சியாரிடம் சரசவார்த்தைகளைச் சொல்லிக்கொண் டிருக்கையில் வேடராச்சன் வரலும், சண்முகக்கடவுள் அருகிலோர் வேங்கைவிருட்சமாயினர்; இதை வேடராசன் கண்டு வள்ளி நாச்சியாரைக்கண்டு இது ஏதம்மா? நூதனவிருட்சமென்று கேட்க வள்ளியார் 'நூதனமாகத்தா னிருக்கிற' தென்று சொல்ல, வேடராசன் 'ஓ-ஓ- அரிய புத்திரபாக்கியத்தைக் கொடுத்தகடவுள் அக்குழந்தை வெய்யலில் வருந்துதலைக்கருதி இம்மரத்தையுண்டாக்கினர்' என்றுசொல்லி சந்தோஷித்துப் போனான். உடனே முருகக்கடவுள் பழமைபோல வேடவுருவோடு சரசமொழிகளைப் பேசிக்கொண்டிருக்கையில், வேட்டைக்குப் போனவேடராசன் திரும்பி வருவானாயினன். அதனைக்கடவுளறிந்து ஒரு விருத்த வேதியராய் வேடராசனெதிரிற்போய் விபூதியளிக்க, வேடராசன் 'வந்த கருத்தென்ன' வென, * 'குமரியாடவந்தனம்' எனசிலேடையாகக்கூற, வேடராசன் அப்படியே ஸ்நானஞ்செய்து இந்தப்பெண்ணுக்குத் துணையா யிருமென்று சென்றனன். அப்படியே வள்ளி நாச்சியாருக்குச் சண்முகக்கடவுள் விபூதியளித்து அவள் கொடுத்

* குமரி என்பது - விவாகமற்ற பெண்ணுக்கும், அம்மலையிலுள்ள தீர்த்தத்திற்கும் பெயர். இத்தீர்த்தக்கரை வள்ளியம்மையார் மஞ்சளரைத்த வடுக்களை இன்றுங்காணலாம். சிலேடை என்பது இரண்டு அருத்தம்.

மலரும் தேனும் தினைமாவையுமுண்டு, தமக்குதாகம் அதிகரித்தது போல் தோற்றுவித்து, நீர்த்துறையைக் காட்டச்சொல்லி கேட்டனர். அதற்கு வள்ளி இசைந்து ஒரு சுனையிற் கொண்டுபோய்விட, நீருண்பார்போல அபிநயித்து வள்ளியைப்பார்த்து "ஓ பெண்ணே! தாகவிடாய்தீர்த்தனை; அதுபோற் காமவிடாயுந் தீர்க்கவேண்டு" மென இருகையுங் கூப்பிச்சொல்ல, வள்ளி கோபித்துத்திரும்ப, அதைக்கண்ட முத்தன் வள்ளி யானைக்கஞ்சுவாளென் றறிந்து, பிரணவமூர்த்தியைத்துதிக்க, அவர் யானையுருவாய் வள்ளியாருக்கெதிரில்வர, வள்ளியம்மையார் பயந்து விருத்த வேதியரை அபயமென்று கட்டிக்கொண்டனள். பின் விநாயகர் அந்தர்த்தானமாயினர். முருகக்கடவுள் நிசரூபத்தைக் காட்டி மனமொத்திருந்தனர்.

இவ்வாறு சிலநாள் கழிய வேடர்புனம் அறுத்தெறிந்தபின் வள்ளியம்மையார் தனக்கமைத்தவீட்டிலிருக்கும்போது ஒருநாளிரவில் சரவணபவனழைத்துவந்து ஒரு சோலையில் தங்கியிருந்தார். இவ்வாறு ஒரு வேடன் வள்ளியை அழைத்துச்சென்று ஒருசோலையிலிருப்பதாக வேடராசனுக்கு சொப்பனஞ் சாதிக்கவேநம்பி எழுந்து பரிவாரத்தோடுஞ் சோலையையடைந்து இறைவன்மேல் சரமாரிபெய்ய, அக்கால் முருகப்பிரான் சேவலைநினைக்க, சேவல்கொக்கரித்த தொனியால் வேநம்பி சேனையோடு மூர்ச்சையாயினன். இதனை வள்ளியுணர்ந்து பிரார்த்திக்க, மூர்ச்சையைத் தெளிந்து நிசரூபத்தைக்காட்டி அவர்கள் பணிபுரிய, தணிகைமலையை யடைந்து பார்வதி சிவபெருமான் முதலினோரால் தேவதச்சனைக்கொண்டு விவாகமண்டபம் நிரூபித்து சருவாடம்பரத்துடனே சருவகணங்களுஞ்சூழ விவாகஞ் செய்துகொண்டு வீற்றிருந்தருளினர்.

இவ்வள்ளியம்மையையும், தெய்வானையம்மையையும் முறையே கிரியாசத்தி, ஞானசத்திகளென்பர். வேறுசிலர் சிற்சத்தியும், பராசத்தியுமென்பர்.

## பாலாரிட்ட தேவதைகள்.

அநாதியாயிருக்கும் வேதநெறியைக் கடைப்பிடியாத பாபிகளை தண்டித்து, நாளுக்குநாள் நல்ல விவேகத்தைக் கொடுத்து இரட்சிக்கும் படியாகக்கடவுளால் சிருட்டிக்கப்பட்டனுப்பிய இருபத்தெண்கோடி துட்டதேவதைகளில் பாலர்களை யார் நன்றாகப் பாதுகாக்காமலும் குலதரும கிரியாதிகளைச் செய்யாமலும் தெய்வம்போற்றாமலும் சிசுத்தன்மையைக் கவனியாமலும் இருக்கின்றார்களோ அவர்களுக்குப் பீடையையும், பாலர்களுக்குப் பிறந்த பத்

தாம் நாள் முதற்கொண்டு பதினாறுவயதுமட்டும் தேகவருத்தத்தையும், உண்டாக்கும் பொருட்டா யுள்ளவர்கள். மண்ணை, சந்திமுனி, தந்தைபீஷ்னி, காளிகை, பீமரூபி, அங்குசினி, பூதினி, முத்தகேசி, ஆகாசிநி, அரிகோராதிநி, சகுனி, பீமாயி, உத்தமி, பிங்களை, கோகர்ணி, பங்கஜை, ஸ்ரீமுக, சேநி, கும்பகர்ணி, தாபதை, காலார்க்கி, நந்திநி, குரோதினி, தானுநி, தாகிநி, பஞ்சாளைகாமிநி, மேதினி, நளிநி, மகாகும்பிநி, அரநி, ஆகாசகர்ணி, வாயுவிசிக்கினி, சுகந்திநி, வனதேவி, குண்டனிகளும், பசாசகணங்களும், பக்ஷிரூபணி,வாயுரூபணி முதலிய வானகில்லியர்களும் பாலாரிட்டதேவதைகளாம். இவர்கள் தங்கள் தங்கள் கோரரூபசேட்டைகளால் மனித ராக்கத தேவலோக சஞ்சாரிகளாய் விகாரங்களைக்காட்டி வெவ்வேறான பூசைபலிகளை யேற்பார்கள். அன்றி,

பட்சிதோடம், பறவைதோடம், எட்சிதோடம், தேரைதோடம், புருடதோடம், பெண்தோடம், குளிதோடம், கெற்பதோடம், மாந்ததோடம், மலட்டுதோடம், சந்திதோடம், கிரகதோடம், முதலியவைகளும், கரப்பான், கிரந்தி, கணம்முதலிய தேகநோய்களும், பாலகர்களை வருத்தப்படுத்துவனவாம். ஆனதால் பெண் ஆண் தேகங்கள் ஒரே தன்மை யுடையதாயிருக்கப் புணர்ந்து, பெற்ற பிள்ளைகட்கு ஆயுள்வேத விதிப்படி நடந்துகொண்டால்இத்தோடங்கள் அணுகா. இதனைபன்னிருவருடமட்டுந்தான் பாலக்கிரக தோடங்க ளுண்டென்றும், மூன்று மாதமட்டுந்தான் கரப்பான்க ளிருக்குமென்றும், ஒருவருடமட்டுந்தான் மாந்தங்களிருக்குமென்றும், பதினாறு-வருடமட்டுந்தான் கணங்களிருக்குமென்றும், சிலதோடங்களுக்குப் பரிகாரமே யில்லையென்றும், கூறுகின்ற சம்பிரதாயிகள்போல காலத்திற்கேற்க, வெவ்வேறு கிரகங்களையும் கிரியாசாந்திகளையும் அநுட்டித்துவருகின்றார்கள்.

## தருமதேவதைகளும் நவப்பிரமாக்களும் உற்பத்தி.

வெண்டாமரைப்பூவில் வாசனாகிய பிரமதேவன் உலகங்களையெல்லாஞ் சிருட்டிக்க நினைத்தகாலத்தில், முதற் பிரமனாகிய சதுர்முகன் நேத்திரத்தினின்று மரீசிமுனிவரும், இருதயத்திலிருந்து பிருகு மகாமுனிவரும், சிரசிலிருந்து ஆங்கிரசமகாமுனிவரும், உபானவாயுவிலிருந்து புலத்தியமகாமுனிவரும், விநாயக்வாயுவிலிருந்து புலகமகாமுனியும், அபானவாயுவிலிருந்து கிருதுமுனிவரும், பிராணவாயுவிலிருந்து தக்கனும், சோத்திரத்தி லிருந்து அத்திரிமகாமுனிவரும், சமானவாயுவி னிடத்திலிருந்து வதிட்டரும் பிறந்த

னர். இவர்கள் வேதாதிசாத்திர சம்பந்திகளாய் யாவரும் புகழும்படி பிரமனால் வேண்டிய சித்திகளை யடைந்து நவப்பிரமாக்களெனப் பெற்றனர். இவருள் அத்திரி, ஆங்கிரசன், வசிட்டன், புலத்தியன், இவர்களை சத்தமுனிவருள்ளிட்டாராகக் கூறுவர். இப்பால் அப்பிரமன் சங்கற்பத்திலிருந்து தருமதேவதைகளுண்டாயின. இத்தரும தேவதைகளே சர்வாதிகாரமாக லோகபரிபாலனம் பண்ணுவதாம்.

## மசானஉருத்திரர் உற்பவம்.

மசானருத்திரர் என்பவர்கள் மேகராச்சிய பட்டணத்தில் மூன்றாவது பவனாதாரமான வச்சிராங்கபுரியில் உத்திராமிசமாக உற்பவித்துமஞ்சனகாந்திமயமாய், பீகாகாரமானதேக முடையவர்களாய் அனேகவீரர்கள் பூதவேதாளர் முதலியோர்களோடும் பூலோகத்தில் வீரகல்லிய ரூபத்தோடு பதிபூசைகொண்டு வீற்றிருப்பவர்.

## அச்சரர் உற்பவம்.

மேற்படி பட்டணத்தில் நான்காவது வயித்துதகபுரியில், தேவேந்திரனால் சிருட்டிக்கப்பட்டு அவன் ஏவலினால் ஆயுதம், அக்கினி, சலம். போர், வைராக்கியம் இவைகளால் உயிர்நீங்க அவர்களைத் தேவகன்னியர்சூழ மணிமய விமானத்திலேற்றி வீரசுவர்க்கஞ் சேர்ப்பித்து, பூலோகவாசமுற்று இந்திரசேவிதர்களாய் வீற்றிருப்பவர்கள்.

## சத்தகன்னியர் உற்பவம்.

சத்தகன்னிகளாவார்:—பிராமி, மகேசுரி, கௌமாரி, வைணவி, வராகி, மகேந்திரி, சாமுண்டி என்னும் ஏழுமாதர்களுமாம். இவர்கள் முறையே சரசுவதி, பார்வதி, மாரி, திருமகள், வராகி, இந்திராணி, காளி என்பவராவர். இவர்களைக் கன்னியர்களென்பதென்னையெனில், இவர்கள் சத்திபேதமூர்த்தங்களாதலால்என்க. இவர்கள் பெயர், தங்கள் தங்கள்பதிகளின் திருநாமத்தாலேயே பெறப்பட்டன அதாவது.

| | | | |
|---|---|---|---|
| 1 | பிரமன் | மனைவி | பிராமி |
| 2 | மகேச்சுரன் | ,, | மகேச்சுரி |
| 3 | குமரன் | ,, | கௌமாரி |
| 4 | விஷ்ணு | ,, | வைணவி |
| 5 | உருத்திரன் | ,, | வராகி |
| 6 | இந்திரன் | ,, | மகேந்திரி |
| 7 | சண்டன் | ,, | சண்டிஎன்பனவாம். |

பயிறரு முதுமறை நூலைத் தெரிந்தவள்
பகைதொகு திரிபுர மூளச் சிரித்தவள்
பனிவரை பகநெடு வேலைப் பணித்தவள்
படுகடல் புகையெழ வார்விற் குனித்தவள்
எயில்கொ டுழுதெழு பாரைப் பெயர்த்தவள்
எறிதரு குலிசம் விடாமற் றரித்தவள்
இடுபலி கொளுமொர் கபாலக் கரத்தின
ளெனும்இவ ரெழுவர்க டாளைப் பழிச்சதும்.

என்னும், குமரகுருபரசுவாமிகள் திருவாக்கால் உணர்க. இச் சத்தமாதர்கள் சரிதங்களை ஆங்காங்குவந்துழி காண்க.

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்உற்பத்தி.

சூரியர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் ஆகமுப்பத்து மூவரும் வகை ஒன்றுக்குக் கோடியாக முப்பத்து முக்கோடி தேவர்கள்எனப்பட்டனர். இவர்கள் பிரமசந்ததியாரான காசிபமுனிவர் பாரியராகிய திதி, அதிதி என்பவருள் அதிதியினிடம் பிறந்தவர்கள். இவர்களினின்றே அநேக தேவமுனிவர்களுற்பத்தியாயினர்.

## அக்கினிதேவர் உற்பவம்.

வன்னி என்னும் அக்கினிகடவுள் உலக அபிவிர்த்தியின் பொருட்டு, பிரமதேவனுக்கு முதற்குமாரனுக உற்பவிக்கப்பட்டவன். இவன் மனைவியின் பெயர் சுவாகையென்பர். இவ்வக்கினிதேவன் பஞ்சபூதங்களுற்பவித்த காலத்திலேயே, ஆதிபிரமனிடம் தோன்றினேனும் சூரிய சந்திராதி சருவகாரண கருத்தாக்களுக்கும் காரணபூதமாயிருந்துஎல்லாத்தொழிற்களையு முடியச் செய்பவன். இவனுக்குத் தன் மனைவியிடமாகப் பாவகன், பவமானன், சுசி என்னும் மூன்று குமாரர்கள் பிறந்தனர். அவருள் பவமானன் தீக்கடைகோலில் தோன்றும் அக்கினியும், பாவகன்மின்னலிற்றோன்றும் அக்கினியும், சுசி-வடவையினின்றும் தோன்றும் அக்கினியுமாம். இம்மூவரும் தனித்தனி பதினைந்து புத்திரர்களைப் பெற்று வன்னியோடு நாற்பத்தொன்பது பேராக விளங்குவர்.

இவருள் பாவகனுக்கு அவ்வியவாகன்தோற்றி தேவர்களுக்கு அக்கினியாகவும், பவமானனுக்கு கவ்வியவாகன்தோன்றி தென்புலத்தாருக்கு அக்கினியாகவும், சுசிக்கு சகரக்கன் உற்பவித்து இராட்சசர்களுக்கு அக்கினியாகவும் விளங்குவர்.

## பிதிர்கள் உற்பவம்.

உலக சிருட்டி காலத்திலேயே சரசுவதி மணாளனாகிய சதுர்முகக்கடவுளிடத்தில் சங்கற்பரூபத்தால் இரண்டு புத்திரர்கள் உற்பவித்தார்கள். அவர்கள் பெயர் அக்கினிச்சுவத்தன், வருகிடதன் என்பர். இவர்களை முறையே அக்நிஷ்வாத்தன், பர்ஹிதன் என வடநூற் கூறுகின்றது. இவருள் அக்கினிச் சுவத்தன் தேவப்பிதிரனும், வருகிடதன் மானிடப்பிதிரனும் எனக, இவற்றில் அக்கினி சுவத்தன் யாகஞ் செய்தவனும், வருகிடதன் யாகஞ் செய்யா தவனுமாம். இவ்விருவர்களோடு சவுமியன் என்னும் ஒருவகைப் பிதிரர்களையுங் கூட்டி பிதிரர்கள் மூவகையினரென்பர்.

இவ்விருபிதிரர்களும் சுவதை என்பவளைப் புணர்ந்து மேனை வைதரணி என்னும் இரண்டு புத்திரிகளைப் பெற்றனர். இவருள் மேனையென்பாள் மலையரையனைத் தழுவி மந்தரன், பார்வதி முதலினரைப் பெற்றனர். இதனாற் சந்ததிகாண்க.

## சேடன் முதலிய நாகராசர் உற்பத்தி.

பிரமபுத்திரனாகிய தக்கன் குமாரத்திகளும், காசிப முனிவர் பாரியர்களுமாகிய விநதை, கத்துருவை யென்னுமிரண்டு பெண்களிருந்தனர். இவர்களிருவரும் புத்திரப்பேறில்லாமல் கந்தமாதன கிரியைச் சேர்ந்து தங்கள் கணவனாகிய காசிபமுனிவரை நோக்கித் தவஞ்செய்தனர். அத்தவத்தை மகிழ்ந்து காசிபமுனிவர் கண்ணுக்குத் தோன்றி "ஏ பெண்களே! யாதுகாரணமாகத் தவம்புரிகின்றீர்க" ளென்று கேட்க, விநதையென்பாள் "எனது அரிய இறைவரே! யான் மிக்க வல்லமையை யுடைய இரண்டு புத்திரர்களைப் பெற்றுசிறப்படைய வரம்புரிய வேண்டு"மென்றுகேட்டனள். கத்துருவென்பாளும் அப்படியே நூற்றுநான்கு குமாரர்களையும், ஒருகுமாரத்தியையும் பெறக் கேட்டனள். இவ்விருவர் கருத்தையு முணர்ந்து ஒரு புத்திரகாமேட்டி யாகஞ்செய்து அதிலுண்டான பிண்டத்தை இருவருக்கு மளித்து பழயபடியே கந்தமாதன கிரியையடந்து தவத்திலிருந்தனர்.

இப்பால் அம்மாதர்கள் பிண்டத்தைப் பெற்று தாங்கள் கோரியபடி விநதை இரண்டு முட்டைகளையும், கத்துரு நூற்றைந்து முட்டைகளையும் பெற்றனர். இம்முட்டைகள் ஐந்நூறு வருடஞ் சென்று விரிந்தன; அதினின்று ஆதிசேடன் முதலிய நூற்றுநான்குபேரும் சலர்க்காரையென்னும் பெண்ணுந் தோன்றினர்.

## சூரியன் இரதசாரதி அல்லது அருணன் உற்பத்தி.

விநதையென்பாள் கத்துருவை நூற்று ஐந்து புத்திரரோடு சுகித்திருப்பதை நோக்கி மனம்பொருது 'ஐயோ நமது முட்டைகளின்னு மலராதிருப்பதென்' னென்று விசனப்பட்டு ஓர் முட்டையை யுடைத்தாள். அதினின்று எல்லா அவயவங்களும் பொருந்தி காலொன்றில்லாத ஒருவன் தோன்றி வணங்கி "அன்னையே! மகாவல்லமையோடு கூடிய என்னை ஆத்திரத்தால் முட்டையை யுடைத்து முடவனென்னும் இழிபெயரை உண்டாக்கினையே! நீ இவ்வாறு செய்ததால் உன் இளையவளாகிய கத்துருவைக்கு அடிமையாகக்கடவாய்" என்று சாபமிட்டுப் பின்னர், அன்னை வருந்துவதை யுணர்ந்து, "அன்னையே என்கோபத்தால் சபித்தேனாயினும், இச்சாபம் நீங்குவதெப்போதெனில், இதோ மற்றொரு முட்டை யிருக்கின்றதே; அதையும் ஆத்திரப்பட்டுடைக்காதே அதினுள் ஒருமகா வல்லமையோடு கூடிய ஒரு புருடன் தோன்றுவன். அவனால் நீ கத்துருவையின் அடிமைத்தனம் நீங்கி சுகித்திருப்பா" யென்று கூறியிருந்தனன். இதனை விநதை யென்பாளறிந்துமைந்தன் சாபத்தைப் புத்திரவாஞ்சையால் சந்தோடித்து அவனுக்கு அருணனெனப் பெயரளித்து அரும் புகழோடும் வளர்த்துவருவாளாயினள். இவ்வாறு அருணன் மகாபராக்கிரமசாலியா யிருப்பதை சூரியபகவா னுணர்ந்து வந்து ஓ அருணா! எனது இரதத்தையும், சத்தமா யென்னும் குதிரையையும் நடத்த தேர்ப்பாகனாக வரவேண்டுமென்ன, அதற்கு அருணன் இசைந்து தாயிடம் விடைபெற்றுச் சென்று, இன்றும் சூரியபகவானுக்கு இரதசாரதியாக யிருக்கின்றான்.

## நட்சத்திரங்கள் உற்பத்தி.

பிரமனது வலதுகால் பெருவிரலிற் றோன்றிய தக்கன், வைதரணி யென்பவளை மணந்து முதலில் ஆயிரம்மக்களை யீன்றான் அவர்கள் வேதநெறியைக் கடைப்பிடித்து தவவிரதிகளாய் மோட்சபத மடைந்தனர். அதனால் பின்னரும் வைதரணியைக்கூடி ஐம்பது பெண்களைப்பெற்று, கீர்த்தி, இலக்குமி, துருதி, மேதா, புட்டி, சிரத்தை, கிரியை, விருத்தி, இலச்சை, மதி என்னும் பத்துபெண்களை தருமனென்னும் மனுவுக்கும், அசுவனிமுதல் இரேவதியீறான இருபத்தேழு பெண்களைச் சந்திரனுக்கும்; அதிதி, திதி, தனு, காலை, ஆயு, சிங்குகை, மனு, சுரபி, முனி, குரோதை, வசை, அநகை, விநதை என்னும் பதின்மூன்று பெண்களைக் காசிபமுனிவருக்கும்

மணஞ் செய்துகொடுத்தான். இவ்வைம்பதின்மருள் சந்திரன் மனைவியர்களாகிய அசுவனிமுதலிய இருபத்தேழு பெண்களும், தங்கள் கற்பு நெறியாலும், தந்தை முதலினோர் அநுக்கிரக வரத்தாலும், தங்கள் நாயகனாகிய சந்திரன் வசிக்கும் மண்டலத்திற்குச் சார்பாக நட்சத்திர மண்டலமென வசிக்கின்றனர். இவர்களே நட்சத்திரங்கள் என கணிதநூலோர் அண்டபிண்டசராசர லட்சணங்களைக் கணிக்கின்றனர். அந்நட்சத்திரங்களின் கிருத்தியாகிருத்திய பாகுபாடுகளைச் சாத்திரம் ஆறினுள் ஒன்றானசோதிட சாத்திரத்துள் பரக்கக் காணலாம். இந்நட்சத்திரங்களை நட்சத்திர மண்டலத்தில் காணும்வகை யெப்படியெனில்,

## நட்சத்திரங்களைக் காணும்வகை.

| | | | |
|---|---|---|---|
| அசுவனி | குதிரைத்தலைபோல | 6-நட்சத்திரங்களாயும் | |
| பரணி | அடுப்புபோல | 3 | ,, |
| கார்த்திகை | கைத்தலம்போல | 6 | ,, |
| உரோகணி | ஊற்றல்போல | 12 | ,, |
| மிருகசீரிடம் | தேங்காய்க்கண்போல | 3 | ,, |
| ஆதிரை | ஒருமணிபோல | 1 | ,, |
| புனர்பூசம் | புடலம்பூப்போல | 1 | ,, |
| ஆயிலியம் } சதையம் } | அம்மிபோல. | 4 | ,, |
| மகம் | முடனுகம்போல | 4 | ,, |
| பூரட்டாதி } பூரம் } | கட்டில்போல | 4 | ,, |
| உத்திரட் } உத்திரம் } | | | |
| அத்தம் | | பல | ,, |
| சித்திரை | புலிக்கண்போல | 2 | ,, |
| சோதி | - | 1 | ,, |
| விசாகம் | துறவுபோல | 6 | ,, |
| அனுடம் | முடப்பனைபோல | 4 | ,, |
| கேட்டை | ஈட்டிபோல | 4 | ,, |
| மூலம் | எக்காளம்போல | 7 | ,, |
| பூராடம் } உத்திராடம் } | தோப்பைபோல | பல | ,, |
| திருவோணம் | உழக்கோல்போல | 2 | ,, |
| அவிட்டம் | | 12 | ,, |
| இரேவதி , | நாவாயைப்போல | | ,, |

இவ்வாறுதோன்றும். பகலிலும் இரவிலும் நன்றாயறியலாம். ஆனால், மப்பு, மழை இவைகளாற் சிலபாகம் தோன்றாமலுமிருக்கும்; என்றாலும், கடையான சில நட்சத்திரங்கள் நன்றாகத் தோன்றுவது கஷ்டமாம்.

## நவக்கிரக உற்பவம்.

நவக்கிரகமென்பன, சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரதன், சனி, இராகு, கேது என்று கூறும் ஒன்பதுமாம். இவைகளி னுற்பத்தியைப் பலவாறாக சாத்திரங்கள் கூறுகின்றன. ஆயினும் சோதிட சாத்திரங்களுள்ளே பிரதானமாகக் கொண்டுள்ளவாறு எப்படியென்னில்,

"இரவிசங்கர னீச்சுரி திங்கள்சேய்
 இனியகந்த னிசைதிரு மால்புதன்
குருவயன்சுரர் கோன்வெள்ளி சுன்னெமன்
 குலவிராகுக் குறிப்பத்ர காளியாம்
மருவுசித்திரா புத்திரன் கேதுவாம்
 வானவர்முனி வோராசி மற்றுநா
ளிமுதற் கிரகத்தார் பரமசிவ
 னண்டபிண்டம் படைத்தளித் தாற்றுமே."

—வீமேசுரருள்ளமுடையான்.

என்று கூறியபடி சிவபெருமானே சூரியனாகவும்; உமையம்மையாரே சந்திரனாகவும்; சிவசுப்பிரமணியக்கடவுளே அங்காரகனாகவும், திருமலே புதனாகவும், பிரமதேவனே குருவாகவும், இந்திரனே சுக்கிரனாகவும், எமதருமராசனே சனியாகவும், பத்திரகாளியே இராகுவாகவும்; சித்திராபுத்திரனே கேதுவாகவும் இருப்பதாகத் தெரிகிறது. சில சோதிட நூல்களிலே அத்தேவர்களமிசங்களே நவக்கிரங்களாயின வென்று கூறுகின்றன. இதன்றி; தூமாதிபஞ்சக்கிரகங்களுஞ் சொல்லப்படுகின்றன.

## திக்குப்பாலகர் உற்பவம்.

### முதலாவது இந்திரன்.

இவன் கிழக்குத் திசைக்குத் தேவன்; இவன் ஒருகால் இராவண அமிசனாகிய மேகநாதனாலே செயிக்கப்பட்டு, குதிரையின் காலில் கட்டுபட்டான். அன்றியும், கௌதமரிஷியின் மனைவியாகிய அகலிகையின் மோகங்கொண்டு சென்று அம்மாதினை கௌதமரைப்போல வடிவுபூண்டு வலிதிற்புணர்ந்து பூனையுருவம் புனைந்து

ஓடி வரும்போது, கௌதமருடைய சாபத்தினால் இவனுக்கு ஆயிரம் யோனிக்கண்களுண்டாயின இவனுக்குப் பத்தினி, இந்திராணி; வாகனம், வெள்ளையானை; பட்டணம் அமராவதி யென்று சொல்லப்படும்.

### இரண்டாவது அக்கினி.

இவன்தென்கிழக்குத்தேவன் காசிபபிரமாவின் குமாரன் இவனுக்குக் குறிபுகை. முன்னொருகாலத்தில் பிருகு முனிவர் மனைவியாகிய பிரிசுவையை காக்காத படியினாலே அம்முனிவர் இவ்வக்கினிதேவனை 'சருவத்தையும் சாப்பிடக் கடவா'யென்று சபித்தார் உடனே பிரமதேவன் 'நீ யெதைப் புசித்தபோதிலும் சுத்தமாகக் கடவ'தென்று வரமளித்தார். இவனுக்கு மனைவி, சுவாகாதேவி; வாகனம், ஆட்டுக்கடா; பட்டணம் தேயோவதி.

### மூன்றாவது எமதேவன்.

இவன் தென் திசைக்குத் தேவன். இவனுக்குக் குறி, சீயம், சிவந்தகண்ணும் பச்சை நிறமும், காவிவேட்டிதரித்திருக்கப்பட்ட தேகமுமாகிய இவனது உருவத்தால் மூவுலகத்தோரையும் பயப்படுத்தி மரணமுண்டாக்கி, மரித்தவர்களை நியாயம் விசாரித்து நன்மை தீமைகளுக்குத் தக்கபலனைக் கொடுக்கிறான். இவனுடைய கணக்கப்பிள்ளை சித்திரகுத்தன், இவன் மனிதர்களுடையநடவடிக்கைகளை யெல்லாம் எழுதுகிறவன், ஏமனது மனைவி, சாமளை; வாகனம், எருமைக்கடா; பட்டணம், சமனுவதி.

### நான்காவது நிருதி தேவன்.

இவன் தென் மேற்குத் திசைக்குத் தேவன். இவனுக்குக் குறி நாய், இவன் பேய்களுக்கு இராசா; மனைவி, துர்க்கை; வாகனம், தண்மை; பட்டணம் இரட்சோவதி.

### ஐந்தாவது வருணதேவன்.

இவன் மேற்குத் திசைக்குத் தேவன் புனலுக்கு அரசன். இவனுக்கு குறி, யிடபம். இவனது நாடாகிய வருணலோகத்தில் சிற்றின்பம் தவிர வேறொன்றுமில்லை. முன்ன மொருகால் இவ்வருணலோகத்தில் நேமியென்கிற அரசன் தனக்காகச் சிலகாரியங்களைச் செய்ய வசிட்டரை அழைப்பித்தான். அத்தருணத்தில் வசிட்டருக்கு வேறு சில வேலைகளிருந்தமையால் போகாமல் நின்று விட்டார். அப்பாது நேமியரசன் மற்றொரு ஆசானைக்கொண்டு தன் காரியங்களை நடத்திக்கொண்டிருப்பதை வசிட்டர் அறிந்து அங்

குச்சென்று அரசனைச் சாம்பலாகும்படி சபித்தார். உடனே அரசன் மரிக்கும்போது வசிட்டரைச் சாம்பலாம்படி மறுசாபங் கொடுத்தான். அப்போது வசிட்டருடைய ஆன்மா பிரமனிடத்திற் போய் "நான் மறுபடியும் உடலெடுத்து ஜென்மிக்கிறது எப்படி" யென்று கேட்க, பிரமன் வருணதேவனிடத்திலும் சூரியபகவானிடத்திலும் போவையாகில் புனிதமாகிய ஜென்மமெடுப்பாயென்றுபுகல, அந்தப்படியே அந்த ஆன்மா வருணனைத் தேடிப்போகையில் தேவலோகத்தில் ஆடிக்கொண்டிருந்த ஊர்வசி யென்பவளைச் சூரியன் அபேட்சித்து மோகத்தினால் அவளைத் தன்னிடம் வரும்படியழைக்க, அவளும் அவ்வண்ணமே வருகையில் மார்க்கத்தில் கண்ட வருணதேவனும் மோகித்தான். இவ்விருவருடையமோகத்தினாலே * அகத்தியரென்கிற முனிவரும் வசிட்டரென்கிற முனிவரும் பிறந்தார்கள். மேற்சொன்ன வருணன் மனைவி காளிகை; வாகனம் முதலை; பட்டணம், சுத்தாவதி.

## ஆறுவது வாயுவுதேவன்.

இவன் வடமேற்குத் திசைக்குத் தேவன். இவனுக்கு குறிகழுதை. இவன் காற்றுகளுக்குத் தேவனும் தேவர்களுக்குத் தூதனுமானவன். இவன் தாயாகிய அதிதி, இவன் இந்திரனிலும் வல்லவனாக யிருக்கவேண்டுமென்று கோரினபடியே வரம்பெற்றான். இந்திரன் இதைக்கேட்டு அதிதி கருப்பத்திற் பிரவேசித்துச் சிசுவை ஏழுபங்காக்கி அந்த ஏழுபங்கினையும் ஒவ்வொருபங்கையும் ஏழு பிரிவாக்கினான். அதனால் வாயுதேவனுக்கு நாற்பத்தொன்பதுஉருக்களாம். இவ்வாயுபகவான் கேசரியென்கிற மந்திரியின் மனைவியாகிய அஞ்சனா தேவியுடன் விபசாரஞ் செய்தபடியால், அனுமந்தன் பிறந்தான். ஆதலால், இவனுக்கு மனைவி, அஞ்சனாதேவி, வாகனம், கலைமான்; பட்டணம், கந்தாவதி.

## ஏழாவது குபேரதேவன்.

இவன் வடக்குத் திசைக்குத் தேவன்; இவனுக்குக்குறி, யானை இவன் திரவியக் குப்பைகளுக் கதிபதி; இவனது மனைவி, சித்திரரேகை; வாகனம், குதிரை; பட்டணம், அளகாபுரி.

## எட்டாவது ஈசானதேவன்.

இவன் வடகிழக்குத் தேவன்; இவனுக்குக் குறி, காகம், இவன் மனைவி, பார்வதி; வாகனம், இடபம்; பட்டணம், கைலாசகிரி.

---

* அகஸ்தியருடைய உற்பத்தி இன்னும் வேறு விதங்களாகவும் புராணங்களிற் கூறுகின்றமையால், இங்ஙனம் கூறியதே முதற்பிறவி யென்று நாம் ஸ்தாபிக்கவில்லை.



## மன்மதன் உற்பவம்.

மேற்றிசையில் வளம் பொருந்திய பப்பிர தேசத்துக் கடுத்த பகவதியென்னும் கிராமத்தில் பவனனென்றோர் பிராமணன் நான்குவேதங்களையுங் கற்றுத் தேர்ந்து, இல்லறமநுட்டித்துச் சீலனாகி சதா வேதபாராயணஞ் செய்துவருகிற காலத்தில், குலத்தைக் கெடுக்கபிறந்த கோட்டானைப் போலவும் கதிர்பிறந்து கரும்பின் மதுரத்தைக் கெடுப்பதைப் போலவுந் இப்பிராமணருக்கு ஒரு புத்திரன் பிறந்து செல்வமாய் வளர்ந்து யௌவன திசையை யடைந்தும், தமது குலமரபின் ஆசாரம் காயத்திரி மந்திரம் வேதமோதுதல் முதலாகிய வைதிக நன்மார்க்கங்கள் யாவற்றையும் ஒழித்து காமக் குரோத லோக மோக மதமாச்சரியங்களாகிய துன்மார்க்கத்தின் வழிநடந்து கொலைகளவுகாமம் பொய்யென்னும் பஞ்சமாபாதகங்களையுஞ் செய்துகொண்டும், அழகிய பெண்ணைக் காணில் மோகாந்தகாரனாகி விடாதுபின் தொடர்ந்தும் புணருவதால் சிற்றின்பத்தில் தானே காலங் கழிப்பதால் இவனுக்கு அசித்தனென்று பேருண்டாகியது. அன்றி, இவனுக்குத் திருடுவதே தொழில். இவ்வண்ணமாக இவன் அற்பதொழிலுக் குடன்பட்டு நாளைப்போக்கிக்கொண்டு வருகிறகாலத்தில், தந்தையாகிய தபனன் புதல்வனையழைத்து வேண்டுமான புத்தி மதிகளைச் சொல்லித் தன் மரபில் உத்தமியாகிய கன்னிகையைப் பேசி மணஞ்செய்வித்தான். பின்பு அம்மங்கையினிட மேனும் அன்பு பாராட்டி தருமந் தப்பாமல் கருமங்களை நடாத்தி உத்தமனாகாமல் முன்னிருந்ததைப் பார்க்கினும் எண்மடங் கதிக துட்டகிருத்தியங்களில் முயன்றிருப்பதைக் கண்டு, தாயுந்தந்தையும் வெறுப்புற்றார்கள். இவ்வண்ணமே அவ்வூரிலுள்ளோ ரனைவரும் இவனைப் பரமதுட்டனென்று வையும்படியாக இருக்கிறபோது அவ்வூரில் இந்த அசித்தனுக்கு திருட்டுப் பலியாததால், ஒருநாளிரவில் தன்னூரைவிட்டுத் தாக்கீகமென்னும்மாநகரத்தை நோக்கித்திருடுவதற்காகப் போகிறபோது, கரைபுரண்டு பெருக்கெடுத்து ஓடும்நதி குறுக்கிட, அதனைக்கண்டு பயமின்றி அந்த நடுராத்திரியில் பொருளாசையினால் அதிலிறங்கி நீந்திக்கொண்டே அக்கரையிலிருக்கும் தாக்கீகமாநகரத்தரசன் சங்கீசனன் என்னும் பிராமணன் அரண்மனைக்குட் சென்று இந்த அசித்தன் வேண்டியமட்டும் பொருளைத்திருடி மூட்டைகட்டித் தலைமீதெடுத்துக்கொண்டு அரண்மனையைக்கடந்து ஓடிவருகிறபோது, மார்க்கத்தில் தலையாரிகள்கண்டு இவனைப்பிடித்துப் பின்கட்டுக் கட்டி பலவிதங்களாகப் புடைத்துக்கொண்டு போய்ச் சிறையில்

வைத்துப் போனார்கள். பின்பு இந்த அசித்தன் சிறையிலிருந்து கொண்டு பலபலவிதங்களாக மனதுகலங்கித் துக்கித்து, ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தான். பொழுது விடிந்தவுடன் தலையாரிகள் இவனைக்கொண்டுபோய் இராசசமுகஞ் சேர்த்து, இவன் திருடின சொத்துக்களை யெல்லாம் எடுத்துக்காட்டி, அரசனுக்குத்தெரியப் படுத்தினார்கள். இதைக்கேட்டு அரசன் சினமிகுந்து கள்ளனைப்பார்த்து, விசாரணைசெய்து, இவன் மார்பிற் புரளும் முப்புரி நூலைக்கண்டு, தான் பிராமணனாதலால், சாதியபிமானம் வைத்ததன்றியும், 'குற்றஞ் செய்தவனாகக் காணப்படினும், பிராமணனைத் தண்டனை செய்யலாகாது' என்று அநேகநூல்கள் கூறுவதாலும், அரசன் இவன்செய்த பிழையைப் பொறுத்து, இவனைச் சமீபத்தி லழைத்து உட்காரவைத்துக்கொண்டு, "நான்! சொல்லும்படியான நீதியை கவனித்துக் கேட்கக்கடவாய். அதுயாதெனில், பிரமகுலத்தின்பெருமையும் வைதீகதருமத்தின் அருமையாகிய சுசி ஆசாரமுதலான நல்லொழுக்கத்தையும் நீக்கி, இவைக்குமாறாகவிளங்கும் சீவஹிம்சை செய்துண்பது, கள்குடிப்பது களவுசெய்வது, பிறர்மனைவியைப் புணர்வது, பொய்பேசித்திரிவது, இவ்வைந்தொழிலையும் விடாதுபற்றி வீண்காலங்கழித்து உலகத்துக்குக் கொடியவனாகித் திரிவது நமதுமேலாகிய பிரமகுலத்துக்குத்தகாது. ஆகையால், இந்த ஐந்து கெட்டசெய்கைகளைவிட்டு இன்றுமுதலாக நமதுகுலத்துக்குரியவைகளை அனுட்டித்து வருவா'யென்று சில நீதிகளைக் கூறினான்.

இவ்வண்ணம் அரசனுரைத்த நீதிமார்க்கங்களைக்கேட்டு சிற்றின்பத்தில் பற்றுடைய அசித்தன் வெற்றிவேலைத் தாங்கிய அரசனைநோக்கி "ஓ மகாராசனே பரஸ்திரீ கமனம் ஒன்று தவிர, மற்ற நான்கையும் விட்டொழிக்க என்னாலாகும் பெண்களைக்கண்டு அவர்களைச் சேராமல் என்மனம் சகியாது. பிராணனும் நில்லாது" என்றும், "மங்கையர்கள் கச்சைக்குள்ளிருக்கும் கொங்கையை யான் காண்பேனாகில், என்தேகம் இத்தன்மையாயிருக்கிறதென்பதையறியாமல் மறந்துவிடுகிறேன். ஆதலால், பெண்கள் மோகத்தையொழிக்க என்னாலாகா" தென் றியம்பினான்.

இதைக்கேட்டு அரசன் மிகவும் விசனப்பட்டு "ஓ அசித்தனே! இதற்கோ ருபாயஞ் சொல்லுகிறேன். அந்தப்படியாகிலும் நீநடந்துகொள்வையாகில் புனிதனாவாய். அதென்னெனில், நினது மனைவியின் கொங்கையைப் பீடமாகவும், அதின் காம்பைச்சிவலிங்கமாகவுங் கருதி, அந்தலிங்கத்திற்கு அபிடேகஞ்செய்து ஆடையுடு

த்தி, வாசனைத்திரவியங்களைப்பூசி, மலர்மாலைசூட்டி, பலவிதமலர்களால் அருச்சித்து, தூபதீபநைவேத்தியமீந்து, வலம்வந்து பணிந்து, 'அருள்தரவேண்டும். ஈசனே!' யென்று தினந்தோறும்போற்றித் துதிசெய்துகொண்டு கூடி மகிழ்வையாகில், உனக்குச் சீக்கிரமே சிவபெருமானது கிருபையுண்டாகு'' மெனச் சொல்லி, மிகுந்த திரவியமும் ஆடையாபரணங்களுந் தந்து அனுப்ப, அசித்தனும் அரசனிடம் விடைபெற்று, ஆடையாபரண திரவியங்களைஒட்டகத்தின்மேற் போட்டுக்கொண்டு தன்னூரைச்சேர்ந்து, வீட்டையடைந்து பொருள் முதலியதுகளையும் பத்திரப்படுத்தியிருக்கிறபோது, மனைவிவந்தாள், அவளைக் கண்டவுடன் மோகமீறி, பிராமணன் அரசன் சொல்லியபடி மனைவியின் கொங்கையைப் பீடமாகவும், அதின் நுனியிலிருக்குங் காம்பைச் சிவலிங்கமாகவும் எண்ணி, அதற்கு அபிடேகம் பூசை தூபதீப நைவேத்தியங்கள் முதலானவைகளுஞ் செய்து தோத்திரம்புரிந்து, உடனே அவளைப் புணர்வானன்றி அன்றுமுதல் மதுமாமிசபட்சணங்கள் முதலாகிய கெட்ட விடயங்களை யொழித்து காலங்கழித்துவந்தான்.

இந்தப்படியாக அசித்தன் தினமும் தன் மனைவியின் கொங்கையை ஆசித்து நேசித்துச் சிவலிங்கமாக விசுவாசித்துப் பூசித்துவந்தபடியால், பத்திமுதிர்ந்து பாபம் நசித்துப் புண்ணியம் அதிகரித்தது. அதாவது, தாமதகுணத்திற் கிடாகிய இரத்த மாமிசங்கள் திருமால் பாகமாகியதால், இவன் பூசைசெய்துவந்ததுள் இடபேதம் பலத்தின்கூறே திருமாலின் திருவுள்ளத்தில் படீகரமானான். உடனே அசித்தன் திருத்துழாய் மாலையணிந்து பாற்கடலில் ஆதிசேடன்மீது யோகநித்திரைசெய்யும் திருமாலின் சித்தத்திலிருந்து எவ்வர்னமுடைய சருவலட்சணத்தோடும் கூடி, மறுபடியும் சென்மமெடுத்தபடியினாலே இவனுக்கு சித்தசன்என்ற திருநாமம் புகன்று தென்றல்காற்றைத் தேராகவும், அதில் மச்சக்கொடியும் விளங்க, கரும்புவில்லும், ஐந்து புட்பபாணமும், மதிக்குடையும் கொடுத்து உலகெங்கும் சஞ்சரிக்கும்படி மாயவனருள் புரிந்தார். அந்தப்படியே மன்மதன் சஞ்சரித்துக்கொண்டு புருடர்கள் மீதும்வனிதைகள்மீதும் மலர்க்கணைகளை ஏவிக்காமத்தை யுண்டாக்கிச்சகிக்க முடியாத விரகதாப முண்டாகச் செய்துகொண்டிருந்தான். இவனுக்கு மன்மதன் என்றுபெயர்.

## இரதி உற்பத்தி.

ஸ்ரீகைலாசபதியாகிய சிவபெருமான் இடப்பாகத்தமர்ந்தொளிரும் பார்வதாதேவியான நமதன்னை ஒருநாள் தனதுதோழிகளு

டன்கூடிக் கலியாணமண்டபத்தின் சித்திரங்களைப் பார்க்கக்கரு திச்சென்று, வழியிலிருக்கும் பூங்காவனத்தில் சிறிதுநேரம் விளையாடி, அன்னத்தைப்போல நடந்து வேடிக்கையும்அழகும்வாய்ந்த மண்டபத்தினுள் பிரவேசித்து, முத்து, கோமேதகம், வைரம், புட்பராகம், நீலம், வைடூரியம், பச்சை, செம்பு, மாணிக்கம் என்று சொல்லப்பட்ட நவரத்தினங்களையும் பொருத்தித் தங்கத்தினு லிழைத்து மகாவுன்னத மாகவும், சித்திர விசித்திர மாகவும்,காந்த மானது ஊசியைக் கவர்வதுபோல, பார்ப்பவர்கள்மனதைக் கிர கிக்கத் தக்கதாயும் விளங்கும் அம்மண்டபத்தின் அலங்காரத்தை ப்பார்த்துக்கொண்டே வருகிறபோது, அங்கு வகுத்திருக்கும் நிலைக்கண்ணுடியினிடமாக மின்னற்கொடியைப்போல பிரதிபிம்பங் காணப்பட்டபடியால், பார்வதிபிரமித்து, சற்றுநேரம் நிதானித்து மறுபடியும் அந்தக்கண்ணுடியைப் பார்க்கத்தன்னுடைய உரூபமென்றெண்ணித் தன்வடிவழகைத் தானே அம்மட்டிற் காணுதவளாகையால் மறுபடியும் கண்ணுடி முன்னின்று தன்னுடைய சௌந்தரியத்தைத் தானேபார்த்து மோகித்துத் தனக்கு நிகரானசுந்தரவதிக ளில்லையென்று இறுமாப்படைந்திருப்பதைச் சிவபெருமான் அறிந்து பார்வதியின் கருவத்தை யடக்கும்படி மனதில் நினைத்தார். உடனே சாமுத்திரிகா லட்சணத்திற் சொல்லியவண்ணம் உரூபரேகை சௌந்தரியங்கள் பார்வதியைப்போல அமைந்த பெண்ணொருத்தி உதித்துப் பார்வதியின் முன்வந்துபணிந்து எழுந்து நின்றனள். அப்பெண்ணைப்பார்த்து 'இதுவென்ன ஆச்சரியம்' நமக்குநிகரான லட்சணம்வாய்ந்த பெண்கள் உலகத்தில் கிடையாதென்று அகமடைந்த உடனே நம்மைப் பங்கப்படுத்தும் நிமித்தம் சகலலட்சணமும் வாய்ந்தஇப்பெண்ணுதித்தனள். "இதுசிவத்தின் செயலன்றி வேறில்லை" யென்று பயமும் அச்சமும் நாணமுமடைந்தவளாகி, சித்திரவிசித்திரமாகிய கலியாண மண்டபத்தைவிட்டு, அப்பெண்ணை யழைத்துக்கொண்டு, சந்திரசேகரரிடம்வந்துபணிந்து, நடந்த உண்மையைச்சொல்லி "எமதாண்டவனே! அடியாள் கருதியபிழையை மன்னித்து காக்கவேண்டு" மென்று வேண்டவும், கங்காதரமூர்த்தியானவர் புன்னகைபுரிந்து பார்வதியைநோக்கிச் சொல்லுகிறுர்.

"கேளாய், தேனையொத்த இனியமொழியையுடையமானே! கலியாணமண்டபத்தில் பொருந்திய நிலைக்கண்ணுடி நிழலில் நினது சுந்தரத்தைக்கண்டு நீயே பிரமித்தஅந்த நிமிடத்திற்றனே இவ்வழகியபெண்ணுதித்த படியினலேயும்,சாமுத்திரிகா லட்சணம்வாய்ந்த

இப்பெண்ணுக்கு நிகரான கன்னிகைகள் உலகத்தில் ஒருவருமில்லாததாலும் இக்கன்னிகைக்கு இரதியென்ற நாமமிட்டேன் இன்னுஞ் சிலவருடத்தில் இப்பெண்ணால் உலகத்துக்கு நன்மையான காரியம் ஒன்று ஆகவேண்டியிருப்பதால், நானே நின்னுள்ளத்திலிருந்து இப்பெண்ணை பிறக்கச்செய்தபடியால் இக்குற்றம் நின்னாற் செய்யப்பட்டதன்று இதற்காக நீயஞ்சவேண்டாமென்று சொல்லி உமையவளுக்குண்டாகிய பயத்தைப் போக்கினார்.

பின்புபார்வதி தன்புதல்வியாகிய இரதியை மிகவும் அன்புடன் பாதுகாத்துவந்தனள். இங்கிப்படி இரதிதேவி செல்வமாய் வளர்ந்துவர, திருப்பாற்கடலில் ஆதிசேடன்மீது பள்ளிகொண்ட மகாவிஷ்ணுவானவர் தன் சித்தத்தில் பிறந்தபுல்வனாகிய சித்தசனுக்கு மணஞ்செய்விக்கும் நிமித்தம் யாருடையபெண்ணை இவனுக்கு மனைவியாகச் செய்கிறது, இவனோ மிகவும் அழகுடையவன்; இவனழகுக்குத்தக்க பெண்ணெங்கிருக்கிறாளென்று ஆலோசித்துமுடிவில் தன் தங்கையாகிய பார்வதியின் புதல்வி இரதிதேவியே இவனுக்குத்தகுந்த நாயகியாமென்றும், அவளுக்குத்தகுந்த நாயகன் இவனேயென்றும் தன்மனத்தில் நிச்சயித்துக் காலத்தை எதிர்பார்த்திருந்தார். அங்கே கைலையங்கிரியில் ஒருநாள் சிவபெருமானும் பார்வதியும் உல்லாசமாக இருக்கிறபோது பார்வதிதன் கணவனாகிய முக்கட்பிரானைநோக்கி, "ஓ-சுவாமி! நமது புதல்வியாகிய இரதிதேவிக்குப் பருவகாலம் சமீபித்தமையால், இவளுக்குத்தக்க அழகுவாய்ந்தபுருடன் இவ்வுலகத்தில் யாரிருக்கிறார்கள்? இப்பெண்ணை யாருக்கு மணமுடிக்க யாசித்திருக்கிறீ" ரென, அதற்கு அரவாபரணன் பார்வதியைநோக்கி, "களங்கமற்ற என்னுளத்திற்கினிய இளமைதங்கிய கிளிமொழியே! கேளாய்! ஆயிரத்தெட்டண்டங்களிலும் தனக்கு நிகரான வடிவினையுடைய புருடர்கள் ஒருவருமில்லாத ஒப்பற்ற திவ்விய தேககாந்தியையுடைய சித்தசனென்று சொல்லப்பட்ட குமாரன் ஒருவனிருக்கின்றான். அவனாரெனில், நின்தமையனாகிய விஷ்ணுவின் சித்தத்திலுதித்தவன். அவனுக்குத் தகுந்தவளன்றி, நமதுபுதல்வி மற்றவர்களுக்கு ஈடானவளன்று. ஆதலால் சீக்கிரத்திற்றானே நமதுபுதல்வி அவனுக்கு மனைவியாவாளென்று, சொல்லிக் கொண்டிருக்கையில் பரந்தாமன் கருடவாகனாரூடராகி, பஞ்சாயுதங்கள் விளங்க, மார்பிற் கௌத்துவாபரணந்துலங்க, அங்கெழுந்தருளி, வருவைக்காகுஞ் சில நன்மொழிபகர்ந்து, இரதிதேவியை மன்மதனுக்குத் தந்து மணம்புரிவித்து மனோரஞ்சித புரமொன்று நிருமித்து அதிலவர்களைக்குடியேற்றி சுகித்தி

ருக்கும்படி வாழ்த்தித் தங்கள் தங்களிடஞ் சேர்ந்தார்கள். பின்பு மன்மதனும் இரதியும் மனமொத்து வாழ்ந்து சுகித்திருந்தனர்.

## குபேரன் உற்பவம்.

குபேரனென்பவன், ஆதிபிரம சந்ததியாராகிய மகாதவசிரேட்டமுற்ற புலத்திய மகாமுனிவரது புத்திரராகிய வச்சிரவாகுக்கும், இவரதுபாரியையாகிய இயக்கமாது சிரோன்மணிக்குங்குமாரராகியவதரித்து தேவர்கள் வேண்டுகோளால் குதிரை வாகனத்தையும், யானைக்குறியையும் பெற்று, அளகாபுரிக் கிறைவனாகி சித்திரரேகையை மணம்புரிந்து அட்டதிக்குப் பாலகர்களில் ஒருவனாய் வடதிசையைக் காவல்பூண்டிருப்பவன்.

இவனது மாற்றாந்தாயாகிய கேகினியென்பவளிடமாகப்பிறந்தவர்களே இராவணன், கும்பகன்னன், விபீடணன், சூர்ப்பனகை முதலியவர்கள்.

## கின்னரர் கிம்புருடர் உற்பவம்.

மேற்படி புலத்தியமாமுனிவரது புத்திரர்களே கின்னரர் கிம்புருடர் என்பவர்கள்.

## அட்டவசுக்கள் உற்பத்தி.

அட்டவசுக்களென்பவர்கள்:-அனலன், அனிலன், ஆபற்சைவன், சோமன். தரன், துருவன், பிரத்தியூமன், பிரபாசன் என்னும் எண்மருமாம். இவர்கள் கிருது என்னும் பிரமன்புத்திரன் மக்கள் நால்வரில் தேவலருக்குப் பிரசாபதியுதிக்க, அவனிடமாக அவனது தூமிரை, புத்தி, மனசுவனி, இரதை, சுசனை, சாண்டிலி பிரபாசலைஎன்னும் மனைவிகளில் பிரபாசலைக் குமாரர்களாகத் தோன்றினவர்கள்,

## கந்தருவர் உற்பத்தி

மேற்படி சோமனென்னும் வசுவுக்கும், மங்கையென்பவளுக்கும் புரதை யென்பவள் தோன்றி, பதினொருகுமாரர்களைப் பெற்றனள். அப்பதினொருவருமே கந்தருவரெனப்பெற்றனர்.

## முனிகாட்டேரிகள் உற்பவம்

வேதவியாசரின் கட்டளைப்படி பாண்டவர்களில் நடுப்பிறந்தோனாகிய அருச்சுனன் செய்ததவத்துக்கு மகிழ்ந்து, சிவபெருமான் மேலும் அருச்சுனன் மனோதிடத்தை யறியும்பொருட்டும், மூகாசுரனைக் கொல்லும் நிமித்தியமும், சகலகணங்களையும் வேடு

வர்களாகவும், வேதங்களை நாய்களாகவும், அச்செய்கைக்குரிய வலை முதலியவைகளை யெடுப்பித்துக்கொண்டு தான் வேடுவர்களுக்கெல்லாந் தலைவராகி, சடைகளைப் பின்னலாக்கிப் புறத்திற்றொங்க விட்டு நெற்றிக்கண்மறைய மயிலிறகினுலும், பலபலபறவைகள் இறகினுலும் பலகரைகளும், வக்காமணிகளும் புனைந்த மகுடத்தை முடித்து, செவியின் குழைகளில் திவ்வியமலர்களைச் செருகி, நீலத்தைப்போல ஒளிதங்கிய கண்டத்தில் பலகரைக்கோவைகள் மிகவும்புனைந்து தந்தமணிமாலைகளை மார்பிற்றரித்து, புயங்களில் வாகுவலயங்களைத் தரித்து முன்கையில் தந்தகங்கணங்களைச்சூடி, இடையில் புலித்தோல் சல்லடம்பூண்டு, அதின்மேல்புலித்தோல்கச்சையிறுக்கி வரிந்துகட்டி, இரண்டு துடைகளிலும் பலகரைமாலைகள் புரளும்படி புனைந்து, முழங்கால் வருந்தாதிருக்கத் தோலணிந்து உடைவாளை யிடையிற்றரித்து, திருவடிகளில் பாதரட்சையையணிந்து, வீரகண்டாமணி காலிற்றரித்து, அம்புப்புட்டில் முதுகிற்றூங்கி கறுத்தத் திருவுருவத்துடன் வெளிப்பட்டார். உமையவளோ கறுத்த அளகபாரத்தைச்சீவிப் பின்னி, குறிஞ்சி நிலத்துக்குரிய கோட்டுமலர்களை முடித்துத் தந்தக்குழைகளைக் காதிலணிந்து, கழுத்தில் பலகரைமாலைகளைப்புனைந்து, முன்கையில் தந்தக்கடையங்களணிந்து, காலில்தந்தவளையல்களையணிந்து, பலகரைமாலைகளை இடையிற்புனைந்து, பரிமளம்பொருந்திய தழைகளையும் மலர்களையுஞ் செவிகளிலணிந்து, தனங்களிரண்டிலும் பால்சுரந்து விம்ம, சூரபன்மன் முதலான அசுரர்களையுங்கொன்ற வேலாயுதக் கடவுளை இளங்குழந்தையாக்கிக் கரத்திலேந்தி மிகுந்த கறுத்தரூபத்துடன் கருப்பாடையைத் தரித்து, வேட்டுவத் தலைவர்பின் போகிறபோது அக்காட்டிலுள்ள வேடர்களும், வேடமாதர்களுங் கண்டு வியப்புற்றுப் பின்றொடர்ந்து சென்று, வேட்டுவத்தலைவன் பன்றியைக்கொன்றதும் பின்பு அருச்சுனனுடன் போராடி மறைந்து போயினதையும் பார்த்து பிரமித்து. வேட்டுவத்தலைவரை முனீசுரனென்றும், அவர்மனைவியைக் காட்டேரியென்றும் ஆசித்து விசுவாசித்து நேசித்துப் பூசித்து வருகிறார்கள். இனனுஞ்சிலர் குலதேவதைகளென்றும், சிலர் அபிமானத்தினாலும் பூசைபோட்டு வருகிறார்கள்.

## சத்தமுனிவர் உற்பவம்

ஒருகாலத்தில் சிவனும் பார்வதியும் சம்பாடிக்கிறபோது சூரியசந்திராளிருவரும் எனது விழிகளென்ற மொழியைக் கேட்டுசந்தேகங்கொண்ட உமாதேவியானவள் உண்மையறிவேன் என்

றுஎண்ணித் தனது திருக்கரங்களால் பரமனது இரண்டு நேத்திரங்களையும் புதைத்தமாத்தில், பிரமவிஷ்ணுவாதி தேவர்கள் வசிக்கும் எல்லா உலகங்களும் மற்றைய முனிகள் இருடிகள் முதல் சருவசீவ ராசிகட்கும் இரவுபகலென்றறிதற்கரிதாய் இருள்மூடி எல்லாக்கிரியையும் தவறி சருவாண்டங்களிலும் முறையிடுகின்ற முறையை இறைகேட்டு, பரமசிவம்கோபித்து, "ஓ-பார்வதி, என்னபாவம் செய்தனை. இப்பாவம் நீங்குமாறு பூலோகத்திற்சென்று காசிமுதலிய க்ஷேத்திரங்களின் புனலாடக்கடவா"யென ஆக்கியாபித்தவண்ணம், பார்வதிவருமளவில் காசிக்கடையில் க்ரமபோசனென்னும் பட்டணத்தின் கானவராசன் கண்டுமோகித்து வழிமறிக்கவும், பார்வதியானவள் கோபித்து "உயிர்பெற்றுப் பிழைக்கக்கடவா" யென, பலவாறுசொல்லியும் நீங்காதவனாகி, அடாமொழியைப்பகரவும் ஆயுதபாணியாகி யுத்தம் புரியவும் முன்னம் மிக்க தவமியற்றி, சிலவரம் பெற்றவனாகையால், தோல்வியடையானாயினன், பார்வதியாலானமட்டும் ஈடுகொடுத்துக் கடைசியில் தமது தமயனை நோக்கி "ஓ-பரந்தாமா ஆபத்பாந்தவா! நீ எங்ஙனமிருக்கின்றாய் நீயேனும் என்குற்றத்தைப் பொறுத்து இச்சமயம் மீட்காயா" வென்று தோத்திரம்புரியவும், மாயவன் ஓடிவந்து முன்னம் பலயுகங்களிலும் அரக்கரை மாய்த்தவாறு இக்கொடிய ரெழுவரையும் அரைநொடியில் மாய்த்து 'அம்மனுக்கு இன்றுமுதல் காவலாகக்கடவீ ரென்றாக்கியாபித்து தானும் இளயமுனியென் றவதாரமெடுத்து காளும்கார்த்திருக்கின்றனர்.

## சிவமுனிவர் உற்பத்தி

ஒருகால் கண்ணுவமகாமுனிவர் வைகுந்தமடைந்தகாலையில் திருமாலும், இலக்குமியும், மதியாதிருந்தமையால் இவர்கள் இறுமாப்பை ஒழிக்கும்பொருட்டு திருமாலை 'சிவமுனியாக ஊமர்போலவனத்திற் சஞ்சரிக்கக்கடவாய்' என்றும் இலக்குமியைப்' பெண்மானாகச் சஞ்சரிக்கக்கடவாய் என்றுஞ் சபித்தனர். அவ்வண்ணமே திருமாலும் இலக்குமியு முதித்தனர். மற்றச் சரிதத்தை வள்ளியம்மை உற்பவத்திற்காண்க.

## வயிரவர் உற்பவம்.

இந்த வயிரமூர்த்தி சிவபெருமானது சுவாசத்தி லுதித்தவர். இவர் சிவனுக்கு மூன்றாம் புத்திரர். தக்கன் யாகத்தை யழிக்கும்படி யனுப்பப்பட்டவர். இவருடைய நாமம் வயிரவன், ஆபதோத்தாரணன், ஆரியை தனயன், கருங் குதிரையாளியென்றும்

இன்னும் இவருக்கு சில நாமங்களும் உண்டு. தேவர்களுடையகருவத்தையும், பிரமனுடைய கருவத்தையும் அடக்கும்படியானவர் மேலும் பிரமனுடைய தலைகளில் ஒன்றைக் கிள்ளிப்போட்டவர் இவ்வுலகத்தை ஒருகால் அழிக்கும்படி கொக்கரித்துக்கொண்டு வருபவர். அவருக்கு வாகனம், நாய் என்றறியவும்

## ஐயனாரப்பன் உற்பவம்.

அரக்கர்குலத்தி லுதித்த பதுமாசுரனென்பவன் சிவனைக் குறித்து, பஞ்சாக்கினி மத்தியிலிருந்து தவஞ்செய்ய, அவனது தவசுக்கிரங்கி,உமையவள் சமேதராக இடபவாகனத்தின்மீதேறிச் சென்று சிவபெருமான் காட்சிகொடுத்து, அவனைநோக்கி "உனக்கென்னவரம் வேண்டும் கேளாய்தருகிறே" னெனப் பதுமாசூரன் மகிழ்ந்து "ஓ சுவாமி! எனது வலதுகரத்தை எவன் சிரத்தின்மீது வைத்தபோதிலும் அவர்கள் அந்தக்கணமேயெரிந்து பற்பமாய்ப் போகும்படியாய் வரந்தரவேணுமென்று துதிக்க, சிவபெருமான் மகிழ்ந்து "நீ கேட்டவண்ணம் ஆகக்கடவ"தென்று வரமீந்தனர். அவ்வரத்தைப்பெற்ற கொடியதுட்டனாகிய அரக்கன் சிவபெருமானைநோக்கி "ஓ சுவாமி! இதை பரிட்சை செய்யும்படி உமது சிரத்தின்மேல் என் கையைவைத்துப் பார்க்கிறே"னென்று நெருங்கிவந்தான். இதைக்கண்ட சங்கரன் பயந்து ஓடி ஐவேலங்காயில் புகுந்து ஒளித்துக்கொள்ள, இந்த விருத்தாந்தத்தை யறிந்தமகாவிஷ்ணுவானவர், மோகினி உருவமெடுத்துத் தன்னைப் பார்க்கின்றவர்கள் மனதைக் கொள்ளைக் கொள்ளும்படியான சுந்தரமும் அழகும்வாய்ந்து பதுமாசூரன்முன் தோன்றினர். இம்மோகினியைக்கண்ட பதுமாசூரன் காமாந்தகாரனாகி அனலிடுமெழுகுபோலுருகி, மோகினியைக் கிட்டித் தன்னைச் சேரும்படி மிகவும்வேண்டிக்கொள்ள திருமால் அசுரனைநோக்கி "ஓ அசுரனே! நினது தலைதேகம் முதலான அவயவங்களின்மீது காகங் கழு முதலான பறவைகளின் எச்சம் மிகுந்து அசுசியாயிருப்பதால், நானுன்னை எப்படி பிரியத்துடன் தழுவிக்கொள்ளுவேன்? எனக்கு மெத்தவும் அசங்கியமாயிருப்பதால், நீ சென்று எந்தக்குளத்திலாவது முழுகிக்குளித்து வருவையேயாகில், உன்னையான் சேருவதற்குத்தடையேயில்லையென்று மொழிந்த மோகினியின் வசனங்களைக்கேட்ட அசுரன் அக்கருத்துக்கிசைந்து 'நானஞ்செய்து வருகிறே'னென்று சொல்லிப்போனான். உடனே மோகினி வேடங்கொண்ட பகவான் குளங்களிலும் நதிகளிலும் கொஞ்சமேனும் சலமில்லாமற்படிக்குச் செய்துவிட்டார். அசுரனேவெனில், மிகுதூரந்திரிந்து இளைத்துத்

தண்ணீர் அகப்படாமல் திரும்பிவந்து மோகினியைக்கண்டு ஓ மாதே எங்குந் தண்ணீர் அகப்படவில்லை. நானென்ன செய்வேன் காமாக்கினியானது என்னை வாட்டுகிறதே! இந்தச்சமயம் என்னைத் தழுவிக்கூடாவிடில், எனது பிராணன் நிற்காதென்று வேண்டிக்கொள்ளும் அசுரனைநோக்கி மோகினிவேடம்புனைந்த மகாவிஷ்ணுசிரித்து "அசுரேந்திரா! மாட்டுக்குளம்பில் நிற்கும்சிறிதுதண்ணீராயினும் எடுத்துத் தலையிற்பூசி, துடைத்துக்கொண்டு வருவாயாகில், உனக்குண்டாகிய காமநோயைத் தணியச்செய்கிறே"னென, அவ்வண்ணமே அசுரன்சென்று மாட்டுக்குளம்பு சேற்றில் புதைந்து அதில் தங்கிய நீரையெடுத்துத் தன் தலைமீது பூசிக்கொண்ட மாத்திரத்தில், சிவனிடத்தில் பெற்ற வரத்தின்படிதானே எரிந்து பொரிந்து சாம்பலாயினன். அதையறிந்து மகாவிஷ்ணு தன் சுயரூபமெடுத்துக் கொண்டுபோய் ஐவேலங்காயினுட்புகுந்து ஒளித்திருக்குஞ் சிவனையழைத்து 'பதுமாசூரன்மடிந்து சாம்பலாயினன் இனி நீர் வெளியில்வாரு'மென்றழைக்கச் சிவபெருமான் ஐவேலங்காயைவிட்டு வெளியில்வந்து மகாவிஷ்ணுவைக்கண்டு 'பதுமாசூரன் எப்படி மடிந்தா'னென்று வினவ, சிவபெருமானை நோக்கி 'அவன் கைக்கொண்டே அவன் மடிந்தா'னென, அதெப்படி மடிந்தான்? அதின் விவரத்தைச் சொல்லுமென, விஷ்ணுதேவன் கேட்டு தான் மோகினியவதாரஞ் செய்து அவனை மோகிக்கச் செய்து அவனை வஞ்சித்துகொன்ற விவரத்தை ஒன்றொளியாமற் சொல்லக்கேட்ட சிவபெருமான் மகாவிஷ்ணுவை நோக்கி 'யான் காணும்படி மோகினியுருவம் எடுக்கவேண்டு'மெனச் சொல்லிய சிவனது இட்டப்படி பகவான் மோகினியுருவமெடுத்துத் தோன்றினர். அவ்வடிவத்தைக்கண்ட சிவருபெமான் மோகலாகிரிகொண்டு மெய்சோர்ந்து சற்றுநேரத்தில் தெளிந்து மோகினியைக்கூடினமாத்திரத்தில் அத்தத்தில் ஒரு குழந்தைபிறக்க, அப்புத்திரன் ஹரிக்கும்ஹரனுக்கும்புத்திரனாகியதால் அரியரபுத்திரனென்று பேரிட்டு அருள்புரிந்து உலகத்தோர் படைக்கும் பூசைபொங்கல்களைவாங்கிப் புசித்திருமென்று வாழ்த்திச் சென்றார்கள். அவர்கள் சொல்லிய வண்ணமே தென்னாட்டுக் கிராமங்கள்தோறும் வசிக்கும்குடிகள் அங்ஙங்கு கோயில்கட்டிப் பூசை பலி பொங்கலிட்டு வருகிறார்கள். ஐயனாரும் அப்பூசைபலி பொங்கல்களை ஏற்றுவருகின்றனர்.

இவர் அரிக்கும் அரனுக்கும் பிறந்தவராகையால் அரியரபுத்திரரெனப் பெயர்பெற்றனர். இவருக்கு சிவாஞ்ஞையால் உருத்

திரலோகாதிபதியாய் உருத்திரகணங்களும் மகாளன் முதலியபூத கணங்களும்புடைசூழ, வெள்ளையானையின்மீது ஆரோகணித்து, பூரணி, புட்கலையென்னும் இருமனைவியர்கள் இருபுறமும் எழுந்தருளியிருக்கச்செய்து சர்வலோககாரணராய் நித்தியானந்தபரம சொரூபியாயிருப்பார். இவர் முன்னொருக்கால் சூரபன்மன் முதலிய அசுரர்கொடுமைக்கஞ்சி மூங்கிலுருக்கொண்டிருந்த இந்திரனுக்கும் மற்றோருக்கும் கிருபைபுரிந்து அரக்கர்களை நாசஞ்செய்து வானவரை இரட்சித்துள்ளார்.

## காத்தவராயன் உற்பத்தி

ஸ்ரீ கயிலையங்கிரி வாசராகிய சிவபெருமான் பதினான்குலோகங்களுக்கும் படியளந்துவிட்டுத் திரும்பி, கயிலாயஞ்சேர்ந்தபோது உமையவள் சிவனைநோக்கி "சுவாமி! தாங்களெங்குப்போய் வருகிறீ"ரென்றுகேட்க, பரமசிவன் பார்வதியைநோக்கி "அடிமாதே! அண்டபிண்டபிரமாண்டமெனும் மூவுலகங்களிலும் உள்ள சகலசீவராசிகளுக்கும் படியளந்து வருகிறே"னென, ஈச்சுரி சந்தேகித்து, சிவனது மகிமையுணராமல் ஒரு சிமிளில் எறும்பொன்றைப்பிடித்தடைத்துவைத்து மறுநாள் காலையில் சிமிளைத்திறந்து பார்க்க, அவ்வெறும்புவாயில் நொய் கவ்விக்கொண்டிருப்பதையறிந்து அஞ்சிமிகவும்பயந்து பரமன்முன்னம்வந்து தண்டனிட்டெழுந்து கைகட்டிவாய்பொத்தி "சுவாமி! தங்களுக்குத் தெரியாமல் ஒரு சிற்றெறும்பைப்பிடித்துச் சிமிளிலடைத்து மற்றுநாள் சிமிளைத்திறந்துபார்க்க, அவ்வெறும்பு தன்வாயில் நொய்கவ்விக்கொண்டிருந்தபடியால் தங்கள் திருவடிகளுக்கு அபசாரஞ்செய்த பாவியாகினேன். இவ்வபசாரம் தீரும்பொருட்டு தக்க உபாயஞ்சொல்லவேண்டும், சுவாமி!" என்று வேண்டிக்கொள்ள, அப்போது பரமசிவன் கோபித்து "பெண்ணே! நீ நந்தவனம், பூந்தோட்டம், குளமுதலானவைகளை யுண்டுபண்ணுவையேயாகில், இந்தக்குற்றம் உன்னைவிட்டு நீங்கு"மென,அவ்வண்ணம் பார்வதியானவள் யாவற்றும் உண்டுபண்ணி இதற்குக்காவல் தக்கமனிதன் வேண்டுமென்று வேண்ட, சிவபெருமான் மனதிலுன்னிய மாத்திரத்தில் ஒருசிறுவன்தோன்ற "நீஇத்தோட்டங்காவல்செய்ய வுதித்தபடியால் இன்றுமுதலுனக்குக் காத்தவராயனென்றபேர் வழங்கக்கடவ" தென்றும், "இதைச்சீராய்ப் பாதுகாப்பா" யென்றுசொல்லிச் சிவன் போயினார். அந்தப்படியே அவன் காத்துவருகிறநாளில் மலர்கள் குறைந்திருப்பதை யுணர்ந்து சத்தகன்னிகள் அங்குவந்து ஆடைகளைந்துவைத்து குளத்திலிரங்கிக் குளித்துக்கொண்டிருக்கிறபோது

காத்தவராயன்சென்று இளையகன்னியின் ஆடையை யெடுத்துக் கொண்டு சரக்கொன்றை மரத்தின்மீதேறி ஒளித்திருந்தான், கன்னிகள் நீராடிக்கரைக்குவந்து ஆறுபேர்கள் ஆடையுடுத்திக்கொள்ள, இளையாள் தன்னுடையைக்காணுமல் தவிக்கக்கண்டு மற்றவர்கள் சிவபெருமானுக்கு அறிவிக்க, அவர் சினங்கொண்டு காத்தவராயனை யழைத்து "பிடியடாசாப" மென்றபோது, உமையவள் காத்தவராயனை நோக்கி "வேகாதசுடலையில் சாகாதிருப்பா"யென அப்போதுபரமன் சினங்கொண்டு "என் சாபத்தை நீ-யழித்தபடியால் இன்றுமுதல் என் இடப்பாகஞ்சேராமல் அலகையாய், பேயாய், இருசியாய்போகக்கடவா" யென்று சபித்து, இந்தச்சாபம் காத்தவராயன் கழுவிலிருக்கும்போது தீரு" மென்றுசொல்லிக் கைலையங்கிரிக்குப் போயினர். அப்போது பார்வதி காத்தவராயனை நோக்கி "நீ சென்று நாலுப்பிறப்புப்பிறந்துவந்தால் உனக்கு வரந்தருகிறே" னென்றுசொல்லி அவனுக்கு எமதூதர்களையும் பூர்வக்கியானமும் தந்து பார்வதிபோயினள். உடனே காத்தவராயன் வடதிசையிலிருக்கும் பிள்ளையார்கோயிலுக்குப் போயிருந்து அங்குத் தண்ணீரெடுக்கும் பிராமணத்தியின் கண்கள் முன் எலுமிச்சம் பழம்போலே தோன்ற அப்பிராமணத்தி எலுமிச்சம்பழத்தைப் புசித்து கருப்பமாகத் தண்ணீரில் விழுந்திறக்கத் திடங்கொண்ட காலத்தில் அப்பிள்ளை வயிற்றிலிருந்து பூமியில்வீழ, அவளக்குழந்தையைக் கோரைப்புல்லின்மேல்வளர்த்தி, தன்மனையிற்சேர்ந்தாள். அப்போது பறைச்சியொருத்தி குழந்தையையெடுத்துப்போய் தன்வீட்டிலுள்ள கன்றின்தோல்மேல் கிடத்திவிட்டு நெருப்புக்கொண்டுவரப் போக, உடனே குடிசைபற்றி யெரியக்கண்டோடி வந்து, பிள்ளையை யெடுத்துக்கொண்டுபோய், பிள்ளையார்கோயிலில் வளர்த்திவிட்டுத் தன்னிருப்பிடம் போனாள். பின்பு பூர்வக்கியானத்தினால் சிவப்புடையானிடம் வளர்ந்து தன்தாயாரைத்தேடிவந்து தாயாரால் எரிந்து சாம்பராகிப்பின்பு, சீரைத்தண்டாகி, அம்மைநெற்றியிலுலாவி, மறுபடியும் அம்மனுலெரிந்து, மூன்றுவது அம்மன் கையிற்பிறக்க, ஆலம்விழுது ஊஞ்சல்கட்டி அதில் பிள்ளையைவளர்த்தித் தாலாட்ட, கொல்லிமலைக்கன்னியர்கள் குழந்தையை யெடுத்துக்கொண்டுபோய் வளர்த்துவர, பிள்ளை கன்னியர்களிடம் விடைபெற்றுவந்து நமஸ்கரித்து ஆசிபெற்றுவன வேட்டையாடச்சென்று பந்துவிளையாடிவந்து, சப்பாணி அம்மையப்பனுக்குக் கால்கரங்கள் தன் அன்னையாலுண்டாகச்செய்து அவனையங்குகாவல்வைத்து, மறுபடியும் மலையாளஞ்சேர்ந்து ஜோகிவேடம்புனைந்து தொட்டியச்சின்னான்வைத்தமோடியை ஏடுத்து

சின்னானையழைத்துக்கொண்டுவந்து தாயாரிடஞ்சேர்த்து அவனுக்கு அன்னம் படைத்து மறுபடியும் சின்னானுந்தானும் வேட்டையா டும்போது காத்தவராயன் ஓடையைக்கண்டு அதின் விருத்தாந்தத் தைச் சின்னானலறிந்து, மச்சவுருவமெடுத்துச்சென்று ஆரியமாலை யைக்கண்டு அவள்கூந்தலால் கட்டுண்டு சின்னானைநினைக்க, அவன் கருடனாகப்பறந்து காத்தவராயனைத் தூக்கிக்கொண்டு மணற்பா ங்கின்மேல்வைத்து, கட்டுகளையவிழ்த்துவிட, காத்தவராயன் நிச ரூபங்கொண்டு அக்கூந்தலையளந்து றுபத்துநான்குபாகமிருக்கக் கண்டு மிகுந்தமோகங்கொண்டு ஆரியமாலையைச் சிறையெடுக்கக் கருதித் தன்தாயாரிடம்வந்துபணிந்து "ஆரியமாலையை சிறையெ டுத்துவரும்படி, நீ-விடைதரவேண்டு"மென்ன, அம்மன் "அவளோ பிராமணத்தியாகையால், நீ-யாசரிக்கவேண்டாம். அவளழகை எழுதிவருவையாகில் உபாயஞ் சொல்லுகிறே" னென, காத்தவரா யன் மாறுவேடம்புனைந்து சின்னரத்தைப் பலவிதராகங்களாலும் மீட்டுகிறபோது, அவ்வோசையை ஆரியமாலையானவள் கேட்டு தாதிகளைக் 'கின்னரக்காரனையழைத்துவாருங்க' ளென, தாதிகள் சென்று காண, உடனே தாதிகள் கண்களை அழித்துவிட்டு, சின்னா னையழைத்துத் தாதிகள்போகும்வழியில் படுகுழி வெட்டிவைக் கும்படி சொல்ல, அப்படியே அவன்படுகுழிவெட்டிவிட்டு அக்குழி யில்சாணங்கொட்டி சலம்விட்டுவைத்தான். அம்மார்க்கமாய் தாதி கள் சென்று படுகுழியில் விழுந்து கதறுகிறபோது, சின்னான் அவர் களை யெடுத்துவிட்டு, கண்கள் தெரியச்செய்து காத்தவராயனைக் காட்ட அத்தாதிகளனைவருங்கண்டு நெருங்கி, அவர்கள்வசம் ஓலை யெழுதி ஆரியமாலைக்கு அனுப்ப, அவ்வோலையை அவர்கள் கொ ளுத்திவிட்டு ஆரியமாலையைக்கண்டு அவளுக்குபசரித்திருக்க, காத் தவராயன் மறுபடியும் கின்னரம்வாசிக்க, ஆரியமாலைகேட்டுத் தா திகளை ஆக்கினைசெய்ய, அவர்கள் வேதியரிடத்திற்சொல்ல, வேதி யர்கள் காத்தவராயன் காலைப்பிடித்துக்கொண்டு வவ்வாலைப்போ லத் தொங்க, பிராமணர்களை பூமிமேல்விழத்தள்ளி தன் தாயாரை க்கண்டு உரைத்து விடைபெற்று, மாறுவேடங்கொண்டு சின்ன ரங்கைப்பிடித்துக்கடைவீதியிற்சென்று அங்கோரிடத்தில் படுத்தி ருக்க, பிராமணர்யாவரும்ஓடி அரசனைக்கண்டுரைக்க, அரசன்சேவ கரைக்கொண்டு கின்னரக்காரனைப் பிடித்துவரும்படி செய்ய சேவ கர்கள் காத்தவராயனைப் பிடித்துவந்துவிட, உடனே காத்தவரா யன் காசிக்குருக்கள் வேடங்கொண்டு வேதியர்களுக்கு ஆரூடஞ் சொல்லி, அரசனல் விலங்குபூட்டிக் காவலில்வைக்க, சின்னானைய ழைத்து விலங்கையவனுக்குபூட்டித் தான்வெளிப்பட்டு மாட்டுக்

சாரப்பையலைப்போல இருக்கிறபோது, அரசன்யானைக்கு அனேக காவலமைத்து இருக்க, காத்தவராயன் மூதேவியையேவிக்காவலர்களுக்கு நித்திரையுண்டாகச்செய்து யானையைத் திருடிக்கொண்டு போய் சாராயபூமியினிடத்தில் வைத்திருக்க, இராசனுங்காவலரும் யானையைத்தேடி வந்து பூமியினிடத்திருந்த யானையையும் காத்தவராயனையும் செவப்புடையான்கொண்டுவரும்போது, காத்தவராயன் அந்தயானையின்மீதேறிக்கொண்டு தாயாரிடம்வந்து ஆரியமாலையைச் சிறையெடுக்க விடைதரும்படி வேண்ட அம்மன் புத்திகளைச் சொல்லியுந் தடுத்துரைக்கும் மகனுக்குவெண்ணீறளிக்கப்பெற்று, ஆரியமாலைக்கு மங்கிலியந் தரித்துவர, அதை அவள் மனந் தாளாது உயிரை மாய்த்துக்கொள்ளப்போனபோது, அவளைக் கல்லாய்ச் சமைத்து, பின்பு காத்தவராயன செட்டிப்பெண்ணைச் சிறையெடுத்தும், கறுப்பழகியை மணந்து வல்லத்து மாங்காளிவனஞ்சென்று பூதங்களையனுப்பி ஆரியமாலையை யெடுத்துவந்து கொழுந்தாலை வங்குனிதல்லை யுங்களென்றுசொல்லி, தன் தாயாரிடம்வந்து ஆரியமாலையைச் சிறையெடுக்க விடைதரவேணுமென்று வெகுவாய் பிரார்த்தித்தும் அம்மன் தடைசெய்து முடிவில் காளியிடஞ் சென்றுயானால் இக்காரியம் உனக்கனுகூலமாமென்று சொல்லி விடைதர, அந்தப்படியே காத்தவராயன் காளிகோயிலின் முன்வந்து நின்று அவளாலேவிய தக்கை, தமரகம், காதோலை, சூலை முதலானவைகளைப்பிடித்து, சோளியில் போட்டடைத்து மறைவாகயிருக்கக் காளி உக்கிரகோபங் கொண்டுவந்து காத்தவராயனை எடுத்து விழுங்கிவிடப்பின், காத்தவராயன் காளியிடம் வரம்பெற்றுக் குழந்தைவடிவாய் வெளிப்பட்டு, சத்தகன்னிகள் வனம் புகுந்து அவர்களுடன் பலவிதப் பாடுபட்டு, பின்பு கூட்டுண்டு முடிவில் கழுவேறி மூன்று கன்னிகளும் ஏங்கிப் புலம்புகிறபோது, காத்தவராயன் இனியில்லாத கட்டமடைந்து வாடித் தளர்கிறகாலத்தில், பரமசிவன் சகல தேவர்களுஞ்சூழப் பூதகணங்களுடன் வந்து காத்தவராயனையும் பார்வதியையுங்கண்டு மிகவுந் துயரமடைந்து, காத்தவராயனைக் கழுமரத்தைவிட்டிறக்கி, பார்வதியின் சாபத்தையும் போக்கி, தன் இடப்பாகத்தில் பார்வதியைத்தாங்கி காத்தானைவாழ்த்திச் சுகமுடனிரு என்றுசொல்லிக் கைலையங்கிரியை யடைந்தார். பரமசிவத்தின் உத்தரவுபடி காத்தவராயன் திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்து ஆரியமாலை உகந்தழகி அன்னமுத்துமாது கறுப்பழகி என்னும் இந்நான்குவனிதைகளுடன்கூடி இன்பாசமூண்டு சுகித்திருந்தான்.

## சாளக்கிராம உற்பத்தி.

இஃது ஓர் ஊரின்பெயர். இது நாவலந்தீவின் கடலோரத்தில் வடதிசையிலிருக்கிறது. *இவ்வூரில் முன்னொருகால் திருமால் மோகினியுருக்கொண்டு ஒரு விருட்சத்தின் நீழலில் சிவபெருமானை மணந்தகாலையில் இவ்விருவரும் காரியுமிழ்ந்தனர். அவ்வெச்சில் பெரிய சலமாய், பிரவாகித்துச் சென்றது. அதன்பேர்கண்டகி நதியெனக்கூறுவர். அந்நதியினுள்ளும்புறமும் வச்சிரநந்தியென்று கூறும் குளவிகள் பொன்னிறமா யுற்பவித்து, சக்கரரேகையுடைய வைகளாய் அந்நதியின் மண்ணில் கூடுகளைக் கட்டிக்கொண்டு சிறிதுகாலம் வசித்து இறக்கும் பின்னர் அக்கூடுகளைச்சிலர் எடுத்துக் கொண்டுபோய்ப் பொன்னைபிரித் தெடுத்துக்கொண்டு அக்கூடுகளில் காணப்படும் சக்கரரேகைகளைத் திருமாலின் குறிப்பாகத் தாபனஞ்செய்து பூசிக்கின்றார்கள். அது சாளக்கிராமம் என்னும் கிராமத்திற் காணப்படுதலால் அக்குளவி கூண்டிற்கும் சாளக்கிராமமெனக்கூற நேர்ந்ததுபோலும். சிலர் உயிரோடுங்கொண்டுவந்து சிலதினம் வைத்திருக்கின்றனர். அனேக யாத்திரைவாசிகள் கொண்டுவந்து ஆங்காங்கு விற்றும் சீவிக்கின்றனர்.

## மதுரைவீரன் உற்பத்தி.

காசிதேசத்தையாளும் துளசியகாராசன் கற்பூரவள்ளியைக் கூடிச் சுகத்துட னிருக்கும்போது, பிள்ளையில்லாக் குறையால் தானதருமங்களைச்செய்து ஓர்ஆண்மகவு உதிக்க, ஆனந்தமடைந்து சோதிடர் சாத்திரங்களைச் சோதித்து குடிகோத்திரம் அரசெல்லாம் இவனால் நாசமாகுமெனத் தெரிந்து தாதிகளால் குழந்தையைத் தாம்பாளத்தி லேந்திக்கொண்டுபோய்க் காட்டில்விட்டுப் போயினார்கள். அந்நாட்டுக்கருகிலுள்ள கிராமத்தில் வசிக்குஞ்சக்கிலிச்சியொருத்தி ஆவாரம்பட்டைக்காகக் காட்டிற்சென்று பட்டைகளைச் சேகரித்துவருகிறபோது, பாலனைக்கண்டு ஆனந்தமடைந்து பொற்றும்பாளத்துடன் குழந்தையையெடுத்துக்கொண்டு வீடு சேர்ந்து சக்கிலியனுக்குக் குழந்தை கிடைத்த வரலாற்றைச்சொல்லக்கேட்டு ஆனந்தமடைந்து வீரனென்று பேரிட்டுவளர்த்து வருகிறகாலத்தில், வேவுகாரர்கள் அரசனைவணங்கி மாதிகச்சின்னான் வீட்டில் நமதுபிள்ளை வளருகிறானென்றுசொல்ல, அரசன் மாதிகச் சின்னானை அழைத்தபோது, அவன்பயந்து அந்நாட்டைவிட்டு சம்சாரத்துடன் பிள்ளையும் அழைத்துக்கொண்டு பொம்மணநாய்க்கன் தேசத்தையடைந்து அந்நாய்க்கனிடம் காவல் வேலைக்கமர்

---

* இச்சரிதையை ஐயனா ருற்பவத்திற் காண்க.

ந்து அவன் மகள் பொம்மியம்மாள் புட்பவதியாக அவளைக்காத்திருந்தான்.

பின்னர் மதுரைவீரன், தந்தையைநோக்கி இன்றைபதினம், காவலுக்கு யான் போகிறேனென்று விடைபெற்றுச்சென்றுபொம்மியம்மாள் குடிசைக்கருகில் நிற்க, அவன் மழையால் குடிசைக்குள் புகுந்து அவளை நயந்து கூடிமுப்பதுநாள் கடந்தபின்பு அரண்மனைக்குள் புகுந்து பொம்மியம்மாளை யெடுத்துக்கொண்டு திருச்சிராப்பள்ளியை நோக்கிச்சென்று காவேரியிலிருக்க, இங்கே பொம்மணநாய்க்கன் பொம்மியம்மாளையுங் குதிரையையுங்காணுமல் சேனைகள் சூழப் புறப்பட்டுவந்து ஆர்ப்பரிக்க, வீரன் வெளிப்பட்டுச் சகலசேனைகளையும் வெட்டியெறிந்து பொம்மணநாய்க்கனையுங்கொன்று அவனுக்குத் தீக்கடன் நீர்க்கடன்களனைத்தையும் முடித்துத் திருச்சிராப்பள்ளிக்குட்சென்று விசயரகுநாத சொக்கலிங்கவேந்தனிடத்தில் சிலநாள் போக்கிக் கிருட்ணப்பநாய்க்கர் மகளுடன்கூடி 'மாதத்திற்கொருதடவை வருவே' னென்று மொழிந்து இருக்கையிலே, மதுரையிலும் அழகர் கோயிலிலும் கள்ளர் உபத்திரவமிகுதியை விசயரங்கவேந்தனறிந்து வீரனை 'அங்கங்குள்ள கள்ளர்களைச் சங்கரித்து வாரு' மென்றுசொல்லி சிலசேனைகளையுங் கூட்டியனுப்ப, விடைகொண்டு பொம்மியம்மையுடன் சென்று மதுரையைச்சேர்ந்து திருமலைநாய்க்கரிடம் வரலாற்றைத் தெரிவித்து, கள்ளர்களைப் பிடித்து அடித்து கொன்றுவிட, ஒருநாள் நடுராத்திரியிலெழுந்து வெள்ளையம்மாள் வசிக்கும் அரண்மனைக்குள் புகுந்து பார்க்க, அவள் நித்திரையாயிருக்கையில் தூக்கிக்கொண்டு வெளிவருகிறபோது வேவுகாரர்கண்டு கள்ளனென்று அழைத்துவந்து திருமலைநாய்க்கரிடம்விட, அவர்மூட்டையை யவிழ்த்துச் சோதனை செய்ய அதில் வெள்ளையம்மாளிருக்கக்கண்டு, கைகால்களை வாங்கிவிடுங்களென்று கட்டளையிட, அந்தப்படியே கொலைவீரர் வீரனைக் காட்டிற்கழைத்துப்போய், கால் கையை வாங்கிவிடசெய்துவிட்டார்கள். அப்போது வீரனும் தன்விதியை நினைத்துப்புலம்புகிறபோது வெள்ளையம்மாள் நித்திரை தெளிந்துபார்த்து இனியில்லாத துக்கப்படுகிற காலத்தில் சில வீரர்கள் ஆணிமுத்து வீரனென்றறிந்து அழுது புலம்பி, திருமலைநாய்க்கனுக்குத் தெரிவிக்க, ஆயாசப்பட்டு இனியவசனங்கூறிட; பொம்மியம்மாளறிந்து அவ்விடத்திற்குப்போய் வீரனைக்கண்டு அழுது புலம்பி, இனி யிவ்வுடலை வைப்பதில்லையென்று அக்கினிகுண்டம் வெட்டச்சொல்லி அவ்வக்கினியில் விழுந்துவிட்டாள். பின்பு திருமலைநாய்க்கன் மீனுட்சியம்

மனை வேண்டிக்கொண்டதினால் அம்மனுக்குக் கிருபையுண்டாகி வீரனுக்குக் கைகால்கள் வளர்ந்துவரும்படி செய்தாள். அவ்வாறே கைகால்கள் வளர்ந்தவுடன் நடந்து குளித்து வெண்ணீறணிந்து அம்மனுக்கெதிரில் வந்துநின்று தன் கழுத்தைவெட்டிக்கொண்டு அம்மன் சன்னதிமுன் முதல்பூசைகொண்டு மதுரைவீரச்சாமியென்றபேருடன் வீற்றிருக்கின்றான்.

## மாரியம்மன்.

மாரியம்மன் என்பது உலகிற் பலவாறுயிருக்கின்றது. இதுவரையிலும் சத்திகள் சரிதத்தைக்கூற ஒருசாத்திரமும் காணோம். பூசாரிகள் இஷ்டமெல்லாம் சத்திகளாயிருக்கின்றன என்னெனில், உலகில் அனேக வீடுகளில் மாரியம்மனுக்குக் கற்பூர ஆராதனை புட்பம், மஞ்சள் இவைகள் கூடாதென்றும், வேப்பிலை முதலியவைகளே வேண்டுமென்றுங் கூறுகின்றனர், மாரியம்மன் ஆலயங்களிலோ எல்லாம் வழங்குகின்றன. பூசாரிகள் ஒருவர் ஒரு தலைமாத்திரம்வைத்து இதுதான் மாரியம்மனென்றும், ஒருவன்பத்துபதினைந்து நாளைக்குப் பூசைவைத்து தினந்தினம் வேறு வேறு அவதாரங்களைச்செய்து இதுதான் மாரியம்மனென்றும், ஒருவன் அக்கினிச்சுவாலிப்பதுபோலத் தலையிற்செய்து இதுதான் மாரியென்றும், ஒருவன் குழவிபோல்வைத்து இது தான் மாரியென்றும், ஒருவன் விபூதிகாப்புமாத்திரமிட்டும் ஒருவன் குங்குமகாப்புமாத்திரமிட்டும், ஒருவன் அம்மனுக்கு முழுரூபங்காட்டியும், ஒருவன் நாலுகையைக்காட்டியும், ஒருவன் இரண்டு கையைக்காட்டியும், அக்கைகளில் வெவ்வேறு ஆயுதங்களைக்காட்டியும், பலவிதமாய் அவர்களுக்கே திரமாகாது இதுதான் மாரியம்மனென்று கூறிவருகின்றனர். எதைநம்புவது?

அதர்வணவேதத்துள் கருமாதிகளின் பொருட்டுச் சிலதேவதைகளைக் கூறியிருக்கின்றன. அன்றி, சிவனைமதியாது பிரமன்செய்த சிருட்டிகள் விர்த்தியடையாது துட்டதேவதாசொரூபமடைந்ததென்றும் ஒரு நூல் வழக்கு. அல்லாமல் சில சித்தர் முனிவர்களின் சாபத்தால் சிலதேவ இராக்கதகணங்கள் துட்டதேவதைவடிவாயினவென்றும் சில பிரமாணங்களுள்ளன. பார்வதியாரதுவியர்வையினின்று அனேக காளி கூளிமுதலிய கணங்களுண்டானவென்றும் சில நூலில் வழங்குகின்றனர். ஆனதால்,மாரியம்மனது சரிதத்தை இவ்வகையென்று கூறுதற்குக் கூடாததாயிருக்கின்றது.

மாரியென்பது அகத்தியர் வைகூரி நூலிற்சொல்லும் பெயர்களையெல்லாம் பெயராகவே வழங்குகின்றனர்: இவ்வாறு வைகூரி

களை மகமாரியென்று வழங்குவது சமயபுரம், ஊத்துக்காடு, கடம்பாடி, கன்னபுரம், பெரியபாளய முதலிய இடங்களிலுள்ள தெய்வங்களையே சிலமநுக்கள் பிரார்த்தனைசெய்பவர், அக்கினிசட்டி, வேப்பஞ்சிலை, தலைவிளக்கு, அடிதண்டம், செடல், பாவடம், அரிகண்டம், அங்கப்பிரதட்சணம், கோழி ஆடு பலி, மாவிளக்கு,பொங்கல் முதலியவைகளைச் செய்கின்றனர். புத்திரவரம் பிரார்த்தனைக்கு பரசுராமன் சிலையைக்கொண்டு போகின்றனர்.

இரேணுகையின் மகன்பரசுராமனானதால், இரேணுகையே மாரியென்பதாகின்றது. அப்படி கொண்டால் இரேணுகைக்குத் தலைமாத்திரமே உருவமாயிருக்க, சமயபுரமுதலான இடங்களிலே முழு உருவமாயிருப்பதாலும், இரேணுகை பிராமண ரிஷிபத்தினியானதால், கோழிபன்றியாடுகளை பலிகொடுப்பதாலும், இரேணுகையைப் பரசுராமனே வெட்டியதால் அவ்வாறவனுக்குக் கெடுதியைச்செய்யும் பிள்ளையைப் பிரார்த்தனையாய்ச் செலுத்துவ தடாதாதலாலும், அன்றி இரேணுகையைப் பரசுராமன் வெட்டியபின்னும் எழுப்பி, சமதக்கினியோடு யமுநாநதிக்கரையில் வசித்திருந்ததாகச் சரிதமிருப்பதாலும் சந்தேகம், உண்டாகின்றது.

இம்மாரியம்மன் தோத்திரத்தில் ஆதிசிவன் தேவியென்றும் நாரணனுர் தங்கையென்றும், ஆயிரங்கண்ணுடையாள் என்றும், பராசத்தியென்றும், பேச்சியென்றும் துதிக்கின்றனர். ஆயினும், கலியுகத்திற்குச் சத்தியே அரசியென்று கூறியபடியேகல்வி, ஆகாயம், பூமி, நீர், தீபம், உரல், உலக்கை, முறம், படிஇவையெல்லாம் பெண்மயமாக வழங்குகின்றனர்; அன்றி, கிராமதேவதைகளும், நோய்களும், பெண்மயமாக கூறுகின்றனர். "சிவமெனும்பொருளுமாதிசத்தியொடுசேரி னெத்தொழிலும் வல்லதாம், அவள் பிரிந்திடி லியங்குதற்குமரிதரிதெனுமறையிறைஞ்சிடு" மென்றபடி சிவன் முதலியவர்களையும் அதிட்டித்து விளங்குவது சத்தியென்று கொள்ளப்படுகின்றனர்; ஆதலின், சத்தியின்றிருவிளையாட்டே தமதமிசமாகவும், அவை தமதேவலாலும், தமது அதிட்டிப்பாலும் விளங்குகின்றனவாகவும் காணப்படுகின்றன, இதன்விரிவைச் சத்தியினுற்பவத்திற் காண்க.

## எல்லம்மாள்.

எல்லம்மனென்பது எல்லைக்குஅரசி அதாவது கிராமதேவதை என்று பொருள். இது கோயில்லாவூரில் குடியிருக்கவேண்டாம் என்றபடி சிலர்கூடிய ஒருகிராமத்தில், கிராமத்தார் தங்களைக்காக்

கும் பொருட்டுத் தங்கள் எல்லைக்கு ஒருதேவதையை ஏற்பாடுசெய்து கொள்ளுவது இயல்பு. ஆனதாலேயே எல்லம்மனெனப் பெயர் பெற்றிருக்கிறது. இது அவரவர்களுக்கு நேர்ந்த குலதேவதையாகிலும், தாங்கள் முன்னிருந்தவூரின் தேவதையையாகிலும், தாங்களிருக்குமிடத்தில் யாராலேனும் பூசிக்கப்பட்டிருந்த தேவதையையாகிலும், அல்லது உத்தேசப்படி பார்வதி, காளி, மாரி, நாரணி, முதலிய தேவதையாகிலும் நியமித்துக் கொள்ளுவது வழக்கமாயிருக்கின்றது. அத்தேவதை நடுத்தெருவி லிருக்குமானால் தெருவீதியம்மனென்றும் சந்திலிருக்குமானால் சந்தியம்மனென்றும் சோலையிலிருக்குமானால் சோலையம்மனென்றும். தென்னை, பனை முதலியகருக்குகளிலிருக்குமானால் கருக்கமர்ந்தாளென்றும், வேப்பமீழலிலிருக்குமானால் வேம்படியாளென்றும், ஆலநீழலிலிருக்குமானால் ஆலடியாளென்றும், இதுபோலெவ்விடத்தி லிருக்கின்றதோ அவ்விடத்தின்பேராலேயே வழங்குகின்றது. அன்றி, தாபித்தவர்கள் பெயராலும், இன்னும் பலவகைக்காரணங்களாலும் வழங்குகின்றன. இவர்கள் பிற்காலத்தில் ஒவ்வோர் மகத்துவம் பற்றியும் அனந்தபெயர்களை அடைகின்றனர். இவைகளுக்கெல்லாம் சரித்திரங்கள் விசிதமாயில்லாததால் இம்மட்டில் விடப்பட்டது. தெரிந்த புண்ணியவான்கள் எழுதியனுப்பினால் மறுபதிப்பில் சேர்த்துவிடலாம்.

## பூவாடைக்காரி.

பூவாடை யென்பது ஒவ்வொரு குலத்திலும் விவாகமாய் மங்கலியத்துடனிருந்து மரணமானமாதர்களைக் குலதெய்வமாகக் கோடிப்பது; இது ஒவ்வொரு குலத்திலும் குடியிலும் இயல்பாக நடந்தேறிவருகிறது. இத்தெய்வத்திற்கு வேறுநாமரூபாதிகளில்லை ஆனாலும்பட்டாடை. புட்பம், மஞ்சள் முதலியவற்றை ஒருபெட்டியில்வைத்துப் பூசிக்கும்விதியால் பூவாடையம்மன் எனப்பெயர் பெற்றது.

## கன்னியம்மன்.

மேற்சொன்னபடியே ஒவ்வொருகுடியிலும் விவாகமின்றி கன்னிப்பருவத்தில் மரணமான பெண்களைத் தங்கள் தங்கள் சுபகாரியங்களில் சுத்தபூசையாகக் கோடிப்பது இயல்பாக வழங்குகின்றது. அப்பெண்கள் கன்னிப்பருவத்தில் மரணமானதைப் பற்றி கன்னியம்மனெனவும், கன்னிமார்களெனவும் சொல்லப்படுகின்றது.

### சூலமாரி

இதுவும் ஒவ்வோர் குடியிலும் அமங்கலியாய் மரணமானமா தர்களைக் கற்பூரதீபாதிகளின்றி, வெள்ளைச்சீலையும் தின்பண்டங்களுடனும் அவைதிக பூசையாகக் கோடிக்கின்றனர்,

### சஞ்சல தேவதைகள்.

இதன்றி அனேகர் தங்கள் குடிகோத்திரசூத்திரம் யாதொன்றுமில்லாது, நீரிலிறந்தவளைப் பாதாளபொன்னியம்மனென்றும் அக்கினியிலிறந்தவளை அக்கினியம்மனென்றும், ஒருத்தியைப்புதைத்தவிடத்தில் புத்துமூடிக் கொண்டால் புத்தம்மனென்றும், அப்புத்தில் நாகமிருக்கப்பார்க்கில் அதை நாகம்மனென்றும், எந்தச் சாலையிலேனும் இறந்துகிடப்பவளை சாலம்மனென்றும், மலையிற் சென்றிறந்தவளை மாயாயியென்றும், பனைமரத்தடியில்இறந்துகிடப்பவளைப் பனையம்மனென்றும், இவ்வாறு அனேகவிதமாய்ப் புகழ்ந்து ஊரெல்லாங்கூடிப் பூசிப்பதுமுண்டு.

அன்றி வெண்மையான நிறத்தோடிருந்து இறந்தவளை வெள்ளையம்மனென்றும், நொண்டியாயிருந்திறந்தவளை நொண்டியம்மனென்றும், கூறி கோடிப்பதும் இயல்பாகநடந்தேறி வருகிறது. இதுவைதிக சமயங்களும் மகம்மதியராதிகளும் அநுட்டிக்கின்றதில்லை மற்ற இழிகுலத்தாரும் விவேகசூனியருமே கொண்டாடுவது இயல்பா யிருக்கிறது இதுமுற்றும் மடமையினும்மடமையே.

இத்தெய்வங்களை முன்னம்பிணமென்று சஞ்சலாதிகாரியங்களைச் செய்துவிட்டு அப்பால் தெய்வமென்று அக்குடும்பத்தார் கொண்டாடுதலும், அதன்பின்சார்ந்தவரும் அப்பால் அவ்வீதியாரும் அப்பால் அக்கிராமத்தாரும் அதற்கப்பால் உலகத்தார்யாவரும் வெருண்டு மருண்டு தெய்வமென்றேபயந்து துதிக்கின்றனர். யாதாமோர் விவேகிதடுக்கினும், 'ஊருடன் ஒத்துவா' ழென்றுதிரும்பவுங் கும்புகூடி நம்பியே மாய்கின்றனர்.

### பெரியாண்டவன், அங்காளம்மன்-அங்காயி.

இது வாமிமதத்தின் ஒருபிரிவாம். என்றால், ஒருகாலத்தில் சிவபெருமான் பிரமன் தலை ஐந்திலொன்றைக் கிள்ளியபோது, பிரமபாவம் சிவனைச்சூழ்ந்துகொண்டு அம்மயக்கத்தால் சஞ்சரித்துச் சுடலையிலிருக்கையில், பார்வதிசென்று தமதுநாயகன்கையிலிருக்கும் பிரமகபாலத்தைப் பயறு, உண்டைமுதலியவைகளைக்கொட்டிகீழிறங்கச்செய்து அப்பிரமன்தலையைத் தன்காற்பெருவிரலிற் மிதி

த்துக்கொண்டு நாயகனது பிரமஹத்தியை நீக்கினள் என்று கூறு கின்றனர் பிரமகபாலத்தை மிதித்துள்ள காரணத்தால் அங்கா ளம்மன் என்றும், தென்னாட்டில் அங்காயி என்றும், பெயர் பெற்றனள்.

இப்பார்வதியார் மகா உக்கிரரூபத்தோடு காளிரூபமுற்றுச் சென்றமையால் மதுமாமிசங்களோடும் பூசிப்பதாகத்தெரிகிறது. சிலர் வேறுசிலகதையுங் கூறுகின்றனர். அக்கால் பரமசிவம் எல் லாத் தேவமுனிவர்களாலும் பெரியாண்டவனெனப்புகழ்ந்துகூறப் பட்டனராம். மேலும், சுடலையில்நின்று நடித்தபடியால் கூத்தாண் டவனென்றும், பெரியாண்டவனென்றும் கூறப்படுகிறது.

## தருமராஜா.

பாரதவீரருள் பாண்டுமகாராசன் புத்திரர்களாகிய பாண்ட வர்களில் சேட்டராகியிருந்தவர் தருமராசா. இவர் எமதருமராச னமிசம். பாரதயுத்தவீரர்களில் இவர் ஒருவர்தான் நேராக வைகுந் தஞ்சென்றனர். இவர் தருமநெறிமாறாது தருமசொரூபமா யிருந்த தால் உலகத்தோர் இவரைப் பூசிக்கத் தொடங்கினர்.

## தீபாஞ்சை அல்லது திரௌபதை.

இப்பால் திரௌபதி பாஞ்சாலமன்னன் புத்திரியாக உதித்து மேற்படி தருமர்முதலிய பாண்டவரையும் மணம்புரிந்தவளாயினும் பஞ்சகன்னிகைகளில் ஒருத்தியாய்க் கற்புநெறிமாறாத தெய்வசொ ரூபமுற்றவள். இவள் பாஞ்சாலமன்னன்மகளாதலின் பாஞ்சாலி யென்றுங் கூறுகின்றனர். இந்தத் திரௌபதியம்மனுக்கு வருடோ ற்சவங்களில் அக்கினிப்பிரவேசஞ் செய்வதனால் தீபாஞ்சை யென் றும், தென்னாடுகளில் பெயர்வழங்குகின்றது.

## குளுமாயி அல்லது ஓலைப்பிடாரி.

சோழநாட்டில், திரிசிரகிரிக்கடுத்த உரையூரில், குட்டிக்குளு மாயி, பள்ளக்குளுமாயி, சட்டிக்குளுமாயி யென மூன்றுதெய்வங் களிருக்கின்றன. பெயரால் வேறுபட்டாலும் தெய்வம் ஒன்றுதா னென்கிறார்கள். என்னையெனில், பிரதி மாசிமாதங்களிலும் நடக் கும் உற்சவங்களில் சுமார் இலட்சம்கறுப்பு ஆட்டுக்குட்டிகளைக்கா வுக்கொடுக்கின்றனர். இதில் குட்டிகளைகடித்து உதிரபெலிகொள் ளுதலால் குட்டிக்குளும்மாயியென்றும், இரத்தங்களைச் சட்டியிற் பிடித்துக் குடித்தலால் சட்டிக்குளுமாயியென்றும், பூமியிற் பள்ள ம்வெட்டி அப்பள்ளத்தில் இரத்தங்களை நிரைத்து உண்ணலால்

பள்ளக்குளுமாயியென்றும் கூறுவதாம். என்றாலும் இவ்விரத்தங் களை உண்ணுகிறது கறுப்பண்ணசுவாமியேயாம். உற்சவகாலங்க ளில் இரதத்தில் இவ்வம்மனை வேறுஉருவமின்றி ஓலைபினால்பிடா ரிரூபமாகச்செய்து வருவதால் ஓலைப்பிடாரியென்றும் கூறுகின்ற னர். இவ்வம்மன் சரித்திரம் நன்றாய்த்தெரியவில்லை இப்புறங்களில்

செல்லாச்சி, பேச்சியாயி, பூமாயி, வீராயி, சடையாயி, மலை யாயி, பொம்மக்காள், வெள்ளாயி, இளங்காளி, கருக்காயி, ஒண் டிவீரன், சங்கிலிவீரன், வீரவுத்தன், கருப்பன், சங்கிலிக்கருப்பன், மாமுண்டிலக்கையர், பனையடியான், மலையாளி, ஒண்டிமுனி, பதி னெட்டாம்படிகருப்பு, பாவாடைராயன், செல்லாண்டி, போதரா சா, ராசாளி.

முதலிய தேவதைகள் வழங்குகின்றன; அவைகளின் சரித்தி ரம் நன்றாய்த் தெரியவில்லை, தெரிந்தவர் தெரிவிப்பாராயின் மிக்க நன்றியறிதலோடும் அதனை மறுபதிப்பிலாயினும் அச்சிட்டுபக ரிப்பேம்

## காத்தாயி.

சிவசுப்பிரமணியக்கடவுள் அக்கினிபகவானால் சரவணப்பொ ய்கையை யடைந்த காலத்து பால்கொடுத்த கார்த்திகையென் னும் இருடி பத்தினியையே காத்தாயியென்றும், அவள்பாலுண்டு சீவித்தமையாலேயே முருகனுக்கு கார்த்திகேயனென்று பெயரா யதெனக் கூறுகின்றனர்.

## துற்காயி.

காசியில், துற்காசூரனென்னும் ஓரசுரனைப் பார்வதியார் உரு த்திராமிசமாக எதிர்த்துச் சம்மரித்தமையால் அவளுக்கே துற்கா யியெனப் பெயராயிற்றென்று காசிகண்டங் கூறுகின்றது.

## கூத்தாண்டவர்.

திருமால் சிவபெருமானை யருச்சித்துச் சக்கரதானம் பெற்று உலவுங்காலையில், விநாயகர் திருமாலை யழைத்து அதென்ன காட் டென்று வாங்கிவிழுங்க, அக்கால் திருமால் கெஞ்சிக்கேட்டும் தராமையால் கூத்தாடிவருந்தி நிற்க, விநாயகர் சக்கரத்தைக்கொ டுக்கப்பெற்றுச் சென்றதாக, காஞ்சிபுராணங் கூறுகின்றது; கூத் தாடிய காரணத்தினாலேயே திருமாலுக்குக் கூத்தாண்டவரெனப் பெயராயிற்றெனக் கூறுகின்றனர்; இவ்வாறு திருமாலின் திருநட னத்தைக் கோணக்கி தாசிரிகளெனச் சிலர் ஆடுகின்றனர்.

## கங்கையம்மன்.

கங்கையம்மை யென்பது சிவனுடைய ஒரு பத்தினியேயாம் சிவனது முடியிலிருக்கும் கோலமாய்க் காட்டியதால் கங்கை பூவுலகில்வந்து உலகிலுள்ள வெப்புநோய் முதலியவற்றை ஒழித்து குளிர்வித்து எல்லா வளங்களேயும் உண்டுபண்ணும் நிமித்தியம் உலகில் ஊட்டினகாலமாகிய சித்திரை வைகாசி பல மாதங்களில் பலவேடமிட்டு வணங்குவதோடு அங்கங்கு ஆலயமும் கட்டிப் பூசிக்கின்றனர்.

## வட்டப்பநாச்சி யம்மன்.

இந்த அம்மன் சரிதத்தைப் பஞ்சகாவியங்களி லொன்றான சிலப் பதிகாரமும், கோவலன் கதையும் கூறுகின்றது. இந்த அம்மன் தொண்டைநாட்டில் திருவொற்றியூரில் தியாகர் சன்னிதானத்தின் மூலத்தானத்தி னருகில் திருக்கோயில் வீற்றிருக்கின்றனள் இந்த அம்மனுக்கு எருமைமாடு ஆடு கோழிகள் இவை வருடத்தில் ஏராளமாய்ப் பலியிட்டு வருகின்றனர். காளி அமிசமாகக்கூறுகின்றனர்; வருடத்தில் பதினைந்துநாளுற்சவம் மகா உக்கிரமாய் நடக்கின்றது.

(சரித்திரம்) மதுரை வடபத்திரகாளி கோயிலை ஏதோ ஒரு காரணமாகப் பாண்டியர் சாத்தி யிருக்கையில், ஒரு வாணியன் எண்ணெய் விலையாகவேண்டி விளக்கேற்ற பாண்டியரறிந்து அவ் வணிகனைவெட்டி மாய்த்தனர். பின்னர் வணிகன் மனைவி அம்மனைக் குறையிரக்க, அம்மன் பாண்டியரைக் குலமறுத்து வருவேனெனச் சபதங்கூறி, அவ்வணிகனை கோவலனாகவன்னமாலையென்பவள் வயிற்றிலும், அவன் மனைவியை மாதவியென திருக்கடையூர் தாசிவீட்டிலு முதிக்கச்செய்து தான் பாண்டியன் புத்திரியாக உதித்து, சாதகரால் பெட்டியில்வைத்து வைகையில்விட, செட்டிகளிடம் அகப்பட்டு வயதுவந்தவுடன் கோவலனை மணம்புரிந்திருக்கையில் கோவலன் மாதவியாகிய தாசியினிடம் சிக்கி தன் சுயார்ச்சித பிதிரார்ச்சிதங்களை யொழித்து வருந்துங்கால், கண்ணகி புருடனை யழைத்துவந்து தன்னோடு கூடவே பிறந்த காற்சிலம்பைக் கொடுத்து, தாசிகடனையடைத்து வாவென்றனுப்பித் தானும்போய் ஓரிடத்தி லிருக்கையில், முன்னர்த் தன்னைப்பெற்ற பாண்டியன் மனைவி தன்காற்சிலம்பைச் சுத்தஞ்செய்து கொடுக்கும்படி தட்டானிடங்கொடுக்க, அதனைக் கருடன் எடுத்துப்போனதால் கோவலன் விற்கவந்த சிலம்பைத் தங்கள் சிலம்பென்று நினைத்துக் கோவலனை வருத்திக் கொன்றனர். இதனைக் கண்ணகியறிந்து தனது

சுயரூபத்தையெடுத்து மதுரையைக் கொளுத்திக்கொள்ளைகொண்டு பழிவாங்கியதோடு, அடங்காத பெரு மூர்க்கரமாகவருகிறபோது திருவொற்றியூரில் தியாகராலயத்திற் புகுந்து சுவாமி கட்டளையால் ஒரு கிணற்றில் நீரருந்துவதற்கு இறங்க, உடனே சாட்சாத் பரமசிவனார் ஒரு பாறைகொண்டு கிணற்றை மூடினர். அதனால் வட்டப்பாறாச்சியார் எனப் பெயர்பெற்றுச் சிறிதுசாந்தமாக எழுந்தருளி யிருக்கிறனள். அவ்வாறு, கொள்ளைகொண்டதைப் பிரதி சித்திரை மாதத்திலும் மதுரையை யெரித்த திருவிழாவென நடத்திவருகின்றனர்.

## பச்சையம்மன்,

இந்த அம்மன் சரிதத்தைக் கஞ்சகிரிபுராணம், கேதாரபுராணம், திருச்செங்கோட்டுப் புராணம், காஞ்சிபுராணம், அருணாசல புராணம் முதலிய நூற்களில் முறையே கூறப்பட்டிருக்கின்றது.

பார்வதியார் சிவனோடு அர்த்தபாகம் பெறவேண்டித் தவஞ்செய்ய, அனேக தலங்களையடைந்து பூசித்து,தன் கோறிக்கையை நிறைவேற்றவந்த கோலமே பச்சையம்மனென்று கூறுகின்றனர். இந்த அம்மன் ஆலயத்தில்,

கருமுனி, செம்முனி, வாள்முனி, முதலிய சத்தமுனிகளும்,

ஒண்டிவீரன்

| | |
|---|---|
| பூங்குறத்தி | திருமால் |
| வேங்கையம்மன் | பிரமன் |
| காத்தாயி | சுப்பிரமணியர் |
| கருவேங்கை | விநாயகர் |
| மலைவேங்கை | வள்ளியம்மை |
| பூவேங்கை | தெய்வானை |
| முடியாலழகி | திருமகள் |
| முடிமேல் முடியழகி | கலைமகள் |
| ஆரியசுவாமி | கௌதமர் |
| மன்னாதலிங்கம் | சிவபெருமான் |

முதலிய தேவதைகளும் பரிவாரதேவதைகளாக எழுந்தருளியிருக்கின்றனர். இந்தம்மன் எந்தத் தலத்தில் எழுந்தருளினளோ அந்தந்த இடங்களிலும் அந்தந்த இருடிகளின் ஆச்சிரம மிருக்கின்றன. இத் தேவாலயங்களில் சுத்த பூசையும் சத்திய கிருத்தியங்களுமே நடக்கின்றதானாலும் வாள்முனிவருக்கும் ஒண்டிவீரனுக்கு மாத்திரம் ஆடு கோழி முதலிய பலிகொடுக்கின்றனர். இவ்வாலயங்களில் பெரும்பாலும் சிலம்புமுதலிய வாத்தியங்களேயன்றி உடுக்கை முதலியவைகள் கிடையா.

### பொம்மியம்மை

இதனைப் பொம்மக்காளென மலையாள பிராந்தியங்களிலும், சேலம், கோயம்புத்தூர் முதலிய விடங்களிலும் கொண்டாடுகிறார்கள். இது ஒருசால தேவதையாகக் கூறுவதோடு சிலவீடுங்களில் கிராமதேவதையாகவும், குலதேவதையாகவும் கொண்டாடுகின்றனர்.

### பஞ்ச கன்னிகைகள்.

பஞ்சகன்னியர்களாவன—அகலிகை, துரோபதை, சீதை, தாரை, மண்டோதரி, என்பனவாம். இவர்களோடு அருந்ததி, வாசுகி இவர்களைக்கூட்டிச் சத்த கன்னிகைக, ளென்றும் கூறுகின்றனர். இவர்கள் சரிதத்தைப் பதிவிரதா சரித்திரமென்னும் புத்தகம் விசிட்டமாகக் கூறுகின்றது. இதன் விலை அணா 0 12 0

### சிரஞ்சீவிகள்.

சிரஞ்சீவிகளாவன—அசுவத்தாமர், அனுமார் ஆதிநாதர், அனுதிநாதர், கிருபாசாரி, பரசுராமர், விபீடணர் இவர்களோடு மார்க்கண்டேயரையும் கூறுகின்றனர்.

### உபேந்திரர் உற்பவம்

திருமால் வாமனவதாரங் கொண்டகாலத்தில் உலகமெலாந் துதித்துக் கொண்டாடத்தக்கதாக இந்திரனுக்குத் தம்பியாயினர். அதனால் திருமாலமிசமாகிய வாமனருக்கு உபேந்திரரெனப் பட்டது என்று வாமனபுராணங் கூறுகிறது.

### மாப்பிள்ளை வீரன்

மாப்பிள்ளைவீரன் என்பது (541-பக்கத்தில்) முன் கூறியசஞ்சல தேவதைகளின் மார்க்கமே யெழுந்தருளிய ஒரு தெய்வமாம். அதாவது, ஒரு ஸ்திரீயும் புருஷனும் விவாகம் செய்துகொண்டு மாப்பிள்ளைக் கோலமாக வழிப்பிரயாணம் செல்லுகையில் திடீரென்று காணாமற்போன தாகவும், மடிந்ததாகவும் கூறுகின்றனர் இந்தத் தெய்வமிருக்கும் இடத்தில் பிரார்த்தனை செலுத்துவோரில் உண்மை விசுவாசமுள்ள அனேகர் முடியில் வீராவேசமாக எழுந்தருளி அவரவர் கோரிக்கைக்கியன்ற மறுமொழி சொல்லுகின்றனர். வருடந்தோறும் திருவாரூர் நாகப்பட்டணம் முதலாகத் தென்தேசவாசிகள் யாவரும் பெருந்திரளாய்ச்செல்லுவதன்றியில் ஆடு, கோழி முதலிய உயிர்வதையும் பொங்கல் மாவிளக்கு தின்பண்டமாதி பூசைகளும் விசேடமாய் நடத்துகின்றனர்.



## பத்தினியம்மன்.

பத்தினியம்மன் என்பது மேற்கூறியவாறே சஞ்சலதேவதைகளில் ஒன்று ஆயினும் இந்த அம்மன் விவாகம்செய்தபின்மடிந்ததாகத்தெரியவரினும், புருடசஞ்சாரமின்மையால் பத்தினியம்மனெனப்பெயர்பெற்றனள். இந்த அம்மன் நாகப்பட்டணத்திற்குப் புறம்பே உரல் உலக்கை முதலிய சத்தம் கேட்காதபடி ஊரின்புறம்பே பெருவெளியில் மரத்தடியி லெழுந்தருளி யிருக்கின்றனள். கடும்பாடி பெரியபாளையம் முதலிய விடங்களில் செலுத்தும்பிரார்த்தனைபோலவே பரசுராமன் சிலை முதலிய சருவுருக்களுமெல்லாவித பூசைகளும் நடத்துகின்றனர்.

## ஆண்டாள் உற்பத்தி.

'பார்வண்ண மடமங்கை' யென்கிற பூமிப்பிராட்டி வேயர்குலத்திலு மொருகால் வளர்ந்தருளத்திருவுளம்பற்றி, ஸ்ரீ வில்லிபுத்தூரில் வேதக்கோனான பெரியாழ்வார் ஒருநாள் தமது திருநந்தவனத்தில் திருத்துழாய்க்குக் கொட்டெடுத்து கொத்திக்கொண்டுவர, அங்கொருதிருத்துழாய்வேர் மண்ணின்கீழாக கலியாத்தம் தொண்ணூற்றெட்டில் நிகழ்ந்த நளவருடத்தில் கற்கடக சூரியபிரவேசகாலமாகிய ஆடிமாசம் ஆறுநதேதி சுக்கிலபட்சம் சதுர்தசி வெவ்வாய்க்கிழமை கூடிய பூரநட்சத்திரமாகிய சுபதினத்தில் ஸ்ரீபூமிப்பிராட்டியின் அமிசையாய், சுவர்ன கவசத்தினுள் அற்புதமான திருவுருக்கொண்டு பிரகாசிக்க, அவர்கண்டு விம்மிதராய், இங்கஸ்திரீரததினத்தை அதிபிரீதியுடன் தனக்குபுத்திரியாக வெடுத்துக்கொண்டு "சுரும்பார் குழற்கோதை" என்று திருநாமஞ்சாற்றி திருமகள்போலே ஒளிபெறவளர்த்தார். இங்ஙனமிருக்கையில் பெரியாழ்வார் வடபெருங்கோயி லுடையானுக்காக திருமாலைகட்டிப்போகிற விதத்தை அதிக நுட்பமாகக்கற்று, சிலநாளைக்குமேல் தாமுமவரைத் தொடர்ந்து திருநந்தவனத்துக்குப் போய் பூக்கொய்து புட்டிலிற் சேர்த்துக் கொண்டுவந்து செண்டுமாலை, குழல்மாலை, முடிமாலை, கிளிமாலை, தொங்கல்மாலை, உலாமாலை, வெற்றிமாலை முதலிய நானாவிதமாலைகளைத் தந்தை மகிழ்வடையும்படிகட்டிக்கொடுத்துவந்து, நாளுக்குநாள் பெருமாள் பக்கல் பிரேமை அதிகரிக்கப் பெற்று ஆழ்வாரில்லாத அவசரங்களிலே கட்டிவைத்திருக்கும் மாலைகளை யெடுத்துசூடிக்கொண்டு "இந்தவடபெருங் கோயிலுடையானுக்கு நேரொவ்வாதிருக்கிறேனோ, ஒத்திருக்கிறேனோ" என்னுஞ்சொல்லினைத்து, அவைதமை முன்னிருந்தபடியே வைத்துவிடுவாள். இப்படிதினமும் நடந்தேறிவருவ

தைப் பெரியாழ்வா ரறியாதவராகி, புட்பங்களை யெடுத்துக்கொண்டுபோய்ப் பெருமாளுக்குச் சமர்ப்பித்துக் கொண்டிருக்க, அந்த புட்பங்கள் பெருமாள் திருமேனியில் சாத்தினவளவிலே என்றுமில்லாத நறுமணத்தை வீசத்தலைப்பட்டன. அதைக்கவனித்த அருச்சகரும், திருமுற்றத்தாரும், ஆழ்வாருடைய கைங்கர்யத்தின் அன்புதான் இப்படி மணங்கமழ்கிறதென்று அவர் திருவடிகளிலே மிகவும் பத்தியுத்தராயிருந்தார்கள்.

இப்படியிருக்கையில் வடபெருங்கோயிலுடையான் தனது நிரேதுக்கடாட்சத்தாலே இவ்விரகசியத்தை வெளிகாணச்செய்து நாச்சியாருடைய அவதாரவிசேடமிருப்பதை யாவருமறிந்து உய்விக்கத்திருவுளம்பற்றி, ஒருநாள் நாச்சியார் அவனுக்காக வைத்திருந்த மாலைகளைச் சூடிக்கொண்டு கண்ணுடியில் அழகுபார்த்துக் கொண்டிருக்கையில் நினைவைச் சிறிதுமாற்றிவிட, அவ்வளவிலே தகப்பனாரான பெரியாழ்வார்பார்த்து வியப்படைந்து, "குழந்தாய்! நீ செய்தது அடிமைக்கவத்தம் விளைவதே" என்று கடிந்து, விரைவில் திருநந்தவனம் புக்குப்பூக்கொய்துவந்து கட்டிக்கொண்டு போய்சந்நிதியில் சமர்ப்பிக்க, அருச்சகர்வழக்கப்படியே எடுத்துச் சாத்தப்போகையில், வடபத்திரசாயி முகந்திருப்பங்கொண்டு சேவைசாதித்தான். மாலைகளும் பூர்வம்போலே மணங்கமழாதது கண்டு அருச்சகர்விம்மிதராய்விட, அன்றிரவில் வடபத்திரசாயி ஆழ்வாருடைய சொப்பனத்திலெழுந்தருளி "நீர் நமக்குச் சிறிதும் மணமில்லாமலர்களை வகுத்தி" ரெனவினவ, ஆழ்வாரும் "எந்தையே! வழக்கப்படிவகுத்துவைத்திருந்த நறுமணத்திருமாலைகளை, தேவரடிமைச்சிறுபெண் வழங்காவகைகண்டனள். அதனைப்பொறுத்தருளவேண்டு" மென்று திருவடிகளைப்பிடித்துக்கொண்டு பிரார்த்திக்க, வடபத்திரசாயி ஆழ்வாரைநோக்கி "அவளைநமக்குச் சூடிக்கொடுக்கவந்த சுடற்கொடியென்றறியீரோ? இனிஅவள் தீண்டிமுடித்துக்கொடுக்கும் மாலையே நாம்விரும்புற்ற தென்றறிந்துகொள்ளு" மென்றருளிமறைந்து, சன்னதி முதலிகளுக்கு மிப்படியே சொப்பனமருளிப் போயினன். ஆழ்வார் நித்திரைகலைந்து விம்மிதராய் வீற்றிருக்கையில், சன்னிதி காப்பாரோடிவந்து தங்கள் சொப்பனமிருந்தபடியை விண்ணப்பஞ்செய்ய, இவரும் தாம்கண்டதை யவர்களுக்கறிவித்து 'இதனை யாராயக்கடவோ மென்று அன்றெடுத்துவந்து கட்டியபுட்பங்களை நாச்சியார் திருமுன்புவைத்து இவைகளைச்சூடிக்கொடுக்கவேண்டுமென, அவ்வண்ணமே நாச்சியாருஞ் செய்ய, அவைகளைக் கொண்டுபோய்ச் சுவாமிக்குச் சமர்ப்பிக்க, அவைதம்மை அருச்சகரெடுத்துச் சாத்தப்

போகையில் வடபத்திரசாயி, முன்னாள் திருப்பிக்கொண்ட தன்னு டைய திருமுகத்தை செவ்வேதிருத்தி திருக்கண்களை யலர்த்தி முறுவல்செய்து மகிழ்வெய்தி சேவைதந்தருளினான். அப்போது அருச்சகரும் கோயில்பரிகரத்தாரும் அதியாச்சரியமடைந்து நாச் சியார் திருவடிகளில் தண்டன் சமர்ப்பித்து, கிருதார்த்தராயினார் கள். ஆழ்வாரும் மிகுகளிப்படைந்து தம்முடைய திருமகளாரை அருட்கண்களால் நோக்கி ஆநந்தபாட்பம்பெருக, திருவாய்திற ந்து, 'என்னை ஆண்டாளிவளே!' என்றருளி விசேட பிரதிபத்தி செய்துபோந்தார்.

அதன்பின் நாச்சியார் ஈட்டுப்பெண்களோடு கலந்துமணலால் சிறுவிடுகட்டி விளையாடுகையில் அழகிய மணவாளன் பாலியனாய் வந்துதிருவடியாலதைச் சிதைத்தோட 'சீதராவெங்கள்சிற்றில் வந்து சிதையேலே' என்று பாசுரமிட்டு, அந்த அவசரம் நீங்கின வாறே அவனுடைய கலியாண குணாதிசயங்களை வாயினாற்பாடி ம னத்தினாற்சிந்தித்து, வடபெருங்கோயிலுடையானோடே தழுவிப்பு ரிமாறவேணுமென்றுசொல்ல, அருச்சாவதார சமாதியாகையால் நினைத்தபடிக்கவன் முகங்காட்டாமையாலே மிகவும் நொந்து'அவ னோடு பரிமாறப்பெற்றாருண்டோ வில்லையோ' வென்றாராய்ந்து தன்னோடாடும் பெண்களை இடைப்பெண்களாகவும் தான் அவர் களிலொருத்தியாகவும், வடபெருங்கோயிலை நந்தகோபன் திருமா ளிகையாகவும், உள்ளுறங்குகிறவனைக் கண்ணனாகவும் அநுசந்தி த்து, திருவாய்ப்பாடியில் தன்னுடைய திருவுள்ளங்குடிபோய்பாவ னுபிரகர்ஷத்தாலே அநுராகம்முற்ற இடைப்பேச்சும், இடை ந டையும், இடைமுடியு முடையளாய், நிகில உபநிடதசாரதரமான திருப்பாவைமுப்பதும் பாடியருளி நோன்புநூற்றும் 'நாச்சியார்தி ருமொழி' யென்னும் பிரபந்தத்தை யருளிச்செய்தும். "திருத்துழா யானது பரிமளத்தோடேகூட முளைக்குமாபோலே ஆஜந்யபால்ய யௌவனவஸ்தைகள் தோறும் பரமபக்தி, பரமஞ்ஞான பரமபக் திகளை யுடையவளாய்க்கொண்டு" அவன் விடயமான காமபஜனு திகளைப்பண்ணி வாழுங்காலத்திலே, பெரியாழ்வார் இந்நாச்சி யாருடைய விவாகயோக்கிய பருவத்தைக்கண்டு வியாகுலாந்தக் கரணராக அவர் கருத்தையறிந்தநாச்சியார் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் நான்வாழ்கில்லேன்" மாலிருஞ்சோலையெம்மாயவ ரல்லால் வேறொருவனை விழியேனென்ன! ஆழ்வார், 'நூற்றெட்டு திருப்பதியி லெம்பெருமான்களில் நீராருக்குவாழ்க்கைப்படுகிறீ" ரென்ன, 'அவருடையகுணாதிசயங்களை குறிப்பிடு' வென்ன, ஆழ்

வாரும் வடபெருங் கோயிலுடையான் வைபவமயமாக எம்பெருமான்களின் வைபவங்களையெல்லாம் அருளிச்செய்ய, நாச்சியார் கேட்டு ஆனந்தபாட்பந்துளிக்க, தென்னரங்கத்தின்னமுதருடைய குழலழகு வாயழகு கண்ணழகுகளை மனத்தில்நாட்டி வியாகுலையாய் சித்து அழகியமணவாளனையே காமித்திருக்க, அவனும் நாச்சியாருடையசொப்பனத்தில்வந்துபாணிக்கிரஹணம்பண்ணிப்போக அந்தக்கனு வைபவத்தாலுண்டான களிப்பு உள்ளடங்காமல் சிந்தையைத்தூண்ட, "நாளைவதுவைமணமென்று நாளிட்டுப் பாளை கமுகுபரிசுடைப்பந்தற்கீழ் கோளரிவாமனன் கோவிந்தனென்பானோர், காளைபுகுதக் கனாக்கண்டேன்" என்று பாசுரமிட்டுக்கொண்டு ஒளியரங்கத்து ளோங்குமொளியுளரான அணியரங்கத்தம்மானுக்கே தீர்ந்த காதலையுடையளாக, இவ்வளவில் ஆழ்வார்நோக்கி, 'கோதைக்குத் தக்கநாயகன் கோயிற்பிள்ளைதா' னென்று கருதி, 'இதுகைகூடும்படி யெங்ஙனே' யென்று சிந்தைகலங்கிக் கண்வளர்ந்தருள, திருவரங்கச் செல்வனுர் அவர் சொப்பனத்திலெழுந்தருளி, 'ஆழ்வீர்! உம்முடைய புத்திரியாகிய கோதையை நம்முடையதிருவரங்கந்திருமுற்றத்தேறக் கொண்டுவாரீர்; நாமே தகுதியாக பாணிக்கிரகணம் பண்ணிக்கொள்ளுகின்றோ' மென்றருளிச்செய்துபோக, ஆழ்வாரும் நிர்ப்பரராயிருந்து விட்டார்.

அவ்விளவிலே திருவரங்கச் செல்வனுர் திருமுற்றத் தடியார்களைக் கடாட்சித்து "நம்முடைய சத்திரசாமரதால விருதாதிசகல பரிசனங்களுடனே ஸ்ரீ வில்லிபுத்தூ ரேறச்சென்று விஷ்ணுபத்தருடைய திருமகளாரான சூடிக்கொடுத்தாளை அழைத்துக்கொண்டு வாரு"மென்று அருளிச்செய்தவாறே, அவர்கள்சென்று ஆழ்வாரைக்கண் டடிபணிந்து நம்பெருமாள் திருவாக்கை விண்ணப்பஞ் செய்ய, ஆழ்வாரும் ஆச்சரியப்பட்டுவடபெருங்கோயிலுடையான் றிருவடிகளில் விண்ணப்பஞ்செய்து, விடைகொண்டு ஆண்டாளை மணிப்பல்லக்கி லெழுந்தருளுவித்துக் கொண்டு, ஸ்ரீவல்லபதேவ பாண்டியனும் செல்வ நம்பியும் மற்றுமுள்ளவர்களும் கூடிச் சேவித்துக்கொண்டுவர, அகிலவாத்திய கோட்டத்துடனே அனைவருங் காணும்படி நிகளாபுரமென்கிற உறையூரிலேவந்து தங்க, அப்போது அழகிய மணவாளன் சத்திரசாமராதி யலங்காரத்தோடு தீர்த்த பிரசாதங்க ளனுப்பிவைக்க, அவைகளை ஆழ்வாரும்திருமகளாரும் அதிப்ரீதியுடன் அங்கீகரித்து மற்றதை மற்றவர்களுக்குப் பிரசாதித்து, அங்கிருந்து புறப்பட்டு திருவரங்கன் திருப்பதியுள் எழுந்தருளினவாறே, சூடிக்கொடுத்தாள் வந்தாள் ஆண்டாள்வந்தாள் திருப்பாவைபாடிய செல்விவந்தாள், என்று பலசின்னங்கள் பரிமாற வெழுந் தருள்வித்துக்கொண்டு, அழகிய மணவாளன் திரு

மண்டபத்துள் சென்று நின்று திருப்பல்லக்கின்பட்டுத் திரையை வாங்க, அப்போதே நாச்சியார் அகிலருங் காணும்படி உதறியுடுத்த பட்டுச்சேலையும், பருத்த செங்கழுநீர்மாலையும், திருநுதற் கஸ்தூரி நாமமும், கயல்போல மிளிர்ந்து காதளவோடிய கடைக் கண்விழியும், பிரகாசிக்கச் சிலம்பார்க்க சீரார்வளை யொலிப்ப, அன்ன மென்னடைகொண்டு அணியரங்கத்தம்மான் திருமுன்பே சென்று, கண்களாரக் கண்டுகளித்து, கேசவநம்பியைக் கால் பிடிப்பாளென்னும் பேர்பெற்று உள்ளேபுகுந்து, நாகபரியங்கத்தை மிதித்தேறி, திருவரங்கச் செல்வனைசேர்ந்து அவன் திருவடிகளிலே அந்தர்ப்பவித்தருளினார்.

## மகாலட்சுமி உற்பத்தி.

சகலலோக மாதாவாகிய சாட்சாத் திருமகள். முன்னர் ஒரு காலத்தில், பிருகுமகாமுனிவர் பாரியையாகிய கியாதியினிடத்தில் தாதா விதாதா என்கிற இரண்டு குமாரர்களையும் ஸ்ரீமந்நாராயணனுக்கு பிரியபத்தினியான ஸ்ரீதேவியென்று சொலலப்பட்ட மகளையும் பெற்றார்.

பின்னர், தேவரும் அசுரருங்கூடிப்பாற்கடலை யடைந்து, அமுதங்கடைந்த காலத்தில், அப்பாற்கடலினின்று அதியற்புதமும் அபூர்வமுமான திவ்வியசாந்நி விசேடத்தினாலே திக்குகளெல்லாம் பிரகாசிக்கும்படியாய், மலர்ந்தசெந்தாமரைப்பொகுட்டை ஆசனமாகக்கொண்டு, தாமரைப் புட்பங்களையே திருக்கைகளிலும் தரித்துக்கொண்டு சகன்மாதாவான பெரியபிராட்டியார் திருவவதரிக்கக்கண்டு, மகா இருடிகளெல்லாம் பரமசந்தோட முத்தர்களாய் திரீசூக்தங்களைக்கொண்டு பலவிதமாகத்தோத்திரஞ்செய்தார்கள்.

அப்போது பிராட்டியின் சன்னிதியிலே விசுவாவசுமுதலான கந்திருவர்கள் கீதங்களைப்பாடினார்கள். கிருதாசிமுதலான அச்சர ஸ்திரீகள் நிர்த்தனஞ் செய்தார்கள். கங்கைமுதலான மகாநதிகள் தங்கள் தீர்த்தங்களைக்கொண்டு அந்தப் பிராட்டியின் திருமஞ்சனத்திற்காக ஸ்ரீரூபந்தரித்துச் சேவித்து நின்றன. திக்கயங்கள் நவரத்தின கசிதமான சொன்ன கலசங்களிலே அந்ததீர்த்தங்களையெடுத்து சருவலோக மயேசுரியான அந்தப்பிராட்டிக்குத் திருமஞ்சனம் செய்வித்தன. அந்தச் சிராதி ஒரு புருடரூபத்தைத் தரித்து நித்திய விகசிதமான திவ்விய மாலிகையைத் தாயாருக்குச் சமர்ப்பித்தது உடனே விசுவகன்மாவானவன் திவ்விய ரத்தினமயமான திருவாபரணங்களைத் தாயார் திருமேனியிலே சாத்தினன்.

இவ்விதமாய் அவரவர்செய்த கயிங்கரியங்களைத் திருவுள்ளம் பற்றித் திருமஞ்சனங்கண்டருளித் திருவாபரணம் திருமாலைமுதலானவைகளைச் சாத்திக்கொண்டு அந்தப் பிராட்டியானவள் பிரமருத்திர புரந்தராதி தேவர்கள் பார்த்துக்கொண்டேயிருக்க, அந்தத் தேவசங்கத்தின் நடுவே எழுந்தருளியிருந்த பெருமாளுடைய திருமார்பிலே எழுந்தருளியிருந்தார்.

ஸ்ரீதேவி பிருகுமகாரிஷிக்குக் கியாதியென்கிற ஸ்திரீயினிடத்தில் அவதரித்தாளென்று சொன்னோம். பின் திருப்பாற்கடலிலேயும் அவதரித்தாள்; இதுமாத்திரமன்று உலகநாதன் எப்போதெப்போது உலகங்களில் அவதரிப்பானோ அப்போதெல்லாம் ஸ்ரீதேவியும் அவனோடுகூடவே அவதாரஞ்செய்தருளுவள். நாராயணன் அதிதிக்குக் குமாரனாக அவதரித்தபோது இவள் பதுமையென்கிற திருநாமமுடையவளாயும், அவன் பரசுராமனாக அவதரித்தபோது இவள் தரணியாகவும், அவன் சக்கிரவர்த்தித் திருமகனானபோது இவள் சீதாபிராட்டியாயும், கண்ணனாக அவதரித்தபோது இவள் உருக்குமணியாகவும் இப்படியே எம்பெருமானை விட்டுப் பிரியாமல் கூடவே அவதரித்துவந்தனள்.

---

தேவதைகளி னுற்பவத்தைக் கிரமமாகச் சொல்லுமளவில் பிரளயசிருட்டி, கற்பாந்தசிருட்டி, காரணார்த்தசிருட்டி, பிரமசிருட்டி, எனப்பேதங்கள் பலவாயிருப்பதாலும், யுகங்கள் பலவாயிருப்பதாலும், அனேக மதங்களாய் ஒவ்வொருமதமும் தத்தமதுசித்தாந்தத்தையே பூர்வபக்கஞ்செய்வதாலும் தேசங்கள் பல பகுப்பாதலாலும், தேசம், காலம், மதம் முதலியவற்றிற் கேற்க சாத்திரங்கள் பலவகைப்பட்டுள்ளதாலும், இன்னது இத்தன்மையது என முடிவுபடுத்திக்கூறக் கூடாததாயிருக்கின்றன. அன்றி, சாத்திரங்களோ சத்தியினா லுண்டானதென்றும், பரமனால் படைக்கப்பட்டதென்றும், விஷ்ணுவினால் படைக்கப்பட்டதென்றும், சிவபெருமானால் படைக்கப்பட்டதென்றும், பிரமனினாலுண்டாயதென்றும், சர்வமும் இயற்கையே என்றும், முனிவராலுண்டானதென்றும், மாயையினாலுண்டானதென்றும் பேதிக்கின்றன. ஆயினும், ஒருவகையாய் யாவருங்கொள்ளக்கிடக்கும் பொதுநெறியினளவான சில தேவதைகளுற்பவத்தை மாத்திரமே ஒருவகையாற் கூறினம்.

தேவோற்பத்திகாண்டம்
முற்றிற்று.

மூன்றாவது

# மதபேத காண்டம்.

மதமாவது விவேகிகளால் தங்கள்தங்கள் அறிவின் தன்மைக் கேற்க ஒரு தெய்வத்தையும், ஆசார இருத்தியங்களையும், நடையுடையாதிகளையும் ஏற்பாடுசெய்து அவ்வழியே தத்தமது சார்பினரையும் நடக்க வற்புறுத்தி, ஒரு நூலியற்றி யொழுகும் ஒரு முடிபேயாம். அஃது உலகில் அளவிறந்ததாய்க் காணப்படுகின்றது அவைகளில், சில மதங்கள் பூர்வீகமாயும், சிலமதங்கள் இடையிற் றோன்றியதாயும், சிலமதங்கள் தற்காலத்துண்டானதாயுமிருக்கின்றன. அவற்றுள் சிலமதங்கள் விக்கிரகாராதனையோடு கூடியதாயும், சிலமதங்கள் ஆராதனை முதலியவைக ளில்லாததாயும், சில மதங்கள் தெய்வமே யில்லையென்றும், சிலமதங்கள் தாங்களே தெய்வமென்றும் கூறுகின்றன; இதில் அநேகமதங்கள் தங்கள் தெய்வமுண்டென்றுகூறினும், அதன் இலட்சணகிருத்தியங்களின்ன தென்று கூறாமலே மனம்போனபடியே சாத்திரங்களின்றி அனுட்டித்துவருகின்றன.—அவற்றுள் சிலமதம்,

| | | | |
|---|---|---|---|
| காற்றே | தெய்வமென்றும் | பட்சிகளே | தெய்வமென்றும் |
| சந்திரனே | ,, | சத்தியே | ,, |
| அக்கினியே | ,, | தந்தையுந்தாயுமே | ,, |
| தீபமே | ,, | பஞ்சகந்தமே | ,, |
| சூரியனே | ,, | சுவாசமே | ,, |
| பஞ்சபூதமே | ,, | நவக்கிரகங்களே | ,, |
| ஆகாயமே | ,, | அறிவே | ,, |
| பூமியே | ,, | அரூபமே | ,, |
| மரங்களே | ,, | ஆசாரியனே | ,, |
| பாம்புகளே | ,, | நட்சத்திரங்களே | ,, |

இதுமுதல் அனந்தவிதமாகக் கூறி மகிழுகின்றன. வேறு அநேகமதங்கள் சமய சின்னங்கள்; சாத்திரம்; நியமம் முதலியவைகளின்றி ஆடுமாடு பன்றி கோழி முதலியவைகளைக் கொல்லுதலும் குடித்து வெறித்து ஆடுதலுமே முடிவாகக்கொண்டு காளி; கூளி; அண்ணன்மார்; வீரன்; இருளன்; சாலக்காள்; கறுப்பன்; காளன்; நீலன்; மலையாளிமுதலிய தேவதைகளைப் பூசித்தும், சில மதங்கள் பிறரை வஞ்சித்தல்; கொல்லல்; திருடல்; வெல்லல் ஆட்டல்; அடித்தல் முதலிய பிரயோசனங்களையே முடிபாகக்கொண்டு கொள்ளி குறளி; தூமா; காட்டேரி; குட்டிசாத்தான்; மலக்குட்டி முதலியவைகளையே தேவதையாகக்கொண்டும், சிலமதங்கள்யாசி

த்தல் முதலியவைகளையே பயனாகக்கொண்டு பல வேடமிட்டும்; சிலர் மதம் இன்னதென்று தெரியாமலே உண்டு தங்கி யொழிந்தும்; வியர்த்தமாகின்றன.

இங்ஙனந்தோன்றிய *மதங்களுள் ஒவ்வொரு மதங்களும் ஆசாரிய நாமரூப கிரியாபேதங்களால் அனந்தவகைப்பட் டிருக்கின்றன. அவற்றுள் கிறிஸ்துமதமென்பதொன்றுமாத்திரம் ஏறக்குறைய இருநூற்றைம்பது பேதமாயிருக்கின்றது என்றால், மற்ற மதங்களின் பேதபாவங்களை அளவிடக்கூடுமோ? கூடாது. ஆயினும் ஏகதேசமாக எமக்குத் தெரிந்த அளவில் வழங்கும் மதங்களில் நினைவுக் கெட்டியவற்றுள்,

## மதங்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1 | சைவம் | 23 | பாடணவாதம் |
| 2 | வைணவம் | 24 | சாங்கிராந்தவாதம் |
| 3 | சாத்தேயம் | 25 | அவிகாரவாதம் |
| 4 | காணபத்தியம் | 26 | பரிணாமவாதம் |
| 5 | கௌமாரம் | 27 | சுத்தசைவம் |
| 6 | புத்தம் | 28 | பேதவாதசைவம் |
| 7 | சௌராந்திகம் | 29 | ஆதிசைவம் |
| 8 | யோகாசாரம் | 30 | நிரீச்சுரவாதம் |
| 9 | மாத்துமீகம் | 31 | சுமார்த்தம் |
| 10 | வைபாடிகம் | 32 | வீரசைவம் |
| 11 | ஆருகதம் | 33 | அத்துவைதம் |
| 12 | தார்க்கிகம் | 34 | விசிட்டாத்துவைதம் |
| 13 | மீமாஞ்சகம் | 35 | ஆத்திகம் |
| 14 | மாயாவாதம் | 36 | நாத்திகம் |
| 15 | சாங்கியம் | 37 | பிரமசமாசம் |
| 16 | யோகம | 38 | வரவைணம் |
| 17 | பஞ்சராத்திரம் | 39 | இராமாநுசம் |
| 18 | பாசுபதம் | 40 | மாத்துவாசாரம் |
| 19 | மாவிரதம் | 41 | பாட்கரம் |
| 20 | காளாமுகம் | 42 | இராமாநந்தம் |
| 21 | வாமம் | 43 | வல்லபசாரம் |
| 22 | வைரவம் | 44 | சைனியம் |

* இம்மமதங்களி னளவைகளை நமது ஆங்கிலேய அரசாங்க குடிமதிப்புச் சபையாரதுரிப்போர்ட்டுகளிலும் மானுயூல்களிலும் மதவிருட்சநூலிலும் தத்துவ நிசாநுபோகம் முதலியவைகளிலும் பார்க்கக் காணலாம்.

45 சமணம்
46 பௌத்தம்
47 சார்வாகமம்
48 சாந்திரம்
49 கிரகாதிகம்
50 பஞ்சபூதாத்துமம்
51 இந்திரியாத்துமம்
52 அந்தக்கரணாத்துமம்
53 பிரணாத்துமம்
54 சூனியவாதம்
55 சிவசமவாதம்
56 அச்சுமாறுவாதம்
57 வேதசமாசம்
58 சீக்கியம்
59 தியாசபிகல்
60 மகம்மதியம்
61 கிறிஸ்து
62 சீனம்
63 எகிப்து
64 யூதேயம்
65 கிரீக்கு
66 ரோமன்
67 புரோடெஸ்டாண்டு
68 லூத்தர்
69 பாப்டிஸ்டு
70 வெஸ்லின்
71 ஓயிட்பீல்டிஸ்ட்
72 கால்வனிஸ்ட்
73 பிரிசிபிடேரியன்
74 அண்டிநோமியனர்
75 யூனிடேரியன்
76 சொஸினியர்
77 அரியான்
78 சாபிலயன்
79 லண்டன்மிஷன்
80 ஸ்காட்சுமிஷன்
81 எபிஸகோபில்
82 குவாகர்
83 பிரமேசன்
84 சுவேதன்பர்கியர்
85 பார்சிகம்
86 கிரேக்
87 ரோமகர்
88 ஸ்காந்திநேவியர்
89 மெக்சிகோ
90 தார்தார்யா
91 ஜப்பன்
92 சீயம்
93 பெரூவியன்
94 கனடா
95 பைகோ
96 பிலிபிமன்
97 மலாகா
98 அமேத்ராபேர்னியர்
99 ஜாவா
100 மலாயா
101 லாப்லா
102 காங்கோ
103 ஆரக்கான்
104 உருத்திரம்
105 பாடாண்டம்
106 மிசிசி
107 பிலோரடைன்
108 காரபி
109 கினியா
110 பெனின்
111 கபிரேயன்
112 தாந்தோன்றி
113 லீலாபிரம்மவாதி
114 பிரதிவிம்பவாதி
115 வைதிகவேதாந்தம்
116 சுத்தவேதாந்தம்
117 நிரீசுரசாங்கியம்
118 வைசேஷியம்
119 வையாயிகம்
120 சிவாத்துவிதம்
121 பாஸ்கரியம்
122 சத்தப்பிரமவாதி
123 பாட்டம்
124 கிரீடாப்பிரமவாதி
125 பிரபாகரம்
126 ஆரங்கம்

127 பௌராணிகம்
128 உபக்கிரமவாதி
129 சிவசமவாதம்
130 அயிக்கவாதம்
131 பாசுபதிமதம்
132 சங்கிராந்தி
133 பிரவாஹேஸ்வராதி
134 சம்மேளிதம்
135 அனேகசுரவாதம்
136 அவுளயாமளேவாதம்
137 ஆசிவகம்
138 சந்திரவாதம்
139 சூரியவாதம்
140 அக்கினிவாதம்
141 ஊழ்வாதி
142 காலவாதி
143 மந்திரவாதி
144 அவிழ்தவாதி
145 எந்திரவாதி
146 அத்துவாசம்பவாதி
147 தர்க்கவாதி
148 தானசங்கற்பவாதி
149 விரதசங்கற்பாவதி
150 கதோளவாதி

முதலிய அனேக மதங்களிருக்கின்றன. அம்மதங்களுக்கு தேசத்தாலும் ஆசாரத்தாலும் இடத்தாலும் ஆசாரியராலும் சாதியாலும் இவ்வித பெயர்களமைக்கப்பட்டதாகத்தெரிகிறது. இதில் யாதொருகாரணமின்றி வைராக்கியத்தாலும் உண்டானதாகவும் யாதொரு ஏற்பாடுமில்லாமலே தோன்றியதாகவுங்கூட சிலமதங் களிருக்கின்றன.

அம்மதங்கள் அனேகந்தோன்றி யழிந்தும் அனேகம் நூதனமாகத்தோன்றியும், அநேகம் அநாதியாகவுமிருக்கின்றன. இவைகள் உலகம் அனேககாலமா யிருப்பதாலும், இவ்வுலகம் அளவில்லாத இடமகன்றபெரிய நிலமாயிருப்பதாலும், இந்நிலங்களில்வசிப்பவர்கள் எண்ணற்றவர்களா யிருப்பதாலும், அவர்கள் விவேகம் பலமாதிரியானதோற்றமாயிருப்பதாலும் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ற உண்டிஉடை நடைகளைக்கொள்ளவேண்டியதாயிருப்பதாலும் பிறந்தவர்கள் யாவருக்கும்யார் நம்மைப்படைத்தவர்கள் அவர்களல்லவோ தெய்வமென்னுமுணர்ச்சி யிருப்பதாலும், அவரவர்களிஷ்டப்படி ஒவ்வொரு முடிபாய்மதங்கள் அனேகமாயினவல்லாமல் வேறல்ல. அவற்றுள்நமது இந்துதேசத்தில் தற்காலங் காணப்படும் மதங்களில் சிலவற்றை எமக்குத் தெரிந்தமட்டும் சில சாத்திராதாரங்கொண்டு கூறுகின்றோம்.

## இந்துசமயம்.

இந்துதேசம் * இந்து சமயம் என்பது இந்தியாதேசத்தில் வழங்கும் சமயங்களேயாம்.

---

* இந்துதேசமென்பது இந்துநதிகாரணமாகவழங்குகின்றது இதை முன்னொருகால் பரதனுண்டமையால் பரதகண்ட மென்றும், பரதவருடமென்றும், ஆரியர்கள் வசித்தமையால் ஆரியவர்த்தமென்றும், இத்தேசத்தின் நாவல்விருட்சங் காரணமாக சம்புத்தீபமென்றும் கூறுகின்றனர்.

இந்தியாதேசமானது ஆசியாகண்டத்தின் தென் திசையில் வடபாகமாயுள்ள ஒரு பகுதி; இது தெற்கு வடக்கில் பத்தொன்பதினாயிரம்-மைல் நீளமும், கிழக்கு மேற்கில் ஆயிரத்தெண்ணூறு-மைல் அகலமும், அதாவது, பதினைந்து-லட்சம் மைல் சுற்றளவும் உள்ளது.

## காலம்.

இக்கண்டத்தின் காலவரையறையைக் கூறுமிடத்து இந்நாட்டுசாத்திரங்களாலும், பிற்கால ஆங்கிலேய அரசாட்சியில் குடிமதிப்புச் சபையாரால் பிரசித்தஞ்செய்துள்ள ரிப்போர்டுகளாலும் காலகணிதங் கூறக்கூடியதாயில்லை.

## இந்துக்கள்.

ஆயினும் இராசாங்க கலகங்களாலும், சில அடவிகளைச்சேதித்துக் குடியேற்றும் காரணமாகவும், இடையில் அநேகவேறுதேசத்தவர்கள் குடியேறியதாகத் தெரிகிறது. வேறு சிலர் இத்தேசத்தில் குடியேறியகாலத்தை எந்நூலுங் குறிக்கவில்லையெனக் கூறியும், சிலர் கிறிஸ்து பிறந்த முந்நூறு-வருடத்திற்குமுன்பு மத்தியமாகாணத்தின் கடற்கரையில் இடையர்களாயிருந்த சித்தியமங்கோலியர் முதலியவர்கள் முன்னர் துரேனியராய், அப்பால் ஆரியராகி பாரசீகதேசத்தின்மேல் விழுந்து இந்து தேசத்திற்கு வந்து சிந்துநதி தீரத்தில் குடியேறினர். அச்சிந்துநதிக்கு இந்துநதி என்றொரு பேருமிருந்ததால் அந்நதி தீரத்தி லிருந்தவர்களுக்கும் இந்துக்களென்றோர் பெயருண்டானது என்று கூறுகின்றனர்.

வேறு சிலர், கிறிஸ்துபிறந்த ஆயிரத்தைந்நூறு-வருடத்திற்கு முன் மத்தியிலிருக்கும் திராவிடர் முதலியவர்களோடு ஆரியர் இந்துதேசத்திற் பரவினார்களென்று கூறுகின்றனர்.

## இந்துக்களின் பாஷை.

அவர்கள் குடியேறியபோது நாளாவட்டத்தில் இந்தி, வங்காளம், மாராட்டிரம், குசராத்தி, பஞ்சாபி, காஸ்மீரம், சிந்தி, ஒரியா, தமிழ், மலையாளம், கன்னடம், காண்டு, தெலுங்கு, கொலேரியன் முதலான பாஷைகளை வழங்கிவந்ததாகவுங் கூறுகின்றனர். ஆனால், தற்காலம் அநேக பாஷைகள் வழங்குகின்றன.

## இந்துக்களின் சாத்திரங்கள்.

இப்பாஷைகளுக்கெல்லாம் முதற்பாஷையாகவும் யாவரும் புகழத்தக்கதாயுமுள்ளது, தமிழ் சமுஸ்கிருதம் என்பதேயாம். இச்சமுஸ்கிருத பாஷையில் இந்துக்களின் முக்கிய சாத்திரங்களாகிய

வேதம், ஆகமம், உபநிடதம், புராணம், இதிகாசம், சாத்திரம் முதலியவைகள் பொருந்தியிருக்கின்றன. இவைகளின் விவரங்களை பிரபஞ்ச உற்பத்தி முதற்காண்டத்துள்ளும், சிவசொரூபத்துள்ளும் காண்க.

தெய்வங்கள்.

இச்சாத்திரங்களில் இந்துக்களுக்குப் பரதெய்வமாயுள்ளது. பிரமம், மகேச்சுரன், சதாசிவன், சிவன், உருத்திரன், விநாயகன், கந்தன், பார்வதி, நந்தி, திருமால், பிரமன், இலக்குமி, சரசுவதி முதலிய தேவதைகளும், ஸ்ரீஞானசம்பந்தர் முதலிய அடியார்களும், அவர் வழிவந்தவர்களும், அவர்களடியார் பொருட்டுக்கொண்ட திருமேனிகளின் பிரபாவமும் கூறப்படுகின்றன.

சாதி.

அவற்றை அனுட்டிப்பவர்கள் பிரம்மசந்ததியாரான மறைபோர், மன்னர், வணிகர் வேளாளர்முதலிய எண்ணற்ற மரபினருள்ளார்.

ஆசாரியபீடங்கள்.

இவர்களுக்கு ஆசாரிய பீடங்கள் காசி, காஞ்சி மதுரை, கும்பகோணம், திருவாவடுதுறை, தருமபுரம், பொம்மையபாளையம் அந்தியூர், திருக்குமுளம், திருப்பனந்தாள், திருநெல்வேலி, சிங்கேரி, கும்பகோணம் சென்னை முதலிய அநேக இடங்களிலிருக்கின்றன.

மதங்கள்.

இவர்கள் தங்கள் ஆசாரியர் மூலமாக மேற்படி சாத்திரநெறியே நின்று மேற்கூறிய தெய்வங்களையே கடைப்பிடித்தவர்களேயாயும் அவருள் பலகொள்கையையும் பலசித்தாந்தத்தையும் கொண்டவர்களாய் அநேகசமயிகளா யிருக்கின்றனர். அவற்றுள்-

முதலாவது சைவசமயம்.

சைவம் என்பது சுத்தம் என்னினும், சிவபெருமானை வழிபடுவோர்களேயாம். இவர்கள் விபூதி உருத்திராக்க காவியாதிகளை யணிந்து வேதாகமநெறியே வழிபட்டிருப்பவர்கள்.

இவர் உட்சமயங்கள்.

| | |
|---|---|
| ஆகமநெறியாக சொல்லும் சமயங்கள். | 7 |
| இதில்வேறு சாங்கியத்தோடு அட்டவாதம் | 8 |
| ,, பேதமாகவுள்ள சமயம் | 16 |
| அன்றிப் புறச் சமையம் | 3 |
| ,, பாடன முதலிய சமயம் | 38 |
| ,, பாசாண்டமதம் | 90 |

அவற்றுள்.—சைவம், சிவாத்துவிதம், சம்மேளனம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம். இவைகளே அட்டசைவமாம்.—சைவபேதமாயுள்ளது ஊற்றசைவம், அநாதிசைவம், ஆதிசைவம், மகாசைவம், பேதசைவம், அபேதசைவம், அந்தரசைவம், குணசைவம், நிற்குணசைவம், அத்துவாசைவம், யோகசைவம், ஞானசைவம், அவாந்தரசைவம், கிரியாசைவம், சுத்தசைவம், நாலுபாதசைவம், பேதசைவம் என்னும் பதினாறுமாம்; இவையன்றி, அட்டவாதமாவது சிவசமவாதி, ஐக்கவாதி, சங்கிராந்தவாதி, பிரவாகேசுரவாதி, கபாலிகவாதி, அவிகாரவாதி, பேதாபேதவாதி, அனேகேசுரவாதி என்பனவாம்.

வேதாங்கீகாரமானவைதிகத்திற் பேதமானது:-நியாயம், வைசேடிகம், மீமாஞ்ஞம், சாங்கியம், வைணவம், பாட்டம், பிரபாகரம், வியாகரணம் இவ்வெட்டுடன் அன்றி, மாயாவாதம், பாஸ்கரியம், சத்தப்பிர்மவாதி, புராணீகம் என்பனவுமாம்.

முதலாவது: மேற்சொன்ன சத்த சைவங்களுள் சைவத்தின் பகுதியே சத்தவிதமாயிருக்கின்றன. அவை அநாதிசைவம், ஆதிசைவம், மகாசைவம், அநுசைவம், அவாந்திரசைவம், பிரவாசைவம், அந்தரசைவம், என்று ஏழுவிதமாயிருப்பன. இவற்றுள்,—

1. சிவனே அநாதிசைவன்

2. சிவபெருமான்முகம் ஐந்தில்தீட்சதரான கோப்தசுகாதி இருடிகளே ஆதிசைவர்கள்.

3. மேற்படி இருடிகளின் கோத்திரரும் தீட்சதருமான சிவதத்துவங்களை அனுட்டிப்பவர்களே மகாசைவர்கள்.

4. சிவ சமற்காரங்களை அனுட்டிப்பவர்களான க்ஷத்திரியர்களே அநுசைவர்.

5. சைவதீட்சா சம்பன்னரான சூத்திரர்களே அவாந்திரசைவர்களாம்.

6. சைவதீட்சா சம்பன்னரான அம்பரீட்டுலா வாதிகளே பிரவாசைவர்.

7. தீட்சாவிதரானவர்களே அந்தர சைவரென்று ஆகமஞ்சொல்லுகின்றது.

இரண்டாவது: இச்சைவம், வாமம், தட்சணம் மிசிரம் சித்தாந்தம் என்று நான்குவகைப்படும். அவையாவன:—

1. சத்தியே பரமென்பது வாமம்.
2. வயிரவ பரமானதே தட்சணம்.
3. சத்தமாதுற்பவமானதே மிசிரம்.
4. பரமசிவமானதே சித்தாந்தம் என்பர்.

மூன்றாவது: இச்சைவங்களில் வீரசைவம் சுத்தசைவம் மிசிர சைவம் சாமானியசைவம் என நான்குவகையாம். அவற்றுள்:—

1. விபூதிதாரண மந்திரசுத்தாத்தமனாய் 0இலிங்கங்களைக் கண்டவுடனே நமஸ்கார பிரதக்ஷண பூஜைகளைச்செய்து பத்திசிரவணாதிகளை மேற்கொண்டு சிவபுண்ணிய விரதசீலனா யிருப்பவன் சாமான்னியசைவன்.

2. * பஞ்சமூர்த்திகளையும் ஆவரணதேவதைகளாய் வைத்து ஆகமப்படி அருச்சித்து அந்நெறியே ஒழுகுபவன்மிசிரசைவன்.

3. ஆதிசைவமரபில் மசாவேதாதி ஆகமசித்தாந்தியாயிருப்பவனே சுத்தசைவன். இவனை வேறுசிலபேதமாகவுங் கூறுவர்.

4. வீரசைவமதத்தி னிலக்கணங்களை நேர்ந்தவிடத்தில் இந்நூலிற்காண்க.

ஆகமசம்பந்தமான

## சத்தசைவப்பகுதியில் சிவாத்துவிதி மதம்.

சிவபெருமான் நித்த சுத்த முத்தனாய் இரண்டாவ தின்றி அறிவே வடிவாயிருப்பன். அலைகடலினுரை திவலையுதித்தொடுங்குமாபோல, பேதமாய் ஆன்மாக்கள்தோறும் நின்றும் தன்னை மறைத்து உபாதிகளில் சுகதுக்கம் போனின்று தானே வேறின்றி எல்லாமாயிருப்பன்.—முத்திநிலை சாம்பவி தீட்சைபெற்று அனுபவ நிட்டையால் இலயமாய்ப் பெறுவன் என்று கூறும்.

## சம்மேளிதசைவ மதம்.

திரிபதார்த்தமும் நிச்சயமே;பாசம் அனாதியாம் பசுவைப்பந்திக்கும்; பதி-அனாதிமுத்தன்; பாசம்-அனாதி; பரன்-வயிந்தவசரீரன்; பசு-அனேகமாய், தனுவாதிபோகன்; பாசம்-பசுந்தம் என்றும், சிவத்திபாஞானபூசையால் பந்தங்களை நீங்கி சிவனோடைக்கியமாதலே முத்தி என்றுங் கூறும்.

---

0 இலிங்கங்கள் என்று பொதுவாகச்சொன்னதனால் சுயம்புலிங்கம் தேவலிங்கம் தானலிங்கம் இருஷிலிங்கம் மானசலிங்கம் முதலியவைகளைக்கொள்க.

* பஞ்சமூர்த்திகளாவன:—சிவன், உமை, குகன், கணபதி, விஷ்ணு என்பனவாம். சிலர் சூரியனையுஞ்சேர்த்து ஆறுமூர்த்திகளாகக் கொள்ளுவதும் வழக்கே.

உதாரணம்.—

பாசமாம் பந்தம் பசுபெத்தன் முத்தனும்
மீச னநாதி யிவர்ஞான—பூசையா
லம்மோக மாறி யவரொன்றல் வீடென்றுஞ்
சம்மே ளிதசைவன் றான்.

## பாசுபதிமதம்.

பாசுபதிபதமாவது,—திரிபதார்த்தமே நித்தியமென்று கொண்டு தீட்சபெற்று ஆசாரியன் மூலமாய் உபதேசம் பெற்று சிவ பூசையால் நீரோடு நீர் கூடினாற்போலக் கலந்திருப்பதே முத்தி யென்று கூறும்.

## மகாவிரதிமதம்.

சிவனொருவனுண்டு; ஆன்மாக்க ளநாதியில் மலத்திரையங்களோடு கூடி வசிப்பர்; இம் * மும்மலங்களும் அநாதியாயுண்டு; பதிபசு பாசங்கள் நித்தியமே; பதி-தனது ஞானசத்தியால் ஆன்மாக்களைப் பெத்தாவத்தை படச்செய்வது, பசுவானது மும்மலத்தினும் பந்திக்கப்பட்டு செனனவேதுவடைகின்றன; பாசமானது பசுவுக்குப் பந்தமாய் ஞானசத்தியால் பலங்கெட்டுப் பக்குவமாகின்றன.

பந்தநிலே—அநாதியில் மும்மலத்தில் பந்தப்பட்ட ஆன்மாக்கள் மாயையிடம் தனது கரணாதிகளை யுண்டுபண்ணிப் பலபக்குவமாக, சனன மரணங்களை யுண்டாக்கி, துக்கங்களை யனுபவிக்கப் பண்ணுவது.

முத்திநிலே—ஆன்மா ஒரு பக்குவத்தால் தீட்சைவிதியால் மலத்தினின்று நீங்கி ஆகமப் பிரமாணாதிகளால் பூசித்து, கடைசியில் கருத்தத்துவ சங்காரத்தைவிட்டு நித்திய வியாபக சைதன்னியனான ஆன்மா சிவனது ஞான்சத்தியை யுடையதாய்ச் சிவலோகத்தில் ஞானமாத்திரத்துடனே யிருப்பான். என்பது; இது ஓர் உருத்திரரால் ஏற்படுத்தப்பட்டது.

## காளாமுதன் மதம்.

காளாமுதன் மதமாவது மேற்படி மகா விரதியைப்போலவே சொரூப உபக்கிரம பெத்த முத்தியெல்லாஞ் சரியென்றறிக. ஆனால், மகாவிரதிக்கும் இவனுக்கும் பேதமென்னவென்றால், தந்திரபேதம் சிறிதுண்டு. அவையாதெனில், ஆன்மா நித்திய வியாபக சைதன்னிய னென்பதே.

* மும்மலமாவன - ஆணவம், கன்மம், மாயை.

உதாரணம்.—

அத்தியக்கஞ்சடைமுதலா மடையாளங் கொண்டன்பாற்
பத்தியொடுவழிபட்டுப் பருகியமங்கொலையாமன்
மெத்தரியலவ்வுமேல் வினையாலுடலம்விடும்பொழுது
சித்தாதொருஞ்சிவலோக மடைவர் சிவார்ச்சனையாலே.

—த. கி. போ. சாரம்.

## வாமமதம்.

இது சத்திமதம். இதை சாத்தேயமதமென்றுங் கூறுவர் இம் மதத்தர் சத்தியே பரமென்றும், சத்தியினாலேயே சகல சராசரங்களும் உண்டாய், பஞ்சம் கிருத்தியப் படுகிறதென்றும், அம்மையையன்றி வேறொருவரு மிக்கவரில்லையென்றும், பிரமாதிதேவர்களும் அம்மையினது சிருட்டியே யென்றும் கூறும்.

முத்தி நிலையாவது,—இச்சத்தி வாலை, புவனை, திரிபுரை என்று மூன்றாய் மூன்று சக்கரங்களைக் கொண்டுள்ளதென்றும், அச்சக்கரங்களை பொன்முதலிய லோகங்களில் பூ, மேருமுதலிய விஸ்தாரமாக வார்ப்பித்து மந்திராதிகளால் பூசித்து பிரசன்னத்துவமாக்கிக்கொண்டு வழிபாடுடையவர்களா யிருப்பதுவே மோட்சமென்று கூறும்.

அனேகேசுரவாதி அனேக தேவராலானதென்றும். வாமி சத்தியினாலேயே உண்டானதென்றும் கூறும் பேதமே யன்றி, வேறெவ்வகையினாலும் பேதமற்றவர்களா யிருக்கின்றார்கள்.

## வயிரவமதம்.

வயிரவமதமென்பது,—வயிரவனையே பரமென்று கூறும் ஆதி வயிரவன் அட்டமூர்த்தமாய் அட்டகலையாய் அகிலமும் பெத்த முத்தியும் சிவராசிகளுமாமென்றும், யோகமும் மூர்த்தமு மென்னும் இரண்டால் நிருவாணமான முத்தியுண்டாமென்றும் கூறும்.

## சிவசமவாதிமதம்.

சிவசமவாதி மதமாவது,— பதி, பசு, பாசம் மூன்றும் நித்தியமே என்று கூறும். பதியாவது நாமரூப கிரியாரகிதமாய்நித்தியமாய், அநாதியாய், சித்தாய், சத்தாய், நின்மலமாய், சுத்தமாயிருப்பது. பசுவாவது, தன்னையும் தலைவனையு மறியாது அநாதிமல சம்பத்தயாய் அனேகரூபமாய் நித்தியமாயிருப்பது. பாசமாவது அனாதி நித்தியமாய், அனந்த வியாபகசத்தியை யுடைத்தாயிருப்பது எனக்கூறும்.

## ஐக்கவாதி மதம்.

ஐக்கவாதி மதமாவது,—சிவசமவாதி மதம்போல, திரிபதார்த்த நிச்சயங்கூறி, ஆன்மா அநாதிசுத்தமென்றும், ஆணவங்கேவலாவத்தையிலில்லை, மாயையுங் கன்மமுமேயுள்ளது. விசேட தீட்சைபெற்று, சிவார்ச்சனையால் அத்துவாசுத்திபண்ணி நிருவாண தீட்சையால் சன்மநிக்கிரகஞ்செய்து கன்மம் நீங்க, இரண்டறக்கலப்பதுவே என்றுங் கூறுவது. இது ஓர் உருத்திரரால் உண்டாக்கியது.

## சங்கிராந்திவாதி மதம்.

சங்கிராந்தி வாதிமதமாவது * செக, சீவ, பரமென்னும் மூன்றில், பதி-அமலமாய், பரிசுத்தமாய், நித்தியமாய், அகண்டமாயிருப்பது. பசு-அநாதி சுத்தநித்தியமா யிருப்பது. பாசம்-சடமாயிருப்பது. இவற்றுள் தடத்தலட்சணமாவது—பதி-ஒன்றையுஞ் சுட்டாமல் தீபம்போலவிளங்கும். பசு-அனேகமாய் சூரியசந்நிதானத்தில் காந்தம் இரும்பை வலிக்குந் தன்மையைப்போல மாயாமலத்தால் உடம்பைப்பொருந்திநிற்கும், பாசம்-தநுகரண புவனபோகங்களாய் விரிந்திருக்கும் எனக்கூறுவது.

## பிரவாகேசுரவாதி மதம்

ஈசுரன், ஆன்மாக்கள், மாயை கன்மம் இவைகள் அநாதியிலேயேயுண்டு, ஈசுரன் ஒருவனதிகாரத்துக்கு முத்தான்மாவாக வந்து இரட்சிக்கும்; ஆன்மாக்களுக்கு அநாதிமலமில்லை; மாயை பந்தப்பட்டுத் தத்துவசேட்டையால் தநு கரண புவன போகங்களாய் விரிந்திருக்கும். பசுமாயா கன்மத்தால் பிறவியையடையும். தீட்சாவிதியால் மாயை கன்மமிரண்டையும் நீங்கி, சுத்தனாய் அடைவர் என்று கூறும்.

## காபாலி மதம்.

காபாலிகமதமாவது சிவசமயத்துள் மகாவிரதம், களாமுகம் போல, கிரமமுத்தியாதிகளெல்லாம் ஒன்றேயாயிருக்கின்றது. ஆனாலும் சிலபாகப்பேதமுண்டாம். என்னினும், எல்லாவகையாலும் ஏகதேசமாகப்பொருத்தமுண்டாம். இதுவுமோர் உருத்திரரால் இயற்றியது.

## அவிகாரவாதி மதம்.

சொரூப இலக்கணம்.—அவிகார நித்தியேச்சுர னொருவனுண்டு, ஆன்மாக்கள் அஞ்ஞானமாய் ஆணவமல விருளிலழுந்தி அ

* செகம்-மாயை, சீவர்-பசு, பரம்-பதி, என்பனவாம் இதனையே திரிபதார்த்தமென்பது.

னேகராய் இருப்பர், ஆணவமலம் இருளாம். பதி, பசு, பாசம் இம்மூன்றும் அனாதி நித்தியமென்று கூறும்.

தடத்தலட்சணம்.—பதி நீரும் தண்மையும்போலஐக்கியப் படுத்தும். பசு-இறைவனது ஞானத்தால் சருவத்தையு மறியும். பாசம்-மறைந்து சிவரூபத்தைக்கொள்ளும்.

இவர்கள் வேடம் நரகபால பிட்சாடனமாம். கருத்துருத்துவமே சங்காரமானதால், அது நீங்கி ஞெப்திமாத்திரமானதே மோட்சமாம். இதுவுமோர் உருத்திரரால் கற்பிக்கப்பட்டதாம்.

## சைவபேதாபேதவாதி மதம்.

சைவபேதாபேத வாதிமதமாவது:—சைவாகமத் துட்பட்ட கிருத்திய லட்சண சித்தாந்தமேயானாலும் சத்திபின்பேதத்தாலே சிவனும்-சத்தன்,-யுத்தி யுத்தன், பிரவத்தனென்னும் மூன்றும் எனக்கூறி, சித்தாந்த இலக்கணங்களையே பிரமாணமாகக்கூறும்.

## அனேகேசுரவாதி மதம்.

அனேக கடவுளருண்டென்றும், அனேகரால் பஞ்சகிருத்தியம் நடக்கிறதென்றும், ஆன்மாசெனனமடையாமல் எப்போதுஞ் சுகத்திற்றானே யிருக்குமென்றுங் கூறும்.

## சோடசசைவபேதம்

### ஊர்த்தசைவம்

சிவனொருவனுண்டு; அவன் தத்துவாதீதன்; இவனை யடைவதெவ்வாறெனின், விபூதி, உருத்திராக்கம், சடை, பூநூல் தரித்து சிவலிங்கபூசைசெய்து பத்தியாய், பஞ்சாட்சரஞ் செபித்து, துறவு அல்லது கிரகத்திலிருப்பதா மென்பர்.

உதாரணம்.

சொன்னவீரெட்டாஞ்சைவத் தந்திரத்தொழிற்பாடோதி
துன்னியவூர்த்தசைவர்க் கோதுபல்சடைருத்ராக்கந்
துன்னியவிபூதிபூசை தோன்றுநூலுடனேயீசன்
பின்னமில்தத்வாதீத னெனப்பெயர் பேசலாமே.

## அனாதி சைவம்.

இது திரிபதார்த்தமாய் அனாதிநித்த வியர்த்தமாய்விளங்கும் சிவனை குணவிகற்பமின்றி யுற்று, விபூதி உருத்திராக்க பஞ்சாக்கர குரு லிங்கவேடமே பொருளாகக்கொண்டு, பூசையால் பாசங்களினீங்கி, பதியோடொன்றி ஆன்மா சிவனைக் கும்பிட்டிருத்தல் பரமாயமுத்தியென்று கூறும்.

உதாரணம்.

பதிபசுபாசமூன்றும் பார்த்திடிலநாதிநித்தம்
விதிபெறுவியாத்தமென்ன விளங்குமுக்குணத்தாலொக்கும்
முதியவேடங்களோடே முடுகுயர்பாசம்நீங்கிப்
பதியுடன்கூடிக்கும்பிட் டிருத்தலேபரமாமுத்தி.

## ஆதி சைவம்.

இவ்வாதிசைவமதம் பசுவின்பொருட்டு எல்லாவற்றிற்குஞ்சிவனேயாய் பஞ்சகிருத்தியங்களைத் தலக்கி நிட்களத்தோடு சகளமாகவிருக்கும். இந்தப் பதியோடு போகங்கூடவேண்டில் மோட்சசாதனங்களுக்கேற்ற வேடங்களும் நடக்கையும்பூண்டு எல்லாஞ்சிவபோகமா யனுபவித்து, சிவவேடத்தின்மேல் விசுவாசமாய்நடந்து பதியோடுகூடி யவனிருந்தாற்போல் அவன் போகமாய் ஆன்மா விருப்பனென்று கூறும்.

உதாரணம்.

ஆதிக்குஞ்சிவனேயாகி யவன்றன்னுற்கருமமைந்து
மீதுற்றசாதலாலே விளக்கிநிட்களத்தினோடு
சோதற்றசகளமாகும் பதியதுபோகங்கூடி
லாதத்தால்முத்திவேடம் பூணலாலம்மையாவே.

## மகா சைவம்.

இது மூர்த்தி அமூர்த்திகளான பேருக்கெல்லாம் மேலானது சிவமென வேதாகமங்கள் கூறும். அச்சிவனைச் சன்மார்க்கத்துடனே சமுசாரம்நீங்கி, சடையாதி சிவவேடந்தாங்கி பூசித்துச் சகுணமாகத்தியானித்து, குருலிங்கமே பொருளெனக்கொண்டு அருள்கூடிமுத்திபெறும் ஆன்மா எனக்கூறும்.

## பேத சைவம்.

இது சிவன் அரூபன், உரூபாரூபன், உரூபன் என மூவிதமாயிருப்பன். இச்சிவனை சன்மார்க்கத்துடனேகூடி, சிவவேடம்பூண்டு குருலிங்க சங்கமத்தை வழிபட்டு, சிவனது மூன்றுவடிவினும்தியானித்து, வணங்குவதே மோட்சமெனக் கூறும்.

உதாரணம்.

பேதசைவந்தானீச னுருவருரூபாரூப
மாதலால்வேடம்பூண்டிட் டடைவியனுருவந்தன்னை
நீதியால்வணங்கமுத்தி யெனதடல், என்பதனுணறிக.

## அபேதசைவம்.

இதுபேத சைவனைப்போல எல்லாங்கொண்டு வேறுபாடின்றியிருக்கும் ஆனாலும், சன்மார்க்க நிலையால் சிவனை யறிகிறதே முத்தியென்று கூறும்.

### அந்தர சைவம்.

இவ்வந்தரசைவம் சிவவேடந்தாங்கி, சிவவியல்பையடைவதே முத்தியென்றறிவது. வேறொருவித அந்தரசைவருமுண்டு. வந்தவிடத்திற் காண்க.

### குண சைவம்.

குணசைவமென்பது.—ஆகம விதியையே பிரமாணமாகக் கொண்டுள்ளதாயினும், சிவபெருமானது அட்டமங்கள குணங்களையும் தமது எண்குணங்களாலும் வழிபட்டு, சிவவேடம் பூண்டு திரிவதே முத்தியெனக்கூறும்.

### நிர்க்குணசைவம்

நிர்க்குணசைவமென்பது;—சைவபேதம் பதினாறிலும் பொருந்தாது வேதாகமபுராணாதிகளை ஏகதேசமாகக்கொண்டுள்ளதேனும், இறைவன்குணாதி நாமரூபரகிதனானதால், அப்பரம்பொருளைப் பேதாபேதமற்று குணமில்லாமலே கூடுவதும் முத்தியாமென்க்கூறும்.

### அத்துவாசைவம்

இது சுத்தாநந்த நிட்களனாயிருக்கிற சிவபரம்பொருளை, காமரூப கிரியா வசத்ததல்லாததால், அதனைச்சத்தினி வந்தவுடன் சீடன் குருவையடைந்து தீட்சதனாகி, சைவத்துக்குள்ளவேடத்தைத் தாங்கி, குருலிங்கமே பொருளெனக்கொண்டு அத்துவாசோதனை செய்து, அவற்றின் முடிவைத் தியானித்து, சகசமாதிநிட்டைகூடி வழிப்படுவதே முத்தியென்று கூறும்.

### யோகசைவம்.

இது குணரகிதமான பரமபதியை ஆசாரியராலறிந்து யோகநெறியைக் கடைப்பிடித்து நிட்டைகூறிச் சாதித்து அட்டமாசித்திகளையறிந் தனுபவிக்கிறதே முத்தியென்று கூறும்.

### ஞானசைவம்.

சிவனைக் குருமுகமாய்த்தெளிந்து, சிவவேடம்பூண்டு, சிவபரபேதமறிந்து, ஆன்மாபரத்தோடுகூடி, சுத்தான்மாவாய், பரத்தோடுகூடுவதே முத்தியென்று கூறும்.

### அணுச்சைவம்.

சிவபெருமானை யுள்ளும் புறம்புமா யறிந்து, திகம்பரவேடங்கள்பூண்டு சன்மார்க்க லட்சணத்துடனேகூடி, குருலிங்கவேடமே பொருளாய், சிவன் பஞ்சகிருத்தியங்களையும் தரிசித்து, ஆநந்தமேலிட்டு அதில் மனோலயமாவதே முத்தியென்றுகூறும். வேறு அணுச்சைவருமுண்டு; வந்தவிடத்திற்காண்க.

## கிரியாசைவம்.

ஆசாரியனாலே சதாசிவமூர்த்தியை யறிந்து, பின்னர்ச்சமய விசேட நிருவாண கிரியா தீட்சைகளைப்பெற்று அத்துவாசோதனை செய்து, ஆவாகனாதிபேதங்களையறிந்து, பஞ்சசித்தியுஞ்செய்து கொண்டு, விதிப்படி நித்திமுத்தி பொருந்த, கன்மங்களை சாதித்து சிவார்ச்சனை செய்து, சோடசோபசார, அட்ட விதார்ச்சனையுஞ் செய்வதுவே மோட்சமெனக்கூறும்.

## நான்குபாதசைவம்.

இது சரிதை, கிரியை, யோகம், ஞானம் நான்கையும் ஒவ்வொன்றாய்ச்சாதித்து, சனகாதிகளடைந்தபடியே ஒருமொழியால் சமாதி நிட்டைகூடி, பிரமத்தில் ஐக்கியமாவதே முத்தியென்று கூறும்.

## சுத்தசைவம்.

திரிபதார்த்தமும் நிச்சயமென்றறிந்து, இநிற்சச்சிதாநந்தப்பிரமநிச்சயமுண்டாய், சமயங்களெல்லாம் பாசசாலமாக்கிவேதாந்த சித்தாந்ததீர்வாய், பந்தங்களிறந்து நான்குமுத்திரையுங்கடந்து, மகா மவுனமே பொருளாக வமைந்து நிட்டைசாதித்து, பிரமத்தோடு ஏகனாவது மோட்சமென்று கூறும்.

ஆக இந்தஊர்த்துவமுதல் சுத்தசைவமீறாகிய பதினாறுசைவமும் பேதசைவமென்பர்.

## வீரசைவம்.

அனாதிமூலத்துக் கப்பாலாய், மகாமூலத்திற்கு மூலமாய், இரண்டாவது பொருளில்லாததாய், மூலசுவாமியொருவனேயென்றுங்கூறி, குருலிங்கபத்தியுடையவனாய் வெவ்வே றிலக்கணங்களைக் கூறிக்கொண்டு சைவத்திற்கன்னியமின்றியிருக்கும் இது பின்னர் பஞ்சமடக் கருத்தாக்களான அல்லமாப்பிரபுமுதலியவர்களாலும் வசுவேசர் முதலியவர்களாலும் விசிட்டமாயுள்ளது. இதன் விரிவை வீரசைவவிளக்க விஞ்ஞானபடமுதலியவற்றிற்காண்க.

## கவுளயாமளமதம்.

வாமியைப்போல, சகலமும் சத்தியாலேயே யுண்டாய் நடக்கின்றதென்றும், கொலையாதி பாதகங்களையெல்லாம் உச்சாடனாதி கன்மங்களாலகற்றி, சத்தியைப்பூசித்து தூரதிட்டியாதிகள் கைவல்லியமானால் இதுவேமோட்சமென்றும் கூறும். இவைகள்வருவதெப்படியென்னில், சத்திகளில் ஆறு-கோடிமாயாசத்தி, சத்தமாதர், சத்ததுற்கி, சத்தகன்னி முதலியபல பேதமுண்டு. ஒருவர் நினைக்கும் சிந்தனைக்கேற்ற சத்திகளும் மந்திரயந்திர•கிரியைகளும்

வெவ்வேறுண்டு. இதனைக்கொண்டு செபவோமதருப்பணாதிகளா லும் தருமாதிகளாலும், தேவபிரசன்னமாய், காரியகைவல்லியமா மென்றும், ஆனந்த பிராத்தியே மோட்சமென்றும், இதுவே ஆன்மா வென்றும் சொல்லும்.

வேதாங்கீகாரமான மதங்கள் அனந்தமிருக்கின்றன. அவைக ளோ வேறுவேறு வகையாக முத்திபேதங்களைக் கூறுமேயல்லது சமபத்தாலொன்று பட்டவைகளே. அவைகளாவன.

| | |
|---|---|
| கிரீடாப்பிரமவாதி | நையாயிகம். |
| லீலாப்பிரமவாதி | பாற்கரியம் |
| பிரதிவிம்பவாதி | சத்தப்பிரமவாதி |
| மாயாவாதி | வையாகரணி |
| வைதிகவேதாந்தம் | பாட்டல் |
| சுத்தவேதாந்தம் | பிரபாகரம் |
| அச்சுமாருதவாதி | ஆறந்தம் |
| சாங்கியம் | புராணிகம் |
| நிரீசுரவாதி | பஞ்சராத்திரியம் |
| பூருவமீமாஞ்சை | சுத்தசைவம் |
| வைசேடியம் | என்பனவாம். |

ஆயினும் அவைகள் சைவவைணவ, சமணமதங்களுக் கன் னியமல்லாமையால், இங்குவிரித் தெழுதுவது அனுவசியமென விட்டனம்.

இதன் சித்தாந்த பூர்வத்தைக்காண உத்தேசிப்போர் 'தத்துவ ரத்தினகரத்' திற்காண்க.

தார்க்கிகன் வித்தியா கற்பனை, தோடம், பிரவிருத்தி, சன னம், துக்கமென்பவைகளைத் தனித்தனி நீக்கிச்செல்ல, முடிவினி ன்ற துக்கமொழியுமென்றும் இதுவே முத்தியென்றுங் கூறுவன். மீமாஞ்சகன் வேதம் அநாதியென்றும், ஈசனைவேண்டாது கன்ம மேபலனைக் கொடுக்குமென்றுங் கூறுவன். மாயாவாதிசுத்தமாகிய பரப்பிரமம் மயோபாதியினாலே வாதிக்கப்பட்டுச் சரீரத்தினுள்ளே சீவான்மாவாக நிற்குமென்றும், சீவான்மாவும் விவேகஞானமடை ந்து மாயாவத்தைகடந்து பரமான்மாவோடு கடாகாசமும் மகாகா சமும்போல் அபேதமாய்விடுமென்றுங் கூறுவன். சாங்கியன் புமா னாகிய சுத்தபுருடன் அறியாமை யுதித்தபோது பிரபஞ்சமெல்லாந் தானே விரிந்துநிற்பனென்றும், விவேகஞான மெய்தியபோது அவையனைத்தும் பிரகிருதிக்கேயன்றித் தனக்கில்லையென்றுங்கூறு

வன். யோகி, நின்மல சத்துவபரிணமரூபமாகிய சித்தவிருத்திகளை உன்முகமாகத்திருப்பி, அவைகளை அவற்றின் முதற்காரணத்தினுலே ஒடுக்குதலே முத்தியென்றுங் கூறுவன் பாஞ்சராத்திரி,நாராயணர்தம்மை வழிப்பட்டவர்களுடைய பாசபந்தத்தை யொழித்து அவர்களை விரசாநதியிலே மூழ்குவித்துச் சுத்தர்களாக்கி, வைகுண்டத்திலே தமது சாரூபத்தைக்கொடுத்தருளுவரென்றுங் கூறுவன்.

## உலோகாயதன் மதம்.

இது கேடின்றி நித்தியமாயுள்ளது நான்குபூதம்; இந்நான்கு பூதமும் சேர்ந்தவிடத்தில் நால்வகையோனி எழுவகைத்தோற்றமுந் தோன்றும்; நான்குபூதமும் காணப்படுவதாய் என்றுமுள்ளதாலும், பரிச-ரூப-ரச-கந்தம்-இந்நான்கும் நித்தியமே; மேற்படி நான்குபூதக் கலப்பால் பொறி, புலன், குணம், புத்தி முதற் பதினறு கரணமானபோது, அண்டாதிகளெல்லா முண்டாமென்று கூறும்.

அன்றி மரணமே நிச்சயமோட்சம். பூதம் நான்குமே சொரூபம். இதனிடமாகப்போதம் பிறக்கிறதே தடத்தம். களபகத்தூரி ஸ்திரீ சையோகாதிகளை விட்டதேபந்தம்.இதனேடுகூடி வாழ்வதே முத்தி என்பது முடிவானசித்தாந்தமாம். இச்சாத்திரத்தை பிரகற்பதிபகவான் ஒருகால்கூறி, உலோகாயதமதத்தை யுண்டாக்கினர்.

## யோகசாரன்மதம்

போதமான கரணேந்திரியாதிகள் பொருளாய்த்தோன்றும். இது தோன்றலால், வாதனு தோட்டத்தில் கூடி, வலுவில்லாமல் பொருளாயெழுந்து, கனவுபோலச் சகளமாகும். பின்புபோதம் உள்ளறிவாயிருக்கும் என்று கூறும், எனவே மருந்தெண்ணெயில் மருந்துமறைந்து சூக்குமமாகிப்பலிப்பதுபோல, போதம் உள்ளிருந்துதொன்றுதொட்டுப் பலிக்குமென்றபடி. இவர்கள் தெய்வம் யோனியிற்பிறவாது தாய்வயிற்றைப் பீறிவந்தாரென்று கூறுவர். அத்தெய்வம் புத்தசுவாமியேயாம்.

## மாயத்தகன் மதம்.

தேகம் அவயவங்களோடுகூடி ஓராகாரமான பதார்த்தமும் சீவராசிகள் தேகமுமாம். இவ்வவயவங்க ளழிந்துபோனால் அத்தேகத்திலழியாப்பொருளொன்றில்லை; ஆதலால் அதில் சூட்சுமமாயிருக்கிற பொருளைக்கண்டதில்லை. அதனால் அதில் அறிவிக்குமென்பதொன்றில்லை, தேகமேபொருள்; சுவாமி சுகதுக்கங்களைப்



பரிசிக்கமாட்டார். சுத்தஞான வொழுக்கமென்பதே முத்தியாம் என்பர் இவனுக்கு முற்கூறிய புத்தசுவாமியே தெய்வமென்க.

## வைபாடிகன்மதம்.

ஸ்திரீபுருஷ சைதன்னியத்திலின்பஞ் சனித்ததுபோல விசாரித்தவிடத்திலே சகஞான பொருளாதிகள் தோன்றும். வேறாகக் கூறுவதெல்லாம் பொய் எனக்கூறும். இவர்கள் புத்தமூராமிசுவத்தி, பஞ்சகந்தங்கெடுகிறதே முத்தி ஞானமெல்லாமொழிதலே பதவி, ஆன்மா அணு என்றுங்கூறுவர். இதனைச்செய்தவர் சுகதரிஷி.

## நிகண்டாவாதிமதம்.

அருகக்கடவுள் அட்டகுணஞ்சியராய் சருவஞானதேசோமயராய்பொன்னெயில் வட்டத்தில் எல்லாஉலகத்திலிருப்பவர்யோக சித்தியால் முத்தியருளுவரெனக்கூறும்.

## ஆசீர்வகன்மதர்.

இவர், நிகண்டா வாதியைப்போலவே சிறிதுவித்தியாசமாக அருகனையே பரமென்று கூறுவர்.

## பஞ்சபூதவாதிமதம்.

இப்பஞ்சபூதவாதிமதமானது ஐந்துவகையாயிருக்கும் அவற்றுள்

1. பிருதிவிபூதவாதி-மண்ணைத்தவிர வேறொன்றுமில்லை. மண்ணே சகல உலகவடிவும் சகலசீவரூபமுமாயிருந்து சகல போகமுமளிப்பதால் மண்ணேதெய்வமென்று கூறுவன்.

2. அப்புபூதவாதி-சகலமும் சலமின்றி யாகாமையாலும், சகலரும் சலத்தையே எக்காரியத்திற்கும் எதிர் நோக்கலாலும் சலமின்றி வேறெக்காரியமும் நடவாதாகையாலும் சலமேதெய்வமென்று கூறுவன்.

3. அக்கினிபூதவாதி - அக்கினியேசர்வகிருத்தியங்களையும் நடத்துகையால் அக்கினியைவிட்டு யாதொன்றும் நடவாதாகையாலக்கினியே தெய்வமென்று கூறுவன்.

4. வாய்வுபூதவாதி-காற்றின்றி எக்காரியங்களும் நடவாதாகையால் அக்காற்றே தெய்வமென்று கூறுவன்.

5. ஆகாயபூதவாதி-ஆகாயமில்லாவிடில்வேறொன்றுமிராதாகையால் ஆகாயமே பரமென்று கூறுவன்.

## பஞ்சகோசவாதிமதம்.

அன்னமயம், பிராணமயம், மனோமயம். ஆனந்தமயம், விஞ்ஞானமயம் என்னும்ஐந்துமே பொருள்என்றும், ஆனந்தமயமே முத்திரூபமென்றுங் கூறும்.

## நவக்கிரகவாதிமதம்.

நவக்கிரகமே * தெய்வ மென்றும், அதனிலக்கணப்படியே உலகமும், உயிர்களும் முத்தியாதியவும் சம்பவிக்கப்பெறுவரென்றும் ஆனதால் நவக்கிரகங்களே கடவுளரென்றும் கூறும்.

## சூரியவாதி மதம்.

சூரியபகவானில்லாவிடில் எக்காரியங்களும் நடவாதாதலால் சூரியனே தெய்வமென்று கூறும்.

## சந்திரவாதி மதம்.

சந்திரனே பரமென்று சூரியவாதியைப்போல விவரிக்கும்.

## ஊழ்வாதி மதம்.

கன்மமே பிரமமயம்; அன்னியம் வேறொன்றுமில்லையென்று கூறும்.

## காலவாதி மதம்.

காலம் ஒன்று மாத்திரம் அழியாமல் மற்றெல்லாம் மாறுபடுகையால் காலமே பரமென்று கூறும்

## மந்திரவாதி மதம்.

எல்லாத் தேவர்களும் மந்திரவழியே நின்று கட்டுப்பட்டவராதலாலும், மந்திரத்தை விட்டு எக்காரியங்களும் நடவாததாலும் மந்திரமே தெய்வமெனக் கூறும்.

## எந்திரவாதி மதம்.

மந்திரம் தேவர்கள் முதலியயாவும் எந்திரங்களால் நிலைபெறுவராதலால், அவைகளுக்கெல்லாம் பரமாயிருப்பது எந்திரமாதலின் எந்திரமே தெய்வமெனக் கூறும்

## அவிழ்தவாதி மதம்.

மருந்துகளே சகல வுடலுயிர்களையும் இரட்சிக்கையால் மருந்தே தெய்வமென்று கூறும்.

---

* நவக்கிரகமாவன:—இரவி, மதி, சேய், புதன், குரு, வெள்ளி, சனி, ராகு, கேது என்பன. இவ்வாதிகள் தூமாதி இரகங்களையும் உபதேவதைகளாகக்கொண்டு கூறுகின்றனர்.

## கவனிப்பு.

இவ்விதமாகவே இன்னும் உலகிலுள்ள மதங்கள் ஒவ்வொன்றும் தான் தான் கொண்டதே மேலான மெய்யென்று கதறுகின்றது வாதலால, வீணகாரியமா யாவருக்கும் பிரயோசனமற்றதா யிருத்தலி னிம்மட்டிலேயே விடுத்தாம்.

## சாத்தேயம்.

சாத்தேயமதத்தர் சத்தியமே பிரமமென்றும், அச்சத்தியினிடத்திலிருந்து பிரமன், விஷ்ணு, உருத்திரன் மயேச்சுரன் சதாசிவனென்கிற பஞ்சகருத்தாக்களும், பஞ்சசத்திகளும் உண்டானார்களென்றும், இவர்களாலே சகத்காரியம் உண்டாயிற்றென்றும் சத்திக்குமேலே வேறொரு பரனில்லையென்றுங்கூறுவர். இந்தமதம் கபிலருடைய கோட்பாட்டை யனுசரித் துண்டானதாகத் தோன்றுகிறது. இம்மதத்தர்களிற் சிலர் மதுமாமிசத்தையும் வழங்குகிறார்கள். இக்காலத்தில் இவர்கள் அருகி இருக்கிறார்கள்.

## காணபத்தியம்.

காணபத மதத்தர்கள் கணபதியே பிரமமென்றும், அவருக்குமேல் ஒருபரனில்லையென்றும், அவராலேயே சகலமுங் காரியப்படுகின்றனவென்றுங் கூறுவர். இந்த மதத்தர்களும் அபுரூபம்.

## சைனமதம்.

ஆருகதம் அல்லது அருகனை வணங்கும் சமயத்துக்கு சைன சமயமென்று பெயர். இது சற்றேறக்குறைய புத்த சமயத்தைப் போலவே யிருக்கிறது. ஆனால், சுத்த நாஸ்திக மதமல்ல; இதில் சுவேதாம்புரிகள் திகம்பரிகளென இருவகுப்பார்களிருக்கிறார்கள் இவ்விருவகுப்பாரும், விக்கிரகங்களுக்கு உடை தரிப்பித்தல் முதலிய சிலவிடயங்களில் வித்தியாசப்பட்டாலும் சைனவேதாகமங்களை யொரேவிதமாக நம்பி யனுசரிக்கிறார்கள்.

## சார்வாக மதம்

இந்த மதத்தைத் தாபித்தவரின்னாரென்று விவரமாகத் தெரியவில்லை. ஆனால், மகாபாரதத்தைச் சார்ந்த சாந்தி ஆபிரத்துநானூற்றுப் பத்தாவது சுலோக பருவத்தில் ஒருகதையில் சார்வாகன் என்னும் இராட்சதன் பிராமண பரதேசி வேடம்பூண்டு யுதிட்டிரமகாராசன் செயசீலராக அத்தினபுரத்துக்குப் போகுங்கால் சமய விடயமான பரிகாசவார்த்தைகளையும் தூடணைகளையுஞ்செய்ததாகவும், ஆனாலவன் இராக்கதனென்று கண்டுபிடித்து,கொல்லு

வித்ததாகவும் சொல்லியிருப்பதால், இந்த இராக்கதனே இந்தச் சார்வாக மதாதிபதியா யிருக்கவேண்டுமென்று எண்ணவேண்டியிருக்கிறது. இந்தச்சார்வாகமதத்தைப்பற்றி மாத்துவாசாரியாரா லியற்றப்பட்ட 'சர்வதரிசன சங்கரக'மென்னும் கிரந்தத்தில் விசேடமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தச்சார்வாக மதத்தை உலகாயதமென்றும், பிரகற்பதி கோட்பாடென்றுஞ் சொல்வதுண்டு.

## இந்திரியாத்தும வாதிகள் மதம்.

இந்திரியாத்தும வாதிகள் மெய், வாய், கண், மூக்குச், செவி யென்னும் பஞ்சேந்திரியங்களுக்குமேல் ஈசுரனொருவ னில்லை யென்றும் ஆன்மாவொன் றில்லையென்றுங் கூறுவர்.

## அந்தக்சர ணாத்துமவாதிகள் மதம்

அந்தக்கரணாத்தும வாதிகள் மனம், புத்தி, சித்தம், ஆங்காரம் என்கிற அந்தக்கரணங்களுக்குமேல் ஈசனொருவ னில்லையென்றும், ஆன்மாவொன் றில்லையென்றுங் கூறுவர்.

## பிராணாத்துமவாதி மதம்.

பிராணாத்துமவாதிகள் பிராணவாயுக்குமேல் ஈசுரனொருவ னில்லையென்றும், ஆன்மாவொன் றில்லையென்றுங் கூறுவர்.

## சூனியவாதிகள் மதம்.

சூனியவாதிகள் ஈசுரனொருவனிருந்தால் காணப்பட மாட்டானா, காணப்படாமையால் ஈசுரனில்லையென்பர்.

## கௌமார மதம்.

இந்தக் கௌமார மதத்தர் சுப்பிரமணியரே பிரமமென்றும் அவர்க்குமேல் ஒரு ஈசுரனில்லையென்றும், அவராலேயே சகல சகத்து காரியமும் உண்டாகின்றனவென்றுங் கூறுவர்.

## பிரமசமாசம்.

பரப்பிரமத்தையே உபாசனையின்மூலமாக அறிந்து ஆனந்தப்படும் பத்திமார்க்கத்துக்கு பிரமசமயம் அல்லது, பிரமசமாசமென்று சொல்லப்படும். இந்தமதத்தைத் தாபித்தவரின் பெயர் இராசா இராமமோகன் ராயபஹதூரென்பவர்.

## ஆரிய சமாசம்

ஆரியருடைய வேதங்களையே பிரமாணங்களாகக் கொண்டு பரம்பொருளை வணங்கும் மதத்தர்களுக்கு ஆரியசமாசத்தாரென்றுபெயர். இந்தச் சமாசத்தின் காரணகருத்தர் சுவாமி தயானந்த சரசுவதி யென்பவரே.

### தியாசபி மதம்.

1880-ஆம் கரநல் ஆல்கட் என்ற ஒரு அமேரிகா கண்டத்தாரும், மாடம் பிளாவட்ஸ்கி என்னும் உருஷியா தேசத்து மாதும் இந்தியா பம்பாயிக்குவந்து, இத்தேசத்து பூர்வயோக, மந்திர தந்திர முதலானவைகள் உண்மையெனச் சாதித்து, அநேக மகிமைகளைச் செய்தனர். 1875-ஆம் அமரிக்கா கண்டத்தைச்சார்ந்தநியுயார்க்கப் பட்டணத்தில் தாபிக்கப்பட்ட தியாசபிசங்கத்தைச் சார்ந்தவர்கள். இந்த மதாதிபதிகள் இருவரும் புத்தசமயத்தாராக விருந்தும் அநேக பிராமணர் முதலானவர்கள் இவர்களுடையகோட்பாட்டை யனுசரிக்க, இந்ததேசத்தின் பல விடங்களில் சபைகளைத் தாபித்துக்கொண்டு வருகிறார்கள். இவர்கள் கிருஸ்துமதத்தர்களுக்கு சன்மவிரோதிகள். சனசுக ச்சோதரவாஞ்சையை விருத்தியாக்க விரும்புகிறார்களே யொழிய, கடவுள் பத்தியில் அவ்வளவு பற்றுள்ளவர்களா யிருப்பதாகத் தோற்றவில்லை. இதை மந்திர தந்திர மதமென்று சொல்லலாம். இப்போது (1916) இக்கூட்டத்துக்குத்தலைவர் மாதுஸ்ரீ ஆனிபெசன்று.

## விஷ்ணுமதம்.

விஷ்ணுவை வணங்கும் மதத்திற்கு வைணவமென்று சொல்லப்படும். இந்த வைணவத்தில், யாதவம் மாயாதவம், இரணியகற்பம், இராமாநுஜம், பாற்கரம், தத்துவவாதம் என்னுமாறு உட்சமயங்களும், பாஞ்சராத்திரம், வைகாநசம் என்னு மிரண்டு ஆகமங்களுமுண்டு. இதுகளைப்பற்றி விவரமாகப் பின்னால் சொல்லுவோம் இம்மதத்தர்கள் வணங்குந் தெய்வமாகிய விஷ்ணு எங்குநிறைந்தவரென்றும், இரட்சகரென்றும், யாவையும் படைத்துக், காத்து வருபவரென்றும், வேதசுருதிகளில் காணும் நாராயணனென்றும், நரகரியென்றும், இராமர், இரங்கர், கிருட்டிணர் என்றுஞ்சொல்லும் புருடனாக வழங்குவார்கள் இவர் சுருதிகளிற் செப்பிய (நாரம்)சலத்திற்கு பிரதிநிதி யானையால், நீலவருணமும், சங்கு, சக்கரம், கதை, கட்கங்களைக்கொண்ட நான்குகைகளையும், மஞ்சள் வத்திர தரிப்பையும், கருடவாகனத்தையும், வைகுண்டம் இருப்பிடத்தையும் உடையவராக புராணங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

இவருடைய மனைவியர் : இலட்சுமி, பூதேவி, நீளாதேவி என மூவர்.

இவ்வைணவமதத்துள் சில உட்பிரிவுக ளிருக்கின்றது. அவைகளாவன,—

இராமானுசமதம் — மாத்துவாசாரிமதம்
பாற்கரமதம் — இராமாநந்தமதம்
வல்லபாசாரிமதம் — சைதனியர்மதம்

முதலியனவாம். இவைகளுள்ளும் சிலபேத மிருப்பதாகத் தெரிகின்றது. அவைகளை வைணவ பிரபாவத்துட் காண்க.

## பௌத்த மதம்

இம்மதம் கௌதமசங்கிய முனிவரால் தாபிக்கப்பட்டது. இவர் காசிப்பட்டணத்தை யடைந்தகாலத்து பௌத்தர் அல்லது புத்தரென்றும் பெயரைப் பூண்டார். இவர் இருபதுவயதையடைந்தபோது அதாவதுவிவாகமானபத்தாம் ஆண்டில் இராகுலனென்னும் புத்திரனையும் ஈன்று யாவரும் வியக்கும்படி திடீரென்று மனைவிமக்களையும் துறந்து சமய விசாரணை யொன்றிலேயே சித்தத்தைச் செலுத்திவந்தார்.

ஓரிரவு வியாதியாளன், வையோதிகன், அழிபிணம், துறவி இந்நான்கு ரூபங்களையுங்கொண்டு ஒருதேவதூதன் தம்சொப்பனத்தில் நான்குமுறைபிரசன்னமானதே இளமையும் சௌக்கியமும் கனவேயன்றி வேறல்லவென்றும், அவை மூப்பையும் பிணியையும் தந்து கடைசியில் மரணத்தையும் தேக அழிவையும் தருமென்று நிரூபித்து இக்காரணத்தினாலேயே தாம் துறவடைந்ததாகவும் புகன்றனர்.

இந்திரிய நிக்கிரகம், பரோபகாரம் இவ்விரண்டையும் சாதகம் செய்பவர்களே பேரின்பத்தை யடையக் கூடுமென்றும், சாதிபேதமில்லையென்றும், சகலரும் ஒருவருக்கொருவர் சமமுற்றவர்களென்றும், எல்லோரும் முத்தியை யடையக்கூடுமென்றும், மிருகபலியினால் பாவ நிவாரணஞ்செய்ய முடியாதென்றும் சன்மார்க்கமுண்டென்றும், திரிகரணங்களால் செய்யக்கூடியபாபத்தொழிலை விலக்கின் பிறவியினின்றும் விலக்கக் கூடுமென்றும் இவைகளைச்செய்யச் சாத்தியப்பட்டவன் நிருவாண தசையை யடைவானென்றும் போதித்துவந்தார்.

இக் கோட்பாடுகளை அநுசரிப்பது சாத்தியமா யிருந்தபடியால் இந்தியாவில் அநேகர் இம்மதத்தை தழுவினதுடன் சீனு, பர்மாமுதலிய தேசங்களிலும் சிம்மளம், சப்பான் முதலிய தீவுகளிலும், இக்காலத்தும் நாற்றிசையை யடைந்து அபிவிர்த்தியாய்க் கொண்டே வருகிறது.

---

## சீனதேசத்து மதங்கள்.

### உலக சிருஷ்டியைப்பற்றி சீனர்களின் கருத்து.

ஆதியில் சடப்பொருள் மாத்திரம் ஏகபிண்டமா யிருந்தது. பிறகு இரு பிரிவினையடைந்து, ஆண் பெண்ணாகிய சூக்குமதேகம் மேலும், தூலதேகங் கீழுமாக மாதா பிதாக்களாகி, சகலத்தையும் உண்டாக்கினதாகவும், சகலமும், ஆணும் பெண்ணுமென்றுஞ் சொல்லுகிறார்கள்.

சீனர்களுக்குள் பிரபலமாய் வழங்கும் மதங்கள் மூன்று. அவற்றுள், பெரும்பான்மை தழுவப்பட்டதும், புராதனமுமானது கான்பியூசஸ்மதம், இப்பெயர்கொண்ட மதாதிபதியால் சுமார் ஐயாயிரத்து நானூற்றறுபது வருஷத்துக்கு முன் தாபிக்கப்பட்டது. இவருடைய கொள்கையாவது ஒரே கடவுள் உண்டென்றும் அவரை யடைதலே மானுடர் பெற்றபேறென்றும், வானம் பூமி மனிதர்கள்கூடி ஒரு திரியேகத்துவமென்றும்,இம் முப்பொருளில் திவ்விய தானதிபதியாகிய மானிடரே மேன்மைப்பட்டவர்களாகையால், பெரியோர்களையும் பிரத்தியட்சக் கடவுளர்களாகியதாய் தந்தையர்களையும் வணங்கவேண்டு மென்றும், அப்பெரியோர்களிறந்தால் அவர்கட்காக மூன்றுவருடகாலம் துக்கங்கொண்டாடி பிறகு மாத்ரு, பிதிரு, மகாலயமொன்றைச் சமைத்து அதில் மக்களும் மற்றுமுள்ள சந்ததியாரும் அப்பெரியோர்களை வழுத்தல் செய்யவேண்டுமென்றும், சிறுவயதுள்ள ஸ்திரீகளை அடிமைகொண்டும், வயதில் முதிர்ந்த ஸ்திரீகளை மரியாதையோடு வணங்கவேண்டியதென்றும், சகலரையும் சகோதர வாஞ்சையோடு நடத்தவேண்டியதென்றும், சந்ததியிருந்தால் சன்மவிமோசனமாகுமென்றும் முதலிய தருமங்களைவிடாது அநுசரித்தல் வேண்டுமென்றும் எல்லோரும் வாய்மை மெய்ம்மைஞானம் ஆசாரம் நீதி பரோபகாரம் போதித்து வந்தமையேயாம்.

மேற்கூறிய கான்பியூகஸ் காலத்திலிருந்த தத்துவசாஸ்திரியாகிய லவாட்சி என்பவரால் ஏற்படுத்தப்பட்ட டாயிசமதம்.

ஆகாயம், பூமி மனிதர்களாகிய இம்மூன்றும் காரியப்படுவதற்கு காரணமாகிய ஓர் மூலப்பொருள் உண்டென்றும். அது அநாதி நித்தியமென்றும், மும்முறை மனித அவதாரமெடுத்ததென்றும்அப்படி யுண்டாகிய சன்மத்தை யோக நிட்டைகளால் அழிக்கவேண்டியது என்றும் இந்து மதத்தரின் கருத்து; முன் கூறியுற்ற பௌத்தமதமும் வழங்கி வருகிறது.

### சௌராட்டிர மதம்.

பூர்வ ஆரியவம்சத்தின் ஒரு பிரிவார் குடியிருக்கும் சீர்பெற்ற பாரசீகதேசத்தில் சௌராட்டர் என்பவரால் ஏற்படுத்தியது பாரசிகம். அல்லது, சௌராட்டிர மதமென்று வழங்கும். இவர்கள் வேதநூற்களின்பெயர், சந்தபேதம், பண்டி சுகியுமாம். இவைகள் வானுதி நட்சத்திர தோத்திரமாகவும், அத்துவைத பரம்பரையை அநுசரித்ததாகவேயிருக்கும்.

இம்மதத்தின் கோட்பாடாவது, முதற்கடவுள் ஒன்றுண்டென்றும், அவரிந்த உலகத்தையும், அஞ்ஞானம், பொய், கொலை, களவு, காமம் முதலியன தீக்குணங்களை விளைவிக்கும் உபதேவனைப் படைத்ததாயும், இத்தேவனு லுண்டாகும் தீக்கருமங்களை விலக்கி, சுத்தமாக்க மற்றுமோர் தேவனைப் படைத்ததாகவும் இவர்களிருவருக்கும், அதாவது ஞானமும், அஞ்ஞானமும் நெடுநாள் சண்டைசெய்து முடிவில் ஞானதேவன் சயமடைந்ததாகவும், ஆகவே உலகத்தார் அந்தகாரமாகிய அஞ்ஞானத்தைநிவர்த்தித்து பரிசுத்தமனதோடுங்கூடி சத்விடயங்களைச்செய்து சுவாதீனராகும் பட்சத்தில் மோட்ச முண்டென்பதேயாம்.

---

## துருக்கர் மதம்.



துருக்கர் மதமானது சிலபேதங்களையும், பல வகுப்புகளையு முடையதாயிருப்பதோடு சில விகற்பங்களுமுண்டு. இவர்கள் தெய்வம் அல்லாவென்னும் பெயரோடு நாமரூபகிரியாதி குணரகிதனாய்வேறின்றி ஏகனாயிருப்பது அந்தஅல்லாவானவர்தன்னிடத்தில் ஒருவொளியையுண்டாக்கிஅதில்அல்லாவானவர்புகுந்து பாதியொளியில் மகுமதரையுண்டாக்கி, மற்றபாதியொளியில் எண்ணிறந்த உயிர்களையுண்டாக்கி, பின்பு நாயகன் பாதியொளியில் மகுமதருயிரை யுண்டாக்கி, அந்தவுயிரை நாயன்பார்த்தவுடனே பதாதிகேச பரியந்தம் வெயர்வுவர அந்தவெயர்வையில் முதற்பாகத்தை அம்பியா அவுலியாக்க ளுயிரைவகுத்து, அதிற்சில வெயர்வையில் மசாகுளோக்குயிர் வகுத்து, பின்பு இவற்றில் தானே ஊமினோர்கள் வானுளோர்களுயிர்வகுத்து, மிகுந்த வெயர்வையில் பாவிகளுயிர்வகுத்து, இதில் மிகுந்த வெயர்வையில்காபிசின்னுகள் சயித்தானுயிர்படைத்து, இதில் மிகுந்த வெயர்வையில்

மிருகபட்சி ஊர்வன சலதாவுயிர்களைப்படைத்து, இதில் மிகுந்த வெயர்வையில் தாபராதியுயிர்களைப்படைத்து, இதில் மிகுந்த வெயர்வையில் ஒரு துளியைக் கொண்டு அரிசுங் குருசும் மறையெழுதப்பட்ட கலமான மகுபூதுஞ் சொர்க்க நரகமும் படைத்து, இவற்றிலொருதுளி வெயர்வையிருந்தது. அதிலொரு மாணிக்கமுண்டாக்கி, அதைநாயன் எதிராகப் பார்த்தபோது அந்த மாணிக்கம் அக்கினியாயும், சலமாயும் பிரிவுபட்டு நின்று மீண்டும் ஒன்றாய்க்கூடி வெந்து கொதித்ததில் எழுந்த புகையினால் விண்ணுலக மேழுதட்டு மூரியடுக்குபோல்படைத்து, (இது ஒன்றுக்கொன்று ஐந்நூறுவருட நடப்பு அகலநீளமாகும்) பின்பு அந்தமணி யொளியாகிற கனல் பரந்தமேகத்தாற் சந்திரசூரிய நட்சத்திரங்களைப்படைத்து பின்பு தேவலோகமேழும் உரியடுக்குபோற் படைத்தது, மேற்சொல்லிய நீரைக்கலக்க நாயனருளாலே வாயுவையுண்டாக்க அந்தவாயுவால் அலைகளடித்துமோத அதில் நுரைகளுண்டாய் அந்த நுரைகளாலே கண்டமான பூமியுண்டாகி, கீழ்மேலேழடுக்காக நிற்க, இந்தவடுக்குகள் நீர்மேலிருக்கையால் அலையில்நிக்கு குலையாமலிருக்க, அட்டகுலபர்வதம் நடுவும் மேருகிரி சுற்றுஞ் சக்கரவாளகிரி முதலிய கிரிகளுஞ் சத்த சமுத்திரத்தில் அனேககிரிகளும் படைத்து அந்தச் சமுத்திரத்தை பூமிக்கு ஒரு ஆடைபோலாக்கி, இந்தபூமியில் சீவராசிகள் புசித்தற்கு தண்டுலபிண்டிபேதங்களும் கந்தமூல பலாதிகளுமுண்டாக்கி, சூரியனால் நாழிகைநாள் வாரம் மாதம வருடம் முதலியகாலபேதங்களு முண்டாக்கிப் பின்னும் பஞ்சலோகங்களும் நவரத்தினாதி திரவியங்களும் இன்னுமனேக பதார்த்தங்களையுங் கருத்தர் படைத்தாரென்றறிக.

இதல்லாமல் பின்னுமொருவிதம் நாயன் தன்னொளியினால் நாயிற்றுக்கிழமை தாபராதி தனுக்களையும் அவற்றிற்கு கந்தமூல பலாதிகளாகிய வுணவுகளையு முண்டாக்கி, திங்களில் சூரியன், சந்திரன், உடுக்கள், இராசிகள், மலைகள், கற்கள் முதலியவற்றையுண்டாக்கி, செவ்வாயில் மந்திர தந்திர எந்திரங்கள் சற்கருமங்கள் பம்புபில்லி சூனியம்புதையல் கன்னந் திருட்டு அவுடதங்கள் சூதம் பரிக்கைமுதலியவற்றை யுண்டாக்கி, புதனில் சூரியகிரணஞ் சந்திரகிரணம் நவரத்தினாதி திரவியங்களை யுண்டாக்கி, வியாழத்தில்தாபர சங்கமாதிய வுயிர்களையுண்டாக்கி, வெள்ளியில் இசிலாமார்க்கமாகிய துலுக்குமதமுண்டாக்கி, தன்னைவணங்க ஆன்மாக்களை யுண்டாக்கி, சனியில் தேவலோகமும் கீழ்மேற் பதினாலுலோகமும் படைத்து இவற்றைச்சுமக்க வொருமலுக்கையுண்டாக்கி, இவனைச்

சுமக்க ஒருமாணிக்க மலையைப்படைத்து, இதைச்சுமக்க எருதைப்படைத்து, இதைச்சுமக்க ஒரு மீனைப்படைத்து இதைச்சுமக்கச் சமுத்திரத்தைப்படைத்து, இதைச்சுமக்க குங்குமமணலாலாகிய வொருகுவட்டைப்படைத்து, இதைச்சுமக்க ஒரு இரும்புமலையைப் படைத்து, இதைச்சுமக்க ஒரு மலுக்கைப்படைத்து, இவனைச்சுமக்க வாயுவைப்படைத்தனர். இவைகளெல்லாம் யுகமுடிவுமட்டும் நிற்குமென்றறிக.

இப்பால் நாயனை மதியாமல் லிபிலீசு முதலானதேவர்களக் கினிதேக மாகையால் நாங்களே கர்த்தரென்று செருக்குற்றிருந்த படியால், அவர்களைச் செயிக்கும்படியாய் மண்ணையெடுக்கப்போக அப்போது பூமியானது ஆணையிட, அதற்கு இரண்டு மலுக்கள் திரும்பிவந்து கூடிய மூன்று மலுக்களும் இசிராகில்லையனுப்ப, அவரையும் பூமி மூன்றுணையிட, அதற்கவர் மறுஆணையிட்டு மண்ணையெடுத்துவந்து ஆதமாய்ச் செய்யென்ன, அந்த மண்ணினால் மலுக்கள் நால்வரும் புனிதீவாயுவைவிட்டு உடலைச்செய்து தலை செய்யக்கூடாமற் கர்த்தன் தலைசெய்ய, அப்போது ஆதமனுண்டாய் ஆதமனது ஒருபாரிசத்தில் சுழலையுண்டாய் அதை நாயன் சொல்லாலே ஜெபிர்தீல்போய் நகத்தால்கீற, அதில் சவுந்தரமான ஒருபெண் அவ்வாவென்னும் பெயருடன் பிறந்தாள்; அவளை ஆதம் என்பவன்கண்டு கைபிடிக்க, அப்போது நாயன் சொற்படி வானவரான மலுக்கள் விவாகஞ்செய்துகொடுக்க, நாயன் ஆத்மாக்கள் சொற்கத்திலே கோதும்பையல்லாமல் மற்றதெல்லாம் புசிக்கச் சொல்ல அதைக்கேட்டிருந்த லிபிலீசு அவ்வாவுக்கு பிள்ளை கொடுத்தும் கோதும்மை தின்னச்சொல்லியும் அவர்கள் விரதத்தைக்கெடுக்க, அதைக்கண்ட நாயன் கோபித்து சொற்கத்தி லிருந்தவர்களை மண்ணில் தள்ளிவிட்டு அநேகம்பாடுபடுத்தினர்.

அதன் பின்பு ஆதமன் தபஞ்செய்ய அதை நாயகன் கண்டு மகிழ்ந்து மக்காவில் வைத்தார். பின்பிருவரும் கூடிவாழ்கையில் ஆணும் பெண்ணும் பெற்றார்கள். அந்தப் பெண்ணை அந்த ஆணுக்கே கொடுத்து மண்ணில் வாசஞ்செய்யச்சொல்ல அவ்விருவருங் கூடி மனுக்களைப் பெருகச்செய்தார்கள். ஆதியில் கர்த்தன் மனுக்களைப் படைக்கும்போது நான்குவகுப்பாய்ப் பிரித்து முதலாவது அம்பியாக்கள், இரண்டாவது அவுலியாக்கள், மூன்றாவது முமீனோர்கள், நான்காவது காபர்கள். இப்படியாக சீவர்களைப்படைத்த பிறகு, இந்தவுயிர்கள் பயப்பட, அதைக்கண்ட நாயனா ஒரு ஒளியை யிறக்கினன். அதைக்கண்டு எல்லாவுயிரும் மசுஜூது செய்தார்

கள். நான்காவதான காபர்கள் ஓதாமல் நின்றார்களாகையால் ஓதி னதெல்லா மொருபகுதி ஓதாதெல்லா மொருபகுதியாக நின்று இரண்டு விதமானார்கள். இதல்லாமல் அந்த ஒளியை முந்தவும் பிந்தவுங் கண்டபேரெல்லாம் மூமீனாய் பிறப்பார்கள். முந்தக்கண்டு பிந்தக்காணாதவர்கள் இசிலாமாய் பின் காபராய்ப்பிறந்து இசிலாமாவர்கள். ஒன்றுங்காணாதவர் காபராய்ப்பிறப்பார்கள். இப்படியாகப்படைத்து என்னை வணங்கவேண்டுமென்றார். பின்பு குதிசிலென்னுந் தலத்தில் வைத்து துனியாவிலே நாலுபகுதியாகக் கர்த்தன் உண்டாக்கினார். இந்த துனியாவில் புற்பூண்டு விருஷாதிக பயிராய், பூமி மேடுபள்ளந் தெரியாமல் மூடிக்கொள்ள, அவையழிக்கும்பொருட்டு மிருகாதிகளைப் படைத்தார். பின்பு அம்மிருகங்கள் தாபரசங்கமாகிய விருஷாதிகளையெல்லா மழித்து மிருகக் ஞாடாயின. இதுகளை யெல்லாங் கொல்லும் பொருட்டு சின்செயித்தானாகிற பூதப்பசாசசேனையை யுண்டாக்க, அவை அம்மிருகங்களைக் கொன்று பூமியெல்லாந் திருத்தி சமனாக்கி,பின்பு சின்செயித்தானே இராச்சியமாண்டு கர்த்தனை வணங்காமல் கெர்வித்திருக்க, இவர்களைக் கொல்லும்படியாய் மிருகங்களிலொன்றாகிய குதிரைகளைவிட, அவை சின்செயித்தான் சேனைகளை யெல்லாங் கொல்லும்போது, மலக்கிலொருபெரியோனை வரவிட, அவன் பரிக்கூட்டங்களை யெல்லாங் கொன்று வானலோகத்திற்போய், சுகமேயிருந்தான்பின்பு சொர்க்கமேழும் நரகங்கேழுமாய் நன்மை செய்தவர்க்கு சொர்க்கமும் தீமை செய்தவர்க்கு நரகமு மீகையால் இந்த துனியாவாகிற பூமி நரகத்தாரிருந்து தீமையைச் செய்யவும் சொர்க்கத்தாரிருந்து நன்மையைச் செய்யவும் இவர்கள் சுகதுக்கமனுபவிக்கவும் இடங்கொடுத்திருக்கும் பொதுநில மாகையால் துனியாவென்று சொல்லப்படுவதென்றறிக.

ஆதியிலுண்டான விபரம் கர்த்தாவால் வந்தது உலகம் கலனால் வந்தது அணிபலகை இப்பலகையால்வந்தது இசிராயிலுக்கு; இவனால் வந்தது ஜெயபிராகிலுக்கு; இவனால் வந்தவர் மகுமதருக்கு போதிப்பவர்; மகுமதர் முதல் இசிராயில்கடையாம் பின்பு இசிராயிலுக்கு அலிபிலதுமா னெழுதிய மகுபூதென்னும் பலகை; இப்பலகைக்கு மக்கா நகராளும் இராசாவே நாயன் சொற்படியெழுதினது; இனிபடைப்புகளுக்கு இரண்டுங் கொடுக்கவும் படைப்பின் றொழில் செய்யவும் செபிர்கீலுக்குத்தரம் அல்லாவுடைய வரிசின்கீழ் துதுநடந்த மீக்காயுலுக்குத்தரம் மேகங்களை யொருதலத்திலே கூட்டி மழைபெய்விக்க, இசிராயிலுக்குத்தரம் படைப்புகளு

யிரை யெல்லாம் வாங்க, ஜெபிர்கீலுக்குத்தரம் இவருயிர் வாங்குகிறவர் இசிராயில் இவருயிர் வைக்கிறவர் ஐந்நூறுவருடத்திற்குப் பிறகு உயிர் வாங்கிறவர் மீக்காயில் இப்படி யிவர்களுக்குத் தொழிலென்றறிக.

கருத்தனல் கூறிய வேதமே முதல் வேதம்; தவிரேத்து மூசாநபி பைகம்பரோதினது இரண்டாம் வேதம்; இஞ்சில் இதை யீசாநபி யோதினது மூன்றும் வேதம்; ஜபூர், காதர் பூதுநபி யோதினது நாலாம்வேதம்; விசேஷமான மருமத ரோதினர். இந்நால் வேதமும் இந்நால்வர்களால் தம்பிரான் உண்டாக்கினது, இனித்தம்பிரானல் உலகத்தில் நடக்கவேண்டிய காரியங்களுக்கு ஒரு சத்தம் பிறந்தது. அச்சத்தம் பம்பரையாக நால்வரிடத்தில் வந்து ஜெபிர்க்கீல் மருமத ருக்குச்சொல்ல அப்படியே காரியங்களை நடாத்துவரென்றறிக.

அல்லாவானவர் சீவர்களைப் படைத்தபின் இவர்களுக்குத் தேகங்களைக் கொடுத்து பந்தப்படுத்தவேண்டி எறும்புகடையில் தமதுவர்ம வொளியினல் ஒரு மாணிக்கமுண்டாக்க, அதனை அல்லாவானவர் எதிரிட்டுப் பார்த்தவுடனே அந்த மாணிக்கம் இரண்டு பிரிவாகி அதில் ஒன்று அக்கினியும், ஒன்று நீருமான பின்பு, வாயுவையு முண்டாக்கி, அனலும் நீருங்கூடிக் கொதித்து, நுரையெழும்ப, அது தானே மண்ணாய் இந்த நாலுபூதமும் கூடினபோது, ஒரு தனுவாகி, "நாயதுசுரோணிதத்திற் றரித்திடுமண்ணுநீரும், பாய்ந்திடுஞ் சுக்கிலுதித்திடும் பவனமுந்தீ" என்று யாகப்பிறந்து நால்வகை சீவராசிகளும் கர்த்தன் கொடுத்த தேகங்களிற் புகுந்து புண்ணியப் பாவங்களைச் செய்தாலும் வணங்காத, லிப்லீசை வணங்கினலுங் கர்த்தனை வணங்கலாலுஞ் சுகதுக்கங்களாகிய சொர்க்க நகரங்களில் விழுந்து மறுபிறப்புண்டாகிவருந்துவது உயிர்களின் பந்தமென்றறிக.

இதைப்பார்க்கிலும் காபுர்கள் மிகுந்தபந்தப்பட்டவர்களாம், சூருதி-சர்வசங்காரமானபோது நடுவேநாளாவட்டத்தில் மரித்த சீவன்களை மருமதர் வந்துகேள்விகேட்டு, அச்சீவராசிகள் பூர்வம் எந்தத்தனுவோடு எந்தவிடத்தில் மரித்ததோ அந்த விடத்திற் சென்று அத்தனுவோடெழுப்பி, அவர்களைக் கேள்விகேட்டுலிப்லீசையும் கல்லுகளையும் பஞ்சலோகங்களையும் கர்த்தனைகப்பாவித்து, பூசைசெய்த வுயிர்களுக்கெல்லாம் நகரமும், கர்த்தனதுசொருபமறிந்து நிமாசு நோன்புகளால் வணங்கி அல்லாவாகிய கர்த்தன் ஒருவனே யல்லாமல் வேறுதெய்வமில்லை என்றவுயிர்களை சொர்க்கத்திலேயும் வைப்பார்.

இனி மிருகபட்சி ஊர்வன ஜலசெந்து தாபரமாய்மடிந்த உயிர்களையெல்லாம் எழுப்பிக் கேள்விகேட்டு மண்ணோடுமண்ணுக்கு வார், இப்படி, பந்தப்பட்ட சீவனில் மலக்குளாகிறது, மல்கல்மவுத்துகளாகிறன, கர்த்தன் தூதர்கள் இவரிற் பிரதானர் இசிராயீற் முதல் நால்வர். இனி அக்கினியே தேகமாய் வேறுகர்த்தன் இல்லையென்று தாங்களே கர்த்தனென்ற பேரையும் யுத்தஞ்செய்துகொன்றபேரையும் அம்பியாக்களாகிறபேரையும் (௩௱௰௩) பேரில் பிரதானர் நூறுபேகம்பர், அவுலியாக்களாகிற பேர், சாரகத்துவழியிலாவது கர்த்தனேவலாகவானத்திலிருக்கிறபேர் முசிலீன்கள்முமீன்களாகிற பெரியவர்கள் மருமசர்முதல் (௱௨0௪௲) பேர் ஜெபிரீல் அணுதுமுதச்சலாநபி ௩௱௧௩) இதல்லாமல் (௬௲௬௱௬௰௬) கேபமுனை அசாவாக்கள் பெரியவர்கள் முமீன்கள் தபோதனர் இனி அபூபக்கர், உமர், உதுமான், அலியார், மாலி, அசன், உசன், முருசலானவர், அசார்கள் (௪௰௨௲) உலுல், சுமை, அசும் யீல்மக மதை வழிப்பட்டதோழா மஷாகைகள் துறந்தபேர் வணங்கிறபேருக்கெல்லாம் மூமீனோர்களென்று பேர், இவர்கள் முதலானபேரெல்லாம் கர்த்தனை வணங்கி சொற்கம்பெறுவர், வணங்காதபேரெல்லாம் நகரம் பெறுவார்களென்றறிக.

முத்திநிலையானது, சி செயித்தான்முதலியபசாத்துபவங்களைமுந்தி கேட்குமிடத்தில் இரிஷபகேள்வியென்றும், பாதாளகேள்வியென்றும், சூநுதுகிற வகைகளும், அதில் சகலசீவர் மடிகிறதும், இதில் மிகுந்துநின்றபேர் ஒருவரொருவரைக் கொல்வதும், எல்லாரையும் கொன்றவன்மரிக்கும்போது அதிகவருத்தம்அடைந்து உயிர்விட்டானென்றும், அப்போது கர்த்தனொருவனே நின்று அனேககாலஞ்சென்றபின் மறுபடைப்புண்டாக முதல்நால்வரையுண்டாக்கி அவர்களாலே மறுபடியுஞ் சூநுதலித்து உலகத்தையுண்டாக்கினரென்றும், கர்த்தாவை யறிந்து பின்னொரு தெய்வத்தைப் பணியாமல் நோன்பு விரதங்கள் நிமாசு முதலிய கிரமத்திலிருப்பவனை மோட்சமாகிற சொர்க்கத்தில் வைப்பான்.

இதற்கு புருக்கான் வேதஞ்சொன்னபடி நோன்புவிரதம் நிமாசு முதலியவற்றுற்றொழவேண்டும். தொழுதலாவது, பரிதிதோன்று முன்னெழுந்து மாயாகுணமெல்லாம் விட்டுத்தொழுதலாம். தபமாவது, பணியும்போது பதினாறு விதமாம். அதாவது முழங்கால் 2, பாதம் 2, கை 2, நெற்றி மூக்கு 2, இவ்வெட்டவயவங்களையும் பூமியில் பொருந்த தெண்டனிடுவது கிமீலாவைநோக்கிநின்றது 1, மறுக்கு 2, தொன்னியா 3, சுசீது 4, இருப்பு 5, கலை 6

தெரிசுகிது 7, சலாம் 8, இப்படி 16 விதமாய்த் தொழுது மீபாரு கிறதே தபம் கர்த்தனை தொழும்போது புறப்பது எட்டுண்டு இதில் முதலாவது, தொழுகைக்கு நேரமறிகிறது, 2-வது தூயத்தண்ணீர் தேடி ஒழுச்செய்வது, 3-வது தூயபிடவை தேடுவது 4-வது தூயதலந்தேடுவது, 5-வது பறுதானபிடவையுடுப்பது, 6-வது கிமீலாவுக்கு நேரேநிற்பது. 7-வது நீயத்துக்கொள்வது 8-வது முந்தின தருபீடர்கட்டுவது இனி புறப்பறுது ஏழுண்டு. இதில் முதலானது நிலையில்நிற்க, 2-வது இஸ்திராத்தோத 3-வது றுக்குவிலேநிற்க, 4-வது சுகிதுசெய்ய. 5-வது பின்னிப்பிருக்க 6-வது அடைவுடனே கொண்டுவர, 7-வது வலதுபுறமிடதுபுறஞ்சலாங்கொடுக்க திர்ப்திப்பட ஆக உளப்பறுது-7.

உள்ளும்புறம்புமான விரண்டு பறுது 15 இனி முழுக்கில்பறுது-3, முதலாவது வாய் கொப்பளிக்க, 2-வது நாசிக்குத் தண்ணீரேத்த, 3-வது உடம்பெங்கு நினைக்க ஆக 3. இனி ஒதுவிலே பறுது-4, இதில் முதலாவது முகந்தாடியுள் படக்கழுவுவது 2-வது முகங்கைகழுவுவது, 3-வது தலைநாலிலொன்று மழுக்குசெய்கிறது, 4-வது கணைக்கால் பரட்டை யுள்பட கழுவுவது ஆக 4. இனியறுப்புப் பறுது-5, முதலாவது முசுலிமன்னறிந்து, 2-வது பிசுமில்லா சொல்லியறுக்க, 3-வதுதொடர்பிடியாயறுக்க 4-வது முடிசுத்தலையில் நிற்கக்கூட்டிப் பிடிக்க, 5-வது நாலுநரம்பு தெறிக்க ஆக -5. இனி நலப்பறுது 12-நாளொன்று தொழுகை 5-கூறினபறுது-பதினேழுரை ஈமான் இசிலா 11-தாய்மனதில்பறுது-2. ஆக 57. இதனை யறிவார்கள் அல்லாவுடைய நீதாரும் மருமதருடைய சர்புத்துஞ் சொற்கத்துக் குடையவராவர்.

இனி அல்லா சம்பத்துண்டாக தொழுகையில் சுன்னத்து 312-உண்டு அதில் நிலையில் 8-சுன்னத்துண்டு, இதில் முதலாவது, தருபீர் அவ்வலிவிரண்டுகையுமெடுக்க, 2-வதுதொப்புளின் கீழ்கை கட்ட, 3-வது இடதுகைகீழும் வலதுகைமேலுங்கட்ட, 4-வது சசிடுந்தலத்தைப்பார்க்க, 5 வது தாஞவோத, 6-வது அவுதுவோத, 7-வது பிசுமிலோத, 8-வது ஆமீனோத, ஆக 8 இனிறுக்குவிலே சுன்னத்து 8. முதலாவது தமக்கு பீர்சொல்ல 2-வது. இரண்டுகையாலு மிரண்டு முழங்காலைப்பிடிக்க, 3-வது தலையுமுதுகுஞ்சமனாய் நிற்க, 4-வது சுவாசவானிற் பிறப்பில் வலியுமோத, 5-வது புறங்காலைப் பார்க்க, 6-வது கண்ணைவிழித்துப்பார்க்க, 7-வது சமனல்லாருசொல்ல.

ருசிதில்சுன்னத்து 8. இதில் முதலாவது தமக்கு பீர்சொல்ல. 2-வது எட்டுறுப்புந்தரையிற்பட சுசிதிட, 3-வது மூக்குதாரையை ப்பார்க்க 4-வது சுவனிற் பிலாலவென்று மூக்கால் சொல்ல 5-வது கண்ணை விழித்துப்பார்க்க, 6-வது ஈரக்கையிரண்டுந்தோளிற் ருச் சமனுய்வைக்க, 7-வது உறுப்புகளைக் கிபிலாவுக்கு நேரோதிரு ப்பிக்கொள்ள, 8-வது சிறுவிருப்பிருக்க, ஆ 8, இனியிறுப்பில் சுன்னத்து 8-இவற்றில் முதலாவது, தகுபீர்சொல்ல 2-வது இடது கால்மடித்துவலதுகால்குந்திருப்பிருக்க, 3-வதுகைவிரல் கால்விரல் கிபிலாவுக்குநேரே வைக்க, 4-வது இரண்டுகையு மிரண்டு தொடையி லேவைக்க, 5-வது மடியைப்பார்க்க, 6-வது சலவாத்தோத, 7-வது சலாஞ்சொல்லும்போது வலது தோளைப்பார்க்க, 8-வது இடது தோளைப்பார்க்க, ஆ 8 இந்நான்கு நிலையிலும் ருக்குவிலும் சுசி திலும் சிறுவிருப்பிலுங் கூடின சுன்னத்து-32, இனி தொழுகை விபரம் முதலாவது அபூதுமில்லாக்மின் ஷெபித்தாள் சின்பிசுமில் லாகிற்றகு மானிற்றகீம்.

இனி யிரண்டாம்தொழுகையடைவு ஓதச்செய்தபின்பு இன் னுகன் சென்னுகு ஓதிநடக்க நீயத்துச்செய்துதகுபீர்கட்டினபின்பு றுக்குவிலேபோக பின்பு துவாஓத பின்பு கியாவிலேதத்வையோத பின்பு சசிதிலேதசுவையோத பின்னிருப்பிலே யிருந்து அசுத கபாததும் மஷாகத்துக் கலிமாவுஞ் சலவாத்துமோதிசலங்கொடுக் கவும் 3-வது நோன்பாகிறது றமஞ்சாபிறையிலே வந்தால் 30-வது நோன்பு பிடிக்கிறது அதுக்கறிகிறமஞ்சகன் மாதப்பிறையில் விடிந்துபிடிக்க நீயத்துக்கொண்டபின்புபொழுது புகுதநோன்பு தீருகிறது. விசுமில் ஓதி தீர்க்கவும் 3-வது நோன்பாகிறது றமஞ்சா பிறையிலே வந்தால் 30 நோன்பு பிடிக்கிறது அது கறிதுகிறதுறம ஞ்சான் மாதப்பிறையில் விடிந்து பிடிக்கநீயத்தொண்டபின்புபொ ழுது புகுதநோன்பு தீர்க்கிறது. விசுமில் ஓதி தீர்க்கவும் 4-வது செக்காத் விதியாகிறது இருபதுபொன்னுக்கு மேல்நின்றுப்பத்து க்கு வபுவெடுத்து மஞ்சான்மாதத்தில் நாலுபங்காக்கி குருக்களும் பள்ளிக்குந்தருபேசிக்கும் தன்கிளையில் இளைத்தபேருக்குங்கொடு க்கவும் 5-வது மகத்துக்குப்போய் அச்சுச்செய்யவும் 6-வது ஆமீ னது மில்லாகி ஓதுகிறது இவ்வாறு கர்த்தனை விதிவழுவாமல் ஓதி வந்த ஆத்மாக்களைக் கர்த்தன் முடிவில்கேள்விகேட்டு மோட்சந் தருவார் மற்றவர்களுக்கு நரகந்தருவர் இந்த துருக்கமதத்தில் சொல்லிய கிரமங்கள் அனேகமுண்டு இதை சங்ஷேபமாக சொன் னதென்றறிக.

# கிறிஸ்து மதம்.



இம்மதத்தார்கள் சுமார் ஆறாயிரம் வருடத்திற்கு முன்பு பிரபஞ்சம்தோன்றியிருக்கவேண்டுமென்று கணிப்பதுடன் கடவுளால் ஆதியில் வானமும், பூமியும்படைக்கப்பட்டதென்றும் பின்பு வெளிச்சம், இருட்டு, சலம், சூரியசந்திரர்களையும், தாவரசங்கமப் பொருள்களையும், கடையில் தம்சாயலாக ஆதாம் ஏவாள் என்கிற ஆதி புருடனையும் ஸ்திரியையும் முறையேபடைத்து தம்கிரியையெல்லாம் முடித்து, ஏழாம்நாளாகிய சனிக்கிழமையதினத்தை ஓய்வுநாளாக்கி அதைப் பரிசுத்தப்படுத்தி, தம்மை வணங்கவேண்டுமென்று கட்டளையிட்டதாகவும் கூறுகிறார்கள்.

இதன்றிமண்ணினாலே உருவாக்கி சீவசுவாசத்தை நாசியிலே ஊதி சீவாத்துமாக்களாகிய ஆதாம் ஏவாள் தங்கியிருக்கும்படி அமைத்த ஏதேன்சிங்காரவனத்தில் தம்மால் தடுக்கப்பட்ட நன்மைதீமையறியும் மரத்தின்பழத்தை ஒரு துட்டசர்ப்பத்தின் தூண்டுதலினால் உருசிபார்த்ததினால் அவர்கள் பாவிகளாகவே அவர்கள் பிள்ளைகளாகிய உலகத்தாரும் அந்தப் பாவமன்னிப்புக்குக் கடவுளை அத்தினத்தில் வணங்கவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள்.

இவ்வாறு உலகத்தாருக்கு உண்டாகிய பாவத்தைதுடைத்து அவர்களை இரட்சிக்கும்பொருட்டு பெத்தலகேமென்னும் தேயத்தில் தச்சவேலைசெய்து ஏழை சீவனஞ்செய்துவந்த யோசேப்புக்கு நியமிக்கப்பட்டிருந்த மரியாளென்னும் கன்னியின் வயற்றில் தீர்க்கதரிசிகள் வாக்கின்படி ஏசு சனித்தார். இவருக்கு * "இம்மானுவேல்" ஆதாம் மெசய்யா என்கிற நாமங்களுண்டு. இவர் தாம்பிறந்த எட்டாம்நாள் சுன்னத்தையடைந்து 0 இயேசுவென்று நாமஞ்சூடப்பட்டு: நாற்பதாம் நாள் தேவாலயப்பிரதிட்டையாக்கப்பட்டதாயும் மோசேயின் ஆதியாகமத்தினால் தெரியவருகிறது. உலகத்தில் ஆங்காங்கு தோன்றிய அவதார புருடர்களைப் போல் இவர் அனேக அற்புதங்களைச்செய்தும் எண்ணிறந்த வியாதியத்தர்களைச் சுகப்படுத்தியும் வந்ததுடன் தம் பன்னிரண்டாவது வயதிலேயே தேவாலய போதகர்களோடு மதவிடயமாய் தர்க்கங்களைச் செய்து

* தேவன் நம்மோடிருக்கிறார் என்று அருத்தம்.
0 இரட்சிப்பவர் அபிடேகம் பண்ணப்பட்டவரென்றுபொருளாம்.

வந்தார். இன்னும் தம் முப்பதாவது வருடத்தில் உலகப்பிரசித்த மாய் உலகத்தின் அநித்திய வாழ்கையைப்பற்றியும் புருடார்த்தத்தைப்பற்றியும் பிரசங்கஞ் செய்துவந்தார். இவர் தாம்பிறருக்குப் போதித்தபடி பரிபூரணமாய் பரமபிதாவினிடத்தில் பக்தி செய்துவந்தமையால் இவரிடத்தில் 12-நற்சீடர்கள் அடைந்தார்கள். 1 பேதுரு, 2 - அந்திரேயா, 3 - யாக்கோப், 4-யோவான், 5-பிலிப்பு, 6-பர்த்தலேமியு, 7-தோமா, 8-மத்தேட்டி, 9-யாக்கோபு, 10-ததேயு, 11-சிமோன், 12-பருதா.

இவருடைய முக்கியவிதியாவது பராபரவத்துவாகிய கடவுளை, பூரண இதயத்தோடும் பூரணபத்தியோடும் பூரணமனதோடும் விசுவாசித்தும்; நமது அயலாரை நம்மைப்போலும் நேசிக்கவேண்டுமென்பதே யாகையால், அக்காலத்திலிருந்த யூதர்களில் புத்தியீனர்கள் சிலரால் பலவித இடுக்கண்களடைந்து, முடிவில் "யூதாஸ்காரியோத்" என்னுஞ் சீடனொருவனால் காட்டிக்கொடுக்கப்பட்டு சிலுவையிலறையப்பட்டார். இத்தகையதுன்பத்திற்கு ஆளாகிப் பிராணனை விடுங்காலத்தும் "சீவகாருண்ணியம் நிறைந்த ஓ பரமபிதாவே தாங்களின்னது செய்கிறோமென்பதறியாதஇவர்களை மன்னியும்; என்தேவனே! என்தேவனே! நீர் என்னைக் கைவிட்டதேதெ" னவும் முறையிட்டார்.

பிறகு தாமிறந்த மூன்றும் நாள் உயிர்த்தெழுந்து,தமது சீடர்களுக்குப் புத்திமதிகளைப் போதித்து, உலகமெங்குஞ் * சுவிசேடத்தை உபதேசஞ்செய்து பரவச்செய்யுமென்று ஆஞ்ஞாபித்து, பரலோகஞ்சென்றார்.

இவர் தாமுள்ள முப்பத்துமூன்று வருடமும் பிரமசாரியாகவேயிருந்து காலங்கழித்தார். இவர் காலத்தில், மகம்மதியரைப் போல, சுன்னத்துசெய்கிற வழக்கம் மிகப் பிரபலமாயிருந்தது. கிறிஸ்து அதை மறுத்து 0 ஞான ஸ்நானத்தைப் பிரசித்தப்படுத்தினர்.

---

* சுவிசேஷம்-என்பது பைபில்என்னும் கிறிஸ்துவர்வேதபுத்தகம்.

0 ஞான ஸ்நானமாவது-நீரால் பரமபான ஸ்நானமும் பரிசுத்த ஆவியினால் உண்டான ஸ்நானமும் செய்வதாம். இயேசுநாதர் பரமண்டலப் பிராப்தியடைந்தபின்பும் அவர்மதத்தை அநுசரிப்பவர்களால் இவ்வழக்க மின்றும் கொண்டாடப்பட்டு வருகிறது; ஆனால் இக்கிரியைப் பூர்வகாலத்தில் நடந்து வந்ததற்கும், இப்போது நடந்து வருவதற்கும் சிறிது பேதப்படுகிறது. பூர்வத்தில் ஞான ஸ்நானம் பெறுபவனைப் பரிசுத்தமான ஆற்று அல்லது



இயேசுநாதர், பரமண்டலஞ் சேருமுன் அப்போஸ்தலர்களாகிய பத்தசன சபையாருக்கு இரவில் ஞான உணவை ஊட்டிவந்தார். தாம் பரமண்டலத்தை யடையும்போது தம்முடைய மாமிசத்தை அப்பமாகவும், இரத்தத்தை இரசமாகவும் கொள்ளக்கடவீர்களென்று தத்துவார்த்தமாய் உபதேசித்ததை அநுசரித்தே தேவாலயங்களுக்கு அப்பத்தையும் இரசத்தையும் காணிக்கையாகக்கொடுத்து, குருமார்களால் தோத்திரம் செய்யப்பட்ட பிறகு பரிசுத்த பக்திமான்களுக்கும் வியாதியஸ்தர்களுக்கும் கொடுப்பார்கள்

இம்மதத்தை ஐரோப்பா அமேரிக்கா கண்டங்களில் அநுசரிக்கும் பெரும்பான்மை யோர்களுக்கும், ஆசியா, ஆப்பிரிகா முதலான கண்டங்களில் தொழும் சிறுபான்மையோர்களுக்கும் இன்னும் அங்குமிங்கும் சிறுபாண்மைலௌகிக தாரதமியமிருப்பதால் சற்றேறக்குறைய இருநூற்றைம்பதுக்கு மேற்பட்ட உட்சமயங்களுண்டு. அவைகளில் பிரதானமானவை அடியில்வருமாறு காண்க.

| | |
|---|---|
| கிரேக்குசபை | யூனிடேரியன்சபை |
| உரோமன்சபை | சொகினியயூனிடேரியன்சபை |
| புரோடெஸ்டாண்டுசபை | லண்டன்மிஷன்சபை. |
| லூத்தரின்சபை | ஸ்கோத்துமிஷன்சபை |
| பாப்டிஸ்டுசபை | இபிஸ்கோபல்சபை |
| வெசலின்சபை | குவாக்காசபை |
| ஒபிட்பீடிஸ்டுசபை | பிரிமேசனரிசபை |
| ஆண்டிநோவியர்சபை | சுவீடன்பார்க்கியசபை |
| பிரிசிபிடேரியன்ஸ்சபை | முதலியனவாம். |

## உரோமர் மதம்.

மேற்படி கிரேக்தேசத்தைச்சார்ந்த இத்தாலியா தேசத்தில் உரோமாபுரி என்றோர்பட்டணமுண்டு. இதிலுள்ளவர்கள், ஆரிய

ஊற்றுநீரால் பரிசுத்தப்படுத்தி அசுத்த ஆடையைப்போக்கி,சுத்த ஆடையை உடுப்பித்து,தேவாலயப் பிரதிட்டைசெய்து ஞானபோதகரால், ஞான ஸ்நானக் கிறிஸ்துமார்க்கத்தைப் போதித்து அக்கூட்டத்தில் ஒருவராக வளர்ப்போமென்று அக்காலத்தில் கூடும் சபையின் முன்னிலையில் வாக்குத் தத்தஞ்செய்துகொடுக்கப்படும். இக்காலத்திலேயோ சிரசின்மேல்மாத்திரம் நீரைத்தெளித்துமற்ற கிரியை நடத்தும் வழக்கம் பிரபலமாயிருக்கிறது.

பகுப்பினராக யோசிக்கப்படுகின்றனர். இவர்கள் வசிக்கும் தேசங் காரணமாக இவர்கள் உரோமமதத்தவரெனக் கூறப்படுகின்றனர். இவர்கள் உரோமன் பாஷையைப்பேசுகின்றனர். இவர்கள் அன்னியதேச நடைநொடியாதிகளை அனுட்டிக்கின்றனரேயன்றி, தங்கள் சுயார்ச்சிதமாக யாதுங்காணோம்.

## உரோமர்மதத்தின் தெய்வங்கள்.

1-ஜானஸ் என்னும் தெய்வம் சிருட்டிகர்த்தாவென்றும். அவரேபெரிய கடவுளென்றும், அவராலேயே உலகமும் வருடமும் உண்டானதென்றும்.

2-ஜூ-ஒன் என்னும் ஒரு கன்னிகாதேவதையால் மாங்கல்லிய கருமங்கள் காக்கப்படுவதென்றும்,

3-மைநீர்வா என்னும் அறிவுபொறுமை விளைவிக்கும் கடவுளென்றும், மூவகையாய்க் கூறுகின்றனர்.

## உரோமர் பொது தெய்வங்கள்.

மேற்கூறிய மூன்று தெய்வங்களன்றியில் கிரேக்குமதத்தைச் சார்ந்தவர்கள், அனேக சில்லரைத் தெய்வங்களையும், சூரியனையும், சந்திரனையும், புசல்காற்றையும், ஊற்றையும், சலத்தையும், பாம்பையும், மேகத்தையும், பஞ்சபூதியங்களையும் வணங்குகிறவர்களாயிருக்கின்றனர். அன்றியும், வருஷம் முந்நூற் றறுபத்தைந்து நாளும் பலவிதத் திருவிழா உச்சவங்கள் செய்வதில் மிகவும் பிரீதியுள்ளவர்களாய் இருக்கின்றனர்.

இந்த உரோமர்கள் அனேக வாலிபஸ்திரீகளைக் கன்னிகாமடங்களிற்சேர்த்து ஆயுள்பரியந்தம் தேவர்களை வணங்கவும், தொண்டுசெய்யவும் விடுவார்கள். அவர்களில் யாராவது விபசரித்தால் அவர்களை உயிரோடு புதைத்து விடுவார்களாம்.

இந்த உரோமதேசத்திய தத்துவஞானிகள் மாத்திரம் இவர் வழியில் புகாமல் (ஜெனிகா) என்னும் ஒரே கடவுளுண்டென்று எந்நாளும் தாபிதப்படுத்தி வாதிப்பர்.

## கிரேக்க மதம்.

கிரேக்கமதம்,—ஐரோப்பா கண்டத்தின் தென்பாகத்தில் கிரீசு என்று ஒரு பெரிய பட்டணமிருக்கின்றது. அவ்வூரிலுண்டான மதத்திற்கு இடவாகு பெயராக கிரேக்கமதம் எனக்கூறநேர்ந்தது.

### கிரேக் பாஷை.

இவர்களுக்கு இங்கிலீஷ் அக்ஷர ரூபமாகப் பதினோராயிரத்து அறுநூற்று முப்பத்து மூன்று பதங்களையுடைய ஒருபாஷை யிருக்கிறது.

### வகுப்பு.

இதில் ஒரு இரண்டாயிரம் பதங்கள் சமஸ்கிருதமாக இருந்தலினால் இவர்கள் ஆரிய வகுப்பினோர் பகுதியாரென உத்தேசிக்கின்றனம்.

### சாத்திரங்கள்.

இவர்களுக்குச் சமயாசாரியரும், மத சித்தாந்த சாத்திரங்களும் இல்லாமையினால், இவர்கள் மதமுடிபும் ஆசாரவிலட்சணங்களும் இன்னதெனக்கூற ஏதுவில்லா திருக்கிறது.

### கிரேக்க தெய்வங்கள்.

இவர்களுள் கவிவாணர்கள் ஒருகருத்தாகவும், தத்துவஞானிகளொரு கருத்தாகவும், சாதாரண குடிகள் ஒரு கருத்தாகவும்தெய்வங்களைக்கொண் டிருக்கின்றனர்.

### கிரேக்க சாதாரண குடிகள்.

| | |
|---|---|
| பூதேவி | இருகட்கடவுள் |
| அன்புக்கடவுள் | நாட்கடவுள் |
| மோட்சலோகக் கடவுள் | |

இவர்கள் உண்டாய், சகலத்தையும் உண்டாக்கினதாக கூறுகின்றனர். அன்றி இவர்கள் அத்தேவதைகளை இந்துக்களைப் போல அழகிய விக்கிரகரூபமாகத் தாபித்து புட்பாதி அலங்காரமும் சிலசமயம ஆடுமாடுகளைக் கொன்றதின் இரத்தத்தை வாரிப் பூசியும் அதிக உரத்த சத்தமாகப் பிரார்த்திக்கின்றனர்.

### கிரேச்க கவிவாணர்களது கருத்து.

அழகிய ஸ்திரீபுருஷ கந்தமூல கிருமி முதலியவைகளைத் தேவர்களாகப்பாவித்து, பாடுவார்கள், மேற்படி தேவன், சமுத்திர தேவன், சூரியன், சந்திரன் முதலியவர்களாகப் படிகமுதலிய விக்கிரக ரூபமாகவைத்து துதிப்பர். இவர்கள் அழகு அறிவு சகதியிலைகளுள்ள மனிதர்களை எல்லாம் தேவர்களென்றும் இவர்கள் பூமியிலேயே சனித்தவர்களென்றும் இகபரபோகமே உண்மையான சுகமென்றும் கூறுகின்றனர்.

## கிரேக்க தத்துவஞானிகள் கருத்து.

அம்மதத்துள்ள தத்துவஞானிகள் தெய்வம் ஒருவரே யென்றும், அக்கினியே கடவுளென்றும், பரிசுத்த எண்ணமே கடவுள் என்றும், பலவிதமான கருத்தைக்கொண் டிருக்கின்றனர். ஆயினும் இம்மதத்தவர்கள் ஆலயத்திற்குப் போகும்போது இந்துக்களைப்போலவே ஸ்நானமுதலிய சுத்தியோடு ஆராதனை முதலியவைகளைச் செய்துவருகின்றனர்.

## எகிப்து தேசமதம்.

ஆபிரிக்காவின் வடகிழக்கில் தொன்றுதொட்டுநாகரீகத்திலும் சாத்திர விசாரணையிலும், பிரதாபமடைந்த பூலோக வனமென்று பல தேசத்தாராலும் புகழும் எகிப்து என்றோர் தேசமுண்டு. இத்தேசத்தில் மூன்றுவித மதங்கள் அனுசரிக்கப்பட்டு வருகின்றன.

அவற்றுள் 1-வகுப்பார், ஓர் ஆதிகடவுள் உண்டென்றும், அக்கடவுளே சராசர பிரபஞ்சமென்றும், மறுபிறப்பு முண்டென்றும் ஆன்மா அழிவற்றதென்றும், இந்தியாவிலுள்ள அத்துவைதமதத்தர்களின் கொள்கையை யுடையவர்களாயிருந்தும் ஆன்மாவும் தேகமும் ஒன்றென்றே சாதிக்கிறார்கள்.

2-வது வகுப்பார், மூன்றுவகையான கருத்தர்களுண்டென்றும், சரியை கிரியை யோக முதலானவைகளினால் சன்ம நிவர்த்தி புண்டாகுமென்றும் தாபிக்கிறார்கள்.

3-வது வகுப்பார், புராண சம்பந்தங்களுக் கிணங்க, எண்ணிறந்த சடங்குகளையும் பூசைகளையும் பிராயச் சித்தங்களையும் செய்வதினால் மோட்சமுண்டென்று சொல்லுவதுடன் புதுக்கோயில்களை ஏற்படுத்தி, பல பிராணிகளைப் பாவ நிவர்த்திக்காக பலிவு கொடுத்தும் வருகிறார்கள். செத்த பிணங்களை ஒசிரிஸ் தேவன் சந்நிதியில் எழுபது நாள் வைத்திருந்து கடைசியில் அங்குள்ள திராசில் ஒவ்வொருவரின் புண்ணிய பாவங்களை நிறுத்துப்பார்த்த பின்னர் அடக்கம் செய்கிறார்கள்.

## காந்திநேவியர் அல்லது டியுடனிக்மதம்.

ஐரோப்பா கண்டத்தைச்சார்ந்த சில சுற்றுப்புறங்களில் குடியேறி வாசஞ்செய் திருந்தவர்களுக்கு காந்திநேவியர் அல்லதுடியுடனிக் மதமென்றுபெயர். இவர்களை இன்னசாதியாரென்றுதிட்டமாய்ச் சொல்லக்கூடவில்லையாகிலும், பூர்வம் ஆரியவமிசத்தினின்று பிரிந்த ஐரோப்பியருடன்கலந்து, ஐரோப்பாகண்டத்தின் மத்திய

பாகத்தில் ஆடுமாடுகளைமேய்த்து, கடைசியர்க ஜர்மானியராகவும் தச்சுக்காரராகவும் பிரான்ஞுக்காரராகவும் ஆங்கிலோசாக்ஸனர்களாகவும் பின்னும் பலவாறாக ஐரோப்பா கண்டத்தின் பலவிடங்களில் பரவினவர். கொலம்பஸ் என்பவர் அமேரிக்கா கண்டத்தைக் கண்டுபிடித்ததற்கு ஐந்நூறு வருஷத்திற்கு முன்னமே இந்தக் காந்திநேவியர் அமேரிக்காவைக் கண்டவர்களாயிருக்கின்றாரென்சில சாத்திரம் சொல்லுகிறது.

இந்தசாதியார் ஜர்மனிமுதலிய பாஷைகளிலிருந்து உற்பத்தியான (நார்ஸ்) என்னும் பாஷையைப் பெற்றவர்களா யிருக்கின்றார்கள்.

## உலக சிருட்டி.

ஆதியில் (அபிஸ்) என்கிற பிண்டமானது உத்தர தட்சண உலகமாக யிருந்ததாகவும், இதின்பேரில் (வெனம்) என்னும்மழை பெய்கையில் தட்சணத்திலிருந்து மோதிய காற்றினால் அந்தப் பிண்டம் கரைந்துபோனதாகவும், அப்படி கரைந்தபிண்டத்திலிருந்து (இமிர்) என்னும் இராக்கதன் பிறந்து அவன் மாய்கையினால் ஒரு கொடியசாதியாரும், (மண்டான்) என்னும் பசுவும் பிறந்ததாகவும், அந்தப் பசுவினிடமாய்ப் போர் ஓடின விலாவென்னும் தேவர்கள் உற்பவித்து, இமிர் என்னும் இராக்கதனைக் கொல்லவும் அந்த இராக்கதன் உடலே வானமும் பூமியு மானதாகவுஞ் சொல்லுகிறார்கள்.

## தேவர்கள்.

இவருக்கு பதினைந்துவிதப் பெரிய தெய்வங்களும், அநேக சில்லரைத் தெய்வங்களும் உண்டு. ஓடின் என்னும் முதல்தேவனை ஆல்பாதர் உலகபிதாவென்றும், சிருட்டி கர்த்தாவென்றும், இவன் ஆஸ்காவென்னும் விருட்சத்தடியில் உட்கார்ந் திருப்பவரென்றும், பூமியே இவருக்கு மனைவியென்றும், இவருக்கு (தார்) என்னும்ஒரு குமாரனுண்டென்றும், அந்தத் தேவனுக்கு (பிலஸ்கிர்னிர்)என்னுமிடத்தில் ஐந்நூற்று நாற்பது கோயில்கள் உண்டென்றும், ஒவ்வொரு கோயிலிலும் ஒவ்வோரவதாரமாக இருப்பாரென்றும், இரண்டு ஆட்டுக்கிடாக்களால் இழுக்கப்பட்ட இரதமுடையவரென்றும், அவர் அபூர்வமான வெகு சத்தியுடையவரென்றும் சொல்லுகிறார்கள். இவர்களினுட் பிரிவிலுள்ள அநேக சில்லரைத் தெய்வங்களின் வேறுபாட்டால் மதவாதங்களும் ஆசார இருத்தியங்களும் மாறுபட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

## மெக்சிகோ தேசத்தார் மதம்.

மெச்சிகோ என்னும்தேசம் அமேரிகாகண்டத்திலிருக்கிறது. அத்தேசவாசிகள் முறட்டுத்தனமுள்ள ஒருவித காட்டுமனிதர்களாயிருக்கின்றனர். இவர்களில சிலர் சூரியபகவானையே பராபரவஸ்துவாக நம்பி, வணங்கிவந்தார்களாம். இவர்கள் மலைமீதில் வாசம்செய்ததாகவும், இவர்களில் சிலர் மிருகரூபமாக இருந்ததாகவும் தெரியவருகின்றது. அக்காலத்தில் விட்ஜலி புட்வுலி என்னும் வேதபுருஷன் அம்மலைமீதில்வந்து பட்சிரூபமாக உட்கார்ந்ததாகவும், அதன்பிறகுதான் மெக்சிகோஎன்னும் பட்டணங்கட்டப்பட்டதாகவும் சொல்லுகிறார்கள் மெக்சிகோ என்னும் அப்பட்டணத்தின் பெயரையே வகித்த ஒரு கிரமமான மனிதன் ஏற்பட்டு அவனால் ஆலயம் முதலியவை கட்டப்பட்டு, மனிதர் என்கிற நாகரீகத்தை யாவருக்கும் தெரியப்படுத்திச் சீர்திருத்தம்செய்ததாகத் தெரிகிறது.

### தேவர்கள்.

டியாசு என்னும் ஒருபெரிய தேவன் இருப்பதாகவும், அதற்கு உலகமே சிம்மாசனமாகையால் கோளவடிவாய் ஆசனம்செய்து இருபுயத்திலும் சிறகுகளுள்ளபாவனையாய் உருவு செய்து, அதன்கைகளில் பலவித ஆயுதங்களும் அனேகவித பாம்புகளும் பிடித்திருப்பதாக, பிரதமைசெய்து வணங்குகின்றார்கள். அன்றியும் மேர்க்குரி என்னும் தெய்வத்தைத் தனதானியலட்சுமியாகவும் கொண்டு வணங்கிவருகின்றார். அப்பால் பூமியே தேவனாக நம்பிவருடாவருடம் அனேக நரபலிகளும் கொடுக்கின்றனர். இவர் ஆலயங்களில் மனிதர் மண்டையோடுகளைக்கட்டி ஏராளமாய்த் தொங்கவிட்டும் பலவிதபாம்புகளை அன்புபாராட்டி வளர்த்துக்கொண்டும், தெய்வங்களுக்கெல்லாம் பூசாரிகளைக்கொண்டே மிகவும்புயபத்தியுடன் பூசைகளும் சிலசமயம் பத்துநாள் உபவாச விரதமுடன் அலங்கரித்து ஆடிப்பாடி விளையாடும் பண்டிகையும் செய்கிறார்கள்.

## கினியாதேசத்து மதம்.

இவர்கள் படிப்பும் நாகரீகமும் எவ்வித சாத்திரங்களும் குருக்களுமில்லாதவர்கள். இறந்தவர்களைப் பெண்களே கொண்டுபோய்ப் புதைக்கின்றனர் இராசசிம்மாசன மேறுவதையே சிறந்த உற்சவமாகக் கொண்டவர்கள். செவ்வாய்க்கிழமையே தொழுகைநாளாக மதித்துத்தொழுது, கோழிமுதலானதையும் விசேடநரபலியுமிடுவார்கள். பெட்சிஸ்தேவர்கள் தங்களைப்போலக் கரு

திறமாய், தீமையே குணமாக உடையவர்களாயிருப்பதாகக்கூறுகின்றனர். இடிவிழுந்த இடங்களில் விக்கிரகரூபங்களை வைத்து வணங்குகின்றனர், தங்கள் துட்டதேவதைகள் கருநாய்போலவந்து தீங்குகளைச் செய்யுமாம்.

## பெனின் அட்டராதேசமதம்.

இவர்கள் யுத்தத்திலிறப்பதே மோட்சமென்கின்றனர், அதனால் இறப்பவர் கைகளைப்பின்பக்கங்கட்டி நிறுத்தி, வில்லையும்அம்பையும்கொண் டலங்கரித்து, சமாதிசெய்கின்றனர். பிரபுக்களும் இராசாக்களும் இறந்தால் அவர்களுக்கு வைகுந்தம் போகத்துணையாய் நாலைந்து ஆள்களையும் கூடப்போட்டு புதைக்கின்றனர். இவருள் மாதரும் பிள்ளைகளும் கடவுளை வணங்குவது கிடையாது, துட்டதேவதைகளுக்கு நரபலியும் மிருகபலியுங் கொடுத்து பாவமன்னிப்பு முதலிய பிரார்த்தனைகளைச்செய்து வருகின்றனர். ஒரு பெரிய கடவுளிருப்பதாகவும் அவர் நல்லவரென்றும் ஆனதால் அவருக்கு வழிபாடுகள் வேண்டாமென்றும் கூறுகின்றனர்.

## கான்கோமதம்.

இவர்கள் இராசனை தேவனென்று வணங்குவதோடு சாம்பார், பாங்கோ என்னு மிருவிக்கிரகங்களையும் வணங்குகின்றனர். அவர்கட்கு 'கெங்காகாம்பரு' என்னும் தேவதைகுறிகளைச்சொல்லும் ஔவையாரென்று நம்பிப் பூசிக்கின்றனர். இவ்வூரில்மீராம்பர் வென்னும் பயங்கரமந்திர விக்கிரகமொன்றிருக்கிறது. இதை சல சிலர்கள் வணங்குகின்றனர். சிலர் பாம்பு, புலி, ஆடு, மாடுகளை வணங்குகின்றனர். இவர்கள் குருக்கள்வியாதியாளரைக்கண்டு வரும்போது அவர்கள் சுகத்துக்காக ஓர் சிறு விக்கிரகத்தைக் கொடுக்கின்றனர்.

## அங்கோலியர்மதம்.

இவர்கள் மேற்படியாரைப்போலவே அனுட்டிப்பவராயினும், ஒரு கடவுள் உண்டென்ற நம்பிக்கையும், அனந்த சில்லரைத்தேவவணக்கமும் தீர்க்கதரிசிகளிடத்தும் குருமார்களித்தும் விசுவாசமுடையவர்கள். பன்னிரண்டு அடி நீளமான விக்கிரகத்தைச் செய்துவைத்து வணங்குகின்றனர்.

## அரக்கான்தேசமதம்.

இவர்கள் பற்பலதேவர்களை நம்பி பூசிப்பவராயினும், அவர்களின் முக்கியதேவனை விநோத விக்கிரகரூபமாகச்செய்து வர்கள்

ங்களிமேற்றிப் பவனிவருபவர். அக்கால் அநேகர் பக்கத்தோடு முதலியவைகளைக் குத்திக்கொண்டு இரத்தத்தைச் சிந்துவர். இத்தேவனைப் பொரோமலேயில் வைக்கப்பட்டிருக்கிறது. மழை பனி முதலியதுகளால் தங்கள் தேவர்களுக்கு நோய்வருமென்று கோயில்கட்டி யிருக்கின்றனர். இவர்கள் குருக்கள் சருவாங்க சவரமும் மஞ்சள் வத்திரமும் தரித்துக்கொண்டு சன்னியாசிகளா யிருக்கின்றனர், இவர்கள் நான்கு மனைவிக்கு அதிகமாகவும் அரசர்கள் பன்னிரண்டு மனைவிக் கதிகமாகவும் மணம்புரிகின்றனர். இவர்கள் மறுபிறப்பையும் ஒரு கடவுளுண்டென்பதையும் நம்புகின்றனர். இறந்தவரான்மாவை எமன் கொண்டுபோகாதபடி விசேடக்கொட்டு முழக்கங்களைச்செய்து வருகின்றனர்.

## காபிரிகள் மதம்

ஆபிரிகா தென்பாகத்துள்ள காபிரிகளுள் சிலர் முகம்மது சமயத்தையும், சிலர் மூடபத்தியையும், சிலர் கடவு ளொருவருண் டென அநேக விக்கிரகாரூபமாக உபாசித்தும் சிலர் சூரியர் சந்திரர் நட்சத்திரம் இவைகளைநம்பி வணங்கியும் அண்ணாந்து வானத்தைநோக்கிக்கண்ணைமூடித்துதித்தும் வருவதோடு ஓர்வித'மேபக்' கென்னும் பூச்சி விசேடகத்தைக் கொடுப்பதென் றுத்தேசித்து அதைப்பாதுகாத்தும் வருகின்றனர். அன்றி, தங்கள் தெய்வங்களுக்கு ஆடுமாடுகளைப் பலியிடுவார்கள். இவர்களுக்குச் சிலத்திலும், விவேகத்திலு முதிர்ந்த ஆசாரியர்களுமுண்டு. விபசாரிகளை உடனே கொலைசெய்வர். விதவைகள் புனர் விவாகஞ் செய்து கொள்ளப் போகும்போதெல்லாம் தங்கள் முன் விரல்களை வெட்டிக் கொள்ளுவார்கள்.

## தார்த்தாரிமதம்.

ஆசியா வடபாகத்துள்ளவர்களைத் தார்த்தாரியரென்று கூறுவது. இவர்கள் மார்ஸ் என்னும் ஒரு தெய்வத்தை விக்கிர காராதனையோடு குதிரைகளைப் பலியிட்டு வணங்கி வருகிறார்கள். சில பகுப்பார் குதிரை சவுக்கைக தெய்வமாகக் கொண்டுள்ளார். இவர்கள் கிடிகே என்னும் சிருட்டி கர்த்தாவும், சங்கியாசி குருவும் அவருக்கு இருபதினாயிரம் சீடர்கள் லாசாவிலிருப்பதாகவும், டிாஸியர் என்னும் ஓர் கிராமதேவ ருண்டென்றும், குடுசடா என்னும் புனருற்பவத்தைக்கொடுக்குந் தேவருண்டென்றும் சிலர் பூமியேதேவனென்றும் கூறி அர்த்தராத்திரியில் பூமியிற் புரளுவரென்றும் கூறுகின்றனர். இவருள் வேறு பிரிவார் இறந்து போனவர்களையே தெய்வமென்றும் சிலர்சஹமான் என்னுஞ் சிருட்டி கர்த்தாவுள்

டென்றும், சிலர் சூரிய சந்திரரும் பெரியவருமே தெய்வமென்றுங் கூறி, பலியிடு மிருகங்களைத் தலைகீழாய்த் தூக்கி, மரங்களிற் கட்டி வணங்குகின்றனர். சிலர், ஆகிடியச என்னுஞ்சிருட்டிதேவன் ஆற்றங்கரையி லுண்டென்றுகூறி வணங்குகின்றார். இத்தார்த்தாரியர் தாயோடுபுணருவர் ஆனாலும் நாற்பது வயதின்மேல் மணம்புரியார்கள். விபசாரிகளைச் சந்தேகித்தால் கரடியயிலைத் தொட்டுச் சொல்வர். இறந்தவரைப் புதையாமல் மரத்திற் றொங்கக்கட்டிக் காய்ந்து நெடுநாளானபின் ஆபரணம்பூட்டிப் புதைப்பர்.

## ஜப்பான் மதம்.

இம்மதம் ஏகதேசத்தில் இந்து மதம்போலிருப்பினும், சிந்சிச, செடோரியஸ், பாக்குச்ச, ஜம்மாபோக முதலிய பகுப்புகளுண்டு. இவர்களுக்கு ஏறக்குறைய இரண்டாயிரத்து ஒருநூற்று இருபத்தேழு தங்கவன்ன ஆலயங்களுண்டு, அவ்வாலய வாயற்படிதோறும் பூதத்தலையைப்போன்ற விக்கிரகங்களுண்டு. முன்னர்ப் படங்களையும், பின்னர் விக்கிரகங்களையும் பூசிப்பவராயிருக்கின்றனர். இவர்கட்கு ஆறாயிரம் வருடமாக ஏழுதலையோடு குதிரைமேலிருந்தாளும் இமிடாசு என்னும் பரதேவருண்டாம். இவர்கள் பிராண பலியுந் தருவார்கள். இவர்களுக்கு,

| | | |
|---|---|---|
| வர்த்தகவிருத்தி | தேவர் | ஜெபிசு |
| தனதானியம் | ,, | டகாகு |
| நல்லலாபம் | ,, | டாசிடோகா |
| சந்தோடம் | ,, | போட்டி |
| குலம் | ,, | சிவரன் |
| வேட்டை | ,, | சவா |
| பிசாசையோட்டும் | ,, | பிட்சிமான் |

இவருள் இறந்தவர்களைச் சுட்டுச் சாம்பலைப் புதைப்பார்கள் விபசாரிகளைக் கொலைசெய்வார்கள்.

## சீயமதம்.

இவர்கள் தேவன் சோமன்கூடம் அவர்புட்பத்திலுற்பவித்து விருட்சத்தின்கீழ்ச் சபஞ்செய்திருப்பர். ஆட்டுக்குட்டிகளைப் பலியிடுவார் இவர்கள் சருவாங்கசவரஞ் செய்துகொண்டு சந்நியாசியாகவிருப்பார்கள். இவர்களிலிறந்தவரைச் சப்பான்மதத்தரைப்போற் செய்கின்றனர். கொள்ளிவைத்தலை சிறந்ததாகச் மதிக்கிறார்.

## பெகூவியன் மதம்.

இவர்கள் ஆடுமாடுகளையும் சிலசமயம் நரபலியு மிடுகின்றனர். சிறிது பாவஞ்செய்தவர்கள் தங்கள் மூக்கு உதடு விரல் இவைகளை

அறுத்து இரத்தத்தை வடிபவைக்கின்றனர். சூரிய சந்திரனை வணங்குகிறார்கள். இவர்கள் சிருட்டி கருத்தா பச்சகாமிக்கு என்னுந் தேவர் இவர் மின்னல் இடிகளைத் தூதராகக்கொண்டு துட்டரைச் சிட்சிக்கின்றனராம். இவர்களுக்கு மறுபிறவி யுண்டென்னும் நம் பிக்கையும் தங்கை தமக்கைகளை மணம்புரிவதும் உண்டு. இந்துக் களைப்போல் சூரியசந்திர சுக்கிராதிகளை வணங்குகிறார்கள். இவர் களின் சிரஞ்சீவியான தெய்வத்தின்பேர் ஹனகா என்றுகூறுகிறார்.

நியூசவுத்துலாந்து, கனடா மதங்கள்.

இவர்கள் மாதாபிதா, குரு, சூரியர்களை வணங்குவோர். அந் நால்வருமொரே தேவரெனவும் அவர் அம்பினால் பூமியைப் பிளந்து, அதினின்று ஆண் பெண்களை யுண்டாக்கி பின்னால் உலகை உண்டாக்கினதாகவுங் கூறுகின்றனர். ஆட்டுகுட்டிகளும் இராசாக் களு மிறந்தபின் தேவர்க ளாவார்களென்றும் கூறுகின்றனர். ஸ்திரீகள் சூரியனைமாத்திரம் வணங்குவர். பல ஸ்திரீகளை மணம்புரிவர் இறந்தவரைப் புதைத்து அனேகநாளானபின் எலும்பையெடுத்துப் பூசிப்பார். இவர்கள் நதியை கடக்கவேண்டில், நதிபூசைசெய்தே போவார்கள்.

பைகோ மதம்.

இவர்கட்கு உள்ளவர் ஐந்து தேவர்களாம். இதில் நாலவாவது தேவன் இரண்டாயிரத் திருநூறு வருடத்துக்கு முன் இறந் தனராம். உலகம் முடிவில் தகனமாகுமாம், நன்மைக் கெல்லாம் பிசாசும் கர்த்தாவாம். இவர்கள் கோயில்களிலொன்றில் 120,000 விக்கிரகங்களுண்டாம், தலைகுனிந்து வணங்குவர். சிலர்வருடத்தில் 3-மாதம் பிசாசோடு வசிப்பார்களாம். சோமவாரமே தொழுகை நாளாம். இவர்கள் குமாரர்கள் ஒரேவேளை புசிப்பாராம் உண் ணுங்கால் முதற்கவளத்தை நாய்க்கிடுவராம். துக்கத்தைக்காட்ட சவரஞ்செய்து கொள்வராம், வேறுசில மதத்தார் பாண்டிகைகளை யும் கொண்டாடுவாராம்.

பிலப்பியன் மதம்.

இவர்கள் சூரிய சந்திராதிகளை வணங்குவர் அனேக சில்லரை தேவர்களையு முடையவர்கள். சிலர் அப்பாவென்னுந் தேவனை விக் கிரக ரூபமாகவைத்து வணங்குகிறார்கள்.

மலாக்கா மதம்.

இவர்கள் பெரும்பாலும் மகம்மதிய மதத்தை அனுசரித்தவர் கள் சிலர் வாயுவே பரமெனக்கூறி வணங்குகின்றனர். இவர்கட்கு

அனேக மந்திரதேவதைகளும் துட்டதேவதைகளு முண்டென்று கூறி விக்கிரகரூபமாக வைத்தும் வணங்குகின்றார்கள்.

போர்னியோ சுமித்திரா தீவுகளின் மதம்.

இத்தீவுகளிலுள்ளோரில் சிலர் துலுக்கு மதத்தையும், சிலர் பிலப்பிய மதத்தையும், அநுட்டிக்கின்றார்கள். பட்சிசகுனம்பார்க்கின்றனர். கலியாணஞ் செய்துகொள்ளவேண்டில் பகைவர் தலைகளைவெட்டிச் சீராகக் கொடுக்கவேண்டுமாம். இறந்தபின் தேகமும் ஆன்மாவும் நிர்வாணத்தைப் பெறுமாம்.

ஜாவாதேச மதம்.

இவர்கள் ஆதியில் சந்திரசூரியரை வணங்கி வந்தார்கள். தற்காலம் படேலியர் முதலிய கிறிஸ்து மதத்தரா யிருக்கின்றனர். ஆயினும் நீசுபேரியன்கள் பிசாசுகளையும் சந்திரனையும்வைத்துவணங்குகின்றனர்.

இலங்கைத்தீவார் மதம்

இவர்கள் சில்லரை தெய்வங்களையும், பிசாசையும் வணங்கி வருகின்றார்கள். இடையில் புத்தமதம் பரவி, விசேட பண்டிகையாகக் கொண்டாடி வருகிறார்கள். நவக்கிரகங்களையும் பூசிக்கின்றனர். இப்போது கிறித்துமதம் பரவி, மருவிவருகிறது, எல்லாம் படிப்பாளிகள்.

மலாயதீவின் மதம்.

இவர்களி லனேகர் மகம்மதிய மதத்தர், ஆயினும், சிலர் காற்றையும் கடலையும் தெய்வமாகநம்பி ஆடு கோழிகளை பலியிட்டு வருகின்றனர். விசேடகாற்றிலும் கடலிலும் எச்சில் துப்பலாகாதென்கின்றனர். பிசாசால் வியாதி வருவதாக யோசித்துப் பலியிடுகின்றனர். பஞ்ச பூதங்களையும் தெய்வமாக நம்புகின்றனர். ஆயினும் வேறோர் சிருட்டி கருத்தருண்டென்று பூசித்து வருகின்றார்கள்.

லாப்லாந்தியர் மதம்.

இவர்கள் ஐமொலா, அஜிகா, டொர்ஜன்கரா, பெயுமி என்னும் தேவர்களும் இவர்கட் குதவியாய் அனேக பிசாசுகளுமிருப்பதாக ஆடு கோழி முதலியதைப் பலியிட்டு வணங்குகின்றனர். இவரில் யாராவதிறந்தால் ஆறுமாதம் வீட்டைவிட்டு வெளியில் போவார்கள். இப்போது தகித்து விடுகின்றனர்.

மிசிசிபிதேச மதம்.

இவர்கள் சூரியனை வணங்குகின்றனர். உலகங்களெல்லாம் ஒரு பெண்ணால் படைத்ததாகக் கூறுகின்றார்கள். ஓடகாம் என்

னும் ஒரு பெரிய தெய்வமுள்ளதாகநம்புகின்றனர். அன்றி அநேக சில்லரை தெய்வங்களு முண்டாம். ஆற்றில் வெள்ளம்வரில் கடாக்தோலை மரியாதையாகக் கட்டுவார்.

பிலோரிடியன் மதம்.

இவர்கள் விக்கிரகாராதனை செய்கின்றனர். பிசாசுவணங்கிப் பல கோயில்களைக் கட்டியிருக்கின்றனர். அக்கோயில்களில் விக்கிரகத்தை வணங்காமல் செத்தவர்களையும் சிறந்த பொருள்களையும் வைக்க உபயோகிக்கின்றனர். சூரியன்முன் முழங்காலிட்டு வணங்கியும் தேனையும் சாம்பிராணி புகையும் ஆராதிக்கின்றனர். இவர்களில் பிலோரிடாசாதியார் தங்கள் முதற்குமாரர்களை இராசனுக்கும் தேவனுக்கும் பலியிடுகின்றனர். இறந்தவரை வாசனையோடு பெட்டியிலடக்கி மூன்றுவருடம் பூசிப்பர். மறுபிறப்பும் மோட்ச நரகமு முண்டென நம்புகின்றனர்.

காரபிதீவார் மதம்.

இவர்கள் ரொட்டியும் நீருமருந்திக் குடிசைகளில் வசிப்பவர் தேகத்தில் பல ஆன்மாவுண்டென்றும், அவ்வவ் வான்மா செய்த பாவத்தை மறுபிறப்பிலேனும், அது அதுவே அடையுமென்றும், நம்புகின்றனர். துட்ட பிசாசுமுதலிய தேவதைகளை விக்கிரகரூபமாகச்செய்து பூசிக்கின்றனர். வேறோர் சிரேட்டதேவனும் சில சில்லரைதேவர்களு முண்டென்றும் மிகவாய் உபாசிக்கின்றார்கள்.

ஒரு விண்ணப்பம்.

நாம் இதுவரையில் எழுதிவந்த மதவிடயங்களை மிகவும் சுருக்கமாய்ஒருவாறேகுறிப்பித்தனம் ஏனெனில் 'மதவிருட்சம்' 'தத்துவ ரத்நாகரம்' 'தத்துவ நிசானுபோகசாரம்' 'சர்வமதசங்கிரகம்' 'மத சித்தாந்தம்' 'மதபேத விளக்கம்' முதலிய நூற்களில் காணப்பட்டவைகளே சுருக்கமாக எழுதினும் மிகப் பெரிய புத்தகரூபமாக விரிந்துவிடும் அன்றி (சென்ஸஸ்) குடிமதிப்புச் சபை யாரது ரிபோர்டுகளிலும், மானுவல்களிலும் காணப்படும் மதபேதங்களோ அநேகமா யிருக்கின்றன. அதுபற்றி சிலமதங்களை யெழுதாமலும், சில மதங்களின் பெயர்களை மாத்திரங் கூறியும், சில மதங்களைச் சுருக்கிக்காட்டியும், சில மதங்களைப்பிரிக்க அஞ்சி இவைகளின் மதங்களெனக் குறிப்பிட்டும், சிலமதங்களைக் கவனியாமலே விட்டும் இவ்வளவிலேயே நிறுத்தினோம்.

மதபேதகாண்டம் முற்றிற்று.

## பிரபஞ்ச அளவைப்பற்றி ஸ்ரீ சரவணப்பெருமாளைய ரவர்கள் கருத்து.

அகண்ட பரிபூரண சச்சிதானந்தசொரூபராகிய கடவுள் தமது இச்சாரூபமாகிய மாயையினாலே மகத்தத்துவமுதலிய தத்துவங்களைப் படைத்துத்தாம் இரணியகருப்பராகி அந்தத் தத்துவங்களிற் பிரவேசித்து, அவற்றிற்குத் தொழிலை யுண்டாக்கி, அவற்றாற் பொன்மயமாகிய வாயில்லாத குடத்தைப்போல உருண்டையாகவிருக்கின்ற பிரமாண்டத்தை யுண்டாக்கி, அவ்வண்டத்தினுட் படைத்தற்காக நான்முகனை உண்டாக்கிவைத்தார். அந்த நான்முகனானவன் மண்முதலாகிய தத்துவங்களாலே பூகோளத்தையும் கிரகசக்கிரத்தையும் உண்டாக்கினான். அந்தப் பூகோளமானது மேற்சொல்லிய பிரமாண்டத்தின் மையத்திலே துருவரிருவருக்கு நடுவிலே ஆதாரமில்லாமல் நிலையாக எலுமிச்சம் பழம்போல உருண்டையாக இரண்டு காந்தக்கல்லுக்கு நடுவே வைத்த இரும்பு உருண்டையைப்போல அசைவில்லா திருக்கின்றது.

சிலர் இந்தப் பூமியானது கூர்மாதிகளின்மேல் அண்டச்சுவர் வரைக்கும் பரப்பாக விருக்கின்றதென்பர். அது தகுதியன்று. கூர்மாதிகளை ஆதாரமென்றால் அக்கூர்மாதிகளுக் காதாரஞ்சொல்லுதற்கு உடன்படல்வேண்டும் இவ்விதமாக ஆதாரஞ் சொல்லிக்கொண்டு வருகையில் முடிவின்மை அல்லது அனவஸ்தை யென்னுங் குற்றம் விளையும். ஆகையாலே, கூர்மாதிகளை ஆதாரஞ் சொல்லக்கூடாது. இது வல்லாமலும், இப்பூமி அண்டச்சுவர் வரைக்கும் பரப்பாக விருக்கின்ற தென்றால், பூமிக்கும் அண்டச்சுவருக்கும் இடையிலே கிரகநட்சத்திரங்களுடையசஞ்சரிப்புண்டாகமாட்டாது. அப்படிச் சஞ்சரிப்பில்லாமற் பகலிரவுகள் உண்டாதலில்லை ஆதலாற் பூமிபரப்பாக விருக்கின்றதென்று சொல்லக்கூடாது. அப்படியன்று. பரப்பாகவிருக்கின்ற இப்பூமியினடுவே மேருமலையிருக்கின்றது. அதைக் கிரகநட்சத்திரங்கள் சுற்றிக்கொண்டு வருகின்றது. ஆகையால் அந்தமேருவின் சாயையினாலே பகலிரவுகளுண்டாகுமென்றால், சூரியன் மார்கழிமாதமுடிவில் அக்கினிமூலையில் உதித்து நிருதி மூலையில் மறைகிறதாகக் காணப்படுகின்றான். அதனால் மேருவின்சாயையினாலே பகலிரவுகளுண்டாகலாமென்று சொல்லக்கூடாது. அவ்விடத்துத் தாமரைப் பொகுட்டைப்போல மேலேவிரிந்து விசாலமாகிய மேருசிகரமிருக்கின்றது. அதனாற்பகலிரவுக ளுண்டாமென்றால், அந்த மார்கழிமுடிவிலே பகலினுமிரவு மூன்றத்தனை யதிகமாக உண்டாயிருக்கவேண்டும். ஆதலால்மேரு

மேலே விரிந்து அவ்விடத்திருக்கின்றதென்று சொல்லக்கூடாது. இதுவல்லாமலும், உதயாஸ்தமயங்களில் சூரியபிம்பம் விட்டத்திலே குறைவுபடாமற் கீழே குறைவாகத் தோன்றுகின்றதினாலும், கிரகணகாலத்தில் பூமியினது சாயை சந்திரபிம்பத்திலே வட்டமாகத் தோன்றுகின்றதினாலும், சமுத்திரத்தில் வருகின்ற கப்பலினுனி முதற்கொண்டு வரவர அடிவரைக்குந் தோன்றுகின்றதினாலும், இலங்கையிலிருந்து சுமேரு சமீபத்தில் வடக்குநோக்கிச் செல்கின்றவருக்குத் துருவன் போகப்போக உயரமாகக் காணப்படுகின்றதினாலும், சுமேருவிலிருந்து இலங்கைக்கு வருகின்றவர்கட்குத் துருவன் வரவரக் கீழாகக்காணப்படுகின்றதினாலும், பூமி பரப்பாகவிருக்கவில்லை உருண்டையாய் நிராதாரமாகவே இருக்கின்றது.

இன்னுஞ் சிலர் பூமியானது தேருருளையைப்போலச் சுழன்றுகொண்டு ஒருவருடத்திற் கொருதரஞ் சூரியனைச்சுற்றிக்கொண்டு வருகின்றது. அதனாலே பகலிரவுகள் இருதுகள் முதலாகிய விவகாரங்களுண்டாகின்றனவென்பர். பூமி தேருருளையைப்போலச் சுழல்கின்றதென்றால் கிரகங்கள் ராசி நட்சத்திரங்களோடு கூடிக் காணப்படுதலாலே கிரகக்கதி பிரத்தியக்கமாகி யிருத்தலாலும் அதனாற் பகலிரவுகளின் விபாகங்கள்முதலிய விவகாரங்களுண்டாதலாலும், அனுபவத்திற் கொவ்வாத பூமி சுற்றுதலைச் சொல்லுதலாற் பயன் யாது? பூமி வருடத்திற் கொருதரஞ் சூரியனைச் சுற்றிக்கொண்டு வருகின்றதென்றால், இலங்கையிலிருந்து பார்க்கின்றவர்களுக்குத் துருவரிருவரும் ஒருநாளுக்கொருநாள் சற்றுச் சற்றுச் சாய்வாகக் காணப்படல்வேண்டும். அப்படிக் காணப்படாமல் எப்போதும் ஒரு தன்மையாகவே காணப்படுகின்றபடியால் பூமி சூரியனைச் சுற்றுகின்றதென்று சொல்லக்கூடாது.

## பூமியினளவு.

இத்தன்மையாகிய பூமி ஐயாயிரத் தறுபது யோசனை தூரமாகிய சுற்றளவையுடையது. இதனைப் பெரியோர்களைம்பதுகோடி யோசனை யளவாகச்சொல்லி யிருக்கின்றார்களேயென்றால், முன்பூமியாண்ட வரசர்கள் செல்வச்செருக்கினாலே தத்துவவிசாரணையில்லாதவர்களாக விருக்கையால், அவர்களுக்கு வியசனமும்வெறுப்புமுண்டாதற்பொருட்டாக ஐயாயிரத்தறுபதுயோசனைப் பிரமாணமாகிய பூமியையைம்பதுகோடி யோசனையென்றுசொல்லினார்கள். அன்றியுஞ் சில சித்தாந்தங்களில் இவ்வளவிற்குக்குறைவாகச்சொல்லியிருக்கின்றதேயென்றால், அவ்வுகோல்களின்பெருமை சிறுமை

யால் அப்படிச் சொல்லப்பட்டதன்றி, அனைத்தும் ஒன்றுமென்றுணர்க்

கொள்க.

## மேருவின் சொரூபம்.

இப்படிப்பட்ட பூமியினடுவே நுழைந்த மேருமலை தெற்கு வடக்குகளிற் காணப்பட்டு எலுமிச்சம்பழ நடுவிற்கோக்கப்பட்டு இருபுறத்திலுந் தோன்றுகின்ற நாராசம்போல் இருக்கின்றது. தென்புறத்திற் காணப்பட்ட மேருவை வடவாமுகமென்றும் வடபுறத்திற் காணப்பட்ட மேருவைச் சுமேருவென்றுஞ் சொல்லுவர் அச்சுமேருவின்புறந் தேவபாகமென்றும், வடவாமுகத்தின்புறம் அசுரபாகமென்றுஞ் சொல்லப்படும், அச்சுமேரு நுனியின் மூன்று சிகரங்களிருக்கின்றன. அவற்றுள் அயன் அரி அர னென்னுந் திரிமூர்த்திகளுக்கு மூன்று பட்டணங்களிருக்கின் றன. அதன்கீழிலே திக்குப்பாலகரெண்மர்களுக்கு நகரங்க ளுண்டு.

## சமுத்திர நிலை

இப்படி நாராசத்திற் கோத்திருக்கப்பட்ட எலுமிச்சம்பழம் போல் மேருவைச் சுற்றிக்கொண்டிருக்கின்ற பூமியுருண்டையின் மேலே இலவணசமுத்திரஞ் சுற்றிக்கொண்டிருக்கின்றது. இச்ச முத்திரந்தரையிலும் அதிகமாகவிருக்கின்றது. அதன் இடைகளில் அங்கங்கே சிறுபூமிகளெழும்பிச்சிறு தீவுகளாகப்பலவிருக்கின்றன

## சம்புத்தீப நிலை.

இப்படி யிருக்கின்ற சமுத்திரத்திற்குவடக்காகிய பூமிகண்ட முழுதுஞ் சம்புத்தீபமாகும். இந்தச் சம்புத்தீபம் இரண்டாயிரத்தி ருநூற்றறுபது யோசனை பிரமாண முள்ளதாகும்.

## நவவருடம்.

இச்சம்புத்தீபத்திலே தென்கடற் கரைமுதற்கொண்டு வடக டற்கரையளவும் பாரதவருடம், கிம்புருடவருடம், அரிவருடம் இளாவிருதவருடம், அரமியகவருடம், ஐரண்வதவருடம், குருவரு டம், என்றேழு வருடங்களும், இளாவிருதவருடத்திற்குக் கிழக்கு மேற்குமாகியகடற்கரைகளிலே பத்திராசுவவருடமும், கேதுமால வருடமும், எனவிரண்டு வருடமுஞ்சேர்ந்தொன்பது வருடங்க ளிருக்கின்றன.

## வருடமலைகள்.

இவ்வொன்பது வருடங்களுக்கு விபாகந்தெரியப் பிரித்துக் கொண்டு எல்லைக்கரைகள் போல இமயம், ஏமகூடம், நிடதம்,

நிஷம், சுவேதம், சிருங்கி என்னுமலைகள் கிழக்கு மேற்குச்சமுத்திரங்களை யளாவியிருக்கின்றன. இளாவிருதவருடத்திற்குக்கிழக்குமேற்குகளிலே மாலியவந்தம் கந்தமாதனம் என்றிரண்டுமலைகள் கிடைமலை நீலமலைகளை யளாவிக்கொண்டிருக்கின்றன.

வருடங்களி னளவு.

இப்படிப்பட்டவருடங்களிற் பாரதகுருவருடங்கள் மூந்நூறு மூந்நூறு யோசனைகளளவு தெற்குவடக்கு விரிவுடையனவாம். கிம்புருட, அரி, அரம்மியக ஐரண்வதவருடங்கள் தனித்தனி நூற்றைம்பதுயோசனை யளவு தெற்குவடக்கு விரிவுடையனவாம். உருமாலைக் குட்டையைப்போலச் சதுரமாகவிருக்கின்ற இளாவிருதவருடம் மேருவினடியோடுகூடி எழுநூற்றறுபதுயோசனை யளவுவிரிவுடையதாம். பத்திராசுவ கேதுமாலவருடங்கள் கடற்கரைகளில் மூந்நூறு மூந்நூறு யோசனையளவு தெற்கு வடக்கு விரிவும்மாலியவந்தம் கந்தமாதனமலைகளின் சமீபங்களில் எழுநூறு எழுநூறுயோசனை யளவு தெற்கு வடக்கு விரிவுமுடையனவாம்.

இவ்வருடங்களிற் சிலபூமிகள் பிற்காலத்துக் கடல்கொள்ளப்பட்டன. ஆதலால்இவ்வளவுகளிற் சில இக்காலத்துப் பிறந்திருக்கின்றனவென்றறிக.

யவகோடி முதலாகிய பட்டண நிலை.

இனி முன் சொல்லப்பட்ட சமுத்திரத்தினடுவே கிழக்கு முதலாகிய நான்கு திசைகளிலுமுள்ள நான்கு தீபங்களிலே தேவராலுண்டாக்கப்பட்டனவாகியயவகோடி, இலங்கை,உரோமகம்,சித்தபுரி என்னு நான்கு பட்டணங்களிருக்கின்றன; அவைகள் சுமேரு வடவாமுகமென்கிற இரண்டு மேருக்களுக்குப்பூமியின் சுற்றளவிற் கால்பங்காகிய ஆயிரத்தி நூற்றறுபத்தைந்து யோசனைதூரங்களிலிருக்கின்றன. அன்றியும் அப்பட்டணங்கள் ஒன்றற்கொன்றுபூமியின்சுற்றளவிற் கால்பங்குதூர முள்ளவைகளாயிருக்கின்றன. அவற்றுள் கிழக்கே பத்திராசுவ வருஷத்திற்கு நேராக யவகோடிபட்டண மிருக்கின்றது.தெற்கே பாரதவருடத்திற்குநேராக இலங்காபட்டண மிருக்கின்றது. மேற்கே கேதுமால வருடத்திற்குநேராக உரோமகபட்டண மிருக்கின்றது வடக்கே குருவருடத்திற்கு நேராகச் சித்தபுரியிருக்கின்றது.

பிலட்சாதி தீபங்களும் இட்சுமுதலாகிய சமுத்திரங்களும்.

இலங்கை முதலாகிய நான்கு பட்டணங்களுக்குத் தெற்கே ஆறுதீபங்களிருக்கின்றன. யவகோடிபட்டணத்திற்குக் கிழக்கோ

டுசேர்ந்த தென்றிசையிலே பிலட்சத்தீப மிருக்கின்றது. அதற்கு மேற்கேயிருக்கின்ற சமுத்திரத்திற்கு இட்சு சமுத்திரமென்றுபெயர். அதற்கு மேற்கே சான்மலித்தீப மிருக்கின்றது. அதன்மேற்கே யிருக்கின்ற சமுத்திரத்திற்குச் சுராசமுத்திரமென்று பெயர். அதற்கு மேற்கே இலங்காபட்டணத்திற்கு மேற்கோடுகூடிய தென்றிசையிற் குசத்தீபமிருக்கின்றது. அதன்மேற்கேயிருக்கின்ற சமுத்திரத்திற்குச் சாப்பிசமுத்திரமென்று பெயர். அதற்கு மேற்கே கிரவுஞ்சத்தீப மிருக்கின்றது. அதன்மேற்கே உரோமக பட்டணத்திற்கு மேற்கோடுசேர்ந்த தென்றிசையிலே யிருக்கின்ற சமுத்திரத்திற்கு ததிசமுத்திர மென்றுபெயர். அதற்கு மேற்கே சாகத்தீப மிருக்கின்றது அதன் மேற்கேயிருக்கின்ற சமுத்திரத்திற்கு க்ஷீர சமுத்திர மென்றுபெயர், அதற்குமேற்கே சித்தபுரிக்குமேற்கோடு சேர்ந்த தென்றிசையிலே புட்கரதீபமிருக்கின்றது. அதன்மேற்கே யிருக்கின்ற சமுத்திரத்திற்குச் சுத்தோதகசமுத்திரமென்றுபெயர் இந்தத் தீபங்களுஞ் சமுத்திரங்களு மொவ்வொன்று நாற்பதுநாற்பதுயோசனை யகலமும் நானூற்றிருபத்தொரு நானூற்றிருபத்தொரு யோசனை நீளமு முடையவைகளா யிருக்கின்றன. இவைகளிற் சில பூமிகள் கடல் கொள்ளப்பட்டமையால் இக்காலத்துப் பிறழ்ந்திருக்குமென்று அறிக.

## பூமியின் விபாவங்கள்.

இப்படி யேழுதீபங்க ளேழுசமுத்திரங்கள் சுமேருவடவாமுக மென்னு மிவைகளோடுகூடி உருண்டை வடிவமாக விருக்கின்றபூமி யெப்படிப்பார்த்தாலும் முந்நூற்றறுபது பாகங்களாகப் பகுக்கப்பட்டிருக்கின்றது. அதெப்படியென்றால், இலங்கையிலிருந்து நேராக உரோமகம், சித்தபுரி, யவகோடியென்னும்பட்டணங்களுக்கு மேற்பூமியைச் சுற்றிக்கொண்டு இலங்கைக்கு வருகின்றவழி மேகலா ரேகையென்றும், இலங்கையிலிருந்து நேராகச் சுமேரு, சித்தபுரி, வடவாமுகமென்னும் இவைகளுக்குமேற் பூமியைச் சுற்றிக்கொண்டு இலங்கைக்கு வருகின்றவழி மத்தியரேகை யென்றும், சுமேருவிலிருந்து நேராக யவகோடி, வடவாமுகம் ரோமகமென்னு மிவைகளுக்கு மேற்பூமியைச் சுற்றிக்கொண்டு சுமேருவுக்கு வருகின்றவழி விர்த்தரேகையென்றும், பெயர்பெறும், அவற்றுள் விர்த்தரேகைக்கு மேற்பங்கு முழுதும் ஊர்த்துவ கபாலமென்றும் கீழ்ப்பங்கு முழுதும் அதக்கபால மென்றும் பெயர்பெறும்.

முன்சொல்லிய மேகலாரேகைக்குக் குறுக்காகச் சுமேருவடவாமுகங்களை அண்டும்படியாகப் பூகோள மனைத்திற்கும் முந்நூற்

நடுவழு நிகேசரேகைகளும், மத்தியரேகைக்குக் குறுக்காகச் சுமேரு முதற்கொண்டு வடவாமுகம்வரைக்கும் நூற்றெழுபத்தெண்பது வலையரேகைகளும், உண்டாக்க முன்சொல்லப்பட்ட வூர்த்துவ கபாலத்திலே கிழக்கு மேற்குகளில் நூற்றெண்பது பாகங்களும், தெற்கு வடக்குகளில் நூற்றெண்பது பாகங்களுமாகின்றன இவ்வாறே அதக்கபாலத்திலு மாகின்றன. அதெப்படி யென்றால் ஊர்த்துவ கபாலத்திலே இலங்கைக்கு யவகோடி தொண்ணூறு பாகமும் ரோமகபுரந்தொண்ணூறுபாகமும் சுமேருதொண்ணூறு பாகமும், வடவாமுகந் தொண்ணூறுபாகமும் ஆகின்றன. இப்படியே அதக் கபாலத்திலே சித்தபுரிக்கு யவகோடி தொண்ணூறு பாகமும் ரோமகபுரந் தொண்ணூறு பாகமும், சுமேரு தொண்ணூறுபாகமும், வடவாமுகந் தொண்ணூறுபாகமும் ஆகின்றன.

### பூமியிலெங்கே யிருக்கின்றவர்களுக்கும் மேலேயிருக்கின்றோ மென்னும் அறிவு.

இப்படிப் பகுக்கப்பட்டிருக்கின்ற விதம்போல மனிதர் வாசஞ்செய்வார். அந்த மனிதரெல்லாந் தாங்கள் பூமிக்குமேலே மேலெடுத்த தலையுடையேமாகி யிருக்கின்றோ மென்றும் தமக்குத் தொண்ணூறுபாகத்தி லிருக்கின்றவரைச் சாய்வாகிய தலையையுடையவரா யிருக்கின்றாரென்றும், தமக்கு நூற்றெண்பது பாகத்திலிருக்கின்றவரைக் கீழ்நோக்கிய தலையை யுடையவராயிருக்கின்றாரென்றும் நினைப்பார்.

அதெப்படியென்றால் இலங்கையிலிருக்கின்றவர் தாந்தலைமேலாகவும் கால்கீழாகவு மிருக்கின்றோமென்றும் தமக்குத் தொண்ணூறு பாகத்திலிருக்கின்ற யவகோடி உரோமகம், சுமேரு, வடவாமுகங்களி லிருக்கின்றவர் குறுக்காகிய தலையை யுடையவராகவும் நூற்றெண்பதுபாகத்திலிருக்கின்ற சித்தபுரியிலுள்ளவர் தலைகீழாக விருக்கின்றாரென்றும் நினைப்பார். இவ்விதமாகவே உரோமகபுரத்தி லிருக்கின்றவர் தாந்தலை மேலாகவுங் கால்கீழாகவு மிருக்கின்றோமென்றும் தமக்குத் தொண்ணூறுபாகத்தி லிருக்கின்ற இலங்கை சித்தபுரி சுமேரு வடவாமுகங்களிலிருக்கின்றவர் குறுக்காகிய தலையை யுடையவராகவும் யவகோடியி லிருக்கின்றவர் கீழாகிய தலையையுடையவராகவும் இருக்கின்றாரென் றெண்ணிக் கொள்வார். இப்படியே சித்தபுரியிலிருக்கின்றவர் தம்மைத் தலை மேலுங் கால் கீழுமாக விருக்கின்றவராகவும் ரோமக யவகோடி சுமேரு வடவாமுக வாசர்களைக் குறுக்காகிய தலையை யுடையவராகவும் இலங்கையி லிருக்கின்றவரைத் தலைகீழாக விருக்கின்றவராக

வும் நினைப்பார். இந்தப்பிரகாரமே யமகோடியி லிருக்கின்றவர் தாம் மேலாகிய தலையை யுடையவர்களாகவும் சித்தபுரி இலங்கை சுமேரு வடவார்முகவாசர்களைக் குறுக்காகிய தலையையுடையவர்களாகவும் ரோமகபுரத்தி லிருக்கின்றவரைத் தலைகீழாக விருக்கின்றவர்களாகவும் நினைப்பார். சுமேருவாசர்கள் தாந்தலை மேலாக நிற்கின்றவராகவும் வடவார்முக வாசர்களைத் தலைகீழாக விருக்கின்றவராகவும் யவகோடி இலங்கை ரோமகம் சித்தபுரி வாசகர்களைக் குறுக்காகிய தலையை யுடையவராகவும் எண்ணுவார்கள். ஒழிந்தவர்களுமிப்படியே தாம் தலைமேலாக நிற்கின்றவராகவும் தமக்குத் தொண்ணூறுபாகத்தி லிருக்கின்றவரைக் குறுக்காகிய தலையை யுடையவராகவும் நூற்றெண்பது பாகத்தி லிருக்கின்றவராகவும் எண்ணுவார்கள் ஆகையால் இந்தப் பூகோளத்திலே எங்கேயிருக்கின்றவரும் மேலே ஊர்த்துவசிர முடையவர்களா யிருக்கிறதாகவே எண்ணுவார்கள் ஆகாசத்திலிருக்கின்ற இந்தப் பூகோளத்திலெங்கே யிருக்கின்றவற்கும் பூமியிலேகாலும் ஆகாசத்திலே தலையுமிருக்கின்றமையாலும் பூமி மறைப்பாகையா லொருபக்கத்தி லிருக்கின்ற ஆகாசமே காணப்படுகையாலும் இந்த விடயத்திலே சந்தேகிக்க வேண்டுவதில்லையென்றறிக.

## பசக்கிரபடலம்.

இவ்விதமாகிய பூகோளத்தினடுவிலிருக்கின்ற மேகலாரேகைக்கு நேர்மேலாக ஆகாசத்திலே இரிசைச்சுற்றிக்கொண்டுவண்டிச் சக்கரஞ் சுழல்வதுபோலப் பூகோளத்தைச் சுற்றிக்கொண்டு பசக்கிரஞ் சுழலுகின்றது இதுசந்திராதி சோதிக்கணங்களுக்கு ஆதாரமா யிருக்கையாலே சோதிச்சக்கிரமென்றும், நட்சத்திரரூபமா யிருக்கையாலே பசக்கிரமென்றும், மேடாதி ராசிகளோடு கூடி யிருக்கையாலே இராசிசக்கிரமென்றும், காலத்தைத்தெரிவிக்கையாலே காலசக்கிரமென்றும், சிமுசுமார மூர்த்தியினாலே தரிக்கப்பட்டிருப்பதினாலே சிமுசுமார சக்கிரமென்றும் சொல்லப்படும்.

## கிரகநட்சத்திர நிலை.

இந்தச் சக்கிரத்தில் அடியிலிருந்து மேல்வரைக்குஞ் சந்திரனும் புதனும் சுக்கிரனும் சூரியனும் அங்காரகனும் குருவும் இராகுவும் சனியும் நட்சத்திரங்களும் முறையாக விருக்கின்றன.

## கிரகபூமி யந்தரம்.

இந்தச் சக்கிரத்திலே பூமிக்கு எவ்வளவெவ்வளவு தூரத்தில் எந்த எந்தக் கிரகமிருக்கின்றதென்றால், சந்திரன் ஐயாயிரத்தெழு

னூற்றெழுபத்தேழு யோசனை தூரத்தி லிருக்கின்றது புதன் சுக்கிரன் சூரியன் மூன்றுஞ் சற்றேறக்குறைய ஆறுலட்சத்தெண்பத்தெண்ணாயிரத் தறுநூற்றிருபத்தேழு யோசனை தூரத்திலிருக்கின்றன. அங்காரகன் பன்னிரண்டு லட்சத்துத் தொண்ணூற்றையாயிரத்துத் தொளாயிரத்துப் பதினொருயோசனை தூரத்திலிருக்கின்றது. குரு எண்பத்தொருலட்சத் திருபத்தாறாயிரத் தெழுநூற்றுநாற்பத்துமூன்று யோசனை தூரத்திலிருக்கின்றது இராகு ஒருகோடியே யிருபத்தெட்டுலட்சத் திருபத்தெண்ணாயிரத் தெழுநூற்றெழுபத்தொன்பது யோசனை தூரத்திலிருக்கின்றது. சனிஇரண்டுகோடியே முப்பத்தொருலட்சத்துத் தொண்ணூற்றேழாயிரத்து முந்நூறுயோசனை தூரத்திலிருக்கின்றது. நட்சத்திரங்கள் நான்குகோடியே பதின்மூன்றுலட்சத் தறுபத்து நாலாயிரத்தெண்ணூற்று நாற்பத்தாறுயோசனை தூரத்திலிருக்கின்றது.

## கிரகாதி கட்சிகள்

இப்படி யிருக்கின்ற சந்திராதி கிரகங்களுக்கும், நட்சத்திரங்களுக்கும் ஆதாரங்களாகி அந்தஅந்தக் கிரகநாமங்களையுடையனவாகி வலயரூபமாயுள்ள வொன்பதுகட்சிகளிருக்கின்றன. அவற்றோடுகூடிப் பூகோளத்தைச் சுற்றித்திரிந்து கொண்டிருக்கின்ற பசக்கிரமானது ஒரு தேவாலயத்தைச் சுற்றிக்கொண்டிருக்கின்ற பிராகாரக்கூட்டத்தைப்போலத்தோன்றும். அப்படிப்பட்ட கட்சிகளிலே முன்னே சந்திரகட்சியிருக்கின்றது அதன்மேலே புதகட்சியிருக்கின்றது. அதன்மேலே சுக்கிரகட்சியிருக்கின்றது. அதன்மேலே சூரியகட்சியிருக்கின்றது. அதன்மேலே அங்காரககட்சி யிருக்கின்றது அதன்மேலே குருகட்சியிருக்கின்றது அதன்மேலே இராகுகட்சியிருக்கின்றது. அதன்மேலே சனிகட்சியிருக்கின்றது. அதன்மேலே நட்சத்திரகட்சியிருக்கின்றது.

## கட்சியளவு

அப்படிப்பட்ட கட்சிகளிலே கீழ்கீழாகிய கட்சிகளிலும் மேல்மேலாகிய கட்சிகள் பெரியனவாயிருக்கும். அதெப்படி யென்றால், முன்னேயிருக்கின்ற சந்திரகட்சி மூன்றுலட்சத் திருபத்திநாலாயிரம் யோசனை யளவுடையதாகும். அதன்மேலிருக்கின்ற புதசுக்கிர சூரியகட்சிகள் சற்றேறக்குறைய நாற்பத்து மூன்றுலட்சத்து முப்பத்தோராயிரத் தைந்நூறுயோசனை யளவுடையனவா யிருக்கும். அதன் மேலிருக்கின்ற அங்காரகக்கட்சி எண்பத்தொருலடசத்து நாற் பத்தாறாயிரத்துத் தொளாயிரத்தொன்பது

யோசனையளவுடைத் தாகும். அதன்மேலிருக்கின்ற குருகட்சி ஐந்துகோடியே பதின்மூன்றுலட்சத் தெழுநூற்றறுபத்து நாலு யோசனையளவுடைத்தாயிருக்கும். அதன் மேலிருக்கின்ற இராகு கட்சி எண்பதுகோடியே ஐம்பதுலட்சத் தெழுபத்தோராயிரத்திரண்ணூற்றறுபத்து நாலுயோசனையள்வுடைத்தாயிருக்கும். அதன் மேலிருக்கின்ற சனிகட்சி பன்னிரண்டு கோடியே யெழுபத்தாறு லட்சத்தறுபத் தெண்ணாயிரத் திருநூற்றைம் பத்தைந்து யோசனையளவுடைத்தா யிருக்கும். அதன்மேலிருக்கின்ற நட்சத்திரகட்சி இருபத்தைந்து கோடியே தொண்ணூற்றெட்டுலட்சத் தொன்பதினாயிரத்துப் பன்னிரண்டு யோசனையளவுடைத்தாயிருக்கும்.

## கட்சியின் விபாகமும் கலையும்.

இப்படிப்பட்ட அளவோடுகூடியிருக்கின்ற கட்சிகளெல்லாம் முந்நூற்றறுபத்துபாகங்களாகவும், இருபத்தோராயிரத் தறுநூறுகலைகளாகவும் வகுக்கப்பட்டிருக்கின்றன. அந்தப்பாகங்களும் அந்தக்கலைகளும் அந்த அந்தக்கட்சிகளுடைய பெருமையை சிறுமைகளுக்குத்தகுதியாகப்பெரியனவும்சிறியனவுமாயிருக்கும். அதெப்படியென்றால், சந்திரகட்சியிலுள்ளபாகங்களுங் கலைகளும் மற்றக்கட்சிகளின் பாகங்களிலுங் கலைகளிலுங்குறைவாகவிருக்கும், நட்சத்திர கட்சியிலிருக்கின்ற பாகங்களுங் கலைகளும் மற்றக்கட்சிகளின் பாகங்களிலுங் கலைகளிலும் அதிகங்களாகவிருக்கும் இப்படியே யொழிந்த கட்சிகளின் பாகங்களுங் கலைகளுந் தமக்குக்கீழிருக்கின்றகட்சிகளின்பாககலைகளில் பெரியனவாகவுந்தமக்கு மேலிருக்கின்ற கட்சிகளின் பாககலைகளில்சிறியனவாகவுமிருக்கும்.

## கிராந்திமார்க்கம்.

இவ்விதங்களாகிய கட்சிகளெல்லாவற்றிலும் மேகலரேகைக்குநேராகிய நடுவிடத்திலே விசுவன்மண்டல மென்கிற ஒவ்வொருவழியிருக்கும். அவ்வழி ஒரிடமுதற்கொண்டதற்கு வடக்கேயிருபத்து நாலுபாகம்வரைக்கும் வளைவாகப்போய் அங்கிருந்து திரும்பிவளைவாகவந்து விசுவமண்டலத்தைச் சேர்ந்து அங்கிருந்து முன்சொன்னபடியே அந்த விசுவன்மண்டலத்துக்குத்தெற்கே யிருபத்துநாலு பாகம்வரைக்கும் போய்த்திரும்பி முன்னாரம்பித்தவிடத்திலே சேரும்படியாகப் பாம்புருபமாக ஒவ்வொருகிராந்திமார்க்கம் அல்லது நடைவழியிருக்கின்றது.

## பசக்கிர நிலை

இவ்விதங்களாகிய அனேக கட்சிகளோடு கூடியுஞ் [illegible]களோடு கூடியிருக்கின்ற சரீரமானது அவற்றின் வேறு[illegible]

மாக அக்கட்சிகளின் வேறுக்காதபசக்கிரமானது முன்சொல்லப்பட்ட விருத்தரேகை மத்தியரேகைகளுக்கு நேராக மேலிடத்துச் செய்யப் பட்டிருக்கின்ற வலயரூபங்களாகிய இரண்டாதாரகட்சிகளாலே இறுக்கக்கட்டப்பட் டிருக்கின்றது.

## துருவநிலை.

அவ்வாதார கட்சிகளிரண்டு மொன்றேடொன்று கலந்திருக்கின்ற இடங்கள் சுவத்திகங்களென்று சொல்லப்படும். அப்படிப்பட்ட சுவத்திகங்கள் சுமேருவடவா முகங்களுக்கு நேராகவிருக்கும். சுமேருவுக்கு நேராக இருப்பது வடசுவத்திகமென்றும் வடவாமுகத்திற்கு நேராக இருப்பது தென்சுவத்திகமென்றும் பெயர் பெறும். இரண்டு சுவத்திகங்களிலு மிருக்கின்ற இரண்டாணிகளிலும் இரண்டு துருவரிருக்கின்றார்கள் இந்தத் துருவர்கள் சுமேரு வடவாமுகங்களுக்கு நேராக இருக்கின்றார்கள்.

## பசக்கிரச் சுழற்சிக்குக் காரணம்.

பிரமாண்டத்தில் வியாபித்த சரீரமுடையதா யிருக்கின்ற சிமுசுமார மூர்த்தியானவர் இந்தத் துருவரிருக்கும் ஆணிகளிரண்டையும் இரண்டுகைகளாலே பிடித்துக்கொண்டு தன் பின்பக்கத்திலேபசக்கிரத்தைத்தாக்கும் வேகத்தினாலே பிரவாகவாயுவைப் பிறப்பிக்கின்றார். அப்படிப்பட்ட பிரவாகவாயுவினாலே அந்தப் பசக்கிரமானது ஒருநாளுக்கொருதரம் பூமியைச்சுற்றுகிறது.

## பசக்கிரத்தின் சுற்றுதல்விதம்.

பசக்கிரத்தின் சுற்றுகை முனசொல்லப்பட்ட இலங்கை முதலிய நான்குபட்டணங்களிலு மிருக்கின்றவர்களுக்கு மேற்கு முகமாகவும், சுமேரு வாசிகளுக்குப் பிரதட்சணமாகவும், வடவாமுக வாசிகளுக்கு அப்பிரதட்சணமாகவும் காணப்படும். சுமேருவாசிகளுக்குப் பசக்கிரத்தின் சுற்றுகை பிரதட்சணமாகக் காணப்படுதல் பற்றிச் சூரியன் மேருவைப் பிரதட்சணஞ் செய்கிறனென்னும் விவகார முண்டாயிருக்கின்றது.

## கிரகங்களின் கிழக்குநடை.

பிரதட்சணமாகதிரிகின்றகுலாலசக்கிரத்தில் அப்பிரதட்சணமாகத்திரிகின்ற எறும்புகளைப்போல் மேற்குமுகமாகச்சுற்றுகின்ற பசக்கிரத்திலே சந்திராதி கிரகங்கள் தங்கள் தங்கள் கட்சிகளிலிருக்கின்ற கிராந்திமார்க்கத்தினாலே பதினோராயிரத் தெண்ணூற்றைம்பத்தெட்டு யோசனையும், முப்பத்து நான்கு வியோசனையும் கிழக்குமுகமாக நடந்துகொண்டிருக்கும்.

## பகணபூரணம்.

அவற்றுள் சிறுகட்சியையுடையகிரகங்கள் அற்பகாலத்திலே பகணபூரணஞ் செய்யும். பெருங்கட்சியையுடைய கிரகங்கள் நெடுங்காலத்திலே பகணபூரணஞ்செய்யும். பகணபூரணமாவது, அசுவனி நட்சத்திரமுதல் இரேவதி நட்சத்திரம் இறுதியாகிய இருபத்தேழு நட்சத்திரங்களையுங் கடந்து செல்லுகையாம். அதெப்படியென்றால், எல்லாவற்றினும் அற்பகட்சியையுடைய சந்திரன் இருபத்தேழு தினங்களுக் கொருதரம் பகணபூரணஞ் செய்கின்றான், எல்லாவற்றிலும் பெரியகட்சியையுடைய சனி முப்பது வருடத்திற் கொருதரம் பகணபூரணஞ் செய்கின்றான். இவ்விதமாகவே மற்றைக் கிரகங்களுந் தங்கள் கட்சிகளின் பெருமை சிறுமைகளுக்கேற்குமாறு புத-சுக்கிர- சூரியர் வருடத்திற் கொருதரமும் அங்காரகன் ஒன்றரைவருடத்திற் கொருதரமும், குருபன்னிரண்டு வருடத்திற் கொருதரமும் பகணபூரணஞ் செய்கின்றார். இப்படி பகணபூரணங்கள் ஒருதேவயுகத்திலே அற்பகட்சியையுடைய சந்திரனுக்கு ஐந்துகோடியே யெழுபத்தேழுலட்சத்தைம்பத்து மூவாயிரத்து முந்நூற்று முப்பத்தாறுகின்றன. பெரியகட்சியையுடைய சனிக்கு லட்சத்து நாற்பத்தாறாயிரத் தைந்நூற்றறுபத்தெட்டாகின்றன. இவ்விதமாகவே மற்றைக்கிரகங்களும் அறிக.

## ஆகாச கட்சி.

இவ்விதமாகக் கிரகநட்சத்திர நட்சிகளுக்கும் ஆதாரமான பசக்கிரத்திற்கு ஆதாரம் இரண்டாதாரகட்சிகளாம். அந்த ஆதாரகட்சிகளுக்கு ஆதாரம் இரண்டு துருவர்களாம். அந்தத் துருவர்களுக்கு ஆதாரம் பரிவேடரூபமாகிய ஆகாசகட்சியாம். அவ்வாகாசகட்சி ஒருசங்கம் ஏண்பத்தேழு கர்வங்கள் ஒரு நிர்ப்புதமும் இரு தற்புதங்கள் எண்ணூற் றெண்பத்தாறு கோடிகள் நாற்புது லட்சங்கள் இவ்வளவு யோசனையளவுடையது. அந்த ஆகாசகட்சியினிவரைக்குஞ் சூரியகிரணங்கள் வியாபித்திருக்கின்றன.

## அண்டப்பரப்பு.

அவ்வாகாசகட்சியைச் சுற்றிக்கொண்டு அண்டச்சுவரிருக்கின்றது. அவ்வண்டச்சுவருக்கும் பூமிக்கும் இருபத்தொன்பது சங்கமும், அறுபத்தெட்டுக்கர்வமும் மூன்றுநிர்ப்புதமும் ஒரர்ப்புதமும் முந்நூற்றுப் பதினெட்டுக் கோடியும், நாற்பத்தொன்பது லட்சமும், ஐம்பதினாயிரத்துத் தொளாயிரமும், இவ்வளவு யோசனையும், நாற்பத்தைந்து வியோசனையும் ஆகிய இவ்வளவு அந்தர

மிருக்கின்றது. இப்படிப்பட்ட அண்டத்தின் பரப்பு ஐந்துசங்க முந் தொண்ணூற்றுமூன்றுகர்வமும், ஆறுநிர்ப்புதமும், ஆறு அர்ப்புதமும் இருநூற்றருபத்து மூன்றுகோடியும், அறுபத்தொன் பது லட்சமும், தொண்ணூற்றோராயிரத்துத் தொளாயிரமும் இவ் வளவு யோசனையும் முப்பது வியோசனையுமுள்ளது அந்தரமென் பது அளவு.

## விவகார படலம்.

இப்படிப்பட்ட பசக்கிரத்திலிருக்கின்ற சூரியனுக்கு அந்தச் சக்கிரஞ் சுழலுவதனாலே மேற்கு நடையும் தன் கட்சிமார்க்கத்தி லே சுபாவமாகச் செல்லுகின்ற கிழக்கு நடையு முண்டாயிருக் கின்றதென்று முன் சொல்லப்பட்டிருக்கின்றதே. அப்படிப்பட்ட சூரியகதியை ஆசரித்துப் பூகோளத்தி லுண்டாயிருக்கின்ற விவகா ரங்களைச் சொல்லுதற்கு முன்னாகச்சூரியகதியைச் சொல்லுவோம்.

## சூரிய கதி.

அதெப்படியென்றால், முன்னே பசக்கிரபடலத்திலே சொன் னபடியே பிரதட்சணமாகச் சீக்கிரஞ் சீக்கிரமாகத் திரிகின்றகுலால சக்கிரத்தில் அப்பிரதட்சணமாக மெள்ள நடக்கின்ற எறும்புகள் அந்தச் சக்கிரத்தோடு பிரதட்சணமாகத் திரிகின்றனவென்று விவ காரம் உண்டாயிருக்கின்றதுபோலச் சூரியன் தன் கட்சிமார்க்கத் திலே கிழக்கு நடையை யுடையவனாயிருந்தும், பசக்கிரத்தின் சுற் றுதல் வேகத்தினாலே மேற்கு நடையையு முடையவனென்றுவிவ கார முண்டாயிருக்கின்றது.

ஆகையாலே சூரியனுக்குத் தினந்தோறு மொவ்வொருதர மேற்கே செல்லுதலுமுண்டு. அப்படியே மாதந்தோறுமொவ்வொ ருராசிக்குக் கிழக்கு நடையினால் செல்லுகின்றான். இப்படிச் சூரி யன் வருடந்தோறும் ஒவ்வொருதரங் கிழக்கு நடையினாலே பன்னி ரண்டு இராசியையுங் கடக்கின்றான்.

ஆகையால் அவனுக்கு வருடத்திற்கு கொருதரங் கிழக்கு நடை யுண்டாயிருக்கின்றது. அன்றியுஞ் சூரியன் மேடாயன துலாயன தினங்களிலே முன் சொல்லப்பட்ட விசுவன் மண்டல த்திலிருக்கின்றான்.

## விசுவன் மண்டல நிலை.

அது எப்படியென்றால், அவ்விரண்டு தினங்களிலும் விசுவன் மண்டலத்திற்கு நேராகக் கீழிருக்கின்ற இலங்கையாதி புரங்களி

ளிடத்துப் பன்னிரண்டங்குலமுள்ள சங்கு என்னப்பட்ட நெடுமரக் குச்சை மத்தியான காலத்திலே சதுரமாகிய தரையிலே நிறுத்திப் பார்த்தால், அந்தச் சங்குச்சாயை எந்தப்பக்கத்திலும் விழாதிருக்கப்படு து. ஆகையால் சூரியன் மேடாயன துலாயன தினங்களிலே விசு வன் மண்டலத்தில் இருக்கின்றானென்று அறிக.

விசுவன் மண்டலமாவது பூமத்தியத்துக்கு நேராக ஆகாசத்தி லிருக்கின்ற மண்டலமாம். அந்த மண்டலத்திற்கு நேராகப் பூமத் தியத்திலிருக்கின்ற பேகலா ரேகைக்கு விசுவத்துரேகையென்றும் பெயர்; விசுவத் என்பது நடுவாம்.

## விசுவச் சாயை

அதினாலேயே அந்தத் தினங்களிலே இலங்கை முதலாகிய பட்டணங்களுக்குத் தெற்கு வடக்குகளின் பாகங்களிலிருக்கின்ற தேசங்களிடத்துள்ள கணித நூலோர் தாங்கள் தாங்கள் இருக் கின்ற விடங்களிலே முன் சொன்னபடியே சாயை நிச்சயஞ் செய் வார்கள். அந்தச்சாயை விசுவச்சாயையென்பார். அப்படிப்பட்ட விசுவச்சாயை எந்தப் பாகங்களிலே எந்தத்தேசங்களிலே எவ்வள வெவ்வள விருக்குமென்றால் அவையெல்லாஞ் சொல்லில் விரியும். ஆயினும் பரதகண்டத்து விருக்கின்ற பிரசித்தமாகிய சில பட்ட ணங்களிலே மாத்திரங் காண்பிக்கின்றோம். முன்பு பூகோளபட லத்திற் சொல்லப்பட்ட மத்தியரேகை இலங்கை மேருகளுக்கு நேராக விருக்கின்றமையால் அதைச்சமரேகையென்றுசொல்வார்.

அப்படிப்பட்ட சமரேகைக்குக் கிழக்கே மூதற்பாகத்தில் இருபத்திரண்டாங்களையி லிருக்கின்ற திருவாங்கூர்ப் பட்டணத் தில் ஓரங்குலமும், நாற்பத்தேழு வியங்குலமும், விசுவச்சாயை அகப்படும். இந்தத் திசையிலே இரண்டாம்பாகத்தில் இருபத்தை ந்தாங்களையி லிருக்கின்ற மதுரையில் இரண்டங்குலமும் ஆறு விய ங்குலமும் விசுவச்சாயை தோன்றும்.

இத்திசையிலே மூன்றாம்பாகத்திற் பதினெட்டாங்களை யிலி ருக்கின்ற தஞ்சாவூரில் இரண்டங்குலமும், பதினேழு வியங்குல மும் அச்சாயைதோன்றும். இந்தத்திசையிலே இந்தப்பாகத்திலே ஐம்பத்தொன்பதாங் களையிலிருக்கின்ற காஞ்சிபுரத்தில் இரண்டங் குலமும், நாற்பத்துமூன்று வியங்குலமும் அச்சாயை தோன்றும். இந்தத்திக்கிலே நாலாம்பாகத்தில் முப்பத்தைந்தாங்களையி லிருக் கின்ற சென்னபட்டணத்தில் இரண்டங்குலமும் நாற்பத்தேழுவிய ங்குலமும் அச்சாயைதெரியும்.

இந்தத்திக்கிலே இந்தப்பாகத்திலே எட்டாங்கலையி லிருக்கின்ற சிகணத்தி நகரத்தில் மூன்றங்குலம் அச்சாயை காணப்படும். இந்தத்திக்கிலே முதற்பாகத்திலே நாற்பத்திரண்டாங்கலையி லிருக்கின்ற பெங்களூர்ப்பட்டணத்தில் இரண்டங்குலமும் நாற்பத்தைந்து வியங்குலமும் அச்சாயைகாணப்படும். இப்படிவிசுவச்சாயை பிரத்தியட்சமாயிருக்கையாலே மேடாயன துலா தினங்களிலே சூரியனுக்கு விசுவன் மண்டலித்திலிருக்கை நிச்சயிக்கப்படுகின்றது.

## உத்தரதட்சண கிராந்திகள்.

அந்தத்தினங்களிலே அங்கேயிருந்து சூரியன் தன் கிராந்தி மார்க்கத்தினாலே தினந்தினங் கொஞ்சங் கொஞ்சமாக நடந்துகொண்டு மிதுனப்ததத்தில் அந்த விசுவன் மண்டலத்திற்கு வடக்கேயிருபத்து நாலுபாகமும், தனுராந்தத்திலே தெற்கே யிருபத்து நாலுபாகமும் போய், அவ்விடங்களிருந்து மறுபடியுந்திரும்பி, அந்தத்தினங்களில் விசுவன் மண்டலத்திற் சேர்ந்துகொண்டு இவ்விதமாகவே எக்காலமு நடந்துகொண்டிருப்பான்.

இதுபாதினால் நிச்சயிக்கப்பட்டதென்றால், விசுவன் மண்டலத்திற்கு நேராகக் கீழேயிருக்கின்ற இலங்கைக்கு வடக்கிலே இருபத்துநான்காம் பாகத்திலிருக்கின்ற அவந்திபுரத்தில் வடக்குநிழலேயல்லாமல் எப்போதுந் தெற்குநிழலில்லை.

இவ்விதமாகவே அந்த இலங்கைக்குத் தெற்கே யிருபத்துநான்கு பாகத்திற்கு மேற்பட்ட இடங்களிலே தெற்குநிழலேயல்லாமல் வடக்குநிழல் எப்போதுமில்லை. இந்த நாற்பத்தெட்டுப்பாகங்களுக்குள்ளே அவ்விரண்டு நிழல்களுமுண்டு. ஆகையால் சூரியனுக்கு நாற்பத்தெட்டுப் பாகங்களுக்குள்ளே உத்தரக்கிராந்தி, தட்சணகிராந்திகள் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன.

## வேனிற்பருவ பனிப்பருவங்களின் வெம்மை தண்மை.

இனி ஆனி ஆடிகளிற் சூரியகிரணங்கள் அதிக வெப்பமாகவும், மார்கழி தைகளில் அதிக குளிர்ச்சியாகவும் இருத்தற்குக் காரணம் என்னவென்றால், ஆனி ஆடிகளில் விசுவன் மண்டலத்திற்கு வடபாகங்களிற் சூரியன்போகின்றான். அப்போது அவன்கிரணங்கள் வடபாகத்தி லிருக்கின்றவர்களுக்குச் சமீபமாகையால் அதிக வெப்பமாகவும், தென்பாகத்தி லிருக்கின்றவர்களுக்குத் தூரமாகையாற் சீதளமாகவும் இருக்கின்றன. மார்கழி தைமாதங்களிலே விசுவன் மண்டலத்திற்குத் தென்பாகங்களிற் சூரியன் போகி

ன்றன் அப்போது அவன் கிரணங்கள் வடபாகத்தி லிருக்கிறவர்க ளுக்குத் தூரமாகையாற் குளிர்ச்சியாகவும், தென்பாகத்திலிருக்கிற வர்களுக்குச் சமீபமாகையால் அதிகவெப்பமாகவும் இருக்கின்றன.

## உதயாதிதோற்றம்.

இப்படி கிழக்குநடை மேற்குநடையோடுகூடிய சூரியனுடைய மேற்கு நடையினாலே உண்டாகின்ற உதயாதிகளின் தோற்றங்க ளைச் சொல்லுகின்றேன், அதெப்படியென்றால் உருண்டையாயிருக் கின்ற பூமியில் எங்கேயிருக்கின்ற வர்களுக்குஞ் சூரியன் காணப் படுதலே உதயமாம். காணப்படாமற்போதலே அத்தமயமாம். காணப்படுகின்ற காலத்தினடு மத்தியானமாம். காணப்படாத கா லத்தினடு அர்த்தராத்திரியாம். ஆகையால் உதயாதி விவகாரங் கள் அனேகப்பிரகாரமாயிருக்கின்றன.

அதெப்படியென்றால் மேகலாரேகைக்குமேலே பசக்கிரஞ்சுழ லுகையால் மேகலாரேகையிலிருக்கின்ற இலங்காபுரிவாசிகளுக்குச் சூரியன் யவகோடிபட்டனத்திற்கு நேராகவரும்போது காணப்ப டுகையால் அங்கே உதயமாகும் உரோமகபுரத்துக்கு நேராகப் போகும்போது காணப்படாமையால் அங்கே அத்தமயமாகும். இலங்கைக்குநேராகவரும்போது காணப்படுங்காலம் நடுவாகை யால் இங்கே அது மத்தியானமாகும். சித்புரிக்குப் போம்பொழுது காணப்படாதகாலத்தி னடுவாகையால் இங்கே அது அர்த்தராத் திரியாகும். இவ்விதமாகவே உரோமகபுரவாசிகளுக்குச் சூரியன் இலங்கைக்குச்சேரவரும்போது காணப்படுதலால் அங்கே உதய மாகும் சித்தபுரத்திற்குப் போகும்போது காணப்படாமையால் அங்கே அத்தமயமாகும் உரோமகபுரத்திற்கு வரும்போது காண ப்படாதகாலத்தினடுவாகையால் இங்கே அதுமத்தியானமாகும் யவகோடிக்குவரும்போது காணப்படாதகாலத்தி னடுவாகையா ல்இங்கே அது அர்த்தராத்திரியாகும்.

இவ்விதமாகவே சித்தபுரவாசிகளுக்கு உரோமகபுரத்தில் உத யமும், யவகோடியில் அத்தமயமும், சித்தபுரத்தில் மத்தியான மும் இலங்கையில் நடுராத்திரியுமாகின்றன.

இவ்விதமாகவே யவகோடிவாசருக்குச் சித்தபுரத்தில் உதய மும், இலங்கையில் அத்தமயமும், யவகோடியில் மத்தியானமும் உரோமகபுரத்தில் அர்த்தராத்திரியும் ஆகின்றன. இவ்விதமாகவே மேகலாரேகையி னிரண்டுபக்கத்திலும் வாசஞ்செய்துகொண்டு

புசக்கிரம் மேற்றுமுகமாகச் சுற்றுகிறதாகப் பார்க்கிறவர்கள் எல்லாருக்கும் உதயம் அத்தமயம் மத்தியானம் அர்த்தராத்திரிகளுண்டாகின்றன.

இனிச் சுமேருவடவாமுகவாசர்களுக்கு உதயாதிவிவகாரங்கள் எப்படியென்றால் சூரியன் தன்மேற்குக்கதியினாலே மேடாயனதினங்களிலே முன்சொல்லப்பட்ட விசுவன் மண்டலமார்க்கத்திலிருப்பான். அப்போது சுமேருவாசிகளுக்கு உதயமாகும்வடவாமுகவாசிகளுக்கு அத்தமயமாகும். அது முதற்கொண்டு ஆனிமாச முடிவு வரைக்கும் அவ்விசுவன் மண்டலபதிற்குவடக்காக இருபத்துநாலு பாகம்வரைக்குந் தன் கிராந்திமார்க்கத்தினாலே ஒற்றிவருவான் அப்போது சுமேருவாசிகளுக்கு மத்தியானமாகும் வடவாமுகவாசிகளுக்கு அர்த்தராத்திரியாகும். அங்கேயிருந்துத் திரும்பித்தன் கிராந்திமார்க்கத்தினாலே ஏறக்குறைய புரட்டாசிமீ ககவ ஆகிய துலாயன தினத்திலே விசுவன் மண்டலத்தைச் சேர்வான் அப்போது சுமேரு வாசிகளுக்கு அத்தமயமாகும் வடவாமுகவாசிகளுக்கு உதயமாகும். அங்கேயிருந்துமார்கழிமாச முடிவுவரைக்கும் அந்த விசுவமன் மண்டலததிற்குத் தெற்காக இருபத்துநான்கு பாகம்வரைக்குந் தன் கிராந்திமார்க்கத்தினாலே போவான். அப்போது சுமேருவாசிகளுக்கு அர்த்தராத்திரியாகும் வடவாமுகவாசிகளுக்கு மத்தியானமாகும்.

அங்கேயிருந்து திரும்பித் தன்கிராந்திமார்க்கத்தினாலே பங்குனிமாசம் ககவ ஆகிய மேடாயன தினத்தில் முன்னே தான்விட்ட விசுவன் மண்டலத்தினிடத்தே சேர்கின்றான். அப்போது சுமேருவாசிகளுக்குத் திரும்பி உதயமும் வடவா முகவாசிகளுக்குத் திரும்பி அத்தமயமும் உண்டாகின்றன.

இவ்விதமாகவேபசக்கிரம் பிரதட்சணமாகவும் அப்பிரதட்சணமாகவும் சுற்றுகிறதாகப்பார்க்கின்ற எல்லாரும் சற்றேறக்குறைய உதயாத்தமய மத்தியான அர்த்தராத்திரிகளுண்டாகின்றன.

## திசைகளின் றேற்றம்.

உருண்டையாக விருக்கின்ற பூமியில் எவ்விடத்தி லிருக்கின்றவர்களுக்குஞ் சூரியன் உதயமாகின்ற திக்குக் கிழக்காகும். சூரியனுக்கு எதிராகிய திக்கு மேற்காகும், இடது திக்குத் தெற்காகும் வலதுதிக்கு வடக்காகும். அதெப்படியென்றால் இலங்கையினிடத்திருக்கின்றவர்களுக்குச் சூரியன் உதிக்கின்ற யவகோடி பட்டணங் கிழக்கும், அதற்கெதிரிலிருக்கின்ற உரோமகபுரம்மேற்கும்,

இடது பக்கத்திலிருக்கின்ற வடவாமுகந் தெற்கும், வலதுபக்கத்திலிருக்கின்ற சுமேருவடக்கும் ஆகின்றன. இவ்விதமாகவே உரோமகபுரத்திலிருக்கின்றவர்களுக்கு இலங்கை கிழக்கும், சித்தபுரிமேற்கும், வடவாமுகந்தெற்கும், சுமேரு வடக்கும் ஆகும். இப்படியே சித்தபுரவாசிகளுக்கு உரோமகங் கிழக்கும், யவகோடி மேற்கும், வடவாமுகந்தெற்கும், சுமேரு வடக்கும் ஆகும். இம்முறையாகவேயவகோட்டை வாசிகளுக்குச் சித்தபுரி கிழக்கும், இலங்கை மேற்கும், வடவாமுகந் தெற்கும், சுமேருவடக்கும் ஆகும்.

இதுவன்றியும், மேகலாரேகைக்கு வடக்கிலுந் தெற்கிலும் பசக்கிரமானது மேற்கு முகமாகச் சுற்றுகிறதாகக் காணப்படுகின்ற எந்தப்பாகங்களி லிருக்கின்றவர்களுக்கும் இவ்வாறே திக்குவிவகாரங்களுண்டாகும். இனி பசக்கிரமானது பூமியைப் பிரதட்சணமாய்ச் சுற்றுகிறதாகப் பார்க்கின்ற சுமேருவாசர்களுக்குச் சூரியனுதயமாகின்ற மேகலாரேகையிலுள்ள நான்கு பட்டணங்களுங்கிழக்கும், அவற்றிற் கெதிராகவிருக்கின்ற வடதுருவன் மேற்கும், அவற்றிற்கு இடதுபக்கந் தெற்கும்; வலதுபக்கம் வடக்கும் ஆகின்றன. இப்படியே பசக்கிரமானது பூமியை அப்பிரதக்ஷணமாகச் சுற்றுதலாகப்பார்த்துக் கொண்டிருக்கின்ற வடவாமுகவாசர்களுக்கு இலங்கைமுதலிய நான்கு பட்டணங்களுங் கிழக்கும், அதற்கெதிராகவிருக்கின்ற தென்றிசைத் துருவன் மேற்கும், இடதுபக்கந்தெற்கும், வலதுபக்கம் வடக்கும் ஆகின்றன. இவ்விதமாகவே எல்லாப்பாகங்களுக்கும், எல்லாவிடங்களுக்கும், அங்கங்கே தக்கபடியே திக்குவிவகாரங்களைச் செய்க.

### பகலிரவுகளின் றோற்றம்.

பகலிரவுகளின் விவகாரம் எவ்வாறென்னின், பகலென்பது சூரியன் காணப்படுகின்ற காலமாம், இராத்திரியென்பது சூரியன் காணப்படாத காலமாம். பகலிரவுகள் அநேகப்பிரகாரமாகவிருக்கும். அதெப்படியென்றால் மேகலாரேகையினிடத்தும், அதற்கடுத்த விருபக்கத்திலு மிருக்கின்றவர்களுக்குச் சூரியனானவன் சற்றேறக்குறைய முப்பதுநாழிகை காணப்பட்டும், முப்பதுநாழிகை காணப்படாமலு மிருக்கின்றமையால் அவர்களுக்குப் பகலிரவுகள் அறுபதுநாழிகை யாகின்றன. மனிதருக்கு இப்பகலிரவுகள் ஒரு நாளாம். இதுபதினைந்துகூடினால் ஒருபட்சமாம், அந்தப்பட்சம் இரண்டுகூடினால் ஒருமாதமாம், அம்மாதம் இரண்டுகூடினால் ஒரு பருவமாம், அந்தப்பருவம் மூன்றுகூடினால் ஓரயனமாம், அவ்வயனமிரண்டுகூடினால் ஒருவருடமாம்.

67

### சுமேருவாசிகளின் பகலிரவுகள்.

சுமேருவாசிகளுக்குச் சூரியன்மேடாயனதின முதற்கொண்டு துலாயனதினம் வரைக்குங் காணப்பட்டும், துலாயனதின முதற் கொண்டு மேடாயனதின வரைக்குங் காணப்படாமலும், இருக் கின்றமையால்அவர்களுக்கு உத்தராயணம் ஒருபகலும்,தட்சணாய னம் ஓரிராத்திரியுமாகும் ஆகையால் ஒருவருடம் சுமேருவாசிகளு க்கு ஒருநாளாம். இதுமுறையே முன்சொல்லப்பட்டபடி பட்சம் மாசம்பருவம் அயனம் வருடமாம்.

### வடவாமுக வாசிகளின் பகலிரவுகள்.

இவ்விதமாகவே வடவாமுக வாசிகளுக்குச் சூரியன் துலா யனதினமுதற்கொண்டுமேடாயனதினம்வரைக்குங் காணப்பட்டும் மேடாயனதின முதற்கொண்டு துலாயனதினம் வரைக்குங்காணப் படாமலும், இருக்கின்றுணுகையாற் சுமேருவாசர்களுக்குச் சொல் லியதுபோலவே பகலிரவுகளின் விவகாரங்களும், பட்சங்களும், மாதங்களும்,பருவங்களும் அயனங்களும்வருடங்களும் ஆகின்றன.

இப்படியே அந்தந்தப் பாகங்களுக்குத் தக்கபடியே பகலிரவு களின் வேற்றுங்களையறிக.

### சுமேரு வடவாமுக வாசிகள் பகலிரவுகளின் வேறுபாடு.

சுமேருவடவாமுகவாசர்களில் ஒருவர்க்கொருவருக்குப் பக லிரவுகள் மாறுகவிருக்கின்றன. அதெப்படியென்றால் சுமேருவாசர் களுக்குப்பகலாகிய உத்தராயணம்வடவாமுகவாசிகளுக்கிரவாகும். அந்தச் சுமேருவாசிகளுக்கு இராத்திரியாகிய தட்சணாயனம் வட வாமுகவாசிகளுக்குப் பகலாகின்றது இவ்விதமாகவே வடவாமுக வாசிகளின் பகலிரவுகள் சுமேருவாசிகளுக்கு இரவு பகலாகும்.

### தென்புலத்தார் பகலிரவுகள்.

பிதிரர்களுடைய பகலிரவுக ளெப்படியென்றுற் பசக்கிரத்தி லே முன்னேயிருக்குஞ் சந்திரமண்டலத்தில் பிதிரரென்னுந் தென் புலத்தாரிருக்கின்றார்கள் அந்தச் சந்திரன் தன்னிலும் பெரியகட் சியுள்ள சூரிய னொருராசியைக் கடக்குங்காலத்திற் பன்னிரண்டு இராசியுக்கடந்து செல்லுகின்றுன். ஆகையால் அப்படிப்பட்ட சந் திரமண்டலத்திலிருக்கின்ற பிதிரர்களுக்குச் சூரியன் பதினைந்து திதிகள் காணப்பட்டும், பதினைந்து திதிகள் காணப்படாமலுமிருக் கின்றமையால் அவர்களுக்கு ஒருமாதம் ஒருநாள் ஆகின்றது. இப்

படிப்பட்ட அகோராத்திரிகளாலே முன் சொல்லப்பட்டபடியே பட்சம், மாதம், பருவம், அயனம், வருடம், ஆகின்றன.

## சூரிய கிரகணம்.

சூரிய கிரகணத்தின் விவகாரத்தைச் சொல்லுகின்றோம். முன் சொல்லப்பட்ட பசக்கிரத்திலே நடக்கின்றசந்திரன் சந்திரபாதமென்கிற இராகுவினாலே தெற்குவடக்கு வழிகளிலே சூரியனுக்கெதிர் முகமாக இழுக்கப்பட்டு அமாவாசையின் முடிவிலே சூரியனிருக்கின்ற கலைக்குச்சரியான கலையிலே கரணமார்க்கத்திலே சேர்ந்த போது சந்திரபிம்பமானது மேகத்தைப்போலவே சூரியபிம்பத்துக்கு மறைவாதலினாலே சூரியகிரகண முண்டாகின்றது.

## சந்திர கிரகணம்.

சந்திரகிரகணத்தின் விவகாரத்தைச் சொல்லுகின்றோம். சூரியன் பௌர்ணமிமுடிவிலே சந்திரனிருக்கிற இராசிக்கு ஏழாமிராசியில் பசக்கிரத்தி னடுப்பாதியாகிய பதினாயிரத் தெண்ணூறாவது கலையிலே சேர்ந்து காணமார்க்கத்தினாலே எதிராகும் பொழுது நடுவிலிருக்கின்ற பூமியினிழலாகிய தமோகிரகமானது சந்திரபிம்பத்தை மறைக்கிறபடியினாலே சந்திரகிரகண முண்டாகின்றது.

சந்திரபிம்பத்திலும் சூரியபிம்பம் பெரிதானபடியினாலே சூரியனுக்கு ஒருபோதும் பூரணகிரகணமில்லை. சந்திரபிம்பமானது சூரியபிம்பத்தினுடைய நடுமையத்துக்கு நேராகச் சென்றபோது கங்கணகிரகண முண்டாகுகையே இதற்குப் பிரமாணமாகும். பூமியின் சாயையானது சந்திரபிம்பத்திலும் ஒருகாலத்திற் சிறிதானதன்மையும் ஒருகாலத்திற் பெரிதானதன்மையு முடைத்தாகிறபடியினாலே சந்திரனுக்கு சற்றேறக்குறைய அரைக்காலே-கால், காலேஅரைக்கால், அரை-அரையே அரைக்கால், முக்கால்-முக்காலே அரைக்கால், ஒன்று-ஒன்றே அரைக்கால், ஒன்றேகால்-ஒன்றே காலே அரைக்கால், ஒன்றரை-ஒன்றரையே அரைக்கால்; ஒன்றேமுக்கால்-ஒன்றேமுக்காலே அரைக்கால் வரையிலும் கிரகணங்கள் சம்பவிக்கின்றன. ஆனால் அமாவாசைதோறும் சூரியனுக்குஞ் சந்திரனுக்கும் சமகலையாதலும் பௌர்ணமிதோறும் சூரியனுக்குச்சந்திரன் ஏழாமிராசியி லிருத்தலுமுண்டா யிருக்கின்றதேகிரகணம் யாதினாலுண்டாகவில்லையென்றால் சந்திரபாதமாகியராகு இழுத்தலின் வேறுபாட்டினாலே அமாவாசை பௌர்ணமிதோறுங் கரணமார்க்கத்திற்குச் சரியாகாதபடியினாலே கிரகணங்கள் உண்டாகவில்லை.

விவகாரபடலம் முற்றிற்று.

# முடிவுரை.

கல்வி, அறிவு, ஒழுக்கங்களால் நிறைந்த இந்நாட்டு வித்வ சமூகங்களின் முன்,

"கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி."

என்பதுபோலவும்,சூரியன்முன் தீவட்டி(தீவத்தி)யைப்போலவும், தீபத்தின் முன் மின்மினியைப் போலவும், சர்ப்பத்தின்முன் நாகப்பூச்சியைப்போலவும், சிறுவர் மணல்வீடுகட்டுவதைப் போலவும் யானுமோர் வாசகநூலை யெழுதி முடித்தனன். ஆனதால், இதைக்கண்ணுறுங் கனவான்கள் என்வாக்கியங்கள் முற்றுங்குற்றமாகவிருப்பினும், பாலோடுகூடிய நீரையும் அருந்துவார்போல அங்கீகரிப் பார்களெனக் கைகூப்பிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆசிரியன்.



# இப்புத்தகம் வாங்குவோருக்கு
## பிரதியுபகாரமாய்த் தெரிவிக்கப்பட்ட
# கைம்முறைகள்.

இந்தப்பாகங்களைத் தாங்களே செய்துகொள்ளலாம்.

## சித்தர் இரகசியம்.

| | | |
|---|---|---|
| மேல்பரணி சீவிச் சிறுதுண்டு களாய் அறுத்த இஞ்சி | பலம் | 20 |
| சோற்றுப்பு | ,, | 5 |
| இந்துப்பு | ,, | 5 |
| வளையலுப்பு | ,, | 2 |

இவையாவும் தகுமான பாண்டத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாறு ஆழாக்கு, கரிவேப்பிலைச்சாறு ஆழாக்கு, புதினாச்சாறுகால் ஆழாக்கு இவைகளை மேற்படி சரக்குடன்விட்டு, சீரகம்ஒருபலம், ஏலம் ஒருபலம் எடுத்து இடித்து வஸ்திரகாயம்செய்து அத்துடன் போட்டு, நன்றாய்க்கிளறி 10-நாள் சூரியபுடம்வைத்து ஊறுகாய் போல் நன்றாய் ஊறும்படிசெய்து வைத்துக்கொண்டு, பிரதிதினம் மேற்படி இஞ்சியில்லையில் ஒன்று சாப்பிடவும். இப்படி உபயோகி த்துவந்தால் அசீரணம், வயறு உப்புசம், மந்தம், வாய்வு, பித்தம் வாய்நீரூறல் இவைமுதலிய ரோகங்கள் இருந்தஇடந் தெரியாமல் ஓடிப்போம். இன்னும் அனேக வியாதிகள் தீருமென்பது நிச்சயம்.

## கண்வியாதி சகலத்திற்கும் மை.

துத்தம், துருசு, படிகாரம், வெண்காரம், நவச்சாரம் இவை கள் வகைக்கு ஒருவிராகனெடை யெடுத்து, இரும்புக்கரண்டியில் போட்டு (அரை எலுமிச்சங்காயளவு) பசும்வெண்ணெய் போட்டு நெருப்பில்காய்ச்ச வெண்ணெய்யுருகியெரியும்.முக்கால்பாகம் எரி ந்து கால்பாகம் இருக்கும்போது இறக்கி, கலுவத்தில்போட்டுக் கொட்டைப்பாக்களவு பசும்வெண்ணெய்போட்டு நன்றாய் அரை த்து மைசிமிளில் வைத்துக்கொண்டு கண்ணுக்குமை தீட்டுவது போல் தீட்டிவந்தால் வெள்ளெழுத்து, மேகநீர், சதைவளர்தல், பூ முதலானதும் தீரும். ஸ்திரீபோகமட்டிலும் கூடாது. மறுபத்திய மெதுவும் கிடையாது.

## தலைபாரம் தலைவலி ஜலுப்பு இவைகட்குக் கலிக்கம்.

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிவற்றல், வசம்பு, சுக்கு, இந்துப்பு, சமுத்திராப்பாலை, மிளகு இவைகள் வகைக்கு ஒரு விராகனெடை யெடுத்து எலுமிச்சம்பழச்சாறு வேண்டிய மட்டிலும் விட்டு மூன்றுசாமம் அரைத்து மாத்திரைபோலாவது, கம்பிபோலாவது செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு வெற்றிலைச்சாற்றிலாவது, முலைப்பாலிலாவது இழைத்து கலிக்கம் போடவும். இப்படி இரண்டு அல்லது மூன்றுவேளை உபயோகிக்க, மேற்படி வியாதிகள் தீரும்.

## சகல சூட்டுக்கும் கற்பூர சிலாசத்துப் பற்பம்.

கல் முதலியதில்லாத கற்பூரசிலாசத்து வேண்டியமட்டில் கொண்டுவந்து தாளித்த கற்சுண்ணாம்பு தளமாய்ப் பூசிவைத்துக்கொண்டு வெள்ளைசீலை துண்டில் மேற்படி சுண்ணாம்பைத் தளமாய்ப்பூசி அந்தத்துணியைச் சிலாசத்திற்குக் கவசமாய்ச்சுத்தி அதற்குமேல் செம்மண்பூசித் துணியினால் சீலைசெய்து இருபது வரட்டியில் புடம்வைத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும், தும்பைப்பூப் போலமிக துல்லியமாயிருக்கும். காலை மாலை இருவேளையும் ஒவ்வொருசிட்டிக்கையெடுத்து பசும்வெண்ணெயில் அல்லது நெய்யில் குழைத்துச் சாப்பிட்டுவரவும். சூடு, மேகச்சூடு முதலியதுந் தீரும் இச்சாபத்தியம்.

## இராசயோகபூரணாதி லேக்கியம்.

| | |
|---|---|
| சுக்கு | சிறுநாகப்பூ |
| திப்பிலி | அதிமதுரம் |
| மிளகு | சீரகம் |
| கடுக்காய்த்தோல் | பெருஞ்சீரகம் |
| தான்றிக்காய்த்தோல் | சாதிக்காய் |
| நெல்லிவற்றல் | சாபத்திரி |
| சிற்றரத்தை | இலவுங்கம் |
| நீர்முள்ளிவிரை | இலவுங்கப்பட்டை |
| நிலப்பனைக்கிழங்கு | ஏலக்காயரிசி |

இவைகள் வகைக்கு அரைபலம் எடுத்து இடித்து வத்திரகாயம்செய்து வைத்துக்கொண்டு இதற்குச்சரியெடை கஞ்சாத்தழையை நிறுத்தெடுத்து தண்ணீரில் ஊரவைத்துப் பிசைந்து கழுவிப் பிழிந்து நிழலில் உலர்த்தி மறுநாள் இளநீரில் பிசைந்து அலம்பி நிழலில் உலர்த்தியெடுத்து, மறுநாள் பசும்பாலில் வேவித்து நிழலில் உலர்த்தி இடித்து வத்திரகாயஞ்செய்து முன்சூரணத்துடன் கலந்து வைத்துக்கொண்டு, பசும்பால் ஒருசேர், கசகசாவை ஊரவைத்து அரைத்துப் பிழிந்தபால் ஒருசேர், இவ்விரண்டும் ஒன்றுபடுத்தி ஒருசேர் பனைவெல்லத்தைப்போட்டுக் கரைத்து, அடுப்பேற்றி நன்றாய்க் கொதிவரும்போது, சூரணத்தைப்போட்டுக்கிளறி நன்றாய்க்கலந்து பிறகு சூரணயெடைக்குச் சரியெடைவெள்ளைச்சருக்கரை போட்டு, யாவும் ஒன்றுபடும்படி நன்றாய்க்கிளறி மெழுகுபதமானால் இறக்கிவைத்துக்கொண்டு, தேன் கொஞ்சம் விட்டு பிசைந்து பீங்கான் கோப்பையில் பத்திரப்படுத்தவும். சுண்டைக்காயளவு மாலையில்மாத்திரம் சாப்பிட்டுடனே அரைக்கால்படி பால்சாப்பிடவும். பித்தம், வாய்வு, அசீரணம் யாவும் தீரும். தாதுவளர்ச்சி யுண்டாம்.

முற்றிற்று.



